# பென்ஹாம் பொருளாதாரம்-II

## (BENHAM'S ECONOMICS-II)


ஆசிரியர் :

ஃபிரெடெரிக் பென்ஹாம


ஏழாவது பதிப்பு

(எஃப். டபிள்யூ. பெய்ஷ் பதிப்பித்தது)


தமிழாக்கம் :

எஸ். குருநாதராசன் எம்.ஏ.,

ஆட்சி அலுவலர்,

தி, [illegible] (எஸ்.சி.சி.),

மதுரை.





தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு - அரசாங்கம்




தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—92

# பென்ஹாம் பொருளாதாரம்-II

## (BENHAM'S ECONOMICS-II)

ஆசிரியர் :
ஃபிரடெரிக் பென்ஹாம்

ஏழாவது பதிப்பு
(எஃப். டபிள்யூ. பெய்ஷ் பதிப்பித்தது)

தமிழாக்கம் :
எஸ். குழந்தைநாதன் எம்.ஏ.,
ஆட்சி அலுவலர்,
29, சென்னைப் போரணிப் பிரிவு, (என்.சி.சி.)
மதுரை.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition — March, 1966

B.T.P. No. 92



**BENHAM'S ECONOMICS—II**

*Translation*

S. KOLANDAINATHAN

**PRICE Rs. 7-00**

This translation of Benham's Economics (7th edition) is published by arrangement with M/s. Sir Isaac Pitman & Sons Ltd., 39-41, Parker Street, Kingsway, London W. C. 2.

*Printed by*

KUMARAN PRESS,
298, Mint Street,
MADRAS - 1.

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர் களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறை களில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண் டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணி புரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பென்ஹாம் பொருளாதாரம்–II' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 92ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழக் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 127 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண் டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்

## பொருளடக்கம்

இரண்டாம் பாகம்

பிரிவு 5

# வருமானங்களின் பகிர்வு

## 25. பகிர்வுபற்றிய ஒரு பொதுநோக்கு

### 1. தனிநபர் வருமானங்களில் வேறுபாடுகள்

இப் பிரிவிற்கு வருமானங்களின் பகிர்வு எனப் பெயரிட்டுள்ளேன். உற்பத்தியாளர்களிடமிருந்து நுகர்வோருக்குப் பொருள்களைப் பகிர்ந்தளிப்பதற்காக, அவற்றை வண்டிகளில் ஏற்றி அனுப்பவும் விற்பனைப்படுத்தவும் (marketing) மேற்கொள்ளப்பெறும் வினியோக முறையைப் 'பகிர்வு' (distribution) என்ற சொல் இந்த இடத்தில் குறிக்காது. உழைத்துக் கூலி பெறுவோர், சொத்துரிமை உடையோர், இதரர் முதலிய பல்வேறு வகையினரிடம் உள்ள தேசிய வருமானப் பகுப்பைக் குறிக்கும் ஒரு பாரம்பரிய வழக்குச் சொல்லாகப் 'பகிர்வு' என்பது இங்கே பயன்கொள்ளப்பெறுகிறது.

சமுதாயத்தில் ஒருவரது வருமானம்போல இன்னொருவருடைய வருமானம் அமைவதில்லை. சிலர் பிறரைவிட அதிகமாகச் சம்பாதிக்கிறார்கள்; இவ்விதம் தனி நபர் வருமானங்களின் ஏற்றத்தாழ்வுகளைப்பற்றிய பிரச்சினை நமது ஆராய்ச்சிக்கு மிகவும் பயன் தரக்கூடும்.

சொத்தின்மூலமாக வரும் வருமானங்களையும், உழைப்பின் மூலமாகப் பெறும் வருமானங்களையும் தனித்தனியாக ஆராய்வதன் மூலமாக இப் பிரச்சினையை அணுகுவது எளிதாகும். சொத்திலிருந்து வரும் வருமானங்களில் வாரம் அல்லது வாடகை (rent), வட்டி, இலாப ஈவுகள், இதர இலாபங்கள் என்பன அடங்கும். உழைப்பால் பெறும் வருமானங்களில் சம்பளம், கூலி, தன் சொந்த உழைப்பால் பெறும் இதர ஊதியங்கள் ஆகியன அடங்கும். சில சொந்த வருமானங்கள் இரண்டும் கலந்தமைவதுண்டு. இக் கலப்பு வருமானத்தின் (mixed) ஒரு பகுதி சொத்திலிருந்தும், இன்னொரு

பகுதி உழைப்பிலிருந்தும் பெறப்படும். தனது சொந்த நிலத்தில் தானே பாடுபட்டுப் பலன் பெறும் உழவனுடைய வருமானத்தை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். ஆனால், இவ் வுதாரணம், மேற்குறித்த பொது விவாதத்தைப் பாதிக்காது. இன்னும் சில வருமானங்கள் உள்ளன. இவை சொத்திலிருந்தும் வருவதில்லை; உழைப்பிலிருந்தும் வருவதில்லை. ஒருவர் தான் செலுத்தாது பெறும் முதுமைக்கால ஓய்வு ஊதியங்களை (non-contributory old-age pensions) இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். இவ் ஓய்வு ஊதியங்களை மாற்றுகள் (transfers) அல்லது வரி செலுத்துவோரிடமிருந்து பெறும் கூட்டுக் கொடைகள் (collective gifts) எனவும் கருதலாம். மேலும், நூலாசிரியர்களின் உரிமைத் தொகை, முன் செலுத்திப் பின்னர் பெறும் ஓய்வு உதவிகள் முதலிய வருமான வகைகளைப் பகுத்துப் பிரிப்பது இங்கு மிகுந்த இடர்ப்பாடு தரும். இவ்வகை வருமானங்களை முதலில் செய்த வேலைகட்கு நாட்கழித்துப் பெறும் தள்ளிப்போடப்பட்ட வரவினங்களாகக் (deferred incomes) கொள்ளலாம். ஆனாலுங்கூட, தேசிய வருமானங்களில் பெரும்பான்மையின, சொத்துரிமையிலிருந்தோ சுய உழைப்பிலிருந்தோ தான் உருவாகி அமைகின்றன.

சொத்திலிருந்து பெறப்படும் வருமானங்களில் ஏற்றத்தாழ்வு இருப்பதேன்? மக்களில் பல்வேறு பிரிவினர் வெவ்வேறு அளவுகளில் சொத்துரிமை உடையவர்களாக இருப்பதே இதற்குரிய முக்கியமான காரணமாகும். சிலரிடம் செல்வம் குவிந்து கிடக்கிறது; பலரிடம் மிதமான அளவில் செல்வம் சேர்ந்திருக்கிறது; பெரும்பாலோரிடம் மிகமிகக் குறைந்த அளவிலேயே செல்வம் தங்குகிறது. தமது அன்றாட உபயோகத்திற்குரிய சொந்த மூட்டை முடிச்சுகள், வீட்டுச் சாமான்கள் முதலிய அடிப்படை வசதிகள் ஆகியவற்றை நீக்கிவிட்டால், அவர்களிடம் எஞ்சியுள்ள சொத்தின் அளவு மிகமிக அற்பமாகவே இருக்கும். மேலும், மேற்குறித்த அத்தியாவசியப் பொருள்களிலிருந்து எத்தகைய பண வருவாயும் அவர்கட்குக் கிட்டுவதில்லை.

ஒன்றுமில்லாத சாதாரண நிலையிலிருந்து குபேரச் செல்வம் திரட்டிக் குவித்துக்கொண்டவர்களும் நம்மிடையே இருக்கிறார்கள். அலுவல் துறையில் திறமை மிகுந்தவர்கள் நல்லூழின் உதவியாலும் ஓரளவு ஊக்குவிக்கப்பட்டு, மிக எளிய துவக்கத்திலிருந்து மிகப் பெரிய நிறுவனங்களைப் பெருக்கிக்கொண்டுள்ளார்கள்.

என்றாலும், பெரிய பெரிய தனியார் சொத்துடைமைகளில் பெரும்பான்மையின, வாரிசுரிமையாக அடையப்பெற்றனவாகவோ அல்லது போதுமான வாரிசுரிமைச் செல்வத்தை அடிப்படையாகக்

கொண்டு பெருக்கப்பட்டனவாகவோதாம் உள்ளன. வாரிசுரிமையாகச் செல்வத்தை அடைபவன் தனது சொந்த முயற்சிச் சிறப்பு ஏதுமில்லாமலே அச் செல்வத்தைப் பெற்று அனுபவிக்கிருன். இவ் வாரிசுரிமை வழியால் ஒரு சிறப்புநிலை உண்டு. அஃது என்னவென்ருல், ஒருவனது சொத்து முழுவதுமோ, அல்லது அதில் ஒரு பகுதியோ இன்னெரு குடும்பத்தைச் சென்றடைவதால், அக் குடும்பத்தினரை உழைக்கவும் சேமிக்கவும் ஊக்குவிக்கும் வலிய தூண்டுதலாக அஃது அமையும் வாய்ப்பிருப்பதேயாகும். மரணத்திற்குப்பின் கைமாறும் சொத்துகள்மீது விதிக்கப்படும் வளர்வீத வரி (progressive taxation) முறையால் இவ்விதம் வாரிசுரிமையாக மாற்றப்படும் சொத்தின் அளவு கிரேட் பிரிட்டனில் கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறது.

தனி நபர் சொத்துகளின் தோற்றங்களை நுணுகி ஆராய முற்படுவது பொருளாதார ஆய்வின் எல்லைக்கு அப்பாற்பட்டதாகும். உதாரணமாக, இங்கிலாந்து வரலாற்றில் துறவு மடங்களைக் கலைத்து விட்டதிலிருந்தோ, அல்லது இரண்டாம் சார்லஸ் மன்னனுக்குத் தனி உதவிகள் வழங்கப்பட்ட நாளிலிருந்தோ தனி நபர் சொத்துகள் தோன்றின என்று கூறுவோர் இருக்கிருர்கள். தனிச் சொத்துரிமை என்ற அமைப்புக்குச் சார்பாகவும் மாருகவும் உள்ள விவாதங்களை நான் ஏற்கெனவே தெளிவுபடுத்தியிருக்கின்றேன். ஒவ்வொருவரிடமும் உள்ள தனிச் சொத்துரிமையின் தற்போதைய பகிர்வுகளைக் கொடுத்து ஏற்றுக்கொள்ளப்பட்ட மூல சாதனங்களாகவே கொள்ளவேண்டும். இவ்விதம் உருவாகி அமைந்துள்ள மூல சாதனமான தனிச் சொத்துரிமையை முறையின்றிக் கெடுத்து, முயன்று முதலீடு செய்யக்கூடிய அதன் ஊக்கத்தைத் தளரச்செய்து விடாமல், வரிவிதிப்பின்மூலமாக இதை எந்த அளவிற்கு மட்டுப் படுத்தி வைக்கலாம் என்பதே இன்றுள்ள நடைமுறை அரசியல் பிரச்சினையாகும். இலாபங்கள், இதர செல்வ வருமானங்கள்மீதும், வாரிசுரிமை பெறும்போதும் விதிக்கப்படும் இப்போதைய நமது வரி வீதங்கள் மிக இலேசாயுள்ளனவா, அல்லது மிகவும் பளுவாயுள்ளனவா என்பதையே ஆராய்தல்வேண்டும்.

சொத்துகளிலிருந்து பெறப்படும் பண வருமானம் ஒவ்வொரு சொத்தின் தன்மைக்கும் ஏற்ப மாறுபடும் இயல்பினது. நிலத்திற்கும் இதர சொத்துகளுக்கும் பெறப்படும் வாரம் அல்லது வாடகை என்றும் மாருத நிலையுடையது; குறிப்பிட்ட சில தவணைக் கெடுவுக்கு முன்னுல் கூட்டவோ குறைக்கவோ முடியாத சில சொத்துகளின்மூலமாகப் பெறும் நிலையற்ற வாரம் (போலி வாரம்—quasi-rent) எனப்படுவது மாறும் இயல்புடையது; இவ்விதம் வெவ்வேறு வகைச் சொத்துகளின்மூலமாகப் பெறப்படும்

பண வருமானங்களை எந்த சக்திகள் தீர்மானித்து வரையறுக்கின்றன என்பதை ஆராய முற்படுவது, பொருளாதார ஆய்வின் வரம்பிற்கு உட்பட்டதே ஆகும். புதுக் கடன்கள்மீது நடைமுறையில் செலுத்தப்பட்ட வட்டி வீதம், புதிய முதலீடுகளிலிருந்து எதிர்பார்க்கப்படும் இலாப வீதம் முதலியவற்றைத் தீர்மானிக்கும் சக்திகளை அறிவதும் இந்தப் பொருளாதார ஆய்வுத் தளத்திற்குள்ளேயே அடங்குமென்று கருதுகின்றேன். எனவே, இவற்றைப் பற்றியே இப் பிரிவில் ஆராய முற்படுகின்றேன்.

உழைப்பாற்றல், திறமை இவற்றில் ஒவ்வொருவருக்கும் உள்ள வேறுபாடுகள் காரணமாகவே, உழைப்பிலிருந்து பெறப்படும் வருமானங்களிலும் ஏற்றத் தாழ்வு ஏற்படுகின்றது. சிலரிடம் மட்டும் உடல் கூற்றிலும் மனப்போக்கிலும் இயல்பான சிறப்பு ஆற்றல்கள் பொலிந்திருக்கும்; பிறரைக்காட்டிலும் இவர்கள் நிறையச் சம்பாதிக்க இவ் வாற்றல்கள் உதவி செய்கின்றன; என்றாலும், முயன்று திறமையைப் பெறுவதும், தொழில் அறிவைப் பெறுவதும், அவரவரது கல்வி, பயிற்சி முதலியவற்றைச் சார்ந்து அமைவன. சில நாடுகளில் இன்றும் இருப்பதைப்போல, நம் நாட்டில் முன்பெல்லாம், சிறந்த ஊதிய வாய்ப்புகளைத் தரக்கூடிய சிறந்த கல்வியை வசதியுள்ள பெற்றோர்களால்மட்டுமே தம் குழந்தைகட்கு வழங்க முடிந்தது; கல்விக்கூடங்களில் வழங்கப்பட்ட கல்வி உதவித் தொகைகளும் மிகக் குறைந்த அளவில் சிலருக்கே உதவின. இதைப்போல, செல்வம் நிறைந்த பெற்றோர்களால் மட்டுமே, தம் குழந்தைகட்கு மூலதனம் வழங்கி ஒரு தொழிலைத் துவக்க உதவமுடியும். இவ்விதம் இயல்பாக உள்ள ஓர் ஏற்றத் தாழ்வு, ஏனைய ஏற்றத்தாழ்வுகளையே வளர்த்துப் பெருக்குகிறது.

வெவ்வேறு வகையான தொழில்களைச் செய்வோர்க்கு வழங்கப்படும் ஊதிய விகிதங்களில் உள்ள வேறுபாடுகளை விளக்குவதே நான் மேற்கொண்ட பொருளாதார ஆய்விற்கு ஏற்புடைய விஷயமாகும். எனவேதான், இவ் விஷயம், 26ஆவது அதிகாரத்தில் 'கூலிகள்' (wages) என்ற தலைப்பில் விரிவாக ஆராயப்படுகின்றது. 'கூலிகள்' என்று தலைப்பிட்டிருந்தாலும், உழைப்பின்மூலமாகப் பெறப்படும் எல்லா வருமான இனங்களைப்பற்றியும் இதில் ஆராயப்படும்.

பகிர்வுக் கோட்பாடு (Theory of Distribution) என்பது பொருளாக்கத்திற்குக் காரணமான நிலம், தொழில், மூலதனம் ஆகியவற்றின் ஊதியத்தைப் பாதிக்கும் விலைவாசி முறையை (price system) ஆராய்வதிலேயே இவ்வளவு காலமாகத் தன்னை ஈடுபடுத்தி வந்திருக்கின்றது. தனி நபர் வருமானங்களின் ஏற்றத்தாழ்வுகளை

ஆராய்வதற்குரிய, மிகப் பெரிய, முக்கியமானதாயிருந்தாலும், இது அதில் ஒரு பகுதியே ஆகும்; முழு ஆய்வுமாகாது. ஏற்றத்தாழ்வுகளை ஆக்கக்கூடிய இதர நியாயமான செல்வாக்குடைய சக்திகளும் உள்ளன; தனிப்பட்டவர்களிடம் உள்ள சொத்தின் அளவில் உள்ள குறிப்பிடத்தக்க வேறுபாடுகள், ஒவ்வொருவரிடமும் இயல்பான திறமைகளிலும் பயிற்சியால் பெற்ற ஆற்றல்களிலும் உள்ள தாரதம்மியங்கள் ஆகிய இவையெல்லாம் வருமான ஏற்றத் தாழ்வுகளைப் பாதிக்கும் ஆற்றல் உடையனவே. என்றாலும், இவற்றையே ஆராய்ந்துகொண்டிருப்பதும் நமது வரம்பிற்கு அப்பாற்பட்டதாகவே கொள்ளப்படும். ஏனென்றால், இவற்றைப் பற்றிய மேற்போக்கான பொது விதிகளைமட்டுமே பொருளாதாரத்தால் ஆக்க இயலும்.

## 2. உழைப்பின் பங்கு

தேசிய வருமானத்தில், உழைப்பிலிருந்து பெறப்படும் வருமானத்தின் விகிதமென்ன, சொத்திலிருந்து அடையும் வருமானத்தின் விகிதமென்ன என்பனவற்றைக் காண்போம்.

இந்த விகிதம் ஓரளவு ஆண்டுக்கு ஆண்டு மாறுதலடைகின்றது. கூலிகளையும் இதர வருமானங்களையும்விட இலாப இனங்கள் மிகவும் வேறுபடுகின்றன. வளமான ஆண்டுகளில் மொத்த இலாபங்கள் பெருக முற்படுகின்றன; இதனால் சொத்திற்குச் செலுத்தப்படும் பங்கு விகிதங்களும் உயர்கின்றன. தேக்கமான மந்த நாட்களில் இலாபங்கள் மிகவும் குறைந்துவிடுகின்றன.

1961-ல் ஐக்கிய அரசில் மக்களின் சொந்த வருமானம் 6ஆம் பக்கத்தில் உள்ள அட்டவணைப்படி[1] பகிர்வு செய்யப்பட்டது.

தமது ஊழியர்கட்காக தேசிய ஆயுட்காப்பு நிதி, ஓய்வு உதவித் திட்டம், வருங்கால வைப்பு நிதி முதலியவற்றிற்கு வேலை அளிப்பவர்கள் கொடுக்கும் உதவிகள், உழைப்பிலிருந்து பெறும் வருமானங்களுடனேயே சேர்க்கப்பட்டுள்ளன. ஏனென்றால், இவ் வுதவிகள் எல்லாம், உழைப்பாளர்களின் நலத்திற்காகவே வழங்கப்படுகின்றன. சொந்த நிலத்தில் தானே பாடுபட்டுழைக்கும் உழவன், தனது கடையில் தானே இருந்து விற்பனை செய்யும் வியாபாரி போன்ற சொந்தத் தொழில் செய்யும் ஒரு நபரின் (self-employed person) வருமானத்தில் எந்த அளவை, அவருடைய மேலாண்மைக்குரிய (management) உழைப்பிற்கென ஒதுக்கலாம்?

[1] விவரங்கள் 1961-ல் வெளியிடப்பட்ட 'தேசிய வரவும் செலவும்' என்ற நூலின் இரண்டாவது அட்டவணையிலிருந்து எடுக்கப்பட்டவை.

எந்த அளவை அவரது தொழிலில் ஈடுபடுத்திய மூலதனத்திற்கு உரிய இலாபமாக ஒதுக்கலாம் என்பனவற்றை நம்மால் வரையறுக்க முடியவில்லை.

**1961**-ல் ஐக்கிய அரசின் (வரிவிதிப்பிற்கு முற்பட்ட)
சொந்த வருமானம்

| | பவுன் (மில்லியனில்) |
|---|---|
| வேலையிலிருந்து வருமானம்— | |
| கூலி, சம்பள இனங்கள் ... ... ... | 14,710 |
| உழைப்பை ரொக்கத்திற்கும், மாற்று உழைப்பாகவும் செலுத்திய வகையில் ... ... | 387 |
| வேலை அளிப்போரின் உதவித் தொகைகள்— | |
| (அ) தேசிய உயிர்காப்பீடும் நலத்துறையும் ... | 502 |
| (ஆ) இதர வகை ... ... ... | 646 |
| வேலையுடைமையிலிருந்து வரும் மொத்த வருமானம் ... | 16,245 |
| சொந்த வேலைமூலமாக வருமானம்— | |
| தொழில்முறை அலுவலர்கள் (professional persons) ... | 368 |
| உழவர்கள் ... ... ... ... | 527 |
| இதர தனி வணிகர்கள், கூட்டு வியாபாரங்கள் ... | 1,225 |
| சொந்த வேலைமூலமாகப் பெறும் மொத்த வருமானம் ... | 2,120 |
| இதர வருமானம்— | |
| வாரம், இலாப ஈவுகள், வட்டி ... ... | 2,488 |
| தேசிய ஆயுட்காப்புறுதி நலங்கள், அரசாங்கத்தால் கொடுக்கப்படும் இதர நடைமுறை உதவிகள் ... | 1,801 |
| மொத்த சொந்த வருமானம் ... ... ... | 22,654 |

மருத்துவர், வழக்கறிஞர், சாதாரண உழவர், சிறு கடைக்காரர் முதலிய தொழில்முறை நபர்களின் வருமானத்தில் கால்பங்காவது இவர்களுடைய மூலதனத்திற்குரிய இலாபமாக அமையுமா என்பதை நானே சந்தேகிக்கிறேன். இதைப்பற்றி நேர்முகமான புள்ளி விவரங்கள் ஏதும் நமக்குக் கிட்டவில்லை. எனவே, ஒரு பாதிமட்டுமே அதாவது, 1,060 மில்லியன் பவுன்கள்மட்டுமே உழைப்பிலிருந்து பெறும் வருமானத்தைக் குறிக்கிறது எனக் கொள்வோம். ஆனல், இதன் இன்னெரு பாதியிலிருந்து இருப்புக் கணக்கீட்டிற்காக (42 மில்லியன் பவுனும்) வீடுகள் தவிர இதர மாரு முதல் (fixed capital) நுகர்விற்காக (250 மில்லியன் பவுனும்) எனச் சில

மதிப்பீட்டுத் தொகைகளைக் கழித்துவிடுவோம். இப்பொழுது 768 மில்லியன் பவுன்களே எஞ்சியிருக்கும்.

முற்குறித்த அட்டவணைப்படி 16,245 மில்லியன் பவுன்கள், 1,060 மில்லியன் பவுன்கள் ஆகிய இவற்றின் கூட்டுத் தொகையே (இதில் இருப்புக் கணக்கீடு, வீடு தவிர இதர மாறு முதல் நுகர்வு ஆகியவற்றைக் கழித்தது போக) மொத்த சொந்த வருமானங்களில் தொழிலுக்குரிய பங்காக அமைகிறது. இஃது ஏறத்தாழ 77 சதவிகிதம். 2,488 மிலியன் பவுன்களுடன் 768 மிலியன் பவுன்களைக் கூட்டி வருவதே மேற்படி வருமானங்களில் சொத்துக்கு உரிய பங்காக அமைகிறது. இது மொத்தத்தில் 15 சதவிகிதந்திற்கும் குறைகிறது. இவை இரண்டிற்கும் போக, எஞ்சிய 8 சதவிகித வருமானம் அரசாங்கத்தால் அளிக்கப்படும் தேசிய ஆயுட்காப்பு நலங்கள், இதர பொதுநல உதவிகள் முதலியவற்றால் அமைகிறது.

தொழில் நிறுவனங்களின் பகிர்ந்தளிக்கப்படாத இலாபங்களையும் (இருப்புக் கணக்கீடு, மாறு முதல் நுகர்வு தவிர) சொத்திலிருந்து வரும் வருமானத்தோடு சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று விவாதிக்கலாம்.[1] இவ் வருமானத் தொகை 1,900 மிலியன் பவுன்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளன (இதிலும் பாதிக்குமேல் வரியாகச் செலுத்தப்பட்டுவிட்டன); இவற்றையும் சேர்த்துக்கொண்டால், நாட்டு வருமானத்தில் சொத்தின் பங்கு 21 சதவிகித அளவில் உயரக்கூடும்.

இதில் 1961ஆம் ஆண்டுமட்டுமே விதிவிலக்கானது என்று கருதவேண்டா. தேசிய வருமானத்தில் உழைப்பின்மூலமாக வரும் பங்கு, ஒவ்வோர் ஆண்டிலும் சில சில்லறை மாற்றங்களைத் தவிர, 75 சதவிகிதமாக நீண்ட காலமாகவே தொடர்ந்து இருந்து வருகின்றது.

அமெரிக்க நாட்டில், உழைப்பிற்குரிய விகிதமாகக் கடந்த பல ஆண்டுகளாக 75 சதவிகிதமே அமைந்துள்ளது. போதிய வளர்ச்சி பெறாத பல நாடுகளில்கூட, தொழிலின் பங்காக, சராசரியாக 70 முதல் 80 சதவிகிதமே கணக்கிடப்பட்டிருக்கிறது.

பல மேற்கு நாடுகளைப்போல, கிரேட் பிரிட்டனிலும் சமீப காலங்களில், சராசரித் தொழிலாளியின் பொருளாதார நிலை ஓரளவு மேம்பட்டிருக்கிறது. முற்றிலும் மேல்நிலை எய்தாவிட்டாலும், சராசரிச் சொத்துடையோருடன் ஒப்பிடுகையில் ஓரளவு கணிசமாக

[1] பொதுநிறுவனங்கள், மத்திய, மாநில அரசுகளின் தொழில்கள் முதலியவற்றின் வணிக இலாபங்களை இங்கே விலக்கிவிட்டேன். ஏனென்றால், இவை தனி நபர்களைச் சாராது, நாடு முழுவதற்கும் பொதுவாகச் சென்று சேர்கின்றன.

மேம்பட்டிருக்கிறதென்றே சொல்லவேண்டும். பொது நிதியம் (public finance) என்ற சாதனத்தின் மூலமாகவே இந்த ஒப்பீட்டின் மேம்பாட்டு நிலை பெறப்பட்டது. மரண வரிகள், இலாப வரிகள் முதலிய பிரத்தியேக வரிகளைச் சொத்திற்கு விதிப்பது கணிசமாகப் பெருகியுள்ளது. மிகப் பெரிய வருமானங்களின்மீது விதிக்கப்படும் பளுவான வருமான வரி விகிதங்கள், உழைப்பு வருமானங்களைவிட சொத்து வருமானங்களைப் பாதித்துவிட்டன. இதனால், உழைப்பு வருமானங்களின் நிகரப் பங்கைவிட, வரி விதிப்பிற்குப் பின்னர் எஞ்சும் சொத்து வருமானங்களின் நிகரப் பங்கு மிகவும் குறைக்கப்பட்டுவிட்டது. இத்துடன், பொதுத்துறைச் செலவீடுகள் எல்லாம் சமுதாயப் பணிகட்காக மேலும்மேலும் திருப்பிவிடப்படுகின்றன ; இச் செலவீடுகள் சொத்துடையோரைக்காட்டிலும் தொழிலாளர்களுக்கே நலன் தருவனவாயுள்ளன. இப்படி வசதிகளை அளிப்பதுடன் நில்லாது, தொழிலாளர்களின் வேலைநேரங்களும் குறைக்கப்பட்டுவிட்டன ; இதனால் முன்பைவிட அவர்கள் இப்பொழுது மிகுந்த ஓய்வைப் பெற்று மகிழ்கிறார்கள்.

நாட்டு வருமானத்திலிருந்து 20 சதவிகிதத்தைப் பகிர்ந்து கொள்ள சொத்துரிமையாளர்களுக்கு ஏதேனும் உரிமை இருக்கிறதா, அல்லது நாட்டு வருமானம் முழுவதும் தொழிலாளர்களைமட்டுமே சாரக்கூடாதா என்பதைப்பற்றி, தனிச் சொத்துரிமை அமைப்பின் நிறைகுறைகளைப்பற்றி விளக்கிய பகுதியிலேயே, முன்னர்க் குறிப்பிட்டுள்ளேன். மேலும், மேற்குறித்த 20 சதவிகிதத்தில் ஒரு பகுதியே சொத்துடையோரின் சொந்த நுகர்ச்சிக்காகச் செலவிடப்படுகிறது என்பதையும் இவ்விடத்தில் ஆழ்ந்துணர்தல் பொருத்தமானதாகும். வரிவிதிப்பால் பெரும்பங்கு ஏற்கெனவே வெட்டப்படுகிறது; எஞ்சியதில் இன்னொரு பெரும்பங்கு, பகிர்ந்தளிக்கப்படாத இலாபமாகக் கருதப்பட்டு மீண்டும் தொழிலில் முடக்கப்படுகிறது ; அல்லது இதர வகைகளில் முதலீடு செய்யப்படுகிறது. நாட்டில் உள்ள தனிச் சொத்துரிமையை எல்லாம் அரசாங்கம் பறித்துக்கொண்டுவிட்டால் (அபாரமான கற்பனை), அவற்றின் உற்பத்தி குறையாவிட்டாலும் கூட, பொது வருவாய்க்கும் முதலீட்டிற்கும் இப்பொழுதைப் போலவே பெருந்தொகை தேவைப்படும். தனிச் சொத்துரிமையை அகற்றிவிட்டால், இவற்றையெல்லாம் அரசாங்கமே சரிக்கட்டித்தர வேண்டியதிருக்கும். அப்பொழுது தொழிலாளர்களுக்கு மறுபகிர்வு செய்யவேண்டுமானால் 20 சதவிகிதத்தைவிட மிகவும் குறைந்த விகிதமே கிடைக்கும்.

தனியார் முதலீட்டுத் தொகையில் உயர்வு ஏற்பட்டால், அது தொழிலாளர்களுக்கே நலம் செய்கிறது ; அதே சமயத்தில் சொத்

தின் பங்கிலும் உயர்வைக் காட்டுகிறது. இப்பொழுது, வளர்ச்சி குன்றிய நாடுகளில் (underdeveloped) பல மூலதனப் பற்றாக்குறையால் இடர்ப்படுகின்றன. இந் நாடுகள் ஒன்றில் செய்யப்பட்ட வெளிநாட்டு முதலீடு, அந் நாட்டின் தேசிய உற்பத்தியை 100-லிருந்து 120-க்கு ஓராண்டில் உயர்த்துவதாக வைத்துக்கொள்ளுவோம். இந் நாடுகளில் முதலீடு செய்த வெளிநாட்டினர்க்கு இதில் ஆண்டுதோறும் பத்தைப் பகிர்ந்து கொடுத்துவிட்டாலும், அந் நாட்டில் எஞ்சிய பத்து மிகுந்தே உள்ளது. இதற்கு முன்னுல், இந்த நாட்டின் தேசிய வருமானமானது, உழைப்பிலிருந்து 80, சொத்திலிருந்து 20 என்றே பகுக்கப்பட்டிருந்திருக்கலாம். ஆனுல், இப்பொழுது சொத்திலிருந்து 30 (வெளிநாட்டு முதலீட்டாளர்களால் 10-ம் சேர்த்து) பெறப்படும்; ஆனுல், உழைப்பிலிருந்தோ 80-க்குப் பதிலாக 90 பெறப்படும்.

உழைப்பு, சொத்து இவற்றின் (வரிவிதிப்பிற்கு முந்திய) சதவீதப் பங்குகளை (percentage shares) நிர்ணயிக்கும் சக்திகள் யாவை? பிற நிலைகள் சமமெனக் கொண்டால், தொழிலாளர்களின் எண்ணிக்கையில் ஏற்படும் உயர்வானது உழைப்பின் இறுதிநிலை ஆக்கத்தில் (marginal productivity of labour) ஏற்படும் வீழ்ச்சி காரணமாக ஒவ்வொருவரின் உண்மையான கூலியையும் குறைக்க முற்படுகிறது; ஆனுல், இது தொழிலுக்குச் செல்லும் பங்கை மொத்தமாக உயர்த்தக்கூடும். ஏனென்றுல், உழைப்பாளர்களின் எண்ணிக்கை உயர்வு, தலா ஒவ்வொரு நபருக்கும் கிட்டும் உண்மைக் கூலியின் குறைவை மிகவும் விஞ்சிவிடக்கூடும். இதைப்போலவே மூலதனத்தில் ஏற்படும் உயர்வானது, மூலதனத்திற்காகப் பெறப்படும் விளைவு (return) வீதங்களைக் குறைக்க முற்படுகிறது; ஆனுல், இது தேசிய வருமானத்தின் இலாபங்களையும் வட்டிகளுக்குரிய பங்கையும் உயர்த்தக்கூடும். மக்கள்தொகைப் பெருக்கம் வாடகைகளின் முழு மொத்தத்தை (absolute total) உயர்த்த முனைகிறது; என்றுலும், வளர்ச்சியுற்ற தேசிய வருமானத்தில் (increased national income) வாடகைச் சதவீதங்களை இதனுல் உயர்த்த முடியாது.

தேவைப் பகுதியை எடுத்துக்கொண்டால், போர்க்காலத்தில் ஏற்பட்டதுபோல, உழைப்புக்குள்ள தேவையில் (demand for labour) ஏற்படும் பொதுவான உயர்வானது, வேலைக்குச் செல்வோரின் சதவிகிதத்தை உயர்த்த முற்படுகிறது. ஆனுல், அதே சமயத்தில், மூலதனத்திற்குள்ள தேவையில் மிகுந்த உயர்வு ஏற்பட்டால்—உதாரணமாக, வீட்டு வசதி வேண்டுமென்ற விருப்ப மிகுதி காரணமாக ஏற்பட்ட தேவையைக் கொள்வோம்—அது மூலதனத்தின் சதவிகிதத்தைக் குறைக்கவே முற்படுகிறது. நிறைபோட்டி முறையில்

(perfect competition) கையாளப்பெறும் (மூலதனத்திற்கு இணையாக உழைப்பின் இறுதிநிலை ஆக்கத்தையும் உயர்த்தக்கூடிய) மூலதனச் சேமிப்புக்குரிய புத்தாக்கங்கள் (inventions) உழைப்பின் பங்கை உயர்த்த முற்படலாம்; உழைப்புச் சேமிப்பிற்காகக் கையாளப்பெறும் புத்தாக்கங்கள் அதைக் குறைக்கவும் முற்படலாம். பெரும்பாலான புத்தாக்கங்கள் உழைப்புச் சேமிப்பிற்கே உதவுகின்றன என்று நாம் கருதத் துணிகின்றோம்; ஆனால், தொழில் உற்பத்தி நிலையங்கள் (plant), சாதனங்கள், இதர தளவாடப் பொருள்கள் முதலியவற்றின் திறமையைச் செப்பனிடுவதற்காக மேற்கொள்ளப்பெறும் ஒவ்வொரு புத்தாக்கமும், மூலதனச் சேமிப்பிற்கே உதவுகிறது என்பதை நாம் கட்டாயம் நினைவுகொள்ள வேண்டும். அதே அளவு மூலதனத்தைக் கொண்டு உற்பத்திப் பெருக்கத்திற்கு இஃது உதவி செய்கிறது.

நிதித்துறைக் கொள்கையின் (monetary policy) மூலமாக ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் மேற்கொள்ளக்கூடிய, வட்டி வீதங்களில் ஏற்படும் குறைவானது, மூலதனத்திற்குச் செல்லும் பங்கையே குறைக்க முற்பட்டுவிடுகிறது.

இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் இந்த நூற்றாண்டில் ஏற்பட்டுள்ள மூலதன வளர்ச்சி இந் நாடுகளின் மக்கள்தொகை வளர்ச்சியைவிட இரு மடங்கு பெருகிவிட்டாலுங்கூட, உழைப்பிற்குள்ள பங்கு இதில் ஓரளவே உயர்ந்துள்ளது.

## 3. இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாடு

### (The Marginal Productivity Theory)

பொருளாதாரத்தில் பகிர்வுத்துறை (distribution) ஒவ்வொரு வகை உற்பத்திக் காரணிக்கும் கிடைக்கும் பங்கையும், ஒவ்வொரு வருக்கும் கிடைக்கும் ஊதிய அளவையும் ஆய்கிறது. சாதனங்களின் பாகத்தையும், தனிப் பகுதிகளின் ஊதியத்தையும் விளக்க இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாடு ஆளப்பட்டுவந்திருக்கிறது. பல்வேறு உற்பத்திக் காரணிகளின் விலையானது தூய போட்டி, முழு வேலையுடைமை (full employment) முதலியவற்றால் எவ்வாறு நிர்ணயிக்கப்படுகின்றது என்பதை பகிர்வுத்துறையின் இந்த இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாடு விளக்குகிறது.

சில உற்பத்தி சாதனங்கள் (உதாரணமாக, நிலக்கரி, எஃகு, பருத்தி முதலிய பொருள்கள்) உற்பத்தி முறையிலேயே முழுக்க

முழுக்கப் பயன்கொள்ளப்படும் தேவைப் பண்டங்களாகும். எனவே, அவை அப்படியே கொள்முதல் செய்யப்படுகின்றன. இந்தக் கோட்பாடு இப் பொருள்களையும் உள்ளடக்கிக்கொண்டாலும், உற்பத்தி சாதனங்களின் பணிகளுக்காகச் செலுத்தப்பெறும் விலைகள் (இச் சாதனங்களெல்லாம், வாரம், மாதம், ஆண்டு என்ற கால அளவில் வாடகைக்குக் கொள்ளப்படுகின்றன), கூலிகள், வாரங்களின் அளவுகள், வட்டி வீதங்கள் முதலியவற்றையே முக்கியமாக விளக்குகிறது. உற்பத்தி நிலையங்கள், இயந்திரங்கள் முதலிய நிலையான சொத்துகளின் (fixed assets) வருமானங்களையும் இக் கோட்பாடு விளக்குகிறது. இதற்காக நாம் உற்பத்திக் காரணிகளை ஒரே சீரான தொகுதிகளாகப் (homogeneous groups) பிரித்துக் கொள்ளவேண்டும். இத் தொகுதி ஒவ்வொன்றும் பல அலகுகளாக (unit) அமையும். இவ்வலகுகளில் சில ஒரு தொழிலிலும், பிற வேறு தொழில்களிலும் ஈடுபடுத்தப்பட்டிருந்தாலுங்கூட, ஒரே தொகுதியில் உள்ள ஒவ்வோர் அலகின் விலையும் ஒரே அளவாகவே இருக்கும். ஒரு தரவாரியாகப் பகுக்கப்பட்ட நிலத் தொகுதியில், ஒரு நிலத்தைப்போலவே இன்னொரு நிலத்தின் தரமும் சமமாகக் கருதப்படும். இத் தொகுதியில் உள்ள ஒவ்வோர் ஏக்கர் நிலமும் ஒரே அளவு வாரத்தையே (rent) பெறும். ஒவ்வோர் ஏக்கர் நிலமும், அதைப்போன்ற இன்னோர் ஏக்கர் நிலத்திற்கு ஏற்ற சரியான பதிலியாக (substitute) இருப்பதால், ஒவ்வொன்றின் விலையும் ஒரே மாதிரியாகவே அமையும். இதைப்போலவே, ஒரு தரத்தைச் சேர்ந்த தொகுதியில் உள்ள ஒவ்வோர் உழைப்பாளியும் தான் செய்யும் ஒரே மாதிரியான வேலைக்கு அத் தொகுதியில் உள்ள பிற உழைப்பாளிகளைப்போல, சமமான கூலியையே பெறுவான். இஃது இதர உற்பத்தி சாதனங்கட்கும் பொருந்தும்.

இக் கோட்பாட்டின் சாராம்சத்தைச் சுருக்கமாகக் குறிப்பிடலாம். ஓர் உற்பத்தி சாதனத்தின் தேவை என்பது ஒருவகையில் வருவித்துக்கொள்ளப்பட்ட தேவையே (derived demand) ஆகும். உதாரணமாக, ஒரு விவசாயி நிலத்தை வாரத்திற்கு எடுக்கின்றான், அல்லது நிறைய உழவர்களைச் சேர்த்துக்கொள்கிறான், அல்லது ஓர் இயந்திரக் கலப்பையைக் (tractor) கொள்முதல் செய்கிறான், அல்லது நிறையச் செயற்கை உரங்களைப் போடுகிறான். இத்தகைய உற்பத்திக் காரணி ஒவ்வொன்றும் தனது ஆக்கத்தைப் பெருக்கி ஊதியத்தை மிகுவிக்க வேண்டுமென்பதே இவனுடைய ஒரே நோக்கம். நாம் 7ஆவது அதிகாரத்தில் படித்ததுபோல, ஓர் உற்பத்திக் காரணியின் அலகுகளில் பலவற்றை இதர காரணிகளோடு இணைத்துக்கொண்டாலும் அல்லது அதே காரணியின் அலகு வீதங்களைக் கூட்டிக்கொண்டாலும், ஓர் உற்பத்திக் காரணியின்

இறுதிநிலை ஆக்கத்திறன் குறையவே செய்யும். தூய போட்டி யமைப்பில் உள்ள எந்த ஒரு காரணியின் ஊதியமும் தனது இறுதி நிலை ஆக்கத்தின் மதிப்பைச் சமப்படுத்திக்கொள்ளும்.

இப்பொழுது ஒரு தொழில் நிறுவனத்தைப்பற்றி ஆய்வோம். தூய போட்டி அமைப்பில் தனது ஆக்கங்கட்கும் சாதனங்கட்கும் உரிய நடைமுறை ஊதியங்களை இந் நிறுவனம் முதலில் ஏற்றுக் கொள்ளவேண்டும். இந்த நடைமுறை ஊதியங்கள் என்பன அங்காடியிலுள்ள நிலவர உண்மைகளாகும்; எனவே, இவற்றை மாற்றியமைக்கும் ஆற்றல் நிறுவனத்திற்குக் கிடையாது. எனவே, இந்த நிலையில் இந் நிறுவனத்தால் என்ன செய்யக்கூடுமென்றால், தான் மேற்கொள்ளும் ஒவ்வொரு காரணியிலும் எத்தனை எத்தனை அலகுகள் தேவைப்படும் என்பதைமட்டுமே தீர்மானித்துக்கொள்ள இயலும்.

ஒரு குறிப்பிட்ட தரத்தைச் சேர்ந்த ஒரு தொழிலாளியை அதிகமாக வேலைக்கு அமர்த்திக்கொண்டால், அந்தப் பகுதியின் விளைவில் ஒரு வாரத்திற்கு $x$ என்ற அலகுகள் கூடுவதாக வைத்துக் கொள்ளுவோம். உற்பத்தியில் இந்த $x$ என்ற அலகுகளைப் பெறுதற்காக அளிக்கப்படும் ஊதியத்தைவிட, அந்த உபரித் தொழிலாளிக்குக் கொடுக்கப்படும் கூலி குறைவாயிருந்தால், இவரை வேலைக்கு அமர்த்திக்கொண்டது நலம் தரும். இவரை வேலைக்கு அமர்த்திக்கொள்ளுவதால், கூலி போக எஞ்சிய ஊதியம் உற்பத்தி விளைவுகளை உயர்த்துவதால் மிகுந்த இலாபம் பெற வழி ஏற்படுகிறது. இது இதர உற்பத்திக் காரணிகட்கும் பொருந்தும். உதாரணமாக, ஒரு விவசாயி நிறைய இரசாயன உரங்களை வாங்கி நிலத்திற்குப் போடுவதாக வைத்துக்கொள்ளுவோம். உபரியாகப் போடப்படும் உரத்திற்கு ஆகும் செலவைவிட உற்பத்திப் பலன் மிகுந்திருந்தால், இது விவசாயிக்கு மிகுந்த இலாபத்தையே அளிக்கிறது.

'ஒரு காரணிக்கு அளிக்கப்படும் ஊதியமானது அதன் இறுதிநிலை ஆக்கத்தின் மதிப்பிற்குச் சமமாகவோ அல்லது ஓரளவு நெருங்கியோ அமைகின்றது' என்ற விதியை மேற்குறித்த உதாரணங்களிலிருந்து அறிந்துகொள்கிறோம். உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட தொழில் நிறுவனம், தன்னிடமுள்ள ஒரு துறைத் தொழிலாளர்களின் எண்ணிக்கையை மாற்றியமைத்துக்கொள்வ தாகவும், அவர்களின் உழைப்பதற்குரிய இறுதிநிலை ஆக்கத்திறன் பின்வருமாறு அமைந்திருப்பதாகவும் வைத்துக்கொள்வோம்.

| தொழிலாளர் எண்ணிக்கை | இறுதிநிலை ஆக்கம் (ஒரு வாரத்திற்கு) |
|---|---|
| 9 | 27 |
| 10 | 24 |
| 11 | 20 |

இந்த நிறுவனம் பின்வரும் எந்தச் சூழ்நிலையிலும் சமநிலையில் இயங்கிக்கொண்டிருக்கும் :

| | உற்பத்தி விலைகள் (ஓர் அலகு) | கூலிகள் (ஒரு வாரத்திற்கு) | அமர்த்தப்பட்ட தொழிலாளர் எண்ணிக்கை |
|---|---|---|---|
| (1) | 10 ஷில்லிங் | 13 பவு. 10 ஷி. | 9 பேர் |
| (2) | 10 ஷில்லிங் | 12 பவு. | 10 பேர் |
| (3) | 10 ஷில்லிங் | 10 பவு. | 11 பேர் |
| (4) | 4 ஷில். 6 பென்னி | 12 பவு. | 9 பேர் |
| (5) | 12 ஷில்லிங் | 12 பவு. | 11 பேர் |

உற்பத்திக்குரிய பொருள் விலை விகிதங்கள் ஒரே நிலையில் இருக்குமானால், இந்த விலைகள் குறையும்பொழுது ஒரு நிறுவனம் இதர சாதனங்களில் எதையும் மிகுதியாகக் கூட்டிக்கொள்ளும். இந்த விலைகள் கூடும்பொழுது மேற்குறித்த சாதனங்களையும் குறைத்துக்கொள்ளும். மாருக, உற்பத்தி சாதனங்கட்குரிய ஊதிய விகிதங்கள் ஒரே நிலையில் இருக்குமானால், இதன் உற்பத்திப் பொருள் விலைகள் உயரும்பொழுது மிகுந்த சாதனங்களையும், விலைகள் குறையும்பொழுது குறைந்த சாதனங்களையும் மேற்கொள்ளும்.

ஒரு குறிப்பிட்ட துறைச் சாதனத்தைமட்டும் கொண்டு தயாரிக்கப்படும் உற்பத்திப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை, அந்தச் சாதனத்தின் ஊதியத்தை உயர்த்திவிடுகிறது. (இந்தக் குறிப்பிட்ட துறைச் சாதனம், இதர தொழில்களை நோக்கும்பொழுது, அவற்றைவிட இங்கே மிகுந்த விகிதாசாரத்தில் பயன்படுத்தப்படக் கூடும்.) போர்க்கருவிகள் நிறையவேண்டும் என்ற தேவை மிகுதி, எஃகு தொழிலாளர்கள், இயந்திரப் பொறியாளர்கள் ஆகியோரின் கூலியை உயர்த்த முனைகிறது; எஃகின் விலையையும் கூட்டி விடுகிறது. நிறைய வீட்டு வசதிகள் வேண்டும் என்ற தேவை மிகும்பொழுது அது கொத்தர்களின் கூலியையும், கட்டடப் பொருள்களின் விலையையும் உயர்த்திவிடுகிறது. உணவு உதவிக் கொடைகள் அளிப்பது (subsidies) நில வாரங்களை உயர்த்தி விடுகின்றது.

இத்தகைய சூழ்நிலைகளில், ஒரு சாதனத்தின் விலை எவ்வளவு உயர்கிறது என்பது, அதன் அளிப்பை எந்த அளவுக்கு உயர்த்தலாமோ அதைப் பொறுத்தே அமைகிறது. ஒரு தொழிலில் ஈடுபட்டுள்ளோர்க்கு ஓரளவு கூலி உயர்வு கொடுப்பதாக வைத்துக் கொள்ளுவோம். இந்தச் சாதாரணக் கூலி உயர்வு, இதர தொழிலில் உள்ளோரையும் எளிதில் ஈர்ப்பதாக இருந்தால், கூலி உயர்வு கொடுக்கப்பட்ட தொழிலில் சேரப் பல தொழிலாளர்கள் ஓடிவருவார்கள். இதனுல், அத் தொழிலுக்கு வரும் உழைப்பாளர் எண்ணிக்கை (அதாவது, உழைப்புச் சாதன அளிப்பு) உயரும்; ஆனுல், அவர்களது கூலியில் ஓரளவே உயர்வு கிட்டும். இதற்கு மாருக, அத் தொழிலுக்குரிய உழைப்பாளர் எண்ணிக்கை தற்சமயத்திற்குக் கிட்டத்தட்ட ஒரே அளவினதாக அமைந்துவிட்டால் (உதாரணமாகப் பயிற்சி அளிக்கப்பட்ட பின்னரே வேலைக்கு எடுத்துக்கொள்ளவேண்டிய சூழ்நிலை ஏற்பட்டால்), அவர்கட்கு அளிக்கப்படும் கூலி உயர்வு மிக அதிகமாகவே கருதப்படும். ஏனென்ருல், மேற்குறிப்பிட்ட துறைத் தொழிலாளர்களின் பற்ருக்குறையாலும், இதர தொழிற்கூடங்களின் போட்டியாலும் அவர்கட்குரிய கூலிகள் அதிகமாகவே இருக்கும்.

இக் கருத்தை விளக்க, நாம் முன்னர்க் கண்ட அட்டவணையைத் திரும்பவும் நினைவிற் கொள்வோம். இந்த நிறுவனம், இறுதிநிலை ஆக்கத்திறமாக 27 அலகுகளுடைய 9 தொழிலாளர்களை அமர்த்தி, 13 பவு. 10 ஷி. கூலி கொடுத்து, உற்பத்திப் பொருளுக்கு 10 ஷி. வைப்பதாகக் கொள்வோம். இந்த உற்பத்திப் பொருளின் விலை 14 ஷி. ஆக உயர்ந்துவிடுகிறது. இதைச் செய்யக்கூடிய தொழிலாளர்கள் தாராளமாகக் கிடைப்பார்களேயானுல், இந்த நிறுவனம் தனது தொழிலாளர் தொகையை 11 ஆக உயர்த்திக் கொள்ளலாம். இதைப்போல ஏனைய நிறுவனங்களும் தொழிலாளர் தொகையைக் கூட்டிக்கொள்ளலாம். இவர்களுடைய கூலியில் 14 பவு. மட்டும் உயர்த்தினுல் (அதாவது, அவர்களது இறுதிநிலை ஆக்க மதிப்பிற்குச் சமமான அளவு, $20 \times 14$ஷி.) இது சமநிலையை மீண்டும் உண்டாக்கிவிடக்கூடும். ஒருவேளை, இந்த நிறுவனத்திற்குரிய குறிப்பிட்ட வகைத் தொழிலாளர் கிடைப்பது கடினமாயிருப்பதாகக் கொண்டால், அவர்களது இறுதிநிலை ஆக்கத்திறன் 27 அலகுகளிலேயே நிற்கும்; அவர்களது கூலியும் 18 பவு. 18 ஷில்லிங்கிற்கு ($27 \times 14$ ஷி.) உயர்ந்துவிடும்.

இதர ஆக்கப் பொருள்கட்குரிய தேவையானது, குறைந்தோ கூடியோ அமையும்பொழுது, ஒரு குறிப்பிட்ட தொழிற்சாலையில் ஆக்கப்பட்ட பொருளுக்குரிய தேவைமட்டும் குறைந்தால், இதர தொழிற்சாலைகளில் ஈடுபடுத்தப்பட்டு, அதே அளவு ஊதியம் பெறக்

கூடிய உற்பத்திச் சாதனங்கள் எல்லாம் ஒருபோதும் பாதிக்கப்பட மாட்டா. ஒவ்வோர் அலகிற்கும் உரிய விலையில் ஏற்பட்ட வீழ்ச்சிக்கு ஈடுகட்டுவதற்கு வேண்டுமளவு இத் தொழிலில் தங்கியுள்ளவர்களின் உழைப்பு இறுதிநிலை ஆக்கத்திறத்தை உயர்த்தும் வகையில் ஒரு சில காரணிகளே விலகிச் செல்லவேண்டியதிருக்கும். நமது தொழிலகத்தில் முன்பு 10 தொழிலாளர்களை வாரத்திற்கு 12 பவு. கூலியில் அமர்த்தியிருப்பதாகவும், அவர்களது இறுதிநிலை ஆக்கத் திறன் 24 அலகுகள் எனக் கணக்கிடப்பட்டிருப்பதாகவும் வைத்துக் கொள்ளுவோம். ஓர் அலகின் விலையானது 10 ஷில்லிங்கிலிருந்து 9 ஷில்லிங்கிற்குக் குறைந்துவிடுகிறது எனவும் கொள்ளுவோம்; இந்த நிலையில் தொழிலாளர் தொகையை 9 ஆகக் குறைத்துவிட்டால், அது மீண்டும் அவர்களது இறுதிநிலை ஆக்க மதிப்பை (27 × 9ஷி.) அவர்களது கூலியாகிய 12 பவுனுக்குச் சமமாக (உண்மையில், ஓரளவு அதிகமாகவும்) ஆக்கிவிடும். இந்தத் தொழிலகமானது தனது தொழிலில் உள்ள இதர தொழிலகங்கட்கு எடுத்துக்காட்டான ஒரு நிறுவனமாக அமைந்திருப்பதாகக் கருதுவோம். அதில் உள்ள தொழிலாளர்களின் கூலி மாருதிருக்கவேண்டுமானல், இதிலிருந்து பிற தொழிலகங்கட்குப் பெயர்ந்து செல்வோரின் மொத்த எண்ணிக்கை 10 சதவிகிதமாகமட்டும் இருந்தால் போதும். இதர தொழிலகங்களில் இவர்களது உழைப்பின் இறுதிநிலை ஆக்கத்திறன் எப்படியும் குறைந்துவிடும்; இஃது அவர்களது கூலியைக் குறைக்கத் தூண்டும். ஆனாலுங்கூட, இந்தத் தொழிலகங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களுக்குரிய தேவையும் கணிசமாக உயர்ந்து விட்டாலோ, அல்லது முதல் தொழிலகத்துப் பொருள்களையே வாங்கிப் பழகியோர் அதை விட்டுப் புதிய தொழிலகப் பொருள்களை வாங்க முற்பட்டுவிட்டாலோ, தொழிலாளர்களின் கூலியைக் குறைக்கத் தூண்டும் முனைப்பு மடங்கிவிடும்.

எனவே, இதிலிருந்து ஒரு பொது முடிவைக் கொள்ளலாம். அதாவது, வெவ்வேறு ஆக்கப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை மாற்றங்கள் (changes in the demand)—சிலவற்றிற்குரிய தேவைகள் கூடலாம், பிறவற்றிற்குரிய தேவைகள் குறையலாம்—இதர எண்ணற்ற தொழில்களில் ஈடுபடுத்திவிடக்கூடிய உற்பத்திக் காரணிகளின் ஊதியத்தை ஓரளவே பாதிக்கக்கூடும். உதாரணமாக, விவசாய ஆக்கப்பொருள்களுக்குரிய மொத்தத் தேவைகளெல்லாம் ஒரே சீராக இருக்கையில், ஒரு குறிப்பிட்ட தானியத்திற்குமட்டும் தேவை மிகுந்து, இன்னென்றிற்குத் தேவை குறைவதாக வைத்துக் கொள்வோம். இச் சமயத்தில், தேவை குறைந்த தானியங்களைப் பயிரிடும் நிலத்தைத் தேவை மிகுந்த தானியங்களைப் பயிரிடும் நிலமாக மாற்றிவிடக்கூடுமானல், இந்தத் தேவை மாற்றங்களால்

நில வாரங்கள் அவ்வளவாக மாறமாட்டா. இதைப்போலவே, கூலி வேலைக்காரர்கள், டைப்பிஸ்டுகள் (typists), காரோட்டிகள் முதலிய தொழிலாளர்களை, இதர எத்தனையோ தொழிற்சாலைகளுக்கு எளிதில் மாற்றிப் பயன்கொள்ள முடியும். வெவ்வேறு ஆக்கப் பொருள்களுக்கு ஏற்படும் தேவைமாற்றம், இவர்களது கூலிகளில் எத்தகைய மாற்றத்தையும் உண்டாக்காது.

ஓர் உற்பத்திப் பொருளின் விலைவீழ்ச்சியால் பாதிக்கப்படும் காரணிகள் அந்தத் தொழிலுக்குமட்டுமே உரியனவாயிருக்க வேண்டும்; இதர தொழில்களில் (குறைந்த ஊதியத்திற்கன்றி இதே ஊதியத்திற்கு) ஈடுபடுத்தப்பட முடியாதனவாயிருக்க வேண்டும். உதாரணமாக, நிலக்கரிக்கு உரிய தேவை மிகவும் குறைந்துவிட்டால், அதை வெட்டி எடுக்கும் நுட்பம் தெரிந்த, மிகுந்த கூலி பெறும் சுரங்கத் தொழிலாளர்கள் மிகவும் பாதிக்கப்படுவர்; இதைப்போல ரப்பருக்குரிய தேவை குறைந்துவிட்டால், ரப்பர் மரத்திலிருந்து பால் வடிப்போர் மிகவும் பாதிக்கப்படுவர். பெரும்பாலான தொழிலகங்களில், உற்பத்தி நிலையங்கள், சாதனங்கள், தளவாடப் பொருள்கள் முதலியன அக் குறிப்பிட்ட தொழிலகங்கட்குமட்டுமே உரிய தனியான சொத்துகளாய் அமைந்துள்ளன. உருக்கும் உலை அடுப்பு, நூற்கும் கதிர், அச்சுப் பொறி என்பன அவ்வக் குறிப்பிட்ட தொழிற்கூடங்கட்கே உரியன; இவற்றைக் குப்பையாக விற்ருலொழிய இன்னொரு தொழிலகத்தில் பயன்படுத்திப் பலன்பெற முடியாது. எனவே, இந்தச் சொத்துகளை உடையோர் குறைந்த ஊதியமே பெறுகிருர்கள். இயல்பான அளவில் இலாபங்களைத் தரும் வகையில் இத் தொழிலகங்களின் 'திறமை' கட்டுப்படுத்தப்படுவதற்குரிய காலம் வரும்வரைக்கும், இச் சொத்துகளை உடையவர்கள் ஓரளவே இலாபம் பெறுகிருர்கள்; சில சமயங்களில் இழப்பிற்கும் ஆளாகிருர்கள். இத்தகைய சொத்துகளால் பெறும் வருமானங்களைப் போலி வாரம் (quasi-rent) அல்லது அரைகுறை வாரம் என்று மார்ஷல் (Marshall) அழைக்கிருர். ஏனென்ருல், இவ் வருமானங்கள் 'விலை நிர்ணயிப்புக்கு' (price determined) உட்பட்டவை. இவை தமது ஆக்கப் பொருள்களின் விலைகளையும், இதர சாதனங்கட்குரிய ஊதியங்களையும் சார்ந்து அமைந்துள்ளன.

ஆக்கப் பொருள்களுக்குரிய தேவையில் ஏற்படும் மாற்றங்கள் தவிர, பல்வேறு காரணிகட்கும் உரிய தேவைகள், தொழில்நுட்ப வளர்ச்சி காரணமாக மாறுதல் அடையக்கூடும். இயந்திரத் தறிகளின் வரவு, கைத்தறித் தொழிலாளர்களின் கூலியைக் குறைத்துவிட்டது; கணக்கிட்டுப் பதியும் இயந்திர மூளைகளின் வரவு, எழுத்தாளர்களின் தேவையைக் குறைத்துவிட்டது. *B* என்ற உற்பத்திக்

காரணிக்குப் பதிலியாக $A$ என்ற உற்பத்திக் காரணியை ஊக்குவிக்கும் தொழில்நுட்ப வளர்ச்சி $B$-ன் விலையைக் குறைத்து, $A$-ன் விலையை உயர்த்த முற்படக்கூடும்; அல்லது, $B$-ன் அளிப்பைக் குறைத்து $A$-ன் அளிப்பை விரிவுபடுத்தக்கூடும்.

இவற்றின் புதிய இறுதிநிலை ஆக்கத்திறன்களுக்குச் சமமாக இவ்விரண்டின் ஊதியங்களும் அமையும்வரை இம் மாற்றம் ஏற்பட்டே தீரும். இதைப்போலவே, அளிப்புத்துறையில், ஏதாவது ஒரு காரணியின் அளிப்பில் ஏற்படும் உயர்வு அதன் ஊதியத்தைக் குறைக்கவே முற்படும். ஏனென்றால், இதர மாற்றங்கள் இல்லாதபோது இக் காரணியை ஏற்றுள்ள எல்லாத் தொழிற்சாலைகளிலும் இதன் உழைப்பிற்குரிய இறுதிநிலை ஆக்கத்திறன் குறைந்துவிடும். உதாரணமாக, குடிபெயர்ந்து வருவோர் தொகை திடீரெனப் பெருகிவிட்டால், இப் பெயர்ச்சி மிகுதி உள்நாட்டுக் கூலி விகிதங்களைக் குறைக்கும்; உள்ளூர் நில மதிப்பையும் வீட்டு வாடகைகளையும் உயர்த்தும். கடன் கொடுப்பதற்குக் கிட்டும் உருப் பெருத மூலதனத்தின் (free capital) மிகை, வட்டி விகிதங்களைக் குறைக்கும். மிகுந்த சரக்குக் கப்பல்களின் வருகை பண்டங்களுக்குரிய சுமைக் கூலியைக் கணிசமாகக் குறைக்கும். இதற்கு எதிர் விகிதமாக, ஒரு சாதனத்தின் அளிப்பில் ஏற்படும் குறைவு அதற்குரிய ஊதியத்தையும் முறையே உயர்த்திவிடுகிறது.

ஒரு தொழிலகத்தில் பயன்படுத்தப்படுகின்ற ஒரு குறிப்பிட்ட காரணியின் தொகையில் (அந்தத் தொழிலகத்தின் ஆக்கப் பொருளுக்குரிய தேவை மாருமலிருக்கும்பொழுது) ஏற்படும் உயர்வு, இதன் ஊதியத்தில் இருதிறப்பட்ட கீழ்நோக்கிய செல்வாக்குகளைப் பெற்றிருக்கிறது. ஒன்று, அந்தக் காரணியை இதர காரணிகளுடன் முன்பிருந்த விகிதத்தைக்காட்டிலும் மிகுதியான அளவில் இணைக்கும்பொழுது, அந்தக் காரணியின் உழைப்பிற்குரிய இறுதிநிலை ஆக்கத்திறன் குறைந்துவிடுகிறது. இன்னென்று, அந்தக் குறிப்பிட்ட காரணியின் அலகுகளை மிகுதியாகத் தொழிலுக்குப் பயன்படுத்தினால், அந்தத் தொழிலின் விளைவுகள் மிகுதிபடக்கூடும். இத்தகைய விளைவுப் பெருக்கத்தால், அதன் ஆக்கப் பொருளின் விலையும் குறைய நேரிடும். மேலும், இந்தக் காரணியின் அளவு குறைவதாலும், அதன் ஒவ்வோர் அலகிற்கும் உரிய விலை குறைவதாலும், அக் காரணியின் இறுதிநிலை ஆக்க மதிப்பும் குறைந்துவிடும்.

நாளடைவில் பல மாறுதல்கள் ஏற்படலாம். பொருளாக்கத்தில் புதிய முறைகள் மேற்கொள்ளப்படலாம்; புதிய புதிய

தொழில்கள் கிளைக்கலாம். பல்வேறு உற்பத்திக் காரணிகளின் அளிப்பில் மாறுதல் ஏற்படலாம். இவற்றிற்குரிய தொடர்புத் தேவைகளை (relative demand) தொழில்நுட்ப வளர்ச்சிகள் மாற்றியமைக்கலாம். என்றாலுங்கூட, இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாட்டின் சிறப்புகள் குன்ற மதிக்கப்படவேண்டிய நிலை ஏற்படவில்லை. மேற்கு நாடுகளில் சமீப காலத்தில் ஏற்பட்ட மக்கள்தொகை வளர்ச்சியால் உண்மைக் கூலி நிலைகள் குறையவில்லை; மாறாக் கூடியே உள்ளன; தொழில்நுட்ப வளர்ச்சிகள் தொடர்ந்து செயல்பட்டுள்ளன; மக்கள் தொகையைவிடக் குறிப்பிடத்தக்க அளவு மூலதனமும் பெருகியுள்ளது. மோட்டார் வண்டிகள் புழக்கத்திற்கு வந்தபின்னருங்கூடக் குதிரைகளின் விலையோ, கொள்ளுப்பயறின் விலையோ குறைந்தபாடில்லை. இவற்றின் விலைகள் ஏறுமுகத்திலேயே உள்ளன; இதற்குக் காரணம் என்ன? இவற்றின் அளிப்புப் பகுதியில் சில மாற்றங்கள் செய்துகொள்ளப் பட்டன; அதாவது, குதிரைகள் குறைவாகவே பராமரிக்கப்பட்டன; கொள்ளுப்பயறு குறைந்த அளவிலேயே பயிரிடப்படுகிறது; இதனால் இவற்றின் விலையும் உயர்ந்தே இருக்கிறது. இந்த இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாடு, குறைந்துசெல் விளைவு விதியின் (the law of diminishing returns) அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது. எனவே, இந்த விதியைப்போலவே, இந்தக் கோட்பாட்டையும் ஒரு குறிப்பிட்ட சமயத்தில் அமைந்துள்ள சூழ்நிலைக்கு ஏற்பவே குறைந்த அளவில் பயன்படுத்தவேண்டும். சூழ்நிலைகளில் மாற்றம் ஏற்படும் பொழுது, முந்திய விவரங்களிலிருந்து மேற்கொள்ளப்பட்ட முடிவுகளால் எத்தகைய நலனும் ஏற்படுவதில்லை. புதிய விவரங்களிலிருந்து மேற்கொள்ளப்பெறும் புதிய முடிவுகளே செல்லுபடியாகும்.

## 4. இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாட்டின் திறனாய்வு

இக் கோட்பாடு உற்பத்திக்குரிய காரணிகளுக்கு இடையில் உள்ள விகிதங்களை மாற்றிக்கொள்ளலாம் என்று கருதுகிறது. எடுத்த எடுப்பில் புலப்படுவதைக்காட்டிலும் இக் கருத்தில் ஆழ்ந்த உண்மை இருக்கிறது என்பதை ஏற்கெனவே 7ஆவது அதிகாரத்தில் நான் விவாதித்திருக்கிறேன். மேலும், குறிப்பிட்ட சில தொழிலகங்கட்குரிய சாதனங்களின் விகிதாசாரங்கள் ஒரு குறுகிய கால அளவில், மாறாத நிலையிலேயே இருக்கின்றன என்பதும் உண்மைதான். உதாரணமாக, ஒவ்வோர் இயந்திரத்தையும் இயக்குதற்கு ஒவ்வோர் ஆள் தேவைப்படலாம். அப்பொழுது, அந்தத் தொழில் முனைவர் (entrepreneur) மனிதனையும் இயந்திரத்தையும் ஓர் அலகாகவே கணிப்பார். அந்த அலகின் வாராந்தர இறுதிநிலை ஆக்கத்தோடு, அதன் வாராந்தரச் செலவு (cost) இனத்தைப் பொருத்திப் பார்ப்பார்.

மேலும்; ஒரு காரணியின் ஒவ்வோர் அலகிற்கும் உரிய ஊதியமானது அவ் வலகைப் பயன்படுத்தும் ஒவ்வொரு தொழிலகத்திலும் ஒரே மாதிரியாக இருக்கும் என்று இக் கோட்பாடு கருதுகின்றது. ஒரே மாதிரியான இம் முடிவைப் பெறுவதற்கு வேண்டிய போதுமான மாற்றத்திறம் இருக்கிறதென்பது இதிலிருந்து பெறப்படுகின்றது. இப் பிரச்சினையை 21ஆம் அதிகாரத்தில் நான் தெளிவாக்கியிருக்கிறேன். சில சமயங்களில் சில குறிப்பிட்ட வகைத் தொழிலாளர்கள் பிறிதோர் இடத்திற்குச் சென்று நிறையச் சம்பாதிப்பதை விரும்பாது, இருந்த இடத்திலேயே தங்கிக் குறைவான கூலியையே பெற்றுக்கொள்ள இசைவதுண்டு. இம்மாதிரி நிலைகளில்மட்டுமே இக் கோட்பாட்டின் நெறியை மாற்றியமைக்கவேண்டியதிருக்கும். இது தவிர, ஏனைய எல்லா சாதனங்கட்கும் இக் கோட்பாட்டின் எடுகோள் (assumption) பொருத்தமாகவே அமைந்திருக்கிறது.

ஓர் உற்பத்தி சாதனத்தின் இறுதிநிலை ஆக்க மதிப்பையும், அதன் அளவையும் தொழில் முனைவர் நன்கு அறிந்திருக்கிறார் என்று இக் கோட்பாடு கருதுகிறது. இது எப்பொழுதும் சரியாயிருக்கும் என்று ஏற்க முடியாது. உதாரணமாக, ஒரு விவசாயியை எடுத்துக்கொள்ளுவோம். தன்னுடைய நிலத்தில் அறுவடையாகப் போகும் விளைச்சலின் அளவை முன்னதாகவே வரையறுத்து அறிதல் என்பது இவருக்கு முற்றிலும் இயலாது. ஏனென்றால், நிலத்தின் விளைச்சல் என்பது பருவ காலத்தையும் இதர சூழ்நிலைகளையும் பொறுத்தே அமையக்கூடியதாகும். மேலும், இந்த விளைச்சலின் ஒவ்வோர் அலகிற்கும் உரிய தனித்தனி விலை மதிப்பையும் அவரால் வரையறுத்து அறிய முடியாது. என்றாலுங்கூட, தனக்கு வேண்டிய உற்பத்திக்காரணி வகை ஒவ்வொன்றிலும், எவ்வளவு அலகுகளைப் பயன்படுத்தவேண்டுமென்பதை அவர் கட்டாயம் தீர்மானித்தே ஆகவேண்டும். இந்த நிலையில் அவர், ஒரு காரணிக்குரிய ஊதியத்தை, அக் காரணிக்குரிய இறுதிநிலை ஆக்கத்தின் எதிர்பார்த்த மதிப்போடு இணைத்து உணர்கிறார் என்று சொல்லிக் கொள்ளலாம்.

உற்பத்தி செய்யப்படுவதற்குச் சில பொருள்கள் நீண்ட காலத்தை மேற்கொள்கின்றன. தனது ஆக்கப் பொருள்களைச் செய்து விற்பதற்குள், அவற்றை ஆக்கும் காரணிகட்கு ஒரு தொழில் முனைவன் மாதக்கணக்கில், ஆண்டுக்கணக்கில் ஊதியமளிக்க வேண்டியதிருக்கும். எனவே, இச் சந்தர்ப்பங்களில் இக் காரணிகளில் இறுதிநிலை ஆக்கத்திற்குரிய முழு மதிப்பையும் இவனால் செலுத்த முடியாது; அதற்குப் பதிலாக அந்த ஆக்கப் பொருளை விற்பனை செய்யும் காலத்தில் அவன் பெறுவதற்குரிய இப்பொழுதைய

மதிப்பை—அதாவது, அதன் கழிவு செய்த மதிப்பையே (discounted value) இப்பொழுது செலுத்துவான்.

இத்தகைய சிறு சிறு திருத்தங்களுக்கு உட்பட்டு, ஒவ்வொரு காரணிக்கும், அதற்குரிய இறுதிநிலை ஆக்க மதிப்பு செலுத்தப்படும் என்பதையும் இக் கோட்பாடு ஏற்கிறது. பிற காரணிகளையெல்லாம் வாடகைக்குப் பெறும் முதலாளி, அக் காரணிகட்குக் குறைந்த பணத்தைக் கொடுத்து அவற்றை முழுக்க முழுக்கப் பயன்படுத்திக்கொள்ள முடியாதா என்று கேட்கலாம். ஆனால், இக் கோட்பாட்டால் இது முடியாதென்றே தெளிகின்றது. ஏனென்றால், ஒவ்வோர் உற்பத்திக் காரணியும் தொழில் முனைவனைப்போலச் சுதந்திரமாக இயங்கி, இதர காரணிகளைத் தனக்கு வாடகைக்கு எடுத்துக்கொள்ள முடியும். உதாரணமாக, விவசாயி ஒருவன் தன் நிலத்திற்குத் தரும் வாரம் மிகமிகக் குறைவாயிருக்கிறது என்று நிலச்சுவான்தாரர் கருதினால் தானே அந்த நிலத்தை உழுது பயிரிடலாம்; இல்லாவிட்டால் ஒரு மேலாளரை அமர்த்தித் தானே பலன்காண முற்படலாம். ஒரு கடையில் உதவிவேலை செய்வோன், முதலாளி தன்னை மிகவும் வருத்தி வேலை வாங்குவதாகக் கருதினால், அவனே கடனாக முதல் பெற்றுப் பொருள்களை வாங்கிக் கடை யொன்றை வாடகைக்குப் பிடித்துச் சொந்தக் கடையே வைத்துவிடலாம். ஒரு தொழிற் பிரிவினர் அனைவரும், தமக்கு அளிக்கப்படும் கூலி மிகவும் குறைவாயிருக்கிறதெனக் கருதினால், அவர்களெல்லோரும் கூட்டாகச் சேர்ந்து, தொழிலைச் சொந்தமாக நடத்துதற்குவேண்டிய மூலதனத்தைத் திரட்டிவிடலாம். எனவே, பிற காரணிகளின் வாடகையாளராக இயங்குவதால்மட்டுமே இன்னொரு காரணிக்கு எவ்வித இலாபமும் ஏற்பட்டுவிடாது. ஏனென்றால், இக் காரணிகளில் எதுவும் இன்னொன்றாக மாறிக்கொள்ளும் இயல்புடையனவாயுள்ளன.

என்றாலும், இந்த எடுகோள் (assumption) மிகப் பெரிய அளவில் அமைக்கப்பட்டுள்ள மாபெரிய தொழில் நிறுவனங்களைப்பொறுத்த வரையில் உண்மையில் பொருந்தாது. உதாரணமாக, தொழிலாளர்களின் ஒருசில குழுவினர் தமக்குள் ஒன்றுகூடி, ஓர் எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையோ அல்லது பெரிய போக்குவரத்து நிறுவனமோ அமைத்தற்கு வேண்டிய போதுமான முதலீட்டைச் சேகரிக்க முயல்வது சாத்தியமானதாயிருக்காது. தம்மை உழைக்க வைத்துப் பிறர் சுரண்டுகிறார்களே என்பதற்கு மாறாகத் தம்மைக் காத்துக்கொள்ளத் தொழிலாளர்கள் முயல்வதென்பது, தாமே தொழில் முனைவர்களாக மாறி, ஏற்கெனவே உள்ள நிலையை மாற்றி அமைத்தற்குரிய சாத்தியக்கூறாகிவிடாது. அவர்களது பணிகளைப் பெறுவதற்காக, அவர்களது தொழில் துறையில் உள்ள பல்வேறு

தொழிலகங்கள் போட்டியிடுவதையோ அல்லது அவர்களை வேலைக்கு வைத்துக்கொள்ளக்கூடிய இதர நிறுவனங்கள் தமக்குள் போட்டியிட்டுக்கொள்வதையோதான் இது குறிக்கும்.

இந்தக் கோட்பாடு நிறைவுப் போட்டி முறையின் நிலவரமே தனது செயற்போக்கில் அமையுமெனக் கொள்ளுகிறது. ஆனால், உலகில் பொதுவாக எங்கு நோக்கினும் நிறைவு குன்றிய போட்டி முறைகளே (imperfect competition) நடைமுறையில் இருக்கும் பொழுது, இந்தக் கோட்பாடு, நிறைவுப் போட்டிமுறையின் அடிப் படையில் உண்மையான உலக முறையை விளக்க முற்படுவது, இதைப் பயனற்றதாக்கிவிடுகின்றதெனத் திறனாய்வாளர்கள் கூறு கின்றனர்.

உழைப்பிற்கும் மூலதனத்திற்கும் இடையே வருமானத்தைப் பகிர்வதென்பது, விற்பனைச் சர்வாதீனத்தின் (monopoly) தரத்தைப் பொறுத்தே அமைகின்றதென்று இவர்கள் கூறுகின்றனர். இப் பகிர்வு கூலிகளின் பட்டியலுக்கும் மொத்த இலாப எல்லைகட்கும் (wage bills and gross profit margins) இடையே உள்ள தொடர் பையே சார்ந்தமைகிறது. உதாரணமாக, ஒரு தொழில் நிறுவனம் மூலப்பொருள்களுக்கு 10 ஷி.–ம், தொழிலாளர்கட்கு 10 ஷி.–ம் கொடுத்து ஆக்கப்பட்ட பொருளின் ஓர் அலகிற்குச் சராசரியாக ஒரு பவுன் என்று விலை அமையுமாறு ஒரு பொருளைத் தயாரிப்பதாக வைத் துக்கொள்வோம். இத்துடன் இலாப எல்லையாக (profit margin) 50 சதவீதத்தைக் கூட்டி, விலையை 30 ஷி. என அறுதியிட்டால், இதில் 10 ஷி. தொழிலாளர்கட்கும், 10 ஷி. மூலதனத்திற்கும் போகிற தென்பதுதான் இதற்குப் பொருளாகும். இந்த நிறுவனம் இலாப எல்லையில் 20 சதவீதம் மட்டுமே கூட்டி, விலையை 24 ஷி. என்று அறுதியிட்டதாகக் கொண்டால், இதில் உழைப்பிற்கும் மூலதனத் திற்கும் இடையே ஏற்படும் பகுப்பு 10 ஷி.-க்கு 4 அல்லது 5-க்கு 2 என்ற வீதத்தில்தான் அமையுமென்பதே இதற்கு அர்த்தமாகும்.

இத்தகைய கணக்கீட்டு முறையில் மூலதனத்தின் பங்கானது நிலையான சொத்துகளைப் புதுக்குதற்கும் மாற்றியமைத்தற்கும் எனத் தனியாக ஒதுக்கிவைக்கப்பட்டுள்ள தேய்மான இருப்புகளையும் (depreciation reserves) தன்னுள் அடக்கியுள்ளதாகவே கருதப்படும்.

சாதாரணமாக வேறுவகையாக இருக்கக்கூடிய இலாபங்களின் பங்கை உயர்த்துவதற்காகச் சர்வாதீன சக்தியைப் பயன்படுத்தும் போதெல்லாம், இந்த உண்மையை எந்தப் பகிர்வுக் கோட்பாடும் மனத்திற்கொண்டே ஆகவேண்டுமென்பது மிகவும் சரிதான்.

(தேய்மானக் கழிவிற்குப் பின்) இலாபங்களுக்குச் செல்லும் இங்கிலாந்தின் தேசிய வருமானமாகிய 15 சதவீதத்தில் சர்வாதீன இலாபங்கள் எந்த விகிதத்தில் உள்ளன; அதாவது, நிறைவுப் போட்டிச் சூழலில் இயல்பாக ஈட்டக்கூடிய இலாபங்களையெல்லாம் விட இந்தச் சர்வாதீன இலாபங்கள் எந்த விகிதத்தில் அமைந்துள்ளன என்பதுபற்றிப் பல கருத்துகள் நிலவுகின்றன. தேசியமயமாக்கப்பட்ட தொழில்களில் இந்தச் சர்வாதீன சக்தி உழைப்பின் பங்கை உயர்த்த முற்படுவதற்கே உபயோகிக்கப்படுகிறது என்று விவாதிக்கலாம். அதாவது, பொதுத்துறைத் தொழில்களில் ஈடுபட்டுள்ள நிறுவனங்கள், உயர்ந்த கூலி வேண்டும் என்ற கோரிக்கைகட்கு இணங்குமாறு வற்புறுத்தப்படலாம்; இவ்விதம் உயர்த்திக்கொடுக்கும் தொழிற்செலவுகளைச் சரிக்கட்டுதற்காகத் தனது ஆக்கப்பொருள்களின் விலையை உயர்த்திக்கொள்ள நேரிடலாம். மின்சாரக் கட்டண உயர்வுகள், ரயில் அல்லது மோட்டார்ப் போக்குவரத்துக் கட்டண உயர்வுகள் முதலியவற்றை இதற்குக் காட்டாகக் கொள்ளலாம்.

இந்தச் சர்வாதீன முறையால் ஏற்படும் இன்னொரு விளைவு என்னவென்றால், சில துறைகளில் நிறைவுப் போட்டி முறையில் இருப்பதைக்காட்டிலும் சர்வாதீன முறையில் உள்ள துறைகளில் விளைவு குறைந்தே இருக்கும். இத்தகைய துறைகளில், அவற்றின் விளைவுகளைக் கட்டுப்படுத்தாத நிலையில் இருப்பதைக்காட்டிலும், எல்லரச் சாதனங்களுக்கும் உரிய தேவை குறைந்தே இருக்கும். ஏனைய துறைகளைவிட, இதே துறையில் அச் சாதனங்களைக் கூடிய விகிதத்தில் பயன்படுத்தினால், அப்போது இச் சாதனங்களின் தொடர்பான ஊதியங்களை அது நேர்மாறாகப் பாதித்துவிடுகிறது. உதாரணமாக, இரசாயனத் தொழில்களில் ஏற்படும் விற்பனைச் சர்வாதீனம், இரசாயனத் தொழிலாளர்கள் வேண்டுமென்ற தேவையை மிதப்படுத்திவிடுகிறது; இதனால் அவர்களது ஊதியங்கள் குறைய ஏதுவாகின்றது. என்றாலும், இதர காரணிகளின் அளிப்பை அப்படியும் இப்படியும் சரிக்கட்டி அமைத்துக்கொள்வதன் மூலம், இந்த ஊதியக் குறைவு ஏற்படுவதை தடுத்துக்கொள்ளலாம். அதாவது, இரசாயனத் தொழிலாளர்கட்கு உரிய ஊதியம் குறைந்திருக்கையில், ஒருசிலரைமட்டுமே இத் துறைத் தொழிலுக்குப் பயிற்சி பெற அனுமதிக்கவேண்டும்; இதனால் இரசாயனத் துறைத் தொழிலாளர்களின் எண்ணிக்கை குறையும். தொழிலாளரின் எண்ணிக்கைக் குறைவால் இதர துறைத் தொழிலாளர்களைவிட இவர்கட்கு அதிகமான ஊதியம் கிடைக்க வழி ஏற்படும்.

உற்பத்திக் காரணியின் ஊதியங்களாகிய (factor prices) இறுதி நிலைச் செலவுக்கு (marginal costs) மேலாக ஊதியங்களை அறுதியிடும்

வரைக்கும், ஒரு சாதனத்தின் இறுதிநிலை ஆக்க மதிப்பிற்குச் சமமாக அதன் ஊதியமும் இருக்கும் என்பது உண்மையாகாது; அப்பொழுது இறுதிநிலை ஆக்க மதிப்பு அதன் ஊதியத்தைவிட அதிகமாகவே இருக்கும். இப்படி ஏற்பட்டுவிட்டதற்காக இந்த இறுதி நிலை ஆக்கத்திறக் கோட்பாட்டைப் புறக்கணித்துவிட வேண்டும் என்று நான் குறிப்பிடவில்லை. இக் கோட்பாட்டின் அடித்தளமாக அமைந்துள்ள குறைந்துசெல் விளைவு விதியானது, பல்வேறு காரணிகளின் கூட்டுகளை வெவ்வேறு விகிதத்தில் சேர்த்துப் பெறும் ஆக்கப் பொருள்களின் தொகைகளுக்கு ஏற்படும் விளைவுகளோடு தானும் தொடர்புகொண்டுள்ளது. எனவே, இவ் விளைவு விதி நிறைவுப் போட்டி நிலையைப் போலச் சர்வாதீன நிலைக்கும் சரியாகப் பொருந்தும். ஒரு தொழில் நிறுவனம், தனது உற்பத்திக் காரணிகட்குச் செலுத்தவேண்டிய ஊதியத்தைத் தானே அறுதியிட்டுக் கொள்ளுதல் என்பது பொதுவாக இயலாது. ஏனென்றால், இந்த நிறுவனங்கள் தாங்கள் வாங்கும் மூலப்பொருள்கள், இதர சாதனங்கள் என்பனவற்றிற்கும், வாடகைக்குக் கொள்ளும் பணிகள், உழைப்பாளர்களின் உதவிகள் என்பனவற்றிற்கும் உரிய ஊதியங்களை, அங்காடி நிலவரத்திற்கு ஏற்ப அவை எப்படியிருந்தாலும் செலுத்த வேண்டியதிருக்கும். ஒரு குறிப்பிட்ட காரணியின் விநியோகம் மிகுதிப்பட்டால், அக் காரணிக்கு உரிய ஊதியத்தை இது குறைக்க முற்படும்; அக் காரணியின் வினியோகம் குறைந்தால் அதன் ஊதியத்தை உயர்த்த முற்படும். மேற்குறித்த காரணியின் உற்பத்தித் திற அலகுகளில் மிகையானவையோ குறைவானவையோ பயன்கொள்ளப்படும்பொழுது, அக் காரணியின் உழைப்பிற்குரிய இறுதிநிலை ஆக்கத்திறம் குறைந்தும் கூடியும் அமைவதாலேயே இந்த ஊதிய மாற்றங்கள் ஏற்படுகின்றன; இவ் வுற்பத்திக் காரணிகளின் தொடர்புடைய ஊதியங்கள், அவற்றின் தொடர்புடைய இறுதிநிலை ஆக்கத் திறங்களையே பிரதிபலிக்கின்றன; ஆக்கப் பொருளுக்கு ஏற்படும் அதிகப்படியான தேவையானது, அத் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டுள்ள இதர சாதனங்களைவிட அதிகமான வீதத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள ஒரு குறிப்பிட்ட காரணிக்கு உரிய ஊதியத்தையும் உயர்த்திவிட முற்படுகிறது; இதைப்போல, அப் பொருளுக்கு ஏற்படும் தேவைக் குறைவானது அச் சாதனத்திற்கு ஏற்படும் ஊதியத்தைக் குறைத்துவிடுகிறது. மேற்குறித்த நிலைகளெல்லாம், வணிகப் போட்டியானது நிறைவாயிருந்தாலும், நிறைவு குன்றியிருந்தாலும் ஒரேமாதிரியாகவே அமைந்திருக்கும்.

இக் கோட்பாடு, வேலை நிறைவுடைமையையும் கருத்தில் கொண்டிருக்கிறது. உற்பத்திக் காரணி யொன்றின் இதர கூறுக

ளெல்லாம் தொழிற்படாதிருக்கையில், அதில் ஒருசில அலகுகளை மட்டும் ஒரு குறிப்பிட்ட ஊதியத்திற்குப் பயன்கொண்டால், அப்பொழுது, தொழிற்படாது சும்மாயிருக்கும் கூறுகளெல்லாம் தாம் இயங்காது இருந்து ஏதும் பெருமலிருப்பதைவிட, குறைந்த ஊதியத் திற்காவது தம்மை ஈடுபடுத்திக்கொள்ளவே முயல்கின்றன என்பது இதிலிருந்து பெறப்படுகிறது. இந்த விதமாகவே, அந்தக் காரணி யின் எல்லாக் கூறுகளும் வேலைபெற உதவக்கூடிய எத்தகைய அளவிற்கும், அக் காரணியின் ஓர் அலகிற்கு உரிய ஊதியமானது குறைக்கப்படும். இந்த எடுகோளைக் கிட்டத்தட்ட நிலத்திற்கும் மூலதனத்திற்கும் இயைபுபடுத்திப் பார்க்கலாமே தவிர, உழைப்பைப் பொறுத்தவரையில் இது முழுக்க முழுக்கப் பொருந்தாததாகும். சில நாடுகளில் குறைந்தபட்சக் கூலிகள் (minimum wages) சட்டபூர்வ மாக அறுதியிடப்படுகின்றன; பெரும்பாலான மேலை நாடுகளில் உள்ள தொழிற்சங்கங்கள், ஒரு குறிப்பிட்ட அளவுக்குக்கீழ் கூலி களைக் குறைப்பதைச் சாதாரணமாக எதிர்த்துப் போரிடுகின்றன.

இந்த இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாட்டின் பொதுவான பகுத்தறிவுப் போக்கு இப்பொழுதும் பொருத்தமாக இருக்கிறது. ஆனால், ஒரு குறிப்பிட்ட தொழிலகத்தில் கணிசமான வேலையின்மை ஏற்பட்டிருக்கும்பொழுது, திடீரென்று அத் தொழிலகத்தின் பொருள் களுக்குக் கிராக்கி ஏற்படுமேயானல், அப்பொழுது அதிகப்படியான பேர்களுக்கு வேலை வாய்ப்புக் கிட்டுமே தவிர, இருக்கிற தொழிலாளர் களின் கூலிகளை உயர்த்த முற்படாது. அதைப்போல இத் தொழி லகத்தின் பொருள்களுக்குரிய கிராக்கி குறைந்துவிடுமேயானல் அது இன்னும் மிகுதியாக வேலையின்மையை உண்டாக்குமே தவிர, இருக்கிற தொழிலாளர்களின் கூலியைக் குறைக்க முற்படாது.

இக் கோட்பாடு கருதுவதைப்போல, கூலிகளில் ஏற்படும் பொதுவான குறைப்பு, வேலையுடைமையை விரிவடையச் செய்யுமா என்பது ஏற்றுக்கொள்ளுதற்கு இயலாததாகும். சில சந்தர்ப்பங்களில் வேண்டுமானல், இது நடக்கக்கூடும். உதாரணமாக, ஆஸ்தி ரேலியா, ஒரு பெரிய மந்தநிலைக்குப் பின்னர் துரிதமாக மறுமலர்ச்சி பெற்றதைக் குறிப்பிடலாம். காமன்வெல்த் நாடுகளின் மத்தியஸ்த மன்றம் தொழிலாளர் கூலியில் 26 சதவிகிதத்தைப் பொதுவாகக் குறைக்கச் செய்தது. இக் கூலிக் குறைப்பினுல்தான் ஆஸ்திரேலியா வால் எளிதில் புனர்வாழ்வு பெற முடிந்தது என்று தொடர்புபடுத்திக் கூறப்பட்டிருக்கிறது. ஆனாலுங்கூட, இதர சந்தர்ப்பங்களில் இத்தகைய நிலை நடக்கவியலாது. ஏனென்ருல், கூலிக் குறைப்பின் விளைவாகத் தொழிலாளர்களின் செலவினங்களிலும் குறைவு ஏற் படும்; இது முதலீட்டின் அளவில் இன்னும் வீழ்ச்சி ஏற்படவே வகை செய்யும்.

இந்த இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாடு என்பது தனிவாரிப் பொருளாதாரக் கோட்பாட்டையே (micro-economic theory) சார்ந்த தாகும். எனவே, இக் கோட்பாட்டை கீன்சு (Keynes) என்பாரின் கோட்பாட்டைப்போல, விளைவு, வேலையுடைமை என்பனவற்றின் பொதுவகைக் கோட்பாடுகளால் இன்னும் நன்கு விளக்குதல் வேண்டும். மேலும், இதுவரை நாம் படித்ததைப்போல இக் கோட்பாட்டின் எடுகோள்களில் பல செம்மையற்றனவாயிருப்ப தோடு, அவை பொருளாதாரத்தின் சில துறைகளுக்குமட்டுமே பொருந்துவனவாய் உள்ளன. எப்படியிருந்தாலும், என் நோக்கில், முதன்முதலாக மேற்கொள்ளப்பட்ட குத்துமதிப்பு (approximation) என்ற வகையில், இது மிகவும் பயனுடையதாயிருக்கிறது என்பதை மீண்டும் வலியுறுத்துகின்றேன். மேலும், பகிர்வு முறைக்குரிய பொதுக் கோட்பாடாக, இதைவிடச் சிறந்த முறையில் வேறெதுவும் அமைந்திருக்கவில்லை என்பதையும் சுட்டிக்காட்ட விரும்புகின்றேன்.

## 5. நாடுகளுக்கு இடையே வேறுபாடுகள்

வெவ்வேறு காரணிகட்கும் உரிய தொடர்பான வினியோகத்தால் அக் காரணிகளின் ஊதியங்களில் ஏற்படும் விளைவைப் பல்வேறு நாடுகளுக்கும் இடையில் ஏற்படும் வேறுபாடுகளால் நன்கு விளக்கலாம்.

மக்கள்தொகை பெருக்கமுள்ள நாடுகளில் கூலிகள் குறைவா யுள்ளன. இத்தகைய நாடொன்றில், ஒருபிள்ளை பிறக்கிறதென்றால், அது அக் குழந்தைக்குத் துரதிர்ஷ்டமே ஆகும். அக் குழந்தையின் சம்பாத்தியத் திறனைப் (earning power) பொறுத்தவரையில், இதைத் துரதிர்ஷ்டமென்றே குறிப்பிடலாம். ஏனென்றால், தொழிலாளர் பற்றாக்குறை மிகுந்துள்ள இன்னொரு நாட்டைவிட, இந்த நாட்டில் உள்ளவனுடைய திறமைக்கும் முயற்சிக்கும் குறைந்த அளவு ஊதியமே கிட்டும்; தொழிலாளர் பற்றாக்குறையுடைய நாடுகளில் இதே அளவு முயற்சிக்கும் திறமைக்கும் அதிகப்படியான ஊதியம் கிட்டும். உதாரணமாக, இந்தியாவில் திறப்பாடில்லாப் பாட்டாளி கட்குக் (unskilled labour) கூலியாக நாளொன்றுக்கு 3 ஷில்லிங்கு களே கொடுக்கப்படுகின்றன.

ஆனால், இத்தகைய நாடுகளில் மூலதனம் பற்றாக்குறையிருந் தால் இவற்றில் போடப்படும் மூலதனம் அதிகமான வரவு விகிதத் தைப் பெறுகின்றது. தேசிய வருமானத்தில் மூலதனத்திற்கு உரிய மொத்தப் பங்கு 20 சதவிகிதமாகவோ குறைவாகவோ இருக்க லாம். ஏனென்றால், இந் நாடுகளின் தொழிலாளர் தொகையோடு

ஒப்பிட்டுப் பார்க்கையில் மூலதனத்தின் அளவு மிகக் குறைவாகவே இருக்கிறது. இதன் விளைவாக, வட்டிவீதங்களும் இலாபங்களும் (சட்டத்தால் வரம்புகட்டப்பட்டாலொழிய—அப்படி வரம்புகட்டிவிட்டால்—கூடிய அளவில் தேவைப்படும் மூலதனத்தை முதலீடு செய்வது தடைப்பட்டுவிடும்) உயர்ந்து செல்லவே முற்படுகின்றன.[1]

கானடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் நிலப்பரப்பு அதிகமாயிருக்கின்றது; எனவே, இந்நாடுகளின் நிலப்பரப்பு மிகுதி நிலவாரங்களைக் குறையச் செய்கிறது. கிரேட் பிரிட்டன், ஜப்பான் போன்ற பரப்புக் குறைந்த நாடுகளில் நிலவாரங்களை உயர்த்தச் செய்கிறது.

கூலிமுறைகளைப்பற்றிய இப் பொதுக் கருத்துக்கு ஒரு வெளிப் படையான விதிவிலக்குமிருக்கிறது. இஃது என்னவெனில், சில வளர்ச்சி குன்றிய நாடுகளில் உள்ள பயிற்சிபெற்ற மருத்துவர்கள், பொறியியலினர், இதர பணித்துறையினர் முதலியோர் பெரும் பாலானோர் மேற்கு நாடுகளில் உள்ளவர்களைவிட அதிகப்படியான சம்பாத்தியத்தைப் பெறுகிறார்கள். இதற்குரிய காரணத்தை ஆராயும்பொழுது, இந்த வெளிப்படையான விதிவிலக்கும், பொதுவான விதியோடு பொருந்தித்தான் இருக்கிறது என்பதைக் கண்டறியலாம். இத்தகைய நாடுகளில் தொழில்நுட்பக் கல்வியும் பல்கலைக்கழகப் பயிற்சி வாய்ப்பும் மிகக் குறைவாயிருப்பதால் போதுமான நபர்கள் கிட்டுவதில்லை. இதனால் தேவைப்படுவோரைக் காட்டிலும் மிகக் குறைந்த அளவினரே இருப்பதால், இவர்கட்கு மிகுந்த ஊதியம் கிட்ட வாய்ப்பேற்பட்டுவிடுகிறது. ஜப்பானில் தொழில்நுட்பக் கல்வி எங்கும் பரவி இருக்கிறது. இங்கே, பொறியியலினர் மாதம் ஒன்றுக்கு 15 பவுன் ஊதியத்திலேயே வாழ்க்கையைத் துவங்கி, கிட்டத்தட்ட 50 பவுன் அளவுக்கே உயர்கிறார்கள். இதைப் போல இந்தியாவில் நிறையப் பல்கலைக்கழகங்கள் இருக்கின்றன;

[1] சில பொருளாதார நிபுணர்கள், இந்தப் பத்தியில் உள்ள கருத்தை ஏற்க இசையமாட்டார்கள். மிகுந்த புறநாட்டுப் பொருளாதார வளம்கொண்ட கிரேட் பிரிட்டன் போன்ற ஒரு நாட்டில், மூலதனத்தின் இறுதிநிலை ஆக்கத் திறன் அதிகமாகவே இருக்குமென்றும்; அல்லது ஓர் எளிய நாட்டில், மூலதனத்திற்குரிய தேவையானது, அந்த நாட்டின் குறைவான உண்மை வருமானத்தால் கட்டுப்படுத்தப்படுகின்றதென்றும் இவர்கள் விவாதிப்பார்கள்.

சில முதலீடுகள் உரிய பலனை அளிக்கமாட்டா என்பது உண்மைதான். ஒரு குறிப்பிட்ட தொழிலகத்தைப்பொறுத்தவரையில், ஒரு நாடு என்பது மிக மிகச் சிறிய அங்காடியாக அமைந்துவிடலாம்; இந்த நாட்டில் உழைப்பாளர்கள் அபரிமிதமாகவும் குறைந்த கூலிக்கும் கிடைக்கையில், கூலி முறையில் சேமிப்புக்காக மேற்கொள்ளப்படும் உத்திகள் உரிய இலாபத்தைத் தராது போகலாம். என்றாலுங்கூட, என்னுடைய நம்பிக்கை என்னவென்றால், நன்கு ஆராய்ந்து மேற்கொள்ளப்பட்ட நிரப்புத் திறமுடைய முதலீடுகளின் (complementary investments) திட்டமானது, தேசிய வருமான இனங்களில் எப்படியும் உயர்ந்த பலன்களையே நல்கும் என்பதே ஆகும்.

இவற்றில் படித்து வெளியேறிய மருத்துவர்களும் வழக்குரைஞர்களும் நிறைய இருப்பதால், இவர்கள் இந்த நாட்டில் குறைந்த அளவே சம்பாதிக்கிறார்கள்.

தேவைப்பகுதியை எடுத்துக்கொண்டால்—ஒரு நாட்டின் ஏற்றுமதிப் பொருள்களுக்கு ஏற்படும் தேவைமாற்றம், அந்த ஏற்றுமதிக்குரிய தொழிலகங்களில் மிகுதியான வீதாசாரத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள காரணிகளையும் குறிப்பாகப் பாதிக்கிறது. உதாரணமாக, போருக்குப் பின்னர், கம்பளிப் பொருள்களுக்குரிய தேவை மிகவும் உயர்ந்துவிட்டது. இதனால், போர்க்காலத்துக்கு முந்திய அளவைவிட, கம்பளியின் விலை 10 மடங்குக்குமேல் உச்ச கட்டமாக உயர்ந்துவிட்டது. ஆஸ்திரேலியா, கம்பளிப் பொருள்களை மிகுதியாக ஏற்றுமதி செய்யும் நாடு. இதன் பண வருமானங்களை எல்லாம் கம்பளி விலை ஏற்றம் உயர்த்திவிட்டது; இதற்கும் மேலாக, கம்பளித் தொழிலுக்குரிய மூலதன மதிப்புகள் அல்லது ஆட்டு நிலையங்களின் வார மதிப்புகள் என்பதையும், ஆடு வளர்ப்போரின் கூலி மதிப்புகளையும் மிகக் கணிசமாக உயர்த்தி விட்டது.

# 26. கூலிமுறைகள்

## 1. சுயேச்சைத் தொழிலாளர்கள் (Independent Workers)

கூலி என்பது, ஒரு தொழிலாளி செய்யும் வேலைகளுக்கு ஈடாக அவரை வேலைக்கு அமர்த்தியிருக்கும் முதலாளி அவருக்கு ஒப்பந்தப்படி கொடுக்கும் பணத்தின் அளவு என்று விளக்கம் தரலாம். கூலிக்கும் சம்பளத்துக்கும் (wage and salary) இடையே உள்ள வேறுபாட்டைப் பிரித்தறியவேண்டிய அவசியம் ஏதும் இல்லை. என்றாலும்கூட, சுயேச்சைத் தொழிலாளர்களின் சம்பாத்தியங்களைப்பற்றி (earnings) நாம் ஓரளவு பார்ப்பது நல்லது.

சுயேச்சைத் தொழிலாளி என்பவர் ஒரு முதலாளிக்காக உழைக்காது, தானே மேற்கொண்ட தொழிலில், தன் சூழ்நிலைக்குத் தக்கபடி தானே உழைப்பவராவார். இவருக்கு வருகின்ற வருமானத்தில், இவர் தனது தொழிலுக்கு முதலீடு செய்துள்ள மூலதனத்திற்கு உரிய இலாபமாக ஒரு பகுதியும், இவர் மேற்கொண்ட உடல் உழைப்பிற்கு உரிய சம்பாத்தியமாக இன்னொரு பகுதியும் அடங்கும்.

தங்களுக்குச் சொந்தமாகப் பெரிய வர்த்தகங்களையுடைய சில சுயேச்சைத் தொழிலாளர்கள், நிறைய வருமானங்களைப் பெறுகின்றார்கள். வெற்றிகரமாகத் தொழில் செய்யும் வழக்கறிஞர்களையும் செல்வாக்குப்பெற்ற எழுத்தாளர்களையும் இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம். ஒரு தொழில் நிறுவனத்தில் சேர்ந்து கூலி பெறுவோரைக்காட்டிலும், சுயேச்சையாகத் தொழில் செய்வோர் நல்ல நிலையிலிருக்கிறார்கள் என்பது பொதுவான ஒரு நம்பிக்கையாயிருக்கிறது எனக் கருதுகின்றேன். இஃது எல்லாச் சூழல்கட்கும் பொருந்துவதில்லை. சில சுயேச்சைத் தொழில்களைச் செய்பவர்கள், முறையாகக் கூலி பெறுவோரைக்காட்டிலும் மிகக் குறைவாகவே சம்பாத்தியம் செய்யும் நிலைகளும் உள்ளன. பெரும்பாலான நாடு

களில் உள்ள சுயேச்சைத் தொழிலாளர்களில் பேரளவினர் சிறுசிறு விவசாயிகளாகவே உள்ளனர் (உதாரணமாக, சீனுவில் சராசரியாக 2 அல்லது 3 ஏக்கர் நிலமே பெற்றிருக்கிருர்கள்). இங்ஙனம் மிகச் சிறிய துண்டு நிலத்தில் பாடுபடுவோர், திறப்பாடில்லாத தொழிலாளர்கள் பெறும் கூலியைவிடக் குறைந்த வருமானத்தையே பெறுகிருர்கள். கிரேட் பிரிட்டனில் தாமே பாடுபடும் சராசரிக் கடைக்காரர் அல்லது சிறு வியாபாரி, இந்த நாட்டுத் திறப்பாடில்லாத தொழிலாளர்களில் பெரும்பான்மையினரைவிட மிகமிகக் குறைந்த அளவே சம்பாதிக்கின்ருர்.

ஒரு தொழிலுக்கும் (occupation) இன்னெரு தொழிலுக்கும் இடையே உள்ள சம்பாத்தியங்களில் இருக்கும் வேறுபாடுகளைப் பற்றி ஆராய முற்படுகையில், சுயேச்சைத் தொழிலாளர்களைப்பற்றியும் மனத்திற் கொள்ளவேண்டும். பெரும்பாலான அலுவல்களில் (profession) பலர் சுயேச்சையாகவே ஈடுபட்டுள்ளனர். இதிலுள்ள மனப்போக்கு என்னவென்ருல், தமது துறையில் உள்ள சக தொழிலாளர்களைவிட ஒரு சுயேச்சைத் தொழிலாளி தனது தொழிலில் போட்டுள்ள சொந்த மூலதனத்திற்குக் கிடைக்கும் இலாபத்தைப்பொறுத்து தான் அதிகமான வருமானத்தைப் பெற முயல்வதே ஆகும். உதாரணமாக, ஒரு மருத்துவரோ, பல் வைத்தியரோ தாமே சொந்தமாகத் தொழில் செய்யலாம்; அல்லது தேசிய நலத்துறையில் சேர்ந்து பணியாற்றலாம்; பயிற்சித் தகுதி பெற்ற கணக்கர் ஒருவர் ஒரு நிறுவனத்தில் சேர்ந்து பணிபுரியலாம், அல்லது தானே சொந்தமாக அலுவல் புரியலாம்; இதைப்போல ஒரு கடையில் உதவியாளனுக இருப்பவர், தாம் விரும்பினுல், ஓர் இடத்தை வாடகைக்குப் பிடித்துச் சொந்தக் கடை வைக்க முடியா விட்டாலும்கூடத் தலைச்சுமையாகவே வியாபாரம் செய்து சம்பாதிக்கக்கூடும்.

எனவே, இத்தகைய சுயேச்சைத் தொழிலாளர்களின் உழைப்பு அளிப்பை (supply of labour) நாம் பொதுத் தொழில்களிலும் சேர்த்துக்கொள்ளவேண்டும்; தனி அலுவல்களோடும் சேர்த்துக் கொள்ளவேண்டும். தம் தொழிலில் இவர்கள் முடக்கியுள்ள மூலதனத்திற்கு உரிய இலாபம் போக, இவர்கள் பெறும் எஞ்சிய வருமானங்களைத் தேசிய வருமானத்தில் தொழிலுக்குச் சேரும் பங்கோடு சேர்த்தே கணக்கிட்டுக் கொள்ளவேண்டும்.

ஆனுல், இத்தகைய சுயேச்சைத் தொழிலாளர்களின் வருமானத் திற்கும், உழைத்துக் கூலி பெறுவோரின் வருமானத்திற்கும் டையே முக்கியமான வேறுபாடொன்றிருக்கிறது. இச்

சுயேச்சைத் தொழிலாளர்களின் வருமானங்கள், கூலியாளர்களின் வருமானங்களைவிட மிகுதியான மாற்றங்களை அடைகின்றன. இவர்கள் தமது பண்டங்களையும் பணிகளையும் நேரடியாக அங்காடியில் விற்றுவிடுவதால், இவர்களது வருமானங்கள் ஒரே நிலையில் இராது அங்காடியின் நிலவரத்திற்கு ஏற்ப ஏறி இறங்கி மாறுகின்றன. ஆனால், உழைத்துக் கூலி பெறுவோர், தமது உழைப்பைத் தாம் சேர்ந்திருக்கும் முதலாளிக்கு விற்கிறார்கள்; இவர் ஏற்கெனவே ஒப்புக்கொள்ளப்பட்ட ஒப்பந்த விகிதத்தில் கூலிகளை அளிப்பார்; இந்த விகிதத்தை அடிக்கடி மாற்றுவதென்பது மிகச் சிரமமானது. இந்த விதமாக ஆக்கப் பொருள்களின் விலைகளின் மாற்றத்தால் பெறும் இலாப நட்டங்கள் சுயேச்சைத் தொழிலாளர்களைப் பொறுத்தவரையில் நேரடியாக அவர்களையே சேர்கின்றன; உழைத்துக் கூலி பெறுவோரைப் பொறுத்தவரையில், அவர்களை வேலைக்கு அமர்த்தியிருக்கும் தொழில் நிறுவனங்களையே சேர்கின்றன.

பல விவசாயப் பண்டங்கள், தாமே உழுது பயிரிடும் விவசாயிகளாலேதான் பெரும்பாலும் ஆக்கப்படுகின்றன என்பது முக்கியமான உண்மை. இந்தப் பண்டங்களுக்குரிய விலைகள் குறைந்தால், விவசாயிகள் என்ன செய்கிறார்கள்? தம் நிலத்தில் தற்காலிகமாக ஒன்றும் பயிரிடாமல் சோம்பியிருப்பதைவிட, இன்னொரு தொழிலுக்குச் சென்று தற்காலிக வேலை தேட முயல்வதைவிட, விலை குறைந்தாலும், இதே பண்டங்களை முந்திய அளவிலேயே ஆக்க முனைவதும், அல்லது அதிக விளைச்சலைப் பெறுதற்காக அரும்பாடுபடுவதும், தமக்குத் தகுந்த ஊதியத்தைத் தரும் என்று நம்புவார்கள். ஆனால், நாடெங்கும் வேலையின்மை பரவியிருக்குமேயானால், இவர்கட்குத் தற்காலிகமாக வேறு வேலை கிடைப்பதும் அரிதாகிவிடும். இவ்விதமாக, இந்த விவசாயப் பண்டங்களின் விலை மிகமிகக் குறைந்துவிட நேரிடலாம். 1928 முதல் 1932ஆம் ஆண்டுக்குள் பல விவசாயப் பொருள்களின் விலை 50 சதவிகிதத்திற்குமேல் குறைந்துவிட்டது. இதனால், விவசாயிகளின் வருமானங்கள் மிகவும் குறைந்த மட்டத்திற்கு விழுந்துவிட்டன. தமது தொழிலுக்குத் தாமே எசமானர்களாக இருந்தும், அங்காடியில் தம் பண்டங்களை நேரடியாகவே விற்றார்கள். இதனால்தான் அவர்களது ஆக்கப்பொருள்களுக்குரிய தேவைக்குறைவால் ஏற்பட்ட விலைக் குறைவின் விளைவுகளிலிருந்து இவர்களாலும் தப்ப முடியவில்லை.

ஆனால், இதற்கு நேர்மாறாக அமைந்தது நிலக்கரி சுரங்கத் தொழில். இதில் எல்லாத் தொழிலாளர்களுமே கூலி பெறுவோர்கள். நிலக்கரிக்கு ஏற்படும் அபரிமிதமான தேவைக் குறைவு, சுரங்கத்

தொழிலாளர் உழைப்பின் ஆக்கத்திற மதிப்பைக் (value-productivity) குறைத்துவிடுகிறது. இதன் விளைவாக அவர்களது கூலியைக் குறைக்கவேண்டியிருந்தாலும், அது நடைமுறையில் சாத்தியப்படுவதில்லை. ஏனென்றால், சுரங்கத் தொழிலாளர்கள், குறைந்த பட்சக் கூலி பெறுவதற்குத் தமக்கு உரிமை இருக்கிறதென்று கூறி, தம் கூலிக் குறைப்பை மறுத்துப் போராடத் தயாராகிவிடுகிறார்கள். இந்த இடர்ப்பாட்டால், தொழிலாளர் கூலியைக் குறைக்கவும் முடிவதில்லை. தேவைக் குறைவால் நிலக்கரியின் விலையைக் கூட்டி ஈடு கட்டவும் முடிவதில்லை. கூலிகளைக் குறைக்காது, சுரங்கத்தில் பல புதுப் பள்ளங்களைத் தோண்டுவதால் இலாபம் ஏதும் கிட்டுவதில்லை. எனவே, வேறு வழியின்றி அவை மூடப்படுகின்றன. நிலக்கரி விநியோகத்தைக் குறைத்துவிடுவது, இன்னும் ஏற்படக்கூடிய விலைச்சரிவைத் தடுத்துக்கொள்ளுகிறது; ஒரு குறிப்பிட்ட அளவு தொழிலாளர்களைக் குறைத்துவிடுவதால். நிலக்கரிச் சுரங்கத் தொழிலுக்குரிய இறுதிநிலை ஆக்கத்திற மதிப்பு, அதன் கூலிக்குச் சமமாகச் சரிக்கட்டி வைக்கப்படுகிறது.

மேலோட்டமாகச் சொல்வதென்றால், கோதுமைக்கு ஏற்படும் தேவைக் குறைவு, அதைப் பயிரிடுவோர் முழுக்க முழுக்க வேலை செய்துவந்தாலும், அவர்களுடைய வருமானத்தைமட்டுமே குறைக்கிறது; ஆனால், நிலக்கரிக்கு ஏற்படும் தேவைக் குறைவு, நிலக்கரித் தொழிலாளர்களிடையே வேலையின்மையையே உண்டாக்கிவிடுகிறது. விவசாயிகளின் வருமானங்களைவிட, இயந்திரத் தொழிலாளர்களின் வருமானங்கள் அடிக்கடி மாறாத நிலையுடையன; ஆனால், விவசாயிகளின் வருமானம் குறைவதால் அவர்கட்குரிய வேலை வாய்ப்புகளும் அடிக்கடி மாறுவதில்லை. எனவே, வேலையின்மை என்பது இயந்திரத் தொழிலில்மட்டுமே காணக்கூடிய ஒன்றாக இருக்கிறது; விவசாயத் தொழிலில் இந்த அளவில் காணப்படுவதில்லை.

இப்பொழுது அலங்காரமாகக் கருதிப் பார்ப்பதைக்காட்டிலும் இறுதிநிலை ஆக்கத்திறக் கோட்பாட்டில் நியாயமான உண்மைகள் அமைந்திருக்கின்றன. பொருளாதார மந்தமான காலங்களில் ஏற்படும் வேலையின்மையை, மிகுதியான கூலிக் குறைப்பால் தடுத்துவிடலாம். தொழிலாளர் செலவுகளில் ஏற்படும் பொதுப்படையான குறைவு, வாழ்க்கைத்தரச் செலவைக் குறைத்துவிடுவதால், கூலி பெறுவோரின் உண்மையான வருமானங்கள் அவர்களுடைய பண வருமானங்களைக்காட்டிலும் கொஞ்சமாகவே குறையும். ஆனால், தொழில் வளமான காலத்தில் தம் கூலிகளில் அதிகப்படியான பெருக்கத்தைப் பெறுவது மிகவும் அரிதானது என்பதைத் தொழிற்

சங்கவாதிகள் அறிந்திருப்பதால், மோசமான காலங்களில் தம் கூலியைக் குறைக்க முற்படுவதையும் தடுத்துவிடுகிறார்கள். நடைமுறையில், கீன்சு (Keynes) என்பார் கூறியுள்ள முறையிலேயே மந்த காலங்களுக்கு மாற்றுக் காண முயலவேண்டும். அதாவது, கூலிகளை மிக அதிகமாகக் குறைத்துவிட்டாலுங்கூட, இக் குறைப்பு கூலிபெறுவோரிடையே முழு வேலையுடைமையைப் பேணிக் கொள்ளும்; இதைப்போலவே தம் வருமானங்களில் ஏற்படும் அதிகப்படியான குறைவு, சுயேச்சைத் தொழிலாளர்களிடமும் முழு வேலையுடைமையைப் பேணிக்கொள்ளும்.

## 2. கூலிகளின் பொது அளவு நிலை

ஒரு தொழிலாளி பணமாகப் பெறும் கூலியைவிட (money wage) அப் பணத்தைக்கொண்டு வாங்கும் பொருள்களின் அளவே அவனுக்கு மிகவும் முக்கியமானதாகும். இவன் பெறும் பணக் கூலியைவிட, இவனது வாழ்க்கைத்தரச் செலவுகள் உயர்ந்து விட்டால், இவன் பிழைப்பு மோசமாகிவிடுகிறது; இவன் பெறும் உண்மையான கூலி (real wage) குறைந்துவிடுகிறது.

இதனால்தான் தொழிற்சங்கங்கள் தம்மால் முடிந்தபோதெல்லாம் தம் தொழிலாளர்கள் உண்மையான கூலியில் உயர்வு பெறுதற்கே முனைகின்றன. பணக் கூலியில் ஏற்படும் உயர்வானது உழைப்பின் ஆக்கத்திறத்தின் இணையான உயர்வோடு பொருந்தி விட்டால், வாழ்க்கைத்தரச் செலவு உயரவே மாட்டாது; ஏனென்றால், இக் கூலி உயர்வால் பெறும் அதிகப்படியான செலவு சக்தியானது இதற்கு இணையான அதிகப்படியான பொருள் ஆக்கத்தால் ஈடுசெய்யப்பட்டுவிடும். அப்படியில்லாமல், இணையான ஆக்கத் திறத்தில் எவ்வித உயர்வுமின்றி, பணக் கூலியில்மட்டும் உயர்வு ஏற்பட்டால், அப்பொழுது வாழ்க்கைத்தரச் செலவுகள் கூடுதற்கு வாய்ப்பேற்படுகிறது. ஏனென்றால், தொழிற் செலவுகளில் ஏற்படும் உயர்வானது நுகர்வோருக்கு மாற்றப்பட்டுவிடுகிறது. இதனால் பொருள்களின் விலை கூடி, வாழ்க்கைச் செலவும் அதிகரித்து விடுகிறது. அப்படியில்லையென்றால், வேலையின்மை ஏற்பட்டு விட நேரும். ஏனென்றால், பொருள்களின் இறுதிநிலை ஆக்க மதிப்பெல்லாம் ஒரே நிலையில் இருக்கும்பொழுது, சில நிறுவனங்களால், அதிகப்படியான கூலியைக் கொடுத்து, முன்புபோல் மிகுதியான தொழிலாளர்களை வேலைக்கு வைத்துக்கொள்ள முடிவதில்லை. இதனால் அவை தொழிலாளர்களைக் குறைக்க முற்படுகின்றன.

புதுமையான நெறிகளையும் முறைகளையும் புகுத்தக்கூடிய, மூலதனத்தை நிறைய முதலீடு செய்து, ஒரு தொழிலகத்தைப்

புதுப்பித்திருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். இங்கு அலுவல் பார்க்கும் தொழிலாளியின் சராசரி ஆக்கம், இப் புதுமுறை வரவால் ஓரளவு அதிகமாகவே இருக்கும். அப்படியானுல், தமது அதிகப் படியான ஆக்கத்திற்கு இணையாகக் கூலியிலும் அதிகப்படியான உயர்வை இத் தொழிலாளர்கள் பெறவேண்டுமா?

இவர்களுடைய (சராசரி) ஆக்கத்திறத்தில் ஏற்பட்ட உயர் விற்குக் காரணம், புதிதாகப் போடப்பட்ட முதலீடேயன்றி, அவர்களுடைய உழைப்பு முயற்சி ஏதும் இல்லே. தொழிலகத்தில் அமைக்கப் பட்ட புதுமுறைகளால் நல்ல பொருள்கள் கிடைக்கலாம்; அவை முன்னதைவிடக் குறைந்த விலேயிலும் கிடைக்கலாம். இப் பலனே, ஏனைய நுகர்வோரைப்போலத் தொழிலாளர்களும் பொதுவாக அடைவார்கள். அதிகப்படியாகச் செய்யப்பட்ட முதலீடானது, மூலதனத்திற்கு நிகராக உழைப்பின் இறுதிநிலே ஆக்கத்திறத்தை உயர்த்திவிடுமானுல், இதனுலும் இவர்கட்குத் தொழிலாளர்கள் என்ற வகையில் பலன் கிட்டும். இந்த இருவகைப் பலன்களுக்கும் மேலாக, தமக்கு அதிகப்படியான கூலி உயர்வுகளும் கொடுத்தே ஆகவேண்டுமென்று வற்புறுத்துவார்களேயானுல், விபரீதமான விளேவுகளே ஏற்படும். ஏனென்ருல், புதிய கண்டுபிடிப்புகளேப் பயன்படுத்தியதால் பெற்ற அதிகப்படியான வருமானங்கள், கூலி உயர்வால் துடைக்கப்படுகின்றன; இழப்பு ஆபத்துகட்கெல்லாம் தயங்காது முதலீடுசெய்ய முற்படுவோரின் முனேப்புகள் கிள்ளப் படுகின்றன. இவ்விதம் அதிகக் கூலி உயர்வு கேட்போர், பொன் முட்டைகளே இடக்கூடிய வாத்தை ஒரே நொடியில் கொன்று விடுகிருர்கள்.

ஏதேனும் ஒரு குறிப்பிட்ட பொருளுக்கு ஏற்படும் அதிகப் படியான தேவை உயர்வு அதன் விலேயையும் உயர்த்துவதாக வைத்துக்கொள்ளுவோம். இதன் விளேவாக, இந்தத் தொழிலிலுள்ள உழைப்பிற்குரிய இறுதிநிலே ஆக்கத்தின் மதிப்பு, (ஆக்கத்தின் பணம் குறையாவிட்டாலும்) குறைந்துவிடுகிறது. இத்தகைய நிலேயில் தொழிலாளர்கள் கூலி உயர்வு கேட்பது நியாயமானது. ஏனென்ருல், பொருள்களின் விலே உயர்வு காரணமாக ஏற்பட்ட நிலேயால், அதிகப் படியான கூலி கொடுப்பது தொழிற்சாலேக்குக் கட்டுபடியாகும். என்ருலுங்கூட, இக் கூலி உயர்வைக் கொடுப்பதற்குரிய வரம்பும் கட்டுப்படுத்தப்பட்டே இருக்கிறது. பொருள்களின் விலே ஏருத இதர தொழிலகங்களில் வேலே செய்யும் தொழிலாளர்கள், இத் தொழிலகத்தில் வேலே பார்க்க வருதற்கு நிறைய கிடைப் பார்களேயானுல், ஏற்கெனவே உள்ள தொழிலாளர்கள் மிகுந்த கூலி உயர்வு கேட்பது மட்டுப்படுத்தப்படும்.

இங்ஙனம் தமது தொழிற்சாலைப் பொருள்களுக்கு விலை ஏறும் பொழுதெல்லாம் கூலி உயர்வும் வேண்டுமென்று கேட்பவர்கள், அப் பொருள்களுக்கு விலை குறையும்போதெல்லாம், தம் கூலியையும் குறைத்துக்கொள்ள இசையவேண்டும்; இந்த நிலையில்கூட, இவர்கள் வேறோரிடத்தில் வேலை பெறமுடியுமென்றால், இவ்விதம் ஏற்படும் விலைக்குறைவைக் கட்டுப்படுத்திவிடக்கூடும்.

பொருள்களின் விலை ஏறும்பொழுது கூலி உயர்வு கொடுப்பதும் அவை குறையும்பொழுது கூலியைக் கொஞ்சம் குறைப்பதும் நடைமுறையில் இருக்கின்றன. என்றாலும், இலாபங்களைவிடக், கூலிகள் அதிகமாக ஒரு நிலையில் நிற்கின்றன. ஏனென்றால், பொருள்களின் விலை கூடினால் இலாபம் அதைத் தன் பக்கத்தில் சேர்த்துக்கொள்ளுவதும், விலை குறைந்து நஷ்டமேற்பட்டால் அது தன்னிடமிருந்து கொடுத்து ஈடுசெய்வதும் இன்று வழக்கமாக இருக்கிறது.

பணமாகப் பெறும் கூலியிலிருந்து மாறுபட்ட, உண்மைக் கூலியின் (real wage) பொது அளவானது தேசீய வருமானத்தில் உழைப்பிற்குள்ள பங்கை ஓரளவு சார்ந்தே அமைகின்றது; இதுவும் வியாபார நிலைகளில் அவ்வப்போது ஏற்படும் மாற்றங்களுக்குத்தக மாறிமாறி அமையக்கூடும். ஆனால், தலா ஒவ்வொருவரும் ஆக்கி வெளியிடும் பொருள் அளவுகளாலேயே இது முழுக்கமுழுக்கக் கட்டுப் படுத்தப்பட்டிருக்கிறது. மேலைநாடுகளில், கடந்த ஐம்பது, நூறு ஆண்டுகளில் தலா ஒவ்வொரு தொழிலாளிக்கும் உரிய ஆக்கம் இரண்டு மூன்று மடங்குகள் பெருகிவிட்டதால், இந் நாடுகளின் உண்மைக் கூலிகளும் இரண்டு, மூன்று மடங்குகள் பெருகியுள்ளன. இவ்விதம் ஒவ்வொரு தொழிலாளியின் பொருளாக்கமும் மிக மிக உயர்ந்திருப்பதால், ஏனைய வளர்ச்சியில் பின்தங்கிய நாட்டுத் தொழிலாளர்களின் உண்மைக் கூலியைவிட, இவர்களின் உண்மைக் கூலி மிகவும் அதிகமாக இருக்கிறது. இங்ஙனம் ஒவ்வொரு தொழிலாளிக்கும் அதிகமான பங்கு கொடுக்கவேண்டு மென்றால், இவர்கட்குப் பங்கிட்டுக் கொடுப்பதற்கு வேண்டிய மிகப் பெரிய இருப்பு இருக்கவேண்டுமல்லவா? ஒவ்வொருவருக்கும் பெரிய துண்டு ரொட்டி வேண்டுமென்றால், பகிர்ந்துகொடுக்கப் போதிய, பெரிய ரொட்டியே இருக்கவேண்டுமல்லவா?

## 3. ஒரு தொழிலுக்குள்ளேயே சம்பாத்தியத்தில் வேறுபாடுகள்

ஒரு தொழிலை எடுத்துக்கொண்டால், இதில் பல்வேறு விதங்களும், தரங்களும் உடைய தொழிலாளர்கள் அடங்கியிருப்பர்.

போரிடுவோரும் பொதுப்பணி செய்வோரும் இராணுவத்தில் இருப்பர்; மூளைநோய் நிபுணரும் பொதுவகை மருத்துவரும் மருத்துவத் தொழிலில் இருப்பர்; பிரதான நடிகையும் பின்னணிப் பாடகியும் நாடகத்துறையில் இருப்பர். இங்ஙனம் ஒரு தொழிலுக்குள்ளேயே பல்வேறு வகையும் தரமும் உடைய தொழிலாளர் அமைந்திருப்பர். ஆனால், ஒரு தொழிலில், ஒரேவிதமான வேலையைச் செய்யும் ஒரே தரத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் பெறும் சம்பாத்தியங்களில் வேறுபாடுகளிருப்பதற்குக் காரணம் என்ன?

இவர்கள் ஒரே தொழிலைச் செய்தாலும், ஒரு நாட்டின் வெவ்வேறு மாவட்டங்களில் வாழலாம். இவர்கட்கு அளிக்கப்படும் பணக்கூலிகளில் உள்ள வேறுபாடு, அவர்களது உண்மைக் கூலிகளுக்குச் சரியாக அமைவதாயிருக்கலாம்; குறைந்த பணக் கூலிகள் குறைந்த வாழ்க்கைத்தரச் செலவால் ஈடுகட்டப்படுகின்றன. நகரங்களில் வேலை செய்வோரைவிட கிராமப்புறங்களில் வேலை செய்வோர்க்குக் குறைந்த கூலிகள் கொடுக்கப்படுவதற்கான காரணத்தை, இஃது ஓரளவு விளக்குகிறது. ஏனென்றால், நகர்ப்புறங்களில் உள்ள தொழிலாளி வீட்டு வாடகை, உணவுப் பண்டங்கள், போக்குவரத்து முதலியவற்றிற்காக அதிகப்படியாகச் செலவழிக்க வேண்டியதிருக்கிறதல்லவா? ஆனால், கிராமப்புறங்களில் வேலை செய்வோரிடையே (ஒரு தொழிலுக்குள்) ஓர் ஊருக்கும் இன்னோர் ஊருக்கும் உண்மைக் கூலியில் வித்தியாசமிருந்தால், முன்னரே ஆய்ந்ததுபோல, தொழிலாளர்களின் இடப்பெயர்ச்சிக்கு (mobility) உள்ள தடையே அதற்குக் காரணமாகும். இந்த இடப்பெயர்ச்சித் தடைகள், அதிகக் கூலி கிடைக்கும் இடங்கட்குப் பெயர்ந்து செல்ல விடாது அவர்களைத் தடுத்துவிடுகின்றன.

ஓர் ஊரிலேயே, மிகைநேரம் (overtime) வேலை பார்க்கும் ஒருவர் தன்னோடொத்த இன்னொருவரைவிட அதிகப்படியான சம்பாத்தியத்தைப் பெறலாம். அரசாங்கப் பணிகள் உட்பட்ட பல தொழில்களில், நெடுநேரம் தங்கியிருந்து வேலை பார்ப்போர்க்கு, அதிகப்படியான சம்பளம் கொடுப்பதென்பது வழக்கமாயிருக்கிறது இவர்கட்கு ஆண்டுக்கொரு முறை ஊதிய உயர்வோ அல்லது சம்பளத்தில் 'தனி உயர்வோ' தரப்படுகிறது.

செய்து முடிக்கும் வேலையின் அளவைப்பொறுத்துக் கூலி நிர்ணயிக்கப்படும் இடங்களில், திறமையும் ஆற்றலும் வாய்ந்த உழைப்பாளர் பிறரைவிட அதிகப்படியாகச் சம்பாதித்தார். உதாரணமாக, ஒரு டன்னுக்கு இவ்வளவென்று வேலைவீதக் கூலி (piece rate) பேசி நிலக்கரியைத் தோண்டும் சுரங்கத் தொழிலாளி, இரண்டு

டன்னைத் தோண்டிவிட்டால், இரண்டு மடங்கு கூலி பெறுவார். ஒரு நாளைக்கு ஒரு டன் தோண்டுபவரைவிட இவருக்கு இருமடங்கு கூலி தரப்படும்.

இதர துறைகளில், அதாவது, அரசாங்கப் பொதுப் பணிகள், அலுவலகப் பணிகள் என்பனவற்றில் செய்யப்படும் வேலையின் விளைவைப்பொறுத்துக் கூலியை நிர்ணயிப்பது சாத்தியமில்லை. செய்யப்படும் வேலையின் தரத்தை நிர்ணயிப்பது கடினமாயிருக்கும். இன்னும் சில துறைகளில், செய்யப்படும் வேலையின் அளவைக் கொண்டு கூலியை நிர்ணயிக்க முற்பட்டால், அது வேலைத் தரத்தைப் பாதித்துத் தொழில்நுட்பத் திறமையைச் சீர்குலைத்து விடும். ஆனாலுங்கூட, இயந்திரப் பொருளாக்கம், சுரங்கத் தொழில், கட்டடத் தொழில் ஆகியவற்றில் செய்யப்படும் பெரும்பாலான வேலைகட்கு அவற்றின் அளவைக்கொண்டே கூலிகள் வழங்கப்படுகின்றன. இங்ஙனம் கொடுப்பது ஏற்புடையதுதானா?

எனக்கு இது சந்தேகமேதுமின்றி ஏற்புடையதாகவே தோன்றுகிறது. செய்யும் வேலைக்கும் பெறும் கூலிக்கும் இடையே நெருங்கிய உறவுப் பிணிப்பு இருக்கும்வரை, அதிகப்படியாக உழைத்து அதிகமான கூலீ பெறவேண்டுமென்ற முனைப்பும் முயற்சியும் எப்போதும் இருக்கும். தன்னோடு உள்ள ஒருவன், தன்னைவிடக் குறைந்த வேலையைச் செய்துவிட்டுத் தன்னைப்போலவே கூலி பெறுவதைப் பாடுபட்டு முயன்று உழைக்கும் ஒரு தொழிலாளி கண்டால் மனம் தளர்வான்; தன் உழைப்பு வேகத்தை மட்டுப்படுத்திக்கொள்ளவே முயல்வான். வேலையின் அளவைக்கொண்டு கூலி கொடுப்பதென்பது நியாயமான முறை என்பதோடு, அதிகப்படியான விளைவைப் பெருக்கவும், அதன் வாயிலாக அதிகப்படியான உண்மைக் கூலிகளைக் கொடுக்கவும் தூண்டும் ஒருவகை ஆற்றல் வாய்ந்த முறையுமாகும். சோவியத் ருஷியா இதை நன்கு உணர்ந்திருப்பதால்தான், இயன்ற துறைகளில் எல்லாம், வேலையின் அளவைப்பொறுத்தே கூலியை வழங்குகிறது.

ஆனால், கிரேட் பிரிட்டனில் உள்ள பல தொழிற்சங்கங்கள் இவ்விதம் வேலையின் அளவைப்பொறுத்நுக் கூலி கொடுப்பதை ஏற்க மறுத்து, நேரவீதக் கூலி (time - rates) வேண்டுமென்று வற்புறுத்துகின்றன. கடந்த காலங்களில் மோசமாக நடந்துகொண்ட சில முதலாளிகளின் போக்கே ஓரளவு இந்த நிலைக்குக் காரணம் என்று சொல்லலாம். வேலைவீத அடிப்படையின் உந்துதலால் தமது தொழிலாளர்கள் நிறைய வேலைபார்க்க முடிகிறது என்பதைக் கண்டவுடன், இந்த வேலைவீதக் கூலிகளைக் குறைத்து

விட்டார்கள். இதனுல் முனைந்து செய்த வேலையின் அளவுக்குத் தக்கபடி, வேலைவீதக் கூலிகள் அமையாதுபோய்விட்டன ; அதாவது, வேலையின் அளவுதான் விரிந்ததே தவிர, கூலியின் மதிப்பு அந்த அளவுக்குப் பெருகவில்லை. எனவே, ஓரளவு உபரியான சம்பளத்தைக் கொடுத்துவிட்டு, அதிகப்படியான வேலையை வாங்கிக்கொள்ளுவதற்காகக் கையாளப்படும் அடிமை யுத்தி என்று வேலைவீதக் கூலி முறையைப் பல தொழிலாளர்கள் கருதினர். இந்த வேலைவீதக் கூலிக்கு எதிரான மற்ருெரு குறிப்பு என்னவென்ருல், அதிகப்படி ஊதியத்தைக் கருதிச் செய்யப்படும் மிகுதியான உற்பத்தி (output) பலருக்கு வேலையின்மையை ஏற்படுத்தக்கூடும் ; எனவே, சக்திக்குமேல் ஆசைப்பட்டு உழைத்து ஒரு தொழிலில் பிறர்க்கு வேலையின்மையை உண்டாக்குவதைவிட, அத் தொழிலை இயல்பாகச் செய்து, நெடுங்காலம் பரவலாக நீடிக்கச் செய்வதே நல்லது என்ற அச்சமும் இதற்கு எதிராகக் கிளைத்தது. ஒரு குறிப்பிட்ட வகைத் தொழிலாளர்கட்கு உரிய தேவையானது (உதாரணமாக, துறைமுகத் தொழிலாளர்) பிறவற்றை நோக்க நெகிழ்ச்சியற்றதா (inelastic) யிருக்கும்பொழுது ஒரு தொழிலாளியே நிறைய வேலை செய்தால், அது இன்னெருரு தொழிலாளியை வேலைக்குச் சேர்ப்பதைத் தடுக்கும்; இந்த வகையில் மேற்படி அச்ச உணர்ச்சி ஓரளவு பொருந்தும். ஆனுலுங்கூட, ஒவ்வொரு தொழிலாளியும் அதிகப்படியாக உழைப்பதால் ஏற்படும் உற்பத்தி, உழைப்பின் தேவையை மிகுதிப்படுத்துமேயன்றிக் குறைத்துவிட முற்படாது; தொழில்கள் அலுவல்கட்கிடையே சூழ்நிலைக்கேற்பத் தொழிலாளர்களை மாற்றிக்கொள்ள வேண்டிய நிலை இதனுல் ஏற்பட்டாலும், உழைப்பின் தேவை குறைந்துவிடுவதில்லை. இவ்விதம் வேலை செய்த அளவுக்கேற்பக் கூலி கொடுப்பது ஒருபோதும் வேலையின்மையை உண்டாக்காது; தவிரவும், உற்பத்தி அளவைப் பெருக்குவதற்கும் இது பேருதவி செய்யும். சில தொழிற்சங்கங்கள் இம் முறையை வேண்டாமென்று மறுப்பதில் உள்ள உட்கிடையை நாம் அறிவோம். ஆனுல், இத் தொழிற்சங்கங்கள் தமது மனோபாவத்தை மாற்றிக்கொண்டு, இம் முறையை ஏற்றுக்கொண்டால், இதனுல் நாட்டுக்கு விளையக்கூடிய நன்மைகள் ஏராளமாயிருக்கும்.

## 4. தொழில்களிடையே சம்பாத்தியங்களில் வேறுபாடுகள்

சில துறைத் தொழிலாளர்கள், விரிந்த பரப்புடைய தொழிற்சாலைகளில் வேலை பார்க்கிருர்கள். இந்தத் தொழிற்சாலைகளில் ஏற்படும் பொருளாதார மாற்றங்கள், இவற்றில் அலுவல் பார்க்கும் உழைப்பாளர்களின் ஊதியத்தை அவ்வளவாகப் பாதிப்பதில்லை;

தொழில் மந்தத்திற்கு ஆளான நிறுவனம் ஒன்று, டைப்பிஸ்டுகள் (typists), லாரி ஓட்டிகள் முதலியோரை வேலைக்கு அமர்த்திக்கொள்ள வேண்டுமானால், அவர்கட்கு அங்காடி நிலவரப்படி கூலி கொடுத்தே ஆகவேண்டும்; ஆனால், தழைக்கும் தொழிலகத்திற்கு இந்த இடர்ப்பாடில்லை.

ஒரு குறிப்பிட்ட துறைத் தொழிலாளர்க்குரிய தேவையானது, ஒரு குறிப்பிட்ட தொழிலகத்திற்குள்ளேயே வரையறுக்கப்பட்டு விட்டால், அத்தகைய தொழிலாளர்க்குரிய தேவையானது, அத் தொழிலகத்தின் உற்பத்திப் பொருள்களுக்கு ஏற்படும் தேவையைப் பொறுத்தே அமையும். இதுபற்றிக் கடந்த அதிகாரத்தில் குறிப்பிட்டுவிட்டபடியால், மீண்டும் திருப்பிச் சொல்ல நான் விரும்பவில்லை.

ஒவ்வொரு தொழிலாளியும், தனக்குப் பிரியமான எந்த வேலையிலும் எந்த நிமிடமும் சேர்ந்துகொள்ள முடியுமானால், எல்லாத் தொழில்களாலும் விளையும் நிகர அனுகூலங்கள் (net advantages) சமமாகவே இருக்கும். சில தொழிற்கூடங்கள், பிறவற்றைவிடக் குறைந்த சம்பளத்தையே தரலாம்; என்றாலுங்கூட, இந்த வேறுபாடு தொழிலுக்குரிய கவர்ச்சி மிகுதியைத் தூண்டுவதற்கோ, வேலை செய்யப்படும் சூழ்நிலைக் காரணங்களுக்காகவோ, குறைந்த நேர வேலை, நீண்ட விடுமுறைகள் முதலியவற்றிற்காகவோ அமைந்திருக்கக்கூடும். இந் நிலையில், தொழிலாளர்கள், எல்லா இடங்களிலும் நிகர அனுகூலங்கள் ஒரே மாதிரியாக இருக்கும் வகையில் தம்மைப் பல்வேறு தொழில்களிடையே ஈடுபடுத்திக்கொள்ளுவார்கள்.

ஆனால், உண்மை என்னவென்றால், பல்வேறு தொழில்களுக்குரிய நிகர அனுகூலங்கள் ஒரே சமமாக இருப்பதே இல்லை. சில தொழில் தொகுதிகளுக்குள் ஏற்படும் நிகர அனுகூலங்கள் தமக்குள் சமமாகிவிடுகின்றன. உதாரணமாக, பிரயாணிக் கப்பலொன்றின் மேற்பார்வையாளனாக வருபவன், தனது உணவு, உறைவிடம், சில்லறைச் செலவுகள் முதலியவற்றிற்குப் போக, அதிகப்படியான ஊதியத்தைப் பெறுகிறான். இவன் கரைக்கு வந்தவுடன், இந்த அளவு ஊதியம் அவனுக்குத் தரப்படுவதில்லை; கப்பலில் இருக்கும் பொழுதே தரப்படுகிறது; ஆனால், இந்த அதிகப்படி ஊதியத்திற்காகத் தனது நேரத்தில் பெரும்பகுதியை இவன் கடலிலேயே கழிக்கவேண்டியதிருக்கிறது. பொதுவாகச் சொல்வதென்றால், மோசமான ஊதியங்கள் வழங்கப்படும் தொழில்துறைகளில்தான் ஏற்கவியலாத தராதரமுடைய வேலைவகைகள் அமைந்துள்ளன. ஆனால், நல்ல ஊதியம் வழங்கப்படும் உத்தியோகங்கள் (professions

இதர பொறுப்பான தொழில் துறைகள் ஆகிய தொழில்களெல்லாம் கவர்ச்சியும் இனிமையும் தருவனவாகவே அமைந்துள்ளன. இதற்குக் காரணம் என்னவெனில், உயர்ந்த ஊதியம் வழங்கப்படும் உத்தி யோகங்களில் எல்லாத் தொழிலாளர்களாலும் சேரமுடிவதில்லை. இங்ஙனம் தொழிலாளர் எண்ணிக்கை கட்டுப்படுத்தப்பட்டுவிடுவ தால், இத் தொழிலகங்கள் அல்லது உத்தியோகங்களின் இறுதிநிலை ஆக்கத்திறம் நிலைப்படுத்தப்படுகிறது. இங்ஙனம் தொழிலாளர்கள் இவற்றிற்குள் நுழைய முடியாமைக்குரிய தடைகள் யாவை?

இத் தடைகள் அரசாங்கச் சட்டங்களாலோ தொழிற்சங்கத் தீர் மானங்களாலோ அமுலாக்கப்பட்டிருக்கலாம். உதாரணமாக, சில உத்தியோகங்களில் பயிற்சியாளர்களையும் வேலை பயில்வோரையும் சேர்ப்பதற்குரிய எண்ணிக்கை கட்டுப்படுத்தப்பட்டே இருக்கிறது.

மேலும், சிலவகைத் தொழில்நுட்பத் திறமைகள் எல்லோரிடமும் காணப்படுவதில்லை. ஏனைய தகுதிகட்கு உரிய தேவையைவிட நுட்பத் திறமைக்கு உரிய தேவை மிகுதிப்படும்பொழுது, அத் திறமை யுடையோர்க்கு அதிகப்படியான கூலி கொடுக்கப்படுகிறது; இதரர்க் குச் சாதாரணக் கூலியே கொடுக்கப்படுகிறது. இதனால்தான் பெரும் பாலான பாட்டாளிகள் குறைந்த அளவு கூலியே பெறுகிறார்கள்; ஏனென்றால், இவர்களிடம் போதுமான அறிவுக்கூர்மையோ, தொழில் திறமையோ, இயந்திர நுட்ப அறிவோ, கலைத்துறைப் பொலிவோ, இதர சிறப்புகளோ இருப்பதில்லை. இவற்றுள் ஏதேனும் சில சிறப்பு களை விரும்பும் தொழிலகங்களில், இச் சிறப்புகட்காக அதிகப்படியான ஊதியங்களை வழங்கும் தொழிலகங்களில், இப் பாட்டாளி மக்களால் இடம்பெற முடியாமலிருப்பதற்குரிய காரணமும் இதுதான்.

என்றாலும், பெரும்பாலான பாட்டாளிகள், நல்ல ஊதியம் தரும் அலுவல்களில் சேராமைக்குரிய சரியான காரணம் அத்தொழில் கட்கு வேண்டிய மூலதனக் கூறு இவர்களிடம் இல்லாமலிருப்பதே யாகும். உத்தியோகங்கள் போன்ற சில தொழில்கள், சட்டப்படி தேவைப்படும், குறைந்தபட்சத் திறமையாவது தம்மிடம் இருக் கிறது என்பதைத் தேர்வுகள்மூலமாக வெற்றிபெற்று நிரூபித்தவர் கட்கே வழங்கப்படுகின்றன. இத்தகைய திறமைக்கு வாய்ப்புத் தரும் தொழிலகங்களில் சேர்தற்குரிய தொழில்நுட்பச் சிறப்புகள் சிலரிடம் இயல்பாகவே அமைந்திருந்தாலும், இவர்களும் அவற்றில் சேர முடியாது தடுக்கப்படுகிறார்கள். ஏனென்றால், இவர்களால் சட்டப்படி தேவைப்படும் பயிற்சிபெற்றுத் தேர்வெழுதுதற்குக் கட்டணம் செலுத்த முடிவதில்லை; மேலும், தம் சம்பாத்தியத்தைவிட்டுப் பயிற்சி பெறுதற்கு வர, இவர்களது பொருளாதார நிலை இடம் தருவதில்லை. வயிற்றுப்பாட்டிற்கு உழைக்கவே நேரம் போதாதபொழுது, படிப்

புக்கும் பயிற்சிக்கும் எங்கே போவது என்று சோர்ந்து ஓய்ந்து விடுகிறார்கள்.

எனவே, திறப்பாடில்லாப் பாட்டாளிகளின் ஊதியத்தைவிட இச் சிறப்புநிலைத் தொழிலாளர்களின் ஊதியமானது, அசல் மூலதனச் செலவீட்டின் (original capital outlay) மீதான, கடன் கழிப்பு நிதி (amortization), வட்டி முதலிய அனைத்திற்கும் மேலாக விஞ்சியிருக்கிறது உதாரணமாக, ஓர் இளைஞன், மருத்துவராகத் தகுதி பெறவேண்டுமென்றால், 5 ஆண்டுகளுக்குப் பல்கலைப் படிப்பும் மருத்துவமனைப் பயிற்சியும் பெறவேண்டும். இந்த ஆண்டுகளில் இவன் வெளியில் உழைத்திருந்தால், மொத்தம் 2,000 பவுன்கள் சம்பாதித்திருப்பான்; தவிரவும், பயிற்சிக் காலத்தில் கல்லூரிக் கட்டணங்கள், புத்தகங்கள், கருவிகள் முதலியவற்றிற்காக மொத்தம் 500 பவுன்கள் செலவழித்துள்ளான். ஆகமொத்தம் 2,500 பவுன்களுக்கு 4 சதவிகித வட்டியாக ஆண்டொன்றுக்கு 100 பவுன்களே ஆகிறது; மேலும், படிப்பதில் பெற்ற கடன்களைக் கழித்தற்காக அமைக்கும் கடன் கழிப்பு நிதியை, 30 ஆண்டு நீட்டிப்புக்குக் கொணர்ந்தால், இதற்குரிய விகிதம் மிகக் குறைவாகவே ஏற்படுகிறது. ஆகையால், படிப்பிற்காக இவன் செலவழித்த, மேற்குறித்த மூலதனச் செலவீடானது இவனுக்கு ஆண்டொன்றுக்கு 200 பவுன் ஊதியத்தைத் தந்தால், ஏனைய முதலீடுகளோடு ஒப்புநோக்குகையில் இது சிறந்த ஊதியமாகவே கருதப்படும். ஆனால், உண்மையில், இதர திறப்பாடில்லாப் பாட்டாளித் தொழில்களை விட ஒரு மருத்துவரது சம்பாத்தியம் அதிகமாகவே இருக்கிறது; இந்த 200 பவுன் வரம்பிற்கும்மேல், ஆண்டொன்றுக்கு அவர் அதிகமாகச் சம்பாதிப்பார். இதைப்போல, மருத்துவத்துறையில் சிறப்பாகப் பணிபுரியக்கூடிய திறமைகளெல்லாம் உடைய இளைஞர்களாலும், நங்கையராலும் தொடக்ககாலப் பயிற்சிக்கான முதலீடுகளைச் செய்யத் தம்மால் இயலாமையாலோ அல்லது தம் விழைவுகளைப் பூர்த்திசெய்து உதவக்கூடிய பெற்றோர், நண்பர்கள் தமக்கு இல்லாமையாலோ, இவற்றில் சேராது வறிதே தளர்கிறார்கள். எனவே, வசதிகளுடைய பெற்றோர்களின் குழந்தைகளே இத்தகைய தொழில்துறைகளைப் பெறுதற்குரிய அனுகூலங்களுடன் தம் வாழ்க்கையைத் தொடங்குகிறார்கள். வசதி படைத்தோர்க்குமட்டும் உரிய இந்த அனுகூலம் அண்மைக் காலத்தில் முற்றிலும் குலைக்கப்படாவிட்டாலும், ஓரளவு குறைக்கப்பட்டிருக்கிறது; அதாவது, அரசாங்கமும், இதர நிறுவனங்களும் படிப்பு உதவிகள், இதர பராமரிப்புச் செலவுகள் முதலியவற்றை ஆர்வமும் ஆற்றலும் வாய்ந்த ஏழைக்குழந்தைகளில் குறிப்பிட்ட எண்ணிக்கையுடையோர்க்கு வழங்கி, அவர்களையும் நுட்பத்துறைக் கல்வி பெறுமாறு ஊக்குகிறது; குடும்பச் சூழல் காரணமாகக் கட்டாயம்

சம்பாதித்தே ஆகவேண்டும் என்று ஏற்படுகிற காலத்திற்கு அப்பாலும் அவர்களைத் தொடர்ந்து படிக்கச் செய்ய, இவ் வுதவிகள் பெருந்துணையாயுள்ளன.

மேலும், ஒருவன் தானே சொந்தமாகத் தொழில் செய்ய வேண்டுமானாலும், அமைக்கப்பட்ட நிறுவனமொன்றில் கூட்டுப்பெற வேண்டுமானாலும் அவனுக்கு மூலதனம் வேண்டும். சிறு கைம்முதல் கொண்டு செய்யக்கூடிய சில்லறை விற்பனை தவிர, பெரிய தொழில் ஒன்றைச் செய்யவேண்டுமானால், அஃது ஏழைகளின் குழந்தைகட்குக் கிட்டுவதில்லை. ஏனென்றால், தாமே முயன்று சேமிக்கவோ, மூலதனத்தைப் பிறரிடமிருந்து கடனாகப் பெறவோ அவர்களால் இயலுவதில்லை. ஏற்கெனவே உள்ள பற்றாக்குறை வருவாயிலிருந்து புதிதாகச் சேமிப்பதும் பிணையாக வைத்தற்குக் கணிசமான சொத்துக ளின்றிப் பிறரிடம் போதுமான கடன்களைப் பெறுவதும் இவர்கட்கு எளிதாயிருப்பதில்லை. இதனால், ஏழைக் குழந்தைகளால் போதிய மூலதனத்தைத் திரட்டித் தொழில் நடத்த முடியாதுபோய்விடு கிறது.

சில தொழில்களை, ஓரளவு செல்வாக்கின்மூலமோ சிபாரிசின் மூலமோதான் பெறமுடிகிறது. பகுதி மாற்றங்கள் (stock-broking) விலையுயர்ந்த கார் விற்பனை முதலியவற்றிற்குப் பணக்காரர்களைப் பற்றிய அறிமுகம் இருந்தால் அதுவே உதவியாக இருக்கும். இதைப் போலவே பள்ளிக்கூடத்தில் கற்ற முன் உறவுகள் இருந்தால், தம் மோடு கற்றவர்களோடு எளிதில் தொழில் உறவு கொள்ளலாம்.

எனவே, சிறந்த ஊதியமளிக்கப்படும் துறைகளில் வேலைபார்ப் போர் தொகை அதிகமாயில்லாதிருப்பதற்கு வருமானங்களில் உள்ள சமமற்ற நிலையே, அதாவது, வாய்ப்புச் சமமற்ற நிலையே காரணம் என்று நாம் முடிவுகட்டலாம்.

## 5. பெண்களின் சம்பாத்தியங்கள்

சராசரி ஆண்மகனைவிட, சராசரிப் பெண் ஒருத்தி குறைவாகச் சம்பாதிக்கிருள்.[1] இதற்குக் காரணம் என்ன? பல துறைகளில் பெண்ணின் இறுதிநிலை ஆக்கத்திறம் குறைவாயிருப்பதும் பெரும் பாலான பெண்கள் மிக மோசமான கூலியே தரும் தொழில்களில் குவிக்கப்பட்டிருப்பதுமே காரணமாகும்.

[1] 1963 ஏப்ரல் மாதத்தில் ஐக்கிய அரசின் பாட்டாளிகளது சராசரி வாரச் சம்பாத்தியங்கள் வருமாறு :

21 வயதும் அதற்கு மேற்பட்டவர்களும்—ஆண்கள் 323 ஷி. 1 பெ.

18 வயதும் அதற்கு மேற்பட்டவர்களும்—பெண்கள் 163 ஷி. 9 பெ.

'இறுதிநிலே ஆக்கத்திறம்' என்று பேசும்பொழுது, குறிப்பிட்ட ஒரு சாதனத்தின் அலகுகளில், ஓர் அலகைக் கூடவோ அல்லது குறைத்தோ பயன்கொள்வதால், மொத்த விளைவுகளில் ஏற்படும் வித்தியாசத்தையே இங்கு நாம் குறிப்பிடுகிறோம். உடல் உழைப்புத் தேவைப்படக்கூடிய சில தொழில்களில், ஆண்களைக் காட்டிலும் பெண்களது உடலுழைப்புத் திறத்தால் ஏற்படும் உற்பத்தி (physical output) குறைவாகவே இருக்கிறது. இதைப்போல, குழந்தைப் பராமரிப்பு முதலிய துறைகளில் ஆண்களைவிடப் பெண்கள் திறமையுடையோராய் இருப்பதால், இத் துறைகட்குப் பெண்களின் உழைப்பு மிகுதியாகத் தேவைப்படலாம். அணுக்கவேலை (எடுபிடி வேலை) செய்யும் ஏவலாளர்கள், வாடிக்கைக்காரர்கட்குத் தனிப் பணிகள் செய்கிறார்கள். பெரும்பாலான வாடிக்கைக்காரர்கள் தமக்கு ஆண்கள் உதவி செய்வதையே விரும்புகிறார்கள். எனவே, இத்தகைய அலுவல்களில் ஈடுபட்டுள்ள ஆண், தன்னோடொத்த திறமையான பெண்ணைக்காட்டிலும் அதிக வருவாய் பெறும் வாய்ப்பினை அடைகிறான். தவிரவும், பல ஆண்கள், பெண்களுக்குக் கீழ் வேலை செய்வதை விரும்புவதில்லை; மேலும், உயர்பதவியிலிருக்கும் ஆண் அதிகாரி ஒருவர், தனக்குக்கீழ் உள்ள ஆண் அலுவலர்களிடமிருந்தே அதிகப்படியான பணிகளைப் பெற விழைவார்; பெண் அலுவலர்கள் ஆண்களைப்போலத் திறமை உடையவர்களாக இருந்தாலும், அவர்கட்கு மிகுந்த வேலை கொடுப்பதை அந்த அதிகாரி விரும்பமாட்டார். இறுதியாக, ஆண்கள் பெண்களைவிட மிகுதியும் நம்பிக்கைக்குரியவர்கள் என்றும், அடிக்கடி நோய்க் காரணம் கூறி வேலைக்கு வராதிருக்கமாட்டார்களென்றும், மிகை நேரம் வேலை செய்ய முகம் சுளிக்கமாட்டார்களென்றும், வேலை வேண்டாமெனத் திடீரெனச் சொல்லித் திண்டாட விடமாட்டார்களென்றும் பல தொழிலதிபர்கள் கருதுகிறார்கள். எனவே, ஒரே நிறுவனத்தில் வேலைபார்க்கும் பெண், அங்கு வேலைபுரியும் சக ஆணை விடக் குறைந்த சம்பளம் பெற்றால், அதற்குரிய காரணம், அவளுடைய உண்மையான உற்பத்தித் திறம் ஆணைவிடக் குறைவாக இருத்தல்வேண்டும்; அல்லது அந்த நிறுவனத்திற்கு நாளாவட்டத்தில், அவளால் ஏற்படக்கூடிய வருமானத்தின் அளவு ஆணின் வருமான அளவைவிடக் குறைவாயிருக்குமென்று அவர்களால் கருதப்பட்டிருத்தல் வேண்டும்.

சராசரியாக ஆண்களைக்காட்டிலும் பெண்கள் குறைந்த வருவாய் பெறுவதற்கு இன்னொரு காரணம், அவர்களில் ஒரு சிலரே உயர்ந்த ஊதியம் கிடைக்கும் தொழிலில் அமர்ந்திருப்பதேயாகும். உயர்ந்த ஊதியம் அளிக்கும் அலுவல்களுக்கு ஏற்றபடி பெண்களை மிகுதியாகப் படிக்கவைக்காமலிருப்பதே இதற்குரிய காரணம் என்று

ஓரளவு சொல்லலாம். பையன்களுக்குச் செலவிடப்படுவதைவிடப் பெண்களுக்காக ஓரளவே செலவிடப்படுகிறது; பெற்றோர்கள் தம் மூலதனத்தைப் பையன்களுக்காக அளிக்கத் தயாராக இருக்கிறார்களே யன்றிப் பெண்களுக்காக அளிக்க அவ்வளவாக முன்வருவதில்லை. பெண்கள், உயர்ந்த ஊதியம் நல்கும் அலுவல்கட்கு நிறைய வராமைக்கு இன்னொரு காரணமும் உண்டு. அதாவது, பொதுமக்கள் பெண் மருத்துவரிடமோ பெண் வழக்குரைஞரிடமோ சென்று தம் நிலைகளைக் கூற இன்றும் வெட்கப்படுகிறார்கள்! மேலும், ஒரு பெண்ணின் வாழ்க்கை நோக்கம் என்ன? திருமணம் செய்துகொண்டு குடும்ப வாழ்வில் புகுவதுதானே! எனவே, திருமணம் ஆனதும், வேலையை விட்டுவிடவே பெண் தொழிலாளி விரும்புவாள் என்று பல தொழிலதிபர்கள் கருத நேரிடுகிறது. இதனால் ஓர் உயர்ந்த ஊதியம் நல்கும் அலுவலுக்காக ஒரு பெண்ணுக்குப் பயிற்சி அளிக்க முற்படுவது இடர்ப்பாடானதாயிருக்கிறது. ஏனென்றால், அவள் வேலை வேண்டா மென்று சொல்லிவிட்டால், இத்தகைய பயிற்சிக்குரிய அலுவலுக்குத் திடீரென ஒருவரைத் தேடி அமர்த்துவது மிகுந்த இன்னல் தரும். இறுதியாக, சமுதாயப் பழக்கவழக்கம், சட்டம் இவற்றால் ஆண் களுக்குமட்டுமே உரியனவாகக் கருதப்படும் பல தொழில்களில் பெண்களைச் சேர்த்துக்கொள்வதே இல்லை (இத் தொழில்களில் உள்ள, ஸ்தாபனரீதியாக (organised) அமைந்த ஆண்களின் கருத்தும் இதை ஆதரிக்கிறது). இவ்விதம் கிரேட் பிரிட்டனில், பாதாளச் சுரங்கத் தொழில், இரும்பு—எஃகு ஆலைகள், கனரகத் தொழில்கள், கட்டட வேலை, இரயில் போக்குவரத்தில் பெரும் பான்மைத் துறைகள், அச்சகங்கள் ஆகியவற்றில் பெண்களைச் சேர்த்துக்கொள்வதில்லை. சமுதாய இயல் முறைப்படி இதைச் சரியாகவோ தவறாகவோ கருதலாம். ஆனால், இப் போக்கு வேலை அளிப்புத் துறையில் பெண்களுக்குரிய வாய்ப்புகளை நிச்சயம் கட்டுப் படுத்திவிடுகிறதென்றே சொல்லவேண்டும். இத்தகைய எல்லாக் காரணங்களாலும் ஏற்பட்ட விளைவால், பெரும்பாலான பெண் தொழிலாளர்கள் ஒருசில தொழில்களில்மட்டுமே அமர்த்தப்படுகிறார் கள். இத் தொழில்களில், இவர்கள் பெண்களாக இருக்கிற ஒரே காரணத்திற்காக, இவர்கட்குக் குறைந்த அளவே கூலி அளிக்கப் படுகிறது.

## 6. அரசாங்க அலுவலர்களின் ஊதியங்கள்

அரசாங்கங்கள், தேசீயமயமாக்கப்பட்ட தொழில்கள், ஏனைய வணிக முயற்சிகளில் ஈடுபடுவதற்கு மேலாக, அங்காடியில் விற்பனை செய்வதற்காக என்று பொருள்களை ஆக்குவதோ, தொழில்களைச் செய்வதோ இல்லை. எனவே, இலாப நஷ்டம்பற்றிய பேச்சே

இவற்றிற்கு ஏற்படுவதில்லை. ஒரு தொழில் நிறுவனம் தான் தொடர்ந்து நிலைப்பதற்கேற்றபடி அது தனது செலவுகளைக் கட்டுப் படுத்திக்கொள்வதைப்போல, அரசாங்கத்திற்கு எவ்வித நிலையும் ஏற்படுவதில்லை. ஏனவே, அது, தனது நோக்கம்போல் கூலிகள் அல்லது சம்பளங்களை எவ்வளவு வேண்டுமானாலும் கொடுக்கலாம்.

நியாயமான அளவுக்குமேல் ஓர் அரசாங்கம் அதிகப்படியான கூலிகளைக் கொடுத்தால் அது வரி செலுத்துவோரின் பணத்தை விரயமாக்குகிறதென்றும், அரசாங்க ஊழியர்களை வசதியுள்ள இனத்தாராகப் பிரித்து உயர்த்துகிறதென்றுமே கருதவேண்டும். அரசாங்கத்தின் தொழில் முறைகளை நிருவகிக்கப் போதுமான தகுதியும் திறமையுமுடைய தொழிலாளர்களைத் தன்பால் ஈர்த்து நிலையாக வைத்துக்கொள்ளுமளவிற்குப் போதுமான கூலியையே அரசாங்கம் கொடுக்கவேண்டும். அரசாங்கம் கூலி விகிதத்தைக் குறைத்துக் கொடுத்தால், வேறு நபர்களை நியமித்து நிரவல் செய்ய முடியாதபடி பல இடங்கள் காலி ஆகும்; அல்லது அவ்விடங்கட்குப் போதிய தகுதி பெறாதவர்களையே நியமிக்க நேரிடும்.

அரசாங்கம், திறப்பாடில்லாப் பாட்டாளிகளை அங்காடியில் நிலவும் கூலி விகிதத்தில் தற்காலிகமாக வேலைக்கு அமர்த்திக் கொள்ளலாம். ஆனால், அரசாங்க அலுவலில் இத் தொழிலாளிகளிடம் அளந்து மதிப்பிடக்கூடிய ஆக்கத்திறமேதும் காணப்படுவதில்லை. இவர்கட்கு ஏனைய தொழிலதிபர்கள் கொடுக்கும் கூலி விகிதங்களையே அரசாங்கமும் கொடுப்பதாக வைத்துக்கொள்வோம். அப்பொழுது இத் தொழிலாளர்களின் கூலிகள், தனியார் துறையில் வேலைக்கு அமர்ந்தால் இவர்களது இறுதிநிலை ஆக்கத்திறம் என்னவாயிருக்குமோ, அந்த அளவோடு தொடர்புடையதாக்கிக் கணக்கிடப்படுகிறது.

நிரந்தரமான வேலைகட்கு, அவற்றின் இயல்பிற்கேற்பத் தரம் பிரித்துக் கூலி விகிதங்களை நிர்ணயிப்பது, தற்காலிக வேலைகட்கு நிர்ணயிப்பதைக் காட்டிலும் சிரமமானது. அரசாங்கத்தின் சில வேலைகட்கு நெருங்கிய இணையாகத் தனியார் துறைகளில் வேலை இருப்பதில்லை. அப்பொழுது ஒரு வேலைக்குமட்டும் எனப் பிரத்தியேகமான தனி விகிதத்தை நிர்ணயிக்கவேண்டிய பிரச்சினை ஏற்படும். அரசாங்க அலுவலையே தமது வாழ்க்கைப் பணியாகக் கொள்ளுமாறு இளையோர்களைக் கவர்ந்து ஈர்க்கவேண்டுமானால், அவர்கள் அலுவலில் சேரும்பொழுது கொடுக்கப்படும் காலக்கிரமச் சம்பளத் திட்டத்திற்கும் (time scale) மேலாக, ஆண்டு உயர்வுகளும், அடுத்த உச்சகட்ட அலுவலுக்கு உயரும் வாய்ப்புகளும் கொண்ட

ஒரு தனியான காலக்கிரமச் சம்பளத் திட்டத்தை அவர்கட்குக் கொடுக்கவேண்டும்.

அரசாங்கப் பணியில் உள்ள வளர்ச்சிப் போக்கிற்கும் ஏனைய வணிக நிலையங்கள், உத்தியோக நிறுவனங்களில் உள்ள வளர்ச்சிப் போக்குக்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன. அரசாங்கப் பணியில் நீடித்த காலம் வேலைபார்ப்பதற்குரிய பாதுகாப்பு பிறவற்றைவிட அதிகமாகவே இருக்கிறது. அரசாங்கப் பணியில் நுழைந்து நிலைத்து விட்ட ஒருவர், அதில் வாழ்நாள் முழுவதும் அலுவல் புரிகிறார்; வேலையில்லாமல் போய்விடுமோ என்ற அச்சம் ஏற்படவேண்டிய அவசியமே நேருவதில்லை. மேலும், அரசாங்கப் பணிபுரிபவர் சாதாரண விடுப்பு (லீவு), நோய்க்காலத்து விடுப்பு (sick leave) முதலிய சலுகைகளைப் பெறுகிறார்; வேலையைவிட்டு இறுதியாக நீங்கும் காலத்தில் முதுமைக் கால ஓய்வு ஊதியங்களையும் (pensions) அடைகிறார். மேலும், அரசாங்க அலுவலில் உள்ள மிக உயர்ந்த பதவியாளர்கட்குப் பொதுத்துறைகளின் நிருவாகங்களிற் குறிப்பிடத் தக்க பொறுப்புகளும் அதிகாரங்களும் அளிக்கப்பட்டுள்ளன. இப் பொறுப்புகளையும் அதிகாரங்களையும் நாமும் ஒரு நாளில் அடைய லாமே என்ற ஆசையால், புதிதாக வேலைக்கு அமர்பவர்கள் ஈர்க்கப் படுவதால், இவ்வுயர்பதவிகட்குத் தாமும் உயரலாம் என்ற ஆசை யால் உந்தப்பட்டு உற்சாகமாகப் பணிபுரிவார்கள். இதற்கு மாறாக, ஏனைய துறைகளைப் பார்ப்போம். ஓர் உயர் பதவி வகிக்கும் அரசியல் அதிகாரியைவிட வெற்றிகரமான வியாபாரி அல்லது உத்தியோகஸ்தன் மிக அதிகமாகச் சம்பாதிக்கிறான். ஏனையோரை விட ஓரளவு திறமையும் முனைப்பும்கொண்ட இளைஞன் ஒருவன், தனது சொந்தத் தொழிலிலோ, அல்லது தனியார் துறையிலோ அரசாங்கப் பணியிலிருப்பதைக் காட்டிலும், வெகு விரைவில் முன்னுக்கு வந்துவிட முடிகிறது.

தம்முடைய வாழ்க்கைப் பணிகளைத் தேர்ந்தெடுக்கும் இளைஞர் களும் பெண்களும், தமக்குக் கிடைக்கக்கூடிய இதர தொழில் வாய்ப்பு நலங்களைவிட அரசாங்கப் பணியில் புகுவதால் கிடைக்கக் கூடிய நலங்களைச் சீர்தூக்கி அறிதல் வேண்டும். இவ்விளைஞர் கட்கு ஏனைய துறைகளில் கிட்டும் வாய்ப்புகளுக்கு இணையாகச் சாதகமாயிருக்கக்கூடிய நிகர அனுகூலங்களை ஓர் அரசாங்கம் அளிக்க முன்வருதல் வேண்டும். இவை பல்வேறு தகுதிகளுடைய வேலை வேட்பாளர்களைப்(candidates)போதுமான அளவு கவரும் வகையிலும் நியாயமான விகிதத்திற்கு மேற்படாத சம்பள நெறியிலும் அமைந் திருக்க வேண்டும்.

## 7. அதிகக் கூலி கொடுப்பதில் உள்ள சிக்கனம்
## (The Economy of High Wages)

ஒரு குறிப்பிட்ட வேலைக்கு, அங்காடியில் நிலவும் விகிதத்திற்கும் மேல் அதிகப்படியாக வேலைவீதக் கூலி கொடுப்பதால் தகுந்த பலன் கிடைக்கிறது என்பதைச் சில தொழிலதிபர்கள் கண்டுணர்ந்துள்ளார்கள். அங்காடி நிலவரத்தைவிட அதிகப்படியான கூலி கொடுப்பது, உழைப்பாளர்களிடையே உள்ள திறமைவாய்ந்த தொழிலாளர்களைத் தேர்தெடுத்துத் தம்மிடமே நிலையாக வைத்துக் கொள்ளுவதற்கு உதவி செய்கிறது. ஒரு சராசரித் தொழிலாளியை விட ஒருவன் 10 சதவிகிதம் அதிகப்படியாக உழைக்கிறானென்றால், இவன் 10 சதவிகிதம் அதிகப்படியான ஊதியம் பெறுதற்குத் தகுதியுடையவன். இவனுக்கு இந்த அளவு அதிகபட்சக் கூலி கொடுப்பதால் தொழில் நடத்துவோனுக்கு எவ்வித இழப்பும் ஏற்படுவதில்லை. மாறாக, அவனுக்கு இன்னொரு வகையில் இலாபமே ஏற்படுகிறது. அதாவது, நன்கு திறமையாக உழைக்கக்கூடியவர்களில் குறைவான எண்ணிக்கையினரைக்கொண்டு அவன் தொழிலை நடத்திவிட முடியும். இவ்விதம் குறைவான ஆட்களிருப்பதால், அதே அளவு உற்பத்திக்குக் குறைவான இடமும், ஏனைய கருவிகளும் இருந்தால் போதும். மேலும்,இத்தகைய நிறுவனங்களில் தொழிலாளர்கள் அடிக்கடி மாறிச் செல்லாது ஒரே இடத்தில் நீடித்து இருப்பதால், தொழிலாளர் பெயர்ச்சிகளால் ஏற்படும் சங்கடங்களால் இவை அதிகமாகப் பாதிக்கப்படுவதில்லை. இதனால், வேலையைவிட்டு நீங்கிப்போன தொழிலாளர்களுக்குப் பதிலாகப் புது நபர்களைத் தேர்ந்தெடுத்து அவர்கட்குப் பயிற்சியளித்துத் தகுதிப் படுத்தவேண்டிய உழைப்பும் இந்த நிறுவனங்கட்கு ஏற்படுவதில்லை.

ஊர்வலம் ஒன்று தெருவழியே போய்க்கொண்டிருக்கையில், ஒருசிலர் மட்டும் மேடையில் நின்றால், பிறரைவிட அவர்களால் ஊர்வலத்தை நன்றாகப் பார்க்க முடியும். இதைவிட்டு, எல்லோருமே மேடைமீது ஏறிப்பார்க்க முற்பட்டுவிட்டால், மேடைமீது நின்று பார்ப்பதில் உள்ள அனுகூலம் மறைந்துவிடுகிறது. இதைப்போல ஒரு சிலருக்குமட்டும் உயர்ந்த கூலிகள் கொடுப்பதால்தான் முன்னர்க் குறிப்பிடப்பட்ட நலன்களும் கிட்டும். அதைவிட்டு எல்லோருக்குமே உயர்ந்த கூலிகளைக் கொடுத்துவிட்டால், நான் இதுவரை குறிப்பிட்ட அனுகூலங்களை எவருமே அனுபவிக்க முடியாதுபோய்விடும்.

அமெரிக்காபோன்ற சில நாடுகளில், பிற நாடுகளைவிடக் கூலிகள் மிகவும் அதிகமாக உள்ளன. ஒரு தொழிலாளியின்

உற்பத்தி அளவு அதிகமாயிருப்பதனுல்தான் கூலிகளும் அதிகமாயிருக்கின்றன. எனவே, அதிகக் கூலிகள் என்பன, உழைப்பினுடைய மிகுதியான ஆக்கத்திறத்தின் விளைவாகுமே தவிர, அதன் காரணமாகிவிடாது. இந் நாடுகளில் உள்ள தொழிலாளர்கள் அதிகமாக உற்பத்தி செய்வதற்குரிய காரணங்கள் பலவாகும். இந் நாடுகளில் மிகையான மக்கள்தொகை (over-population) இன்மையால், மிகுதியான மூலதனம் கிடைப்பதாலும், தொழில்நுட்ப அறிவும் திறமைகளும் மிகுதியாக இருப்பதாலும், ஏனைய தொழிலாளர்களைவிட இவர்கள் மிகுதியாகப் பயிற்சி பெற்றிருப்பதாலும், அல்லது அதிகமாக உழைப்பதாலும் இந் நாட்டில் உள்ள தொழிலாளர்கள் மிகுதியாக உற்பத்தி செய்கிறுர்கள். குறைந்தபட்சக் கூலியே கொடுக்கப்படும் ஒரு நாட்டில் உள்ள தொழிலதிபர்கள், இதைப்போலத் தம் நாட்டிலும் கூலிகளைமட்டும் உயர்த்திக் கொடுக்க முற்பட்டால், இந்த உயர்வு, தொழிலாளர்களின் உற்பத்தித் திறத்தை அதிகப்படுத்த உதவும் என்று சொல்லமுடியாது. இந்தக் கூலி உயர்வு, தொழிலாளர்களைத் திறப்பாடுடையவர்களாக்கி விடுவதுமில்லை; கடுமையாக உழைக்கும்படி நேரடியாகத் தூண்டுவதற்கும் உதவுவதில்லை. இத்தகைய நாடுகளில் தொழிலாளர்கட்குப் பயிற்சி அளிப்பது, அல்லது விளைவுகளுக்குத் தக்கபடி நிர்ணயிக்கப்படும் சம்பளம்போன்ற ஊக்கத்தால் அவர்கட்கு உற்சாகம் தருவதே சிறந்த முறையாகும்.

## 8. தொழிற்சாலை வேலை நேரம் (Hours of Work)

ஒரு தொழிலகத்தில் உள்ள தொழிலாளர்களின் வேலை 'அளிப்பு' (supply) என்பது தொழிலாளர்களின் எண்ணிக்கையைப் பொறுத்து அமைவதோடுமட்டுமன்றி, ஒவ்வொரு தொழிலாளியும் செய்யக் கூடிய வேலையின் அளவையும் சார்ந்திருக்கிறது. பெரும்பாலான மேலைநாடுகளில், தொழிற்சாலைகளின் வேலை நேரம், இப்பொழுது வாரம் ஒன்றுக்கு 40 முதல் 48 மணி நேரங்களுக்குள் அடங்கியிருக்கின்றது. இவ் வேலை நேரங்களில் ஏற்படும் கூடுதலோ, அல்லது குறைவோ, (அதாவது, இந் நேரங்கள் 19ஆம் நூற்றண்டின் முதற் பாதியில் இருந்ததுபோல மிக நீண்டிருந்தாலொழிய) அதற்குரிய நேர்விகிதத்தில் ஓரளவு உற்பத்தியையும் கூடுதலாகவோ குறைவாகவோ மாற்றிவிடக் கூடும்.

ஓய்வு என்பது சம்பாத்தியத்திற்குரிய இன்னொரு மாற்றுகும். தொழிலாளர்கள் நெடுநேரம் உழைத்து அதிகச் சம்பாத்தியத்தைப் பெறலாம், அல்லது குறைந்த நேரமே உழைத்து மிகுதியான ஓய்வைப் பெற்று மகிழலாம். வெப்ப நாடுகள் பலவற்றில் உள்ள

தொழிலாளர்கள் வாரம் ஒன்றிற்கு 20 மணி நேர அளவே உழைக்கிருர்கள். இதற்குரிய காரணம்பற்றிப் பல கருத்துகள் உள்ளன. என்ருலும், வியர்வை சொட்டச் செய்யும் கடுமையான வெப்பமுடைய நாடுகளில், நெடுநேரம் உழைப்பதற்கு உற்சாக மிருப்பதில்லே. இந்த வசதிக் குறைவுக்கு இடையிலும் நெடுநேரம் வேலே செய்து நிறைய கூலி பெருது, வெப்பம் குறைந்துள்ள காலே அல்லது மாலே நேரங்களில்மட்டுமே உழைப்பதற்காக நாம் தொழிலாளர்களேக் குறைகூறக்கூடாது.

மேலே நாடுகளில் உள்ள தொழிலாளர்கட்கு ['தலத்தில் இல்லாமை' ('absenteeism') என்பது தவிர] வேறு தெரிவு (choice) கிடையாது; தங்களே வேலேக்கு அமர்த்தியுள்ள தொழிற்சாலேயின் வேலே நேர நீட்டிப்பிற்கோ அல்லது மாற்றுதல் வேலே நேரத்திற்கோ (shift) அவர்கள் இசைந்தே நடத்தல்வேண்டும். என்ருலுங்கூட, இதில் தமக்குப் பிடித்தமான ஒன்றைத் தமது தொழிற்சங்கங்கள் மூலமாகக் 'கூட்டாக' இவர்களே தெரிவுசெய்து கொள்ளலாம். சாதகமான சூழ்நிலே ஏற்படும்பொழுது, இவர்கள் அதிகக் கூலி களோ அல்லது குறைந்த நேர வேலேயோ அளிக்கும்படி கோரலாம்.

வருமானம், ஓய்வு இதில் எதைத் தேர்ந்தெடுப்பது என்பதில் ஒவ்வொரு தொழிலாளிக்கும் தனித்தனி விருப்ப அளவுகள் இருக்கும். சில தொழிலாளர்கள் (சொந்த வாடகைக் கார் உடையவர்களே எடுத்துக்கொள்வோம்) மணிக்கு 4 ஷி. அளவில், சில மணி நேர வேலேயோ அல்லது அதிகப்படியான வேலேயோ செய்யும் உரிமையைப் பெற்றுள்ளார்கள். சிலர் ஒரு நாளில் சில மணிநேரம் மட்டுமே உழைத்தால் போதும் எனக் கருதலாம்; வேறு சிலர் அதிகம் சம்பாதிப்பதற்காக நெடுநேரம் உழைக்கத் தயாராக இருக்க லாம். ஒரு நாளில், மணிக்கு 4 ஷி. வீதம் 32 ஷி. மட்டுமே சம்பாதித் தால்போதும் என்று கருதுகிறவன் (வாடகைக்கார் வைத்திருப்பவன்), இதைப் பெறுதற்காக எட்டு மணி நேரம் உழைக்கிருன்; எஞ்சிய பதினுறு மணிநேரமும் ஓய்வையோ, தனக்குப் பிடித்த வேறு பொழுதுபோக்கையோ மேற்கொள்ளுகிருன். இவன் 28 ஷி. மட்டும் பெறுவதற்காக 7 மணி நேரம் உழைத்து, 17 மணி நேர ஓய்வு கொள்ளலாம்; அல்லது 36 ஷி. பெறுதற்காக, 9 மணி நேரம் உழைத்து, 15 மணி நேர ஓய்வுமட்டுமே கொள்ள விரும்பலாம். இவன், தனது 16ஆவது மணி ஓய்வை, மணிக்கு 4 ஷி. வீதம் தரும் 9 ஆவது மணி உழைப்பைவிடச் சிறந்ததாகக் கருதுகிருன். ஆனல், அதே சமயத்தில் தனது 8 ஆவது மணிநேர உழைப்பிற் குரிய 4 ஷி.ஐ மிகையாகப் பெறும் (17ஆவது) ஓய்வு மணியைவிடச் (இதை அவன் வேண்டாமென்று விட்டுவிடக்கூடும்) சிறந்ததாக மதிக்கிருன்.

இந் நிலையில் அவனது சம்பாத்திய அளவில் வாடகை உயர்ந்து விட்டதன் காரணமாகச் சில மாற்றங்கள் ஏற்படுவதாகக் கொள்வோம். அதாவது, வாடகை உயர்வு காரணமாக, மணிக்கு 6 ஷி. வீதம் சம்பாதிப்பதாகக் கருதுவோம். அப்படியானல், இவன் முன்பைவிட அதிக நேரம் உழைப்பாஞ ? அல்லது குறைந்த நேர உழைப்பே போதுமென்று திருப்தி அடைவாஞ? இதை வரையறுத்துச் சொல்ல முடியாது. சிலர் அதிக நேரம் உழைக்கலாம்; சிலர் குறைந்த நேரம் மட்டும் உழைக்கலாம். ஆனல், பெரும்பான்மையினர் வாடகை கூடினலுங்கூட, அதே நேர அளவுமட்டுமே உழைப்பார்கள். அதிகப்படியாக நெடுநேரம் உழைக்க முன்வராததற்கு இன்னொரு காரணமும் உண்டு. அவன் உழைக்கும் அதிகப்படியான மணிக்கு, முந்திய 4 ஷில்லிங்கிற்குப் பதிலாக இப்போது 6 ஷி. கிடைக்கிறது. அதாவது, அவனது முந்திய எட்டு மணி நேர உழைப்பு (8 × 4 ஷி. = 32 ஷி.) 32 ஷி. மட்டுமே கொடுக்க, இப்பொழுதைய எட்டு மணி நேர உழைப்பே (8 × 6ஷி. = 48ஷி.) 48 ஷில்லிங்கைக் கொடுத்துவிடுகிறது. எனவே, அதிகப்படியான சம்பாத்தியம் பெறவேண்டுமென்ற இவனது தேவையும் முன்பைவிடக் குறைந்துவிடுகிறது. இவன் இப்பொழுதும் 32 ஷி. மட்டுமே பெறுகிருன் என்ருல், இவன் தனது வேலை நேரத்தை மிக அதிகமாகக் குறைத்துக்கொள்ளவில்லை யென்றும், முன்பு பெற்ற வருவாயும் பெற்று, முன்பைவிட இப்பொழுது அதிக ஓய்வும் பெறுகிருனென்றும் பொருள் கொள்ள வேண்டும்; அல்லது உழைப்பு நேரத்தைக் கூட்டி அதிகச் சம்பாத்தியம் பெற விரும்பாதவஞகவும் இருக்கலாம். அப்படிச் சம்பாதிக்கும் பணத்தைச் செலவழித்து மகிழப் போதிய ஓய்வில்லாமல் அவனே இடர்ப்பட நேரிடலாம். இந்த நிலையில் இதுபற்றி அதிகமாக ஏதும் சொல்ல முடியாதென்றே கருதுகின்றேன்.

## 9. குறைந்தபட்சக் கூலிகள் (Minimum Wages)

கிரேட் பிரிட்டனில், 1909-ல் கூலி நிர்ணயக் குழு (Wage Board) அமைக்கப்பட்டது. தொழிற்சாலைகள் மிகக் குறைந்த கூலிகள் கொடுப்பதையும், தொழிலாளர்கள் தமக்குள் ஒன்று சேர்ந்து கட்டமைப்புப் பெருததையும் மாற்றி அமைத்துவிட்டு, குறைந்த பட்சக் கூலிகளை நிர்ணயித்துவிட்டுக் 'கசக்கிப் பிழிந்து' (sweated labour) வேலைவாங்கும் கொடுமையைக் களைந்தெறிதற்காக, இக் குழு அமைக்கப்பட்டது. இங்கு இப்பொழுது இதைப்போலப் பல கூலி நிர்ணயக் குழுக்கள் ஏற்பட்டுவிட்டன. [இவை இப்பொழுது கூலி நிர்ணய ஆலோசனைக் குழு (Wages Council) என்று அழைக்கப்படு கின்றன]. மேலும், சட்டசபைமூலமாக விவசாயம், ரொட்டித் தொழில் முதலியவற்றிற்குத் தனிக் கூலிக் குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன.

ஒரு தொழிலுக்கு நிர்ணயிக்கப்படும் குறைந்தபட்சக் கூலி யானது, பழைய கூலியைவிட அதிகமாகிவிட்டால், அப்பொழுது ஏற்படக்கூடிய விளைவுகள் என்னவாயிருக்கும்?

அத் தொழிலில் நிலைத்துள்ள தொழிலாளர்கள் மிகுந்த நன்மை பெறுவார்கள். தம் கூலியில் ஏற்பட்ட உயர்வைக்கொண்டு, (அவர் கள் விரும்பினால்) அதிகப்படியான, சிறந்த உணவையும் இதர வாழ்க்கைத் தேவைகளையும் பெற்றுத் திறமையைப் பெருக்கிக் கொள்ளலாம்; ஓரளவு தமது பணத்தொல்லைகளை நிவர்த்தி செய்து கொள்ளலாம். இவற்றின் விளைவாக இவர்களது உற்பத்தி அளவு உயரக்கூடும். இங்ஙனம், கூலியில் உயர்வு பெற்றுவிட்டாலே, அதிகப்படியாக உழைத்து உற்பத்தியைப் பெருக்க ஒருமனப்பட்டு முயல்வார்கள் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. இது ஓர் அனுமானம்தான்.

சில தொழிலதிபர்கள் (employers) தம் தொழிலாளர்கட்குக் குறைந்த கூலியைக் கொடுத்து (அந்த இடத்தில் இவர்கள் பெறக் கூடிய கூலியைவிடக் குறைந்த கூலி), அவர்களது உழைப்பைச் சுரண்டி, இலாபத்தைப் பெருக்கிக்கொள்ள முற்பட்டால், அதைக் குறைந்தபட்சக் கூலிமுறை தடை செய்துவிடும். இம்மாதிரி நிலவரத்தில் உள்ளதைவிடக் குறைவான கூலியைக் கொடுப்பது, ஒதுங்கித் தனித்துள்ள ஊர்களைத் தவிர ஏனைய இடங்களில் இயலாத தாகும். உண்மையில், கிரேட் பிரிட்டனிலும் இதர நாடுகளிலும் குறைந்த கூலி கொடுக்கிறவர்கள், அதிக இலாபம் சம்பாதிக்காத சிறு தொழிலதிபர்களே யாவர்.

குறைந்தபட்சக் கூலி, ஒரு தொழிலில் உள்ள வேலையுடைமை அளவைக் குறைக்க முற்படலாம். குறைந்தபட்சக் கூலி அடிப் படையில் தம் தொழிலாளர்கட்குக் கூலி கொடுப்பதால் ஏற்பட்ட மிகுதியான உழைப்புச் செலவுகளைச் சரிக்கட்டுவதற்காகப் பொருள் களின் விலையை உயர்த்தத் தொழிலதிபர்கள் முயற்சி செய்யக்கூடும். அப்படிச் செய்தால், அவர்களது பொருள் விற்பனை குறைந்துவிடும். எவ்வளவு குறையுமென்பது, அப் பொருளுக்குரிய தேவை நெகிழ்ச்சி யைப் பொறுத்தது. ஒருவேளை, விலையைக்கூட்ட முடியாதுபோனால் —உதாரணமாக, இறக்குமதியான பொருட் போட்டியால் இதன் விலையைக் கூட்ட முடியாவிட்டால்—சில தொழிலகங்கள் மூடப்படும்; அல்லது அவற்றின் அலுவலர் தொகை குறைக்கப்படும். மேலும், உழைப்புச் சிக்கன உபாயங்களைக் (labour saving devices) கையாண்டு (இதை நாளடைவில் எப்படியும் செய்வார்கள்; ஏனென்றால், அவர் களது உற்பத்தி நிலையத்தில் பழுதுபார்க்க நிறைய செலவேற்படும்),

செலவுகளைக் குறைப்பதற்குத் தொழிலதிபர்கள் தூண்டப்படுவார்கள். இந்த உழைப்புச் சிக்கன முறைகளைப் பழைய கூலி விகிதங்களில் நிறுவுவது இலாபமற்றதாயிருக்கக்கூடும். முடியுமானால், வயது வராத சிறுவர்களை வேலைக்கு அமர்த்திக் குறைந்த கூலி கொடுத்து நிலையைச் சமாளிக்க முற்படுவார்கள்.

அப்படியானால், வேலையிழந்துபோன தொழிலாளர்களின் கதி என்னவாகும்? குறைந்தபட்சக் கூலி முறைகளால் கட்டுப்படுத்தப் படாத ஏனைய தொழில்களில் சேர்ந்து, முன்பு பெற்ற கூலியை அடைய முயலலாம். சிலர் தாமே சொந்தத்தில் தொழில் செய்து எப்படியும் பிழைத்துக்கொள்ள முற்படலாம்; ஏனென்றால், சுயேச்சைத் தொழிலாளர்களின் வருமானங்கட்குக் கீழ்வரம்பு ஏதும் கிடையாது. இன்னும் சிலர், சிறு தொழில்களை நடத்தும் தம் உறவினர்களுடன் சேர்ந்து உதவி செய்து ஓரளவு ஊதியம் பெறலாம்; அல்லது தலைச்சுமையாகப் பொருள்களை விற்று வயிற்றைக் கழுவலாம். இவர்களைத் தவிர எஞ்சியோர் வேலையின்றி இருக்கக்கூடும். இதற்குரிய உண்மையான காரணம் என்னவென்றால், இப்படி எந்த வேலையும் கிடைக்காத தொழிலாளர்களின் திறமை, நல்ல வருமானம் சம்பாதிக்க முடியாத வகையில் மிகச் சாதாரணமாக இருப்பதே ஆகும். இந்தத் திறமைக் குறைவை, சட்டபூர்வமான குறைந்தபட்சக் கூலி நிர்ணயங்களால் ஒருபோதும் ஈடுசெய்துவிட முடியாது.

ஒன்று அல்லது குறிப்பிட்ட சில தொழில்களுக்குமட்டும் குறைந்தபட்சக் கூலியை நிர்ணயிப்பதால் ஏற்படக்கூடிய விளைவுகளையே இதுவரை நான் தெளிவுபடுத்தினேன். இதற்கும் மேலாக, ஒவ்வொரு தொழிலாளியும் பெறும் உண்மைக் கூலியில் குறிப்பிடத் தகுந்த உயர்விருக்கவேண்டுமென்று அரசாங்கம் வற்புறுத்தினால், என்ன ஏற்படும் என்பதை எண்ணிப்பார்ப்பது நல்லது. சான்றாக, திறப்பாடில்லாத் தொழிலாளர்க்கு இதற்கு முன்னர் நிலவரத்திலிருந்த கூலி அளவைவிட சுமார் 20 சதவிகிதம் அதிகமாகச் சேர்த்து, அதையே வாராந்தர அடிப்படைக் குறைந்தபட்சக் கூலியாக வயதுவந்த ஆண்களுக்கும், அதைவிடச் சற்றுக் குறைவாகப் பெண்களுக்கும் அரசாங்கம் நிர்ணயிப்பதாகக் கொள்ளுவோம்; இதைவிடக் குறைந்த கூலிக்கு யாரையும் வேலைசெய்ய அனுமதிக்காது, எல்லாத் தொழில்களிலும் 20 சதவிகிதம் கூலி விகிதங்களை உயர்த்திவிடுவதாகவும் வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது என்ன நேரிடும்? தொழிலாளர்கட்குரிய 'உண்மைக்' கூலி உயர்ந்திருப்பது நிச்சயம் என்பதை உறுதிப்படுத்திக்கொள்ளுதற்காக, வாழ்க்கைத்தரச் செலவுகளுடன் பொருந்தும் வகையில் பணக்கூலிகளைப் பொருத்தி நிர்ணயிப்பதற்கு அரசாங்கம் முனையுமென்பதில் சந்தேகமில்லை. இதனால்,

உணவு, உடை, குடியிருப்பு முதலிய அடிப்படைத் தேவைகட்கு உரிய செலவுகள் கூடும்பொழுது, அதற்கு இணையாகப் பணக் கூலியும் உயரும்வகையில் அரசாங்கம் பார்த்துக்கொள்ளுகிறது.

ஒருசில குறிப்பிட்ட தொழில்களுக்குமட்டும் குறைந்தபட்சக் கூலியை நிர்ணயம் செய்யும்பொழுது ஏற்படக்கூடிய மூன்று குறைகளை இது நீக்கிவிடுகிறது. அடிப்படைக் கூலிகூடப் பெறுதற்கு லாயக்கற்ற திறமை குறைந்த தொழிலாளர்கள், மிக மோசமான கூலியே கிடைக்கும் வேறு தொழில்களுக்குச் செல்லுமாறு அனுமதிக்கப்படமாட்டார்கள். ஒரு தொழிலிலிருந்து விலக்கப்பட்ட தொழிலாளர்கள் வேலையில்லாமலே இருப்பதால், தொழிலாளர்களின் மறுபகிர்வுகள் (redistribution) குறைவாகவே ஏற்படும். உற்பத்திக் குறைவினால் ஏற்படும் பொருள் விலை ஏற்றம், இலாபங்களில் குறைவு ஏற்படுவதைத் தடுப்பதில் ஓரளவு ஆற்றலுடன்மட்டுமே செயல்பட முடியும். ஏனென்றால், பொருள்களுக்கு அதிகப்படியான விலை ஏற்றம் என்றால், அதற்கேற்பத் தொழிலாளர் கூலியும் உயர்ந்திருக்கிறது என்பதுதான் பொருள். இறுதியாக, உழைப்புச் சிக்கன இயந்திரங்கள் முதலிய இதர முறைகளுக்குரிய செலவுகள், பணக் கூலிகளைப்போலவே உயர்ந்துவிடக்கூடும். இதனால் உற்பத்தி முறைகளை மாற்றுவதால் இலாப இனங்களில் ஏற்படக்கூடிய வீழ்ச்சியைத் தடுப்பதற்குரிய வாய்ப்பும் மிகமிகக் குறைந்துவிடுகின்றது. இவற்றால் ஏற்படும் விளைவு, மூலதனத்தைச் சேர்ப்பதையும், முதலீடு செய்வதையும் கடுமையாக ஒடுக்கிவிடுகிறது. மேலும், உற்பத்தி நிலையங்கள், வணிக இருப்பு முதலிய சொத்துகளால் ஆன தேசீய மூலதனத்தின் அளவு நாளடைவில் குறுகிப்போகும் நிலையும் ஏற்பட்டுவிடுகிறது. உழைப்போடு கூட்டுத் தொடர்புடைய மூலதனத்தில் ஏற்படும் 'வீழ்ச்சி' என்பது, உழைப்பிற்குரிய இறுதிநிலை ஆக்கத்திறத்திலும் 'வீழ்ச்சி' என்றே பொருள்படும். இந்த நிலையில் கூலி நிர்ணய அமைப்பும் இல்லையென்றால், இந்த ஆக்கத்திற வீழ்ச்சி, கூலிகளில் வீழ்ச்சியை உண்டாக்கும்; இங்கு ஒருவேளை உண்மைக் கூலி முறையை நிலைநிறுத்திவிட்டாலுங்கூட, இது அதிகப்படியான வேலையின்மைக்கே வழி அமைக்கும்.

இத்தகைய ஒரு கொள்கை, தொழில்படும் உற்பத்தி நிலையங்கள், இதர சாதனங்கள் முதலியவற்றை உடையோரை மிகவும் 'நெருக்கிப் பிழியும்.' இப் பிழிவு, ஒருசில தொழில்களில்மட்டும் குறைந்தபட்சக் கூலியை நிர்ணயம் செய்வதால் ஏற்படும் அளவைக்காட்டிலும் 'விகிதாசாரரீதியாக, அதிகப்படியான வேலையின்மையைத்தான் உண்டாக்கும்' என்பதை நாம் பகுத்தறிவால் உணர முடியும். மேலும், இத்தகைய வேலையின்மை, நாளாக நாளாகக் கூடிக்கொண்டே போகும்.

இலாபங்களில் ஏற்படும் வீழ்ச்சியும் வரிவிதிப்பில் ஏற்படும் உயர்வும் (வேலையற்றவர்கட்கு உதவுவதற்காக விதிக்கப்படுவது) சேர்ந்து, நாட்டில் உள்ள மொத்த மூலதனத்தைக் குறுகச் செய்தாலும் இதே நிலைதான் ஏற்படும்.

இந்தக் கூலி ஒழுங்கு முறை, ஏனைய நாடுகளைவிட ஆஸ்திரேலியாவில் மிகப் பரவலாக அமுல் நடத்தப்படுகிறது. இந்த நாட்டின் கூலி ஒழுங்குமுறை வரலாறு, முற்குறித்த கொள்கையைக் கடைப் பிடிப்பதால் ஏற்படும் ஆபத்துகள் உண்மையானவை என்றும், கூலி நிர்ணயம் செய்யும் அதிகாரிகளாலேயே ஒப்புக்கொள்ளப்பட்டவை என்றும் நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது. மேற்குறித்த கொள்கைக் கடைப்பிடிப்பால் ஏற்படக்கூடியதாக மேலே விவரித்துள்ள, சமனற்ற நிலைப் பெருக்கத்தால் ஏற்பட்டுள்ள பொருளாதார நலிவு என்பது, பொருளாதாரவாதிகளால் உண்டாக்கிவிடப்பட்ட மாய் மாலமா அல்லது உண்மைதானா என்பதைக், கூலி நிர்ணயம் செய்வோர் ஆய்ந்தறியவேண்டும். ஆனால், அவர்கள், கூலி பெறுவோரின் சேம நலத்தை உயர்த்தவேண்டுமென்ற விருப்பத்தாலோ, வேறு காரணத்தாலோ இதை ஆய்ந்து தெளிவுபடுத்தாது, பல சமயங்களில் பின்வாங்கிக்கொண்டார்கள்.

## 10. தொழிற்சங்கங்களும் கூலிகளும்

தொழிலாளர்களின் நலன்களைப் பாதுகாப்பதிலும், நிலைகளை உயர்த்துவதிலும் தொழிற்சங்கங்கள் பெரும்பணி புரிகின்றன. தொழிலாளர்கள் நிறுவன ரீதியாகக் கட்டமைப்புடன் அமைக்கப்படா விட்டால், அவர்களுடைய கூலிகளில் ஏற்படும் உயர்வு, வேலை நேரங்களில் ஏற்படும் குறைவு, வேலைச்சூழல்களில் ஏற்படக்கூடிய மேம்பாடுகள் என்பன, அரசாங்க நடவடிக்கைகள் ஒருபுறம் இருக்க, பெரும்பாலும் அவர்களுடைய தொழிலதிபர்களைப் பொறுத்தே அமைகின்றன; அல்லது, அதிக இலாபங்களைப் பெறுதற்காகத் தொழிலை விரிவுசெய்யக் கருதி, அதற்காக அதிகப்படியான தொழி லாளர்களைச் சேர்க்கவேண்டுமென்று போட்டி மனப்பான்மையுடன் ஒரு தொழிலகம் முயன்றால், அந்த முயற்சியைப் பொறுத்தும் தொழி லாளர்கட்குரிய வசதிகள் பெருகும். ஆனால், தொழிலதிபர்களிடையே நடப்பு நிலவரத்தைப் பாழடிக்கும் வகையில் போட்டியிட்டுக்கொண்டு தொழிலாளர் கூலிகளை உயர்த்துவதில்லை என்ற அந்தரங்க உடன் பாடு ஏற்பட்டுவிட்டால், இது தொழிலாளர்களைச் சுரண்டவே உதவும். இதனால், போதுமான முதலீட்டு வரவைப் பேணிக்கொள்ள அவசியமாவதற்குமேல் உற்பத்தியில் அதிகமான பங்கை இலாபங்கள் ஈர்த்துக்கொள்ளும்.

சில நாடுகளின் அரசாங்கம் தொழிற்சங்கப் பிரதிநிதிகளையும் தொழிலதிபர்களின் சார்பாளர்களையும் பொருளாதாரக் கொள்கைகளைப் பொறுத்தவரையில் கலந்து ஆலோசித்துக்கொள்ளுகிறது. உதாரணமாக, ஹாலந்து நாட்டில், சில ஆண்டுகட்கு முன்னால், தொழிலாளர் பெறும் உண்மைக் கூலியில் 5 சதவிகிதப் பொதுக் குறைப்புச் செய்துகொள்ளத் தொழிற்சங்கங்களே இசைந்தன; இதைத் தொடர்ந்து தம் இலாபத்தையும் கணிசமாகக் குறைத்துக் கொள்ளத் தொழிலதிபர்கள் இசைந்தனர். இந்தப் பொதுக் குறைப்பு தொழிலாளர்கட்கு நலம் செய்ததோடு; நாட்டிற்கும் நன்மையே செய்யும் என்ற நம்பிக்கையை ஒரு வட்டமேசை மாநாடு அவர்கட்கு அளித்தது. கிரேட் பிரிட்டனில், பொதுத் தொழிற் கொள்கைகளைப் பொறுத்தவரையில், தொழிற் சங்கக் காங்கிரசும் பிரிட்டிசு முதலாளிகள் சங்கமும் அடிக்கடி கலந்து ஆலோசிக்கப் படுகின்றன. இந்த நாட்டுத் தொழிற் சங்கக் காங்கிரசு, 1948-50 ல் நாட்டில் ஏற்பட்டிருந்த பணவீக்கத் தடுப்புக்காக, தொழிலாளர்களின் கூலி விகிதத்தை அப்படியே பொதுவாக வைத்துக்கொள்ளத் தானே இசைவு தெரிவித்திருந்தது.

இதில் உள்ள சிரமம் என்னவென்றால், ஒரு குறிப்பிட்ட பிரிவுத் தொழிலாளர்களுக்குத் தேவையான நலம் ஒன்று இன்னொரு பிரிவுத் தொழிலாளர்களின் நலத்தோடு மோதுவதால் ஏற்படும் சிக்கலே ஆகும். ஒவ்வொரு பிரிவுத் தொழிலாளியும் என்ன விரும்புகின்றான் ? தனது வாழ்க்கைத் தரச் செலவுகளை உயர்த்தாத வகையில் பொருள்களின் விலை நிரந்தரமாக இருக்கவேண்டும். ஆனால், அதே சமயத்தில் தனக்குமட்டும் ஊதிய உயர்வு கிடைக்க வேண்டும் என்று விரும்புகிறான். இதற்கு என்ன பொருள் ? இத் தொழிலாளி தனது ஊதியத்தை உயர்த்திப் பெற விரும்பும் அதே நேரத்தில், அடுத்த பிரிவுத் தொழிலாளியின் ஊதியம் ஒரே நிலையில் இருக்கவேண்டுமென்று விரும்புகின்றான். போதுமான முதலீட்டு வரவை ஊக்கும்வகையில் கணிசமான இலாப உயர்வு இருக்கவேண்டு மென்பதைப் பெரும்பாலான தொழிலாளர்கள் ஏற்காது, அதிகப் படியான இலாபத்தை உறிஞ்சிக்கொள்வதற்குரிய வாய்ப்புகள் ஏற்கெனவே ஏராளமாயுள்ளன என்றே எண்ணுகிறார்கள். எனவே, இவர்களில் சில பிரிவினர், தமது தலைவர்களின் அறிவுரைகளை ஏற்க மறுக்கிறார்கள். அதிலும் குறிப்பாக, இத் தலைவர்கள் அரசாங்கத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதால், நம்புவதற்கியலாத 'சந்தேக நபர்கள்' என்ற எண்ணம் ஏற்பட்டுவிட்டால், இவர்களது கருத்தைத் தொழிலாளர்கள் ஏற்கவேமாட்டார்கள். இதன் விளைவாக, அதிகார பூர்வமின்றியே வேலைநிறுத்தங்களையும் மேற்கொள்ளத் துவங்கு வார்கள்.

ஒன்றிரண்டு தொழிற் சங்கங்கள்மட்டும் போரிட்டுத் தம் தொழிலாளர்கட்கு அதிகப்படியான கூலி உயர்வைப் பெற்று விட்டால், அதைத் தொடர்ந்து தம் உறுப்பினர்க்கும் ஊதிய உயர்வு பெற்று நிலையை மேம்படுத்திக்கொள்ளுதற்காக, இதர தொழிற் சங்கங்களும் முற்படும். இங்ஙனம் எல்லாத் தொழிலகங்களிலும் ஒரே சுற்றில் ஏற்படும் கூலி உயர்வுகள் ('round' of wage increases) வாழ்க்கைத் தரச் செலவுகளைப் பொதுவாக உயர்த்திவிடும். எனவே, இவ்வுயர்வால் தொழிலாளர்கள் பெறும் நன்மைகள் மிகச் சாதாரண மாகவே இருக்கும். ஏற்றுமதித் தொழில்கள் எல்லாம், இவ்வகை மாற்றங்களால் பெரும் இடர்ப்பாட்டை விளைவிக்கக்கூடிய ஆபத்து உடையனவாகும். உலக விலை நிலவரத்திற்குத் தக்கபடி விற்பனை செய்யப்படவேண்டிய ஏற்றுமதித் தொழிலையே பெரிதும் ஒரு நாடு சார்ந்திருந்தால், ஏற்றுமதித் தொழில்களில் ஏற்படும் கூலி உயர்வு, வேலையின்மைக்கும் ஏற்றுமதிக் குறைவுக்குமே வழியமைக்கும்.

ஏனைய கூலி விகிதங்களெல்லாம் கிட்டத்தட்ட ஒரே நிலையா யிருக்கிறதென்றும், கூலிகள் உயர்தற்குரிய முனைப்பு இல்லை யென்றும் கொள்வோம். இச் சமயத்தில், ஒரு குறிப்பிட்ட தொழிற் சங்கம், தனது தொழிலாளர்கட்குமட்டும் உயர்ந்த கூலி விகிதத் தைப் பெற்றுத்தர முயலுவதற்கும் ஓர் எல்லை ஏற்பட்டுவிடுகிறது. பொருள் விநியோகப் பகுதியில் உள்ள மூன்று முக்கியச் செல் வாக்குத் துறைகளாவன : உற்பத்திப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை நெகிழ்ச்சி; குறிப்பிட்ட ஒரு பிரிவுத் தொழிலாளர்களின் உழைப்பால் ஏற்படுத்தப்பெறும் மொத்தச் செலவு விகிதங்கள்; இதற்குப் பதிலாக ஏனைய காரணிகளை மாற்றி அமைத்தற்குரிய வாய்ப்புகள். இவை மூன்றுமே பொருள் விநியோகத்தை ஒழுங்கு செய்து அமைக்கின்றன.

உயர்த்தப்பட்ட கூலிச்செலவுகளைப் பொருள்களின் விலையோடு கூட்டிவிட்டால், பொருளின் விலை உயரும்; இதனால் அப் பொருளை வாங்குவோர் குறைவார்கள் ; இதன் விளைவாக இத் தொழிலில் வேலையின்மை ஏற்படக்கூடும்.* இறக்குமதியாகும் பொருள்களோடு —இவற்றின் விலை உயராதிருக்கையில்—உள்நாட்டுப் பொருளைப் போட்டியிட்டு விற்க நேர்கையில், அவற்றிற்குமட்டும் விலையைக் கூட்டினால் கட்டாயம் முன்னர்க் குறித்த நிலை ஏற்படும். இதனாலேயே, இறக்குமதிகளை அதிகமாகக் கட்டுப்படுத்தும்படி தொழிலதிபர்கள் கேட்கும்பொழுது அவர்களைத் தொழிற் சங்கத்தினரும் சில சமயங் களில் ஆதரிக்கின்றார்கள். இதனால், நுகர்வோரின் இழப்பால், ஒரு தொழிலின் இலாபத்தையும் கூலியையும் ஒரே சமயத்தில் உயர்த்திக்

கொள்ள முடியும். ஓர் உற்பத்திப் பொருளுக்குரிய தேவையானது குறைவான நெகிழ்ச்சியுடையதாயிருந்தால், இத் தொழிலில் கூலி உயர்வு பெறுவதற்கு நிறைய வாய்ப்புகள் உள்ளன.

ஒரு பொருளுக்கு ஏற்படும் மொத்த உற்பத்திச் செலவுகளில், ஒரு குறிப்பிட்ட பிரிவுத் தொழிலாளர்க்கு ஆகும் செலவு குறைந்த வீதாசாரத்தில் இருந்தால், இத் தொழிலாளர்க்குமட்டும் அளிக்கப் படும் கூலி உயர்வு, உற்பத்திப் பொருளின் விலையை ஓரளவே உயர்த்தும். உதாரணமாக, பூச்சுவேலை செய்வோருக்குமட்டும் அதிகக் கூலி கொடுப்பதால், வீடு கட்டும் மொத்தச் செலவு அதிக மாக உயர்ந்துவிடுவதில்லை. இதோடு, நிலக்கரிச் சுரங்கத் தொழி லாளர்களை ஒப்பிட்டுப் பாருங்கள். இவர்களுடைய கூலியைக் கொஞ்சம் உயர்த்தினலும், நிலக்கரித் தொழிலுக்கு ஆகும் மொத்தச் செலவில் கணிசமான பகுதி கூலியாகவே கொடுக்கப்படுவதால், அது நிலக்கரியின் மொத்த விலையையே உயர்த்திவிடும்.

என்றாலுங்கூட, மாற்றுமுறைகளைப் பயன்கொள்ளக்கூடிய சூழ்நிலை ஏற்படுதற்கும் வாய்ப்புகள் உள்ளன. கூலி விகிதத்தில் ஏற்படும் உயர்வு, உற்பத்தி முறையிலோ அல்லது உற்பத்தியின் தன்மையிலோ சில மாற்றங்களை மேற்கொள்ளும்படி தொழிலதிபர் களைத் தூண்டும். இம் மாற்றங்கள், அதிக ஊதியம் கேட்கும் தொழிலாளர்களைக் குறைவாக வேலைக்கு அமர்த்திக்கொள்ளுவதன் மூலம் உற்பத்திச் செலவைக் கணிசமாகக் குறைத்துக்கொள்ள அவர் கட்கு உதவுகின்றன. ஆண்கள் சங்கம் அமைத்துக்கொண்டு, உயர்ந்த கூலிதான் வேண்டுமென்று கேட்டால், பெண்களை அதே வேலைக்குக் குறைந்த கூலியில் அமர்த்திக்கொள்ளுதற்கேற்றபடி அவர்கட்குப் பயிற்சியளிக்கத் தொழிலதிபர்கள் முயலக்கூடும்.

தொழிலாளர்களின் வேலை அளிப்பு வகையிலும் சில எல்லைகள் உள்ளன. ஒரு குறிப்பிட்ட தொழிலைச் செய்யும் எல்லாத் தொழிலாளர் களையும் தன்னுள் கொண்டிருக்கும் ஒரு தொழிற் சங்கத்திற்கே மிகுந்த ஆற்றல் இருக்கும். இதற்கு மாருக, ஒரு பகுதியினர் மட்டுமே இத் தொழிற் சங்கத்தில் சேர்ந்து வேலைநிறுத்தம் செய்யப் போவதாகப் பயமுறுத்தினுல், இதைக் கண்டு எந்தத் தொழிலதிபரும் கவலைப்படமாட்டார்; ஏனென்ருல், தொழிற் சங்கத்தில் அங்கம் வகிக்காத ஏனைய தொழிலாளர்களைக் கொண்டோ, அல்லது இதர தொழில்களில் உள்ள தொழிலாளர்களை ஈர்த்தோ, அல்லது வேலை யில்லாதிருப்பவர்கட்குத் தற்காலிக வேலை அளித்தோ, வேலை நிறுத்தத்தால் ஏற்படும் சங்கடங்களை இத் தொழிலதிபரால் சமாளித்துக் கொள்ளமுடியும். [தொழிற் சங்கத்தில் சேர்ந்துள்ள தொழிலாளர்

கட்குமட்டுமே வேலையளிக்கும் நிறுவனங்கட்கும் (closed shop) தாம் வேலைநிறுத்தம் செய்யும் காலத்தில் இதர தொழிலாளர்கள் உள்ளே புகுந்து வேலைபார்க்காதபடி அமைதியாக மறியல் செய்வதற்குள்ள தமது உரிமைக்கும் தொழிற் சங்கங்கள் முக்கியத்துவம் கொடுப்பதற்குக் காரணம் இதுதான்.] ஒரு தொழிற் சங்கம், தனது மாவட்டத்தில் உள்ள எல்லாத் தொழிலாளர்களையும் தன்னிடம் நிறுவன ரீதியாக இணைத்துவைத்திருக்கிறது எனக் கொள்வோம். அப்படியிருந்தாலுங்கூட, வேறொரு மாவட்டத்திலிருந்து தொழிற் சங்கத்தில் சேராத உழைப்பாளர்களை ஒரு தொழிலதிபரால் கொண்டுவர முடியுமென்றாலோ, அல்லது தொழிற்சாலையையே, தொழிற் சங்க உபத்திரவமில்லாத குறைந்த கூலிக்கு ஆட்கள் கிடைக்கக்கூடிய இன்னொரு மாவட்டத்திற்குப் பெயர்த்துச் செல்ல முடியுமென்றாலோ, அத் தொழிற்சங்கத்திற்குரிய ஆற்றல் மிகவும் மட்டுப்படுத்தப்பட்டு விடுகிறது. இக் குறைகளைத் தவிர்ப்பதற்காகவே, நாடு முழுவதும் கால்பாவிய தேசியத் தொழிற் சங்கங்கள் அமைக்கப்படுகின்றன; ஒரு தொழிலைச் சேர்ந்த எல்லாப் பிரிவுத் தொழிலாளர்களையும் ஒன்றாக இணைத்து இவை ஆக்கமாக வளர்கின்றன. இத்தகைய வன்மை வாய்ந்த சங்கங்களால்மட்டுமே, வேலைநிறுத்தத்தை ஏற்படுத்தித் தொழிற்சாலையையே மூடிவிடுமாறு கட்டாயப்படுத்த முடியும்.

மேலும், ஒரு தொழிற் சங்கத்தின் செயல்வன்மை அதன் நிதி நிலையைச் சார்ந்தே அமையும். ஒரு தொழிற் சங்கத்தின் பிரதான ஆயுதம் வேலைநிறுத்தம்தான். வேலைநிறுத்த காலத்தில், தம் குடும்பங்களைப் பராமரிக்கமுடியாத அவல நிலையில் தொழிலாளர்கள் இருந்தால், அவர்கள் பட்டினி நெருக்கத்தால் வேலைநிறுத்தத்தையே கைவிட்டுப் பணிய நேரிடும். இதைத் தவிர்ப்பதற்காகவே தொழிற் சங்கங்கள் சங்க நிதிகளைக் கட்டி எழுப்புகின்றன. கிரேட் பிரிட்டனில் உள்ளதைப்போல, அரசாங்கத்தால் அளிக்கப்படும் பொது உதவி, சங்கங்களுக்கு மிகுந்த வலிமை தருகின்றது. இங்கே, வேலைநிறுத்தம் செய்வோரும், அவர்களது குடும்பமும் பொது உதவியைக்கொண்டே சமாளித்து நிற்கலாம். மேலும், ஒரு தொழிற் சங்கம் தனது தொழிலாளர்கட்குக் கூலி உயர்வு வேண்டுமென்று கோருவதாக வைத்துக்கொள்ளுவோம். இக் கோரிக்கைப்படி கூலி உயர்வைப் பெறுவதால் (இதனால் தொழில் மந்தம் ஏற்பட்டால்), பல தொழிலாளர்கள் வேலை இழப்பார்கள் என்ற விபரீதம் ஏற்படுவதாக வைத்துக் கொள்ளுவோம். என்றாலுங்கூட, இந்த நிலை தம் தொழிலாளர்கட்குப் போதுமான கூலி உயர்வு வேண்டும் என்று கோருவதிலிருந்து அத் தொழிற் சங்கங்களைப் பின்னடையச் செய்துவிடாது. இத் தொழிற் சங்கம் இந் நிலையை வேறுவகையாகக் கணக்கிடும். அதாவது, அத் தொழிற் சங்கத்தில் உள்ள மொத்த உறுப்பினர்கட்கும் ஏற்படும்

பொதுவான நலன்களைக் கணக்கிட்டுப் பார்க்கும். எப்படியெனில், வேலையிலிருக்கும் தொழிலாளர்கட்குத் தனது கோரிக்கைப்படி அதிகச் சம்பளம் கிட்டும்; வேலை இழந்த தொழிலாளர்கட்கு, வேலையின்மைக் காலப் படிகள் அல்லது உதவித் தொகைகள் கிடைக்கும். இவ்விதம் எல்லாத் தொழிலாளர்கட்கும் மொத்தப் பயன் கிடைக்கிறதென்று தொழிற் சங்கம் கணக்கிடுகிறது. ஒவ்வொரு தொழிற் சங்கமும் இதைப் போலச் செய்ய முற்பட்டால், இதன் விளைவாக, வாழ்க்கைத் தரச் செலவில் கணிசமான உயர்வும் மிகுதியான வேலையின்மை நிலையுமே ஏற்படும். என்றாலுங்கூட, எந்த ஒரு தொழிற் சங்கத்தின் நோக்கப்படி பார்த்தாலும், தனது தொழிலாளர்களுக்குப் போதுமான கூலி உயர்வு கிடைக்கும்படி வற்புறுத்துவது, சங்கத்தின் நலத்திற்கு உதவுதற்கே ஆகும் என்று கருதலாம்.

ஒரு தொழிலில் உள்ள தொழிற் சங்கமானது, அத் தொழிலோடு ஒப்பிடக்கூடிய ஏனைய அலுவல்களில் இருப்பதைக்காட்டிலும், கணிசமாகக் கூலி உயர்வைத் தொழிலதிபர்கள் கொடுக்கும்படி செய்வதில் வெற்றி பெற்றுவிடுகிறதெனக் கொள்வோம். ஏனைய தொழில்களோடு ஒப்பிடுகையில், அதிகப்படியாகத் தோன்றும் இக் கூலி அளவை எப்பொழுதும் கொடுக்க முடியுமா?

'இயந்திரத் தொழில்கள்' (industries) என்று சொல்லாது 'அலுவல்கள்' (occupations) என்றுமட்டுமே முன்பத்தியில் குறிப்பிட்டுள்ளேன். ஏனென்றால், பல்வேறு வகைத் தொழிலாளர்களைக் கொண்டமைகின்ற ஒரு தொழிற் சங்கத்தால், தனது பல்வேறு தொழிலாளர்களின் கூலிகளை (உதாரணமாக, எழுத்தர்கள், திறப்பாடில்லாப் பாட்டாளிகள்), இவர்களோடொத்த ஏனைய துறைத் தொழிலாளர்களின் கூலிகளைக்காட்டிலும் உயர்ந்த நிலையில் சரிக்கட்டி வைத்துக்கொள்வது சிரமமான காரியமாகும். எண்ணிக்கை மிகுதியும் பல்வேறு துறைப் பயிற்சியுமுடைய தொழிலாளர்களைக் கொண்ட ஒரு தொழிற் சங்கம், பொதுவான கூலி உயர்வைப் பெறுதற்காக, வேலைநிறுத்தக் கருவியை ஏவுதற்கு மிகுந்த ஆற்றலுடையதாக அமைந்துள்ளது. இவற்றிலும், ஏனைய வேலைகளில் உள்ள தொழிலாளர்கட்குரிய கூலிகளைக்காட்டிலும் 'கைத்திறத் தொழில்'கள் (crafts) அல்லது சிறப்பான அலுவல்கள் முதலியவர்கட்குரிய சங்கங்களே, அதிகப்படியான கூலி உயர்வைப் பெறுதற்குரிய போதுமான ஆற்றலுடன் விளங்குகின்றன.

ஏனைய தொழில்களைவிட ஒரு குறிப்பிட்ட தொழிலில் கொடுக்கப்படும் தொடர்பான கூலி உயர்வு, பல புதியவர்களை இத் தொழிலுக்கு ஈர்க்கும். படித்து வெளியில் வரும் இளைஞர்கள் பிற தொழில்களைவிட, இவற்றையே மிகுதியும் நாடி வருவார்கள். இத் தொழிலுக்கு

வேண்டிய தகுதி, திறமைகளிருந்தாலும், ஏற்கெனவே இதர அலுவல்களில் சேர்ந்துவிட்டவர்கள், கூலி உயர்வைக் கருதி தங்கள் வீடுகள் அருகில் இருந்தால் இப் புதிய தொழிலை நாடி வருவார்கள்.

ஆனல், இவ்விதம் இடம் பெயர்ந்து வரும் தொழிலாளர் எண்ணிக்கை பெருகிவிட்டால், இப் பெருக்கம், சங்கத்தில் ஏற்கெனவே உறுப்பினர்களாயிருக்கும் தொழிலாளர்கள் பெற்றுவரும் நலன்களைத் தானும் பகிர்ந்துகொள்ள முற்படும். இவ்விதம் புதிதாக வந்த தொழிலாளர்களும் சங்கத்தில் சேர்ந்துகொண்டு, புதிதாக உயர்த்திக் கொடுக்கப்பட்ட கூலிகளின் அளவைக் கீழே இழுத்துவிட (undercut) மறுத்துவிட்டால், இதன் பயனுக வேலையின்மை ஓரளவு பெருகும்; அப்படிப் பெருகும் வேலையின்மையில் தொழிற் சங்கத்தின் பழைய உறுப்பினர்களும் பங்கு கொள்வார்கள். ஒரு வேளை, புதிதாக வந்த தொழிலாளர்களைச் சங்கத்தில் சேர்க்க மறுத்து விட்டாலோ அல்லது அவர்கள் தாமே சேர மறுத்துவிட்டாலோ, அவர்கள் தமக்கெனத் தனியாக ஒரு புதுச் சங்கத்தை அமைத்துக் கொள்ளக்கூடும். இப்படி வருபவர்கள், ஏனைய அலுவல்களில் இருப்பதைவிட இதில் அதிகப்படியாகத் தரப்படும் கூலியை ஒப்புக்கொண்டு வேலையில் சேருகிருர்கள். என்ருலுங்கூட இந்தக் கூலியின் அளவு, தொழிற் சங்கம் வற்புறுத்திப் பெற்றுள்ள கூலியின் அளவுக்குக் குறைவாகவே இருக்கும். இங்ஙனம் குறைந்த கூலிபெற்று நுழைபவர்கள், நாளடைவில் தொழிற் சங்கத்தில் அங்கம் வகிக்கும் தொழிலாளர்களையே வேலையைவிட்டுக் கிளப்பிவிடுவார்கள்.

இதிலிருந்து என்ன தெளிவாகிறதென்ருல், ஒரு தொழிலகத்திற்குள் புதிதாக வந்து நுழைவோரின் தொகையை எப்படியாவது வரையறைப்படுத்தி வைத்திருந்தால்தான், ஏனைய தொழில்களை விடத் தனக்குரிய தொழிலில் உள்ளோர்க்குப் போதுமான அதிகப்படியான கூலிவிகிதத்தை ஒரு தொழிற் சங்கத்தால் எப்பொழுதும் நிலைப்படுத்தி வைத்துக்கொள்ள முடியும். ஏனைய சர்வாதீனனைப் போல, ஒரு தொழிற் சங்கமும், தனது வேலை அளிப்பைக் கட்டுப்படுத்துவதன்மூலமே தனக்குரிய கூலிகளை உயர்த்திப் பெறமுடியும்.

இங்ஙனம் உழைப்பின் அளிப்பைக் கட்டுப்படுத்தி வழங்குவதற்காக மேற்கொள்ளப்பட்டுவரும் பொதுவான முறை ஒன்றுள்ளது. புதிதாக வரும் தொழிலாளர்கள் குறிப்பிட்ட காலஅளவிற்கு வேலை பயின்றே வரவேண்டும் என்பதும், அப்படிப் பயிற்சிபெறுவோரின் எண்ணிக்கையை ஏற்கெனவே உள்ள கூலிவேலைக்காரர்களின் அளவுக்குக் கட்டுப்படுத்தி வைக்கவேண்டும் என்பதுமே அம் முறையாகும். இதை அரசாங்கமே, சட்டமுறைமூலமாக அமுல் நடத்திவந்தால், இடர்ப்பாடேதும் இன்றிச் சுமுகமாகச் செல்லும்

இல்லாவிட்டால், தொழிற் சங்கம் வேலைநிறுத்தப் போராட்டத்தை மேற்கொண்டே இம் முறை குலைந்துபோகாது பார்த்துக்கொள்ள வேண்டும். அமெரிக்காவில் உள்ள சில தொழிற் சங்கங்கள் வேறொரு முறையைக் கையாளுகின்றன. இதன்படி, தொழிற் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்துகொண்டபின்னரே, ஒருவர் வேலை தேடிச் செல்ல வேண்டும்; தொழிற்சங்க உறுப்பினர்களாக இருப்போர்க்கே சில நிறுவனங்களை வேலை தருமாறு வற்புறுத்துவர். மேலும், புதிதாகச் சேர வருவோர்க்கு அதிகமான நுழைவுக் கட்டணம் விதிக்கப்படுவதால், ஏராளமானவர்கள் தொழிற் சங்கங்களில் சேருவது ஓரளவு தடைசெய்யப்படுகிறது. கிரேட் பிரிட்டனில் உள்ள தொழிற் சங்கங்களில் சில, கடுமையான வரையறைகளை அமுல் நடத்துவதன்மூலம் தம் நிலைகளை உறுதிப்படுத்திக்கொள்ளுகின்றன. இதன்படி, ஒரு குறிப்பிடப்பட்ட வேலையை, அதற்கெனக் குறிப்பிடப்பட்ட தொழிலாளரே செய்யவேண்டும்; இத் தொழிலைச் செய்ய இன்னொரு பிரிவில் உள்ள வேறொரு தொழிலாளிக்கு நன்றாகத் தெரியுமென்றாலும், அவரை அனுமதித்தல் கூடாது. உதாரணமாக, அத் தொழிலைச் செய்யவேண்டிய சமயத்தில் அவர் அருகில் இருக்கலாம்; தொழிலைச் செய்யவேண்டியவர் அழைக்கப்பட வேண்டியதிருக்கலாம். என்றாலுங்கூட, இவர் தன் தொழிலாக இல்லாததொன்றைத் தனக்குத் தெரிந்தாலும் செய்யக்கூடாது என்ற கடுமையான வரையறைகள் விதிக்கப்படுகின்றன.

வேறு சில தொழிற் சங்கங்கள், இன்னொரு முறையைக் கையாளுகின்றன. வேலை பரவலாக இருப்பதற்காக மெதுவாகவே செய்யுமாறு வற்புறுத்துவதாகும். உதாரணமாக, ஒரு நாளைக்குச் செங்கல் அறுப்போர், இத்தனை கற்கள்மட்டும் அறுத்தால் போதும் என்று வரையறுத்துவிடுவது. இந்த மெதுவான முறை, சமுதாயத்திற்கும் தொழிலாளர் நலனுக்கும் இடையே மோதல் ஏற்படுவதற்கு இன்னொரு சான்றாகும். நாட்டில் உள்ள எல்லாத் தொழிலாளர்களும் இந்த முறையைப் பின்பற்றி, வேண்டுமென்றே மெதுவாக வேலை செய்யத் தொடங்குவார்களேயானால், நாட்டின் உற்பத்தி அளவு குறையும்; அதன் விளைவாக வாழ்க்கைத்தரச் செலவும் கட்டாயமாக உயரும்.

# 27. வட்டி
## (Interest)

### 1. வட்டி விகிதங்களில் உள்ள வேறுபாடுகள்

வட்டி என்பது, கடனுக்குச் செலுத்தப்பெறும் விலை. நீங்கள் ஒருவரிடம் 100 பவுன் கடன் வாங்கி, அதை ஓராண்டு கழிந்து 105 பவுனைத் திருப்பிக்கொடுக்க உறுதிமொழி கொடுத்தீர்களானல், அவருக்கு ஆண்டொன்றுக்கு 5 சதவிகித வட்டி கொடுக்க நீங்கள் இசைகிறீர்கள்.

எல்லாக் காலங்களிலும், பல்வேறுவிதமான வட்டி விகிதங்கள் நடைமுறையிலிருந்துவருகின்றன. ஒருவர் மிகக் குறைந்த வட்டி விகிதத்திற்குக் கடன் பெறக்கூடும்; இதே நபர், தான் முதலில் வாங்கிய கடனுக்குக் குறைவான வட்டி விகிதமும், இன்னொரு விதமான கடனுக்கு அதிகப்படியான விகிதமும் கொடுக்க நேரிடலாம்.

ஒரே வகையான கடனை வாங்கும் வெவ்வேறு நபர்கள், பல்வேறு வகையான விகிதங்களில் வட்டி செலுத்த நேருகிறது. இந்த விகித வேறுபாடுகட்கு, அவரவர்களுடைய கடன் மதிப்பின் நிலையே (credit standing) காரணமாகும். கடன் அளிப்பவர் (lender) பணத்தைக் கொடுத்துவிட்டு, அதற்குப் பதிலாகக் கடன் பெறுபவரிடமிருந்து ஒரு IOU ஐப் பெறுகிறார். இந்த IOU ஐ ஒரு கடன் பத்திரம் (Bond) என்றே, அடைமானம் என்றே, அல்லது வாணிப உண்டியல் (Bill of exchange) என்றே அல்லது வேறெதுவாகவோ அழைக்கலாம். என்ன பெயரிட்டு அழைத்தாலும், அடிப்படையில் இது ஒரு IOU தான். இப்படிக் கடன் பெற்றவரால் தனது வாக்குறுதியை நிறைவேற்ற முடியுமா? நிறைவேற்ற இசைவாரா? வட்டி விகிதங்களைக் குறிப்பிட்ட தேதிகளில் செலுத்துவாரா? கடன் பணத்தைத் திருப்பித் தருதற்குரிய நாளில், பெற்ற கடனை முறையாகத் திருப்பித் தருவாரா? இவற்றில் எல்லாம் தவறுதற்குரிய இழப்பு ஆபத்துகள் (risks) எப்போதும் இருக்கின்றன. பிரிட்டிசு அரசாங்கத்திற்குக் கொடுக்கப்படும் கடன்களில் இத்தகைய ஆபத்து

மிக அற்பமானது என்று கருதப்படுகிறது. மேலும், பிரிட்டிசு அரசாங்கத்தில் நீண்ட காலத் தவணைக்கு வாங்கக்கூடிய் கடன்களுக்கு உரிய வட்டி விகிதமாக நீண்ட காலக் கடன்களுக்குரிய வட்டி விகிதமே (long term rate of interest) விதிக்கப்படுகிறது. நீண்டகால பிரிட்டிசு அரசாங்கப் பத்திரங்களின் (securities) அங்காடி விலைக்குக் கிடைக்கும் வருவாயைக்கொண்டு, இந்த விகிதம் அளவிடப்படுகிறது. உதாரணமாக, 100 பவுன் தோற்ற மதிப்புடைய (face value) $2\frac{1}{2}$ சதவிகித கன்சோல்களை (Consols) 45 பவுனுக்கு வாங்கமுடிகிறதென்று வைத்துக்கொள்வோம். இதற்குப் பொருள் என்னவென்ருல், ஆண்டொன்றுக்கு 2பவு. 10ஷி. வீதம் எப்பொழுதும் கொடுப்பதாகப் பிரிட்டிசு அரசாங்கம் அளித்துள்ள வாக்குறுதிக்கு உரிய இப்பொழுதைய மதிப்பு [ஏனென்ருல், கன்சோல்களுக்குக் கடன் மீட்சி மதிப்பில்லை (redemption value)] 45 பவுன் என்று ஆகிறது. இது $\frac{100}{48} \times 2\frac{1}{2} = 5\frac{10}{48}$ சதவிகித விளைவுக்குச் சமானமாகும். ஒரு நீண்டகாலக் கடன் பெறுவதற்குப் பிரிட்டிசு அரசாங்கம் செலுத்த வேண்டிய வட்டி விகிதம் $5\frac{10}{48}$ சதவிகிதத்தில் அமைந்துவிடுகிறது. நிறுவனங்கள், கம்பெனிகள், ஸ்தலஸ்தாபனங்கள், அரசாங்கங்கள் முதலிய இதர கடன் வாங்குவோரெல்லாம் இதைவிட அதிக வட்டி விகிதம் செலுத்தவேண்டியதிருக்கும். உதாரணமாக, ரூரித்தானிய அரசாங்கத்தில் 5 சதவிகிதப் பத்திரங்கள் 75 என்ற அளவில் நின்ருல், அந்த அரசாங்கம் $6\frac{2}{3}$ சதவிகித வட்டி கொடுக்கவேண்டியதிருக்கிறது. கடன் வாங்கும் இன்னெருவர், கட்டாயம் தரவேண்டிய உயர்ந்த வட்டி விகிதம் என்பது, கடன் திரும்பச் செலுத்தப்படாமற்போனல் ஏற்படக்கூடிய ஆபத்துகளைச் சரிக்கட்டிக் கொள்ளுவதற்குரிய இழப்பு ஆபத்துக் (risk premium) கட்டணமேயாகும். கடன் வாங்குபவர் அளிக்கும் ஈடு அல்லது பிணை காரணமாக வட்டி விகிதம் சில சமயங்களில் குறைகிறது. தவணைத் தேதிகளில் கடனைத் திருப்பித் தராவிட்டாலோ, ஒப்புக்கொண்ட வட்டியை முறையாகச் செலுத்தாவிட்டாலோ, கடன் வாங்கியவரின் சொத்துகளைப் பறிமுதல் செய்துகொள்ளும் உரிமையும் கடன் கொடுப்போருக்கு இருக்கிறது. இவ்விதம், ஈட்டுப் பத்திரங்களை (debentures) வாங்கியிருப்பவர்கள் கம்பெனிகளின் சொத்துகளைக் கைப்பற்ற முயலலாம்; அடைமானங்களை வாங்கியிருப்பவர்கள், அடைமானமாக வைக்கப்பட்ட பொருள்களையே கைப்பற்றிக்கொள்ளலாம். இவ்விதம் கைப்பற்றிக் கொள்ளுதற்கு இவர்கட்கு இருக்கிற உரிமை, கடன் வாராமையால் ஏற்படக்கூடிய இழப்பு ஆபத்துகளைக் குறைக்கின்றன. கடன் தொகையோடு ஒப்பிடுகையில், மிகுந்த மதிப்புடைய சொத்து ஈடாக இருந்தால், கடன் வாங்குவோர் செலுத்தவேண்டிய இழப்பு ஆபத்துத் தவணைக் கட்டண விகிதமும் குறைவாகவே அமைந்திருக்கும்.

இவற்றைத் தவிர, கடன் கொடுக்கையில் இன்னும் சில நிபந்தனைகளும் விதிக்கப்படுகின்றன; கடனைத் திருப்பிக்கொடுக்கும் பொழுது சில கழிவுகளும் தவணைச் சலுகைகளும் அளித்தல், கடன் திருப்பித் தருதற்குரிய செலாவணியை நிர்ணயித்தல், இக் கடனுக்குக் கிடைக்கும் வட்டிமீது எவ்வளவு வரி விதிப்பது என்பதை நிர்ணயித்தல் என்பன இவற்றுள் சில. இத்தகை நிபந்தனைகள், கடன் வாங்கியவர் கொடுக்கவேண்டிய வட்டி விகிதத்தை ஓரளவு பாதிக்கக் கூடும். மிக முக்கியமான இன்னொரு காரணக்கூறு (factor), IOU-ன், விற்பனைக்குரிய தன்மை. இந்த IOU-ஐத் திருப்பிச் செலுத்துதற்கு உரிய தருணம் வருதற்கு முன்னரே, கடன் கொடுப்பவன் இதைப் பிறருக்கு விற்றுவிட முயல்வான். இது எல்லோருக்கும் நன்கு பிரசித்தமான கடன் பத்திரமாயிருந்து பங்குமாற்றிடத்தில் எளிதில் விற்பனையாகக்கூடியதாயுமிருந்தால், எளிதில் விற்பனையாவதற் கியலாத ஈடுகளாகிய அடைமானங்கள், அல்லது சிறு தொழில் நிறுவனங்களின் பத்திரங்கள் முதலியவற்றைவிட இது குறைந்த வட்டி விகிதத்தையே பெறும்.

இறுதியாக, கடன்கள் வெவ்வேறு கால அளவுகட்கு வழங்கப் படுகின்றன. கடனை உடனே திருப்பித் தரும்படி கடன் கொடுத்தவர்கள் நெருக்குவதால் ஏற்படும் பொருளாதார இடர்ப்பாட்டுக் காலங்கள், அல்லது அதிகப்படியான பணவீக்க நேரங்கள் அல்லது கடன் வாங்கிய பணத்தைக்கொண்டு மிகுந்த லாபங்களைச் சம்பாதித்துவிடுவதால் பங்குமாற்றில் ஏற்படும் ஊக வாணிக நிலைகள் (speculations) முதலிய சந்தர்ப்பங்களில், குறைந்தகால வட்டி விகிதங்கள் எப்பொழுதும் அதிகமாகவே இருக்கும். என்றாலுங்கூட, பொதுவாகக் கடனைத் திருப்பிச் செலுத்துதற்கு உரிய நாள் எவ்வளவு அதிகமாகத் தள்ளியிருக்கிறதோ அவ்வளவிற்கு அதிகமாக வட்டி விகிதமும் இருக்கும். காலம் செல்லச்செல்ல, IOU-ன் அங்காடி மதிப்புக் குறையக்கூடும் என்ற ஆபத்துநிலை இருப்பதால்தான் கூடுதலான வட்டி விகிதம் வழங்கப்படுகிறது. குறைந்த காலத்திற்குக் கடன் தரும் ஒருவன், அக் குறிப்பிட்ட கால முடிவில் ஓர் உறுதி செய்யப்பட்ட தொகையை ரொக்கமாகவே பெறமுடியும். ஆனால், நீண்டகாலக் கடன் பத்திரத்தை வைத்திருப்பவன், திடீரெனத் தனக்கு ரொக்கம் வேண்டுமெனக் கருதினால், தன்னிடம் உள்ள பத்திரத்தை ஏதாவதொரு விலைக்கு விற்றுத்தீரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது.

$2\frac{1}{2}$ சதவிகித கன்சோலின் (Consols) விலை 45 ஆக இருந்து, இது $5\frac{9}{10}$ சதவிகித ஊதியமும் தந்தால், ஓராண்டிற்குள் திருப்பித் தரப்பட இருக்கிற $2\frac{1}{2}$ சதவிகித பிரிட்டிக அரசாங்கப் பத்திரம் 97-க்கு

விற்குமென்று நீங்கள் எதிர்பார்க்கலாம். அப்பொழுது, அதை வாங்கியிருப்பவன், 2½ சதவீத வட்டியும், இன்னொரு 3 சதவீதம் கடன் மீட்பிற்காகவும் பெறுவான். இந்த மீட்பு விகிதம் (redemption rate) மிகக் குறைவாகக் குறுகியகால ஈடுபோல அமைந்திருப்பதால், உண்மையில், இந்த அரசாங்கப் பத்திரம் இதற்கு மேற்பட்ட விலேக்கும் விற்கப்படக்கூடும்.

இதுவரை நாம் கண்ட ஆய்வுரைகள், கடன் கொடுப்போர்க்கும் பெறுவோர்க்கும் இடையே தரகர்கள்போல இருந்து செயல்புரியும் ஆயுட் காப்புக் கழகங்கள் (insurance companies), பாங்குகள் (banks) முதலிய நிதி உதவி நிறுவனங்களின் பணிகளே ஓரளவு விளக்குகின்றன. ஒரு பாங்கு தனது செலாவணியை எழுப்பிக்கொள்ளுகிறது; ஆனால், இத்துடன் சேமிப்பு பாங்கு (savings bank) போன்று ஒரு தரகனுகவும் செயல்படுகிறது. தன்னிடம் போடப் பட்டுள்ள பண வைப்புகட்கு (deposits) இது வட்டி தரக்கூடும். ஏனென்ருல், இந்த வைப்புகளெல்லாம் இதற்குத் தரப்பட்ட ஒரு வகைக் கடன்களே ஆகும். அதே சமயத்தில் நடப்புக் கணக்குகளுக்குக் குறைந்த விகித வட்டி கொடுக்கிறது; அல்லது வட்டியே கொடுப்பதில்லே. ஏனென்ருல், இதனுடைய கடனிருப்பு நிலே அதிகமாயிருக்கிறது; அல்லது பணம் போட்டவர் (depositor) தான் போட்ட பணம் அனேத்தையும், குறுகியகால அறிவிப்பில் எப்பொழுது வேண்டுமாளுலும் எடுத்துக்கொள்ள இசைகிறது. ஆனால், உண்மையில், இவற்றில் திரும்ப எடுத்தலேப் (withdrawals) பணம் கொடுத்தலேவிட (payments-in) நாட்கழிந்தே மேற்கொள்ளப்பெறும். இதனல், மிகுதியான தொகைகளே, நீண்டகாலத் தவணேகட்கு, அதிகமான வட்டி விகிதத்தில் பாங்குகள் மறுகடனுகக் கொடுக்கிறது. இத்துடன், குறுகியகாலக் கடன்களாகச் சிறுசிறு தொகைகளே அளித்துத் தம்மிடம் கடன் பெறுவோர் விரும்பும் விதங்களில் கடன் அளிப்பை மேற்கொண்டு, பலன்பெறுகிறது.

பங்கு மாற்று விலேகளின் பட்டியலேப் புரட்டினல், அவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள பெரும்பாலான ஈட்டுப் பத்திரங்கள், (இவற்றின் மொத்த மதிப்பில் இல்லாவிட்டாலும் எண்ணிக்கையிலாவது) கன்சோல்கள்போன்ற, நிலேயான வட்டிக்குரிய பத்திரங்களாயிருப்பதில்லே; இவையெல்லாம், அடிக்கடி மாறுபடுகின்ற இலாபங்களேத் தரக்கூடிய பங்குகளே (shares) ஆகும். நிலேயான வட்டியுடைய ஈட்டை வைத்திருப்போருக்கு அது மாருத பணவருவாயைத் தருகிறது; ஆனால், பங்கிலிருந்து அவர் பெறக்கூடிய வருமானம், அப் பங்கிற்கு அவ்வப்போது அளிக்கப்படும் இலாப ஈவுகளேப் (dividend) பொறுத்தே அமைகின்றது. நிலே வட்டி தரும் ஈடுகள்,

கூடிக் குறைந்து இலாபம் தரும் பங்குகள் இவற்றில் எதை வேண்டு மானுலும் தேர்ந்தெடுத்து ஒருவர் பெறக்கூடுமாதலால், இவ்விரண் டாலும் ஏற்படும் நடைமுறை வருமானம் (இதில் இழப்பு ஆபத்துக் காகக் கொஞ்சத்தை ஒதுக்கிவிடவேண்டும்) ஒரே மாதிரியாக இருக்கு மென்றே நாம் எதிர்பார்க்கவேண்டும். இவற்றிலும், பெரும்பாலான கடன் பத்திரங்களைவிட வணிகப் பங்குகள் அதிகப்படியான இழப்பு ஆபத்து விளைவுகட்கு உட்பட்டவை. வட்டியின் நிலை கிட்டத்திட்ட இதுதான். மேலும், பாங்குகளிடமிருந்தும் பொதுமக்களிடமிருந்தும் நிலையான வட்டிக்குக் (fixed interest) கடன் பெறும் நிறுவனம், இக் கடனைக்கொண்டு தொழிலில் பயன்படுத்தி, ஓரளவு இலாபமும் ஈட்ட வேண்டுமென்று எதிர்பார்க்கிறது. எனவே, குறைந்த வட்டி விகிதம் அதிகமான முதலீட்டுக்கு ஊக்கம் தர முயலுகிறது; கூடுதலான வட்டி விகிதம் இதற்குத் தடையாக நிற்கிறது.

## 2. முதலின் இறுதிநிலை ஆக்கத்திறம்
(The Marginal Productivity of Capital)

தொழில் முனைவர்கள் கடன் வாங்குவானேன்? அவ்விதம் வாங்கும் கடனுக்கு வட்டி செலுத்துதற்கு ஏன் இசைகிருர்கள்? இதற்குரிய வெளிப்படையான காரணம், கடனுக்குத் தாங்கள் செலுத்தும் வட்டியைவிட, அக் கடனைக் கொண்டு முதலீடு செய்து, அதனுல் அதிகப்படியான இலாபத்தைப் பெற்றுவிடலாம் என்று நம்புவதேயாகும். நடைமுறையில் உள்ள வட்டி விகிதத்தில், தான் விரும்பும் அளவிற்கு, ஒரு தொழில் முனைவனுல் கடன்பெறக்கூடு மென்றுல்—பெரும்பாலும் இவனுல் இப்படிப் பெற இயலுவதில்லை— அவன், தனது இறுதிநிலை வருவாய்க்குச் சமமாக, இறுதிநிலைச் செலவு இருக்கும் வரையிலும் உள்ள உச்சநிலைவரை கடன் பெற முயல்வான். 6 சதவிகிதத்தில் உள்ள இறுதிநிலைச் செலவு, இவனுல் வாங்கப்படும் ஒவ்வொரு 100 பவுன் கடனுக்கும், ஆண்டொன்றுக்கு 6 பவுனுக அமையும். இந்தப் பணத்தைக்கொண்டு பெறும் விளைவில் ஏற்படும் உயர்வாக இவனது இறுதிநிலை வருவாய் அமைந்திருக்கும். இந்த இறுதிநிலை வருவாய் இறுதிநிலைச் செலவை விஞ்சியிருக்கும் வரையில், இவன் அதிகப்படியாகக் கடன் பெற்றுத் தனது நிகர இலாபத்தைப் பெருக்கிக்கொள்ளவே முற்படுவான்.

கடன் வாங்கிய பணத்தை ஒரு தொழில் முனைவன் எவ்வாறு பயன் கொள்ளுகிறுன்? மூலப் பொருள்கள், உழைப்பு, இதர நடை முறைச் செலவினங்கள் என்பனவற்றிற்குக் கொடுத்தற்காகச் சில நிறுவனங்கள், சாதாரணமாக நடப்பு முதலைக் (working capital) கடன் வாங்குகின்றன. ஆனுல், தனது தொழில்துறையை விரி

வடையச் செய்வதற்காக ஒரு நிறுவனம் கடன் பெறுவதாக வைத்துக் கொள்ளுவோம். ஒருவேளை, இயல்பான அளவைவிட, மிக அதிகமான இலாபத்தை இந்த நிறுவனம் பெற்றுவரக்கூடும். இந்த நிறுவனம் திறமையாக நிருவகிக்கப்படுவதால், இதில் ஏற்படும் தொழில் விரிவு இன்னும் அதிகமான இலாபத்தை அளிக்கும் என்று கருதப்படலாம்; அல்லது இந் நிறுவனத்தின் உற்பத்திக்குரிய தேவை மிகுந்திருக்கலாம்; இதனால் அப் பொருள்களின் விலையும் உயர்ந்திருக்கலாம். தான் உற்பத்தி செய்யும் பொருள்கட்கு உரிய அடிப்படைத் தேவை மிகுந்தே இருப்பதால், இந்த நிறுவனம் தனது உற்பத்தித்துறையில் புது வகையான பொருளையோ பணியையோ மேற்கொள்ள விரும்பலாம். இப் புது முயற்சி அதிகப் படியான ஊதியத்தை நல்கும் என்று இது கருதலாம்; அல்லது உற்பத்தியின் ஒவ்வோர் அலகுக்கும் உரிய செலவைக் குறைப்பதற்காகப் புதுவகையான உற்பத்தி நிலையங்களையும் பெரிய இயந்திர சாதனங்களையும் நிறுவ விரும்பலாம். இங்ஙனம் மேற்கொள்ளும் ஒவ்வொரு முயற்சியின் மூலமாகவும், இப்பொழுது பெறுவதைவிட அதிகமான இலாபத்தைப் பெறலாம் என்று எதிர்பார்த்தே இந் நிறுவனம் செயல்புரிகிறது. இவ்விதம் கடன் வாங்குதற்கு உரிய அவசியம்--அல்லது இன்னும் சரியாகச் சொல்வதென்றால், எங்கிருந்தோ கிடைக்கும் மிகுதியான உருப்பெறு முதலைப் (free capital) பயன்கொள்ளும் அவசியம்—உற்பத்தி செய்தற்கு நேரம் பிடிக்கிறது என்ற உண்மையிலிருந்தே விளைகின்றன. முதலீட்டைப் போட்டுக் குறிப்பிட்ட காலம் கழித்த பின்னரே உற்பத்தியை எதிர்பார்க்க முடிகிறது. ஓரளவு கால இடைவெளிக்குப் பின்னரே உற்பத்திச் செலவுகளைப் பொருள் விற்பனை வரவின் மூலமாகத் திருப்பிப்பெற முடிகின்றது. விவசாயி ஒருவன், தனக்கு ஏற்பட்ட விவசாயச் செலவுகளைத் திருப்பி ஈடுகட்டுதற்காகத் தனது விளைபொருள் விற்பனையாகும்வரை காத்திருக்கவேண்டும். நெடுங்கால உறுதிச் சொத்துகளை (durable assets) அமைத்தற்காக மேற்கொள்ளும் செலவினங்களைக் (மரங்களை நட்டுப் பேணி வளர்த்தல், கால்நடைத் தொகுதிகளைப் பராமரித்தல்) கொஞ்சம் கொஞ்சமாகவே திரும்பப் பெறமுடியும்; அதாவது, இச் சொத்துகள் பயன்தரும் காலமெல்லாம் (working life), இவற்றால் ஏற்படும் உற்பத்தியிலிருந்து உரிய இலாபத்தைத் திரும்பப் பெற்றுச் செலவினத்தை நாளடைவில் சரிக்கட்டிக்கொள்ள முடியும்.

வட்டி செலுத்துதற்குரிய சாத்தியமானது மிகுதியான உண்மை மூலதனத்தை (real capital) உபயோகிப்பதால் ஏற்படும் உயர்ந்த ஆக்கத்திற முறைகளால் உண்டாகிறது. செருப்புத் தைக்கும் தொழிலை எடுத்துக்கொள்வோம். இங்கு, எல்லாத் தொழிலாளர்

களும் கையாலேயே செருப்புத் தைப்பதைவிட, இவர்களில் சிலரைச் செருப்புத் தைக்கும் இயந்திரங்களை நிறுவுதற்கும் கட்டடத்தைக் கட்டுதற்கும் முதலில் பயன்படுத்திக்கொண்டால், இவற்றின்மூலமாக உற்பத்தியாகும் செருப்புகளின் அளவும் மிகுதிப்படும். (மேலும், சிலர் ஒரு துறையிலேயே சிறப்புத் தேர்ச்சி கொண்டு உழைத்தால் அதனாலும் உற்பத்தி பெருகும். உதாரணமாக, சிலர் இயந்திரங்களைச் செய்வதிலும், சிலர் கட்டடம் கட்டுவதிலும், இன்னும் சிலர் இதர வேலைகளிலும் ஈடுபடலாம்.) பாசன வசதிகளை உண்டாக்கிக்கொள்ளும் விவசாயிகள் மிகுந்த மகசூல் பெறுகிறார்கள். மலையில் உள்ள இரயில் பாதையில் ஏற்படும் செங்குத்தான பகுதியை நீக்கிவிட்டு, மலையைக் குடைந்தே பாதை அமைத்துவிட்டால், இரயிலை ஓட்டுவதற்குரிய நிலக்கரி, இதர செலவுகள் ஆகியன குறையும். ஆனால், இத்தகைய முதலீடுகள் எல்லாம் உடனடியாக முழுப்பலனும் தருவதில்லை. நீண்டகாலத் தவணையில்மட்டுமே எதிர்கால இலாபங்களை நாளடைவில் தருகின்றன.

அதிகமான மூலதனத்தைப் பயன்படுத்திக்கொள்ளும் எல்லா முறைகளும் (அல்லது சுற்றுவழி முறைகள் எல்லாம்) மிகுந்த உற்பத்தியைத் தந்துவிடுவதில்லை. நேரடியான பழைய முறைகளில் போடப்பட்ட மூலதனங்களே அதிகமான இலாபங்களை அளித்துள்ளன. சில திட்டங்கட்குரிய செலவுகள் மிகுதியாக இருக்கும். இவற்றிற்கு ஏற்படும் செலவுகளைச் சரிக்கட்டுவதென்றால், வட்டியே இல்லாமலிருந்தால்தான் முடியும். இத்தகைய திட்டங்களை மேற்கொள்ளுதல் சாத்தியமில்லை. மேலும், நாட்டில் தொழிலாளர் அளவும் ஏனைய சாதனங்களும் ஒரு குறிப்பிட்ட அளவிற்கே வரையறுக்கப்பட்டிருந்தால்—இவர்களில் ஒரு சிலரையே, திட்டச் செயல்முறைகளுக்கு அளிக்கச் சமுதாயத்தால் முடியும்; பிறரெல்லாம் ஏனைய அன்றாடத் தேவைகளை ஆக்கி அளித்தற்குத் தேவைப்படுவர். என்றாலுங்கூட, இவற்றுள் மிகச்சிறந்த நலம்தரும் திட்டங்களைத் தெரிவுசெய்தே ஆகவேண்டும். இங்ஙனம் தெரிவு செய்ய வைப்பதுதான் வட்டியின் தொழிலாகும். இந்த வட்டிமுறையானது—வட்டிக்குக் கட்டாமல், இதர செலவுகட்கு ஈடுகட்டவும் முடியாமல், எழுப்பப்படும் திட்டங்களைக் கைவிடச் செய்துவிடுகிறது. ஒரு சோசலிசமுறை அரசு (இதில் உற்பத்தித் துறையில் தனியார் சொந்துகளுக்கே இடமளிக்கப்படவில்லை) ஒரு பெயரளவு (notional) வட்டி விகிதத்தையே பயன்கொள்ளவேண்டும். எவ்வெத் திட்டங்கள் மிகுந்த பலனைத் தரக்கூடியன, எவ்வெவற்றால் அதிகப்படியான வருவாய் கிட்டும், எவ்வெவற்றிற்குச் சலுகை தந்து முதன்மை அளிக்கவேண்டும் என்பனவெல்லாம் கணக்கிட்டு முடிவுசெய்ய, மேற்குறித்த வட்டி விகிதத்தைப் பயன்கொள்ளவேண்டும். (ஏனைய கட்டாய அலுவல்கட்

குரிய திட்டங்கட்கு—உதாரணமாக, பாதுகாப்பு—இவ்வாறு கணக்கிட முடியாது. ஏனென்றால், இவற்றில் முதலீடு செய்வதால் ஏற்படும் உபரி உற்பத்தியளவைப்பற்றிச் சரியாகக் கணிக்கமுடியாது.)

புதிய முதலீடுகளில் (இப்பொழுதைய சொந்தக்காரர்களிடம் இருந்து வாங்கக் கூடிய ஈடுகள், அல்லது இதர சொத்துகளிலிருந்து வேறுபட்ட முதலீடுகள்) வந்து சேரும் உருப்பெறு முதல் (free capital) அதிகமான விளைவைத் தரும் என எதிர்பார்க்கப் பட்டால், இன்னும் அதிகமாக வந்துசேரும். முதலீடு செய்யப்படும் ஏதாவதொரு துறையில் நல்ல இலாபம் கிடைக்கும் வாய்ப்பிருக்கு மாறல், இத் துறையில் முதலீடு செய்யப் பல நிறுவனங்கள் முனையும்; அல்லது ஏற்கெனவே உள்ள நிறுவனங்கள் இன்னும் அதிக முதலீடு செய்ய விரும்பும். இவ்விதமாக, அண்மையிலோ அல்லது நாட் கழித்தோ எதிர்பார்க்கப்படும் இலாபம் அல்லது முதலின் இறுதிநிலை ஆக்கத்திறம், இம் முதலீடு எளிதாக நுழையக்கூடிய இதர துறை களின் அளவுகளோடு சமமாக்கப்பட்டுவிடும். உதாரணமாக, செருப்புத் தயாரிப்புத் தொழிலில் எதிர்பார்க்கப்படும் இலாப விகிதம் அதிகமாக இருக்குமாறல், இத் தொழிலில் பல தொழிற்சாலைகள் ஈடுபடும். இதனல் உற்பத்தி பெருகும். ஏனைய துறைத் தொழில்களில் இருப்பதைவிட (இழப்பு ஆபத்துக்குரிய கழிவு நீங்கலாக), செருப்புத் தைக்கும் தொழிலில் உள்ள முதலின் இறுதிநிலை ஆக்கத்திறம் அதிகமாயிருக்கும் வரையில் இந்த அதிக உற்பத்தி, செருப்புகளின் விலையைக் குறைக்க முற்படும்.

இந்த விளைவை, செலவுகளில் ஏற்படும் உயர்வால் அதிகச் சீக்கிரத்தில் கொணர முடியும். உதாரணமாக, வீடு கட்டி வாடகைக்கு விடுவதில் அதிக இலாபம் பெறும் வாய்ப்பு ஏனையவற்றைவிட இருக்கிறதென்றல், இத் துறையில் வீடுகட்டி முடிப்பதற்கு நீண்ட நாட்களாகும்; கட்டப்படும் வீடுகளின் எண்ணிக்கையில் ஏற்படும் அளவு மிகுதி கணிசமாக வாடகைகளைக் குறைத்துவிடக்கூடும். வீடு கட்டி முடிக்கும் வேக விகிதம் இருமடங்கானல் (முன்பிருந்த 2 சதவிகிதத்தைவிட 4 சதவிகித உயர்வு எனக் கொள்வோம்) இலா பங்களின் விகிதத்தை இயல்பான நிலைக்குக் கொணரும்வரை கட்டடக் கூலி விகிதங்களும் இதர கட்டடச் செலவுகளும் அதிகமாகக்கூடும்.

ஆனல், சர்வாதீனமுறையில் சர்வாதீனர்கட்கு உரிமையாக உள்ள சொத்துகள், நடைமுறையில் உள்ள இலாப விகிதத்தைவிட அதிகப்படியான ஊதியத்தைத் தரும் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். ஏனென்றல், இம் முறையில் வந்து விழும் உருப்பெறு முதலீடு பிற துறைகளில் சென்று புகமுடியாது.

இன்னொரு குறிப்பும் உண்டு. அதாவது, புதிய பொற்சுரங்கங்கள், புதுவகையான தொழில்கள் முதலிய சில முதலீடுகளிலிருந்து எதிர் பார்க்கப்படும் இலாபம் நிரந்தரமற்றதாக இருக்கலாம். ஆனாலும், இதில் முதலீடு செய்பவர்கள், இலாப நஷ்டம் பெறுவதற்குரிய பல் வேறு சாத்தியக்கூறுகளை நன்கு ஆய்ந்து தெளிந்து முடிவு செய்ய வேண்டும் இலாப நட்டக் கூறுகளை ஆய்ந்து பார்க்கையில், ஏனைய தொழில் முதலீடுகளைவிட இதில் வரக்கூடிய இலாபத்தின் விகிதம் அதிகமாகவே இருக்கும் என்று துணியவேண்டும். சில சமயங் களில் சூதாட்டத்தை விரும்புவோர்போல, அதிக வருவாய் கருதி, ஆசைப்பட்டு முதலீடு செய்வதாகவும் அமையலாம்; அதிகப்படியான பெரிய இலபத்தை எதிர்நோக்கித் தம் முதலீட்டில் ஒரு பகுதியையோ அல்லது முழுவதையுமோ இழக்கத் தயாராகவும் இருக்கலாம்.

அதிகப்படியான முதலீட்டு அளவு, முதலின் இறுதிநிலை ஆக்கத் திறத்தைக் குறைக்க முற்படுவதால், முதலீடு தேடிநிற்கும் உருப் பெறு முதலின் மிகுதியான அளிப்பு விகிதமானது, எதிர்பார்க்கப்படும் இலாப விகிதத்தையும் வட்டி விகிதத்தையும் குறைக்க முற்படுகிறது. இதற்குரிய காரணத்தை விளக்கிவிட்டு, இந்தப் பகுதியை முடிக் கிறேன்.

மேலும் மேலும் அதிகப்படியான மூலதனம் ஒரு குறிப்பிட்ட தொழிலில்மட்டும் முதலீடாக்கப்பட்டால் உற்பத்தி மிகும்; உற்பத்திச் செலவுகள் குறையும்; இலாப விகிதங்கள் குறைக்கப்படும். ஆனால், நுகர்வோரின் விருப்பங்களுக்குத் தக்கபடி, பல்வேறு துறைகளில் பரவலாக அமையும் விதமாக, அதிகமாக முதலீடு செய்யப்படும் மூல தனம், பொதுவான இலாப விகிதத்தைக் குறைத்துவிடுகிறதே— இது ஏன் ? இந்த மூலதனம் செருப்புகளின் விலையைக் குறைக்கிற தென்றால், இதற்குச் சமமாகக் கப்பல்களின் விலையையும் குறைக்கும்; அரக்குத் துண்டுகளின் விலையையும் குறைக்கும். விலைகள் குறையுமா குறையாதா என்பதெல்லாம் நிதித்துறைக் கொள்கையைச் (monetary policy) சார்ந்திருப்பதாகும். ஒருவேளை குறைந்துவிட்டால், உற்பத்தியாளர்களின் பண்டங்களுக்குரிய விலைகளும் குறையும்; [ஏனென்றால், முதலீடு என்பது முதற்கருவிப் பொருள் (capital goods) தொழிற்சாலைகளிலும் செய்யப்படலாம் அல்லவா] இதைப் போல நெடுங்கால நுகர்வுக்குரிய பொருள்களின் (consumer's goods) விலையும் குறையும்.

மூலதனத்தின் அளவு பெருகும்பொழுது, முதலின் இயல்பான இறுதிநிலை ஆக்கத்திறம் குன்றிப்போவதற்குரிய காரணம் என்ன வென்று நாம் விளக்கவேண்டும். குறைந்துசெல் விளைவு விதியைப்

பயன்கொள்வதால், இதற்குரிய காரணத்தைச் சொல்லமுடியாதது போல் முதலில் தோன்றலாம். ஏனென்றால், உருப்பெரு முதலை எந்த வடிவத்தில் வேண்டுமானாலும் மாற்றிக்கொள்ளலாம்—ஏதாவது ஓர் உற்பத்திச் சாதனத்தை வாங்கவோ, அல்லது வாடகைக்குப் பெறவோ உபயோகித்துக்கொள்ளலாம். ஏனென்றால், உற்பத்திக்குரிய ஓர் இயல்பான சாதனம், அதனோடு தொடர்பான இதர சாதனங்களைக் காட்டிலும் மிகுதியாகிவிடும் என்ற தொழிலைப்பற்றி நாம் இங்குப் பேசவில்லை.

முக்கியமான விளக்கம் என்னவென்றால், சில உற்பத்திச் சாதனங்களை அதிகப்படுத்தவே முடியாது; அல்லது அவற்றை உயர்ந்த செலவுகளைச் செய்தே மிகுதிப்படுத்த முடியும். வீடு கட்டுவதற்குரிய சிறந்த மனைக்கட்டிடங்கள் மிகக் குறைவாகவே இருக்கும்; வளமான நிலத்தின் பரப்பும் குறைவாகவே இருக்கும்; இதைப் போலவே, நாம் விரும்பிய நொடியிலேயே இயந்திரம்போன்று உழைக்கும் மனிதர்களையும் அடிமைகளையும் உண்டாக்க முடியாதாகையால், மொத்த உழைப்பாளர்களின் தொகையும் ஓர் அளவிலேயே அமைந்திருக்கும். கச்சாப் பொருள்கள் (raw materials) பலவற்றின் உற்பத்தியை மிகுதிப்படுத்தவேண்டுமானால், குறைவான வளமுடைய அளிப்புக் கேந்திரங்களுக்குப் (sources of supply) போகவேண்டும்; அல்லது எளிதில் சென்றடைய முடியாத இடங்கட்கோ, கடினமான வேலை வாங்கும் தளங்கட்கோ செல்லவேண்டும். இதை இன்னும் வேறுவிதமாகச் சொல்வதென்றால், அதிகப்படியாகச் செலவழித்தே இந்தக் கச்சாப்பொருள்களைப் பெறவேண்டும். மேலும், ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் நிலத்தில் இடப்படும் உரமும், இதர அபிவிருத்தி வேலைகளும் குறைந்த விளைவையே தருகின்றன.

இதன் விளைவு என்னவென்றால், உபயோகிக்கப்படும் மூலதனத்தின் அளவில் ஏற்படும் உயர்வு, உண்மையில் பல்வேறு இயக்க சாதனங்களின் அளவு விகிதங்களில் ஒரு மாற்றத்தை உண்டாக்கி விடுகிறது. ஒவ்வொரு தனிச் சாதனத்தையும், இணையான வசதியோடு உயர்த்தக்கூடுமென்றால், பல சாதனங்களின் தொகுப்புகளால் அவற்றால் கிடைக்கவேண்டியதைவிட குறைந்த விளைவே கிடைக்கின்றது. இந்தக் காரணத்திற்காகவே, எந்தக் குறிப்பிட்ட ஒரு சமயத்திலும் உள்ள முதலீட்டுக்குரிய இறுதிநிலை வருமானமானது (முதலீடு செய்யப்படும் ஒவ்வொரு 100 பவுனுக்கும் உரிய வட்டி விகிதத்தால் கணக்கிடப்பட்டது) குறைந்த மூலதனம் இருந்தால் அதிகமாயிருக்கும்; அதிகமான மூலதனம் இருந்தால்\ குறைவாக இருக்கும்.

கால அடைவில், அறிவியல் வளர்ச்சியும் புதிய கண்டுபிடிப்புகளின் வருகையும், மூலதனத்தை உபயோகிக்கும் பல புது வழிகளை வெளியிட்டுவருகின்றன. முதலாளித்துவ உற்பத்தி முறைகளால் அதிகமாக உபயோகிப்பதால் உற்பத்தியைப் பெருக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. இந்த முயற்சிகள், வட்டிவிகிதத்தை உயர்த்திவிட முனைகின்றன. இவற்றின் செல்வாக்கு, வட்டி விகிதத்தைக் குறைத்தே வைக்கக்கூடிய மூலதனக் குவிப்பால் ஏற்படக்கூடிய செல்வாக்கைவிடக் குறைவாகவோ அதிகமாகவோ இருக்கலாம். கிரேட் பிரிட்டனிலும் பல மேலைநாடுகளிலும் கடந்த ஐம்பது அல்லது நூறு ஆண்டுகளில் மூலதன அளவில் பெரும் உயர்வுகள் ஏற்பட்டுள்ளன. என்றாலும், இம் மூலதனங்களைப் பயன்கொள்ளுதற்குரிய புதுப்புதுத் தொழில் முயற்சிகள், வட்டி விகிதத்தில் எவ்வித நிரந்தர வீழ்ச்சியும் ஏற்படாமல் தடுத்துவிட்டன.

## 3. அரசாங்கங்களும் நுகர்வோரும் கடன்வாங்குதல்

கடந்த பகுதியில் தொழில், வாணிகம் இவற்றிலிருந்து ஏற்படும் கடன் தேவைகளைப்பற்றி விவாதித்தேன். இந்தப் பகுதியில் தேசியமயமாக்கப்பட்ட தொழில்களைப்பற்றிச் சொல்ல விழைகின்றேன். இத் தொழில்கள் இலாபம் சம்பாதிக்கவேண்டுமென்ற நோக்கோடு செயல்படும்வரைக்கும, இவற்றில் அதிகப்படியாக முதலீடு செய்யப்படுவதால் கிடைக்கும் வருமானம், இவை வாங்கிய கடனுக்குரிய வட்டிக்காவது கட்டிவருமென்றால்தான், இவை கடன் வாங்குதற்கு முற்படும்.

இலாபம் சம்பாதிக்க வேண்டுமென்ற நோக்கில்லாத சிலருக்கும் கடன் தேவை இருப்பதுண்டு. அரசாங்கம், இதர ஸ்தலஸ்தாபனங்கள் முதலியவற்றை இவ்வகையில் சேர்த்துக்கொள்ளலாம். இவ்விதம் வாங்கும் கடன்களுக்கு இலாபம் ஏதும் காட்டவேண்டிய அவசியமேதும் இவற்றிற்கு இல்லை; வட்டிச் செலவுகளையும், திரும்பச் செலுத்துதலையும் வரிவிதிப்பின்மூலமாகவோ அல்லது புதுக் கடன்களை வாங்குவதன் மூலமோ சரிக்கட்டிக்கொள்ள முடியும்.

போர்க்காலத்தில், அரசாங்கத்தால் வாங்கப்படும் கடனின் அளவு மிகலாம். கடந்த உலகப் பெரும் போர்க்காலத்தில்மட்டும் பிரிட்டிஷ் அரசாங்கம் 16 மில்லியர்டு பவுன்கட்குமேல் கடனைப் பெற்றது. இத் தொகை 1939 ஏப்ரல் முதல் தேதி முதல் 1946 மார்ச்சு 31ஆம் தேதிவரைக்குமான, ஏழு நிதியாண்டுகளில் ஏற்பட்ட மொத்தச் செலவினங்களில் கிட்டத்தட்டப் பாதி அளவாகும்.

அமைதிக் காலத்திலும் அரசாங்கங்கள், தமது அபிவிருத்தித் திட்டங்கட்காகக் கடன் பெறுவதுண்டு. இக் கடனைக்கொண்டு செய்யப்படும் பல பொது முதலீடுகள் (உதாரணமாக, சாலை அபிவிருத்தி, பள்ளி அல்லது கல்விக்கூட அமைப்பு) எவ்விதப் பண வருவாயும் தராமலிருக்கலாம்; ஆனால், இம் முதலீடுகளால் சமுதாயத்திற்கு ஏற்படும் நன்மையால் விளையும் மதிப்பு, இத்தகைய செலவுகளை நியாயமாக்கிவிடுகிறது.

தொழில் சாராத நடவடிக்கைகட்காகக் கடன் வாங்குவது, சில நிறுவனங்களிலும் நபர்களிடமும் நடைமுறையில் உள்ளது. வாடகை கொடுத்து இடர்ப்படுவதற்குப் பதிலாகச் சொந்தத்திலேயே வீடு கட்டிக்கொள்ள ஒருவன் கடன் வாங்கலாம். புதிதாகக் குடித்தனம் அமைக்கும் தம்பதிகள், தம் வீட்டுக்கு வேண்டிய தட்டுமுட்டுச் சாமான்கள் முதலியவற்றைத் தவணைக் கொள்முறையில் (hire purchase) வாங்குவதற்குப் பதிலாக, ரொக்கத்திற்கே வாங்குவதற்காகக் கடன் பெறலாம். இன்னும் சிலர், சில எதிர்பாராத செலவினங்களைச் சமாளிப்பதற்காக (நோய்வாய்ப்பட்டாலோ, வருங்காலத்தில் அதிகச் சம்பாத்தியம் பெறவேண்டுமென்பதற்காக இப்பொழுது செலவழிக்க நேர்ந்தாலோ) கடன் வாங்கும்படி நேரிடலாம்.

இங்ஙனம் ஏற்படும் கடன் தேவைகளெல்லாம், தொழில் வாணிக முயற்சிகளுக்கு ஏற்படும் கடன் தேவைகளுடன் போட்டியிடுகின்றன. ஏனைய நிலைகள் சமமாயிருப்பின், எந்த ஒரு துறையிலும் அதிகமாக ஏற்படும் கடன் தேவை, வட்டி விகிதத்தையும் அதிகப்படுத்தவே வழி செய்யும். தொழில் சாராத நடவடிக்கைகட்காகக் கடன் வாங்குவோர் செலுத்தவேண்டிய விகிதங்கள், தொழில் வாணிகத் துறையில் உள்ள முதலின் எதிர்பார்க்கப்படும் இறுதிநிலை ஆக்கத்திறத்தைச் சார்ந்தே அமையும். மூலதனப் பற்றுக்குறையும், முதலின் இறுதிநிலை ஆக்கத்திறத்தில் உயர்வும் கொண்டுள்ள வளர்ச்சி குன்றிய நாடுகளில், வட்டி விகிதங்கள் உயர்ந்திருப்பதற்குரிய காரணம் இதுதான்; வளமான காலத்தில் மந்த காலத்தைவிட அதிகமான வட்டி விகிதம் இருப்பதற்கும் இதுவே காரணம்.

## 4. சேமிப்புகள்

கடனாக அளிக்கப்படும் மூலதனத்தின் வினியோகம் பெரும்பாலும் பாங்குச் செலாவணியிலிருந்தே வருகிறது. இதுகூட மிகச் சமீபத்தில்தான் அதிகப்பட்டுள்ளது. இன்னொரு வகை வினியோகமூலம், சேமிப்பு ஆகும். எல்லாச் சேமிப்புகளும் கடனாக அளிக்கப்படுவதில்லை. சில நேரடியாக முதலீடு செய்யப்

படுகின்றன; உதாரணமாக, சாலைகள் இதர நிலையான சொத்து களுக்காக அரசாங்கம் செலவிடுதல், கம்பெனிகள் தமது பிரித்தளிக்கப் படாத இலாபங்களைத் திரும்பச் செலுத்துதல் (plough back), தனி நபர்கள் தமக்காகச் சொந்த வீடு கட்டிக்கொள்ளுதல் என்பனவற் றைச் சொல்லலாம். மேலும், சில சேமிப்புகள், 'பழைய' ஈடுகளை வாங்குதற்குப் பயன்படுகின்றன; அல்லது ரொக்க இருப்பு களாக வைத்துக்கொள்ளப்படுகின்றன. இந்தப் பகுதியில் சேமிப்பு களின் மொத்த அளிப்பைப்பற்றி ஆராயலாம்.

சேமிப்புகளை அரசாங்கமோ, இதர பொதுத் துறைகளோ திரட்டலாம்; அல்லது நிறுவனங்களோ, தனி நபர்களோ சேர்க்கலாம்.

அரசாங்கத்தின் செலவுகளைப் பொதுவாக இரு துறையாகப் பிரிக்கலாம் ; நடைமுறைத் தேவைகளுக்காகச் செய்யப்படும் நடைமுறைச் செலவு என்பது ஒன்று; அபிவிருத்தித் திட்டங்கள் இதர முயற்சிகளுக்காகச் செய்யப்படும் மூதலீட்டுச் செலவு (capital expenditure) என்பது மற்றொன்று. இப் பகுப்பை ஒரு பொது வரையறையாகவே கொள்ளவேண்டும். அரசாங்கத்தின் சாதாரணச் செலவுகளைக்கூட (அதாவது, புதுக் கட்டடங்கள், சாலை அபிவிருத்தி முதலிய நிலையான இருப்புகள்) ஒரு வகையில் முதலீடு என்றுதான் அழைக்கவேண்டும். சமுதாய மக்களின் உடல் நலச் செம்மை, கல்வி வளர்ச்சி முதலியவற்றிற்காகச் செலவிடப்படுவனவற் றையும் இதோடு சேர்த்துக்கொள்ளலாம். இங்ஙனம் செய்யப்படும் செலவுகளால் சமுதாய மக்களின் திறமையைப் பெருக்கி, எதிர்கால ஆக்கத்திறத்தை மிகுதிப்படுத்த உதவலாம்; இதோடு வெளிப்படை யாக இருக்கும் நிலையான சொத்துகளையும் அதிகப்படுத்தலாம். எனவே, இத்தகைய செயல் முறைகளையும் முதலீட்டுக்கு இணை யாகவே கருதவேண்டும். ஆராய்ச்சி அலுவல்களுக்கு ஆக்கம் தருதற்காக மேற்கொள்ளப்படும் பொதுச் செலவுகளுக்கும் இக் கருத்துப் பொருந்தும்.

இன்னொரு பகுதியில், அரசாங்க வருமானங்களில் பெரும் பாலன, வரிகளாகவும் மரணத் தீர்வைகளாகவும் பெறப்படுகின்றன. இவ் வரிகளெல்லாம் மூலதனத்திலிருந்தே செலுத்தப்படுகின்றன. வரி செலுத்துபவன் தனது சொத்துகளில் சிலவற்றை வரி செலுத்து தற்காக விற்றுவிடுகிறான்; இத்தகைய சேமிப்புக் குலைப்பால் (dissaving) இவனது சொத்தை வாங்குவோரது புதிய சேமிப்புகளின் இணையான அளவை நீக்கிவிடுகிறான். கிரேட் பிரிட்டனில் 1957-61 ஆண்டுகளில், முதல்மீது விதிக்கப்பட்ட வரியின் அளவு, சராசரியாக 213 மில்லியன் பவுன்கள் எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

ஓர் அரசாங்கத்தின் வரவுசெலவுத் திட்ட உபரி அல்லது வரவு செலவுத் திட்டப் பற்ருக் குறையையே, அதன் சேமிப்பு அல்லது சேமிப்புக் குலேவிற்குரிய பாரம்பரிய முறையாகக் கருதுகிரேம் அரசாங்கத்தின் சாதாரணச் செலவைவிட (உண்மையில் முதலீடாக அமையும் சில வகைச் செலவினங்களேயும் சேர்த்து) அதன் வருவாய் (மூலதனத்திற்கு விதிக்கப்படும் வரி உட்பட) மிகுதியாக இருந்தால், இந்த மிகுதியை வரவு செலவுத் திட்ட உபரித்தொகை என்று அழைக்கின்ரேம். இந்த உபரியானது பொது முதலீட்டுக்குக் கிடைக்கிறது; சமுதாயத்தின்மீது அரசாங்கத்தால் விதிக்கப்பட்ட கட்டாயச் சேமிப்பு முறையை இது வெளியிடுகிறது. இதற்கு எதிர் விகிதமாக, வருமானத்தைவிட இதன் சாதாரணச் செலவுகள் மிகுதிப்பட்டால், இச் செலவு மிகுதியை வரவு செலவுத் திட்டத்தின் பற்ருக்குறை என்கிரேம். இந்தப் பற்ருக்குறையைச் சரிக்கட்டவும் பிரத்தியேகமான இதர முதலீட்டுச் செலவுகட்காகவும் அரசாங்கம் கடன் வாங்கவேண்டியதிருக்கும்.

இதைப்போலவே ஸ்தலஸ்தாபன ஆட்சித் துறைகள் எல்லாம் மொத்தமாகச் சேர்த்துக் கணக்கிடப்படுகையில் உபரியையோ பற்ருக்குறையையோ காட்டக்கூடும்.

தொழிலாளிகள், தொழிலதிபர்கள் (இங்கிலாந்தில் உள்ளதைப் போலச் சொந்தத் தொழில் செய்வோர்) ஆகியோரை எல்லாம் தேசீய ஆயுட்காப்பு நிதிக்கோ, அல்லது வருங்கால வைப்பு நிதிக்கோ (provident fund) தாம் பெறும் ஊதியத்தின் ஒரு பகுதியை செலுத்தும்படி அரசாங்கம் கட்டாயப்படுத்தலாம். இந்த நிதிகளும் ஓராண்டில் உபரியையோ பற்ருக்குறையையோ காட்டலாம்.

தேய்மானச் செலவுகட்காக ஒதுக்கப்படுதல், வரி செலுத்துதல். இலாப ஈவுகளும் வட்டியும் கொடுத்தல் முதலியவற்றிற்கெல்லாம் போக, எஞ்சியிருக்கும் பகிர்ந்தளிக்கப்படாத இலாபங்களே (பொது நிறுவனங்கள்) கம்பெனிகளின் நிகரச் சேமிப்பாகும். மேற்குறித்த துடன், சரக்கு இருப்புகளே எப்போதும் குறையவிடாமல் ஒரே சீராகப் பேணிவரும் செலவுகட்கும், உற்பத்தி முறையில் செலவிடப்பட்ட மாரு முதலேச் சரிக்கட்டுதற்கும் போக எஞ்சிய நிகரச் சேமிப்பையே கணக்கிடவேண்டும். இலாபங்களிலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகை, வரிகள், வட்டி, இலாப ஈவு முதலியவற்றிற்காக ஒதுக்கப்பட்டிருந் தாலும், அத் தொகை செலவிடப்படாமல் இருந்தால் அதையும் கம்பெனிகள் தற்காலிகமாக உபயோகப்படுத்திக் கொள்ளுகின்றன.

தமது நடைமுறைச் செலவுகட்காக, தமது சொத்துகளில் சிலவற்றை விற்றுவிடுபவர்களின் சேமிப்புக் குலேவைக் கழித்தது

போக எஞ்சும் மொத்தச் சேமிப்பையே ஒருவருடைய சொந்தச் சேமிப்பு என்கிறோம்.

போருக்கு முன்னர், நாட்டின் மொத்த நிகரச் சேமிப்பில் பாதிக்கு மேல் தனி நபர்களே சேமித்தனர்; கம்பெனிகளின் சேமிப்பெல்லாம் பாதிக்குக் குறைவுதான். பொதுத்துறையில் கிட்டிய சேமிப்பு மிகக் குறைந்த அளவே இருந்தது; இதுவும் சில ஆண்டுகளில் இல்லை. போருக்குப் பிந்திய சில ஆண்டுகளில் தனி நபர்களது சேமிப்புகள் மிகமிகக் குறைவாக இருந்தன; இச் சமயத்தில், அரசாங்கத்துறைகளில் வரவு செலவுத் திட்ட உபரிகளின்மூலமாகச் சேமிப்புகள் கிட்டின. என்றாலுங்கூட, 1952-லிருந்து மொத்தச் சேமிப்பில் தனி நபர் அளிக்கும் பங்கு அதிகரித்துக்கொண்டே வந்திருக்கிறது. இது, 1960, 1961ஆம் ஆண்டுகளில் கணிசமாகக் கூடியிருக்கிறது. கம்பெனிகளது சேமிப்பு வேகம் குறைந்து, அரசாங்கத்துறை சேமிப்பும் இறங்குமுகமாக இருந்தபோதிலும்கூட, தனி நபர் சேமிப்பில் ஏற்பட்ட இந்த உயர்வு, தேசிய வருமானத்தில் சேமிப்பின் வீதாசாரத்தைக் குறிப்பிடத்தக்க அளவுக்கு உயர்த்தியிருக்கிறது. இத்தகைய போக்கை நம்பிக்கைக்குரிய அபிவிருத்தியின் அடையாளமாகக் கூறலாம். உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் முதலீடு பெருக உதவும். உள்நாட்டில், பிரிட்டனின் உற்பத்தித் திறத்தைப் பெருக்கும் வகையில் அதிகமான முதலீட்டிற்கு ஊக்கம் தரும்; வெளிநாட்டில், வளர்ச்சி குன்றிய நாடுகளின் பொருளாதார நலத்திற்கு உதவும் வாய்ப்புகளை நல்கச் செய்யும்.

திட்டமிட்டுச் சேமிக்கப்படும் எல்லாத் தொகைகளையும் முதலீடுகளில் பயன் கொள்ளலாம் என்று கொள்ளுவோம். அப்படியானால் சேமிப்புகளின் மொத்த அளவை நிர்ணயிப்பது எது?

இந்த நிர்ணயிப்பில் சமுதாயக் கட்டுக்கோப்பு முறை (Social Frame work) சிறப்பிடம் பெறுகிறது. சிக்கன வாழ்வைப் பாராட்டும் சமுதாயத்தில், சேமிப்பு வங்கிகள், வீடு கட்டும் கழகங்கள், பங்கு மாற்று நிலையங்கள் என்பன, சேமிக்கப்படும் பணத்திற்குரிய காப்பிடங்களாகப் போற்றப்படும் சமுதாயத்தில், அரசாங்கமே சொத்தைக் கவர்ந்துகொள்ளுதல், கொள்ளைக்காரர்களாலும் உள்நாட்டுப் போராலும் உடைமைகளைப் பறித்துக்கொள்ளுதல் முதலிய கொடுமைகள் நிறைந்த புராதனமான, நிலையற்ற சமுதாயக் கட்டுக்கோப்பைவிட, அதிகமான பாதுகாப்பை மக்கள் உயிருக்கும் உடைமைக்கும் அளிக்கும் சமுதாயத்தில், அதிகமாகச் சேமிக்கும் வாய்ப்புகள் மல்கியுள்ளன என்பது தெளிவாகும்.

வட்டி விகிதமும் சேமிப்பு நிர்ணயிப்பில் ஓரிடம் பெறுகிறது. ஏனைய விலைகளைப்போல வட்டி விகிதமும் அதிகமாயிருந்தால்

மிகுதியான சேமிப்பும், குறைவாயிருந்தால் குறைவான சேமிப்பும் கிடைக்க உதவும். ஆனல், அரசாங்கமோ நிறுவனங்களோ சேமிக்கும் தொகையை வட்டி விகிதங்கள் உண்மையில் ஓரளவே பாதிக்கின்றன. ஏனென்றல், ஆயுட்காப்பு நிதிகளால் சேமிக்கப் படும் அளவானது, இவற்றிலிருந்து பணம் பெறும் ஓய்வு உதவி யாளர்கள், வேலையில்லாதவர்கள், நோயாளிகள் முதலியோரைச் சார்ந்து அமைகிறதேயன்றி, வட்டி விகிதத்தைச் சார்ந்து அமைவ தில்லை. ஆனலும், மிக அதிகமான வட்டி விகிதங்கள் பல தனி நபர்களை, உடனடியாகச் செலவழிக்கவிடாது, எதிர்கால வரவு மிகுதி நோக்கிச் சேமிக்குமாறு வலுவில் தூண்டும் என்பதில் சந்தேகமில்லை. இதைப்போல, மிகக் குறைந்த வட்டி விகிதங்கள், சில முதியவர்களை, தமக்கு வேண்டிய ஆண்டுத் தவணை உதவிகள் (annuities) வாங்குதற்காகத் தம்மிடம் உள்ள வருமானம் நல்கும் சொத்துகளை விற்று மூலதனத்தையே உபயோகப்படுத்திக்கொள்ளு மாறு தூண்டும் என்பதிலும் சந்தேகமில்லை. உதாரணமாக, 50 வயதுள்ள ஒருவர், தம்முடைய சொத்துகளுக்கு 2 சதவிகித வட்டியே பெற முடியுமென்றல், அவற்றை விற்றுத் தனது எஞ்சிய காலத்துக்குரிய தவணை உதவிகளை வாங்கிக்கொள்ளுவதன்மூலம், தம் வருமானத்தை மூன்று மடங்காக்கிகொண்டு, சாவதற்கு முன்னர் அனைத்தையும் தானே நுகர்ந்துவிடலாம். எனவே, இதர நிலைகள் சமமாயிருக்கும்பொழுது, வட்டி விகிதமும் அதிகமாயிருந்தால் அதிகமான சேமிப்புகள் ஏற்படும் என்பது ஓரளவு இதனல் உறுதி யாகிறது. என்றலுங்கூட, கடந்த பல ஆண்டுகளாகப் பிரிட்டனில் நிலவிவந்த 3 முதல் 7 சதவிகித அளவுக்குமேல் வட்டி விகிதத்தை உயர்த்துவதென்பதும் அவ்வளவு சாத்தியமல்ல. சேமிப்புகளின் அளிப்பு வளைவானது (supply curve) வலப்புறமாக மேல்நோக்கி வழக்கமான முறையில் உயரக்கூடும் என்றலும், இவ் வளைவு மிகச் செங்குத்தாக மேல்நோக்கிச் சென்றுவிட முடியாது.

பணம் கடன் கொடுப்பவர், தான் கொடுக்கும் பணத்திற்குரிய வருமான வரியை நீக்கிப் பெறும் எஞ்சிய நிகர வருமானத்தையே வட்டி என்று அழைக்கிறேம் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். வருமான வரியின் பொதுவான விகிதம் ஒரு பவுனில், 7 ஷி. 9 பெ. ஆக இருந்தால், 6 வட்டி விகிதத்தில் அளிக்கப்பட்ட 100 பவுனுக்கு நிகர வருவாயாக 3 பவு. 13 ஷி. 6 பெ. மட்டுமே கிடைக் கிறது.

பணத்தின் மதிப்பில் மாறுதல்கள் ஏற்படக்கூடும் என்று கருதுவதாலும் சேமிப்பின் அளவு பாதிக்கப்படுகிறது. வாழ்க்கைத் தரப் பொருள்களுக்குரிய விலைகள் உயரப்போகிறது என்று மக்கள் கருதுவார்களேயானல், அவர்கள் அப் பொருள்களை மலிவான

சமயத்திலேயே நிறைய வாங்கிச் சேர்த்துக்கொள்ள நினைப்பார்களே யல்லாமல், பணத்தைச் சேமிக்க முற்படமாட்டார்கள். உதாரண மாக, ஓர் ஆண்டில் பொருள்களின் விலை 10 சதவிகிதம் உயர்வதாக வைத்துக்கொள்ளுவோம். இந்த ஆண்டில், 10 சதவிகித வட்டிக்கும் குறைவாகக் கடன் கொடுத்தவர் நஷ்டமடைகின்றார். எப்படி யென்றால், அந்த ஆண்டிறுதியில் உள்ள 110 பவுன் (இந்த அதிகப் படியான 10 பவுனுக்கு வரி விதிப்பு இல்லை யென்றாலும்) ஆண்டுத் தொடக்கத்தில் உள்ள 100 பவுனுக்குச் சமமான பொருள்களைத் தானே இப்பொழுது வாங்க முடியும் ? இம்மாதிரியான விலையேற்றக் காலங்களில், மக்கள் பொதுவாக, இன்னும் அதிகமான பணத்தைக் கடன் வாங்கிக்கொள்ள முற்படுவார்களே தவிர, கடன் கொடுக்க முன்வரமாட்டார்கள். இப் பணத்தைக்கொண்டு குறைவான விலைக் குப் பொருள்களை வாங்கிச் சேர்த்துவைத்திருந்து, விலை ஏறும் காலத் தில் இவற்றை விற்று அதிகமான ஊதியம் பெற விரும்புவார்கள். மேலும், விலையேற்றக் காலங்களில் வட்டிக்குரிய பண விகிதங்களும் மிக உச்ச நிலைக்குச் சென்றுவிடும். இதற்கு மறுபுறமாக, பொருள் களின் பொதுவான விலை விகிதங்கள் குறையுமென்று எதிர்பார்க்கை யில், மக்கள் சாமான்களை வாங்குவதை நிறுத்திக்கொண்டு தமது சேமிப்பை அதிகமாக்கிக்கொள்ள விரும்புவார்கள் — இதன் விளைவாக இன்னும் மந்த நிலையை உண்டாக்குவார்கள். மேலும், விலைக் குறைவுக் காலங்களில் வட்டிக்குரிய பண விகிதங்களும் மிகத் தாழ்ந்த நிலைக்கு இறங்க நேரிடும்.

சேமிப்புகளின் அளவை அறுதியிடும் இன்னொரு காரணமாக இச் சேமிப்புகளை மிச்சம் பிடித்துத் தொகுக்க உதவும் வருமானங் களின் அளவைக் (the size of incomes) குறிப்பிடலாம். ஓர் அரசாங் கத்தின் சேமிப்பு அளவானது, அந்த அரசாங்கம் பின்பற்றும் கொள்கையைச் சார்ந்தே அமைகிறது. ஆனால், தேசிய வருமானம் அதிகமாக இருப்பின், இது வரிவிதிப்பு விகிதங்களை உயர்த்துவ தாலோ அல்லது புதிய வரிவிதிப்பாகவோ தனது வரவு செலவுத் திட்டத்தில் உபரியைப் பெறுவதற்கு அரசாங்கத்திற்கு எளிதில் உதவும் ; அப்படிப் புதிதாக வரிவிதிப்பில் மாற்றங்களைச் செய்யா விட்டாலுங்கூட, தேசிய வருமான உயர்வால், பழைய வரிகளி லிருந்தே அரசாங்கத்திற்கு அதிகமான வருமானம் கிடைக்க இயலும்.

இது கம்பெனிகட்கும் பொருந்தும். இவற்றில் இலாபங்கள் அதிகமாயிருக்கும்பொழுது இருப்பிற்கென அதிகப்படியான தொகையை ஒதுக்கிக்கொள்ளலாம். பெரும்பாலான கம்பெனிகள், அதிகமான இலாபம் சம்பாதிக்கும் நாட்களில், இந்த இலாபத்தில்

ஓரளவை இயல்பான இலாப ஈவுகளாகத் தந்துவிட்டுப் பெரும் பகுதியை இருப்பில் வைத்துக்கொள்ளுகின்றன; (சில சமயங்களில் ஒன்றுமே போட முடிவதில்லை. இன்னும் சில சமயங்களில் இருப்பிலிருக்கும் பணத்தை எடுத்து இலாப ஈவுகளை அளிக்க நேரிடுகிறது.) இந்த இலாப அளவு குறைவாக இருந்தால், இருப்பிற்குக் குறைவான பகுதியைமட்டும் ஒதுக்கிக்கொள்ளுகின்றன.

இது தனி நபர்கட்கும் பொருந்தும். நிறைய வருமானம் பெறும் ஒருவனால், அதிக விகிதத்தில் மிகுதியாகச் சேமிக்க முடியும் என்பது அனுபவ உண்மையாகும். இவ்விதம் நடக்கவேண்டுமென்றே நாம் எதிர்பார்க்கவேண்டும். ஏனென்றால், ஒருவன் தனது சொந்த உடனடி நுகர்வுக்காக ஒரு குறிப்பிட்ட அளவை மட்டுமே செலவழிக்கிறான். எனவே, ஓர் ஏழையைவிடப் பணக்காரன் ஒருவனுக்கு இச் செலவு போக அதிகமான பணம் மீதப்படுகிறது; இதனால் மிகுதியாகச் சேமிக்கும் வாய்ப்பும் அவனுக்கு ஏற்படுகிறது. கடந்த பத்தாண்டுகளில் தனி நபர் சேமிப்புகள் உயர்ந்திருப்பதற்குரிய முக்கியமான காரணமாக இதைக் கருதலாம். வருமானப் பகிர்வில் ஏற்றத்தாழ்வு அதிகரித்திருப்பதற்கான அறிகுறி ஏதும் இல்லையென்றாலுங்கூட, உண்மையான தேசீய வருமானத்தில் ஏற்பட்டுள்ள உயர்வால் எல்லா வருமானப் பிரிவினருடைய சொந்த வருமானத்தில் (வரி போக) கணிசமான உயர்வு ஏற்பட்டிருக்கிறதெனச் சொல்லலாம். 1946-க்கும் 1951-க்கும் இடையில், தலா ஒரு நபரின் உண்மையான சொந்த வருவாயானது, வரி போக, ஓர் ஆண்டில் ஒரு சதவீதத்திற்கும் குறைவாகவே உயர்ந்திருக்கிறது; 1951 முதல் 1958 வரை இந்த வருவாயின் ஆண்டு வீத உயர்வு, சராசரியாக 3 சதவீதத்திற்குமேல் சென்றது; 1958 முதல் 1962 வரை 4 சத வீதத்திற்குமேல் உயர்ந்தது. 1951 வரை சொந்தச் சேமிப்பே இல்லாமல் இருந்தது என்பதை மறந்துவிடக்கூடாது. எனவே, 1951 முதல் 1958 வரையிலும் ஏற்பட்ட வருவாய் உயர்வும், 1958 முதல் 1962 வரை ஏற்பட்ட துரித உயர்வும், தலா ஒரு நபருக்குரிய உண்மையான சொந்த வருவாயில் ஏற்பட்ட அபரிமிதமான உயர்வால் உண்டான நேரடி விளைவுகள் என்று அனுமானிக்கலாம்.

இப்பொழுது கைவசம் இருக்கும் முதலை அப்படியே குலையாமல் வைத்துக்கொள்வதுடன், அதற்கு மிகையாயும் வைத்து இருக்கும் நிகர சேமிப்பையே சேமிப்பு என்ற பொருளில் நான் கொண்டுள்ளேன். விற்பனைப்படுத்தக்கூடிய சொத்துகள் உள்ளவர்கள், அவற்றை விற்று, அதனால் வரும் வருமானங்களை நுகர்வதற்கு உரிமை பெற்றிருக்கிறார்கள் என்பதை மறுக்கமுடியாது. ஒரு கம்பெனி, தன்னிடமுள்ள தளவாடங்கள் எல்லாம் தேய்ந்து

போனுலோ, பயனற்றுப் போனுலோ, அவற்றை மாற்றிப் புதுக்கு வதற்காகத் தனது மொத்த வருமானங்களிலிருந்து போதுமான பகுதியை ஒதுக்கிவைக்க வேண்டுமென்ற அவசியமில்லாமலும் இருக்கலாம். ஓர் அரசாங்கம் முதலீட்டுக் காரியங்களுக்கு மிகையாக அதிகமான கடன்களைப் பெறலாம். சுருக்கமாகச் சொல்வதென்றல் அரசாங்கங்கள், கம்பெனிகள், தனி நபர்கள் ஆகிய முத்திறத்தாரும் தம்மால் அதிகமாகச் சேமிக்க முடியுமா, குறைவாகச் சேமிக்க முடியுமா என்பதைமட்டுமே சீர்தூக்கிப் பார்த்துக்கொண்டிராமல், தமது மூலதனத்தையும் செலவழித்துப் பயன்கொள்ள வேண்டியிருக்குமா? அப்படியானல் எந்த அளவிற்கு என்பதையும் சீர்தூக்கிப் பார்த்துக் கொள்ள வேண்டும். உடனடியாகப் பயன்கொள்ளப்படுவதற்குப் பதிலாக, ஏற்கெனவே உள்ள மொத்த மூலதன இருப்பைப் பேணிக் கொள்ளவும், முடியுமானல் அதிகமாக்கிக்கொள்ளவும் செலவழிக்கப் படும் மொத்தத் தொகையை மொத்தச் சேமிப்பு (gross saving) என்ற தொடரால் அழைக்கலாம்.

1938லும், போருக்குப் பிந்திய சில ஆண்டுகளிலும் ஐக்கிய அரசின் மொத்தச் சேமிப்பு, நிகர சேமிப்பு ஆகியவற்றின் மதிப்பீடு களை இதன் கீழ் உள்ள அட்டவணையில் காணலாம் :

மேல் அட்டவணையில், 'நபர்கள்' என்ற இனத்தில் குறிப்பிடப் பட்டுள்ளதற்குரிய மதிப்பீட்டில் உத்தியோகஸ்தர்கள், உழவர்கள், இதர சொந்த விற்பனையாளர்கள், கூட்டாளிகள், எந்தத் தொழிலும் சொந்தமாக இல்லாத தனி நபர்கள் முதலிய அனைவரது மொத்தச் சேமிப்புகளும் அடங்கும். தொழிலாளர் நலனுக்காக என்றே கம்பெனிகளில் சேர்த்துவைக்கப்பட்டுள்ள முதுமைக்கால ஓய்வு உதவி நிதிகளும் இந்த மதிப்பீட்டில் அடங்கும். இந்த மதிப்பீ டெல்லாம் ஏனைய மதிப்பீடுகள்போல எஞ்சியிருக்கும் இனமாகக் கடைசியில் கணக்கிடப்பட்டவையாதலால், இவற்றில் பல குறைகள் இருக்கக்கூடும். தனி நபர் சேமிப்புகளில் அபரிமிதமான உயர்வு ஏற்பட்டிருக்கிறது என்ற பொதுவான அபிப்பிராயத்தை மாற்றும் வகையில், இந்த மதிப்பீடுகள் வருங்காலத்தில் திருத்தியமைக்கப் படுவதற்கான சாத்தியக் கூறுகள் இருப்பதாகவும் புலப்படவில்லை.

தேசீய ஆயுட்காப்பு நிதிகள் பல ஆண்டுகளாக சேமிப்புகளை மிகுதிப்படுத்தி, நிதி இருப்புகளை உயர்த்தி இருக்கின்றன. 1958 முதல் சுகாதாரப் பணிச் செலவுகளுக்காக ஆயுட் காப்பு நிதியிலிருந்து அளிக்கப்பட்ட தொகைகள் நிறுத்தப்பட்டன. 1961 முதல், முதுமைக் கால ஓய்வு உதவித் தொகைகளை அளிப்பதில் சில வகையான நிபந்தனைகள் மேற்கொள்ளப்பட்டன. என்றலுங்கூட,

சமீப ஆண்டுகளில் இந்த நிதியிலிருந்து கிட்டிய உபரித்தொகை குறிப்பிடத்தக்க அளவினதாக இல்லை.

ஐக்கிய அரசின் மொத்தச் சேமிப்பும் நிகர சேமிப்பும்
(1958 விலைகளில், மில்லியன் பவுனில்)

| | 1938 | 1948 | 1952 | 1956 | 1961 | 1962 |
|---|---|---|---|---|---|---|
| மொத்தச் சேமிப்பு[1] - | | | | | | |
| நபர்கள் | 1,002 | —59 | 460 | 902 | 1,824 | 1,568 |
| கம்பெனிகளும் பொது நிறுவனங்களும் | 1,272 | 1,169 | 1,631 | 1,923 | 2,279 | 2,342 |
| அரசாங்கத் துறைகள் | –289 | 826 | 527 | 524 | 475 | 837 |
| வரி, இலாப ஈவு, வட்டி இருப்புகள் ஆகியவற்றில் ஏற்பட்ட அதிகரிப்புகள் | 103 | 208 | 22 | 204 | 115 | -68 |
| மொத்தச் சேமிப்பின் கூட்டுத் தொகை | 2,088 | 2,144 | 2,640 | 3,553 | 4,693 | 4,679 |
| மூலதன நுகர்வுக் கழிவு[2] | 1,260 | 1,338 | 1,501 | 1,718 | 2,100 | 2.172 |
| மொத்த நிகர சேமிப்பு | 828 | 806 | 1,139 | 1,835 | 2,593 | 2,507 |

[1] மாறு முதல் நுகர்வுக்கு ஒதுக்கீடு செய்வதற்கு முன்னும், இருப்புக் கணக்கீட்டிற்குரிய கழிவுக்குப் பின்னும் எஞ்சிய சேமிப்பு.

[2] மூலதன நுகர்வுக்கான இந்த மதிப்பீடுகள், பொதுத் துறைகளுக்கும் தனியார் துறைகளுக்கும் சொந்தமான சொத்துகளையும் உள்ளடக்கியவை. வரிக் காரியங்களுக்காக அனுமதிக்கப்படும் தேய்மானத்தைப்போல் அல்லாது, இந்த மதிப்பீடுகள், வீடுகள், வருவாய் பெறும் சொத்துகள் ஆகியவற்றையும் கணக்கில் கொண்டுள்ளன. சமீப ஆண்டுகளில், சாதாரணமான தேய்மானப் படிகளை விட இவை அதிகமாயிருப்பினும், துவக்ககால முதலீட்டுப் படிகள் உள்ளிட்ட மொத்த தேய்மானப் படிகளைவிடக் குறைவாகவே உள்ளன.

## 5. சொத்துகளின் வகைகள்

கடன் மூலதனத்திற்கு (loan capital) உரிய தேவை, தேவைக்கேற்ற அளிப்பு என்பவற்றிற்குப் பின்னால் உள்ள ஆற்றல்களைப்பற்றித் தெளிவாக விளக்குவது இடர்ப்பாடாக இருக்கிறது. இதற்குக் காரணம் என்னவென்றால், சேமிப்பில் பெரும் பகுதி (பாங்குக் கடனிருப்பில் உள்ள உயர்வுகளும்) புதுக் கடன்களோடு சென்று சேர்ந்துவிடுவதில்லை. புதிய நிரந்தரமான சொத்துகளால் உண்டாக்கப்பட்ட முதலீட்டின் அளவே சமுதாயத்திற்கு மிக அத்தியாவசியமான ஒன்றாகும். ஆனால், கடனாகக் கொடுக்கப்படுவதன் அளவைச் சொல்வதென்றால் அது தற்செயலானதேயாகும். உருப்பெரு முதலானது நேரடியான முதலீடாகிவிடுகிறதா அல்லது கடன்மூலமாகச் செல்கிறதா என்பது அவ்வளவு அவசியமானதன்று.

மேலும், புழக்கத்தில் உள்ள ஈடுகளையும் இதர சொத்துகளையும் வாங்குவதற்கே முதல் நிலையில் சேமிப்புகள் சாதாரணமாகப் பயன்படுத்தப்படுகின்றன. இச் சேமிப்புப் பணமானது புது முதலீட்டுக்குள் புகுவதற்குள் பல தடவைகளில் எத்தனையோ கைகளுக்கு மாறவேண்டியும் நேரிடலாம்.

இந்தச் சந்தர்ப்பத்தில், ஒரு நபர், தனது சேமிப்புகளை உடனடியாக நுகர்வுப் பொருள்களை வாங்கிப் பயன்கொள்ளுதற்காகச் செலவிடாது, அவற்றைக்கொண்டு எத்தனை வகையான சொத்துகளைப் பெறலாம் என்று அளந்தறிய முற்படுவது வசதியாக இருக்கும். ஓர் அரசாங்கம் அல்லது கம்பெனிகளைப் பொறுத்தவரைக்கும் இத்தகைய சொத்துகளைப் பெறுவதற்குப் பதிலாக, வேறொன்றை மேற்கொள்வது என்னவென்றால், வரி செலுத்துவோரைச் சும்மா விட்டுவிடுவது அல்லது பங்குதாரர்களுக்கு அதிகப்படியான பணத்தை அளித்து, இப் பணத்தை அவர்கள் தாம் விரும்பியபடி சேமிக்கவோ செலவு செய்யவோ அனுமதித்துவிடுவதாகும்.

நான்கு வகையான சொத்துகளைப்பற்றிமட்டும் சற்றுக் குறிப்பிடுவதன்மூலம், இன்னும் கொஞ்சம் எளிதாக விளக்கக் கருதுகிறேன். இந் நால் வகைச் சொத்துகளாவன : குறுகிய காலக் கடன் பத்திரங்கள் (brevity bonds), பங்குகள், உண்டியல்கள் (bills), ரொக்க இருப்புகள் (money balances).

நீண்டகால நிலைவட்டி ஈடுகளைப் பத்திரங்கள் (bonds) என்று அழைக்கலாம். இத்தகைய ஈடுகள் முதலில் வெளியிடப்படும்பொழுது இவற்றை வெளியிடும் அரசாங்கம் அல்லது நிறுவனங்கட்குப்

பொதுமக்கள் அளிக்கும் கடனையே இப் பத்திரங்கள் குறிக்கின்றன. இவற்றிற்கான வட்டி விகிதம் ஒரே மாதிரியாக நிர்ணயிக்கப்பட்டிருக்கும். 100 பவுன் முக மதிப்பு உள்ள பத்திரங்கள் ஒவ்வொன்றிற்கும் 3 சதவிகித வட்டி நிர்ணயிக்கப்பட்டிருப்பதாகக் கொள்ளுவோம். கடன் அளிப்பவன், தான் வேறுவகையில் உடன் நுகர்வுக்காகச் செலவழிப்பதற்குப் பதிலாக, அல்லது இதர வகையான சொத்துகளை வாங்குவதற்குப் பதிலாக இந்த 100 பவுனைச் சேமித்துக் கொடுத்துவிட்டு, அதற்குப் பதிலாக ஒரு துண்டுக் காகிதத்தை வாங்கிக்கொள்ளுகிறான். [சில சமயங்களில் கன்சோல்கள் (Consols) எனப்படும் பத்திரங்கள் வாங்குகையில், இவனுடைய பெயர் ஒரு பதிவேட்டில்மட்டுமே எழுதிக்கொள்ளப்படும். வாங்கிய பணத்திற்குச் சான்றாக இந்தத் துண்டுக் காகிதங்கூட இவனுக்குக் கொடுக்கப்பட மாட்டாது. என்றாலும், நமது விவாதத்தை இது பாதிக்கவில்லை.] இந்தக் காகிதம்மூலம் உள்ள உரிமையால், ஆண்டொன்றுக்கு 3 பவுன் நிலைத்த வருவாயாகப் பெறும் வாய்ப்பை இவன் பெறுகிறான். இந்தப் பத்திரங்களை ‘நிலைத்த வட்டிப்’ பத்திரங்கள் என்றழைப்பதைவிட, ‘நிலைத்த வருவாய்ப்’ பத்திரங்கள் என்று பெயரிட்டு அழைப்பது இன்னும் தெளிவைத் தரும். ஏனென்றால், நாளடைவில் வட்டி விகிதங்களிலும் மாறுதல்கள் இதே பத்திரங்கட்கு ஏற்படக் கூடுமல்லவா ?

இந்தக் காகிதப் பத்திரத்திற்கு உரியவன் இதை எப்பொழுது வேண்டுமானாலும், பங்கு மாற்று மூலமாக, இன்னொருவருக்கு விற்றுவிடலாம். அப்படி விற்கும்பொழுது இதற்குரிய 100 பவுனை இதற்குப் பெறமுடியாது போகலாம். இப் பத்திரத்தின்மீதான 3 பவுன் ஆண்டு வட்டிக்குள்ள உரிமையின் மதிப்பானது, இந்த வகை ஈடுகட்கு உரிய நடைமுறை வட்டி விகிதத்தைச் சார்ந்தே அமையும். நடைமுறை வட்டி விகிதத்தால் வகுக்கப்பட்ட 300 பவுன்களுக்கு இது சமமாயிருக்கும்.

இப் பத்திரங்களில் உள்ள நன்மை என்னவென்றால், இவற்றை வாங்கியவர் தவறு செய்யாதவரைக்கும், இவற்றிலிருந்து நிலையான, நிச்சயமான ஒரு குறிப்பிட்ட பணவருவாய் கிடைக்கும் என்பதுதான். இவற்றில் உள்ள குறை என்னவென்றால், நடைமுறை வட்டி விகிதத்தில் வீழ்ச்சி ஏற்பட்டால், இவற்றின் அங்காடி மதிப்பும் வீழ்ச்சியடையும்.

இனி, பங்குகளைப்பற்றிப் பார்ப்போம். ஆயிரம் பங்குகளைக் கொண்ட மூலதனத்தால் அமைக்கப்பட்ட ஒரு கம்பெனியில் ஒரு ‘சாதாரண’ப் பங்கை உரிமையாகப் பெற்றிருப்பவனுக்கு, அக் கம்பெனி

யின் சொத்தில் ஆயிரத்தில் ஒரு பங்கிற்கு உரிமை இருக்கிறது; எனவே, அக் கம்பெனி அடையும் இலாபத்தில் ஆயிரத்தில் ஒரு பங்கை இவனும் அடைகின்றான். இக் கம்பெனியின் நிருவாக முறையில் இவனுக்கு அவ்வளவாகப் பொறுப்பில்லாவிட்டாலும் அதன் தொழில்முறை ஆபத்துகள், இலாபங்கள் ஆகியவற்றில் இவனுக்கும் உரிய பங்கிருக்கிறது. இந்த வகையில், இந்தப் பங்குதாரன் தனது சொந்தத் தொழிலில் தனக்கே முதலீடு செய்துகொள்பவனைப்போல (அல்லது வீடு கட்டிக்கொள்ளுகிறவனைப்போல) ஆகின்றான். (உண்மை மூலதனத்தினின்று கிடைக்கும் எல்லா இலாபங்களையும் உள்ளடக்கி உள்ளதாகவே 'பங்குகள்' என்ற சொல்லை நான் கையாளுகின்றேன்.)

சில ஆண்டுகளுக்கு முன்புவரை முதலீடு செய்யும் ஒருவர், பிரிட்டிசு அரசாங்க ஈடுகளில் முதலீடு செய்வதைவிட அதே அளவு தொகையைச் சாதாரணப் பங்குகளில் முதலீடு செய்வதன்மூலம் அதிகப்படியான வருவாயைப் பெறலாம் என எதிர்பார்க்க முடிந்தது. வருவாய் கிடைப்பதில் உள்ள இந்தப் பெரிய 'வித்தியாசத்திற்கு'க் காரணமாகச் சாதாரணப் பங்குகளை வாங்குவதில் உள்ள மிகுதியான இழப்பு ஆபத்துகளைக் குறிப்பிடலாம். மக்களது விருப்பத்தில் மாறுதல் ஏற்படுதல், மக்கள் தொகை குறைதல், புதிய போட்டி நிறுவனங்கள் புகுதல், மலிவான இறக்குமதிகள் பெருகுதல், வரிகள் உயர்தல், மோசமான நிர்வாகம் அமைதல் ஆகிய பல்வேறு காரணங்களால் அந்த நபர் பங்குகளை வாங்கியுள்ள கம்பெனிகளின் உற்பத்திப் பொருள்களுக்குரிய தேவை குறையலாம். அப்பொழுது அவருக்குக் கிடைக்கக்கூடிய இலாப ஈவும் குறையக்கூடும், அல்லது இலாப ஈவே இல்லாமல் போகக்கூடும். இதனால் அவருடைய பங்குகளின் மதிப்பும் குன்றும். இப் பங்குகளை வைத்திருப்பவருக்கு வருமானம் குறைவதோடு, வைத்துள்ள மூலதனத்தின் மதிப்பும் தாழ்ந்து போகும்.

என்றாலுங்கூட, 1959 ஆம் ஆண்டின் பிற்பகுதியில் சாதாரணப் பங்குகளின் விலைகள் திடீரென உயர்ந்தமையாலும், அரசாங்க ஈடுகளின் விலைகள் சரிந்ததாலும், அரசாங்க ஈடுகளிலிருந்து கிட்டியதைவிடச் சாதாரணப் பங்குகளிலிருந்து கிட்டிய சராசரி வருமானம் குறைய நேரிட்டது. இத்தகைய 'மறுதலையான வருவாய் வித்தியாசத்திற்கு'க் (reverse yield gap) காரணம் என்ன? பொதுவான விலை அளவுகள் ஏறுமுகமாகவே இருக்கும் என்று எதிர்பார்ப்பதே இதற்குக் காரணம். இங்ஙனம் ஏறுமுகமாகவே இருப்பது, அரசாங்க ஈடுகளில் செய்யப்படும் முதலீட்டின் உண்மை மதிப்பைக் குறைப்பது ஒருபுறம் இருக்க, கம்பெனிகளது இலாபங்

களையும் இலாப ஈவுகளையும் தொடர்ந்து உயர்த்தியும்விடுகிறது. இதனால், நிலையான, மாறா வட்டி தரும் ஈடுகளைவிட, சாதாரணப் பங்குகளில் செய்யப்படும் முதலீடு, தனது உண்மையான மதிப்பைப் பேணிக்கொள்ளும் நிலையே ஏற்படும். ஏன்றாலுங்கூட, சாதாரணப் பங்குகளின்மீதான சராசரி வருமானம், சில சமயங்களில் அரசாங்க ஈடுகளிலிருந்து கிட்டும் சராசரி வருவாயைவிடக் குறைந்து செல்வதுண்டு. இதற்குரிய விளக்கத்தைத் தருவதற்காக, விலை வாசிகள் மேலும்மேலும் உயரும் என்று எதிர்பார்க்கவேண்டிய அவசியமில்லை. நாட்டின் 'வேலையுடைமையை நிலையான, உயர்ந்த அளவில்' பேணிவரமுடியும் என்று அரசாங்கம் உறுதியாக நம்பினால், பெரிய வியாபார மந்தம் ஏற்படுமோ என்று அஞ்ச வேண்டியதில்லை. மேலும், விலை அளவுகள் நிலையாயிருந்தபோதிலுங்கூட, உண்மைத் தேசிய வருமானத்தில் ஏற்படும் சீரான உயர்வுக்கு ஏற்ப, கம்பெனி இலாபங்களிலும் இலாப ஈவுகளிலும் சீரான உயர்வு ஏற்பட்டே தீரும் என்பதையும் அரசாங்கம் எதிர்பார்க்கலாம். தவிரவும், முதலீடு செய்வோர், மாறா வட்டி தரும் ஈடுகளிலிருந்து ஒரேமாதிரி வருவாயைப் பெறுவதைவிட, இழப்பு ஆபத்துகளையுடைய கம்பெனிப் பங்குகளில் முதலீடு செய்யும் துணிச்சலுக்கு ஈடாக, 3 சதவீதம் வரை இலாப ஈவுகள் பெறும் வாய்ப்பையே நாடுவார்கள். தம்மிடம் உள்ள சாதாரணப் பங்குகளிலிருந்து அப்போதைக்குக் குறைந்த வருவாயே கிட்டினாலுங்கூட, அதையே ஏற்க விரும்புவார்கள்; அப் பங்குகளை விற்று, அரசாங்க ஈடுகளைப் பெற முற்படமாட்டார்கள்.

தொழிலிலும் வாணிகத்திலும் உபயோகிக்கப்படும் மூலதனத்திற்கு, ஓராண்டிற்குரிய இலாப விகிதம் என்பது சொத்துகளுக்குரிய நிகர வருமானமே ஆகும். இந்த நிகர வருமானம் (தேய்மானச் செலவுகளைக் கழித்தது போக) சொத்துகளின் நடைமுறைச் செலவுகளின்மீதான சதவிகிதமாகக் கணக்கிடப்படுகிறது. இச் சொத்துகளின் அசல் செலவினங்கள், நமக்குத் தேவையற்றன; அவற்றிற்கு இப்பொழுது எத்தகைய சிறப்புமில்லை; இப்பொழுதுள்ள நடைமுறைச் செலவினங்களே கணிப்பிற்கு மேற்கொள்ளப்படும். தொழில் நிறுவனமொன்று 1,000 பவுன் விலையில் ஓர் இயந்திரத்தை வாங்கியிருக்கிறது. வாங்கிய பின், இந்த இயந்திரத்தின் விலை 800 பவுனாகக் குறைந்துவிட்டதென்றால், ஏற்கெனவே வாங்கியதற்கும் 800 பவுனே மதிப்பிட்டு, அந்த அடிப்படையிலேயே இலாப விகிதத்தையும் கணக்கிடவேண்டும்.

இலாப விகிதத்திற்கும் வட்டி விகிதத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்பு ஒன்று இருப்பது நன்கு புலனாகின்றது. தொழிலில்

இழப்பு ஆபத்துகள் ஏதும் இல்லையென்று கொண்டால், இரண்டும் சமமாகவே இருக்கும். பத்திரங்களை வாங்கி வட்டியைப் பெறுவதும், பங்குகளை வாங்கி இலாபங்களை அடைவதும், மக்களின் விருப்பத் தேர்வுகளைப்பொறுத்தே அமையும். ஆனாலும், தொழில்முறை ஆபத்துகள் இருக்கின்ற காரணத்தால், பங்குகட்கான இலாபத்தின் விகிதம், பத்திரங்களுக்கான வட்டியின் விகிதத்தைவிட அதிகமாகவே இருக்கும். என்றாலும், இவ்விரு விகிதங்களும் ஒன்றாக இணைந்தே இயங்குகின்றன. இலாப விகிதங்களில் ஏற்படும் உயர்வு, தொழில் வணிகத் துறைகளிலிருந்து கடன்களுக்கான தேவையையும் உயர்த்த முற்படுவதுடன், வட்டி விகிதத்தையும் உயர்த்திவிடும். இலாப விகிதக் குறைவு ஏற்பட்டால் இதற்கு மாறாக நிகழக்கூடும்.

குறுகிய கால, நிலைவட்டி ஈடுகளை (பிணைகளை) உண்டியல்கள் என்று அழைக்கலாம். 5,000 பவுன்மதிப்புள்ள 3 மாதங்கட்கான கருவூல உண்டியல் (treasury bill) என்றால், மூன்று மாதத் தவணை முடிவில், 5,000 பவுனைத் திருப்பிச் செலுத்துவதாக பிரிட்டிசு அரசாங்கம் தரும் வாக்குறுதி என்பதே இதற்குப் பொருள். இந்த உண்டியல்களுக்குரிய வட்டி விகிதமானது, வாங்குவோரின் கடனிருப்பு நிலைக்குத் தகுந்தபடி மாறுபடும்; அவற்றைத் திருப்பித் தருதற்குரிய கெடு நிறைவிற்குரிய அளவைப்பொறுத்தும் (maturity period) இவ் வட்டி விகிதம் வேறுபடும். பொதுவிதியாகக் குறைந்த கால விகிதங்கள், நீண்டகால விகிதங்களைவிடக் குறைவாகவே உள்ளன. சில சமயங்களில் மிகமிகக் குறைவாகவும் போய்விடுவதுண்டு. 1946-ல் மூன்று மாதங்கட்குரிய கருவூல உண்டியல் 4994 பவுன்களுக்கு விற்கப்பட்டது. இது ஆண்டொன்றுக்கு அரை சதவீத வட்டிக்குச் சமமான வருமானத்தையே தந்தது. நீண்டகால விகிதங்களைவிடக் குறுகிய கால விகிதங்கள் மிகவும் குறைவாக இருப்பதற்குப் பிரதான காரணம் என்னவென்றால், குறுகிய கால உண்டியல்களுக்கு அங்காடி விலை மதிப்பு வீழ்ச்சியால் ஏற்படக் கூடிய இழப்பு ஆபத்து மிகமிகக் குறைவாக இருப்பதுதான். உதாரணமாக (100 பவுன் மதிப்புள்ள) 3 மாத உண்டியல் ஒன்றை ஒருவர் 99 பவுன் 10 ஷில்லிங்கிற்கு வாங்குவதாக வைத்துக் கொள்ளுவோம். மூன்று மாதக் கெடு முடிவில் இவர் 100 பவுன்களைப் பெறுவார். இவர் இந்த உண்டியலை, ஆறு வாரங்கட்குப் பின்னர் பணமாக மாற்றிக்கொள்ள விரும்பினால் ஒரு பாங்கு இதை வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கும்—அதாவது, இவருக்காக இந்த உண்டியலைக் கழிவு நீக்கிக் (discount) கொடுத்துவிடும். இந்த உண்டியலுக்குரிய கழிவு விகிதம் ஆண்டொன்றுக்கு 2 சதவிகிதத்திலிருந்து 16 சதவீதம்வரை உயர்ந்திருந்தாலுங்கூட, இவருக்கு

இப்பொழுது 98 பவுன்கள் கிடைக்கும். ஆனால், இன்னொருவர் 1946 அக்டோபரில், 100 பவுனுக்கு கன்சோல்களை வாங்கி, அதை 1961-ல் விற்றிருந்தால், அதை 40 பவுன் விலைக்கே விற்க நேர்ந்திருக்கும்.

இங்ஙனம், கெடு நிறைவுக் காலத்திற்கு முன்னர் கழிவு தள்ளி விற்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டாலொழிய, உண்டியல்களில் மூலதன இழப்பிற்குரிய ஆபத்து முற்றிலும் தவிர்க்கப்பட்டு விடுகிறது என்பது இதில் உள்ள சிறந்த நன்மையாகும். இப்படிக் கழிவு தள்ளிக் கொடுக்கும்பொழுது ஏற்படும் மூலதன இழப்பும் வெகு குறைவாகவே இருக்கும். பத்திரங்களைவிட உண்டியல்கட்கு உரிய வட்டி விகிதம் மிகக் குறைவாயிருக்கிறது என்பதே இதில் உள்ள ஒரே குறையாகும்.

நான்காவது வகை சொத்து—பணம் அல்லது ரொக்கம்—கையில் ரொக்கமாக வைத்திருப்பது அல்லது பாங்கியில் இருப்பாக வைத்திருப்பது. ரொக்கம் வைத்திருப்பதில் உள்ள நன்மை—ரொக்கக் கடன் கொடுத்தற்கு ரொக்கப் பணத்தால்மட்டுமே முடியும் என்பதுதான். குறுகிய காலத் தவணைக்கு ரொக்கக் கடன் கொடுப்பவனுக்கு இழப்பு ஆபத்து மிகக் குறைவாகவே இருக்கும். கடன் கெடு முடியும்வரைக்கும் அவன் காத்திருந்தால், தவணை முடிவில், கொடுத்த ரொக்கம் முழுவதையும் அப்படியே பெற்றுவிடலாம், ஆனால், ரொக்கத்தை எப்போதும் கையிலேயே கொண்டிருக்கும் நலனை இதனால் விட்டுக்கொடுக்கிறான். இங்ஙனம் ரொக்க நீர்மையைத் (liquidity) தியாகம் செய்வதற்கு ஈடு செய்தற்காகக் கடன் அளித்தவர்கட்குச் செலுத்தப்படும் ஊதியமாக, இந்தக் குறைந்த கால விகிதத்தை நாம் கருதலாம். இங்ஙனம் ரொக்கத் தன்மைக்குரிய விருப்பத்தில் பொதுவான ஓர் உயர்வு ஏற்படுமானால் அதைத் தொடர்ந்து, குறுகிய கால விகிதங்களும் உயர்ந்துவிடும். இது பொருளாதாரக் குழப்ப காலங்களில் பரவலாக ஏற்படுகிறது. தங்கட்கு ஏற்படும் உடனடிப் பணத் தேவைகளைத் திருப்பிக் கொடுத்து ஓட்டாண்டியாவதிலிருந்து தப்பித்துக்கொள்வதற்காகச் சில நிறுவனங்கள், குறுகிய காலத்திற்கு ரொக்கங்களை வாங்குவதில் மிகவும் அக்கறையாயிருக்கும்.

## 6. வட்டியின் பணவாக்கக் கோட்பாடு
## (The Monetary Theory of Interest)

இதுவரை வட்டி விகிதத்தை ஒரு விலையாகவே கருதிவந்தோம். கடன் மூலதனத்தின் அளிப்பு, அதன் தேவையைவிடக் குறைவாயிருப்பதால், அதற்கு அளிக்கப்படும் விலையாக வட்டியைக் கருதி

வந்தோம். இப்படி அளிக்கப்படும் வட்டி, தேவை, அளிப்பு ஆகிய இவ் விரண்டையும் சமப்படுத்திக்கொண்டது. கடன் மூலதனத்திற்கு உரிய தேவையானது நாம் ஏற்கெனவே கண்டதைப்போல தொழில், வாணிகம் இவற்றினின்று வருகிறது. இங்கு இத் தேவை யானது முதலின் இறுதிநிலை ஆக்கத் திறத்தைச் சார்ந்து அமை கிறது. இதைப்போலவே அரசாங்கமும் இதர கடனாளிகளும் கடன் மூலதனம் வேண்டுமென்று விரும்புகின்றார்கள். கடன் மூலதனத்திற் குரிய அளிப்பு, சேமிப்புகள், இதர பாங்குக் கடன் இருப்புகள் இவற்றி னின்று வருகிறது. இவற்றுள் பாங்குக் கடன்களைப்பற்றி நான் ஓரளவே குறிப்பிட்டிருக்கிறேன். என்றாலும், பாங்குக் கடன் இருப்புகளின் அளவில் ஏற்படும் மாறுதல்கள் பல விளைவுகளை உண்டாக்கமுடியும் என்பதை அனுபவத்திலிருந்து நாம் அறிந்திருக் கிறோம். பாங்குக் கடன் இருப்பின் விரிவு வட்டி விகிதங்களைக் குறைக்கும்; அதன் சுருக்கம் வட்டி விகிதங்களை உயர்த்தும்.

இவ்விதம் இவற்றை ஆராய்ந்தறிய முற்படுவது அவ்வளவு சிறப்புடையதன்று. ஏனென்றால், (சேமிப்புகள், இதர வங்கிக் கடன் இருப்புகள் இவற்றால்) கிடைக்கக்கூடிய உருப்பெறு முதலின் ஒரு பகுதிமட்டுமே புதுக் கடன்களுடன் சென்று சேர்கிறது. ஆனால், கீன்சு என்பார், இக் கருத்தை ஏற்றுக்கொள்ளவில்லை; இவ்விதம் கணக்கிடும் முறையைத் தூக்கி எறிந்துவிட்டு, தூய பணவாக்கக் கோட்பாட்டைச் சில அடிப்படையான காரணங்கட்காகக் கொள்ளவேண்டும் என்று குறிப்பிடுகிறார். அவரது கருத்தை என்போக்கில் விளக்க முற்படுகின்றேன்.

வீடுகட்கு ஏற்படும் தேவையை நிர்ணயிக்கும் ஆற்றல்கள் இவையிவை என்று நாம் விளக்க விரும்புவதாக வைத்துக் கொள்ளுவோம். புதிதாகக் கட்டப்படும் வீடுகளும் அவற்றின் தேவைகளும் வீடுகட்கு ஏற்படும் மொத்தத் தேவைகளிலும் அதற்கேற்ற அளிப்புகளிலும் ஒரு பகுதியாகவே அமைந்துள்ளன. ஏனென்றால், ஏற்கெனவே கட்டி முடிக்கப்பட்டுப் புழக்கத்தில் இருக்கிற வீடுகளின் மொத்த எண்ணிக்கையை, இத்துடன் ஆண்டுதோறும் சேர்க்கும் வீடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், முந்தியது மிகமிக விரிந்ததாகும். எனவே, வீடுகளின் விலைகள் ஒரு குறிப்பிட்ட குறுகிய கால அளவில் மிகக் கணிசமாக மாறும்; ஏனென்றால், இக் குறுகிய கால அளவில் புதிதாகக் கட்டப்படும் வீடுகளின் எண்ணிக்கை ஓரளவினதாகவே இருக்கும். வீடுகளில் மேற்கொள்ளும் வாணிபமெல்லாம், (புது வீடுகளைக் கட்டாமல்) ஏற்கெனவே கட்டியுள்ள பழைய வீடுகளையே திரும்பத் திரும்ப வாங்குவதாகவும் விற்பதாகவும் அமையலாம்.

கடந்த காலத்தில் வாங்கப்பட்ட கடன்களுக்குச் சான்ருக இருக்கும் அரசாங்க ஈடுகள், இதர பத்திர உரிமைகள் என்பனவற்றின் மொத்த இருப்பிற்கும் இக் கருத்துப் பொருந்தும். 'பழைய' ஈட்டுப் பத்திரங்களின் விலைகள் குறுகிய காலக் கெடுவில் கணிசமான மாறுதலை அடையக்கூடும்; ஏனென்ருல், இக் குறுகிய காலத்தில் புதுக் கடன் கொடுப்பும் வாங்குதலும் ஓரளவே நிகழும்.

பத்திரங்களுக்குப் பதிலாக மேற்கொள்ளக்கூடிய மற்ெருரு வழி ரொக்கப் பணமாகவே வைத்திருப்பது. (உண்மையில் இன்னும் பல்வேறு வழிகள் உள்ளன என்பதைச் சென்ற அதிகாரத்தில் பார்த்தோம்.) இந்தப் பத்திரங்களின் விலை—வேறு வகையாகச் சொல்வதென்ருல்–நீண்ட கால வட்டி விகிதம் என்பது, பத்திரங்களை விற்று அதற்குப் பதிலாக ரொக்கத்தை வைத்திருக்கவோ அல்லது ரொக்கத்தைக் கொடுத்துப் பத்திரத்தை வாங்கி வைத்திருக்கவோ எத்தகைய பொதுவான முயற்சியும் மேற்கொள்ளப்படாத ஒரு குறிப்பிட்ட நிலையில் உறுதியாகிவிடும். பத்திரங்களை வாங்கி வைத்திருப்பதில் உள்ள பொதுவான ஒரு அனுகூலம் என்னவெனில், இவை வட்டி வடிவில் வருவாயை நல்குகின்றன; ஆனுல், ரொக்க இருப்புகளோவெனில், ஒருவரால் கடனுகக் கேட்கப்படும்வரை இயக்கமற்ற சொத்துகளாக எவ்வித வருமானமும் நல்காமல் அப்படியே இருந்து விடுகின்றன. என்ருலும், ரொக்கமாகப் பணத்தை வைத்திருப்பதிலும் ஓர் அனுகூலம் இருக்கிறது. ஒருவன் கையில் உள்ள பணமாக உள்ள மூலதனம் அப்படியே பாதுகாப்பாக இருக்கக்கூடும்: 100 பவுன் பணம், எப்பொழுதும் 100 பவுன் பணமாகவே கையில் இருக்கும்; ஆனுல், பத்திரங்களுக்குரிய அங்காடி விலையில் வீழ்ச்சி ஏற்பட்டு அவற்றின் மதிப்புக் குறையக்கூடும். இந்த இருவித அனுகூலங்களும், சமுதாய முழுவதற்கும், வட்டி விகிதத்தின் மூலமாகச் சமநிலையில் வைத்துக்கொள்ளப்படுகின்றன.

பத்திரங்களுக்குரிய தேவையும் அதன் அளிப்பும், அல்லது ரொக்க இருப்புகளுக்குரிய தேவையும் அதன் அளிப்பும் ஆகிய இவற்றுள் ஏதாவதொன்றைச் சரிக்கட்டிக்கொள்ளும் வகையிலேயே வட்டி விகிதங்களையும் பத்திரங்களின் விலைகளையும் கணக்கிட்டுப் பார்க்கவேண்டும். இவற்றுள் பின்னுல் சொல்லப்பட்டதே (ரொக்க இருப்பு) பொருளாதாரச் செயல்முறைபற்றிய விளக்கத்திற்குப் பெரிதும் உதவும்.

எனவே, பணத்திற்குரிய தேவைபற்றி இப்பொழுது ஆராயத் தொடங்குவோம். மக்களில் பெரும்பாலோரும், நிறுவனங்களும், சதா பணம் பெற்றுத் திருப்பிக் கொடுத்துக்கொண்டிருக்கிருர்கள்.

எனவே, ஒவ்வொரு மனிதனும் அல்லது நிறுவனமும், சராசரியாக ஒரு நாளாவது இன்னென்றிடமிருந்து பெற்று, ஓரளவு பணத்தைக் கையில் வைத்திருக்கவேண்டியதிருக்கிறது. இங்ஙனம், இவர்கள் கையில் வைத்திருக்க விரும்பும் சராசரிப் பண அளவை நிர்ணயிப்பது எது? அதாவது, ரொக்க இருப்புகளுக்குரிய அவர்களது தேவைகளை நிர்ணயிப்பது எது? இந்த ரொக்கப் பண இருப்பில் ஒரு பகுதி, நடைமுறைக் கொடுக்கல் வாங்கலுக்குப் பயன்படுத்தப்படுகிறது. சில சமயங்களில் பணமாகவே கடன்களைச் செலுத்தவேண்டிய அவசியத்தை மக்கள் உணர்ந்திருப்பர்; எனவே, ஒரு சில நாட்களுக்குள் கடனைச் செலுத்துதற்காகக் கையில் பணத்தை வைத்திருக்க வேண்டியதிருக்கலாம். இவ்வித ரொக்கத்திற்குத் திடீரென்று, சற்றும் எதிர்பாராமல் அவசியம் ஏற்படுவதைச் சமாளிப்பதற்காகக் கையில் கொஞ்சம் பணம் வைத்திருக்கவேண்டியதாயிருக்கலாம். எனவேதான், அவர்கள் கையில் எப்போதும் ரொக்க இருப்புகளை வைத்திருக்கிருர்கள். சமுதாயப் பழக்கத்தாலும், வசதியை உத்தேசித்துமே இந்த ரொக்க இருப்பு முறை ஏற்பட்டதாகக் கொள்ளவேண்டும்.

இத்தகைய காரியங்கட்குத் தேவைப்படும் இருப்புகளுக்கு மிகையாக வைத்திருக்கும் பணத்தின் அளவானது கீன்சு என்பார் குறிப்பிடுவதுபோல, சமுதாயத்தின் ரொக்க நீர்மை விருப்பத்தைச் (liquidity-preference) சார்ந்து அமைகின்றது. அதாவது, மக்கள் தமது சொத்துகளை முழுமையாக எந்த அளவிற்கு ரொக்க நீர்மை வடிவில் வைத்திருக்க விரும்புகிருர்களோ அந்த அளவைச் சார்ந்து அமைகின்றது. இந்த ரொக்க வடிவம், ஏனைய வருவாய் தரும் ஈடுகளைக்காட்டிலும் எப்பொழுதும் தனக்குரிய பண மதிப்பைக் கொண்டிருப்பதுடன், எப்பொழுது வேண்டுமானுலும் தயாராகக் கிடைக்கக் கூடியதாகவும் அமைந்திருக்கும்.

எத்தகைய வட்டி விகிதம் இருந்தாலும் கவலைப்படாது பல கோடிக்கணக்கான ரூபாய்களை ரொக்கமாகவே வைத்திருக்குமாறு சமுதாயம் விரும்புகிறது என்ற அர்த்தத்தை, இத்தகைய ரொக்க நீர்மை விருப்பத்தின் அளவு தருவதாகக் கருதக் கூடாது. ஆனுல், உண்மை இதற்கு நேர்மாருனது. எவ்வளவிற்கு வட்டி விகிதம் அதிகமாயிருக்கிறதோ—அதாவது, பத்திரத்திற்குப் பதிலாகப் பணத்தையே ரொக்கமாக வைத்திருந்தால் விட்டுப்போன வருவாய் எவ்வளவிற்கு அதிகமாக இருக்கிறதோ—அவ்வளவிற்குப் பொதுமக்கள் கையில் வைத்திருக்க விரும்பும் பணத்தின் அளவும் குறையும். நீர்மை விருப்பத்திற்குரிய எந்த ஓர் அளவிற்கும், பண இருப்புகளில் கீழ் நோக்கிய சரிவாகிய தேவைக் கோடுகளே ஏற்படுகின்றன. 'விலை'

குறைவாயிருந்தால், அதாவது, வட்டி விகிதம் குறைவாயிருந்தால், மக்கள் கையில் வைத்திருக்க விரும்பும் பணத்தின் அளவு மிகுதியாக இருக்கும் என்ற உண்மையை இந்தத் தேவைக் கோடு விளக்குகிறது.

இனி, பணத்தின் அளிப்பு அல்லது வழங்கல்பற்றிப் (supply of money) பார்ப்போம். இந்த இடத்தில் பணத்தின் அளிப்பு என்பது நடைமுறையில் புழங்குகின்ற நாணயங்கள், நோட்டுகள், பாங்கு இருப்புகள் ஆகியவற்றின் மொத்தத் தொகையையே குறிக்கும். இந்தத் தொகை பொது மக்களால் அன்றி, பாங்கு முறைகளாலேயே நிர்ணயிக்கப்படுகின்றது. இங்ஙனம் புழக்கத்தில் உள்ள பண மெல்லாம் யாராவது ஒருவருடைய இருப்பில் இருந்தாகவேண்டும்— எல்லா வீடுகளையும், எல்லா ஈடுகளையும் யாராவது ஒருவர் வைத் திருப்பதுபோல, பணத்தையும் யாராவது ஒருவர் வைத்திருக்க வேண்டும். இந்தப் பண இருப்பை வைத்திருப்பதற்குரிய விலையை (price) பொதுமக்கள் நிர்ணயிக்கலாம்; அவர்களே உண்மையில் நிர்ணயிக்கிறார்கள். இந்த விலையே வட்டி விகிதம் என்று அழைக்கப் படுகிறது.

உதாரணமாக, பணத்தின் அளிப்பு அதிகமாகிவிட்டதாக வைத் துக்கொள்ளுவோம். முன்னைக் காட்டிலும் மக்கள் அதிகமாகப் பணத்தை எதற்காக வைத்திருக்கவேண்டும்? வருவாய் ஏதும் தராத வடிவத்தில் எவ்வளவு பணத்தை வைத்திருக்கவேண்டியது கட்டா யமோ அவ்வளவு பணத்தை ஏற்கெனவே அவர்கள் ரொக்கமாக வைத் திருக்கிறார்கள். இந்த நிலையில் அவர்கள் கையில் நிறையப் பணம் வந்தால், அதை அப்படியே வைத்திருப்பதற்குப் பதிலாக அதைக் கொண்டு பத்திரங்களையும் ஈடுகளையும் வாங்கவே முற்படுவார்கள். இவ்விதம், ஈடுகளைப் பொதுவாக வாங்க முற்படுவது இவற்றின் விலை களை உயர்த்திவிடக்கூடும். அதாவது, இம் முயற்சி வட்டி விகிதத் தைக் கீழே இழுத்துவிடக்கூடும். நீர்மை விருப்பமானது ஒரே அளவாக இருக்கையில் ஏற்படும் குறைந்த வட்டி விகிதத்தில், மக்கள் முன்னைவிட அதிகமான பணத்தை வைத்திருப்பார்கள். பண அளிப்பின் உயர்வுகளைக் கிரகித்துக்கொள்ளுதற்காகப் போதுமான அளவில் அதிகமான ரொக்க இருப்புகளை வைத்திருக்குமாறு மக்களைத் தூண்டும் அளவிற்கு வட்டி விகிதமும் குறையும்.

பணத்தின் தேவைப் பகுதியிலும் மாற்றங்கள் ஏற்படலாம். உதாரணமாக, பணத்தின் அளவு ஒரே மாதிரி இருக்கையில், ரொக்க நீர்மை விருப்பத்தில் பொதுவான உயர்வு ஏற்பட்டிருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது அதிகமான ரொக்கத்தை வைத்திருக்கவே மக்கள் விரும்புவார்கள். ஆனால், ரொக்கத்தின் அளவு நிலையாயிருப்பதால், தம் விருப்பப்படி செய்துகொள்ள மக்க

ளால் முடிவதில்லை. எனவே, அதிகமான ரொக்கத்தைப் பெறுவதற்காகத் தம்மிடம் உள்ள ஈடுகளையெல்லாம் விற்க முயல்வார்கள். புழக்கத்தில் உள்ள ரொக்கத் தொகையை எல்லாம், அதற்கு மிகையாக இன்றிக் கொள்ளுதற்கு மக்கள் விரும்பும் ஒரு குறிப்பிட்ட அளவு வரைக்கும் ஈடுகளின் விலை குறையும்—அதாவது, வட்டி விகிதம் உயரும். மக்களது ரொக்க நீர்மை விருப்பத்தில் ஏற்படும் உயர்வானது வட்டி விகிதத்தில் உயர்வையே உண்டாக்கியிருக்கிறது.

இவ்விதம் வட்டி விகிதமானது பணத்தின் அளிப்பை (பாங்கு முறைகளால் நிர்ணயிக்கப்படுவதுபோல) பணத்தின் தேவைக்குச் சமமாகப் (மக்களது பழக்கத்தாலும், அவர்களது ரொக்க நீர்மைக்குரிய விருப்பத்தாலும் நிர்ணயிக்கப்படுவதுபோல) பொருத்தி அமைத்து[1] விடுகிறது.

## 7. முடிவுரை

வட்டிக் கொள்கைகளைப்பற்றிப் பொருளாதார வாதிகளிடையே பல்வேறு கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனாலுங் கூட, இவர்கள் அனைவரும் வட்டிக் கொள்கை நிர்ணயிப்பில் எவை எவை முக்கியமான காரணிகள் என்பதிலும், அவற்றின் விளைவுகள் யாவை என்பதிலும் ஓரளவு கருத்தொற்றுமை கொண்டுள்ளார்கள். கடன் மூலதனத்திற்குரிய அளிப்பு அல்லது தேவை, அல்லது ரொக்கப் பண இருப்புகளுக்குரிய அளிப்பு அல்லது தேவை ஆகிய இவற்றுள் எதைக்கொண்டு வேண்டுமானாலும் மேற்குறித்த வட்டிக் கொள்கைகளை விளக்கலாம்.

பணத் தொகைகளின் அளவில் ஏற்படும் மாறுதல்கள், வட்டி விகிதத்தை வரையறுப்பதில் பெரும் பங்கு கொள்ளுகின்றன என்பதை நம் அனுபவத்தில் கண்டிருக்கிறோம். பாங்குக் கடன் இருப்பின்

[1] 1945, அக்டோபரில் துவக்கிவைக்கப்பட்ட 'மலிவுப் பணக்' கொள்கை (The 'Cheap Money' Policy) வட்டியின் பணவாக்கக் கொள்கையை ஓரளவு உறுதி செய்திருக்கிறது. இது நீண்ட கால வட்டி விகிதத்தை $2\frac{1}{2}$ சத விகிதத்திற்குக் குறைக்கக் கருதியது; அந்த அளவுக்குக் குறைத்தும்விட்டது; 1946, அக்டோபரில், ஒரு வார காலத்திற்கோ அல்லது சற்றுக் கூடவோ, $2\frac{1}{2}$ சதவிகித கன்சோல்கள் உண்மையில் 100ஐ எட்டிவிட்டன. ஆனால், இன்னொன்றையும் நினைவிற் கொள்ளவேண்டும். அதாவது. கடன் அளித்தற்கு உரிய இதர வாய்ப்புகளெல்லாம், புது முதலீடுகளின் மீது விதிக்கப்படும் வரையறைகளால் மிகவும் கட்டுப்படுத்தப்படுகின்றன. (இதில், கிடைத்தற்கரிய பொருள்களின் ஒதுக்கீடு, தனியார் கட்டிடங்களின்மீதான கட்டுப்பாடுகள் என்பன அடங்கும்.) என்றாலுங்கூட, நீண்டகால வட்டி விகிதத்தை $2\frac{1}{2}$ சதவிகிதத்திலேயே நிறுத்தி வைத்தற்குத் தேவைப்படக்கூடிய பணத் தொகையில் ஏற்பட்டுள்ள தொடர்ந்த உயர்வானது, அரசாங்கம் அனுமதிக்கத் துணிந்ததைவிட அதிகமாகியே உள்ளது. (1946, ஏப்ரல் - செப்டம்பர் உள்ளிட்ட ஆறு மாதங்களில், பாங்கு டெபாசிட்டுகள் 12 சதவிகிதம் உயர்ந்துள்ளன. 1947-ல் அரசாங்கக் கோட்பாடு பிசுபிசுத்து விட்டதால், நீண்ட கால வட்டி விகிதம், கொஞ்சம் கொஞ்சமாக உயர்ந்து, முந்திய அளவாகிய 3 சதவிகிதத்தை எட்டிவிட்டது.

விரிவானது கடன் மூலதனத்தின் அளிப்பில் ஏற்படும் உயர்வு என்றும் நாம் சொல்லலாம்; அல்லது கீன்சு என்பவர் செய்தது போல, மக்கள் தம்மிடம் மிகுதியான பண இருப்பை வைத்திருக்கு மாறு தூண்டும்வகையில் வட்டி விகிதங்கள் குறையலாம் என்றும் தெளிவுபடுத்தலாம்.

என்றாலுங்கூட, ரொக்கப் பண அளிப்பில் ஏற்படும் தொடர்ந்த உயர்வு, பணவீக்கத்திற்கும் விலை உயர்வுகட்கும் வழி ஏற்படுத்தும்; இதனால் வட்டி விகிதங்கள் உயரும். பணத்தைத் திரும்பப்பெறும் நாளில் அதற்குரிய வாங்கும் சக்தி குறையுமானால், பணத்தை இப்பொழுது கடன் கொடுக்க மக்கள் விரும்பமட்டார்கள். எனவே, தம்முடைய சொத்துகளை ரொக்க வடிவிலோ, அல்லது பத்திரங்கள், உண்டியல்கள் வடிவிலோ வைத்துக்கொள்ள முயல்வார்கள். மேலும், பங்குகள், வெளிப்படையான சொத்துகள் (நிலம், கட்டடம் அல்லது இவற்றிற்குரிய காகித உரிமைகள் (paper titles) முதலிய வடிவங் களிலும் தம் சொத்துகளை வைத்துக்கொள்ள முற்படுவார்கள்.

கையில் இருக்கும் ஈடுகளின் மொத்த அளவோடு ஒப்பிடுகையில் புதுக் கடன்களின் வரவு குறைவாயிருப்பதால், வட்டிக்குரிய திருப்தி யான விளக்கமாக பணவாக்கக் கோட்பாடு தோன்றக்கூடும். என்றாலுங்கூட, முதலின் இறுதிநிலை ஆக்கத்திறக் கருத்தையும் இங்கு முற்றிலும் நீக்கிவிடுதல் கூடாது. உற்பத்தி செய்வதற்குக் காலம் பிடிக்கிறது. அதிகமாக மூலதனத்தைப் பயன்கொண்டு மேற்கொள்ளப்பெறும் புதிய முறைகள் அதிக உற்பத்தியைத் தரு கின்றன—இவ்விரண்டும் (கால நீட்டிப்பு, அதிக மூலதனத் தேவை) தொழில், வணிக நிலையங்களிலிருந்து உருப்பெரு முதலுக்கு ஏற்படும் தேவையை மிகுதியும் உயர்த்துகின்றன; இதனால் அதிக மான வருவாய்க்கும் வழி செய்கின்றன. இந்த அதிக வருவாயி லிருந்து வட்டி விகிதத்தைச் செலுத்திக்கொள்ளலாம். எளிய நாடுகளில் வட்டி விகிதம் அதிகமாயிருப்பதற்குக் காரணம், அந் நாடுகளில் மூலதனப் பற்றாக்குறை இருப்பதும், முதலின் இறுதிநிலை ஆக்கத்திறம் அதிகமாக இருப்பதுமே ஆகும். இந்த நிலையை ரொக்கப் பணத்தின் அளவை உயர்த்திவிடுவதால்மட்டும் மாற்றிவிட முடியாது. கிரேட் பிரிட்டன் போன்ற நாட்டில், பண ஆக்க சக்திகள் ஏனைய 'உண்மையான' சக்திகளை அமுக்கிவிட்டதுபோலத் தோன்றும். ஆனால் ஒன்று, இலாபத்தில் எதிர்பார்க்கப்படும் விகிதத்தில் ஏற்படும் குறிப்பிடத்தக்க மாறுதல் (மேல் நோக்கியோ கீழ் நோக்கியோ)—அதாவது, முதலின் இறுதிநிலை ஆக்கத்திறத்தில் ஏற்படும் மாறுதல், அதே திசையில் வட்டி விகிதங்களிலும் மாறுதலை உண்டாக்கவே முற்படும்.

இன்னொரு சிறிய குறிப்பும் உள்ளது. அதாவது, இந்தப் பண ஆக்கக் கோட்பாடு, நீண்ட கால வட்டி விகிதத்தைவிடக் குறைந்த கால வட்டி விகிதத்தையே விளக்குகிறது என்பது எனது கருத்தாகும். கீன்சு என்பார் சொல்வதுபோல, ரொக்கமாகவே பணத்தை வைத்திருப்பதற்குப் பதிலாக மேற்கொள்ளக்கூடிய இதர வழிகள், ஈடுகளாக, பத்திரங்களாக அப் பணத்தை மாற்றி வைத்திருப்பதாகும். ஆனால், உண்டியல்களும் வட்டியை அளிக்கின்றன. அவற்றை வைத்திருக்கிற ஒருவர், தவணை முடியும்வரை குறிப்பிட்ட காலத்திற்குப் பொறுத்திருப்பாரேயானால், அவற்றின் மூலதன மதிப்புக் குறைவதே இல்லை. தனது மூலதனத்தை இழப்பு ஆபத்துக்கு உள்ளாக்காமல், உண்டியல்களை வாங்கி வைத்திருப்பதன்மூலம், தனது ரொக்க நீர்மையை விட்டுக்கொடுத்து, அதற்குரிய வட்டியை ஒருவர் பெற்றுக்கொள்ளலாம். இந்த நோக்கில் பார்த்தால், கருவூல உண்டியலில் முதலீடு செய்யும் பணக்காரனுக்குக் கிடைக்கும் நலங்களைப்போல, அஞ்சல் நிலையச் சேமிப்பில் தனது காசுகளைப் போடும் ஏழைக்கும் ஒரேமாதிரியான நலங்கள் கிட்டுகின்றன.

ரொக்க நீர்மை விருப்பம் காலத்திற்குக் காலம் வன்மையான மாறுதல்கட்கு உள்ளாகின்றது; இது குறைந்த கால விகிதங்களில் நன்கு பிரதிபலிக்கிறது. மக்கள், தாம் வாங்கியிருக்கும் பத்திரங்களை அப்போதைய குறைந்த கால விகிதங்கள் அதிகமாயிருக்கின்றன என்பதால், அப் பத்திரங்கட்குரிய இயல்பான மதிப்பிற்குக் கீழ் விற்க முற்படுவதேன்? அல்லது அவற்றிற்குரிய அப்போதைய குறைந்த கால விகிதங்கள் குறைவாயிருக்கின்றன என்பதால், அவற்றிற்குரிய இயல்பான மதிப்பிற்கு மேல் வாங்க முற்படுவதேன்? எனவே, குறைந்த கால விகிதங்களைவிட நீண்ட கால விகிதங்களே மிகுதியும் நிலையாயிருக்க முற்படுகின்றன என்பது இதிலிருந்து தெளிவாகின்றது. மேலும், பொதுவாக நீண்ட கால விகிதங்கள் அதிகமாகவே இருக்கின்றன; குறைந்த கால விகிதங்களை விட இவ் விகிதங்கள் அதிகமாயிருப்பதற்குக் காரணம் என்ன? பத்திரங்களை வாங்கியிருப்போர், நீண்ட காலக் கெடுவில், அவற்றிற்குரிய விலையில் வீழ்ச்சி ஏற்படக்கூடிய ஆபத்திருந்தால், அந்த ஆபத்தைச் சரிக்கட்டுவதற்காக அவர்கட்குத் தரப்படும் தவணைப் பணமாக இந்த வித்தியாசத்தைச் சொல்லலாம்.

# 28. வாரமும் போலி வாரமும்
## (Rent and Quasi-rent)

### 1. சாதாரணமாக 'வாரம்' என்றால் பொருளென்ன ?

ஒரு பொருளைக் குறிப்பிட்ட காலத்திற்கு உபயோகித்துக்கொள்ளுவதற்காக அளிக்கப்படும் குத்தகை; அல்லது ஒப்பந்தப் பணமே வாரம் என்று பொதுவாக அழைக்கப்படுகிறது. நிலச்சுவான்தாரன், தனது நிலத்தை ஒரு குத்தகைதாரனுக்குக் குறிப்பிட்ட சில ஆண்டுகட்கு வாடகைக்குக் கொடுத்துவிடுகிறான். குத்தகைதாரன், இந்த நிலத்தைத் தான் பயன்படுத்திக்கொள்ளுவதற்காக நிர்ணயிக்கப்பட்ட ஒப்பந்தத் தொகையை ஆண்டுதோறும் நிலச்சுவான்தாரனுக்குச் செலுத்துவான். இந்த நிர்ணயிக்கப்பட்ட ஒப்பந்தத் தொகையே நில வாரம் என்று அழைக்கப்படுகிறது.

எத்தகைய நீடித்த நுகர்வு உறுதிப் பொருள்களை (durable goods) உடைமையாகக் கொண்டவனும், அதைத் தானே உபயோகப்படுத்திக் கொள்வதற்குப் பதிலாக இன்னொருவனிடம் கொடுத்து அதற்காக ஒரு குறிப்பிட்ட தொகையைப் பிரதி வருவாயாகப் பெற்றுக்கொள்ளலாம். எனவே, நிலத்திற்கு வாரம் பெறுவதைப் போல, வீடு, இயந்திரம், குளிர்பதனப் பெட்டி முதலியவற்றுள் (உதாரணத்திற்காக இம் மூன்றினை மட்டும் குறிப்பிட்டேன்; இன்னும் எத்தனையோ உள்ளன.) எதற்கும் வாரம் அல்லது வாடகை பெறலாம். இப்படிச் செய்துகொள்ளப்படும் ஒப்பந்தத்தில் வாரத்தை தானியமாகவோ அல்லது வேறு வகைப் பொருளாகவோ கொடுக்கவேண்டும் என்று கணக்கிட்டுக்கொள்ளலாம்; என்றாலும், பெரும்பாலும் பணக் கணக்கிலேயே வாரம் நிர்ணயிக்கப்படுகிறது.

இந்த ஒப்பந்தக் காலத்தில், வட்டியாக ஒரு நிலையான வருமானத்தைப் பெறுபவனைப்போல, நிலச் சொந்தக்காரனும் வாரமாக, ஒரு நிலையான வருமானத்தைப் பெறுகின்றான். தனது நிலத்தைக் குத்தகைதாரன் ஒருவனுக்கு, குறிப்பிட்ட வருட வாரத்தில் வாடகைக்கு விட்டுள்ள நிலச் சொந்தக்காரன் ஒருவனை

எடுத்துக்கொள்ளுவோம். அவனும், குத்தகைதாரனும் தமக்குள் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளார்கள்; இருவரும் அதன்படி நடந்துகொள்ளவேண்டும். ஒப்பந்தத்திற்குப் பின்னர், நாளடை வில் ஏதேனும் மாற்றங்கள் ஏற்படலாம். ஒப்பந்தம் செய்யப்பட்ட சமயத்தில் எதிர்பார்த்ததைவிடப் பிற்பாடு, நிலத்திலிருந்து கிடைக் கும் நிகரப் பணவருவாய் உயர்ந்திருக்கலாம்; இந்த உயர்வை உணர்ந்த நிலச் சொந்தக்காரன், தனக்கு அதிகமான வாரம் வேண்டு மென்று கேட்க ஆசைப்படக்கூடும். ஆனால், அப்படிக் கேட்கும் உரிமை உண்மையில் அவனுக்கு இல்லை; ஏனென்றால், ஒப்பந்தத்தின் விதிகளுக்கு உட்பட்டே அவன் நடந்துகொள்ள வேண்டியதிருக் கிறது. இதைப்போலவே, நிலத்திலிருந்து கிடைக்கும் நிகரப் பண வருவாய் எதிர்பார்த்ததைவிடக் குறைந்துவிட்டாலும், குத்தகை தாரன் ஒப்பந்தப்படி வாரத்தைச் செலுத்தியே ஆகவேண்டும். ஆனால், ஒரு காலக் கெடுவிற்குப் பின்னர் ஒப்பந்தக் கட்டணம் உயர்ந்துவிட்டால், நிலச் சொந்தக்காரன் பழைய குத்தகைதார னுடனே அல்லது புது நபருடனே புதிய ஒப்பந்தத்தை முடித்துக் கொள்ளலாம். பழைய ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்ட நாளில் எதிர்பார்க்கப்பட்டதைவிட, பிற்காலத்தில் நிலத்தின் விளைவு மிகுந் திருந்தால், இப்பொழுது வார விகிதத்தை உயர்த்திக் கேட்கலாம்; இதற்கு மாறாக நிலத்தின் விளைவு குறைந்துவிட்டால், குத்தகை தாரன் தொடர்ந்து நீடிப்பதற்காக, வார விகிதத்தைக் குறைத்து முடிவு செய்யலாம்.

பொதுவாக, நிலத்தின் நிகரப் பண வருவாயில் ஏற்படும் மாறு தல்களும், ஒரு நீடித்த நுகர்வுப் பொருள், குறிப்பிட்ட கால அளவுக்குச் செய்த பணிகளுக்குரிய அங்காடி மதிப்பும், முன் கூட்டிய ஒப்பந்தப்படி வாரத்தை நிர்ணயிக்கின்றன. இந்த நிர்ணயம், இப் பொழுது இப் பொருள்களுக்குக் கிடைக்கும் நடைமுறை வார விகி தத்தைவிடக் கூடியோ குறைந்தோ இருக்கும். முன் கூட்டியே இவ்வாறு செய்யும் நிர்ணயிப்பில் சில சிக்கல்கள் ஏற்படுகின்றன. உதாரணமாக, பொருளாதார மந்த நாளில், ஏற்கெனவே செய்யப் பட்ட உயர் விகித வாரங்களால், பேரிடர்ப்பாடு ஏற்படும். இச் சிக்கல்களைப்பற்றி நாம் இங்கு ஆராயவேண்டிய அவசியமில்லை. எச் சமயத்திலும் ஒரு நீடித்த நுகர்வுப் பொருளுக்குரிய ஆண்டு வாரம் அல்லது வாடகை, அப் பொருளின் சேவைகளிலிருந்து எதிர் பார்க்கப்படும் நிகர ஆண்டு மதிப்போடு சமமாகப் பொருந்தி அமைய முற்படுகின்றது.

இத்தகைய பொருள்களை உடனடியாக உற்பத்தி செய்ய முடியு மென்றால், இவற்றிற்குக் கிடைக்கக்கூடிய வாரம், இவற்றின்

உற்பத்திச் செலவிலிருந்து எஞ்சும் நடைமுறை இலாப விகிதத்திற்குச் சமமாகவே அமைய முற்படும். வார விகிதம் அதிகமாயிருந்தால், உருப்பெறு முதல் இத் துறையில் நுழைந்து, இப்பொழுதிருக்கும் இலாப விகிதத்தைவிட அதிகப்படியான இலாபத்தைப் பெற விழையும். இதன் பலனுக, மேற்குறித்த நீடித்த நுகர்வுப் பொருள்களின் அளிப்பு மிகுதியானுல், அவற்றின் பணிகட்கு உரிய மதிப்பை அது குறைத்துவிடும். மாருக, வார விகிதம் குறைவாயிருந்தால், உருப்பெறு முதல், இத் துறையில் நுழைய விரும்பாது; ஏற்கெனவே உள்ள நீடித்த நுகர்வுப் பொருள்கள் பயன்பட்டுத் தேய்ந்து போனுலும், அவற்றைப் புனரமைக்க எளிதில் முடிவதில்லை; இதனுல் இப் பொருள்களின் பணிகட்குரிய மதிப்பானது, அவற்றைப் புதிதாகத் தயாரிப்பதற்கு ஏதுவான நேரம் வரும்வரை உயர்ந்து விடுகிறது.

அளிப்பை அதிகப்படுத்தவோ குறைக்கவோ முடியாத, சில குறிப்பிட்ட உற்பத்திச் சாதனங்களிலிருந்து கிடைக்கும் வருமானங்களைச் சுட்டுவதற்காகவே, 'வாரம்' என்ற சொல் சில சமயங்களில் பொருளாதார வாதிகளால் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. இந்தப் பொருளில் வாரம் என்பது ஒருவகை எச்சப்பாடு (surplus) ஆகும். உண்மையில்; வாரம் என்பது இவ்வித எச்சப்பாட்டினுலா கிடைக்கிறது? எல்லா நிலங்களுமோ, அல்லது சில பகுதியோ, அல்லது எந்த நீடித்த நுகர்வுப் பண்டமோ, இந்தப் பொருளில் வாரத்தைப் பெறுகின்றனவா ? இந்தத் தனியான விளக்கத்தைத் தெளிவாக்குதற்காக ஓர் அனுமான உதாரணத்தைச் சொல்லுவேன்.

## 2. வாரம் என்பது ஒருவகை எச்சம்

ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பு கோதுமையைமட்டுமே பயிரிட இடம் தரும் என்றும், கோதுமை பயிரிட வேறு நிலங்கள் ஏதும் கிடைக்கவில்லை என்றும் வைத்துக்கொள்ளுவோம். மேலும், இக் கோதுமை விளைநிலம் எல்லாம் ஒரே தன்மையுடையன (homogeneous) என்றும், ஒரு துண்டு நிலத்தை இன்னெரு துண்டு நிலம் சமமாக ஈடு செய்யும் ஒரே அளவும் தகுதியும் உடையன என்றும் வைத்துக்கொள்ளுவோம். இம்மாதிரி எடுகோள்களை வைத்துக் கொள்ளுவதெல்லாம் ஒரு வகையில் பொருத்தமற்ற முறைதான்; என்றுலும், 'எச்சம்' என்ற சிறப்புப் பொருளில் 'வாரம்' குறிப்பிடப்படுவதை விளக்குவதற்காகவே இங்கு நான் இப்படிச் சொல்ல வேண்டியதிருக்கிறது.

உற்பத்திக்குரிய பிற சாதனங்களில் எவற்றின் கூட்டுறவும் இன்றி இந்த நிலம் கோதுமை விளைச்சலைத் தருகிறதென்றும்,

ஆண்டொன்றுக்கு ஒவ்வோர் ஏகராவும் ஒரு குறிப்பிட்ட அளவு கோதுமை விளைவைத் தருகிறதென்றும் கொண்டால், இந்த நிலத்தின் ஆண்டு வருமானம் என்பது, அதனுல் விளைவிக்கப்படும் கோதுமை அளவின் மதிப்பே ஆகும். இவ்விதம், ஒரு குறிப்பிட்ட விளைநிலமானது, ஒவ்வோர் ஆண்டும் விளைவிக்கும் கோதுமையின் அளவிலிருந்து, இதன் வருமானம் அல்லது 'வாரம்' அமைகின்றது. இந்த வருமானம், அல்லது வாரமானது, கோதுமைக்குரிய தேவையின் அளவைச் சார்ந்து அமையும். எல்லாக் கோதுமை நிலங்களும் ஒரே தன்மையுடையனவாயிருப்பதால் இவை அனைத்தும் பயன்படுத்தப்பட்டுவிடும். (சர்வாதீனர்கள் எல்லா நிலங்களையும் கொண்டு அவற்றைப் பயிரிடாமல் வைத்திருந்தாலோ, அல்லது நிலங்கட்கு உரிய தனி நபர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கூட்டாகச் சர்வாதீன முடிவுகளைக் கொண்டாலோ உற்பத்தி அளவு மாறக்கூடும்.) இங்ஙனம், சராசரியாக ஒரு தன்மையுடைய எல்லா நிலங்களும் பயன்படுத்தப்படுவதால், இவற்றிலிருந்து கிடைக்கும் ஆண்டு வருமானமும் நிலையாக அமைந்து விடுகின்றது.

ஓர் ஆண்டில், பருவ நிலை மாற்றம் காரணமாக, கோதுமையின் விளைவிலும் மாற்றம் ஏற்படுவதாக வைத்துக்கொள்ளுவோம். சாதகமான பருவ நிலையால் மிகுதியான விளைவு கிடைக்கும்; இங்ஙனம் விளைவு மிகுந்துவிட்டாலுங்கூட அதன் பயனுக நிலத்திற்கு உரியவர்கட்கு ஏதேனும் ஆதாயம் இருக்கிறதா என்ருல், அது கோதுமைக்குரிய தேவையின் நெகிழ்ச்சித் தன்மையைச் சார்ந்தே அமையும். அவர்கள் இலாபமும் பெறலாம்; நட்டமும் அடையலாம். மிகுதியான கோதுமை விளைவிருந்தும், தேவைக் குறைவு காரணமாக விலை கூடாவிட்டால், நிலத்திற்குரியவனுக்கு நட்டம் ஏற்பட்டாலுங்கூட, கோதுமையை நுகர்வோர் விளைவு மிகுதியால் ஏற்படும் சாதகங்களைப் பயன்கொள்வார்கள். மொத்த உற்பத்தியின் அளிப்பானது மிகுதியாகிவிட்டதால், நுகர்வோரின் இலாபங்கள் விளைவிப்போரின் நட்டங்கட்கு மேலாகவே இருக்கும் என்பதை நியாயமாக உணர முடியும்.

உண்மையில், நிலத்தால் குறைந்த அளவு உற்பத்தியையே தரமுடியும். இதற்கும், இதர பல காரணிகளின் உதவியை 'நிலம்' பெறவேண்டியதிருக்கிறது. இன்னும் கொஞ்சம் எளிதில் விளக்கம் பெறுதற்காக, இந் நிலத்திற்கு 'ஒரே தன்மையான' உழைப்பே தேவைப்படுகிறது எனக் கொள்ளுவோம். இந்த உழைப்பு, வேறு துறைத் தொழில்களிலேயே ஈடுபடுத்தப்பட்டிருக்குமானுல், கோதுமை நிலச் சொந்தக்காரர்கள் இந்த உழைப்பை வாடகைக்குப் பெறுதற்

காகக் கொடுக்கக்கூடிய கூலி நிலையாக நிர்ணயிக்கப்பட்டுவிடுகிறது. இந்த உழைப்பிற்கு, இதர தொழில்களில் உள்ள இறுதிநிலை ஆக்கத் திறத்திற்குச் சமமாக இவர்கள் அளிக்கும் கூலியின் அளவானது அமைந்திருக்கவேண்டும்.

இந்த உழைப்பில் எவ்வளவு விகிதம்—கோதுமை நிலத்தின் ஒவ்வோர் ஏகராவிலும் (அல்லது சதுர மைல்) ஈடுபடுத்தப்படும்? எவ்வளவிற்கு அதிகமாக உழைப்பு ஈடுபடுத்தப்படுகிறதோ (ஒரு குறிப்பிட்ட எல்லைவரை) அவ்வளவிற்கு அதிகமாகக் கோதுமையின் மொத்த உற்பத்தியும் பெருகும். ஆனால், குறிப்பிட்ட ஒரு நிலைக்குப் பின்னர், அதிகமான உழைப்பை ஒரு வரையறுத்த நிலப் பரப்பிற்குள்ளேயே உய்த்தால், அந்த உழைப்பின் இறுதிநிலைத் திறம் குறைந்துவிடும். எனவே, கோதுமை விளைவைப் பொறுத்த வரையில் அதற்குரிய விலையும், அதற்குத் தேவைப்படும் உழைப்பின் விகிதமும், நிலச் சொந்தக்காரனுக்காகச் சந்தை நிலவரத்தாலேயே அறுதியிடப்பட்டுவிடுகின்றன. இதை நினைவிற்கொண்டே, அவன் தனது நிலத்திலிருந்து பெறும் வருமானம் அல்லது வாரத்தை எவ்வளவிற்கு உயர்த்த முடியுமோ அவ்வளவிற்குத் தேவையான உழைப்பைமட்டும் ஈடுபடுத்துவான். இந்த உழைப்பின் அளவானது, உழைப்பின் இறுதிநிலை ஆக்க மதிப்பிற்குச் சமமாக ஒவ்வொரு மனிதனுக்கும் அறுதியிடப்பட்ட கூலியை (fixed wage) நிர்ணயிக்கும் அளவுகோலாக அமைந்துவிடுகிறது.




கோதுமை விளைநிலத்தில் மிகுதியான மனிதர்கள் வேலைக்கு அமர்த்தப்படுவதால், கோதுமைத் தொழிலில் உழைப்புக்கு ஏற்படும் தேவை மிகுதி காரணமாக, ஒவ்வொரு மனிதனுக்கும் உரிய கூலி அளவு உயரக்கூடும். அதிகமான விளைச்சல் காரணமாகவும்

கோதுமையின் விலை குறையக்கூடும். இந் நிலை முன்னதாகவே ஏற்பட்டுவிட்டதென்றும், பல ஆண்டுகளாகக் கோதுமையின் விலையும் உழைப்பாளர்கட்குரிய கூலியும் சீராகவே இருந்ததெனவும் வைத்துக் கொள்ளலாம். இவ்விதம், கோதுமை நிலத்தின் ஒவ்வோர் உரிமையாளனுக்கும், கோதுமை விலையும் கூலி அளவும், சந்தை நிலவரத்தால் அறுதியிடப்பட்டுவிடுகின்றன. கோதுமைக்கு உரிய தேவை மிகுதிப்பட்டால், இதன் விலை உயரும்; விலை உயர்வைக் கண்ட நிலச் சொந்தக்காரர்கள் அதிகமான ஆட்களை அமர்த்தி உற்பத்தியைப் பெருக்க முற்படுவார்கள்; தேவை குறைந்தால், இதற்குமாருக ஆட்களைக் குறைத்து, உற்பத்தியையும் குறைத்துக் கொள்ளுவார்கள். உழைப்பாளர்களின் கூலி குறைந்தால், அப்பொழுதும் அதிகப்படியான ஆட்களை அமர்த்திக்கொள்ளுவார்கள். கூலி உயர்ந்தால் ஆட்களைக் குறைத்துக் கொள்ளுவார்கள். இவ்விதமாக, சரக்குகளை நுகர்வோரின் விருப்பங்கள், விலைவாசி முறையின் (price system) மூலமாகத் தம் செல்வாக்கை வெளியிடுகின்றனர்.

எனவே, பொருளாதார நோக்கில் ஆராய்கையில் 'வாரம்' என்பதற்குக் குறிப்பிட்ட ஒரு காரணியுடன் (அதன் அளிப்புநிலை மாருது உறுதி செய்யப்பட்டிருப்பது) சென்று சேரும் 'மிகுதி' அல்லது 'எச்சம்' என்று விளக்கம் தரலாம். கோதுமை விளைநிலத்தின் அளிப்பை நிலையாக உறுதி செய்துகொள்ளாவிட்டால், இவற்றுள் சில பகுதியை, கோதுமை விலை கூடும்பொழுது, வேறு தானியங்களைப் பயிரிடப் பயன்படுத்திவிடலாம்; அல்லது கூலிகள் உயரும்பொழுது, குறைந்த அளவே உழைப்புத் தேவைப்படும் வகையில் பயிரிடும் முறையில் மாற்றம் செய்துகொள்ளலாம்; அல்லது, கோதுமையின் விலை உயர்கையில், வேறு நிலங்களையும் கோதுமை விளைவுக்காக மாற்றிக்கொள்ளலாம்.

இவ்விதம் நிலைமாருது உறுதி செய்யப்பட்ட கோதுமை விளைநிலப் பரப்பானது ஒரு தன்மையுடையதாக இல்லாவிட்டால், வளமான நிலத்திற்கு அதிக விளைவு கிடைப்பதற்கும், வறண்ட நிலத்திற்கு மிதமான விளைவு கிடைப்பதற்கும் உரிய காரணங்களை நாமே எளிதில் உணர்ந்துகொள்ளலாம். முன்னுல் போடப்பட்டுள்ள விளக்க வரை படத்தைப் (diagram) பாருங்கள். இதில் வளம் நிறைந்த நிலம் OM மனிதர்களை வேலைக்கு அமர்த்தியுள்ளது. படத்தில் உள்ள செங்குத்துக் கோடிட்ட பகுதி இந்த நிலத்திற்கு உரிய வாரத்தைக் குறிப்பிடுகிறது. வரைபடத்தில் வளம் குன்றிய நிலம் ON மனிதர்களை வேலைக்கு அமர்த்தியுள்ளது. படத்தில் உள்ள குறுக்குக் கோடிட்ட பகுதி இந்த நிலத்திற்குரிய வாரத்தைக் குறிப்பிடுகிறது.

கோதுமை நிலப் பகுதிகளில் சிலவற்றைப் பயிரிடாமலே போட்டிருப்பதற்குரிய காரணத்தையும் எளிதில் ஊகித்தறியலாம். உற்பத்திக்கு உதவும் கூட்டுச் சாதனமாகிய உழைப்பிற்குக் கொடுக்கப்படவேண்டிய ஊதியத்தைவிட, அறுவடையாகும் கோதுமையின் மதிப்புக் குறைவாயிருந்தால், பயிரிட்டு நஷ்டமடைவதைவிடப் பயிரிடாமலே நிலத்தைத் தரிசாகப் போட்டுவிட நேரும்.




மேலேயுள்ள வரைபடத்தைப் பாருங்கள். இதன்படி நிலத்திற்குச் சொந்தக்காரன், தனது உற்பத்திப் பொருளை விற்றுப் பெறும் தொகையானது, அவனால், உழைப்பிற்குக் கொடுக்கப்படவேண்டிய கூலியின் அளவைவிட (எவ்வளவு குறைவாக ஆட்களை வைத்துக் கொண்டாலுங்கூட) மிகக் குறைவாக இருக்கிறது என்பதை அறிந்துகொள்ளலாம்.

## 3. நிலமும் வாரமும்

நிலத்திற்கு வாரத்தைத் தரும் ஒரு காரணிக்கு உரிய அளிப்பானது சூழ்நிலைக்குத் தக்கபடி எளிதில் தன்னை மாற்றிக் கொள்ளாது. இந்த முக்கியமான உண்மையிலிருந்தே வாரத்திற்கு உரிய உட்கருத்து தோன்றுகிறது என்பதை, இதுவரை நான் விளக்கி வந்த சிறப்புப் பொருள்மூலமாகத் தெளிவாக்கிக்கொள்ளலாம். இத்தகைய ஒரு சாதனத்தின் அளிப்பானது, அதற்குரிய சம்பாதிப்பு எவ்வளவுதான் குறைந்துபோனாலும் ஒருபோதும் குன்றிவிடாது. ஏனென்றால், இதற்கு அளிப்பு விலை ஏதும் கிடையாது. இந்தச் சாதனத்தின் சம்பாதிப்பு அல்லது வாரம் முழுவதையும் (உதாரணத்திற்கு வரிவிதிப்பால்) எடுத்துக்கொண்டாலும், இருப்பில் உள்ள சாதன அலகுகளின் எண்ணிக்கை அதே நிலையில்தான் இருக்கும். மேலும், இச் சாதனத்தின் அளிப்பை மிகுதிப்படுத்த முடியாது. இச் சாதனத்திற்கு ஏற்படும் தேவை மிகுதி, இருப்பில் உள்ள அலகு

களில் எதையும் கூட்டாமலே, இதற்குரிய சம்பாதிப்பை மிகுதிப் படுத்திவிடும். இதன் விளைவாக இருப்பில் [illegible] அலகுகளின் சம்பாதிப்புகள் தமது முந்திய அளவை நோக்கிக் குறைந்துபோய் விடும். இந்தச் சாதனத்தின் சம்பாதிப்பு—ஒருவகை உபரி அல்லது எச்சம் (அல்லது வாரம்) ஆகின்றது. இச் சம்பாதிப்புகளில் ஏற்படும் மாற்றங்கள், இச் சாதனத்தின் அளிப்பில் எவ்வித மாறுதலும் ஏற்படச் செய்வதில்லை.

இனி நாம் நடைமுறை உலகிற்கு, யதார்த்த உலகிற்குத் திரும்புவோம்; நிகழக்கூடிய உண்மைகளைப்பற்றி ஆராய்வோம். நிலம், வாரத்தைத் தருகிறதென்றால், அது எந்தப் பொருளில் தருகிறது? இதைத் தவிர, வேறு இதர காரணிகள் எவையாவது வாரம் தருகின்றனவா ?

இந்த இடத்தில் நிலத்தின் 'அளிப்பு' (supply) என்பது பின்வரும் பொருள்களைத் தரலாம். (அ) ஒரு குறிப்பிட்ட காரியத்திற்காக மட்டுமே மேற்கொள்ளப்படும் நிலத்தின் அளிப்பு—உதாரணமாக, கோதுமைச் சாகுபடி அல்லது வீடு கட்டும் மனை இடங்கள்; அல்லது (ஆ) உலகம் முழுவதும் உள்ள மொத்த நிலப்பரப்பு, அல்லது (இ) ஒரு குறிப்பிட்ட மாவட்டம் அல்லது நாட்டில் உள்ள மொத்த நிலப் பரப்பு. ஒரு குறிப்பிட்ட காரியத்திற்காகமட்டுமே மேற்கொள்ளப்படும் நிலத்தின் அளிப்பு, தேவையில் ஏற்படும் மாறுதல்கட்குத் தக்கபடி தன்னையும் எளிதில் மாற்றிக்கொள்ளலாம். உலகம் முழுவதிலும் உள்ள மொத்த நிலப் பரப்பு கிட்டத்தட்ட மாறாத உறுதி செய்யப்பட்ட ஒன்றாகும்; இதைப்போலவே தொழிலாளர்களின் எண்ணிக்கையும் மாறாது உறுதி செய்யப்பட்ட ஒன்றாகும். இவ்விரண்டில் உண்மையில் எதுவும் நம்முடைய விளக்கப் போக்கிற்குச் சிறப்பேதும் தரமாட்டாது. ஒரு குறிப்பிட்ட மாவட்டத்தில் உள்ள நிலப்பரப்பளவு உறுதி செய்யப்பட்ட ஒன்றுதான். இதர மாவட்டங்களில் உள்ள நிலங்கள், இதற்கு ஏற்ற பதிலி நிலங்களாக (substitutes) அமைய இயலாதவகையில், இது ஓரளவு நம் விளக்கப் போக்கிற்குச் சிறப்பளித்து உதவக்கூடும்.

(அ) உற்பத்திச் சாதனங்களின் இடப் பெயர்ச்சித் தன்மை (mobility) பற்றி விளக்கியபொழுதே, பல வழிகளில் ஏதாவ தொன்றில், அதிகப்படியான நிலப் பரப்பைப் பயன்படுத்திக்கொள்ள முடியும் என்று குறிப்பிட்டிருக்கிறேன். கோதுமைக்குக் கிராக்கி மிகும்பொழுது கோதுமை விளைநிலங்கட்கும் தேவை மிகுதியாகிறது. இந்த இருவகைத் தேவைகளையும் ஏற்றுச் சமாளிக்க வேண்டுமானால், வேறு தானியங்களைப் பயிரிடும் நிலங்களைக்

கோதுமை பயிரிடும் நிலங்களாக மாற்றிவிடவேண்டும். இதற்கு எதிர்மாறாக, கோதுமைக்குக் கிராக்கி குறைந்தால், ஏற்கெனவே கோதுமை பயிரிடப்படும் நிலங்களை, வேறு தானியப் பயிருக்கு மாற்றி நிலைமையைச் சரிக்கட்டிக்கொள்ளலாம். இவ்விதம், கோதுமை விளை நிலத்தின் அளிப்பானது, தேவையில் ஏற்படும் மாறுதல்களுக்குத் தக்கபடி நெகிழ்ச்சியுடன், தழுவி அமைந்துகொள்ளுகிறது. வேறு எந்தக் காரியங்களுக்கு வேண்டுமானாலும் பயன்கொள்ளக் கூடிய நிலங்கட்கும் இக் கருத்துப் பொருந்தும். இதிலிருந்து என்ன தெரிகிறது ? கோதுமை விளைநிலமாயிருக்கட்டும், அல்லது மேய்ச்சல் நிலமாயிருக்கட்டும், அல்லது மனையிடமாக வேண்டுமானாலும் இருக்கட்டும்—இவையெல்லாம், நாம் இதுவரை வாரம் என்பதற்கு விவாதித்து வந்த சிறப்புப் பொருளில்—எவ்வித 'வாரமும்' தருவதில்லை என்பதுதான் !

(ஆ) உலகத்தின் மொத்த நிலப் பரப்பு அளவு கிட்டத்தட்ட மாறாது உறுதி செய்யப்பட்டிருக்கிறது. எனவே, மக்கட்தொகைப் பெருக்கத்தால், பொதுவாக நிலத்திற்கு ஏற்படும் நிரந்தரமான தேவை மிகுதி, நிலச் சொந்தக்காரர்களின் வருமானத்தில் நிரந்தரமான உயர்வை உண்டாக்கும் ; நிலத்திற்கு ஏற்படும் நிரந்தரமான தேவைக் குறைவு, அவர்களது வருமானத்திலும் நிரந்தரமான குறைவை உண்டாக்கிவிடும்.

கடலைத் தூர்த்து நிலத்தைப் பெறலாம் என்பது ஓரளவு சாத்தியமே. ஹாலந்து நாடு பல சதுர மைல்களையும், கேப் டவுன் மிகப் பரந்த நிலப் பரப்பையும் சமீப ஆண்டுகளில் இவ்வாறு பெற்றிருக்கின்றன. என்றாலுங்கூட, உலகத்தின் நிலப்பரப்பளவில் குறிப்பிடத்தகுந்த சதவீதத்திற்கு உயர்வு ஏற்பட்டுவிடும் என்பது சாத்தியமாகத் தோன்றவில்லை. இவ்வாறு தரிசு நிலங்களைத் திரும்பச் சீர்திருத்தத்திற்குக் கொணர்தற்கு ஏற்படும் செலவுகள் மிக அதிகமாயிருக்கும். அப்படியே சில மாவட்டங்களில் மிக மலிவாக நிலங்களைத் திரும்பக் கொணர்ந்துவிட்டாலும், புதிய விளைநிலக் கொணர்வுக்கு (reclamation) வழி செய்யாமலே நில வாரங்களில் உச்சக்கட்ட உயர்வுகள் ஏற்பட்டுவிடக்கூடும்.

நிலத்தின் உழைப்புத் திறத்தைச் சிறந்த உரமிடுதல்மூலமாக மிகுதிப்படுத்திக்கொள்ளலாம் என்பதும் உண்மைதான். நிலத்தின் உற்பத்திக்குத் தேவை மிகுதி இருக்கும்வரை, உருப்பெறு முதலை இவ்வகையில் பயன்படுத்திக்கொள்ளலாம்—அதாவது, இத்தகைய உருப்பெறுத முதலுக்குக் கிடைக்கும் வருமானமானது, அதன் இறுதிநிலையில், ஏனைய தொழில்களிலிருந்து கிடைக்கக்கூடிய இலாப வீதத்தைவிட உயர்ந்து போகாமல் இருக்கும்வரை இவ்வாறு பயன்

படுத்திக்கொள்ளமுடியும். ஆனால், நிலத்தில் மேற்கொள்ளப்படும் 'அபிவிருத்தி வேலைகள்', நிலத்திற்குரிய சரியான ஒரு பதிலி ஆகி விடமாட்டா. ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் மேலும்மேலும் உரங்களையோ, இதர சாதனங்களையோ போட்டுக்கொண்டிருந்தால், ஒரு குறிப்பிட்ட அளவிற்குப் பின்னர், அவை குறைந்துசெல் விளைவுகளையே நல்கத் தொடங்கிவிடுகின்றன. விவசாயப் பொருள் களுக்கு ஏற்படும் தேவை மிகுதியானது, அதிகமான உருப்பெரு முதலை ஈடுசெய்து, ஏற்கெனவே உள்ள நிலத்தை நன்கு அபிவிருத்தி செய்து இலாபமுடையதாக்குகிறது என்று கொண்டால், இந்த உண்மையே, நிலச்சொந்தக்காரர்கட்குக் கிடைக்கும் வாரம் அல்லது எச்சம் உயர்ந்துவிட்டது என்பதைத்தெளிவாகச் சுட்டிவிடுகின்றது. நாம் முன்னால் போட்டுக் காட்டிய வரைபடத்தின்மூலம் இதை விளக்குவோம். விவசாயப் பொருள்களுக்கு ஏற்பட்ட விலை ஏற்றங்கள், ஏனைய கூட்டுச் சாதனங்களின் இறுதிநிலை உற்பத்தித் திறத்தைக் காட்டும் (மதிப்பு அளவுகளில்) வளைகோட்டை உயர்த்திவிட்டன. ஆனால், அவற்றின் இறுதிநிலை உற்பத்தித் திறத்தைக் காட்டும் வளைகோடு அப்படியே இருக்கிறது. ஆனால் ஒன்று; விளைவுப் பொருள்களின் விலைகளில் ஏற்படும் 20 சதவிகித உயர்வு, எந்த ஓர் உற்பத்தித் திறத்தின் மதிப்பையும் 20 சதவிகிதம் உயர்த்திவிடு கிறது. இது நிலச்சொந்தக்காரரைச் சேர்கின்ற எச்சத்தை அதிக மாக்கிவிடுகிறது ; மேலும், இன்னும் அதிகமான கூட்டுச் சாதனங் களைப் பயன்படுத்துவதற்குத் தக்க பலன்களையும் அளிக்கிறது ; இதனால், அவனைச் சேர்கின்ற எச்சம், இன்னும் அதிகமாகக் கூடு கின்றது.

இந்த நிலையில் பொதுவாக மொத்த நிலத்தின் அளிப்பும் ஏறக் குறைய நிலையாக உறுதி செய்யப்பட்டிருக்கிறது. எனவே, பொது வாக நிலத்தின் தேவையில் ஏற்படும் மாறுதல்கட்கெல்லாம் ஏற்றபடி இந்த அளிப்பால் நெகிழ்ந்துகொடுக்க முடிவதில்லை. இது உழைப் பிற்கும் அப்படியே பொருந்தும். வேலைக்குக் கிடைக்கக்கூடிய தொழிலாளர்களின் மொத்த எண்ணிக்கையும் ஏறக்குறைய நிலையாக உறுதி செய்யப்பட்டிருக்கிறது. கூலிகளில் என்னதான் பொது உயர்வு ஏற்பட்டாலும், அது பிறக்கின்ற குழந்தைகளின் எண்ணிக் கையையும் உயரச் செய்துவிடுமா? ஆனால், அதே சமயத்தில் கூலிக் குறைவு மிக அதிகமாக இருந்துவிட்டால் என்ன ஆகும்? பலபேரைப் பட்டினிபோட்டுத் தொழிலாளர் எண்ணிக்கையைக் குறைத்துவிடும். ஒருவேளை நிலப்பரப்பும் அல்லது தொழிலாளர்களும் ஒரே தன்மை யுடையனவாக அமையாது போய்விட்டால் (அதாவது, இவற்றில் ஏற்றத்தாழ்வு இருந்தால்) என்ன ஏற்படும்? அப்பொழுது, உழைப் பிற்கோ, அல்லது நிலத்திற்கோ ஏற்படும் பொதுவான தேவை மிகுதி

யானது, இதற்கு முன்னர் பயன் கொள்ளுதற்குப் பொருத்தமற்றன என்று கருதப்பட்ட மிகுதியான தொழிலாளர்களேயும், நிலங்களேயும் மீண்டும் பயனுக்குக் கொண்டுவரும். உழைப்பு அல்லது நிலம் ஆகிய இவற்றுள் ஏதாவதொன்றின் இறுதிநிலே ஆக்கத்தை உயர்த்துவதற்காகவும் உருப்பெரு முதலே நிறைய முதலீடு செய்யலாம். ஒருவகை உழைப்பு அல்லது நிலத்தை இன்னென்ருக மாற்றவும் இம் முதலீட்டைப் பயன் கொள்ளலாம். அதாவது, திறப்பாடில்லாத் தொழிலாளி ஒருவனுக்குப் பயிற்சி அளித்து, அவனே நீர்க்குழாயைச் சரிப்படுத்தும் திறமைசாலி ஆக்கிவிடலாம்; சாதாரண மேய்ச்சல் நிலத்தைக் காய்கறித் தோட்டமாக மாற்றிவிடலாம். இவ்விதமாக, ஒரு நிலம் அல்லது உழைப்பின் அளிப்பை எந்த ஒரு குறிப்பிட்ட அலுவலேக் கருதியும், கூட்டியோ குறைத்தோ கொள்ளலாம்.

பொருளாதார நிலேகளில் ஏற்படும் பல மாறுதல்கள், சிலவகை நிலங்கட்கு உரிய உபயோகத்தை அதிகப்படுத்தலாம்; சிலவகை நிலங்கட்கு உரிய உபயோகத்தைக் குறைக்கலாம். மொத்தமாக நிலத்திற்கு உரிய தேவையில் நிரந்தரமான மாறுதல் இருந்தால் தான், நமது இப்போதைய விளக்க நோக்கில், நிலங்களின் மொத்தப் பரப்பானது நிலேயாக உறுதி செய்யப்பட்டது (உற்பத்தி மீது எப்போதும் வரையறையான செல்வாக்கைச் செலுத்தும்) என்ற உண்மையானது வெளிப்படையாகத் தெரியவரும். இதே கருத்து, குறிப்பிட்ட வரையறைக்குள் உழைப்பிற்கும் பொருந்தும். மொத்தமாக, நிலத்திற்குச் சென்று சேரும் வருமானம்—வாரத்தின் தன்மையில் இருக்கிறது என்று நாம் சொன்னல், உழைப்பிற்குச் சென்று சேரும் வருமானத்திற்கும் இதையே நாம் சொல்லி ஆக வேண்டும்.

(இ) தவிரவும், குறிப்பிட்ட ஓர் ஏகரா நிலத்தில் பூவியல் அமைப்பும் மாருதவகையில் உறுதி செய்யப்பட்டிருப்பதால், இதையும் முக்கியமான குறிப்பாகக் கொள்ளவேண்டும். ஒரு குறிப்பிட்ட மாவட்டத்தில் உள்ள நிலமெல்லாம் கோதுமைமட்டுமே விளேவிக்கும் நிலமாக இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். கோதுமைக்குத் தேவை மிகுதி ஏற்படுகிறதென்ருல், அது இதர மாவட்டங்களில் உள்ள நிலத்தையும் கோதுமைச் சாகுபடிக்குக் கொண்டுவரும். எனவே, ஏற்கெனவே கோதுமை நிலங்களேக் கொண்டுள்ள மாவட்டத்தினர்க்கு, தேவை மிகுதியால் கிடைக்கக்கூடிய வருமானத்தை முன்னேவிட அதிகமாகப் பெறும் வாய்ப்புக் கிட்டாது. ஏனென்ருல், கோதுமையை எங்கு வேண்டுமானுலும் பயிரிட்டுப் போட்டி விலேக்குக் குறைத்து விற்கமுடியுமல்லவா ?

ஆனால், பின்வருமாறும் ஏற்படக்கூடும். ஒரு குறிப்பிட்ட பரப்பில் உள்ள நிலங்களுக்கான தேவையில் உயர்வு ஏற்பட்டால், இன்னொரு பரப்பில் உள்ள நிலத்தால், இத் தேவையை ஏற்றுச் சமாளித்துவிட முடியாமல் போகலாம். ஒரு குறிப்பிட்ட மாவட்டத்தில் மனை இடங்கட்கு ஏற்படும் தேவையை இதற்கு ஏற்ற, சிறந்த உதாரணமாகக் கூறலாம். லண்டன் நகரம் வளரத் தொடங்கியதும், அதைச் சுற்றிலும் இருந்த நிலங்களின் மதிப்பெல்லாம் தலை தெறிக்கும் வேகத்தில் உயர்ந்துவிட்டன. தென்வேல்சு மாவட்டத்தில், மனை இடங்கட்கு ஏற்பட்ட தேவைக் குறைவால், லண்டனில் ஏற்பட்ட தேவையை ஏற்று, விலை உயர்வைத் தடுக்க முடியவில்லை. (ஓரளவிற்குக் குறைக்கவேண்டுமானால் முடிந்திருக்கலாம்.) மனை இடங்கட்கு உரிய விலையில் பேரளவு வேறுபாடிருக்குமேயானால், சிலர் லண்டனில் வாங்குவதற்குப் பதிலாகத் தென் வேல்சில் அவற்றை வாங்கிப்போட விரும்பலாம். ஆனால், லண்டனில் உள்ள மனை இடங்களோடு ஒப்பிடுகையில், தென் வேல்சு மனை இடங்கள், பல காரியங்கட்கும் உதவமாட்டா; ஏற்ற சரியான பதிலி இடங்களாகவும் அமையமாட்டா. இந்த இடங்களை நாம் விரும்பினால் அப்படியே லண்டனுக்கு மாற்றிக்கொள்ளமுடியுமா? லண்டனில் மனை இடங்கட்கு உரிய அளிப்பு மாறாது உறுதி செய்யப்பட்டிருக்கிறது. இவற்றின் தேவையில் ஏற்படும் உயர்வு, இவற்றிற்குரிய மதிப்பை உயர்த்திவிடுகின்றன. இதனால் இந் நிலங்களுக்கு உரிய வாடகையும் (rent) உயர்ந்துவிடுகிறது. இதே சமயத்தில், இதர மாவட்டங்களில் உள்ள மனை இடங்களின் மதிப்பும் வாடகையும் குறைந்து கொண்டிருந்தாலும், லண்டனில் ஏற்பட்டுள்ள விலை உயர்வில் அது எவ்வித மாற்றத்தையும் செய்யாது. லண்டனில் வேலை செய்பவர்களில் சிலர், அதற்குப் புறமாக உள்ள ஓரிடத்தில் வாழ்ந்து வர விரும்பலாம். தினந்தோறும் லண்டனுக்கு வந்து செல்லும் போக்குவரத்திற்குப் பணத்தையும் நேரத்தையும் இவர்கள் செலவழிக்க வேண்டியதிருக்கும். லண்டனில் உள்ள மனை இடங்களில் விலை மிக உயர்ந்திருப்பதால், அதற்குப் பதிலாக, நாள்தோறும் இச் செலவுகளை ஏற்று, வந்து போவதே இலாபமானது என்று தெளிவாகத் தெரிந்த பின்னரே இந்த முடிவிற்கு அவர்கள் வருவார்கள்.

ஒரு தேசிய அரசாங்கம், தனது நாட்டில் விவசாய உற்பத்திப் பொருள்களை இறக்குமதி செய்வதில் சில கட்டுப்பாடுகளைச் செய்துவிடுவதால் ஏற்படக்கூடிய விளைவுகளை இன்னொரு முக்கியமான உதாரணமாகக் கொள்ளலாம். இந்த இறக்குமதிக் கட்டுப்பாடு, உள்நாட்டில், விவசாயப் பொருள்களின் விலையை உயர்த்தியே வைத்திருக்கிறது. இதன்மூலமாக நாட்டில் உள்ள மொத்த நிலங்களின் வாரம், உற்பத்திப் பொருள்களின் விலை முதலியவற்றையும்

உயர்த்திவைக்க உதவுகிறது. வேறெங்கோ ஒரு நாட்டில் உள்ள நிலங்களை, உள்நாட்டு நிலங்களோடு போட்டியிட விடுவதில்லை; வெளிநாட்டு விவசாயப் பொருள்கள் நுழைய முற்படுகையில் பல தடைகளைக் குறுக்காகப் போட்டு அவற்றின் விலைகளை உயர்த்தியே வைக்கப்படுகிறது.

ஆங்கிலப் புராதனப் பொருளாதாரவாதிகள் வாரத்தைப்பற்றி அதிகமாக வற்புறுத்தி எழுதியுள்ளார்கள். இதனால்தான், வாரத்தைப்பற்றிப் பேசுவதற்காக ஒரு தனி அதிகாரத்தையே நானும் ஒதுக்கிக்கொண்டேன். உற்பத்திக் காரணிகளின் இடப்பெயர்ச்சி, அவற்றின் தனிப்பட்ட திட்டவட்டமான வரையறைச் சிறப்பு என்பனவற்றைப்பற்றிப் பேசுகையில் எவ்வெவற்றைக் குறிப்பிட்டேனே, அவற்றையே இந்த அதிகாரத்தில், வேறு ஒரு நிலையினின்று விளக்க முற்பட்டிருக்கின்றேன். ஆங்கிலப் புராதனப் பொருளாதாரவாதிகள், இரண்டு உண்மைகளால் மிகவும் கவரப் பட்டிருக்கிறார்கள் என்று நான் சந்தேகிக்கிறேன். அவர்கள் பொருளாதார நூலை எழுதிய காலத்தில், இங்கிலாந்து நாட்டு நிலச்சுவான்தாரர்கள், தனிப்பட்ட சிறப்பும் முக்கியத்துவமும் வாய்ந்த சமுதாய இனத்தவராக அமைந்திருந்தார்கள். அப்பொழுது, தானியங்களின் மீது விதிக்கப்படும் இறக்குமதித் தீர்வைகளை அதிகப்படுத்துவதா, குறைப்பதா அல்லது அகற்றியேவிடுவதா என்பது மிக முக்கியமான நடைமுறைப் பிரச்சினையாக இருந்தது என்பதை நினைவிற் கொண்டு, இப் புராதனப் பொருளாதாரவாதிகளின் கருத்துகளைப் படிக்கவேண்டும்.

நிலத்தைத் தவிர, வேறு எந்தெந்தக் காரணிகள், தமது அளிப்பில் குறிப்பிடத்தகுந்த அளவிற்கு நிலையாக உறுதி செய்யப்பட்டுள்ளன என்பதையும், அவற்றுள் எவை எவை வாரம் நல்கக்கூடும் என்பதையும் நாம் இனிப் பார்க்கவேண்டும். ஆம், நிலத்தைத் தவிர இன்னும் சில காரணிகளும் இருக்கின்றன. பிரத்தியேகமான, வேறெங்கும் கிடைக்காத உலோக நீர் ஊற்றுக்குரியவன், அல்லது மக்கள் பார்க்க விரும்பும் வரலாற்றுப் புகழ் பெற்ற இடங்கள், அல்லது டானிகே (Danny Kaye) எனப்படும் சர்வதேச நிக்கல் நிலையம் (உலக நிக்கல் நாணயங்கள் அனைத்தும் இங்குள்ளன) ஆகிய இவை யெல்லாம், வாரத்தின் தன்மையில் ஒருவகை வருமானத்தைப் பெறுகின்றன. எனவே, வாரம் என்ற பொதுக் கருத்தைப் பல்வேறு இதர் வருமானங்கள், அல்லது அவற்றின் பகுதிகள் என்பனவற்றையும் உள்ளடக்கிக்கொள்ளும்வகையில் விரிவுபடுத்தலாம். நாள்பட்டு வரக்கூடிய காரணிகளின் வருமானத்தை வாரம் என்ற பொருளில் அழைக்கலாம்; ஏனென்றால், இச் சாதனங்களின் வரு

மானம் குறைந்துவிட்டால், இவற்றின் அளிப்பையும் அதற்கேற்ப குறைத்துக் கொள்ளுவதற்கு ஓரளவு நாள் செல்லுகிறது அல்லவா ? மேலும், இச் சாதனங்கள் அமைக்கப்பட்டு உற்பத்தி செய்யத் தொடங்குவதற்கு நாள் செல்லக்கூடும்; இதனால், வருமானத்தில் ஏற்படும் உயர்வானது, இவற்றின் அளிப்பிலும் அதற்கேற்பட்ட உயர்வை ஓரளவு இடைவெளிக்குப் பின்னரே உண்டாக்குகின்றது. இத்தகைய விளைவாகிய, போலி வாரக் (quasi-rent) கொள்கையை அடுத்த பிரிவில் விவாதிக்கிறேன். மேலும், ஒரு சாதனத்தின் குறிப்பிட்ட ஓர் அலகானது, தன் 'மாற்றுச் சம்பாத்தியங்கட்கு (transfer earnings) மேலாகப் பெற்றுக்கொள்ளும் எச்ச வருமானத்தையும் உள்ளடக்கும்வகையில் வாரம் என்ற பொதுக் கருத்தை விரித்துப் பொருள் கொள்ளமுடியும்.

## 4. போலி வாரம் (Quasi-rent)

நீண்ட கால அளவில், பொறிகள், கருவிகள்போன்ற உறுதிப் பொருள்களின் சம்பாத்தியம், அவற்றின் உற்பத்திச் செலவுக்குரிய நடப்பு இலாபத்துக்கு ஈடாக இருக்கும். சம்பாத்தியம் இதற்கு அதிகமாயிருப்பின், காலம் நீண்டிருப்பதால், இப் பொருள் அதிகமாக உற்பத்தி செய்யப்படும்; இதனால் அவற்றின் உற்பத்திப் பொருள்களது விலைகள் இறங்கி, அமித சம்பாத்தியம் மறையும். சம்பாத்தியம் குறைவாயிருப்பின், அவை தேய்ந்துபோனாலும், புதியன பொருத்தப்படமாட்டா. ஆகையால், அவற்றின் உற்பத்திப் பொருள்களின் விலை ஏறி, சம்பாத்தியம் உற்பத்திச் செலவிற்குச் சமமாகிவிடும்.

உற்பத்திப் பொருள்களின் தேவைக்குத் தக்கபடி இந்த உற்பத்திப் பொருளின் அளிப்பையும் முழுவதாகப் பொருத்திவைப்பதென்றால் அதற்கு நீண்ட காலம் செல்லும். இந்த நிலையில், அத்தகைய பொருள்களது அலகுகள் பெறும் சம்பாத்தியம் வாரத்தின் இயல்பில் அமைகின்றது. இவ்வகை உறுதிப் பொருள்களின் சம்பாத்தியம், வாரத்தைப்போல இருப்பதால், இத்தகைய வருமானம் 'போலி வாரம்' (quasi-rent) என்று அழைக்கப்படுகின்றது.

முதலில், ஒரு குறிப்பிட்டவகைப் பொருளின் உற்பத்திக்கு ஏற்படக்கூடிய தேவையைப்பற்றிப் பார்ப்போம். உதாரணமாக, ஒரு கப்பலை எடுத்துக்கொள்வோம். சரக்குகளை அடைத்து வைப்பதற்குரிய இடத்தின் தேவை கப்பலில் குறைந்தால் கப்பலின் வருமானத்தை இது சமநிலை அளவுக்குக் கீழே குறைத்து விடுகிறது (அதாவது, கப்பலின் இப்போதைய நடைமுறைப்

பணிக்காக, உடனடியாகக் கொடுக்கப்படும் ஊதியம் அல்லது இலாபத்தைமட்டுமே கணக்கிட்டு இப்பொழுது பேசுகிறேன்). இப்பொழுது பணி செய்கின்ற கப்பல்களின் சமநிலை அளவை உயர்த்துவதற்குப் போதுமான அளவில், இனி வரக்கூடிய கப்பல்களின் எண்ணிக்கையைக் குறைப்பதற்கு அதிக நாளாகுமானுல், அப்பொழுது இரண்டு நிபந்தனைகள் இருந்தாகவேண்டும். முதலில், கப்பல்கள் நாட்பட்டு நிலைக்கவேண்டும். இதனுல், எக் கப்பலாவது பயனற்றுப் போனுலும், பாழ்பட்டு அமிழ்ந்துவிட்டாலும், வேறு எந்த வடிவில் பயன்படாமல் போனுலும், அது கப்பல்களின் மொத்த அளவில் ஒரு சிறு பகுதியாகவே அமைந்திருக்கவேண்டும். இதனுல் ஏனைய கப்பல்களின் பணிமுறை மாருமல் இருக்குமாறு பார்த்துக்கொள்ளவேண்டும். கப்பல்களின் எண்ணிக்கையைவிட, மோட்டார்களின் எண்ணிக்கையில் மிகக் கணிசமான விகிதத்தில் விரைவில் குறைவு ஏற்படும்; ஏனென்ருல், மோட்டார்கள் கப்பல்களை விட எளிதில் தேய்ந்து பயனற்றுப்போகக்கூடியவை; சிறிது காலத்திற்கே உழைக்கக்கூடியவை. இரண்டாவதாக, கப்பல்கள் ஓரளவே திட்டவட்டமான அமைப்பில் இருத்தல்வேண்டும். திரைப்படக் கொட்டகைகளுக்கு உரிய தேவையில் குறைவு ஏற்பட்டுவிட்டால், இவற்றில் சிலவற்றை உடனே கார் நிறுத்தும் இடங்களாக மாற்றிவிடுவதன்மூலமாக (அப்பொழுது கார் நிறுத்தும் இடங்கட்கும் தேவை மிகுதியாக இருக்கவேண்டும்) திரைப்படக் கொட்டகைகட்குச் செல்லும் வருமானத்தை அதிகம் குறைத்துவிடாது பார்த்துக்கொள்ளலாம். இதைப்போல, ஒருவகைக் கப்பலுக்குரிய தேவையில் இறக்கம் ஏற்பட்டால், அவ்வகைக் கப்பல்களைத் தேவை மிகுதியுடைய பிறவகைக் கப்பல்களைப்போல மாற்றி அமைப்பதன்மூலம் சமாளித்துச் சமநிலைப்படுத்திக்கொள்ளலாம். ஆனுல், கப்பல்கள் அனைத்திற்கும் உரிய பொதுத் தேவையிலேயே இறக்கம் ஏற்பட்டுவிட்டதென்ருல், இக் கப்பல்களை வேறுவகையில் பயன்படுத்த முடியாதென்ற நிலையும் ஏற்பட்டுவிட்டால், அப்பொழுது கப்பல் சொந்தக்காரர்களால் ஏதும் செய்யமுடிவதில்லை. கப்பல்களின் வருமானத்தில், அவற்றின் சமநிலை அளவிற்குக்கீழ் இறக்கம் ஏற்பட்டுவிட்டாலும், தம் கப்பல்களை அவர்கள் கப்பல்களாகவே பயன்படுத்திவருதல்வேண்டும்.

இந்த நிலைக்கு ஆளான ஒரு பொருளை இதற்குமேல் உபயோகப்படுத்தாது அதை அப்படியே துண்டுத் துணுக்குகளாக்கிவிடவோ மாற்றி அமைக்காமலோ, அல்லது மூடியே வைத்துவிடவோ செய்யக்கூடிய மாற்று வழிகளும் உள்ளன. ஒரு நெடுங்கால நுகர்வுப் பொருளின் உற்பத்தி மதிப்பானது, அதனேடு தொடர்புடைய இதர கூட்டுக் காரணிகளின் விலையைவிட அதிகமாக இருந்தால்,

அதைத் தொடர்ந்து பயன்படுத்துவதால் இலாபமே கிடைக்கிறது. அதாவது, பிற காரணிகளது, 'முதன்மைச்' செலவு[1] (prime cost) அல்லது 'தொழிற்படுத்தும்' (operating) செலவுகளுக்கு மேலாக இப் பொருளின் உற்பத்தி மதிப்பு அமைந்திருக்கிறது என்பது பொருள். எனவே, இந் நெடுங்கால நுகர்வுப் பொருளை வைத்திருப்பவன், எத்தகைய வரவுமின்றி அதை வீணே வைத்திருப்பதைவிட அதைப் பயன்படுத்தி, ஓரளவேனும் வருமானத்தைப் பெற விரும்புகின்றான். (இந்தப் பொருளின் கண்டதுண்ட மதிப்பு மிக அற்பமானதாகவே இருக்கும் என்று கொள்ளுகிறேன்.) மேலும்,இத்தகைய உற்பத்திக்குரிய நுகர்வுப் பொருள் ஒன்றைச் செயல்படுத்தாது பூட்டி வைத்துவிடுவதாலும் சில செலவுகளுக்கு உள்ளாகவேண்டியிருக்கும். இப்படிக் குறிப்பிட்ட காலத்திற்குப் பூட்டிவைத்துவிட்டுப் பிறகு அவற்றைத் திரும்பத் துவக்குவதென்றாலும் [உதாரணமாக, ஊதுலைச் சூளை (blast furnace), நிலக்கரிச் சுரங்கம் என்பனவற்றைக் கொள்ளலாம்] பெருஞ் செலவுகட்கு ஆளாக நேரிடும். எனவே, இத்தகைய நெடுங்கால நுகர்வுப் பொருள்களின் சொந்தக்காரர்கள், இவற்றின் உற்பத்திகட்குரிய தேவை திரும்ப வரும் என்ற நம்பிக்கையில், இவற்றிற்கு ஆகும் முதன்மைச் செலவுகளைவிட இவற்றிலிருந்து பெறப்படும் வருவாயின் அளவு குறைந்திருந்தாலும், தொடர்ந்து தொழில் நடத்தவே விரும்புவார்கள்.

தவிரவும், 'துணைச்' செலவுகள் (supplementary costs) முதன்மைச் செலவுகள் என்பனவற்றின் இடையே எவ்விதக் கடுமையான பிரிவும் கிடையாது என்பதையும் நினைவிற்கொள்ளவேண்டும். இவற்றிற்கு இடையே உள்ள பிரிவானது காலத்தின் நீட்டிப்பைப் பொறுத்தே அமையும். பெரும்பாலான உபகரணங்களில், குறிப்பிட்ட பல பாகங்களை, அடிக்கடி வரையறுத்த இடைவெளிகளில் தவறாது மாற்றியமைத்துச் சீர் செய்யவேண்டும், அல்லது வேறு பாகங்களால் திருத்தி அமைக்கவேண்டும். ஏனைய பாகங்களை நீண்ட இடைவெளிகளில் திருத்தி அமைத்தால் போதும். இதிலிருந்து புலப்படுவது என்னவெனில், ஓர் உபகரணத்தை (உதாரணமாக, ஓர் இயந்திரம்) வாரந்தோறும் அதற்கு ஏற்படும் செலவுகளைக் காட்டிலும் அதற்குரிய வருவாய் மிகுந்திருந்தாலும் கூட, அது உபயோகத்திலிருந்து திரும்பப் பெற்றுக்கொள்ளப்படுகிறது என்பதுதான். இந்த உபகரணமானது தொடர்ந்து உபயோகத்திலிருந்து வரவேண்டுமானால், புதுப்பிப்பதற்காகவும், மாற்றியமைக்கவும், பழுதுபார்ப்பதற்காகவும் மிகுதியாகச் செலவழிக்க

1 முதன்மைச் செலவுகள் என்பன மாறும் செலவுகளோடு (variable costs) தொடர்ந்து அலுவலகத்தை அல்லது தொழிலை நடத்துவதற்காக மேற்கொள்ளப்படும் மாறாச் செலவுகளும் (fixed costs) (அலுவலகச் செலவுகள்) சேர்ந்த மொத்தச் செலவுகள் ஆகும்.

வேண்டிய தருணம் ஒன்று வரக்கூடும்; இச் சமயத்தில் இவ்வித மிகுதிச் செலவீடுகட்குப் பதிலாக இந்த உபகரணத்தைப் பேசாது வைத்து விடுவோமா அல்லது கண்டதுண்டமாகக் கழற்றி விற்று விடுவோமா என்பதை அதற்குரியவனே தீர்மானித்துக்கொள்ள வேண்டும். ஒரே சமயத்தில் இப்படி மிகுதியான செலவீட்டிற்கு ஆளாவதைவிட, இந்த உபகரணத்திற்கு உரியவன், பழுதுபார்த்துச் செப்பம் செய்வதற்காக, அப்போதைக்கப்போது சிறுசிறு தொகைகளைச் செலவழித்து, அவ்வப்போது உபகரணத்தை இயக்கத்தில் வைத்திருக்கலாம். இங்ஙனம், சிறுகச்சிறுகச் செலவழிக்கப்படும் தொகையை எல்லாம் கூட்டினுல், அது இந்த உபகரணத்தால் பெற்ற மொத்த வருமானத்தை மிஞ்சியும் அமைந்துவிடுவதுண்டு. எனவே, இவ்விதம் செலவிடுவதில் உள்ள பொருத்தமானது, இதற்கு உரியவர்களின் முன்னேக்கைச் சார்ந்தமைவதுடன், இப்படி முதலில் செய்யும் செலவால் பிறகு உத்தேசித்த நன்மை கிடைக்குமா என்ற முடிவையும் பொறுத்தே அமையும்.

நீடித்த (நிலம் உள்ளிட்ட) நுகர்வுப் பொருள்களது உரிமையாளர்கள், இப் பொருள்களை ஈடாக வைத்து, நிலை வட்டியில் பணம் கடன் வாங்கியிருக்கலாம். இவர்களது உற்பத்திப் பொருள்களது தேவையில் குறைவு ஏற்பட்டால், முதன்மைச் செலவுகட்கு சரிக்கட்டிக்கொள்ளவும், நிலைத்த வட்டிச் செலவுகளுக்குக் கட்டவும் இவர்களால் இயலாமல் போய்விடும். இந்த நிலை நீடிக்கும்போலத் தோன்றினுல், கொடுக்கல் வாங்கல் முறையில் சில மாற்று அமைப்புகள் ஏற்படக்கூடும். இதன்படி, அடைமானம் அல்லது கடன் பத்திரங்களை வைத்திருப்பவர்கள், ஏற்கெனவே ஒப்புக் கொள்ளப்பட்ட நிலையான பண வருவாயைவிடக் குறைவாகப் பெற்றுக்கொள்ள இசையக்கூடும்.

ஒரு குறிப்பிட்ட ஓர் இயந்திரத்தால் உண்டாக்கப்படும் பொருள்களுக்கு உரிய தேவையில் ஏற்றம் ஏற்படுவதைப்பற்றி இனிப் பார்ப்போம். இத்தகைய இயந்திரங்களின் சம்பாத்தியமானது, நெடுங்காலத்திற்குச் சமநிலை அளவுக்கு மேலாக இருந்துவிட்டால், அப்பொழுது கட்டாயம் இரண்டு நிபந்தனைகள் இருக்க வேண்டும். முதலில், இந்த இயந்திரங்கள் உற்பத்தியைத் தொடங்குவதற்கு நீண்ட காலம் எடுத்துக்கொள்ளவேண்டும்; அல்லது, இவற்றிற்கு அதிகமாகச் செலவழிப்பதன்மூலமாகவே இவற்றின் உற்பத்தியையும் அதிகரிக்கக்கூடிய சாத்தியம் இருக்க வேண்டும். இல்லையென்ருல், இந்தத் துறையில் புகும் புதிய உருப்பெரு முதலின் அளவானது, ஏற்கெனவே உள்ள முதலின் இருப்பை இவற்றின் சம்பாத்தியங்கள் சமநிலை அளவிற்கு மீண்டும் தாழும் வரை அதிகப்படுத்திவிடும். இரண்டாவதாக, ஏனைய இயந்திரங்களை

வைத்திருப்பவர்களால், அவற்றைக் குறுகிய காலக் கெடுவிற்குள், இந்த இயந்திரங்களைப்போல மாற்றியமைத்துச் சம்பாதிப்ப தென்பது இயலாமல் இருக்கவேண்டும். ரப்பர் பயிரிடும் தொழில் இதற்கு ஏற்ற சிறந்த உதாரணம் ஆகும். ரப்பர் மரங்கள் பலன் கொடுப்பதற்கு ஆறேழு ஆண்டுகள் ஆகின்றன. இத்தகைய பொருள்களின் அளிப்பை உடனே அதிகப்படுத்துவதென்றால் எளிதில் இயலாது. ஏனென்றால், இவை வளர்ந்து பலன் தருவதற்கு நீண்ட காலத்தை எடுத்துக்கொள்கின்றன.

பழைய கப்பல் உதாரணத்தையே பார்ப்போமே. கப்பலைக் கட்டுவதற்கு நீண்ட காலம் வேண்டியதிருக்கும்; இப்பொழுதைய கப்பல் கட்டும் தளத்தின் இயன்ற உச்சநிலை அளவு வரையறுக்கப் பட்டிருக்கலாம்; அல்லது அதிகப்படியான திறப்பாட்டுத் தொழி லாளர் வேண்டுமானால், அதிகமான கூலி கொடுத்தே பெறவேண்டிய திருக்கலாம். தவிர, இதர இயந்திரங்களைக் கப்பல்களாக மாற்ற முடியாமல் இருப்பதும் மற்றொரு குறிப்பாகும்.

பொதுவாக, சில இயந்திரங்களின் அளிப்பானது, அவற்றிற்கு உரிய தேவையில் ஏற்படும் இறக்கத்தின் காரணமாக எளிதில் குன்றிவிடமாட்டாது; அதைப்போல, அவற்றின் அளிப்பானது, தேவையில் ஏற்படும் உயர்வின் காரணமாக விரைவில் மிகுந்துவிட வும் மாட்டாது. இவ் விருவகைப் பிரிவுகளையும், நியாயமாக நாம் பிரித்தறியவேண்டியிருந்தாலுங்கூட, இவ்விரண்டும் அடிக்கடி இணைந்தே செயல்படுகின்றன. இத்தகைய உறுதியான, குறிப் பிடப்பட்ட பொருள்களின் (இயந்திரங்களின்) சம்பாத்தியங்கள், வாரத்தின் தன்மையில் அமைந்துள்ளன. எனவே, போலி வாரம் என்ற சொல்—இயந்திரங்கள், வீடுகள், கப்பல்கள், ரப்பர்த் தோட்டங்கள் முதலிய—நீடித்த நுகர்வுப் பொருள்களின் சம்பாத்தி யங்களைக் குறிப்பிடுவதாகமட்டும் கையாளப்படுகின்றது. என்றாலும், இச் சொல் பகுத்தறிவோடு பயன்கொள்ளப்படுகையில், மருத்துவர் கள் முதலிய (மருத்துவர்கள் முதலிய சிலவகைத் தொழிலாளர்களின் அளிப்பை விரைவில் கூட்டவோ குறைக்கவோ முடியாது) சில வகைத் தொழிலாளர் குழுக்களின் வருமானங்களையும் குறிப்பிடு கிறது என்றே கொள்ளவேண்டும்.

## 5. மாற்றுச் சம்பாத்தியங்கள்

பல்வேறு இயந்திரத் தொழில்களில், ஏதாவதொன்றில் அதிகப் படியான நிலம், மிகுதியான தொழிலாளர்கள், ஏராளமான உற்பத்திச் சாதனப் பொருள்கள்(producers goods)என்பனவற்றைப பயன்கொள்ளக்கூடும். இதில் ஒரு குறிப்பிட்ட அலகானது,

உயர்ந்த ஊதியம் தரும் மாற்று உபயோகத்தால் சம்பாதிக்கும் பணத்தின் அளவு; சில சமயங்களில், இந்த அலகின் மாற்றுச் சம்பாத்தியங்களாக அழைக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட தொழிலில் ஆக்கப்பட்ட உற்பத்திப் பொருள்களுக்கு உரிய தேவை குறையுமானால், அந்தத் தொழில் சுருங்க முற்படும். ஏனென்றால், இத் தொழிலில் போடப்பட்டுள்ள சாதனங்களது சம்பாத்தியங்கள் குறைய முற்படும்; இக் குறைவானது, இதில் ஈடுபடுத்தப்பட்டுள்ள சாதன அலகுகளில் சிலவற்றையாவது, தொழில்முனைவர்களையாவது இத் தொழிலைவிட்டு நீங்கி வேறு தொழிலுக்குச் செல்லுமாறு தூண்டிவிடும். நட்டமடைந்துகொண்டிருக்கும் தொழிலில் நீடித்து இருப்பதால் எதிர்பார்க்கக்கூடிய சம்பாத்தியத்தைக் காட்டிலும், மாற்றுச் சம்பாத்தியங்களை இப்பொழுது அதிகமாய்ப் பெறும் அந்த அலகுகளே, தொழிலைவிட்டு வேறு தொழில்களுக்கு நீங்கும். எதிர் விகிதமாக, ஒரு தொழில், இதர இடங்களைவிட இங்கு வருவதால் அதிகமாகச் சம்பாதிக்கக்கூடிய சாதன அலகுகளைத் தன்பால் கவர்வதன்மூலம் அபிவிருத்தியடைந்து பெருகுகிறது.

உதாரணமாக, இத் தொழில், கோதுமை பயிரிடுவது என்று வைத்துக்கொள்ளுவோம். இப்பொழுது கோதுமைச் சாகுபடியில் உள்ள நிலத்தில் சில பகுதியை பார்லி சாகுபடிக்கு மாற்றுவதனால் பெறும் சம்பாத்தியம், ஏற்கெனவே பெற்ற சம்பாத்தியத்தைவிட ஓரளவே குறைவாயிருக்கும். கோதுமை நிலத்தின் சம்பாத்தியத்தில் சிறிய வீழ்ச்சியோ அல்லது பார்லி நிலத்தின் சம்பாத்தியத்தில் சாதாரண உயர்வோ ஏற்பட்டால், இது, இந் நிலங்களின் சொந்தக்காரர்களை கோதுமைச் சாகுபடிக்குப் பதிலாக, பார்லி சாகுபடிக்கு நிலங்களை மாற்றும்படி ஊக்கும். இப்பொழுது கோதுமைச் சாகுபடிக்குக் கீழ் உள்ள இன்னொரு நிலம், இந்தச் சம்பாத்தியத்தில் 95 அல்லது 90 சதவிகிதத்தை, வேறொரு சாகுபடிக்குச் சென்று பெறுகிறது என வைத்துக்கொள்ளுவோம். கோதுமை நிலத்தின் சம்பாத்தியத்தில் ஏற்படக்கூடிய 5 அல்லது 10 சதவிகித வீழ்ச்சியானது, அந் நிலச் சொந்தக்காரர்களை வேறு தானியங்களைப் பயிரிடும்படி ஊக்கிவிடக்கூடும். இதற்கு அடுத்த இறுதி முனையில் கோதுமைச் சாகுபடி தவிர வேறெதற்கும் பயன்பட இயலாத நிலங்களும் சில இருக்கலாம். இந் நிலங்களின் சம்பாத்தியம் கிட்டத்தட்ட பூச்சிய எல்லைக்குச் சென்றாலுங்கூட, இவை தொடர்ந்து கோதுமைச் சாகுபடியே செய்து வரலாம். கோதுமை பயிரிடும் தொழிலின் நோக்கில் பார்த்தால், இந்த நிலத்தின் சம்பாத்தியம் முழுவதும் வாரத்தின் தன்மையிலேயே அமைந்திருப்பது புலப்படும். ஏனென்றால், கோதுமையையே நீடித்துச் சாகுபடி செய்யுமாறு, நிலத்தை இந்த வருமானம் எவ்வகையிலும் ஊக்குவிக்கவேண்டு

மென்ற அவசியம் ஏற்படுவதில்லை. ஒரு தொழிலானது, தராதரமாக மிகுதியான மாற்றுச் சம்பாத்தியங்களைப் பெறும் அலகுகளுடன் மாற்றுச் சம்பாத்தியங்கள் மிகக் குறைவாகவோ அல்லது பூச்சிய மாகவோ உள்ள வேறு சில அலகுகளையும் பயன்படுத்துவதாக வைத்துக்கொள்ளுவோம். (இந்த அலகை, இதைவிட்டு வேறு தொழிலில் பயன்படுத்தினாலும் இதைப்போலவே பயன் தரும்.) இவற்றுள், பின்னால் சொல்லப்பட்ட அலகுகள், திட்டமான அளவில் இருப்பதனால் எத்தகைய பிரதிகூலத்தையும் அடைவதில்லை; மேலும், இவை வாரம் என்ற தன்மையில் மிகுதியான வருமானங்களை அடைகின்றன. ஏனென்றால், பொதுவாக ஓர் அலகானது, தான் அமைந்துள்ள தொழிலில் உள்ள இன்னொரு, சமமான திறமை யுடைய அலகைப்போல சம்பாத்தியத்தைப் பெறும். ஒரு குறிப்பிட்ட தொழில் துறையானது, ஒரு குறிப்பிட்ட சாதனத்திற்குப் போது மான அலகுகளை, அவற்றிற்கு கிடைக்கக்கூடிய மாற்று அலுவல் களுக்குச் செல்லாமல் தடுத்து அவற்றைத் தன்பால் கவர்ந்துகொள்ள வேண்டுமானால், அப்பொழுது அவ் வலகுகள் ஒவ்வொன்றிற்கும் அதிகப்படியான ஒரு தொகையை அளித்தே தீரவேண்டும். மேலும், இத் தொகையை, திட்டமாக அமைந்ததும், திட்டமாக அமையாதது மாகிய இருவகை அலகுகட்கும் ஒரு மாதிரியாகவே அளிக்கவேண்டிய திருக்கும்.

ஒரு தொழிலின் உற்பத்திப் பொருள் அளவிலிருந்து அதன் உற்பத்திச் செலவுகள் எந்த அளவுக்கு மாறுதல் அடையலாம் என்பதை விளக்குவதில், மாற்றுச் சம்பாத்தியங்களின் கொள்கை மிகுதியும் பயன் உடையதாகும். உதாரணமாக, ஒரு தொழிலானது குறிப்பிட்ட சிலவகைத் தொழிலாளர்களையும் இதர சாதன அலகுகளையும், இவை அதிகமான சம்பாத்தியங்களைப் பெற்றுவரும் இதர துறையிலிருந்து தன்னிடம் கவர்வதன்மூலமே குறுகிய காலக் கெடுவில் எளிதில் அபிவிருத்தியடையமுடியும். இத் தொழில், தொழிலாளர்கட்கும் ஏனைய சாதன அலகுகட்கும், இன்னும் அதிகமான சம்பாத்தியத்தை அளித்தால்தான், அவை ஏற்கெனவே தாம் ஈடுபட்டுள்ள துறைகளைவிட்டு இத் தொழிலுக்கு வந்துசேரத் தூண்டுதலாயிருக்கும். அதாவது, இத் தொழிலின் உற்பத்தியில் ஏற்படும் கணிசமான அபிவிருத்தியானது (குறைந்த கால அளவிலாவது) உற்பத்தி அலகு ஒவ்வொன்றின் இறுதிநிலைச் செலவுகளுடனும், சராசரிச் செலவுகளுடனும் சேர்ந்தே வரும். இத் தொழிலில் உள்ள இத்தகைய சாதன அலகுகட்கு அளிக்கப்பட வேண்டிய விலை மிகுதியினாலேயே இந்தச் செலவு உயர்வு ஏற்படு கிறது. இந்த விலை மிகுதியை, இத் தொழிலில் ஏற்கெனவே உள்ள இதர அலகுகட்கும் நிரலே கொடுக்கவேண்டியதிருக்கும்.

# 29. இலாபங்கள்

## (Profits)

### 1. இலாபம் என்றால் என்ன?

ஒரு பொருளின் வாங்கிய விலையை அதன் விற்பனை விலை விஞ்சக்கூடிய, மொத்த இறுதிநிலையை, நாம் சாதாரண வழக்கில் இலாபம் என்று சொல்லுகிறோம். உற்பத்தி செய்யப்பட்ட பொருளை எடுத்துக்கொண்டால், அதன் உற்பத்திக்கு ஆன செலவைவிட, அதை விற்பதால் பெறும் விலையால் மிஞ்சக்கூடிய மொத்த இறுதிநிலையை இலாபம் என்று சொல்லுகிறோம். திரு. ஃபின் (Finn) என்னும் மீன் வியாபாரி, பவுண்டுக்கு 2 ஷில். வீதம் வாங்கி, 2 ஷில். 6 பென்சு வீதம் விற்றால், அவர் பவுண்டொன்றுக்கு 6 பென்சு இலாபம் சம்பாதிப்பதாக, அதாவது 25 சதவிகித இலாபம் பெறுவதாகக் கூறு கிறோம். ஒரு மோட்டார் காரைச் செய்வதற்கு உழைப்பு, மூலப் பொருள்கள் என்பனவற்றிற்கு ஆகும் நேரடிச் செலவு 300 பவுன் ஆகிறது; இந்த மோட்டார் 450 பவுனுக்கு விற்கப்பட்டால் இவ் விற்பனையில் கிடைத்த இலாபம் 150 பவுன்கள், அல்லது 50 சத விகிதம் என்று கூறுகிறோம்.

இவை யெல்லாம் மொத்த இலாப இறுதிநிலைகள் (gross profit margins). நிகர இலாபத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமானால், இடையில் ஏற்படக்கூடிய இன்னும் சில செலவுகளை மொத்த இலாபத் திலிருந்து கழித்துக் கணக்கிடவேண்டும். முற் குறித்த திரு ஃபின் என்னும் மீன் வியாபாரி, தனது விற்பனைக்காகச் சில உதவியாளர்களை அமர்த்தி அவர்கட்குக் கூலி கொடுக்கவேண்டியதிருக்கும்; கடைக்கு வாடகை கொடுக்கவேண்டியதிருக்கும்; ஐஸ் முதலிய இதர உதவிப் பொருள்களை வாங்கிக்கொள்ளவேண்டியதிருக்கும். இதைப்போலத் தொழிற்சாலை, தேய்மானம் முதலிய முதலீட்டுக் கட்டணங்களுக் காகச் செலவிடவேண்டியதிருக்கும்; விளம்பரம் முதலிய செலவுகளை யும் கொடுத்தாகவேண்டியதிருக்கும்.

ஒரு தொழிலகத்தின் ஒவ்வொரு கொடுக்கல் வாங்கலைமட்டும் தனியாக எடுத்து, இதற்குரிய இலாபம் என்ன என்று கண்டறிவதால் பயன் ஏதும் இல்லை; இந்த முறை அத் தொழிலகத்தின் வருமானத்தை முழுவதாக அறிய உதவாது; எனவே, இத் தொழிலகத்தின் ஆண்டுக் கொடுக்கல் வாங்கல்களால் ஏற்படும் எல்லாப் பரிவர்த்தனைகளின் (transactions) மொத்த மதிப்பைக் கணக்கிட்டுக் கொண்டால்தான், அதன் நிகர இலாபத்தைச் சரியாகக் கணக்கிட்டு அறிய முடியும். ஆண்டொன்றுக்கு 10 மில்லியன் பவுன் மொத்தப் பரிவர்த்தனை ஏற்படுகையில், சராசரியாக ஒவ்வொரு கொடுக்கல் வாங்கலிலும் விதிக்கப்படும் 1 சதவிகித நிகர இலாபம், அந்த ஆண்டில் ஒரு லட்சம் பவுன் வருமானத்தை அளிக்கிறது. ஆனால், ஆண்டொன்றுக்கு ஒரு லட்சம் பவுன் மொத்தப் பரிவர்த்தனை ஏற்படுகையில், சராசரியாக ஒவ்வொரு கொடுக்கல் வாங்கலிலும் விதிக்கப்படும் 20 சதவிகித நிகர இலாபம், 20 ஆயிரம் பவுன் வருமானத்தை மட்டுமே அளிக்கிறது. (சவுகரியத்திற்காக இங்கு விற்பனை விலையின் சதவிகிதத்தையே மேற்கொண்டுள்ளேன்.)

முதலீடு செய்யப்பட்டுள்ள மூலதனத்திலிருந்து கிடைக்கும் ஆண்டு வீத வருமானம் வேறு; ஒவ்வொரு கொடுக்கல் வாங்கல் மூலமாகவும் கணக்கிடப்படும் நிகர இலாபம் வேறு. இரண்டும் வெவ்வேறானவை. ஓர் ஆண்டுப் போக்கில், மூலதனத்தின் புரள்வுகளில் ஏற்பட்ட தடவைகளைப் பெருக்கிப் பார்த்துக் கணக்கிடுவதன்மூலமாக, நிகர இலாபத்தோடு ஆண்டு வீத வருமானத்தைச் சமமாக்கிக் காண முடியும் என்பதே இவ் விரண்டிற்கும் உரிய தொடர்பாகும். 1 மில்லியன் பவுன் மூலதனம், ஓர் ஆண்டில் 10 முறை புரட்டப்படுகிறது எனக் கொள்வோம் (அதாவது, 10 மில்லியன் பவுன் புரள்வு ஏற்படுகிறது); இதற்கு ஒவ்வொரு முறையும் கிடைப்பது, சராசரியாக 1 சதவிகித வருமானம் என்றால், இது ஒரு லட்சம் பவுனாகும்; அதாவது போடப்பட்ட மூலதனத்திற்கு 10 சதவிகித இலாபம் கிடைத்திருக்கிறது என்பது பொருளாகும். ஒரு லட்சம் பவுன் மூலதனத்தை இரண்டு ஆண்டுகட்கு ஒருமுறைமட்டுமே புரட்டுவதாகக் (அதாவது, ஆண்டுக்கு 50 ஆயிரம் பவுன் புரள்வே ஏற்படுகிறது) கொள்வோம்; இதற்குச் சராசரியாக 20 சதவிகித நிகர இலாபம் கிடைக்கிறதென்றால், இதன் மொத்த வருமானம் 10 ஆயிரம் பவுனாகும்; அதாவது, போடப்பட்ட மூலதனத்திற்கு 10 சதவிகித இலாபமே கிடைத்திருக்கிறதென்பது பொருளாகும்.

இலாபங்களை ஒருவகை வருமானங்களாகவே இந்த அதிகாரத்தில் நான் ஆராய்கின்றேன். எனவே, முதலீட்டுப் புரள்வுகளுக்குரிய இலாப விகிதங்களைப்பற்றி நான் ஏதும் சொல்லப்போவதில்லை; ஆனால், தொழில், வாணிகம் என்பனவற்றுள் போடப்பட்ட மூலதனத்

திற்குரிய ஆண்டு வருமானமாக இலாபங்களை ஆராய்ந்து பார்க்க முற்படுவேன்.

சொத்திலிருந்து கிடைக்கும் இதர வருமானங்கட்கும் இலாபங்களுக்கும் இடையே தீர்க்கமான கோடிட்டுப் பகுத்து ஆராய்வது கடினமாகும். உதாரணத்திற்குச் சொல்வதென்றால், பத்திரங்களை வைத்திருப்பவர்கட்கு ஆண்டுதோறும் வட்டியாக நிலைத்த வருமானம் கிடைக்கிறது. இதற்கு நேர்மாறானவை இலாபங்கள். இலாபங்கள் என்பன ஏற்றத்தாழ்வான வருமானங்களாகும். ஆனால், ஒரு பாங்கியின் இலாபம் என்று எதைச் சொல்லுகிறோம்? இந்த பாங்கு கொள்முதல் செய்யும் பத்திரங்கள், உண்டியல்களுக்குக் கிடைக்கும் வட்டியும், இது தனது வாடிக்கைகாரர்கட்குக் கொடுத்த கடன்களுக்காகப் பெறும் வட்டியும் சேர்ந்தே (இதன் செலவுகள் போக) பாங்கியின் இலாபமாக அமைகின்றன. நில உடைமையுடைய நிறுவனத்தின் இலாபங்கள் என்பன, இந் நிறுவனம் குத்தகைக்குச் சொத்துகளைக் கொடுப்பதால் பெறும் வாரங்களின் (இதன் செலவுகள் போக) மதிப்பே ஆகும்.

மேலும், ஒரு கம்பெனி, நிலைத்த வட்டி விகிதத்தில் பெற்றுள்ள கடன்களைப்பொறுத்தும் அதன் இலாபங்கள் அமைகின்றன. ஒரே மாதிரியாகத் தொழில் நடத்தும் இரு கம்பெனிகளின் விற்பனை அளவுகள் ஒரேமாதிரியாகவே இருக்கக்கூடும். ஆனால், இதில் ஒரு கம்பெனிமட்டும் குறைவான இலாபத்தைக் காட்டுகிறது எனக் கொண்டால், அதற்குக் காரணம் என்ன? ஏனென்றால், தான் பெற்ற கடன் பத்திரங்கட்கும், பாங்குக் கடன்கட்கும், இக் கம்பெனி ஆண்டுதோறும் இலாபத்திலிருந்து வட்டி கட்டவேண்டியதிருக்கிறது. இன்னொரு கம்பெனிக்கு, எத்தகைய வட்டிச் செலவும் இல்லை. ஏனென்றால், முழுக்க முழுக்கத் தனது மூலதனத்தைக் கொண்டே அது செயல்படுகிறது.

விளக்கத்திற்காக இலாபத்தைமட்டும் தனியாகப் பிரித்து ஆராய்வதிலிருந்து இங்ஙனம் கணக்கிடுவதில் உள்ள இடர்ப்பாடுகள் நம்மைத் தடுப்பதே இல்லை. இலாபங்கட்கு எனத் தனிப்பட்ட சில பண்புகள் உள்ளன. இப் பண்புகள் ஏனையவற்றிலிருந்து வேறுபட்டவை. கூலி என்பது குறிப்பிட்ட அளவு வேலைக்காக அளிக்கப்படுவது; வட்டி என்பது, வாங்கிய கடனுக்காகச் செலுத்தப்படுவது. ஆனால், இலாபம் என்பது இத்தகைய ஒரு விலை அன்று. இலாபங்கள் என்பன ஒருவகை எச்ச இனங்கள் (residual item); ஏனைய செலவுகள் எல்லாம் செய்ததுபோக, மூலதனம் உடையவர்கள் இறுதியாகப் பெறும், ஏற்றத் தாழ்வுடைய வருமானமே, எஞ்சி இருக்கிற பண இருப்பே இலாபம் என்று சொல்லப்படுகிறது.

## 2. ஐக்கிய அரசின் இலாபங்கள்

1961ஆம் ஆண்டிற்கான, பின்வரும் மதிப்பீடுகள், நீலப் புத்தகத்திலிருந்து எடுக்கப்பட்டவை: [தேசிய வருமானம், செலவினங்கள் ஆகியவற்றின் மதிப்பீடுகள் (1962)]

| | | மில்லியன் பவுன்களில் |
|---|---|---|
| 1. | கம்பெனிகளின் மொத்த வர்த்தக இலாபங்கள் ... | 3,436 |
| 2. | பொது நிறுவனக் கூட்டுகளின் (Corporations) மொத்த வர்த்தக எச்சங்கள், அல்லது உபரிகள் ... ... | 653 |
| 3. | ஏனைய கூட்டு வருமானம் (corporate incomes) | |
| | வெளி நாடுகளில் சம்பாதித்த வர்த்தக இலாபங்கள் | 1,030 |
| | வர்த்தகமற்ற இன வருவாய்கள் ... ... | 781 |
| 4. | மத்திய அரசின் மொத்த வர்த்தக வருமானம் ... | 46 |
| 5. | ஸ்தல ஸ்தாபனங்களின் மொத்த வர்த்தக வருமானம் | 44 |
| 6. | சொந்த அலுவல் பார்ப்போரின் மொத்த வருமானங்கள் | 2,120 |
| | மொத்தம் ... | 8,110 |

இந்த மொத்தத்திலிருந்து இலாப இனங்களுக்கு எந்த அளவைச் சேர்க்கவேண்டும்?

மேலே உள்ள பட்டியலில், ஆறுவதாகக் குறிப்பிடப்பட்ட வருமானங்களில், உத்தியோக அலுவலர்கள், உழவர்கள், கடைக்காரகள், இதரவகைச் சொந்தத் தொழில் செய்வோர் ஆகியோர் சம்பாதிப்பனவும் அடங்கும். சொந்த முயற்சியால் சம்பாதிக்கப்படுவதிலிருந்தே இதில் பெரும்பகுதி அமைகின்றது. பயன்படுத்தப்படும் மூலதனத்திற்கான இலாபமாக, இதில் கால்பங்கு அல்லது பாதிக்குக் கீழ்மட்டுமே அமைகின்றது.

சொத்துகளிலிருந்து பெறப்படும் இருப்பிலுள்ள ஈடுகளுக்கான வட்டி முதலிய இதர வருமானங்களை நீக்கிவிட்டு, வர்த்தக இலாபங்களைமட்டுமே சேர்த்துக்கொள்ள விரும்பினால், இந்த வர்த்தக இலாப வழியாக வராது, இதர கூட்டு வருமானமாகப் பெற்ற 781 மில்லியன் பவுன்களை நாம் தனியாக ஒதுக்கிவிடவேண்டியதிருக்கும்.

தனிநபர் இலாபங்களை (private profits) மட்டும் கணக்கிடுவதென்றால், பொது நிறுவனக் கூட்டுகளின் வருமான எச்சங்கள், மத்திய மாநில அரசுகளின் வர்த்தக வருவாய்கள் ஆகியவற்றையெல்லாம் கழித்துவிட வேண்டியதிருக்கும்.

மேலும், மேற்குறித்த பட்டியலில் உள்ள தொகைகள் எல்லாம், (அ) வரிவிதிப்பு, (ஆ) தேய்மானம் ஆகியவற்றிற்கென ஒதுக்கு வதற்கு முன்னர் கணக்கிடப்பட்ட மொத்தத் தொகைகளையே குறிக் கின்றன என்பதை நினைவிற்கொள்ளவேண்டும்.

மேற்குறித்த நீலப் புத்தகம், கம்பெனிகளின் ஒதுக்கி வைப்புக் கணக்கையே (appropriation account) தந்திருக்கிறது. இக் கம்பெனிகள், இலாப ஈவுகள், வட்டி என்பனவற்றிற்கு 1,644 மில்லியன் பவுன்களையும், இங்கிலாந்தின் வரிவிதிப்பிற்கு 816 மில்லி யன் பவுன்களையும், இதர வகைச் செலவுகளையும் கொடுத்ததுபோக, 1,968 மில்லியன் பவுன்களைப் பகிர்வுசெய்யப்படாத இலாபங்களாகக் (undistributed profits) கொண்டிருந்தன.

இந்த 1,968 மில்லியன் பவுனிலிருந்து தேய்மானத்திற்காக ஒரு தொகையை இக் கம்பெனிகள் ஒதுக்கவேண்டியிருந்தது. இதற் காகச் சட்டமுறை ஒதுக்கு அளவு 1,289 மில்லியன் பவுன்களாகும்.

தேய்மானங்கட்காகக் கொடுக்கப்பட்ட இந்தச் சட்டமுறை ஒதுக்கு அளவு (statutory provision) எந்த அளவிற்குப் போதுமானதாகும்? சொத்துகளின் அசல் விலையின் அடிப்படையில் தேய்மானங்களுக் கான இந்தச் சட்டமுறை ஒதுக்கு அளவை நிர்ணயித்திருப்பதாகக் கொள்வோம். சொத்துகளைப் புதுக்கி அமைக்கவேண்டிய சமயத்தில், அவற்றிற்கான விலைகள் கூடிவிட்டால், அப்பொழுது இந்த ஒதுக்கு அளவு மிகமிகக் குறைவாகத் தோன்றும். இதற்கு நிரவல் செய்தற்காக பிரிட்டிசு அரசு, துவக்கநிலைப் படிகளையோ (initial allowances) முதலீட்டுப் படிகளையோ அல்லது இரண்டை யுமோ வழங்கக்கூடும். துவக்கநிலைப் படி என்பது புதிய உற்பத்தி நிலையத்தையோ, சாதனத்தையோ, இயந்திரத்தையோ, இதர சொத்தையோ வாங்கும்பொழுது, அவற்றிற்குரிய தேய்மானங்களைச் சரிக்கட்டிக் கொள்ளுவதற்காக முன்னதாகவே அளிக்கப்படும் ஒரு தேய்மானப் படியாகும். இதைப் பின்வரும் ஆண்டுகளில், தவணை முறையில் செலுத்திவிட வேண்டும். முதலீட்டுப் படி என்பது, புதிய சொத்துகளின்மீது நிரந்தரமான வரிக்குறைப்புச் சலுகை அளிப் பது; இது சொத்தின் விலையில் 30 சதவிகிதத்திற்குச் சமமாக இருக் கிறது. ஒரு குறிப்பிட்ட ஆண்டில், இவ் விருவகைப் படிகளும் அளிக்கப்படவேண்டுமா? அல்லது ஏதாவதொன்றுமட்டுமே வழங்கப் பட வேண்டுமா? அப்படி வழங்கப்பட்டால் எத்தகைய சொத்து களின்மீது, எந்த அளவு வழங்குவது? என்பன போன்றவற்றை முடிவு செய்வதெல்லாம், அந்த ஆண்டில் புதிய முதலீடுகளை ஊக்கிப் பெருக்க நிதியமைச்சர் எந்த அளவிற்கு விரும்புகின்றார் என்பதைப்

பொறுத்தே அமையும். 1961-ல், மொத்தத் தொகையான 1,289 மில்லியன் பவுன்களில், இந்தப் படிகளுக்காகமட்டும் 497 மில்லியன் பவுன்கள் ஒதுக்கப்பட்டுள்ளன.

விலையேற்ற காலங்களில் இலாபங்கள் என்பன, இருப்பு மதிப்பீடுகளையும் (stock appreciation) கொண்டு அமைகின்றன. கணக்கிட்டுப் பார்க்கையில், ஓராண்டிற்குரிய இலாபம் என்பது, அந்த ஆண்டு விற்பனைகளில், அந்த ஆண்டு வாங்குதல்களைக் கழித்து, எஞ்சியதுடன், இருப்புச் சரக்குகளின் விலைமதிப்பில் ஏற்படும் உயர்வையும் கூட்டிக் கணக்கிட்டுப் பெறுவதேயாகும். இதில் கடைசியாகக் குறிப்பிட்ட, 'இருப்புச் சரக்குகளின் விலைமதிப்பில் ஏற்படும் உயர்வு' என்பது கணக்களவில் (ஏட்டளவில்) மட்டுமே இருப்பதாகும்; இந்த உயர்வு மதிப்பிலேயே இருப்புச் சரக்குகளை விற்று முடியும்வரை, இவற்றில் கிடைக்கும் உயர்வுகளைச் செலவழிக்கவோ, பங்குதாரர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கவோ முடியாது. இருப்புகளை விற்கையில், அவற்றை மாற்றியமைத்து ஈடுசெய்வதில் ஏற்படும் மிகுதியான செலவுகளைச் சரிக்கட்டிக் கொள்ளுதற்காகச் சில நிறுவனங்கள், குறிப்பிட்ட அளவு ஒதுக்கு நிதிகளை வைத்துக் கொள்ளுகின்றன. இந்த இருப்பு மதிப்பீடுகள் என்பன, பெறும் புத்தகக் கணக்கில் சுட்டப்படும் இலாபமாக இருப்பதால், தேசிய உற்பத்தி மதிப்புகள், கம்பெனிகள், இதர துறை ஆகியவற்றின் வருமானங்கள் என்பனவற்றிலிருந்து இந்த இருப்பு மதிப்பீடுகளைக் கழித்தே கணக்கிடுவது வழக்கமாக இருக்கிறது; ஏனென்றால், இருப்புகளின் விலை இப்பொழுது போலவே இருந்துவிட்டால், இவற்றை மாற்றியமைத்து ஈடு செய்வதற்கு ஆகும் செலவுகள் இருப்பு மதிப்புகளையும் சேர்த்து விழுங்கிவிடும்.

## 3. இழப்பு ஆபத்தும் நிச்சயமின்மையும் (Risk and Uncertainty)

இலாபங்களின் தோற்றம், நிச்சயமின்மை என்ற நிலையில் இருந்தே எழுகின்றது. நடைமுறை உண்மைகளைப்பற்றிய அறிவுக் குறைவு காரணமாகச் சிலவகை உறுதியற்ற நிலைகள் ஏற்படுகின்றன. உதாரணமாக, சில குறிப்பிட்ட பகுதிகளில் கனிப் பொருள்களைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காக மூலதனத்தைச் செலவழிக்கக்கூடும். அந்த நிலப்பரப்பில், தோண்டி எடுக்கும் செலவிற்கு மேலாக வருவாய் அளிக்கும்வகையில் கனிப்பொருள்கள் இருக்கின்றனவா என்பது தெரிவதில்லை. அப்படி இல்லாமல் போனால், கனிப் பொருள்களைக் கண்டுபிடிப்பதற்காகச் செலவழித்த பணமெல்லாம் வீணாய்ப்போகும்; உண்மையில் கனிப்பொருள்கள் கணிசமாக இருந்துவிட்டால் அது மிகுந்த வருமானத்தைக் கொடுக்கும்.

சந்தையில் புதிதாக ஒரு பொருளை விற்க முற்படுவதும் ஒரு வகைச் சூதாட்டமே ஆகும். வாங்குவோர்கள் இப் பொருளை விரும்பி ஏற்பார்களா மாட்டார்களா என்பதை முன்கூட்டியே திண்ணமாக உணர யாராலும் முடியாது. இப் பொருளை எல்லோரும் விரும்பி வாங்கினால், இதை உற்பத்தி செய்யும் நிலையம், கருவிகள் முதலியவற்றிற்கும், விளம்பரத்திற்கும் செலவழித்த மூலதனம் ஏற்ற இலாபத்தைக் கொடுக்கும். இப் பொருளை எவருமே ஏற்காவிட்டால், அவ்வளவுதான்; அதற்காகச் செலவிட்ட அத்தனை மூலதனமும் அழிந்தே போய்விடும்.

இப்பொழுதைய நடைமுறை உண்மைகளையெல்லாம் ஒருவேளை உணர்ந்துகொண்டாலும், எதிர்காலம் எப்பொழுதுமே நிச்சயமற்று இருக்கிறது. ஒரு தொழிலில் கிடைக்கக்கூடிய இலாபம், பல எதிர்பாராத மாறுதல்களால் பாதிக்கப்படக்கூடும்; பருவகால மாற்றம், உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் ஏற்படும் அரசியல் மாற்றம், மக்களின் விருப்பங்களில் ஏற்படும் மாற்றம் என்பனவெல்லாம் இத்தகைய எதிர்பாராத காரணங்களுள் சில. அறிவுத் துறையில் ஏற்படும் வளர்ச்சியால் ஒரு பண்டத்திற்குப் புதுப் பயன்களும், அல்லது பதிலிகளும் கண்டுபிடிக்கப்படலாம். இதனாலும் விலை மாற்றங்கள் ஏற்படக்கூடும்; இந்த மாற்றங்கள் இலாபத்தைப் பாதிக்கக்கூடும். அடுத்த மாதத்தில் பொருள்களின் செலவும், விலையும் எப்படி இருக்கும் என்று உறுதியாகச் சொல்லமுடியாத நிலையில், அடுத்த ஆண்டிலும், அல்லது ஐந்து வருஷங்களுக்கு அப்பாலும் அவை எப்படி இருக்கும் என்பதை எப்படி இப்பொழுதே கணித்துச் சொல்லமுடியும்? உருப்பெரு முதலை, திட்டமான ஸ்தாவரச் சொத்துகளில் (specific physical assets) முதலீடு செய்பவன் இழப்பு ஆபத்தை மேற்கொள்ளுகிறான் என்பது வெளிப்படை. இவனது வருமானம் போலி வாரத்தின் தன்மையிலேயே இருக்கும்; எல்லாச் செலவுகட்கும்போக எஞ்சியிருக்கும் எந்த வருமானத்தையும் பெற்று இவன் திருப்தி அடைவான்.

இந்த நிச்சயமின்மையிலிருந்து இழப்பு ஆபத்துகள் என்பன தோன்றுகின்றன. இவற்றுள் சில ஆபத்துகளுக்கு எதிராகக் காப்புறுதி (இன்சூரன்சு) உதவியைப் பெற்றுக்கொள்ளலாம். உதாரணமாக, ஓர் இன்சூரன்சு நிறுவனம், தனது கடந்தகால அனுபவத்தைக்கொண்டு, சிலவகைச் சொத்துகளில், தீ விபத்துகளால் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் அழிவு ஏற்படுகிறது என்பதைக் கணக்கிட்டு வைத்திருக்கின்றது, எனவே, இந்த இன்சூரன்சு நிறுவனங்கள் மேற்படி சொத்துகட்கு தீ விபத்தால் ஏற்படக்கூடிய அழிவைக் காட்டிலும், அதிக அளவுள்ள தவணைக் கட்டணங்களை விதிக்கின்றன. அச் சொத்துகட்கு ஏதேனும் விபத்து ஏற்பட்டு

விட்டால், அந்த அழிவை இவை ஈடு செய்து தருகின்றன. கால அடைவில் பிரீமியம் எனப்படும் தவணைப் பணத்தைமட்டும் கட்டி, உரிமைக் கோரிக்கை (claim) பெருதவர்களுடைய பணமானது, உரிமைக் கோரிக்கை பெற்றவர்கட்குக் கொடுக்கப்பட்ட பணம் போக எஞ்சியிருக்கும்வகையில் அதிகமாகவே இருக்கும். இன்சூரன்சுமூலம், காப்புறுதி பெற்றவனுடைய நோக்கில் நின்றுபார்த்தால்,இன்சூரன்சு என்பது பெரிய இழப்பு ஒன்றை ஏற்படுத்தக்கூடிய சிறிய ஆபத்தை, ஒரு திட்டமான செலவாக மாற்றிக்கொள்ள (இன்சூரன்சுப் பிரீமியமாக—காப்புறுதிக் கட்டணமாக) உதவி செய்கிறது ; இழப்பு ஆபத்தினின்று அவனுடைய சொத்துகட்குப் பாதுகாப்பை அளிக்கிறது. ஆனல், இன்சூர் செய்யமுடியாத பல இழப்பு ஆபத்துகளும் உள்ளன; ஏனென்ருல், இவற்றை அளந்தறியவும், விபத்து ஏற்படும் சமயங்களைக் கணித்தறியவும் முடிவதில்லை. இந்தக் காரணங்களாலேயே மூலதனச் சொத்துகளுக்குக் கிடைக்கும் வருமானம் நிச்சயமற்றதாகவும், அடிக்கடி ஏற்றத் தாழ்வுகட்கு ஆளாவதாகவும் இருக்கிறது.

இலாபங்களைப்போல நட்டங்களும் இருக்கின்றன. மூலதனத்திற்குரிய சராசரி இலாபவீதத்தைக் கணக்கிடுகையில், இழப்புகளையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும். சாதாரணப் பங்குகளின் அடையாள மாதிரிகளில், நீண்ட காலத் தவணைக்கு முதலீடு செய்யப்பட்ட ஒரு மில்லியன் பவுன்கள், பாதுகாப்பான நிலைவட்டி ஈடுகளில் போடப்பட்ட ஒரு மில்லியன் பவுன்களைக்காட்டிலும் அதிகமான வருவாயைத் தரும். இந்த வேறுபாடு, இழப்பு ஆபத்தை மேற்கொள்ளுவதற்காகக் கிடைக்கும் கட்டணமாகும். ஆனல், இந்த வருவாய் வேறுபாடானது, மேற்போக்காகப் புலப்படுவதைக் காட்டிலும் உண்மையில் குறைவாகவே இருக்கும். எப்பொழுதென்ருல், நாம் வெற்றிகரமான கம்பெனிகளைமட்டும் கணக்கில்கொண்டு, சராசரி வருவாயானது, மோசமாகத் தொழில் நடத்தும் கம்பெனிகள், திவாலாகிவிட்ட கம்பெனிகள் ஆகியவற்றின் சராசரி வருமானத்தையும் உள்ளடக்கியே இருக்கிறது என்பதை மறந்துவிட்டோமானல், அப்பொழுதே உண்மைக் குறைவு புலப்படும்.

## 4. இலாபங்களில் வேறுபாடுகள்

வணிகச் சுழல் (trade cycle) இலாபங்களின் பொது அளவைப் பாதிப்பதில் முக்கியச் செல்வாக்குப் பெற்றிருக்கிறது. வளமான காலங்களில் இலாபங்கள் மிகுதிப்பட முனைகின்றன; மந்தமான காலங்களில் பல நிறுவனங்கள் நட்டமடைவதால், நடைமுறைச் செலவுகளைச் சரிக்கட்ட இருப்பிலிருந்தும் எடுத்துச் செலவழிக்க வேண்டியிருக்கிறது.

இவ்விதம், பெருக்கமான காலத்தில் கிடைக்கும் வருமானங்களில் இலாபம் மிகுதியான பகுதியைப் பற்றிக்கொள்ளவும், மந்தமான காலத்தில் ஏற்படும் நஷ்டத்தில் இலாபம் மிகுதியான பகுதியை ஏற்றுக்கொள்ளவும் செய்வதற்குரிய காரணம் என்னவென்றால், இலாபங்கள் என்பன செலவெல்லாம் போக எஞ்சிய இனமாக இருப்பதுதான். ஒரு குறுகிய கால அளவில் ஏனைய வருமானங்கள் எல்லாம் தராதரமாக ஒரு நிலையாகவே உள்ளன; ஆனால், இலாபங்கள் என்பன, ஏனைய சாதனச் செலவுகட்கெல்லாம் போக எஞ்சியிருப்பன; எனவே, ஒரு நிலையில் இல்லாதன ஆகும்.

நல்ல வியாபாரக் காலங்கட்கும் மோசமான வியாபாரக் காலங்கட்கும் இடையே இலாபங்களில் ஏற்படும் மிகுதியான ஏற்றத் தாழ்வுகள், நீடித்த நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்யும் முதலீட்டுத் தொழில்களில் (investment industries) இடம் பெறுகின்றன. உறுதியற்ற உடனடி நுகர்வுப் பொருள்களாகிய உணவு, குடிவகைகள், புகையிலை, செய்தித்தாள்கள் (உடைவகையை இதோடு சேர்க்கவில்லை; ஏனென்றால், வறுமையான காலங்களில் இதை நீண்ட நாட்களுக்கு அணிந்துகொள்ள முடியும்) முதலியவற்றிற்கு ஏற்படும் தேவையானது ஓரளவு நிலையாக இருக்கிறது. இத் தொழில்களில் கிடைக்கும் இலாபங்கள் மிகுதியான ஏற்றத்தாழ்வுகட்கு ஆளாவதில்லை; ஆதலால், மிகக் குறைந்த அளவிலேயே கிடைக்கின்றன. உடனடி நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்யும் நிலைபெற்ற தொழிற்சாலைகளின் பங்குகளுக்குக் கிடைக்கும் வருமானமும் ஓரளவு நிலையாகவே இருக்கும்; என்றாலும், இந்த வருமானம், இதர பத்திரங்கள், முதல்தரக் கடன் பத்திரங்கள் ஆகியவற்றின் வருமானத்தைவிட மிக அதிகமாகவும் உயர்ந்துவிடாது.

வளம் நிறைந்த காலத்துடன் உயரும் விலை அளவும் சேர்த்து இணைக்கப்படுகிறது. ஆனால், சமீப நாட்களில் இந்தோனேசியாவில் ஏற்பட்டதைவிட, வளம் பெருகாமலிருக்கையிலேயே விலைகளில் உயர்வை ஏற்படுத்திவிடுதற்கும் இயலும்; அல்லது விலை உயர்வை ஏற்படுத்தாமலேயே வளம்மட்டும் பெருகி நிற்கும் (1920-ல் அமெரிக்காவில் ஏற்பட்டதைப்போல). என்றாலுங்கூட, உயரும் விலையின் அளவு, இலாபங்களையும் உயர்த்தவே முற்படுகிறது. சில நிறுவனங்கள், இப்பொழுது உற்பத்தி செய்து முடிக்கப்பட்ட பொருள்களுக்கு முன்னதாகவே எல்லாச் செலவுகளையும் அளித்துவிட்டன; ஆனால், எதிர்பார்க்கப்பட்டதைவிட இப் பொருள்கள் இப்பொழுது அதிக விலைக்கு விற்பனையாகின்றன. சம்பளங்கள், கூலிகள், வட்டிக் கட்டணங்கள் முதலிய சில நடைமுறைச் செலவுகள் விற்பனை விலைகளைப்போல அவ்வளவிற்கு எளிதில் உயர்ந்துவிடமாட்டா.

எதிர்விகிதமாக, விலையில் ஏற்படும் குறைவு, இலாபங்களையும் குறைக்க முற்படுகிறது; சில சமயங்களில் நட்டங்களையும் தந்து விடுகிறது. ஒவ்வொரு தொழிலாளியின் உற்பத்தித் திறத்தையும் விஞ்சி அளிக்கப்படும் கூலி உயர்வும் இலாபங்களைக் குறைக்க உதவு கிறது. தொழிலாளர்களின் உற்பத்தித் திறத்தைக் கணிசமாக உயர்த்த உதவும் விரைந்த தொழில்நுணுக்க வளர்ச்சி, தொழி லாளர் கூலிகள் நிதானமாயிருந்தால், ஓரளவு இலாபங்களை உயர்த்த உதவும்.

குறைந்த வட்டி விகிதங்கள், (வட்டியின் அளவு குறைக்கப்பட் டிருந்தால்) முதலீட்டை மிகுதியாக ஊக்குவிக்கும்; இதன் பயனாக இலாபங்களையும் உயர்த்த உதவும். ஆனால், முழு வேலையுடைமை உடைய சாதாரணக் காலங்களில், வட்டி விகிதங்கள் அதிகமாயிருப் பதைவிடக் கிட்டத்தட்டக் குறைவாயிருந்தால், இலாப விகிதங்கள் குறைவாயிருக்கும். ஏனென்றால், இவ்விரண்டும் ஒருசேர மூலதனத் திற்குரிய தராதர மிகுதியையோ பற்றாக்குறையையோ பிரதிபலிக் கின்றன. உருப்பெறு முதலை, நிலையான வட்டிக்குக் கடனாகக் கொடுக்கலாம்; அல்லது உறுதியான சொத்துகளாக முதலீடு செய்யலாம். இவற்றுள், முதலில் குறிப்பிட்ட வட்டி குறைந்த வருவாயைத் தந்தால், மிகுதியான உருப்பெறு முதல், சொத்து களில் முதலீடு செய்யப்பட்டுவிடும்; இதுவும் இலாப வீதங்களைக் குறைக்கவே உதவும்.

## 5. இலாபங்களும் வரிகளும்

ஒரு வாணிப நடவடிக்கைக்கு விதிக்கப்படும் எல்லா வரிகளும், அத் தொழிலுக்கு ஆகும் செலவுகளுடன் கூட்டிக்கொள்ளப்படு கின்றன; சொத்து வரி, உள்ளூர் வரி முதலியன மாறாத ஒருவகைச் செலவினங்கள் (fixed costs); இவை உற்பத்திக்குத் தக்கபடியெல்லாம் தாமும் மாறியமைவதில்லை. எனவே, மந்தமான நாட்களிலும், உற்பத்தி குறைந்த நாட்களிலும் இவ் வரிகளின் சுமை மிகுந்த பளுவாயிருக்கும். கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபங்கட்காகப் பயன்படுத்தப்படும் கட்டடங்களுக்கு உரிய உள்ளூர் வரி விகிதங்கள் தராதரமாகக் குறைவாயுள்ளன. ஆனால், இத்தகைய சொத்து வரிகள் இதர சில நாடுகளில் மிக அதிகமாயுள்ளன.

ஒவ்வோர் உற்பத்தி அலகுக்கும் இவ்வளவென்றும், அல்லது விற்பனையாகும் ஒவ்வோர் அலகுக்கும் இவ்வளவென்றும் விதிக் கப்படும் தீர்வைகள் (excise duties) என்பன, மாறும் செலவினங்கள் (variable costs). கிரேட் பிரிட்டனில் குடிவகைகள், புகையிலை,

இன்னும் சில சில்லறை இனங்களின்மீது (இறக்குமதி வரிகளுக்கு இணையான) தீர்வைகள் விதிக்கப்படுகின்றன. கொள்முதல்மீதான வரிகளும் (purchase taxes) இவ்வகையைச் சேர்ந்தவையே.

இத்தகைய தீர்வை அல்லது வரியின் விளைவு என்னவென்றால், ஒரு பொருளை நுகர்வோர் அதற்குச் செலுத்தவேண்டிய விலையை அதிகப்படுத்துவதும், அதன்மூலமாக அப் பொருளின் நுகர்வைக் குறைப்பதுமே ஆகும்; இல்லையென்றால், பொருளின் நுகர்வு அளவு கூடிவிடும். வரி விதிக்கப்படாத காலத்தைக் காட்டிலும், வரி விதிக்கப்பட்ட பொருளை உற்பத்தி செய்யும் தொழிலில், முதலீடு செய்யப்படும் உருப்பெரு முதலின் அளவு, நாளடைவில் குறைய ஆரம்பித்து விடும். வரி விதிப்பிற்குப் பின்னரும், இத் தொழிலில் கிடைக்கும் இலாபம் கணிசமாக இருந்தால்தான், இதுவும் தொடர்ந்து முதலீடு செய்யப்படும்.

கிரேட் பிரிட்டனில் பல சந்தர்ப்பங்களில், அதிலும் குறிப்பாகப் போர்க் காலங்களில், அமித இலாப வரி (excess profits tax) என ஒன்று விதிக்கப்படுகிறது. இதன்படி, ஒரு தொழில் நிறுவனம், ஒப்புக் கொள்ளப்பட்ட ஒரு சராசரி ஆண்டில் பெறும் இலாபமானது, அந்த நிறுவனத்தின் ஒருசீரான இலாபம் (standard profit) என்று கருதப்படும். புதிய முதலீடுகள் ஏதும் இன்றி, இந்த அளவுக்கு மேல் அந்த நிறுவனம் பெறும் இலாப மிகையெல்லாம் கடுமையான வரி விதிப்பிற்கு உள்ளாகின்றன.

பொதுவாகச் சொல்வதென்றால், இது ஒரு மோசமான வரி என்றே கருதப்படுகின்றது. மிகத் திறமையுடன் செயல் புரிந்து, மிகுந்த இலாபங்களைச் சம்பாதிக்கும் சிறப்பான தொழிலகங்களை இந்த வரி பழிவாங்குகிறது. புதிய முறைகளைக் கையாண்டு, செலவினங்களைக் குறைத்து, அதன் வழியாக அதிக இலாபம் பெற முனைவதையும் கிள்ளிவிடுகிறது.

கிரேட் பிரிட்டனில் உள்ள கம்பெனிகள், தம் பங்குதாரர்களுக்கு இலாப ஈவுகளைப் பகிர்ந்தளிப்பதற்கு முன்னர், மொத்த இலாபத்திலிருந்து ஒரு நிலையான வருமான வரியைக் கழித்துக்கொள்ளுகின்றன. (1963 கணக்குப்படி, வருமான வரியின் நிலையான பொது அளவு, ஒரு பவுனுக்கு 7ஷி. 9பென்ஸ்-கள் ஆகும்.) இந்த நிலையான பொது அளவிற்குக் குறைவாக வருமான வரி செலுத்துகின்றவன் (உதாரணமாக, திருமணமாகி 3 குழந்தைகள் உள்ளவனும், ஆண்டொன்றுக்கு 1,200 பவுன்களுக்கும் குறைவாகச் சம்பாத்திய வருமானம் பெறுபவனும்) தான் கட்டிய வரியிலிருந்து தள்ளுபடி கேட்பான். இதற்கு மாறாக, ஆண்டொன்றுக்கு 2,000 பவுன்களுக்கு

மேற்பட்ட வருமானம் உடையவன், தான் இதற்குமேல் பெறும் இலாப ஈவுகட்காக ஓரளவு உபரி வரி (sur-tax) கட்டுவது அவசிய மாகும்.

உபரி வரியுடன் சேர்ந்த பிரிட்டனின் வருமான வரி, வளர்ந்து செல் விகிதம் உடையது. அதாவது, அதிகமான வருமானத்தி லிருந்து இவ் வரி அதிகமான சதவிகிதத்தைத் துண்டுபோட்டுக் கொள்ளுகிறது. சமுதாயத்தில் ஏற்றத்தாழ்வைக் குறைத்துச் சம நிலையை உண்டாக்கும் நோக்கில், இவ் வரிமுறை மிகவும் பாராட்டப் படலாம். ஆனால், தொழிலில் இழப்பு ஆபத்துகளைத் துணிந்து மேற்கொள்ளும் முனைப்பை இது தடுத்துவிடுகிறது. ஒரு முதலீடு மிகவும் வெற்றிகரமாயுள்ளது என்று நிரூபிக்கப்பட்டால், இதில் பெரும் பகுதி வரிவிதிப்பிற்கே சென்றுவிடுகிறது. சிலர் ஒரு சீரான, மாறுபாடற்ற வாய்ப்பை மேற்கொள்ளுவது நல்லது எனக் கருதுவார்கள். உதாரணமாக, பாதுகாப்பான 2,500 பவுன் ஆண்டு வரியைவிட, ஆண்டுக்கு 1,000 பவுன், அல்லது 5,000 பவுன் என்ற அளவை விரும்புவார்கள். ஆனால், இந்த வரிவிதிப்பானது இந்தப் பதில் மாற்றங்களையும், ஒரு சீரான வாய்ப்பானது பாதுகாப்பான 1,664 பவுன்களுக்கு மாறாக 783 பவுன்கள், அல்லது 2,748 பவுன்கள் எனக் குறைத்துவிடுகிறது. இதில் முந்தியதை ஏற்க ஒரு சிலரே விரும்புவார்கள்.

இதைப்போலவே, உபரி வரியுடன் சேர்ந்த வருமான வரி, முதலீட்டு உற்பத்தித் தொழில்களுக்குள்ளேயும் வேறுபாடு காட்டு கிறது. இத் தொழில்கள் வளமான ஆண்டுகளில் உயர்ந்த இலாப மும், மந்தமான காலங்களில் குறைந்த இலாபமும் (சில சமயங் களில் இலாபமேதும் இன்மையும்) பெறுகின்றன. குறிப்பிட்ட சில ஆண்டுகளில், மிகுதியான வருமான ஏற்றத்தாழ்வுகட்கு ஆளான ஒரு முதலீட்டாளரிடமிருந்து அதிகமான வரிகள் எடுத்துக் கொள்ளப்படுகின்றன; மேற்குறிப்பிட்ட ஆண்டுகளில், ஒவ்வோ ராண்டும் மாறாத ஒரே அளவுடைய வருமானத்தைப் பெற்ற இன்னொரு முதலீட்டாளரைவிட, முந்தியவர் அதிகமாக வரி செலுத்தவேண்டியிருக்கிறது. உதாரணமாக அடுத்த பக்கத்திலுள்ள பட்டியலைக் காணவும்.

பிரிட்டிசு வருமானவரி அமைப்பில் உள்ள மற்றொரு குறை என்னவென்றால், ஓர் ஆண்டில் உள்ள சேமிப்பிற்கும் இது வரி விதிக்கிறது; பின்னர் இந்தச் சேமிப்புகள் நல்கும் வருமானத்திற்கும் இது மறுவரி விதிக்கிறது.

இக் குறைகளையெல்லாம் களைவதற்குரிய ஒரு வழி உண்டு. சொத்துகளிலிருந்து பெறும் வருமானங்களின்மீது வரி விதிப்

| | முதல் நபர் | | இரண்டாம் நபர் | |
|---|---|---|---|---|
| | வருமானம்* | வரி | வருமானம்* | வரி |
| முதல் ஆண்டு ... | 5,000 | 2,340 | 2,000 | 665 |
| 2ஆம் ஆண்டு ... | 1,000 | 277 | 2,000 | 665 |
| 3ஆம் ஆண்டு ... | 1,000 | 277 | 2,000 | 665 |
| 4ஆம் ஆண்டு ... | இல்லை | இல்லை | 2,000 | 665 |
| 5ஆம் ஆண்டு ... | 3,000 | 1,165 | 2,000 | 665 |
| மொத்தம் ... | 10,000 | 4,059 | 10,000 | 3,325 |

* முழுவதும் முதலீட்டிலிருந்தே பெற்றவை

பதைக்காட்டிலும், அச் சொத்துகளது மூலதன மதிப்பின்மீது (capital value) ஆண்டுவீத வரி விதிப்பதே அச் சிறந்த வழியாகும்.[1] ஆனால், இது எளிதில் செயற்படுத்த முடியாத, புரட்சிகரமான மாறுதலாகும்.

[1] 1942, மே மாத 'பொருளாதார இதழில்' (Economica) வெளியிடப்பட்டுள்ள 'சிறந்த வரிவிதிப்பு முறை எது?' (What is the Best Tax System?) என்ற எனது கட்டுரையைப் பார்க்கவும்.

பிரிவு 6

# பணமும் பாங்குத் தொழிலும்

## 30. பணம் (Money)

### 1. பணம் ஒரு பண்டமாற்றுக் கருவி

நவீன பொருளாதார உலகம், சிறப்புத் தேர்ச்சி (specialisation) என்ற அடிப்படையில் அமைந்துள்ளது. உழவர்களைத் தவிர வெகு சிலரே, தமக்காகப் பத்தில் ஒரு பகுதியை உற்பத்தி செய்து கொள்ளுகிறார்கள், அல்லது தாம் உற்பத்தி செய்வதில் நூற்றில் ஒரு பகுதியைமட்டுமே தமது நுகர்வுக்காக வைத்துக்கொள்ளுகிறார்கள். அவர்களது உற்பத்தியில் பெரும் பகுதி, சந்தையில் விற்பனை செய்வதற்காகவே மேற்கொள்ளப்படுகிறது. உற்பத்தி செய்தவற்றை விற்றுவிட்டு, உற்பத்தியாளர்கள் தமக்கு வேண்டிய இதர பொருள்களைப் பணத்தைக் கொடுத்து வாங்குகிறார்கள். உண்மையில் அவர்கள் தமது உற்பத்திகளைப் பிற உற்பத்திகளோடு பண்டமாற்றுச் செய்துகொள்ளுவார்கள். இந்த மாற்றுக்கு இடைக் கருவியாகப் பணத்தைப் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள். மேலும், பெரும்பாலான பண்டங்களை உற்பத்தி செய்து, உபயோகப்படுத்திக் கொள்ளும் நுகர்வோருக்கு அவற்றைப் பகிர்வு செய்வதில் ஒரு நீண்ட செயல்முறைத் தொடரையே மேற்கொள்ளவேண்டியதிருக்கிறது; இச் செயல்முறைத் தொடரில் பல உற்பத்திக் காரணிகள் பங்குகொள்ளுகின்றன.

உற்பத்திமுதல் நுகர்வுவரை ஒரு செயல்முறைத் தொடரை மேற்கொள்ளும் வகையில் அமைக்கப்பட்ட ஒரு சமுதாயம் பணத்தைப் பயன்படுத்திக்கொண்டே ஆகவேண்டும். ஏதாவதொரு பண்டமாற்றுக் கருவியையோ அல்லது மதிப்பிற்குரிய பொதுவான அளவுகருவியையோ ஒப்புக்கொள்ளாவிட்டால், எவ்வளவுதான் சிறப்புத் தேர்ச்சி இருப்பினும், அதனால் ஏற்படக்கூடிய உற்பத்திப் பொருள் பரிவர்த்தனை இருப்பினும், அவற்றை நடைமுறையில் ஏற்றுக்கொள்ளவே முடியாது; அதாவது, பணத்தின் உதவியில்லாமல் இவை செயற்பட முடியாது.

பணத்தின் உதவியில்லாமல் பரிவர்த்தனை நடப்பதென்றால், பண்டங்களை அப்படி அப்படியே நேரடியாக மாற்றிக்கொள்ளுவதில் தான் அது சாத்தியமாகும். இந்தப் பண்டமாற்று முறையில் உள்ள தலையான இடர்ப்பாடு என்னவென்றால், பரிவர்த்தனை செய்து கொள்ளுவோரிடையே, ஒரே சமயத்தில் 'தேவைகளில் இரட்டை இசைவு' (double coincidence of wants) ஏற்படவேண்டும்; ஒருவன் தனக்கு வேண்டிய பொருள்களைத் தந்து, தன்னிடமுள்ள பொருளை உடனே வாங்கிக்கொள்ளக்கூடிய இன்னொருவனைத் தேடிக் கண்டுபிடிக்கவேண்டும். செய்துமுடிக்கப்பட்ட பண்டங் களின் பரிவர்த்தனையில் இம் முறை மிகவும் கடினமானதாகும். இதை விளக்குதற்கு ஒரு கதை இருக்கிறது—ஏனைய கதைகளைப்போன்றே இதுவும் விளக்கம் தருகிறது. ஆஃப்ரிக்காவில் பயணம் மேற்கொண்ட ஒருவன், தனக்கென ஒரு படகை வாங்க விரும்பினான். படகுக்கு உரியவன் அதைக் கொடுப்பதென்றால், தனக்குப் பண்டமாற்றாகத் தந்தம் வேண்டுமென்று கேட்டான். அந்தப் பயணியிடம் தந்தம் இல்லை. அவன் தந்தம் வைத்திருந்த இன்னொருவனைத் தேடிக் கண்டுபிடித்தான்; ஆனால், இவன் தனக்குத் துணிகள்தாம் வேண்டு மெனக் கேட்டான். பயணியிடம் பரிவர்த்தனை செய்துகொள்ளக் கூடிய துணி ஏதும் இல்லை. பயணியிடம் கம்பிச் சுருள்கள்மட்டுமே இருந்தன. எனவே, கம்பிச் சுருளை வாங்கிக்கொண்டு, துணிகள் தரக்கூடிய ஒருவனைத் தேடிக் கண்டுபிடித்து, அவனிடமிருந்து துணியைப் பெற்று, அதைக் கொடுத்துத் தந்தத்தை மாற்றி, அத் தந்தத்தைக் கொடுத்துக் கடைசியில் படகை வாங்கிக்கொண்டான். இத்தகைய பண்டமாற்று முறையில் மேற்கொள்ளப்படும் வாணிகத் தின் எல்லை மிகமிக ஒடுங்கியிருக்கும். எல்லையானது இவ்விதம் ஒடுக்கப்பட்டிருப்பதால், இவற்றிற்குரிய பொதுவாக ஒப்புக்கொள்ளப் பட்ட சந்தை மதிப்பு அளவு கருவிகளும் ஒருசிலவே இருக்கும்; இதனால் பேரம் பேசிப் பண்டங்களை மனம் ஒப்பி மாற்றிக்கொள்ளுவ தற்காக நெடுநேரம் செலவழிக்க வேண்டியுமிருக்கும். மேலும், சில பண்டங்களை (உதாரணமாகப் படகு) அவற்றின் பயன்பாடு கெடா வகையில், தனித்தனியாகப் பகிர்ந்து பண்டமாற்றுச் செய்ய முடி யாது. எனவே, இவற்றிற்கு உரியவனால், இன்னொருவனுடைய பண்டத்திற்கு மாற்றாக, இதைப் பகுதிபகுதியாய்ப் பிரித்து மாற்றிக் கொள்ளவும் முடியாது; இன்னொருவனுடைய பகுதிகளுக்கு மாற்றாக, இதை அப்படியே கொடுத்துவிடவும் இயலாது.

நவீன உலகில் மேற்கொள்ளப்படும் பரிவர்த்தனைகளில் பெரும் பான்மையின செய்துமுடிக்கப்பட்ட பண்டங்களிடையே கொள்ளப் படுவன அல்ல. உதாரணமாக, ஒன்று கேட்போம். பண்டமாற்று முறையில் கூலிகளை எவ்வாறு நிர்ணயித்துக் கொடுப்பது? அவர்களை

வேலைக்கு வைத்திருப்பவன், எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம், அவர்கள் எந்தப் பொருளை உற்பத்தி செய்ய உதவினர்களோ அதில் ஒரு பகுதியையே கூலியாகக் கொடுத்துவிடுவான். அந்தப் பொருளைக் கொடுத்து, அவர்கள் தமக்கு வேண்டிய பண்டங்களைத் (கோதுமை அல்லது நிலக்கரி, அல்லது நூல், அல்லது இதர எப் பொருளாயினும் சரி) தம்மால் முடிந்த அளவு அவர்களே பண்ட மாற்றுச் செய்துகொள்ளும்படி விட்டுவிடுவான். ஆனால், இந்த முறையை மேற்கொண்டு, போக்குவரத்துச் சாதனங்களில் பணி புரிவோர்க்கும், வீடு கட்டிக்கொடுக்கும் உழைப்பாளர்கட்கும் (இதர பகுக்க முடியாத பண்டங்களை ஆக்குவோர்க்கும்) கூலி கொடுக்க முடியுமா? பண்டமாற்று முறையில் அவர்களது உற்பத்திப் பொருள் களைக்கொண்டு, எவ்வாறு கூலியை வரையறுத்துக் கொடுப்பது? இன்னொரு மாற்றுத் திட்டப்படி, ஒருவன் தன்னால் உற்பத்தி செய் யப்பட்ட பொருளை, தன்னுடைய வேலையாட்கள், பங்குதாரர்கள், கச்சாப்பொருள் அளிப்பாளர்கள் ஆகியோர் விரும்பும் இதர பொருள் களோடு பரிவர்த்தனை செய்து பெற்றுச் செலவுகட்குக் கொடுப்ப தாகும். வளர்ந்துவரும் நவீன பொருளாதாரம், பணத்தின் உதவியின்றி இயங்கவே முடியாது என்பதைத் தெளிவாக்குவதே இந்த ஆய்வுரையின் நோக்கம். எனவே, இனியும் இதை நீட்டி நீட்டிப் பேசவேண்டாம்.

பணம் ஒரு பொதுவான பரிவர்த்தனைக் கருவியாகவோ அல்லது செலுத்துதல் சாதனமாகவோ அமைவதால், மேற்கூறிய நேரடிப் பண்டமாற்று முறைகளின் இடர்ப்பாடுகளைக் களைந்துவிடுகிறது. தம்முடைய பண்டங்கட்கும் பணிகளுக்கும் உரிய மாற்றாக, ஒவ் வொருவரும் ஏற்க ஒப்புக்கொள்ளும் ஒரு பொருளே பணம் என் பது. ஒருவன், பணத்தைத் தனக்குரிய சம்பளமாக வாங்கிக் கொள்ள இசைகிறான் என்றால், இவன் பணத்தைப் பணத்தின் சிறப் பிற்காகவே வாங்கிக்கொள்ளுவதில்லை. பிறர் இப் பணத்தைத் தன் னிடமிருந்து பெற்றுக்கொண்டு, தனக்கு வேண்டிய பண்டங்களை யும் பணிகளையும் கொடுக்க இசைவார்கள் என்பது இவனுக்குத் தெரிவதாலேயே பணத்தை வாங்கிக்கொள்ளுகிறான்.

எனவே, பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு செலுத்துதற் சாதனமாகப் (means of payment) பணத்திற்கு விளக்கம் தரலாம். தம்முடைய பண்டங்கட்கும் பணிகளுக்குமோ அல்லது கடன் தீர் வுக்கோ உரிய ஒரு செலுத்துதற் சாதனமாகப் பெற்றுக்கொள்ள ஒவ்வொருவரும் இசையும் ஒரு கருவியே பணம். பணத்தின் இந்தப் பாங்கை ஆராய்கையில், பண ஆக்க அலகு (monetary unit) என்பது செலாவணியின் அலகு என அழைக்கப்படுகிறது. ஏனென்றால்,

பணம் கைக்குக் கை மாறிமாறி 'உருண்டோடுகிறது'. ஒரு நாட்டின் பணம் இயல்பாக இன்னொரு நாட்டின் செலாவணிக் கருவியாக ஏற்கப்படுவதில்லை. என்றாலும், இதர சில முறைகள் உள்ளன. இவற்றைப்பற்றி அடுத்த அதிகாரத்தில் பேசுவேன். இம் முறைகளைக் கொண்டு, உள்நாட்டில் வணிகம் முதலிய சிறப்புத் தேர்ச்சிகளில் ஈடுபடப் பணம் உதவுவதைப்போல, நாடுகளிடையே வணிகம் முதலிய துறைகளில் உதவவும் பணத்தைப் பயன்கொள்ளலாம்.

ஒரு பொதுவான மாற்றுக் கருவியாக உதவுவதற்காகப் பணத்தைப் பொதுவாக எல்லோரும் ஏற்க இசையவேண்டும். பணம் என்பது, ஒரு நாட்டில் சட்டபூர்வமாகச் செல்லுபடியாகும் நாணயம் (legal tender) ஆகும். அதாவது, பணத்தைச் செலுத்தற் கருவியாக ஏற்குமாறு, மக்கள் சட்டத்தால் வற்புறுத்தப்படுவர். ஆனால், பணம் சட்டபூர்வமான ஒரு நாட்டுச் செல்லுபடி நாணயமாக இல்லாமலும் இருக்கலாம். உதாரணமாக, வடஆஃப்ரிக்க நாடுகள் பலவற்றுள், நெடுங்காலமாக 'மரிய தெரேசா' என்ற டாலரே பிரதானப் பண்ட மாற்றுக் கருவியாக இருக்கிறது. இதை 1780 என்று தேதியிட்டு, தேவைக்கேற்ப லண்டனும் இதர நாணயச்சாலைகளும் அச்சடித்து, அந் நாடுகட்குத் தொடர்ந்து வழங்கிவந்தன. இந்தக் காசு (மரிய தெரேசா) மேற்குறித்த நாடுகளில் சட்டமுறைச் செல்லுபடி நாணயமாக இல்லை. இதன் உலோக மதிப்பானது, நாணயத்தின் முக மதிப்பைவிட மிகமிகக் குறைவாகவே இருக்கிறது; என்றாலுங்கூட, இது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட, பிரதானமான பண்ட மாற்றுக் கருவியாகப் பழக்கத்தால் தொடர்ந்து ஏற்றுக்கொள்ளப்படுகிறது. இதர உதாரணங்களாக, கிரேக்க நாட்டில் பரிவர்த்தனைகட்கு உதவும் பிரதான பண்டமாற்றுக் கருவியாக இன்றும் இருக்கும் தங்கச் சவரன்கள் (gold sovereigns), தென் சீனத்தில் பிரதான பண்டமாற்றுக் கருவியாக இருந்த ஹாங்காங் நாட்டுக் காகித டாலர் (paper dollar—இதைப் பொதுவுடைமை அரசாங்கத்தார் தடை செய்துவிட்டனர்) என்பனவற்றைச் சொல்லலாம்.

இதற்கு மறுதலையாக, சட்டமுறைச் செல்லுபடி நாணயமானது, பொதுவாக ஒப்புக்கொள்ளப்படும் செலாவணியாக இல்லாமலும் போகலாம். உச்சகட்டப் பணவீக்கக் காலங்களில், இந்த நாணயத்தின் மதிப்புக் குறையும்; எனவே, இதை வாங்கிவைத்திருக்க மக்கள் விரும்பமாட்டார்கள். ஆகையால், இதன் செலாவணி சுருங்கும். இதற்கு ஏராளமான உதாரணங்களைச் சொல்லலாம். ஃபிரெஞ்சுப் புரட்சிக் காலத்தில் வெளியிடப்பட்ட 'அசிக்நாட்' (Assignat) எனப்படும் தாள் நாணயத்தை ஏற்க மறுப்போருக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டாலுங்கூட, எவரும் அதை வாங்கிக்கொள்ள இசைய

வில்லை. எனவே, இத் தாள் நாணயம் 'பணம்' என்ற வகையில் சரியாகப் பயன்படாதுபோய்விட்டது. இதைப்போலவே, 1923-ல் ஜெர்மன் மார்க்குகளும், 1944-ல் ஹங்கேரியப் பெங்கோஸ்களும், போருக்குப் பின்னர் சீனத்து டாலர்களும் செயல்திறம் இழந்து போயின.

பணம், பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு செலுத்துதற் கருவியாகத் தனது பணியை எப்பொழுது சரியாகச் செய்கிறதோ, அப்பொழுதுதான் அது சிறப்புத் தேர்ச்சி, புதிய அளவில் பரிவர்த்தனை என்பனவற்றையெல்லாம் சாத்தியமாக்கும். நேரடிப் பண்ட மாற்றில் பேரம் பேசுதலில் வீணாகும் நேரத்தைக் குறைத்து, சந்தை விலைகளை நிறுவுதற்கு உதவும். கிரேட் பிரிட்டனில் பவுன்களைப் போலவே ஷில்லிங்குகள், பென்னிகள் என்ற உட்பிரிவுகளையும் ஏற்பதைப்போல, பணத்தில் ஏற்படும் உட்பகுப்புகளையும் ஏற்கும் வகையில் அதைப் பகுத்துக்கொள்ள முடியும்.

## 2. பணம் ஒரு மதிப்பீட்டு அளவை
(Money as a Measure of Value)

பொதுவாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு பண்ட மாற்றுக் கருவியாக உதவ ஏதேனும் ஒன்று வந்துவிட்டால், இதன் அளவுமுறையிலேயே மதிப்புகள் நிர்ணயிக்கப்படும்; ஒப்பந்தங்கள் செய்யப்படும்; கணக்குகள் எழுதப்படும். இதனால் ஏற்படும் முதல் அனுகூலம் என்னவெனில்—ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு விலை உண்டு—அதாவது, பணத்தின் அளவில் ஒவ்வொரு பொருளுக்கும் ஒரு மதிப்பு உண்டு. (ஒரு பண்டத்தை இதர பண்டங்களோடு, அவ்வப்போது இணைத்துப் பார்ப்பதால், அதற்கு அறுதியிடப்படும் தனித்தனி மதிப்பைவிடப் பணத்தால் அறுதியிடப்படும் ஒரு வகை மதிப்பு என்று இதைச் சொல்லலாம்.) இவ்விதம் பணத்தால் அறுதியிடப்படும் மதிப்பு, பண்டத்தின் விற்பனையை எளிதாக்குகிறது. இதைவிடச் சிறந்த மற்றோர் அனுகூலம் என்னவெனில், மதிப்பீட்டு அளவையாகக் கொள்ளும் பணத்தின் உபயோகம், பொருளாதாரக் கணக்கீடுகட்குப் பெரிதும் உதவுகின்றது. குறித்த பணவருவாய் உடைய நுகர்வோன் ஒருவன், பணவிலைகளையே (money prices) கொடுக்கவேண்டியிருக்கும்; இப் பண விலைகள், அவன் வாங்க விரும்பும் பண்டங்கள் எவை, கொள்ள விரும்பும் பணிகள் எவை என்பதைத் தீர்மானிக்க உதவுகின்றன. நுகர்வோரின் தேவைகளில் ஏற்படும் மாறுதல்கள் விலைகளைப் பாதிக்கின்றன. இவை, தேவை மிகும் பண்டங்களை அதிகமாக ஆக்கும்படியும், தேவை குறையும் பண்டங்களின் உற்பத்தியைக் குறைக்கும்படியும் தொழில்

முனைவர்களைத் தூண்டுகிறது. இவன், உற்பத்திக்குரிய ஒவ்வொரு சாதனத்தின் சந்தை விலையையும் அறிந்திருக்கிறான். தனது இலாபத்தை மிகுதிப்படுத்தும் வகையில், தனது தொழில் நிறுவனத்தின் அமைப்பிடம், உற்பத்தி அளவு, உற்பத்தி முறை முதலியவற்றையெல்லாம் அவன் முன்கூட்டியே திட்டமிட்டுக்கொள்ள இப்பணவிலைகள் உதவி செய்கின்றன. அதாவது, எந்த உற்பத்திப் பொருள்களின் மதிப்பு உயர்ந்திருக்கிறதோ, அப் பொருள்களைச் செய்து குவிக்கும் துறையில், தனது சாதனங்களைத் திருப்பிவிட அவனால் இயலும். ஓர் எளிய உதாரணத்தைப் பார்ப்போம். ஒரு குறிப்பிட்ட துண்டு நிலமானது; பார்லி சாகுபடியைவிடக் கோதுமைச் சாகுபடியில் மிகுந்த பணவருவாயைத் தருகிறது. அப்பொழுது கோதுமைச் சாகுபடி செய்வதால் நிலத்திற்கு உரியவன் மிகுந்த வருவாய் பெறுவதோடு, நுகர்வோரும் மிகுந்த கோதுமையை விரும்புகிறார்கள் என்பதையே இது விளக்குகிறது.

பொருள்களின் விலை மதிப்பையும் செலவையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்குரிய பொதுவான அளவை ஒன்று இல்லாமற்போனால், மேற்குறிப்பிட்டதுபோலக் கணக்கிட்டுப் பார்ப்பது இடர்ப்பாடாயிருக்கும்; அப்படியே கணக்கிட்டாலும், அது சரியானதாயிராது. இத்தகைய நிலைகளில், விலைவாசிக் கூறு (price mechanism) செம்மையின்றியும் சிரமமாகவுமே தொழிற்படும். இப்பொழுது தொழில் முனைவர்கள், தமக்குப் பிரதிகூலமாக விலைகள் மாறக்கூடும் என்ற இழப்பு ஆபத்தைத் துணிந்து மேற்கொள்ளுகிறார்கள். நேரடிப் பண்டமாற்று முறையில் இந்த இழப்பு ஆபத்து மிக அதிகமாக இருக்கும். ஏனென்றால், அவர்களால் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களுக்கும், அவர்களது தொழிலாளர்கள், பொருள் அளிப்பவர்கள் ஆகியோர் மாற்றாகக் கொள்ள விரும்பிய பொருள்களுக்கும் இடையே உள்ள மாற்றுவிகிதங்களை முன்கூட்டி அறிதலும், கணக்கிட்டு வரையறுத்தலும் கடினமாயிருப்பதால்தான், மேற்குறித்த இழப்பு ஆபத்தின் அளவு அதிகமாயுள்ளது எனக் குறிப்பிட்டேன். இதனால், உழைப்பில் மிகக்குறைந்த பகுப்பே ஏற்படும்.

இவ்விதம் கணக்கிடுதலுக்கு உதவுதற்காகப் பண ஆக்க அலகு என்பது 'கணக்கின் அலகு' (the unit of account) என்று அழைக்கப்படுகிறது. மதிப்பின் அளவை என்ற வகையில் பணத்திற்கு உரிய உபயோகமானது, பண்டமாற்றுக் கருவி என்ற வகையில் அதற்கு உரிய உபயோகத்திலிருந்தே தெளிவாக எழுந்தமைகின்றது. எனவே, செலாவணி அலகையும் கணக்கின் அலகையும் ஒன்றாகவே கொள்ளுவோம். மேற்குறித்த இரண்டு அலகுகட்கும் இடையே ஆன மாற்று விகிதத்தை எப்படியாவது நிறுவக்கூடுமானால், இவ்

விரண்டும் வெவ்வேருகவே இருத்தற்கு இயலும். இவ்விதமாகவே 1923-ல் ஜெர்மனியில் பொருள் விலைகளெல்லாம் மிகத் துரிதமாக உயர்ந்தபொழுது, சுவிஸ் நாட்டுப் பிராங்குகள், அல்லது அமெரிக்க நாட்டு டாலர்களின் விகிதத்திலேயே ஒப்பந்தங்கள் பெரும்பாலும் மேற்கொள்ளப்பட்டன. பணம் செலுத்துதற்குரிய காலம் வந்தவுடன், ஜெர்மானிய மார்க் முறையிலேயே செலுத்துகள் (payments) கொடுக்கப்பட்டன; அதாவது, அப்பொழுது வெளிநாட்டுச் செலாவணிச் சந்தையில் நிலவரமாயிருந்த விகிதத்தில், குறிப்பிட்ட பிராங்குகள் அல்லது டாலர்களின் அளவுக்குச் சமமாக பிராங்குகளின் அளவுகள் நிர்ணயிக்கப்பட்டுக் கொடுக்கப்பட்டன. இவ்விதம், மார்க்கு செலாவணி அலகாக இருந்தாலும், கணக்கிடும் அலகாக பிராங்கும் டாலருமே இருந்தன.

இதைப்போலவே சியாங்கே ஷேக் சீனத்தை ஆண்ட காலத்தில் அங்குப் பணவீக்கம் ஏற்பட்டபொழுது, அமெரிக்க நாட்டு டாலர்கள், கணக்கின் அலகுகளாக அங்குப் பரவலாக உபயோகிக்கப்பட்டன. இதைப்போலவே, போருக்குப் பின்னர், கிரீசு, ஹங்கேரி முதலிய ஐரோப்பிய நாடுகளில், அமெரிக்க டாலரும் ஸ்டெர்லிங் பவுனும், கணக்கின் அலகுகளாக மிகுதியும் பயன்படுத்தப்பட்டன.

சில எழுத்தாளர்கள், பணமானது தள்ளிப்போட்ட செலுத்துதல்களுக்கு (deferred payments) உரிய பொது அளவாகவும் பணிபுரிகின்றது என்று கூறுகிருர்கள். கடன்கள் உள்ளிட்ட ஒப்பந்தச் செலவுகள், வழக்கமாகப் பணமாகவே கொடுக்கப்படுகின்றன. ஏனென்ருல், பணத்தின் மதிப்பும் அதன் வாங்கும் சக்தியும் (purchasing power) ஒப்பந்தக் காலத்தில் அனேகமாக மாறிவிடுவதில்லை என்று மக்கள் கருதுகிருர்கள். ஒருவேளை பணத்திற்குரிய மதிப்புக் குறைந்துவிடக்கூடும் என்று அவர்கள் அஞ்சுவார்களேயாளுல், வேறு வகையாக ஒப்பந்தத்திற்குரிய தொகையைச் செலுத்த முற்படுகிருர்கள். உதாரணமாக, தங்கம் அல்லது அமெரிக்க நாட்டு டாலர்களை (தற்போதைக்கு) இதர செலாவணி முறைகளைச் சொல்லலாம். இல்லையென்ருல், நெடுங்கால ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளாமலே இருந்துவிடுவார்கள். கடன் வாங்கும் நாடுகளின் செலாவணிக்குரிய மதிப்புகள் குறைந்துவிடும் என்பதால், வெளிநாட்டு முதலீட்டாளர்கள் நிறைய பணம் கொடுக்க அஞ்சினுர்கள். இதனுல் 1930ஆம் ஆண்டு அளவில் சர்வதேசக் கடன் கொடுப்பில் அவ்வளவு கணிசமான பெருக்கம் ஏற்படவில்லை. உதாரணமாக, கன்சோல்களைவிட இரண்டு மடங்கு வருமானத்தை அளித்த போதிலும், ஃபிரெஞ்சு ரெண்டீஸ் பத்திரங்களை ஒரு சில பிரிட்டிசு முதலீட்டாளர்களே வாங்கினுர்கள். ஏனென்ருல், அண்மையிலோ

நாட்சென்றே ஃபிரெஞ்சு பிராங்குகளின் நாணயமாற்று மதிப்பு வீழ்ந்துவிடக்கூடும் என்று அஞ்சினார்கள். ஆம், அப்படியே நடந்தது. 1936 செப்டம்பர், 1937 ஜூன், மீண்டும் (படிப்படியான மதிப்பிறக்க காலத்திற்குப்பின்) 1938 மே ஆகிய தடவைகளிலெல்லாம் ஃபிரெஞ்சு பிராங்கு மதிப்புக் குறைக்கப்பட்டது.

பணத்தின் மதிப்பானது ஓரளவு நிலையாக நீடிக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டால், பணத்தின் மதிப்புக் குறைந்துவிடுமோ என்ற அச்சம் நீங்கிவிடும். எனவே, எதிர்காலத்தில், ஒரு குறிப்பிட்ட கெடுவிற்குப் பின்னர் திரும்பச் செலுத்துதற்குரிய நீண்ட தவணைக் கடன்களுக்கும் இதர ஒப்பந்தங்களுக்கும் பணம் கொடுக்கப்படும். பணத்திற்குப் பதிலாகத் தள்ளிப்போட்ட செலுத்துதல்களுக்கு உதவும் வகையில், தங்கம்போன்ற இதர செலாவணிகளை மாற்றாக உபயோகப்படுத்திக்கொள்ளுவதும் இயலாத ஒன்றாகும். ஏனென்றால், தனது நாட்டுச் செலாவணி அவநம்பிக்கைக்கு ஆளாகிறது எனக் கருதி அரசாங்கமே தடை செய்துவிடும்; அல்லது கடன் கொடுப்பவனுக்கு இது அவ்வளவு சிறப்பாகத் தோன்றாமலிருக்கலாம். ஏனென்றால், இவனது எதிர்கால வரவுகள் அப்பொழுதைய செலாவணி நாணயத்தில்தான் இருக்குமே தவிர, தங்கம்போன்ற இதர பொருள்களில் அமையாது.

கடன்கள், இதர நீண்ட தவணை ஒப்பந்தங்கள் என்பனவெல்லாம் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவி செய்யும்வரை பணத்தின் மதிப்பில் ஓரளவு நிலையான நீடிப்பு ஏற்படுவதே விரும்பத்தக்கது என்பதும், மக்களும் அவ்விதமே எதிர்பார்க்கிறார்கள் என்பதும் இதிலிருந்து பெறப்படும் முடிவாகும். எனவே, தள்ளிப்போட்ட செலுத்துதல்களுக்கு உரிய அளவாகப் பணம் உபயோகப்படுவதை மட்டும் கொண்டு இதுவே பணத்தின் தனியான பணி என்று பிரித்துச் சிறப்பளிப்பதில் எத்தகைய காரணத்தையும் என்னால் தெளிய முடியவில்லை. ஏனென்றால், பணம் உடனடிச் செலுத்துதல்களுக்கும் எதிர்காலச் செலுத்துதல்களுக்கும் உரிய மதிப்பீட்டு அளவையாகப் பணியாற்றுகிறது என்ற கருத்திலேயே, அது தள்ளிப்போட்ட செலுத்துதல்களுக்கும் உதவுகிறது என்ற கருத்து அடங்கிவிடுவதால், இதைமட்டும் தனியாகப் பிரித்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை என்றே நான் கருதுகிறேன்.

பணத்திற்கு அளிக்கப்படும் மற்றோர் அலுவல் என்னவெனில், அது மதிப்பின் சேகரமாக (அல்லது திரட்சியாகவும்—store of value) பயன்படுகிறது என்பதே. ஒரு ஃபிரெஞ்சுக்காரன், பிராங்குகளையோ அல்லது அவற்றிற்குச் சமமானவற்றையோ, அவை 10 டாலர் மதிப்பாக இருந்த 1914ஆம் ஆண்டிலிருந்து இன்றுவரை சேர்த்து

வைத்திருப்பதாகக் கொள்ளுவோம். இன்று அவற்றின் விலை ஒரு பார்த்திங்கிற்கும் கீழே இறங்கிவிட்டது. இந்த நிலையில் பணம் மதிப்பின் சேகரமாக விளங்குகிறது என்ற முழக்கத்தை இந்த ஃபிரெஞ்சுக்காரன் கேட்டால் பரிதாபமாகச் சிரிப்பான், அல்லது முகம் சுளிப்பான். இந்தச் சிரிப்பின் எதிரொலி, ஃபிரான்சைப்போலப் பணத்தின் மதிப்பில் வீழ்ச்சி கண்ட நாட்டிலெல்லாம் இதைவிட மிகுதியாகக் கேட்கும். பணத்தைக்காட்டிலும் மதிப்பின் சேகரமாக நகைகள், ஆராய்ந்து தேர்ந்து சேர்த்துவைக்கும் கலைப்பொருள்கள் என்பன மிகுதியும் உதவக்கூடும் என்பது அனுபவத்தில் கண்டறியும் உண்மை. நாம் ஏற்கெனவே வட்டியின் பண ஆக்கக் கொள்கையை விளக்கியபொழுது குறிப்பிட்டதைப்போல, பணம் என்பது ஏனைய சொத்துகளையெல்லாம்விட மிகவும் நீர்மையுடையது என்ற உண்மையைப் பணத்திற்கு உரிய விளக்கமாக நினைவிற் கொள்ள வேண்டும். ஈடுகள், ஏனைய வெளிப்படையான சொத்துகள் என்பனவற்றிற்குரிய பணமதிப்பில் குறைவு ஏற்படலாம்; ஆனால், ஒரு குறிப்பிட்ட பணத் தொகையானது, அதே பணமாக, எப்பொழுதும் அப்படியே இருக்கிறது. அதற்கு வாங்கு சக்தியில் ஏதேனும் மாற்றம் ஏற்பட்டாலுங்கூட, பணம், அதே அளவில் அப்படியே இருக்கிறது. அதற்குரிய மதிப்பு மாறலாமே தவிர அதன் அளவு மாறுவதில்லை.

## 3. பணத்தின் வகைகள்

பணத்தைப்போலப் பல பொருள்கள், வெவ்வேறிடங்களில், பல்வேறு காலங்களில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. சில விவசாய இனத்தவர்கள், தமது ஆடுமாடுகளை உபயோகித்தார்கள்; இன்றும் உபயோகிக்கிறார்கள். இதில் உள்ள குறை என்னவென்றால், தேவைக்குத் தக்கபடி ஆடுமாடுகளைப் பகுத்துக்கொடுக்க முடியாது; அவை ஒரேசீரான அளவிலும் தன்மையிலும் அமைந்திருப்பதே இல்லை. புகையிலை, உப்பு, தோல் முதலிய சாதாரண வணிகப் பொருள்களும் (இவை எளிதில் அழியாதனவாயும், சிரமமின்றி எடுத்துச் செல்வதற்கு உரியனவாயும் இருந்தால்) உபயோகப் படுத்தப்பட்டிருக்கின்றன. திரவ வடிவில் இருப்பதுடன், சேகரித்து வைக்கவும் சிரமத்தைத் தருகின்ற ரம் (Rum) முதலிய மதுப் பொருள்கள், நியூசவுத்வேல்சின் தொடக்க காலங்களில் உபயோகப் படுத்தப்பட்டுள்ளன. கடந்த போர்க்காலத்தில், கைதிகளை அடைத்துவைத்திருந்த முகாம்களிலும் (போர் முடிந்த அண்மையில், ஐரோப்பாவின் கருப்புச் சந்தையிலும்) மதிப்பீட்டு அளவையாகவும், நாணயமாற்றுக் கருவியாகவும் சிகரெட்டுகள் உபயோகப்படுத்தப் பட்டன.

ஐயாயிரம் ஆண்டுகளாகத் தங்கமும் வெள்ளியும் பணத்தைப் போலச் செலாவணிக் கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டுவந்திருக் கின்றன. பணத்தைப்போல இவற்றைப் பரவலாகப் பயன்கொள்ளா விட்டால் இவற்றின் பரிவர்த்தனை மதிப்புக் கணிசமாகக் குறையு மென்றாலுங்கூட, இப் பொருள்களை அவற்றின் சிறப்பிற்காகவும், தகுதிக்காகவுமே மக்கள் பெரிதும் விரும்பினார்கள். இவை உறுதி யானவை; நாட்பட்டு இருப்பவை; பகுக்கக்கூடியவை; ஒரே தன்மை யுடையவை; மிகப் பளுவோ, பருமையோ அற்றவை; எனவே, பரிவர்த்தனைக் கருவியாக இவை எளிதில் உதவின. ஆண்டுதோறும் சுரங்கத்திலிருந்து வெட்டியெடுக்கப்பட்டு அளிக்கப்படும் இவற்றின் அளவு இப்போதைய மொத்தக் கையிருப்பைவிடக் குறைவாகவே இருக்கின்றது. எனவே, மொத்த அளிப்பு மாற்றங்களால் இவற்றின் மதிப்பில் விளையக்கூடிய ஏற்றத்தாழ்வுகள் மொத்த இருப்பைவிட ஆண்டுதோறும் அதிகமான அளிப்பை உடைய, எளிதில் அழியக் கூடிய பொருள்களின் மதிப்பில் விளையக்கூடிய ஏற்றத்தாழ்வுகளை விடக் குறைவாகவே இருக்கும்.

தொடக்க நாளில் பண்டங்களுக்கு மாற்றாகத் தங்கத்தையும் வெள்ளியையும் நாணயமாக அச்சடிக்காமலே பயன்படுத்திக்கொண் டிருந்ததாகத் தெரிகிறது. இதனால் தங்கத்தையும் வெள்ளியையும் பெற்றவர்கள், இவற்றின் தூய்மை, நிறை முதலியவற்றைப்பற்றி எத்தகைய ஐயப்பாடோ வேறுபாடோ கொள்ளாமல் அவற்றைப் பெற்றுத் திருப்தி அடையவேண்டியிருந்தது. பின்னர், நாணய அச்சடிப்பு முறை வந்ததும், இந்த இடர்ப்பாடுகள் இல்லையாயின. நாணயம் என்பது ஓர் உலோகத் துண்டம். இதன் நிறைக்கும் தூய்மைக்கும் இதை ஆக்குவோர்கள் உறுதியளிக்கிறார்கள். தங்கமாக மாற்றிக்கொள்ளுதற்குரிய ஒரு பாங்கு நோட்டு என்பது, இந்த நோட்டுக்கு உரிய பரிவர்த்தனையாக ஒரு குறிப்பிட்ட நிறையுள்ள தங்கத்தை, நோட்டைக் கொடுத்துக் கேட்கும் நாளில் திரும்பச் செலுத்துவதாக அந்த பாங்கு கொடுக்கும் உறுதிமொழி என்பதாகும். (இது வழக்கமாக ஒரு தங்க நாணயமாக அல்லது பல நாணயங்களாகச் செலுத்தப்படுகிறது.)

நவீன காலத்திற்கு முன்னரும், பணமாகக் கருதிப் பயன்படுத் தப்பட்ட பண்டங்களை, மக்கள் அப் பண்டங்களின் மதிப்பிற்காகவும் வழக்கமாக வாங்கிக்கொண்டார்கள். மேலும், அப் பண்டம் ஒருவகைப் பணமாக உபயோகப்படுத்தப்பட்டதால், அது பண்டத்தின் மதிப் பிலும் உயர்வு ஏற்பட உதவிற்று; ஏனென்றால், பண்டத்திற்கு உரிய தேவை இதனால் மிகுந்துவிட்டதல்லவா? இக் கருத்து இன்று தங்கத்திற்கும் பொருந்துகிறது. தங்கத்திற்கு இன்று ஏற்பட்டுள்ள

கிராக்கிக்கெல்லாம் காரணம், பண ஆக்கத் தேவைகள் அல்லது செலாவணி நடவடிக்கைகளே. அமெரிக்கா முதலிய நாடுகள் தாம் சேர்க்கும் தங்க இருப்புகளை நிறுத்திவிட்டால், தங்கத்தின் மதிப்பு நொடியில் குறைந்துவிடும்.

இப்போதைய பணமெல்லாம் காகிதப் பணமாகவே (paper money) உள்ளன. இந்தப் பண்டத்திற்கு உரிய மதிப்பெல்லாம், அச்சடிக்கப்பட்ட ஒரு துண்டுக் காகிதமே. மேலும், இப் பணம் சாதாரணமாக மாற்றலாகாத் தன்மையுடையது (inconvertibility). அதாவது, எந்த அரசாங்கமும் அல்லது பாங்கும் இதை மாற்றுதலாகவோ அல்லது தங்கமாகவோ அல்லது இதர செலாவணிப் பண்டமாகவோ இதை 'மாற்றித் தருவதற்கு' உறுதி அளிப்பதில்லை என்றாலுங்கூட, இந்தக் காகிதப் பணம், தனது பணியைச் செவ்வனே நிறைவேற்றியே வருகிறது. இதை ஏற்க எல்லோரும் இசைகின்றார்கள். ஏனெனில், பண்டங்களை வாங்கவும், பணிகளைக் கொள்ளவும், கடன்களைத் தீர்க்கவும் இதை உபயோகிக்கலாம் என்பது அவர்களுக்குத் தெரியும். இந்தக் காகிதப் பணம் என்பது, ஒரு பெரிய நம்பிக்கை வித்தையாகும் (gigantic confidence trick). ஒரு துண்டுக் காகிதத்தை (பணம்) வாங்கிக்கொண்டு, மதிப்பிற்குரிய தம் உடைமைகளையும் உழைப்பாற்றலையும் உவந்து தர மக்கள் ஒப்பிவிடுகிறார்கள். ஆனால், யாரும் இதனால் ஏமாற்றத்திற்கு ஆளாகிவிடுவதில்லை. இந்தக் காகிதப் பணம் பொதுவாக எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகிற செலாவணியாக இருக்கும்வரை, இதை வாங்கிக்கொண்டவர்கள் அதே மதிப்பிற்கு அடுத்தவருக்கு இதை மாற்றிக் கொடுத்துவிடலாம். காகிதப் பணத்தை மிகுதியாக அச்சிட்டு, இதற்குரிய மதிப்பைத் தாழ்த்துகிறபொழுதுதான், அவநம்பிக்கைக்கு ஆளான மக்கள் இதை ஒப்புக்கொள்ளப் பின்னிடுகின்றார்கள்.

சிறுசிறு பரிவர்த்தனைக்கு உதவும் சில்லறைக் காசுகள், அடையாளப் பணம் (token money) அல்லது ஒப்புதல் நாணயம் என்று அழைக்கப்படுகின்றன. வழக்கப்படி, இக் காசுகளின் உலோக அளவு, காசின் முகமதிப்பைவிடக் குறைவாகவே இருக்கும். இத்தகைய சில்லறைக் காசுகளைத் தயாரிக்கும் நாணயச் சாலைக்கு இதனால் நல்ல இலாபம் கிடைக்கும்; இந்த இலாபம் 'நாணய அச்சுத் தீர்வை' (seigniorage) என்று அழைக்கப்படுகிறது. இவ்விதமாக, 1939-ல் வெளியிடப்பட்ட ஒரு ஷில்லிங் நாணயத்தில், 20 பென்னி மதிப்பிற்கும் குறைந்த உலோகச் சேர்மானமே இருந்தது; இது 'வெள்ளிமீது அச்சடிக்கப்பட்ட நோட்டு' (a note printed on silver) என்று அழைக்கப்பட்டது. சில சமயங்களில், வெள்ளி நாணயங்களின் மதிப்புகள் ஏனைய நாணயங்களின்

மதிப்பைவிட உயர்ந்துவிடுவதுண்டு. அப்பொழுது புழக்கத்தி லிருந்து அவை மறையத் தொடங்கும். அவற்றை வெள்ளியாக உருக்கி, உலோக விலைக்கு விற்று இலாபம் சம்பாதிக்கப் பலர் முற் படுவார்கள்; அல்லது தூண்டப்படுவார்கள். இந்நிலை பிரிட்டிசு நாணயங்கட்கு 1920ஆம் ஆண்டில் ஏற்பட்டது. எனவே, இந்த ஆண்டில் நிறைவேற்றப்பட்ட நாணயச்சட்டம், வெள்ளியின் தூய்மையை (மொத்த எடையில் வெள்ளிக்குரிய விகிதத்தை) 925-லிருந்து 500-க்குக் குறைத்துவிட்டது. இப்பொழுதைய பிரிட்டிசு நாணயங்கள் வெள்ளியில் செய்யப்படுவதில்லை; ஒருவகைச் செம்புக் கலப்புடைய நிக்கலில் (cupro-nickel) மட்டுமே செய்யப் படுகின்றன; ஆனாலும் பழைய வெள்ளி நாணயங்கள் இன்னும் புழக்கத்தில் உள்ளன. இந்தப் புது நாணயங்களில் உள்ள வெள்ளி, நிக்கல் இவற்றின் உலோக மதிப்பு, நாணயங்களின் முகமதிப்பில் 6 சதவிகிதம் மட்டுமே (1962ஆம் ஆண்டு விலைகளில்) என்று கணக் கிடப்பட்டிருக்கிறது.

## 4. பாங்கு வைப்புகளாகப் பணம்
### ( Bank Deposits as Money)

செக்குகளை (cheques) மிகுதியாகப் பயன்படுத்தும் நாடுகளில், செக்குமூலமாகவே பெரும்பாலான செலுத்துதல்கள் நிகழ்கின்றன. பிரிட்டனில் எல்லாப் பணக் கொடுக்கல் வாங்கல்களின் மொத்த மதிப்பில் 90 சதவீதத்திற்கு மேல், செக்குமூலமே கொடுபடுகின் றன; பெரும்பாலான கொடுக்கல் வாங்கல்கள் சிறிய தொகை களிலேயே நடத்தப்பட்டாலுங்கூட, ரொக்கத்தால் கொடுபடுவதன் மதிப்பளவு குறைவே ஆகும்.

எனவே, பாங்கு வைப்புகளையும் பணம் என்றே அழைப்பது அறிவுக்கும் உண்மைக்கும் பொருத்தமுடையதுபோலத் தோன்று கிறது. ஒரு செக்கு என்பது, அதைக் கையெழுத்திட்டு வழங்குபவ ருக்குரிய பாங்கு வைப்பிலிருந்து, அதில் குறிப்பிடப்பட்டுள்ள தொகையைச் செக்கைக் கொணர்வோரிடம் கொடுக்குமாறு, பாங்கிற்கு இடும் கட்டளையாகும். நம் இருவருக்கும் ஒரு பாங்கில் கணக்கிருப்ப தாக வைத்துக்கொள்ளுவோம். நான் உங்களுக்கு 10 பவுனுக்கு ஒரு செக்குக் கொடுக்கிறேன்; இச் செக்கை எனது பாங்கு வைப்புக் கணக்கில் பற்றெழுதிப் பதிவு செய்துவிட்டால், என்னுடைய வைப்பில் 10 பவுன் குறைந்து, உங்களுடைய கணக்கில் 10 பவுன் கூடிவிடுகிறது. எனவே, பாங்கு வைப்புகளே பணமாகப் பணி புரிகின்றன; வழங்கப்படும் செக்குகள், இந்த வைப்புகளை எவ்வாறு மாற்றுவது என்பதைமட்டுமே குறிப்பிடுகின்றன.

கண்டிப்பாகச் சொல்வதென்றல், செக்குகளால் நடப்புக் கணக்கிலுள்ள (current account) வைப்புகளிலிருந்தே பணத்தை எடுக்க முடியும். இதர பண வைப்புகளும் உள்ளன; இவ் வைப்புகட்கு வட்டி உண்டு; இதிலிருந்து ஏதேனும் பணம் எடுக்க விரும்பிஞல், வைப்புக்குரியவர் முன்னதாகவே பாங்குக்குத் தகவல் கொடுக்க வேண்டும். இத்தகைய பாங்கு வைப்புகள் மிகவும் நீர்மையுடையவை. இத்தகைய வைப்பிலிருந்து பணம் எடுத்தற்காக வழங்கப்படும் செக்குகளையும் பாங்குகள் நடைமுறையில் ஏற்றுப் பணம் கொடுக்கின்றன. எனவே, செக்குமூலம் பணம் அளிக்கும் பாங்குகளின் எல்லா வைப்புகளையுமே பணம் என்று நாம் கருதிக்கொள்ளலாம். இங்கும் நாம் ஓர் எல்லைக் கோடிட்டுக் கொள்ளவேண்டும்; எல்லா வைப்புகளையுமே இவ்வாறு கருதிவிடக்கூடாது. சேமிப்பு பாங்கு வைப்புகள், வாணிப உண்டியல்கள் (bills of exchange) என்பன போன்ற மிகவும் நீர்மையுள்ள சொத்துகள், ஒருபோதும் பணம் என்று கருதப்படமாட்டா.

பாங்கு வைப்புகளையும் ரொக்கத்தோடு சேர்த்துக்கொள்ளுவது நடைமுறையில் பழக்கத்திலிருந்தாலும், இவ்விரண்டுவகைப் பணத்திற்கும் இடையே ஒரு வேறுபாடிருக்கிறதை மறந்துவிடக்கூடாது; சில சந்தர்ப்பங்களில் இவ் வேறுபாடு மிகவும் முக்கியமானதாகக் கருதப்படும். ரொக்கத்தை யாரும் எங்கும் ஏற்றுக்கொள்ளுவார்கள். ஆனுல், செக்கை அப்படி ஏற்றுக்கொள்ள முடியுமா? நமக்கு அறிமுகமில்லாத புதிய நபர் ஒருவர் தரும் செக்கை ஏற்று மதிப்பளிக்க நாம் முற்படமாட்டோம். நிதி நெருக்கடி ஏற்படும் காலங்களில் (எல்லா நாடுகளிலும் இல்லாவிட்டாலும் சில நாடுகளிலாவது) பாங்குகள் முறிவதற்கான ஆபத்துகள் உள்ளன. இச் சமயத்தில் செக்குகளுக்குப் பதிலாக ரொக்கமாகவே தரும்படி மக்கள் வற்புறுத்துவார்கள். பாங்கில் பணம் போட்டு வைத்திருப்பவர்களின் நடப்புக் கணக்கில் உள்ள வைப்புகளின்மீது செக்குகள் வழங்கப்பட்டால், செக்கைக் கொடுத்தவுடன் அவற்றிற்குரிய ரொக்கத்தைக் கொடுக்கவேண்டியது பாங்குகளின் கடமையாகும்; இவ்வகையில் பணம் போட்டுள்ள வைப்பாளிகட்கு ரொக்கமாகக் கொடுக்க பாங்கு உத்திரவாதம் அளிக்கிறது; இதற்காக அவை ரொக்க இருப்புகளை வைத்திருக்க வேண்டியதிருக்கிறது. ஆகவே, நிதித்துறை அதிகாரிகள் பாங்கின் இருப்பில் உள்ள ரொக்கத் தொகையைக் கட்டுப்படுத்துவதன் வழியாக, பாங்குகளின் வைப்புகளது அளவையும் கட்டுப்படுத்த முடியும். இதை அடுத்த அதிகாரத்தில் காண்போம். ஆனுலும் கூட, பாங்கு வைப்புகளைப் பணத்திற்கு உரிய நெருங்கிய பதிலியாகக் கருதுவதைவிட, அவற்றை ஒருவகைப் பணமாகவே கருதுவது பல காரியங்கட்கு உதவிசெய்யும்.

1962 நவம்பரில் ஐக்கிய அரசின் கரன்சி நோட்டுகளின் (செலாவணித் தாள்கள்) புழக்கம் 2,694 மில்லியன் பவுன்கள் என்று மதிப்பிடப்பட்டுள்ளது; இதில் 2,143 மில்லியன் பவுன்களைப் பொது மக்கள் வைத்திருந்தார்கள். இத் தொகையில் 213 மில்லியன் பவுன்களுக்கு நாணயங்களும், 2,481 மில்லியன் பவுன்களுக்கு நோட்டுகளும் இருந்தன. (நோட்டுகளில் 123 மில்லியன் ஸ்காட் பாங்கு நோட்டுகளும் கலந்துள்ளன—இவற்றுள் மொத்தம் 7 மில்லியன்கள் இங்கிலாந்து மத்திய பாங்கு நோட்டுகளால் உறுதி செய்யப்படவேண்டியனவாயிருந்தன.) பிரிட்டனில் மொத்த நிகர பாங்கு வைப்புகள் (வெளிநாட்டவர்கள், ஸ்காட்லாந்து, இதர பாங்குகள் முதலியனவற்றிற்குரிய வைப்புகளையும் சேர்த்துக் கணக்கிடுகையில்) 10,000 மில்லியன் பவுன்களுக்குமேல் இருக்கின்றன என்று கணக்கிடப்பட்டுள்ளது.

## 5. பணத்தின் உட்பொருள்
## (The Significance of Money)

சில பொருளாதார வாதிகள், 'பணத்தின் மூடுதிரை' (the veil of money) பற்றிக் குறிப்பிடுகிறார்கள். நாம் உண்மையில் வேண்டுவன பண்டங்களும் பணிகளுமே; என்றாலும், இவற்றில் என்னென்ன மாறுதல்கள் நிகழ்கின்றன என்பதை அறியவேண்டுமானால், நாம் பண விலைகளைப் பின்பற்றிச் செல்லவேண்டும்; உற்பத்தியின் அளவிலும், 'உண்மை' வருமானங்களிலும் ஏற்படும் மாறுதல்களைக் கண்டறியவேண்டும். பணம் என்பது சிறப்புத் தேர்ச்சிப் பரிவர்த்தனைகள் என்பனவற்றை வளர்த்தற்காகக் கையாளப்படும் ஓர் உபாயம் (device) என்றே கொள்ளவேண்டும். ஆம், இது மிகவும் முக்கியமான உபாயமாகும். இத்தகைய சிறப்புத் தேர்ச்சியின்மீது அமைத்தெழுப்பப்பட்டுள்ள நவயுகப் பொருளாதார வாழ்க்கை, பணம் இல்லையென்றால் இயங்கவே முடியாது. என்றாலும், நமக்கு நேரடியாகத் தேவைப்படுவது பணம் இல்லை; பணத்தைக்கொண்டு நம்மால் வாங்கக்கூடியனவே.

இதற்கு மறுதலையாக, கீன்சு உள்ளிட்ட சிலர் பின்வரும் கருத்தை வற்புறுத்துகிறார்கள்; இக் கருத்துச் சரியானதென்றே எனக்கும் தோன்றுகிறது; அதாவது, ஒரு பண ஆக்கப் பொருளாதாரத்தில் (monetary economy) ஏற்படும் பண மாறுதல்கள், வாழ்வில் உண்மையான மாற்றங்களை விளைவிப்பதில் அடிப்படையான பங்கு பெறுதல்கூடும். பணத்தின் மொத்த அளவில் ஏற்படும் உயர்வு, முழு வேலை உடைமைக்கு உதவக்கூடும்; இவ் வுயர்வு மிக அதிகமாகிவிட்டால் விலை உயர்வுக்கு வழி செய்துவிடும். இந்த

விலை மாறுதல்கள் நபர்களுக்கும் பிரிவினர்க்கும் இடையே உள்ள வருமானப் பகிர்வில் மாற்றங்களை உண்டாக்கி, உற்பத்தியின் அளவையும் பாதித்துவிட நேரும். இது முதலில் சாதகம்போலத் தோன்றினாலும், பின்னர் பாதகமாகவே முடியும். பணத்தின் மொத்த அளவில் ஏற்படும் குறைவு, இதற்கு நேர்மாறான விளைவுகளை உண்டாக்கலாம்.

தேவைப் பகுதியை எடுத்துக்கொண்டால், பணம் எல்லோராலும் பயன்படுத்தப்படுகிறது என்ற உண்மை, மக்கள் பணத்தை நீர்மையுடைய சொத்தாகவே வைத்திருக்கிறார்கள் என்ற கருத்தையே தருகிறது. நாம் முன்னரே பார்த்ததுபோல, மக்களின் நீர்மை விருப்பத்தில் ஏற்படும் மாறுதல்கள், அல்லது பணத்தின் அளவில் ஏற்படும் மாற்றங்கள் வட்டிவீதங்களைப் பாதிக்கக்கூடும்.

சேமிப்பதற்குரிய தீர்மானம், முதலீடு செய்வதற்குரிய தீர்மானம் ஆகிய இவ்விருவகைத் தீர்மானங்களிடையே ஏற்படும் வேறுபாட்டிலிருந்து வணிகச் சுழலானது (trade cycle) தோன்றும் வரைக்கும், அது ஒரு பணம் சார்ந்த முடிவேயாகும்; இத்தகைய ஒரு வேறுபாட்டைப்பற்றி உணர முற்படுவது, பணத்தையே பயன்படுத்தாத சமுதாயத்தில் மிகவும் கடினமாகும்.

ஆகையால், பணத்தின் மதிப்புகளில் ஏற்படும் உயர்வு, எப்பொழுதும் உண்மையான அபிவிருத்தியையே குறிக்கிறதென்றும், அதன் மதிப்புகளில் ஏற்படும் வீழ்ச்சி, பொருளாதார நிலைகளில் மோசமான போக்கையே குறிக்கிறதென்றும் நாம் அவசர முடிவிற்கு வருதல்கூடாது. கடைசியாக இன்னொன்றையும் நாம் கருத்திற் கொள்ளுதல்வேண்டும். பண ஆக்க மாறுதல்களால் பொருளாதார அமைப்பு முழுவதிலுமே தீர்க்கமான விளைவுகளை உண்டாக்கமுடியும்; ஆகையால், பணவாக்கக் கைக்கோள் (monetary policy) பொருளாதார அமைப்பிற்கே மிக முக்கியமானது.

# 31. பாங்கு (கடன்) செலாவணி
## (Bank Credit)

### 1. பாங்கு நோட்டுகள்

பாங்குகள் எவ்வாறு செலாவணியை உண்டாக்கிக் கொள்ளலாம் என்று விளக்குவது, இந்த அதிகாரத்தின் நோக்கம். செக்குகளுக்கு உரிய, பாங்கு வைப்புகளுக்கு உரிய மற்றொரு பெயர் பாங்குச் செலாவணி என்பதாகும். நாம் சற்று முன்னர் பார்த்ததுபோல, நமது பணத்தில் பெரும்பகுதியாக இதுவே அமைந்துள்ளது. இந்தத் தலைப்பை ஆராய்வதற்கு நாம் இன்னொரு முறையைப் பின்பற்றுவோம். அதாவது, ஒரு பாங்கு தனது நோட்டுகளில் (சட்டப்படி அனுமதிக்கப்பட்டால்) எவ்வளவைப் புழக்கத்திற்கு விடலாம் என்று அறிவதே அம் முறை ஆகும்.

பாங்கு நோட்டு என்பது, அந்த நோட்டில் குறிக்கப்பட்டுள்ள பணத் தொகையை, அதைக் கொணர்வாருக்குக் கொடுப்பதாக பாங்கு அளிக்கும் ஓர் உறுதிமொழியாகும். இந்த நோட்டைக் கொடுத்துப் பணம் கேட்கும் எவருக்கும், பாங்கு உரிய பணத்தை மாற்றாகக் கொடுப்பதாக உறுதி அளிக்கவேண்டும். இங்கிலாந்தில் எல்லா பாங்கு நோட்டுகளும் இப்பொழுது இங்கிலாந்துத் தலைமை பாங்கால் வெளியிடப்படுகின்றன; இவற்றோடு, ஏனைய நாணயங்களையும் சேர்த்துக்கொண்டால், இரண்டும் சேர்ந்து நமது செலாவணிப் (currency) பணங்களாக அமைகின்றன. 1914ஆம் ஆண்டுப் போருக்கு முன்னர், தங்க நாணயங்கள் புழக்கத்தில் இருந்தன. அப்பொழுது வெளியிடப்பட்ட 5 பவுன் இங்கிலாந்துத் தலைமை பாங்கின் நோட்டு, அதை வைத்திருப்போர் கேட்கும்பொழுது 5 தங்கச் சவரன்களைக் கொடுப்பதாக அளிக்கப்பட்ட உறுதிச் சீட்டாகும். இப்பொழுதெல்லாம், இங்கிலாந்துத் தலைமை பாங்கின் நோட்டு மீது ஒரு வாசகம் பொறித்திருப்பதைக் காணலாம். இங்கிலாந்துத் தலைமை பாங்கு, 'நோட்டை வைத்திருப்போர் கேட்கும்பொழுது இவ்வளவு (5 பவுன் அல்லது 1 பவுன் அல்லது 10 ஷி.) பவுன்களை

அளிப்பதாக உறுதி கூறுகிறது' என்ற வாசகம் இருந்தாலும், அதற்குப் பொருளே இருப்பதில்லை.

இங்கிலாந்து நாட்டு பாங்குகளில் சில, வரையறுக்கப்பட்ட ஓர் அளவுத் தொகைக்குத் தமது சொந்த நோட்டுகளை வெளியிட்டுக் கொள்ளும் உரிமையைப் பெற்றிருந்தன; சில ஸ்காட்லந்து பாங்குகள், இன்னும் இந்த உரிமையைக் கொண்டுள்ளன. கானடா போன்ற சில நாடுகளில், மத்திய பாங்கு தவிர இதர பாங்குகளால் வெளியிடப்படும் நோட்டுகளும் செலாவணிப் பணத்தில் முக்கிய மான பகுதியாக விளங்குகின்றன.

ஒரு பாங்கு தனது நோட்டுகளை எவ்வாறு புழக்கத்திற்குக் கொண்டுவருகிறது? செலாவணிக் கருவியர்கத் தங்கமோ வெள்ளியோ இருந்துவிட்டால், இவற்றுலான நாணயங்களைப் பாதுகாப்பு வைப் பாகக் கொள்ளுவதற்கு ஏற்றுக்கொண்டு, பதிலாக ரசீதுகளை வழங்கும். இத்தகைய ரசீதுகளில் பெறுவோரின் பெயரை எழுதிக் கொடுக்காது, இதைக் கொணர்வோர் கேட்கும்பொழுது, இந்த ரசீதில் குறிப்பிட்டுள்ள நாணயத்தைக் கொடுப்பதாக வாக்களிக்கப் படுகிறது என்ற வசதியான முறையை மேற்கொண்டால், அப் பொழுது இந்த ரசீதுகள் பாங்கு நோட்டுகள் என்ற பெயரைப் பெற்றுவிடுகின்றன.

ஒரு பாங்கு தன்னுல் வெளியிடப்பட்டுள்ள ரசீதுகள் அல்லது நோட்டுகளின் முழு மதிப்பிற்கு ஏற்ப, உறுதிமொழிப்படி நாணயங் களையும் இருப்பில் வைத்திருக்குமானுல், (இதனுல் வெளியிடப்படும் நோட்டுகளெல்லாம் நூற்றுக்கு நூறு நாணயங்களால் ஆதரிக்கப் பட்டிருக்கவேண்டும்) அப்பொழுது இந்த பாங்கு ஒரு பாதுகாப் பான வைப்புக் கம்பெனிபோலச் செயலாற்றுகிறதெனக் கொள்ள லாம். இது தனது செலவினங்கட்குச் சரிக்கட்டிக்கொள்ளுதற்காகத் தன்னிடம் பணம் போட்டுள்ள வைப்பாளிகளிடம், அவர்கட்காக நாணயங்களைப் பேணி வைத்திருப்பதாக, ஓரளவு கட்டணங்களை வசூலிக்கவேண்டியதிருக்கும்.

ஆனுல், ஒரு பாங்கு தான் வெளியிடும் நோட்டுகளுக்குச் சமமாக நூற்றுக்கு நூறு நாணயத்தை இருப்பில் வைத்திருக்கவேண்டிய அவசியமில்லை; பெரும்பாலான பாங்குகள் இவ்வாறு வைத்திருப்பது மில்லை. நாள்தோறும் மக்கள் இந்த நோட்டுகளைக் கொடுத்து, மாற்றுக, இவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள நாணயங்களை பாங்கிட மிருந்து பெற்றுச் செல்வார்கள். ஆனுல், நாள்தோறும் வேறு சிலர் தமது நாணயங்களை பாங்கில் வைப்பாக்கிவிட்டு, மாற்றுக, இவற் றிற்கு உரிய நோட்டுகளைப் பெற்றுச் செல்வார்கள். இவ்விதம்

பாங்கியில் செலுத்தப்படும் (payments in) நாணயங்களைவிட பாங்கால் செலுத்தப்படும் (payments out) நாணயங்களின் அளவில் ஏதேனும் மிகை ஏற்பட்டால், அதைச் சமாளிப்பதற்குப் போதிய அளவில் ஒரு பாங்கு, தனது இருப்பில் நாணயங்களை எப்போதும் வைத்திருக்க வேண்டும். இப்படி இருக்குமேயானால், அது தான் வெளியிட்ட நோட்டுகளைக் கொணர்ந்து மாற்றுகப் பணம் கேட்கும் எவருக்கும் உரிய தொகையைக் கொடுப்பதாக வாக்களித்துள்ளதை நிறை வேற்றுகிறது எனக் கொள்ளலாம்.

இத்தகைய பாங்கின் நோட்டுகள் சில நாட்களுக்குப்பின் எங்கும் அறியப்படும்; எனவே, மக்கள் இவற்றை வைத்திருக்கவும் செலுத்துதலாகப் பெறவும் விரும்புவார்கள். இந்த நோட்டுகளை வாங்கியவுடன், இதை வெளியிட்ட பாங்குக்கு ஓடிச் சென்று, உடனே இவற்றை நாணயமாக மாற்றிக்கொள்ள முந்தமாட்டார்கள். ஏனென்றால், எப்பொழுது நோட்டைக் கொடுத்தாலும், அதற்கு உரிய மாற்று நாணயத்தைக் கொடுக்க பாங்கால் முடியும் என்பதை அனுபவ வழியாக அறிந்திருக்கிறார்கள். இவ்விதம் பாங்கின் நோட்டுகள் ஒருவகைச் செலுத்தும் சாதனமாக மக்களிடம் புழங்கி வரும்.

லண்டனில் 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பொற்கொல்லர் கள், தம்மிடம் வைக்கப்பட்ட வெள்ளிக்கு மாற்றுகக் கொடுத்தரசீது களுக்கும் இம்மாதிரி நிலையே ஏற்பட்டது. இப் பொற்கொல்லர் கள் தம்மிடம் உள்ள வெள்ளியில் பெரும் பகுதியைக் கடனாகவும் வழங்கினார்கள் (உதாரணமாக, அரசாங்கத்திற்கு); அதே சமயம் தம்முடைய ரசீதுகளைத் திருப்பிக் கொடுத்துக் கேட்டோருக்குக் கொடுக்கப் போதிய வெள்ளி இருப்பையும் தம்மிடம் வைத்திருந் தார்கள்.

ஒரு பாங்கியின் நோட்டுகளைப் புழக்கத்திற்குக் கொணர மற்றும் ஒரு வழி இருக்கிறது. பணம் கடன் வாங்க விரும்புவோர்க்கு இவற்றைக் கொடுப்பதன்மூலமாகவும், இவற்றைக்கொண்டு ஈடு களை வாங்குவதன் மூலமாகவும் ஒரு பாங்கு தனது நோட்டுகளைப் புழங்கச் செய்யலாம். இதன்மூலமாக, பாங்கு கடன் பெற்றோரிட மிருந்து வட்டி பெறுவது, ஈடுகளுக்கான இலாபம் பெறுவது என்பன வற்றின்மூலம் தனது வருமானத்தைப் பெற்றுக்கொள்ளலாம் அதே சமயத்தில் 100 சதவீதத்திற்குக் குறைவான (20 அல்லது 10 சதவிகிதம்) ரொக்க இருப்புகளைத் தன்னிடம் வைத்துக்கொண்டு அதற்கு மாற்றாக நோட்டுகளைக் கொடுப்பதால், ஒரு பாங்கு, நடை முறையில் உள்ள செலுத்துதல் சாதனங்களை மிகுதிப்படுத்தவு

உதவி செய்கிறது. இந்த பாங்கின் நோட்டுகள் மக்களிடம் கைமாறிச் செல்லுகிறது; புழக்க நாணயமாகக் கருதப்படுகிறது; உண்மையில் பணமாகவே கொள்ளப்படுகிறது.

பாங்கு வெளியிட்ட நோட்டு ஒன்றை வைத்திருப்பவன், அதை பாங்கிடம் கொடுத்து உடனே மாற்றாக நாணயத்தைப் பெறுவதற்குப் பதிலாக, அப்படியே நோட்டாக வைத்திருந்தால், அவன் வட்டி ஏதும் இல்லாமல், அந்தத் தொகையை பாங்குக்குக் கடனாக விட்டு வைத்திருக்கிறான் என்பதே பொருளாகும்.

இவ்விதமாக, மக்களால் ஏற்கப்பட்டு, கையிருப்பில் கொள்ளப் பட்டு, செலுத்துதல்களுக்காகப் பயன்படுத்தப்பட்டும் வரும் பாங்கு நோட்டுகள் பணத்தின் அளிப்பில் இன்னும் ஒரு சேர்க்கை ஆகும். [இதை நிகரச் சேர்க்கை என்று சொல்லக்கூடாது; ஏனென்றால், இதற்கு எதிராக (மாற்றாக) வைப்பில் இருக்கும் நாணயத்தை இதிலிருந்து கழித்துவிடவேண்டும் அல்லவா?]

இப்பொழுது பெரும்பாலான நாடுகளில், கிரேட் பிரிட்டனைப் போல, பாங்கு நோட்டுகளெல்லாம், அந் நாடுகளின் மத்திய பாங் கினால் வெளியிடப்படுகின்றன; இவையே நாட்டின் செலாவணி யாகவும் அமைகின்றன. ஆனால், இதர பாங்குகளும் செலாவணி களை உண்டாக்கி, பணத்தின் அளிப்பைக் கூட்டுகின்றன. அவை நோட்டுகள் வெளியிடுவதன்மூலம் இப் பணியைச் செய்வதில்லை! ஏனென்றால், அவை நோட்டுகளை வெளியிடுவது தடை செய்யப்பட் டுள்ளது. அதற்குப் பதிலாக, பாங்கு வைப்புகளை உண்டாக்கு வது அல்லது ஏற்றுக்கொள்வதன்மூலம் இப் பணியைச் செய் கின்றன. இந்த வைப்புகள் எல்லாம், அவற்றிடம் இருப்பில் உள்ள ரொக்கத்தின் மதிப்பைவிட மிகுதியாக இருக்கும்; செக்குகள் மூலமே செலுத்தப்படும்.

## 2. பாங்கு வைப்புகளின் தோற்றம்

பாங்கு நோட்டுகளைப்போலவே பாங்கு வைப்புகளையும் இரு வகைகளில் ஏதேனும் ஒன்றால் தோற்றுவிக்கலாம். பாங்கிடம், வாடிக்கைக்காரர்கள் தமது ரொக்க இருப்புகளை வைப்பாகக் கொடுக்க லாம்; அல்லது கடன்கள் பெறுதல், ஈடுகள் வாங்குதல் என்பன வற்றின்மூலமாக பாங்கே வைப்புகளை உண்டாக்கிக் கொள்ளலாம்.

வைப்புக்குரிய பணத்தை, ரொக்கமாக வைப்பாளி (depositor) பாங்கிற்குக் கொடுப்பதிலிருந்து பாங்கு வைப்பு என்னும் முறை

தொடங்குகிறது. வைப்பாளி, தனது பணம் வீட்டிலிருப்பதைவிட பாங்கில் பத்திரமாக இருக்கிறது என்று உணரக்கூடும்; அல்லது தனது செலுத்துதல்கள் பலவற்றை ரொக்கமாகக் கொடுப்பதைவிட செக்கின்மூலம் கொடுப்பது வசதியானது என்று அவன் கருதக் கூடும்; தான் பெற்ற உட்செலுத்தல் (pay in) செக்குகளுக்கு உரிய பணங்களைத் தானே நேரில் சென்று வசூலிப்பதைவிட, பாங்கே அவற்றை வசூலித்துத் தன் கணக்கில் வரவு வைத்துக்கொள்வது நல்லது என்று அவன் ஏற்கக்கூடும். இத்தகைய காரணங்களுக்காக ஒருவன், தனக்கென ஒரு பாங்கு வைப்பை ஏற்படுத்திக்கொள்ள விரும்புகின்றான்.

இந்த வகையில் ஒரு பாங்கு, ரயிலடியில் பயணச் சாமான்களைப் பேணும் அறை (cloak room) போலப் பணி புரிகிறது எனலாம். தனது ஒவ்வொரு வாடிக்கைக்காரருக்கும் பாங்கு ஒரு காப்பறையை (safe) ஒதுக்கி வைத்திருக்கும். இவன் பாங்கின் உட்செலுத்தும் எல்லா ரொக்கமும் (அல்லது இவனுக்காக பாங்கு வசூலிக்கும் ரொக்கம்) இக் காப்பறைக்குள் வைக்கப்படும். இவ்வழியாக மக்கள் ஒருவருக்கு ஒருவர் கொடுத்துக்கொள்ளும் செக்குகளுக்கு இணையான ரொக்கம், ஒருவரது காப்பறையிலிருந்து இன்னொருவருடைய காப் பறைக்கு பாங்கினுலோ அல்லது தொடர்புடைய பாங்குகளாலோ மாற்றி வைக்கப்படுகிறது.

இம் முறையை மேற்கொள்ளும் பாங்கு, தனது அலுவலகத்திற் குள் எப்பொழுதுமே போதிய அளவு ரொக்கம் இருப்பதைக் காண் கிறது. தன்னிடம் பணம் போட்டுள்ள வைப்பாளிகள், அதிலிருந்து ஒரு பகுதியை எடுக்கவேண்டுமென்று விரும்பினுல், அவர்கட்கு நேரடியாக ரொக்கத்தை கல்லா (counter) மூலமாகக் கொடுக்கிறது; தனது வாடிக்கைக்காரர்கள், வேறொரு பாங்கின் வாடிக்கைக்காரர் களின்பேரில் செக்குகளை வழங்கியிருந்தால், இந்த பாங்கு அவற்றை ஏற்றுக்கொண்டு, உரிய ரொக்கத்தை அந்த பாங்கிற்குக் கொடுத் துக்கொண்டே இருக்கும். இதைப்போலவே, வேறு பாங்குகளின் வாடிக்கைக்காரர்கள் தனது 'வாடிக்கைக்காரர்களின்பேரில் செக்குகளை வழங்கியிருந்தால், அவற்றிற்கு உரிய ரொக்கத்தை வேறு பாங்குகளி லிருந்து பெற்றுக்கொண்டே இருக்கும். பாங்கின் ஒரு குறிப்பிட்ட காப்பறைக்குள் உள்ள ரொக்கம் நாள்தோறும் ஏற்றத்தாழ்வுகளைப் பெறக்கூடும். ஆனுல், சில வாடிக்கைக்காரர்களின் கணக்கில் மிகுதி யான இருப்பும், வேறு சிலரின் கணக்கில் குறைவான இருப்பும் மாறிமாறி அமைவதால், பாங்கில் உள்ள மொத்த ரொக்க இருப்பின் அளவுகள் எப்பொழுதும் மிகுதியாகவே இருக்கும்; இவற்றின் அள வும் மிகுதியான ஏற்றத்தாழ்வுகட்கு உள்ளாவதில்லை.

இக் காரணங்களால், தன்னிடமுள்ள ரொக்கத்தில் பெரும் பகுதியைக் கடனாகக் கொடுக்கலாமே என்ற எண்ணம் ஒவ்வொரு பாங்காளிக்கும் (Banker) ஏற்படும். ஒவ்வொரு வாடிக்கைக்காரருக்கும் தனித்தனிக் காப்பறைகளை வைத்திருப்பதற்குப் பதிலாக, எல்லாக் காப்பறைகளையும் ஒன்றாக்கிவிடுவார்; அவற்றில் உள்ள ரொக்கங்களையும் ஓரிடத்தில் தொகுத்து வைத்துக்கொள்ளுவார். இவற்றில் பெரும் பகுதியை வெளியில் கொடுத்துவிட்டாலும், (தனது வாடிக்கைக்காரர்களோ அல்லது அவர்களின் சார்பாக இதர பாங்குகளோ) தன்னிடம் பணம் கேட்கும்பொழுது, உடனே அவர்கட்குக் கொடுக்கும் வகையில் போதிய ரொக்க இருப்பையும் கையிலேயே வைத்திருப்பார்.

இவ்விதம் செலுத்துவதற்குரிய இன்றியமையாத நிபந்தனை ஒன்று இருப்பதை நினைவிற் கொள்ளவேண்டும்; அதுதான் எல்லா ரொக்கமும் ஒரே தன்மையின என்பது. ஒரு வைப்பாளி தன் கணக்கில் ஒரு பவுன் நோட்டை பாங்கில் போடுகிறான்; போடும்பொழுதே நோட்டின் எண்ணையும் குறித்துக் கொள்ளுகிறான். இப்படிப் போடப்பட்ட நோட்டு, மறுநாள் புழக்கத்தில் சுழல்வதைக் கண்டால் அவன் ஏதும் துன்பமடைய வேண்டியதில்லை. ஏனென்றால், இவர் வேண்டுமென்று கேட்டால் உடனே கொடுப்பதற்கு இதற்குப் பதிலாக வேறு ஒரு நோட்டு எப்பொழுதும் தயாராக இருக்கிறது. மேலும், ஒரு பவுன் நோட்டு இன்னொரு நோட்டிற்கு எப்போதுமே இணையானதுதான். இன்னோர் இன்றியமையாத நிபந்தனை என்னவெனில், பாங்கில் உள்ள மொத்த வைப்புகளில் ஒரு பகுதியே ரொக்கமாகத் திரும்ப வாங்கப்படும். ஒரு பாங்காளி, தனது முந்திய அனுபவங்களைக்கொண்டு, தன்னிடம் போடப்பட்டுள்ள வைப்புகளில் 10 சதவிகிதத்தைமட்டும் ரொக்க இருப்பாக வைத்திருப்பது போதும் என்று கருதலாம். இந் நிலையில் பாங்கின் தொழில் நிலவரம்பற்றிப் பாதகமான வதந்திகள் கிளம்பிவிட்டால், பணம் போட்டோர் அனைவரும், தம் வைப்புகளைத் திரும்பப்பெறப் பறந்து வருவார்கள். அப்பொழுது அத்தனை பேருக்கும் ரொக்கமாகச் செலுத்துதற்கு உரிய இருப்புகள் இல்லாமல் போய்விடும். இந் நிலையில், பாங்காளி தான் கடனைத் திருப்பிக் கொடுக்கும் நிலையிலேயே இருப்பதாகவும், ஓரளவு அவகாசம் கொடுத்தால் தான் கொடுத்துள்ள கடன்கள், முதலீடுகள் முதலியவற்றைத் திரும்பப் பெற்றுத் தனக்கு ஏற்பட்டுள்ள கடன்களுக்குச் செலுத்திவிட இயலும் என்றும் மறுத்து அறிக்கை தரலாம்; அல்லது தனது பொறுப்பை உறுதிப்படுத்திக் கூறலாம். என்றாலும், ஒரு பாங்காளி என்ற வகையில் அவருடைய செல்வாக்குச் சிதைந்துவிடும்; ஏனென்றால், கேட்ட சமயத்தில் ரொக்கமாகப் பணத்தைக் கொடுக்கும் பொறுப்பிலிருந்து வழுவிவிட்டார் அல்லவா?

ஒரு பாங்கு, தன்னிடம் உள்ள வைப்புகளிலிருந்து பிறருக்குக் கடன் கொடுத்து வட்டி பெறும்; தன்னிடம் பணம் போட்டிருப் போருக்கு, இதிலும் குறைந்த வட்டியைக் கொடுக்கும்; இதனால் அதற்கு ஓரளவு வருமானமும் கிடைக்கிறது. ரயிலடிச் சாமான் பேணும் அறையில் காப்பாக வைக்கும் பொருளைப்போல, பாங்கின் காப்பறைகளில் வைக்கும் ரொக்கம் கருதப்படுவதில்லை. இது உண்மை யில், பாங்கிற்குக் கொடுக்கப்படும் ஒரு கடன்; எனவே, இதில் பெரும் பகுதியைப் பிறருக்கு மறுகடனாக பாங்கு வழங்கிவிடும்.

கடன் வாங்குவோர் பாங்குகள் கொடுக்கும் கடனை வாங்கித் தமது செலுத்துதல்களுக்குப் பயன்படுத்திக் கொள்வர். இப்பொழுது ஓரே ஒரு பாங்குதான் இருக்கிறதெனக் கொள்வோம். இதிலிருந்து யாருக்குப் பணம் கொடுக்கப்படுகிறதோ அவர் இந்த பாங்கின் வாடிக்கைக்காரராக இருப்பார்; எனவே, அவர் தான் பெற்ற பணத் தைத் திரும்பவும் செலுத்த வருவார். ஒரு வைப்பாளி போடும் பணம், இன்னொரு கடனாளிக்குக் கொடுக்கப்படும். கடனாளி திருப்பிக் கொடுக்கும் பணம், வைப்பாளிக்குக் கொடுக்கப்படும். இவ்விதம் பாங்கின் கல்லா வழியாக ஒரே நோட்டு அல்லது நாணயம் பலமுறை மாறிமாறிப் புழங்கும். இப்படியாக நாட்டில் உள்ள மொத்த ரொக்க அளவைவிட, பாங்கில் உள்ள வைப்புகளின் மொத்த அளவு விஞ்சி விடக்கூடும். தன்னிடம் கேட்கப்படும் நாளில் உடனே கொடுத் தற்குப் போதிய ரொக்க இருப்பை பாங்கு எப்போதும் வைத்திருக்கு மானல், இது சரிதான். தன்னிடம் பணம் போட்டுள்ள வைப்பாளி கட்குத் தான் கொடுக்கவேண்டிய பொறுப்புக்கு இணையாக இப் பாங்கு ஓரளவு ரொக்கமும், இதர சொத்துகளும் (பாங்கிலிருந்து கடன் பெற்றோர் இதற்குத் திருப்பி அதைக் கொடுக்கவேண்டிய உறுதி) வைத்திருக்கும்.

உண்மையில், ஒரு பாங்கு கடன் கொடுக்கும்பொழுது, அதைப் பெறுவோருக்கு ரொக்கமாகவே அளித்துவிடுவதில்லை. இதற்குப் பதிலாகக் கடன் பெறுவோருக்குச் (இவருக்கு பாங்கில் இணையான வைப்பு இல்லை யென்றாலும்) செக்குகளை வழங்கி, அவற்றைப் பணமாக்கிக்கொள்ளும் உரிமையையும் கொடுக்கிறது. உதாரண மாக, ஒரு பாங்கு தன்னுடைய வைப்பாளி A என்பவர், தனது கணக்கில் அதிகப் பற்றாக 1,000 பவுன்வரை ரொக்கம் பெற்றுக் கொள்ளுவதற்கு உரிமை அளித்திருக்கும்; A என்பவர் இவ்விதம் அதிகப் பற்றாகப் பெறும் பணங்கட்கு ஒரு குறிப்பிட்ட தொகையை வட்டியாகச் செலுத்த இசைந்திருப்பார். தனக்கு வேண்டிய பொருள்களை வாங்கவும், பணிகளைப் பெறவும் (அல்லது தனக்குக் கடன் அளித்தோருக்குச் செலுத்தவும்) செலுத்துதற்காக, A செக்கு

களைக் கொடுக்கத் தொடங்குகிறார் (draw cheques). இவருடைய செக்குகளைப் பெறுவோர், அவற்றை அப்படியே தம்முடைய பாங்கு வைப்புக் கணக்கில் சேர்த்துவிடுவர். இப்படியாக, இவர்களுடைய வைப்புகள் மிகுதியடைகின்றன. ஆனால், A என்பவருக்கு அதிகப் பற்றாகவோ, கடனாகவோ பாங்கிலிருந்து கொடுத்தால், வேறு எவருடைய வைப்பும் குறைபடவில்லை. இந்த வழியிலேயே 'கடன்கள் பாங்கு வைப்புகளை உண்டாக்குகின்றன'. A என்பவருக்குக் கடன் கொடுப்பதற்குப் பதிலாக, பாங்கு வேறு ஈடுகளை வாங்கிக்கொண்டு அதற்கு மாற்றாகச் செக்குகளைக் கொடுத்தாலும், இப்படியே நிகழும். ஈடுகளை விற்பவன் இச் செக்கை உள்ளே செலுத்தித் தனது பாங்கில் உள்ள தன்னுடைய வைப்புக் கணக்கை உயர்த்திக்கொள்ளுகிறான்; இந்தச் செக்கை-அளித்தது அவனுடைய பாங்காகவும் இருக்கலாம்; வேறு பாங்குகளாகவும் இருக்கலாம். சமீப காலங்களில் பிரிட்டிசு பாங்குகளின் மொத்த வைப்புகளில் ஏற்பட்ட மிகுதியான உயர்வுகள், கடன்கள் கொடுத்ததாலும், ஈடுகளை வாங்கியதாலுமே ஏற்பட்டுள்ளன. ஏனைய உபரி வைப்புகளெல்லாம் பாங்குகளாலேயே ஆக்கிக்கொள்ளப்பட்டவை ஆகும்.

## 3. செலாவணியை ஆக்குவதில் பாங்கிற்கு உள்ள ஆற்றலுக்கு வரம்பு

ஒரு பாங்கு, தனது வாடிக்கைக்காரர்கள் தம் கணக்கில் அதிகப் பற்றுப் பெற்றுக்கொள்வதற்கு அனுமதிப்பதன்மூலமும், பிறரிடமிருந்து ஈடுகளை வாங்கித் தனது செக்குகளை மாற்றாகக் கொடுப்பதன் மூலமும் வட்டி சம்பாதிக்கிறது; இவற்றால் அது தனது பாங்கு வைப்புகளின் மொத்த அளவைப் பெருக்கிக்கொள்ளுகிறது என்றெல்லாம் இதுவரை பார்த்தோம். இதுவே பாங்கின் 'செலாவணி ஆக்கம்' (creating credit) என்று அழைக்கப்படுகிறது. இது இலாபம் பெறுவதற்கு மிக எளிய வழிபோலத் தோன்றுகிறது. என்றாலும், ஏனைய தொழிற் பிரிவுகளைவிட, பாங்கின் இலாப விகிதங்கள் மிகக் குறைவு என்பதை அறியவேண்டும். பாங்குகட்கு அலுவலகங்கள், கருவிகள், அலுவலர் முதலியவற்றிற்கான செலவுகள் இருப்பதால் செலாவணியை ஆக்கிக் கொள்ளுவதற்கான ஆற்றல்கள் வரம்பிற்கு உள்ளாகிவிடுகின்றன.

தனது வைப்பாளர்கள் ரொக்கமாகக் கேட்கும்பொழுது உடனே கொடுக்கவேண்டிய பொறுப்பு இருப்பதால், பாங்கின் செலாவணி ஆக்கம் வரம்பிற்கு உள்ளாகிறது. அதாவது, பாதுகாப்பான ஓர் அளவுக்குக் கீழே தம்முடைய ரொக்க இருப்புக் குறைந்துபோகுமாறு விட்டுவிடவே கூடாது. அண்மைக் காலத்தில், கிரேட் பிரிட்டனில்

உள்ள பாங்குகள், தம்முடைய வைப்புகளின் 8 சதவிகித அளவிற்காவது ரொக்க இருப்பைக் கட்டாயம் வைத்திருக்க வேண்டுமென்று உறுதி செய்துகொண்டன. அதிகப்படியான கடன் கொடுப்பும், ஈடுகள் வாங்குதலும், பாங்கின் வைப்புகளைக் கூட்டினலும், பாங்கின் ரொக்க இருப்பை (இந்த ரொக்க இருப்பானது குறைந்தபட்ச அளவிலேயே அனுமதிக்கப்பட்டிருப்பதாகக் கொள்ளுவோம்) அவை இந்த அளவிற்கும் கீழே குறைத்துவிடுகின்றன.

ஆகையால், பாங்குகள் தமது செலாவணியை விரிவாக்குவதற்காகத் தம்மிடமுள்ள ரொக்க இருப்புகளின் அளவை மிகுதிப்படுத்த வேண்டும், அல்லது ஏற்கெனவே இருந்த மிகக் கீழான சதவிகிதத்தைவிட ஓரளவு உயர்ந்த சதவிகிதத்தில் (வைப்புகளின்) ரொக்க இருப்பு அமையும் வகையில் பார்த்துக்கொள்ளவேண்டும்.

இப்பொழுது நாட்டில் ஒரே ஒரு பாங்கு மட்டுமே (பல கிளைகளுடன்) தொழில் நடத்துவதாக வைத்துக்கொள்ளுவோம். ரொக்க அளிப்பானது அரசாங்கத்தால் கட்டுப்படுத்தப்படுவதால், இந்த பாங்கால் நாட்டில் உள்ள ரொக்க இருப்புகளைக் கூட்டவும் முடியாது; குறைக்கவும் முடியாது. நாட்டில் உள்ள ரொக்கமெல்லாம் பாங்கிற்கும் மக்களுக்கும் இடையிலேயே எந்த நிமிடமும் பகுக்கப்பட்டிருக்கும். பொதுமக்களைக் குறைவான ரொக்கத்தையே வைத்திருக்குமாறு கட்டாயப்படுத்திவிட்டுத் தான் மட்டும் நிரந்தரமான ரொக்க இருப்பை வைத்திருக்க இந்த பாங்கால் முடியாது. தனது ஈடுகளை மக்களிடம் விற்பதன்மூலமும், தனது வாடிக்கைக்காரர்கள் பெற்றிருந்த அதிகப் பற்றுகள் அல்லது கடன்களை ரொக்கமாகத் திருப்பிச் செலுத்துமாறு கேட்பதன்மூலமும், இது தற்காலிகமாக மிகுதியான ரொக்கத்தைப் பெறலாம். ஆனல், செலாவணி விரிவிற்கு உரிய அடிப்படையாக இந்த உபரி ரொக்கத்தைப் பயன்படுத்திக் கொள்ள இதனல் முடிவதில்லை. ஏனென்றால், பாங்கின் வலக் கரத்தைப் (ஆதிக்கக் கரத்தை—whip hand) பொதுமக்கள் வைத்திருக்கிருர்கள். பாங்கு வைப்புகளிலிருந்து ரொக்கமாகப் பணத்தை மீட்டுத் தமது ரொக்க இருப்புகளைப் பெருக்கிக்கொள்ள எப்பொழுதும் அவர்களால் முடியும். நாட்டில் உள்ள ரொக்க அளவைவிட வைப்புகளின் அளவு மிகுந்துவிட்டதாகக் கொண்டாலும், பொதுமக்கள் தாம் விரும்பும் ரொக்க இருப்புகளை, இவ்விதமாக எப்பொழுதும் கூட்டிக் குறைத்துக்கொள்ளலாம். பொதுமக்களது ரொக்கத் தேவை முன்போலவே தொடர்ந்து இருந்தால், நாட்டில் உள்ள ரொக்க இருப்பின் அளவும் கூடாமல் இருந்தால், அப்பொழுது தனது ரொக்க இருப்புகளில் எத்தகைய நிரந்தர மிகுதியையும் கொள்ள பாங்கிற்கு ஆற்றல் இருக்காது.

நாட்டில் உள்ள மொத்த ரொக்கம் (நோட்டுகளும் நாணயங்களும்) 1,600 மில்லியன் பவுன்கள் என்றும், இதில் சராசரியாக, கால் பங்கை பாங்குகளும், முக்கால் பங்கைப் பொதுமக்களும் வைத்திருப்பதாகக் கருதிக்கொள்ளுவோம். இந்த பாங்கு 400 மில்லியன் பவுன்களை ரொக்க இருப்பாக வைத்திருக்கிறது. இதன் வைப்புகள் 5,000 மில்லியன் பவுன்கள். அப்படியானால், இதன் ரொக்க இருப்பின் விகிதம், வைப்புகளில் 8 சதவிகிதம் ஆகும்.

இந்த பாங்கு, தனது செலாவணியை (வேறு வழியாகச் சொல்வதென்றால் இதன் வைப்புகள்) இன்னும் ஆயிரம் மில்லியன் பவுன்களால் அதிகப்படுத்திக்கொள்ளலாமெனத் தோன்றினால், இது தனது ரொக்க இருப்பின் விகிதத்தை 8 சதவீதத்திலிருந்து $6\frac{2}{3}$சதவீதத்திற்குக் குறைத்துக்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். அதாவது, 6,000 மில்லியன் பவுன் வைப்புகட்கு எதிராக 400 மில்லியன் பவுன் ரொக்கமே வைத்திருக்க முடியும். ஆனால், நடைமுறையில் செலாவணி விரிவு ஏற்பட்டால், பொதுமக்கள், தம் கையில் மிகுதியான ரொக்க இருப்பை வைத்துக்கொள்ளவே விரும்புவார்கள். ஏனென்றால், பொருள்களின் விலைகள் கூடலாம்; அல்லது முழு வேலையுடைமை ஏற்படலாம்; அல்லது இரண்டும் சேர்ந்தே மிகுதி ஆகலாம். பொதுமக்கள், தமது ரொக்க இருப்பை அதிகப்படுத்திக் கொள்ள விரும்பலாம். உதாரணமாக, முந்திய 1,200 மில்லியன் பவுன்களுக்குப் பதிலாக, இப்பொழுது 1,400 மில்லியன் பவுன்களைத் தம் கையில் வைத்துக்கொள்ளவும், பாங்கில் 200 மில்லியன் பவுன்கள்மட்டுமே தங்கவும் விரும்பலாம். அப்பொழுது பாங்கின் நிலைமை என்ன ஆகிறது? 6,000 மில்லியன் பவுன்களாலான மொத்த வைப்புகட்கு எதிராக 200 மில்லியன் பவுன்களாலான ரொக்க இருப்பைமட்டும் வைத்திருந்தால், விகிதம் $6\frac{2}{3}$ சதவீதத்திலிருந்து $3\frac{1}{3}$-க்குக் குறைந்துவிடுகிறது.

வைப்புகளுக்கு எதிரான ரொக்க இருப்பின் விகிதத்தைக் குறைத்துக்கொள்ளத் தயாராக இருப்பதால், செலாவணியை விரிவாக்க முடியுமென்றாலும், இதற்குப் பின்னர் பொதுமக்கள் இன்னும் அதிகமாக ரொக்க இருப்பை வைத்துக்கொள்ள விரும்புவார்களேயானால், அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளையும் பாங்கு கணக்கிட்டுக்கொள்ளவேண்டும். உதாரணமாக, 200 மில்லியன் பவுன்களாலான விரிவு, பொதுமக்களிடம் உள்ள ரொக்க இருப்பில் 40 மில்லியன் பவுன்களை உயர்த்தும் என்பதை பாங்கு கணக்கிட்டறியவேண்டும். இதனால், பாங்கின் 5,200 மில்லியன் பவுன் வைப்புகளுக்கு எதிராக, 360 மில்லியன் பவுன் ரொக்க இருப்பைப் பாங்கிடம் விட்டுவைக்கும்—இது 7 சதவீதத்திற்குச் சற்றுக் குறையும்.

பாங்கு தனது ரொக்க இருப்பை, இந்த 7 சதவீத அளவிற்குக் கீழே குறைத்துக்கொள்ளத் தயாராக இல்லாவிட்டால், இதனுல் 200 மில்லியன் பவுன் உபரிக்கு அதிகமாக பாங்குச் செலாவணியை உயர்த்த முடியாது என்பதை நினைவிற்கொள்ளவேண்டும்.[1]

எனவே, பாங்கு வைப்புகளின் (செக்குகளுக்கு உரிய) மொத்த அளவானது பின்வரும் மூன்று நிலைகளைச் சார்ந்து அமைகின்றது என்பதை அறியலாம்.

(1) நாட்டில் உள்ள ரொக்கத்தின் மொத்த அளவு.

(2) பொதுமக்கள் தம் கையில் வைத்திருக்க விரும்பும் ரொக்கத்தின் அளவு.

(3) பாங்குகள் தமது வைப்புகட்கு எதிராக ரொக்கமாக வைத்திருக்க விரும்பும் தொகையின் வழக்கமான விகிதம்.

பல நாடுகளில் நாலாவது காரணம் ஒன்றும் உள்ளது. நாட்டின் மத்திய பாங்கில், ஏனைய பாங்குகள் தமது வைப்புகளைப்போட்டு வைக்கின்றன; இவற்றை ரொக்கத்திற்கு நிகராக மதிக்கின்றன. அடுத்த அதிகாரத்தில் நாம் காணப்போவதைப்போல, இந்த மத்திய பாங்கு தன்னிடமுள்ள வைப்புகளை மிகுதியாக்கவிடுவதாலும், குறைவாக்க அனுமதிப்பதாலும், பாங்குச் செலாவணியில் விரிவையும் சுருக்கத்தையும் உண்டாக்க முடியும்.

நாட்டில் உள்ள மொத்த ரொக்க இருப்பையும் மத்திய பாங்கிடம் உள்ள, ஏனைய பாங்குகளின் வைப்பையும் பண ஆக்க அதிகாரிகளால் மட்டுமே (அரசாங்கம், மத்திய பாங்கு முதலியவற்ருல்மட்டுமே) உயர்த்த முடியும்.

ரொக்கமாக வேண்டுமென்ற பொதுமக்களது தேவை, மக்கள் தொகைக் குறைவாலும், வேலையின்மையாலும் குறைந்துபோக நேரிடலாம். பண ஆக்கப் பழக்கங்களில் வேறுபாடு ஏற்படுவதாலும் ரொக்கத்திற்கு உரிய தேவை குறைய நேரிடும். உதாரணமாக, முன்னர் ரொக்கமாகவே கூலி பெற்றவர்கள், இப்பொழுது செக்கு மூலமாக அதைப் பெறலாம்; அல்லது முன்பு பணமாகச் செலுத்தி வந்தவர்கள், இப்பொழுது செக்குகளாகச் செலுத்த முற்படலாம்.

[1] இவையெல்லாம் உதாரணத்திற்காகக் கொடுக்கப்பட்ட புள்ளிவிவரங்கள். என்ருலும் இவற்றை மனம்போனபடி நான் சேகரித்துக்கொள்ளவில்லை. கடந்த ஐம்பதாண்டுப் புள்ளிவிவரப்படி, கிரேட் பிரிட்டனின் மக்கள், பாங்கு வைப்பில் உள்ள ஒவ்வொரு 4 பவுனுக்கும் எதிராகத் தம்மிடம் 1 பவுனை ரொக்கமாகக் கொள்ள முனைந்திருப்பது தெரிகிறது. அதாவது, பாங்குகள் செலாவணி அளவை உயர்த்தினல், பொதுமக்கள், பாங்கு வைப்பில் காற்பங்கு அளவிற்குத் தமது ரொக்க இருப்பையும் உயர்த்திக்கொள்ள முற்பட்டிருக்கிருர்கள் என்பது இதனுல் புலனுகின்றது.

பாரம்பரியமான ரொக்க விகிதமானது, கருவூல உண்டியல்கள் அல்லது குறுகிய காலத்திலும் அழைத்த உடனும் திரும்பச் செலுத்துதற்குரிய பணங்கள் முதலிய, பாங்கிற்குக் கிடைக்கக்கூடிய திரவச் சொத்துகளையும் (liquid assets) ஓரளவு சார்ந்து அமைகின்றது. கிரேட் பிரிட்டனில் இத்தகைய சொத்துகள் ஏராளமாகக் கிடைப்பதால் ரொக்க விகிதம் மிகவும் குறைவாக இருக்கிறது. மிகுதியான ரொக்கங்களைத் திடீரென மக்கள் திரும்பப்பெற விரும்பினால் அதற்குரிய இரண்டாம் தற்காப்பு அணியாக விளங்கும் இச் சொத்துகளில் ஓரளவே கொண்டுள்ள பிற நாடுகளில் இந்த ரொக்க விகிதம் மிகுதியாகவே இருக்கிறது. சில நாடுகளில் 15 முதல் 20 சதவிகிதம் வரை உயர்ந்திருக்கிறது.

பொதுவான பொருளாதார நிலைகளாலும் ரொக்க விகிதம் பாதிக்கப்படுவதுண்டு. பொதுவான செழிப்பும் நன்னம்பிக்கையும் நிலவும் காலங்களில், குறைந்த ரொக்க விகிதம் இருந்தாலே போதுமானது என்று பாங்குகள் கருதக்கூடும்.

முற்குறித்த காரணங்கள் பலவற்றில் ஒன்றிலேனும் மாறுதல் ஏற்படவில்லையென்றால், பாங்குச் செலாவணியின் அளவும் உயர முடியாது. நாட்டில் உள்ள பணத்தின் மொத்த அளவில் உயர்வு ஏற்பட்டால்தான் செலாவணியிலும் உயர்வு ஏற்பட முடியும். அல்லது மத்திய பாங்கு தன்னிடம் உள்ள பாங்கர்களின் வைப்புகளில் விரிவை ஏற்படுத்தவேண்டும். அல்லது பாங்குகள் தம்மிடமுள்ள வைப்புகளுக்கு உரிய ரொக்க இருப்புகளின் விகிதத்தை முன்னிலும் குறைத்துக்கொள்ள சம்மதிக்க வேண்டும்.

இந்த உட்பிரிவில் நம் ஆராய்ச்சியின் எளிமைக்காக (செக்கு மூலம் பணம் அளிக்கும்) ஒரே ஒரு வணிக பாங்கைமட்டுமே உதாரணமாகக்கொண்டு பார்த்தோம். உண்மையில், பல்வேறுவகைத் தொழில் நடத்தும் பாங்குகள் இருக்கின்றன; என்றாலும், இது நமது ஆய்வைப் பெரிதும் பாதித்துவிடாது. இவற்றின் விளைவுகளைப்பற்றி இனிவரும் உட்பிரிவில் பார்ப்போம்.

## 4. பாங்கின் கணக்குத் தீர்வு முறை
## (Bank Clearing)

உதாரணத்திற்காக ஒரு குறிப்பிட்ட பாங்கை (மிட்லண்டு பாங்கை-Midland Bank) எடுத்துக்கொள்வோம். மொத்த பாங்கு வைப்புகளில் இதனிடம் ஐந்தில் ஒரு பங்கு இருப்பதாகவும் வைத்துக்கொள்ளுவோம். இதன் வாடிக்கைக்காரர்கள், நாள்தோறும்

தம் கணக்கிற்காக உட்செலுத்தும் செக்குகளை வழங்குகிறார்கள். இதில் 4/5 பகுதிச் செக்குகள், பிற பாங்குகளின்மீது அளிக்கப்பட்டிருக்கின்றன. இச் செக்குகளுக்குரிய ரொக்கத்தைப் பிற பாங்குகளிடமிருந்து மிட்லண்டு பாங்கு வசூலித்துக்கொள்ளும். ஆனால், பிற பாங்குகளின் வாடிக்கைக்காரர்களும் தம் கணக்கிற்கு உட்செலுத்துதல் செக்குகளையே கொடுத்திருக்கிறார்கள். இச் செக்குகளின் சராசரி மொத்த மதிப்பு, மிட்லண்டு பாங்கிற்குள் செலுத்தப்பட்ட செக்குகளின் மொத்த மதிப்பைவிட நான்கு மடங்கு அதிகமாக இருக்கின்றது. அப்பொழுது, இவற்றுள் 1/5 பகுதியே மிட்லண்டு பாங்கின் பேரில் வாங்கப்படும். இவ்விதம் மிட்லண்டு பாங்கு, இதர பாங்குகள் தனக்கு எவ்வளவு ரொக்கம் தரவேண்டுமோ அவ்வளவு ரொக்கத்தை இதர பாங்குகட்குச் செலுத்தவேண்டியதிருக்கிறது.

ஒவ்வொரு நகரிலும் உள்ள பாங்கு ஒவ்வொன்றும் தனது அலுவலரைக் குறிப்பிட்ட ஒரு மத்திய அலுவலகம் அல்லது தீர்வகத்திற்கு(clearing house)அனுப்பி, ஏனைய பாங்குகளின் கிளார்க்குகளைச் சந்தித்துப் பரிவர்த்தனை செய்துகொள்ளவைப்பது சிறந்த நடைமுறை ஏற்பாடாக அமையும். ஒவ்வொரு பாங்கும் மிட்லண்டு பாங்கின் பேரால் தன்னிடம் செலுத்தப்பட்ட செக்குகளை மிட்லண்டு பாங்கு அலுவலரிடம் கொடுத்து, அவரிடமிருந்து தனது பாங்கின் பேரால் செலுத்தப்பட்ட செக்குகளை மாற்றிக்கொள்ளலாம். இத்தகைய தீர்வு முறை ஒன்றில், மிட்லண்டு பாங்கு தனக்கு வெஸ்ட் மினிஸ்டர் பாங்கு தரவேண்டியதைவிட அதிகமான தொகையை அதற்குத் தரவேண்டி நேரிட்டால், அந்த வித்தியாசத் தொகையை ரொக்கமாகக் கொடுத்துவிடலாம். இத்தகைய தீர்வுகள் ஒவ்வொரு நாளும் (சில பெரு நகரங்களில் ஒரு நாளைக்கு இரண்டு மூன்று முறைகள் கூட) நடைபெறுகின்றன; ஆனாலும், ஏற்படும் வித்தியாசத் தொகை ரொக்கமாகச் செலுத்தப்பெறுவதில்லை. இங்கிலாந்தில் உள்ள பெரும்பான்மை பாங்குகட்கு, இங்கிலாந்துத் தலைமை பாங்கில் வைப்புகள் உள்ளன. ஆகையால், தம் தீர்வு முறைகளில் ஏற்படும் வித்தியாசங்களை, இங்கிலாந்துத் தலைமை பாங்கின் பேரால் செக்கு ஒன்றை அளிப்பதன்மூலம் செலுத்திக்கொள்ளுகின்றன. இம்முறையில், ஒரு குறிப்பிட்ட தீர்வில், வெஸ்ட்மினிஸ்டர் பாங்கிற்கு மிட்லண்டு பாங்கு அதிகமாக 50,000 பவுன்கள் கொடுக்கவேண்டியிருந்தால், அது இங்கிலாந்துத் தலைமை பாங்கில் தன் பெயருக்கான செக்கு ஒன்றை 50,000 பவுன்களுக்கு வெஸ்ட்மினிஸ்டர் பாங்கிடம் செலுத்திவிடுகிறது. இதனால், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் உள்ள மிட்லண்டு பாங்கின் வைப்பில் 50,000 பவுன் குறைந்துவிடுகிறது; இதே தொகை வெஸ்ட் மினிஸ்டர் பாங்கின் வைப்பில் கூடிவிடுகிறது.

இங்ஙனம், இங்கிலாந்துத் தலைமை பாங்கில் தாம் வைத்துள்ள பாங்கு வைப்புகளை இவை ரொக்கத்திற்குச் சமமாகக் கருதுகின்றன; ஏனென்றால், இதைத் தாம் விரும்பும் எந்த நேரத்திலும் நோட்டாகவோ நாணயமாகவோ திரும்பப் பெற்றுக்கொள்ள முடியும்.

ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவில் மேற்கொள்ளப்படும் தீர்வு முறைகளில், எந்த பாங்கின் சமநிலை அமைப்பிலும் மாறுதல் ஏற்பட வழியில்லை. ஏனென்றால், இத்தகைய உடனடித் தீர்வு முறையில், எந்த பாங்கின் ரொக்க இருப்பிலும் இலாப நட்டம் ஏற்பட்டு விடுவதில்லை. இத் தீர்வு முறையில், ஒரு பாங்கு வழக்கமாக நிறைய ரொக்கத்தை உபரியாகப் பெற்றுவந்தால், இது தனது கடன் கொடுப்பை விரிவாக்கும். இதனால் அதிகப்படியான செக்குகள் இதனிடம் வெட்டப்படும்; பாதுகாப்பிற்கு உரிய அளவு வரைக்கும், ரொக்க இருப்பின் விகிதம் குறைந்து செல்வதுவரை இது ரொக்கத்தைச் செக்குகளின்மீது வழங்கும். இதற்கு மாறாக, அப் பாங்கு வழக்கமாக ரொக்கத்தைப் பிற பாங்குகளிடம் இழந்து வந்தால், இது தனது கடன் கொடுப்பைச் சுருக்கிக்கொள்ளும்; இதனால் இதனிடம் வெட்டப்படும் செக்குகளின் அளவும் குறையும்.

எல்லா பாங்குகளும் ஒருமனதாகத் தமது செலாவணியை விரிவாக்க விரும்பி, ஒவ்வொன்றும் இதர பாங்கைப்போலவே செயலாற்றினால், தீர்வு முறையில் ஒரு பாங்கு இன்னொரு பாங்கிற்கு அதிகமாக ரொக்கம் செலுத்தவேண்டிய நிலையே ஏற்படாது. அப்பொழுது ஒரே ஒரு பாங்குமட்டுமே தொழில் நடத்துவதுபோல, செலாவணி விரிவிலும் சில வரம்புகள் இயல்பாக ஏற்படும். இவற்றையெல்லாம் சென்ற உட்பிரிவில் நான் விளக்கியிருக்கிறேன்.

இதற்கு மாறாக, இந்த ஒரு பாங்குமட்டும் (மிட்லண்டு பாங்கையே உதாரணமாகக் கொள்வோம்) தனது செலாவணியை விரிவாக்க விரும்புகிறதென்றால், என்ன ஏற்படும்? தீர்வக முறையில் பிற பாங்குகட்கு மிகுதியாக ரொக்கம் செலுத்தவேண்டி ஏற்படுவதால், அதன் விரிவுப்போக்கு உடனே தடைப்படும். இது தனது கடன்களை 10 மில்லியன் பவுன்களாக உயர்த்திக்கொண்டால், மொத்த வைப்பில் 1/5 பங்கை இருப்பில் வைத்திருப்பதாகவும் கொண்டால், இதனிடம் புதிதாகக் கடன் வாங்கியவர்கள், இப் பாங்கின் 4/5 பகுதிச் செக்குகளை, பிற பாங்குகளிடம் வாடிக்கைக்காரர்களாக உள்ள இதரருக்குக் கொடுப்பார்கள். இதனால், தீர்வகத்தில், மிட்லண்டு பாங்கு ஏனைய பாங்குகளுக்கு 8 மில்லியன் பவுன் ரொக்கத்தைக் கொடுக்கவேண்டிய நிலை ஏற்படும்.

இனி, மிட்லண்டு பாங்கிடம் 1,000மில்லியன் பவுனுக்கு வைப்புகளும், 80 மில்லியன் பவுனுக்கு ரொக்கமும் (இங்கிலாந்துத் தலைமை பாங்கிடம் உள்ள இதன் வைப்புகளையும் சேர்த்து) வைத்திருந்ததாகவும், இதர பாங்குகளெல்லாம் மொத்தமாகச் சேர்ந்து 320 மில்லியன் பவுனுக்கு ரொக்கமும், 4,000 மில்லியன் பவுனுக்கு வைப்புகளும் வைத்திருந்ததாகவும் கொள்ளுவோம். மிட்லண்டு பாங்கு தனது ரொக்க இருப்பை 7 சதவீதத்திற்குக் குறைத்துக்கொள்ளத் தயாராக இருக்கிறது; ஆனால், இதர பாங்குகள் பாரம்பரிய விகிதமாகிய 8 சதவீதத்திற்குக் கீழ்க் குறைக்க விரும்பவில்லை.

இந்த நிலையில், மிட்லண்டு பாங்கால் தனது கடன்களை 143 மில்லியன் பவுன்களுக்கு விரிவாக்கிக்கொள்ள முடியாது ; இப்படிக் கடனை விரிவாக்கினால், 1,143 மில்லியன் பவுன் வைப்புக்கு எதிராகத் தனது ரொக்க இருப்பு 80 மில்லியன் பவுனுக்கு (7 சதவீதம்) வரக்கூடும் என்று இந்த பாங்கு நம்பியிருக்கலாம். தனது கடன் விரிவு முயற்சியில் கொஞ்சதூரம் சென்றிருப்பதற்கு முன்னரே, தீர்வகத்தில் ஏற்படும் ரொக்க இழுப்பால், இப் பாங்கு பின்னுக்கு இழுக்கப்பட்டு விடும்.

இத்ற்கு மாற்றாக, இந்தப் பாங்கு விரிவாக்கிக்கொள்ளக்கூடிய செலாவணியின் உச்ச அளவு 10 மில்லியன் பவுன்கள்மட்டும்தான் என்றும் தவருகக் கணக்கிட்டுவிடக் கூடாது. இங்ஙனம் 10 மில்லியன் பவுன்கள் கடன் கொடுத்தால், இதனுடைய 1,010 மில்லியன் பவுன் வைப்பிற்கு எதிராக 72 மில்லியன் பவுன் ரொக்கமாக (இது 7·13 சதவீதம்) இதன்வசம் இருக்கும். ஏனென்றால், மிகுதியாக ரொக்கம் பெற்ற இதர பாங்குகளும் தமது செலாவணியை, தமது ரொக்க விகிதத்தை 8 சதவீதத்தில் அமர்த்தியபடியே விரிவாக்கிக்கொள்ள முற்படும். அவற்றின் பேரால் மிகுதியாக வழங்கப்பட்ட செக்குகளில் 1/5 பகுதி, மிட்லண்டு பாங்கின் வாடிக்கைக்காரர்கட்குச் செலுத்தப்படும் ; இதனால் அந்த அளவிற்குரிய ரொக்கம் மிட்லண்டு பாங்கின் இருப்பிற்குள் வந்து விழும்.

மிட்லண்டு பாங்கு, படிப்படியான செலாவணிப் பெருக்க முறையைக் கையாள்வதால் தனது ரொக்க இருப்பில் ஒரு பாதுகாப்பான சமநிலையை உண்டாக்கிக் கொள்ளலாம். தன்னிடம் உள்ள 1,070 மில்லியன் பவுன் வைப்புகளுக்கு எதிராக 75 மில்லியன் பவுன் ரொக்கத்தை வைத்திருக்கலாம். இதே சமயத்தில் இதர பாங்குகளின் ரொக்க இருப்புகள் 325 மில்லியன் பவுன்களாகவும், மொத்த வைப்புகள் 4,063 மில்லியன் பவுன்களாகவும் உயர்ந்திருக்கும்.

இதிலிருந்து பெறப்படுவதென்னவென்றால், ரொக்கத்தின் மொத்த அளிப்புநிலை சமமாக இருப்பதாலும், 133 மில்லியன் அல்லது $2\frac{2}{3}$ சதவிகிதம் பாங்குச் செலாவணியின் மொத்த அளவில் விரிவு ஏற்பட்டாலுங்கூட, மக்கள் தம் கையில் ரொக்கத்தை மிகுதியாக வைத்துக்கொள்ள விரும்பாததாலும், இச் செலாவணிப் பெருக்கத்தில் மத்திய பாங்கு குறுக்கிடுவதில்லை.

ஒரு பாங்குமட்டும் தனது செலாவணியைப் பெருக்கினால் என்ன நேரும் என்பதையே இதுவரை விளக்கினேன். கிரேட்பிரிட்டனில், எல்லா பாங்குகளும் ஒரேமாதிரியாகவே நடைமுறையில் செயலாற்றுகின்றன. இவை அனைத்தும், ஒரேமாதிரியாகத் தமது இருப்பு விகிதங்களை வைத்திருக்கும்வரை, பணத்தின் அளிப்பை நிர்ணயிக்கும் ஆற்றல்களை விளக்குவதற்கு இவை அனைத்தையும் ஒரு பாங்குபோலவே கருதிக்கொள்ளலாம்.

# 32. இங்கிலாந்து பாங்கும் வணிக பாங்குகளும்

## 1. பணத்தின் அளிப்பு

ஸ்காட்லாந்து, வட அயர்லாந்து நாடுகளில் உள்ள பாங்குகள் வெளியிடும் நோட்டுகளில் 4 மில்லியன் பவுன்கள், இங்கிலாந்து பாங்கு நோட்டுகளால் பவுனுக்குப் பவுன் ஆதரிக்கப்பெற்றிருத்தல் வேண்டும். இங்ஙனம் மேற்குறித்த பாங்குகளால் வெளியிடப்பெற்றுள்ள நாணயங்கள், பாங்கு நோட்டுகளைத் தவிர நமது பணத்தில் பின்வருவனவும் அடங்கியுள்ளன:

1. இங்கிலாந்து பாங்கின் நோட்டுகள்.
2. செக்குகளுக்கு உரிய பாங்கு வைப்புகள்.

இவற்றுள் முதலாவதை ரொக்கம் என்றும், இரண்டாவதை பாங்குச் செலாவணி என்றும் அழைக்கின்றோம்.

பாங்குகள் தம் மொத்த வைப்புகளுக்கு (டெபாசிட்டுகள்) எதிராக, ரொக்கமாக 8 சதவீதத்தை நிரந்தர விகிதமாகப் பேணி வருகின்றன. இதனால் பாங்கிற்குக் கிடைக்கும் ரொக்க அளவே பாங்குச் செலாவணியின் அளவை நிர்ணயிக்கிறதென்றும், இதன் செலுத்துதல்களில் 90 சதவீதத்திற்கும் (மதிப்பில்) மேற்பட்டவை செக்கு மூலமாகவே நடைபெற்றாலும், பாங்கின் ரொக்க அளவே பணத்தின் மொத்த அளிப்பைக் கட்டுப்படுத்துகின்றதென்றும் நமக்குத் தோன்றுகிறது.

பொதுப்படையாகப் பார்த்தால், இது உண்மைதான். அதே சமயத்தில் நாம் இன்னொன்றையும் மறந்துவிடுதல் கூடாது. பணத்தின் அளிப்பில் மாறுதலை ஏற்படுத்தக்கூடிய உண்மையான மாற்றம், பணத்துறை, பாங்குமுறை முதலியவற்றிற்குப் புறமாக அமைந்துள்ளது என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். உதாரணமாக, வரவுசெலவுத் திட்டத்தில் ஏற்படும் தொடர்ந்த பற்றுக்

குறைகள், கூலி உயர்வுகள் என்பனவும், பாங்குச் செலாவணி அளவையும் ரொக்கத்தையும் மிகுதிப்படுத்தவேண்டியது அவசியம் என்ற நிலையை உண்டாக்கிவிடக்கூடும்.

கொள்கையளவில், இங்கிலாந்து பாங்கு புழக்கத்தில் உள்ள தனது நோட்டுகளில் எளிதாக மாறுதலைச் செய்வதன்மூலம் பாங்குச் செலாவணியின் அளவைக் கட்டுப்படுத்திவிடமுடியும். இது, பிற பாங்குகள் தமது செலாவணியை விரிவாக்கவேண்டுமென்று விரும்புகையில், தனது நோட்டுகளை மிகுதியாகப் புழக்கத்திற்கு விடும்; உதாரணமாக, ஈடுகளை வாங்கிக்கொண்டு அவற்றிற்கு ரொக்கம் கொடுப்பதன்மூலம் தனது நோட்டுப் புழக்கத்தை மிகுதிப் படுத்தலாம். விலைகள் ஏறினாலும், முழு வேலையுடைமை ஏற்பட்டாலும், உபரியாக வெளியிடப்பட்ட நோட்டுகளில் சிலவற்றைத் தாமே வைத்துக்கொள்ளப் பொதுமக்கள் விரும்புவார்கள். என்றாலும், இவற்றுள் சில நோட்டுகள் பாங்குகளிடமே இருக்கும். அப்பொழுது, பாங்குகள் கடன்களை அதிகப்படுத்துவதன்மூலமும், ஈடுகளை மிகுதியாக வாங்குவதன்மூலமும் தமது செலாவணியை விரிவாக்க முற்படும். அவை தம் கையிருப்பில் கொண்டுள்ள உபரி நோட்டுகளின் அளவைப்போல $12\frac{1}{2}$ மடங்கிற்குச் செலாவணியைப் பெருக்கும். இங்ஙனம் செய்வதன் மூலமாக, அவற்றால் தமது இலாபத்தையும் உயர்த்திக்கொள்ள முடியும்; அதே சமயத்தில் வைப்புகளுக்கு எதிராக 8 சதவீத ரொக்க இருப்பையும் பேணிக் கொள்ள முடியும். மறுதலையாக, இங்கிலாந்து பாங்கு தனது பாங்குச் செலாவணியின் அளவைச் சுருக்கிக்கொள்ள விரும்பினால், தனது ஈடுகளை ரொக்கத்திற்கு விற்பதன்மூலம், தனது நோட்டுகளையே புழக்கத்திலிருந்து திரும்பப் பெற்றுக்கொள்ளும். இது, ஏனைய பாங்குகளிடம் குறைவான ரொக்க இருப்பையே விட்டு வைக்கும்; அவை தமது கடன்களைக் குறைத்தோ, சில ஈடுகளை விற்றோ தமது பாங்கு வைப்புகளின் அளவைக் குறைத்துக்கொள்ளுமாறு கட்டாயப்படுத்தும்; அவற்றின் ரொக்க இருப்பு விகிதத்தை 8 சதவீத அளவிலேயே நிலைபெறுத்திக்கொள்ளச் செய்யும்.

இங்கிலாந்து பாங்கு, நாட்டில் உள்ள பாங்குச் செலாவணியின் அளவை உண்மையில் இந்த முறையிலேயே கட்டுப்படுத்துகிறது. ஆனால், இது தனது நோட்டுகளின் புழக்கத்தில் வேறுபாடுகளை உண்டாக்கிக் கட்டுப்படுத்துவதைவிட, ஏனைய பாங்குகள் ரொக்கத்திற்கு நிகராகத் தன்னிடம் போட்டுவைத்துள்ள வைப்புகளில் மாறுதல்களை ஏற்படுத்துவதன்மூலம் பாங்குச் செலாவணியில் ஏற்ற இறக்கங்களை ஆக்குகிறது. இது (மத்திய) பாங்கு வீதம் (bank rate) என்ற கருவியையும் பயன்படுத்திக்கொள்ளுகிறது. மேலும், இங்கி

லாந்திலுள்ள வணிக பாங்குகளும், லண்டன் பண அங்காடியும் இந்த பாங்கின் தலைமையை ஏற்றுக்கொள்ளுகின்றன; ஒரு குறிப்பிட்ட கொள்கையைத்தான் மேற்கொள்ளவேண்டுமென்று இந்த பாங்கு வரையறுக்கையில், அதை அப்படியே ஏற்றுச் செயல் புரிகின்றன. உதாரணமாக, சில குறிப்பிட்டவகைக் கடன்களைக் குறைத்துக்கொண்டு வேறுவகைக் கடன்களுக்கு ஆக்கம் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்பெறலாம்; சமீபகாலம்வரை ஊக வாணிப நோக்கங்கட்கெல்லாம் கடன் கொடுப்பதும் தவணைக் கொள்முறைக்குக் கடன் அளிப்பதும் கட்டுப்பாடு செய்யப்பெற்றன; ஏற்றுமதியைப் பெருக்க உதவுவதற்குத் தாராளமாகக் கடன் கொடுக்க அனுமதிக்கப் பெற்றன.

எனவே, பணத்தின் அளிப்பு எவ்வாறு உண்மையிலேயே கட்டுப்படுத்தப்படுகிறது என்பதை விளக்குவதற்காக வணிக பாங்குகளின் பிரதான செயல்முறைகளையும் இங்கிலாந்து பாங்கின் சிறப்புப் பணியையும் நான் ஓரளவு தெளிவாக்கவேண்டும்.

## 2. வணிக பாங்குகள்

லண்டன் தீர்வுசெய் பாங்குகள் (London Clearing Banks) என்ற பெயரில் பதினொரு பாங்குகள் உள்ளன; இவ்வாறு அழைக்கப் பெறுவதன் காரணம் லண்டன் தீர்வகத்தின் (London clearing house) உறுப்பினர்களாக இவைமட்டுமே அங்கம் வகிக்கின்றன; ஏனைய பாங்குகள் தமது தீர்வுகளை, இவை மூலமாகவே செய்து கொள்ளுகின்றன. இப் பதினொரு பாங்குகளில் பார்க்லேஸ், லாயிட்ஸ், மிட்லண்டு, நேஷனல் புரொவின்ஷியல், வெஸ்ட் மினிஸ்டர் என்பன 'பேரைந்துகள்' (big fives) என அழைக்கப் பெறுகின்றன. ஏனைய ஆறும் பின்வருமாறு: மார்டின்ஸ் பாங்கு, மாவட்ட பாங்கு, தேசீய பாங்கு (இதற்கு அயர்லாந்தில் பல கிளைகள் உள்ளன), வில்லியம்ஸ் டீகன்ஸ் பாங்கும் கிளைனும், மில்ஸ் (இவ்விரண்டும் ஸ்காட்லந்து ராயல் பாங்கால் கட்டுப்படுத்தப்படுகின்றன), கவுட்ஸ் அண்டு கம்பெனி (இதை நேஷனல் புரொவின்ஷியல் பாங்கு கட்டுப்படுத்துகிறது).

ஸ்காட்லந்தில் மூன்று சுதந்திரமான பாங்குகள் உள்ளன. அவை ஸ்காட்லந்து பாங்கு, ஸ்காட்லந்து ராயல் பாங்கு, ஸ்காட்லந்து வணிக பாங்கு என்பன. இன்னும் மூன்று பாங்குகள் இங்கிலாந்து பாங்குகளுடன் இணைந்துள்ளன. அவை பிரிட்டிஷ் லினன் பாங்கு (பார்க்லேஸ் பாங்கால் கட்டுப்படுத்தப்படுவது), ஸ்காட்லந்து தேசீய பாங்கு (இதை லாயிட்ஸ் பாங்கு கட்டுப்படுத்து

கிறது), கிளைடெஸ்டேல், வடக்கு ஸ்காட்லந்து பாங்கு (இதை மிட்லண்டு பாங்கு கட்டுப்படுத்துகிறது).

மேலும், லண்டனில் பல்வேறு அயல்நாட்டு, குடியேற்ற நாட்டு பாங்குகளும் தமது அலுவலகங்களை வைத்துள்ளன. ஆனால், நான் இதுவரை குறிப்பிட்ட பதினேழு பாங்குகளும், ஏனைய இரு வட அயர்லாந்து பாங்குகளுமே (தேசிய பாங்குடன் இவற்றை யும் சேர்த்துக்கொள்ளவேண்டும்) ஆங்கில பாங்குகள் என்று அழைப்பதற்குத் தகுதியுடையவை ஆகும். இவற்றின் சொத்துகளில் 5/6 பங்கும், இவற்றின் 12,000 கிளைகள் உப கிளைகளில் 5/6 பங்கும், பேரைந்துகளால் கட்டுப்படுத்தப்படுகின்றன.

வணிக பாங்குகள், சில சமயங்களில் கூட்டுப் பங்குப் பாங்குகள் (Joint Stock Banks) என்றும் அழைக்கப்பெறுகின்றன. இதற்கு ஒரு வரலாற்றுக் காரணம் இருக்கிறது. 1694-ல், இங்கிலாந்து பாங்கு நிறுவப்பெற்றவுடன், இங்கிலாந்து முழுவதும் கூட்டுப் பங்கு பாங்கு நடத்தும் சர்வாதீன உரிமை இதற்கு வழங்கப்பெற்றது. இதனால், ஸ்காட்லந்தில் ஏற்பட்டதைப்போல சில பெரிய பாங்கு களால் நாடெங்கும் கிளைகளைப் பரப்பி இயங்குவது தடை செய்யப் பெற்றது. ஆங்கில மாநிலங்களின் பாங்குத் தொழில்களை நாடெங்கும் பரவிக்கிடந்த பல தன்னிச்சையுள்ள 'நாட்டுப்புற பாங்குகளே' நடத்திவந்தன. ஆனால், 1833-ல் கூட்டுப் பங்கு பாங்கு முறைக்கு அனுமதி அளித்தவுடன், பல கூட்டுப் பங்கு பாங்குகள் அமைக்கப்பெற்றன. நாளடைவில், இதர தனியார் பாங்குகளையெல்லாம் உள்ளடக்கிக்கொண்டு இவை வலுப்பெற்று, விரிந்து, நாடெங்கும் கிளைகளைப் பரப்பிக்கொண்டுள்ளன. வளர்ச்சி யினாலும் இணைப்பினாலும் வலுப்பெற்ற இத்தகைய பாங்குகளில் சிலவே, பாங்குத் தொழிலில் பெரும்பான்மையைச் செய்து வருகின்றன.

## 3. வணிக பாங்குகளின் பொறுப்புகள்

ஒரு பாங்கின் இருப்புநிலைக் குறிப்பின் (balance sheet) பொறுப்புகள் என்ற பகுதியில் உள்ள பிரதான இனங்கள் வருமாறு: செலுத்தப்பெற்ற மூலதனம் (paid-up capital), இருப்பு நிதி, வைப்புகள் (நடப்பு வைப்புகள், இதர கணக்குகள் என்பன இதில் அடங்கும்).

1962 நவம்பரில் லண்டன் தீர்வுசெய் பாங்குகளது கூட்டு மூலதனம் 231 மில்லியன் பவுன்கள் என்றும், அவற்றின் இருப்புநிதி, (பகிர்வு செய்யப்படாத இலாபங்களின் திரட்சி) 169 மில்லியன்

பவுன்கள் என்றும் கணக்கிடப்பெற்றுள்ளது. இத் தொகைகளெல்லாம் அவற்றின் பங்குதாரர்களுக்கு உரியவை. இவற்றுடன் மறைத்துவைக்கப்பட்ட சில இருப்புகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டும்; அதாவது, தமது கட்டடங்கள் முதலியவற்றை அன்றைய நிலவர மதிப்பிற்கும் குறைவாகவே விலையிட்டுக் கணக்கிட்டுள்ளன.

இவற்றிற்கு வருவாய் தரும் சாதனங்கள், இவற்றின் வைப்புகள் மட்டுமே; இவை 7,740 மில்லியன் பவுன்களுக்கு மேற்பட்டிருப்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளது.[1] இவையெல்லாம் வைப்பாளிகட்கு உரியனவேயன்றி பங்குதாரர்களைச் சார்ந்தனவல்ல.

இவற்றிடம் உள்ள வைப்புகளில் 2/3 பங்கு நடப்புக் கணக்கில் செக்குகளுக்கு உரியனவாகக் கேட்கப்படுகையில் ரொக்கமாகக் கொடுபடுவதற்காக உள்ளவை. பொது விதியாக நடப்புக் கணக்குகட்கு வட்டி ஏதும் கொடுக்கப்படுவதில்லை. ஆனால், வாடிக்கைக்காரர் தமது செலுத்துதல்களையெல்லாம் செக்குகள்மூலம் கொடுக்கவும், தனக்கு வரும் செக்குகளையெல்லாம் தனது கணக்கில் வரவு வைத்துக் கொள்ளவும் வசதி பெற்றிருக்கிறார்; இவருடைய பரிவர்த்தனைகளையெல்லாம் பாங்கு குறித்துக்கொண்டு கணக்கெழுதி வருகிறது.

ஏனைய வைப்புகளை, சேமிப்பு வைப்புகள் என்றே சொல்ல வேண்டும். இவற்றை ஏழு நாள் முன் அறிவிப்புக் கொடுத்தே பெற முடியும்; இவற்றிற்கு வட்டியும் உண்டு. இவற்றைப் பெறுவதற்குச் செக்கு முறை இல்லை; ஆனால், பழக்கத்தில் இவற்றின்மீது செக்குகளை வழங்கலாம் (உதாரணமாக, ஒரு வாடிக்கைக்காரர் தனது வைப்பின் மீது ஈடாக அதிகப் பற்றுக் கேட்கலாம்); இவற்றையும் பாங்குச் செலாவணியில் சேர்த்துக்கொள்ளுவது வழக்கமாகிவிட்டது.

வணிக பாங்குகளைத் தவிர இன்னும் பல நிறுவனங்கள் [உதாரணமாக, தபால் நிலைய சேமிப்பு பாங்கு, பொறுப்பாளர் சேமிப்பு பாங்கு (Trustee Savings Bank), வீடு கட்டும் கழகங்கள், இன்சூரன்சு கம்பெனிகள் என்பன] வைப்புகளைப் பெறுகின்றன. தம் இருப்பில் ஓரளவு ரொக்கத்தைமட்டும் வைத்துக்கொண்டு எஞ்சியவற்றை மறுகடனாக வழங்குகின்றன; அல்லது ஈடுகளை வாங்குகின்றன. இவையெல்லாம் சேமிப்பதற்கு, உகந்த சிறந்த வழிகள். ஆனால், இச் சேமிப்பு வைப்புகளெல்லாம் பணத்தின் அளிப்பை எவ்வகையிலும் பாதிப்பதில்லை; ஏனென்றால், இவற்றின் வைப்புகள் செக்குகளின் செலாவணிக்கு உரியன அல்ல.

[1] இது ஒரு மொத்தத் தொகை. இதில் ஏனைய பாங்குகளிடம் வசூலிக்கப்படும் செக்குகள், இருப்பு நிலைகள் முதலியனவும், ஏனைய கொடுக்கல் வாங்கல் இனங்களும் அடங்கும். எனவே, நிகர வைப்பாக 7,060 மில்லியன் பவுன்களைமட்டுமே கொள்ள வேண்டும்.

## 4. வணிக பாங்குகளின் சொத்துகள்

பிரிட்டிசு வணிக பாங்கொன்றின் கொள்கை, மூன்று வேறுபட்ட நோக்கங்களிடையே ஏற்படும் இணக்கமாகும். முதலாவதாக, பாங்கு தனது பங்குதாரர்களுக்காக எவ்வளவு முடியுமோ அவ்வளவு இலாபத்தைச் சம்பாதிக்க விரும்புகிறது; இரண்டாவதாக, இதனுடைய நிதிகளெல்லாம் இதனுடைய வைப்பாளிகளையே பெரும்பாலும் சேர்ந்தவை. இவர்களெல்லாம் பாங்கை ஒரு பொறுப்பாளியாகக் கருதித் தம்முடைய வைப்புகளைப் போட்டிருக்கிறார்கள். இவர்களுடைய பாதுகாப்பு எண்ணத்திற்கு மாறாக, அதிகமான இலாபத்தைப் பெறவேண்டுமென்ற அவாவினால் உந்தப்பட்டு, தன்னிடமுள்ள வைப்புகளில் ஒரு பகுதியைப் போதுமான பிணையில்லாத ஆபத்தான தொழில்களில் முடக்கினால், அப்பொழுது இந்த பாங்கு, தனது வைப்பாளர்களின் நம்பிக்கைக்குத் தக்கபடி நடந்துகொள்வதாகச் சொல்லவியலாது. மூன்றாவதாக, தனது வைப்பாளிகள் கேட்கும்பொழுது ரொக்கமாகத் திருப்பிக் கொடுப்பதாக இது ஒப்புக்கொண்டுள்ளது. எனவே, இது தனது சொத்தில் ஒரு பகுதியை எப்போதும் ரொக்கமாகவோ அல்லது அதிக இழப்பின்றி உடனே ரொக்கமாக மாற்றிக்கொள்ளக்கூடிய இதர வடிவிலோ வைத்திருக்கவேண்டும்.

பாங்கின் இருப்புநிலைக் குறிப்பில் உள்ள சொத்துப் பகுதியில், இப் பாங்கு தனது நிதிகளை எவ்வாறு பயன்கொண்டுள்ளது என்பதைக் காட்டுகிறது; பாங்கின் மூவகைச் செயல் நோக்கங்களாகிய இலாபம், பாதுகாப்பு, நீர்மை ஆகிய மூன்றிடையே அது கொண்டுள்ள இணக்கத்தின் வெற்றியைப் பிரதிபலிக்கிறது.

இவ்விதமாக, இந்த பாங்குகள் குறைந்தபட்சம் 8 சதவிகித ரொக்கம் வைத்துள்ளன; இது எவ்வித வருவாயும் தருவதில்லை. குறைந்த அளவு 22 சதவீதத்திற்காவது, குறுகிய கால அறிவிப்புக் கடன்களிலும், கழிவு செய்யப்பட்ட உண்டியல்களிலும் ஒதுக்கி வைக்கிறது. இவை 'திரவச் சொத்துகள்' (liquid assets) எனப்படும்; இவற்றிலிருந்து கிடைக்கும் வருமானமும் குறைவாகவே இருக்கும். 1946-50-ல், இவை $\frac{1}{2}$ சதவீதத்திற்குச் சற்றுக் கூடுதலான வருமானத்தைத் தந்தன; ஆனால், நீண்டகால ஈடுகள் 3 சதவீதமும், கடன்கள் 4 சதவீதமும் வருமானமாக அமைந்தன. 1962 இறுதியில், அவை $3\frac{3}{4}$ சதவீத வருமானம் தந்தன; ஆனால், நீண்ட கால முதலீடுகள் 5 சதவீதத்திற்கு மேலும், அட்வான்சுக் கடன்கள் $5\frac{1}{2}$ சதவீதத்திற்குக் குறையாமலும் வருவாய் அளித்தன.

குறுகிய தவணைக் கடன்களும் கழிவுகளும் திரவச் சொத்துகள் என்று அழைக்கப்படுகின்றன; ஏனென்றால், இவற்றை எவ்வித

இழப்புமின்றி உடனே ரொக்கமாக (பாங்கின் இருப்பிலிருந்து) மாற்றிக்கொள்ளமுடியும். பாங்குகள், குறைந்த காலக் கடன்களைத் திருப்பி அழைக்கும்பொழுது, கழிவகங்கள் தலைமை பாங்கிடம் இருந்து கடன் பெற்று அவற்றைத் திருப்பித்தரவேண்டியிருக்கிறது. பாங்குகள் தமது உண்டியல்களை விற்றுவிடுவதில்லை; அவை முதிர் வடையும்வரை தாமே வைத்திருக்கின்றன. ஆனால், அவை முதிர் வடைந்த உண்டியல்களை நிரப்புதற்குக் குறைவான கருவூல உண்டியல்களை வாங்குவதன்மூலமாகத் தம்முடைய ரொக்க இருப்பை உயர்த்திக்கொள்ள முடியும். முதலீடுகளும் அட்வான்சுகளும் குறைவான நீர்மையுடையவை. ஈடுகளை எப்பொழுதுவேண்டு மானாலும் விற்கலாம்; ஆனால், அப்படி விற்கையில் விலை குறைத்தே விற்க நேரிடும். மேலும், கடன் வாங்கியவர்கள் தாம் பெற்ற அட்வான்சுகளைக் குறுகிய கால அறிவிப்பிற்குள் திரும்பிச் செலுத்தும் நிலையில் பெரும்பாலும் இருப்பதில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, ஈடுகளின் விற்பனையும் அட்வான்சுகளைத் திரும்பப் பெறுதலும், பாங்கிடம் உள்ள ரொக்கத்தை உயர்த்திவிடுவதில்லை; அதற்கு மாறாக, பாங்கின் வைப்புகளின் அளவைமட்டுமே குறைத்துவிடு கின்றன.

பாங்குகளின் இரண்டாவது நோக்கம் பாதுகாப்பு. பங்குகள், பத்திரங்களில் முதலீடு செய்வதில் ஓரளவு இழப்பு ஆபத்து இருந் தாலும் இவற்றிலிருந்து அதிகமான வருமானம் கிடைக்கும். என்றாலும், பாங்குகள் போதிய பாதுகாப்புள்ள ஈடுகளில்மட்டுமே (gilt-edged securities) முதலீடு செய்கின்றன. கூடுமானவரை, ஒருசில ஆண்டுக் கெடுவிற்குள் முதிர்வடைந்து, முழுமையான மதிப்போடு திரும்பச் செலுத்தப்பெறும் ஈடுகளிலேயே முதலீடு செய்கின்றன. மேலும், கன்சோல்கள் முதலிய மீட்கவியலாத ஈடுகளில், விலை மதிப்பில் வீழ்ச்சிபெறக்கூடிய ஈடுகளில் முதலீடு செய்வதைத் தவிர்க்கின்றன. எங்கெங்கு இயலுமோ அங்கெல்லாம் பாங்குகள் அளிக்கும் அட்வான்சுக் கடன்கள், சந்தைப்படுத்தக்கூடிய ஈடுகளால் ஆதரிக்கப்பெறுகின்றன. பல நிறுவனங்களால் இத் தகைய ஆதரவுகளை அடிக்கடி கொடுக்கவியலாமல் போனாலும், அவற்றின் தொழில் நிலவரம், சொத்துகளின் மதிப்பு என்பன, கொடுக்கப்பட்ட அட்வான்சுகளுக்குப் போதுமான பாதுகாப்பு உத்தரவாதமாயிருக்கின்றன என்பதையும், எப்படியும் கடனைத் திரும்பப்பெற இவை உதவும் என்பதையும் தெரிந்துகொண்ட பின்னரே, இவற்றிற்கு பாங்குகள் கடனை அளிக்கின்றன.

மூன்றாவது நோக்கம் இலாபங்கள். பாங்குகள் பெறும் இலா பங்களில் பெரும் பகுதி முதலீடுகளாகவும், அட்வான்சுக் கடன்க

ளாகவும் அவை வைத்துள்ள சொத்துகளில் 60 முதல் 65 சதவீதத்தினின்றே கிடைக்கின்றன. பாங்குகளின் அட்வான்சுக் கடன்கள் உயர்ந்த விகிதத்தில் இலாபங்களை அளித்தாலும், அவற்றின் சொத்துகளில் மிகக் குறைந்த நீர்மையுடையன இவையே ஆகும்.

1962 நவம்பரில் லண்டன் தீர்வுசெய் பாங்குகளின் கூட்டுச் சொத்துகள் (சில்லறை இனங்கள் நீங்கலாக) பின்வருமாறு பகிர்வு செய்யப்பட்டன:

| | மில்லியன் பவுன்களில் | வைப்புகளின் சதவிகிதம் |
|---|---|---|
| 1. இங்கிலாந்து பாங்கிடம் வைக்கப்பட்டுள்ள நாணயங்கள், பாங்கு நோட்டுகள், இதர இருப்புகள் ... ... | 634 | 8·2 |
| 2. குறுகிய காலத்திலும், உடனே அழைக்கும்போதும் உரிய பணம்... | 726 | 9·4 |
| 3. கழிவு செய்யப்பட்ட கருவூல உண்டியல்கள் ... ... ... ... | 960 | 12·4 |
| 4. கழிவு செய்யப்பட்ட இதர உண்டியல்கள் ... ... ... ... | 258 | 3·3 |
| 5. இங்கிலாந்துத் தலைமை பாங்கிடம் உள்ள விசேஷமான வைப்புகள் ... | 77 | 1·0 |
| 6. முதலீடுகள் ... ... ... ... | 1,309 | 16·9 |
| 7. வாடிக்கைக்காரர்கட்கு அட்வான்சுக் கடன்கள் ... ... ... ... | 3,624 | 46·8 |

இந்த இனங்கள் எல்லாம் இவற்றின் நீர்மைத் தன்மைப்படி வரிசைப்படுத்தப்பட்டுள்ளன; இவற்றால் கிடைக்கும் இலாபக் கூறுகளை அறியவேண்டுமானால், இந்த வரிசையை அப்படியே கீழ் மேலாக்கிக் கொள்ளவேண்டும்.

1951 நவம்பருக்கு முன்னால் நிலைமை முற்றிலும் வேறாயிருந்தது. இப்பொழுது உள்ள 30 முதல் 34 சதவீதத்திற்கு மாறாக, திரவச் சொத்துகள் (ரொக்கம் உட்பட) 40 முதல் 45 சதவீதமாக இருந்தன. அப்பொழுது முதலீடுகள் 25 சதவீதமாக அமைந்திருந்தன. 1945-ல் 16 சதவீதமாக இருந்த அட்வான்சுகள், 1951 அக்டோபரில் 30 சதவீதமாக உயர்ந்துவிட்டன.

புதிய பணவாக்கக் கொள்கையின் விளைவாகவே இம் மாற்றங்களில் பல ஏற்பட்டன. பாங்குகள் வைத்திருந்த 500 மில்லியன் பவுன் கருவூல உண்டியல்களைப் புதிதாக வெளியிடப்பட்ட குறுகிய

தவணை ஈடுகளாக மாற்றிக்கொள்ளுமாறு அரசாங்கம் அவற்றைத் தூண்டியது. பாங்குகள், தமது திரவச் சொத்துகளைத் (இவற்றை ரொக்கமாக எப்பொழுதும் மாற்றிக்கொள்ளலாம்) தாம் விரும்பும் குறைந்தபட்ச அளவில் வைத்திருப்பதன்மூலம் செலாவணியை ஆக்கிக்கொள்ளுவதற்குத் தாம் பெற்றிருந்த ஆற்றலைக் குறைக்க வேண்டும் என்ற அரசாங்கக் கொள்கையே இத் தூண்டுதலுக்குக் காரணம். மேலும், கடந்த ஈராண்டுகளில், 450 மில்லியன் பவுன் களுக்கு மேலாக அதிகரித்துவிட்ட, பாங்குகளின் அட்வான்சுக் கொடுப்புகளைத் தணிக்கவும் இத் தூண்டுதலை அரசாங்கம் மேற் கொண்டது.

இனி ஒவ்வோர் இனத்தைப்பற்றியும் சுருக்கமான குறிப்பு களைத் தருகின்றேன்.

ரொக்கம்

இதில் $\frac{2}{8}$ பங்கு பெட்டிப்பணம் ஆகும் (till-money); வைப்பாளிகள் கேட்டவுடன் ரொக்கமாகக் கொடுப்பதற்காக பாங்கிலேயே வைக்கப்பட்டிருக்கும் நோட்டுகளையும் நாணயங் களையும் இது குறிக்கும். மீதமுள்ள $\frac{1}{8}$ பங்கு, (இது, 1962 நவம்பரில் 240 மில்லியன் பவுன்களுக்குமேல் இருந்தது) இங்கிலாந்து பாங்கிடம், 'பாங்குகளின் வைப்பாக'க் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிகமான பெட்டிப்பணம் தேவைப்பட்டால், உடனே இந்த வைப்பிலிருந்து பெற்றுக்கொள்ளலாம். மேலும், ஒரு பாங்கிலிருந்து இன்னொரு பாங்கிற்குத் தீர்வு முறையில் பணம் செலுத்துதற்கும் இவ் வைப்புகளைப் பயன் கொள்ளலாம்.

வைப்புகளுக்கு நிகராக உள்ள ரொக்கத்தின் விகிதம் 10 சதவீதம் அல்லது அதற்குச் சற்று அதிகமாகக் காட்டப்பெறுவது வழக்கம். ஆனால், இது தவறான கணக்கிற்கே இட்டுச் செல்லும். தான் இயல் பாக வைத்திருந்ததைக்காட்டிலும் 10 சதவீதம் அல்லது அதற்கு அதிகமாகத் தனது ரொக்க இருப்பைக் காட்டுவதற்காக, ஒவ்வொரு பெரிய பாங்கும் தனது கணக்குகளைப் பின்னால் ஒரு நாளில் சரிக் கட்டிக்கொண்டு அதிக ரொக்க இருப்பைக் காட்டும். இவ்விதம் பயனற்றவகையில் பகட்டுக் கணக்கைக் காட்டும் வேண்டாத வழக்கம் 1946ஆம் ஆண்டிறுதியில் கைவிடப்பெற்றது. இப் பொழுது காட்டப்பெறும் 8 சதவீத ரொக்க இருப்பு இயல்பாக எல்லா பாங்குகளிடமும் இருக்கிறது.

அழைப்புப் பணமும் குறுகிய தவணைப் பணமும்

இவற்றில், அழைத்தவுடன் திரும்பிச் செலுத்தப்பெறும் கடன் களும் குறுகிய தவணைக் கடன்களும் அடங்கியுள்ளன; இவை

பெரும்பாலும் கழிவுச் சந்தைக்கே (discount market) கொடுக்கப்படுகின்றன. 'லண்டன் கழிவுச் சந்தையில், இன்று பன்னிரண்டு பெரிய கழிவகங்களும் (discount houses), இதே பணியைப் புரிய இன்னும் சில நிறுவனங்களும் அமைந்துள்ளன.'[1] இப் பன்னிரண்டு கழிவகங்களும் 35 மில்லியன் பவுன்களைக் கூட்டு மூலதனமாகக் கொண்டுள்ளன; கருவூல உண்டியல்கள், ஐந்தாண்டுக்குட்பட்ட பாதுகாப்பான, பலன் தரக்கூடிய ஈடுகள், வணிக உண்டியல்கள் முதலிய சொத்துகளாக, 1958ஆம் ஆண்டிறுதிக் கணக்குப்படி இவை 1,053 மில்லியன் பவுன் மதிப்பிற்குக் கொண்டிருந்தன.

அழைப்புப் பணத்திற்கும் குறுகிய தவணைப் பணத்திற்கும் விதிக்கப்படும் வட்டி சாதாரணமாகக் குறைவாகவே இருக்கும். இப் பணத்தைக்கொண்டு கருவூல உண்டியல்களை வாங்கும் கழிவுச் சந்தைக்கும் ஓரளவு இலாபம் கிடைக்கும்வகையில், அதற்கும் குறைவான வட்டி விகிதமே விதிக்கப்படும்.

## கழிவுகள் (Discounts)

இவை, பாங்குகளால் வாங்கப்பட்ட ஒருவகை நாணயமாற்று உண்டியல்கள்; தொழில் முறையில் அழைப்பதென்றால் பாங்குகளால் 'கழிவு செய்யப்பட்ட' நாணயமாற்று உண்டியல்கள் என இவற்றை அழைக்கவேண்டும். இவை முதிரும் காலத்தில் நீர்மைத் தன்மை அடைகின்றன.

இவற்றுள் பெரும்பாலானவை கருவூல உண்டியல்கள். இவற்றை பாங்குகள் நேரடியாகவே வாங்காமல், கழிவகங்களிடமிருந்து மாற்றிக் கொள்ளுகின்றன. இவற்றின் முதிர்வுக் கெடுவிற்குள் (ஒன்று இரண்டு மாதங்கட்குள்) இவை இவ்வாறு மாற்றிக்கொள்ளப்பெறும். வணிக உண்டியல்களின் அளவு இப்பொழுது சுமார் 250 மில்லியன் பவுன்கள். 4,600 மில்லியன் பவுன் கருவூல உண்டியலோடு ஒப்பிடுகையில் இது மிகமிகச் சாதாரணமாகத் தோன்றும். இக் கருவூல உண்டியல் அளவில், 1,500 மில்லியன் பவுன்கள் போக [நாணய மாற்றுச் சமன்செய் கணக்கு (Exchange Equalization Account) முதலிய அரசுக் குழுக்களுக்குச் செலுத்தப்பெறும் 'வடிகட்டு' உண்டியல்கள் ('tap' bills) முதலியவற்றிற்காக ஒதுக்கப்படுவது] எஞ்சிய அனைத்தும், ஒப்பந்தத்திற்காக வழங்கப்பெறுகின்றன.

இச் சொத்துகள் அனைத்தும் பாங்குகளிடமிருந்து கடன் வாங்கிய பணத்தாலேயே பெறப்பட்டவை.

[1] இத் தொடரும், இதற்குப் பின்னால் வரும் கணக்குகளும், பணத்துறை முறையின் செயல்நெறிபற்றிய குழுவின் அறிக்கையிலிருந்து (1959) எடுக்கப் பெற்றவை. இக் குழுவின் தலைவர் லார்டு ராட்கிளிஃப். எனவே, இக் குழுவின் அறிக்கையை 'ராட்கிளிஃப் அறிக்கை' என்றும் அழைப்பர்.

## இங்கிலாந்து தலைமை பாங்கிடம் உள்ள விசேடமான வைப்புகள்

தீர்வுசெய் பாங்குகளிடம் இருப்பில் உள்ள திரவச் சொத்துகளில் ஒரு பகுதியை அப்படியே பேணுவதற்கும், இதன்வழியாக அவை அட்வான்சுகளை விரிவாக்குவதைக் குறைப்பதற்கும் என இந்த விசேடமான வைப்புகள், 1960 மே, ஜூனில் உருவாக்கப்பட்டன. இந்த வடிவில் அப் பாங்குகள் வைத்திருக்கவேண்டிய வைப்புகளின் அளவு, அவற்றின் மொத்த வைப்புகளில் 1 சதவீதமாக இருக்க வேண்டுமென முதலில் நிர்ணயிக்கப்பட்டது. இது 1960 ஆகஸ்டில் 2 சதவீதமாகவும், 1961 ஜூலையில் 3 சதவீதமாகவும் உயர்த்தப் பட்டது. வாணிபக் கொடுப்பல்நிலைச் சிக்கல்கள் தீர்ந்தவுடன், இது மீண்டும் 1962 ஜூனில் 2 சதவீதமாகவும், அக்டோபரில் 1 சத வீதமாகவும் குறைக்கப்பட்டது. 1963 ஜனவரியில் வெளியிடப்பட்ட பாங்குகளின் அறிக்கையில், இந்த இனம் காணப்படவே இல்லை.

## முதலீடுகள்

இவை பங்குமாற்றுச் சந்தையில் எப்போதும் விலையாகும் பலனும் பயனும் உள்ள ஈடுகள் ஆகும். ஆனால், வட்டி வீதம் உயர்ந் தால் இவற்றின் மதிப்பும் குன்றிவிடுகிறது. இவற்றின் வாங்குதல் விலையில் (purchase price) எத்தனை சதவீதத்தை இவற்றின் நிலை யான வருமானம் காட்டுகிறது என்பது, அவை வாங்கப்பட்ட காலத் தைச் சார்ந்து நிர்ணயிக்கப்பெறுகிறது. 1947-ல் 100 விலையில் 3 சதவீதப் பங்குகளை வாங்கிய ஒரு பாங்கு இப்பொழுதும் 3 சதவீத வருமானத்தையே பெறுகிறது. ஆனால், அதே பங்கை 60 விலையில் 1958-ல் வாங்கிய பாங்கு இப்பொழுது 5 சதவீத வருமானத்தைப் பெறுகிறது.

போர்க்காலத்தில் முதலீடுகள் அதிகமாகும்; ஏனென்றால், போர்க் காலக் கடன்களுக்கு வழங்குமாறு அரசாங்கம் பாங்குகளிடம் எதிர் பார்க்கிறது. 1942-ல் இத்தகைய முதலீடுகள் 32 சதவீத உச்சத்தை (மொத்த வைப்புகளில்) எட்டின. 1928–30-ல் இது 14 சதவீதத் திற்கும் குறைவாயிருந்தது. கடந்த போர் முடிந்ததிலிருந்து, 1951 நவம்பர்வரை இது 25 சதவீத அளவில் நின்றது; அதன்பின்னர், முன்பு விளக்கியதுபோல, இது 33 சதவீதத்திற்கு உயர்ந்துவிட்டது. 1951-க்குப் பின்னர் முதலீடுகளுக்கும் வைப்புகளுக்கும் உரிய வீதாசாரம் பல ஆண்டுகள்வரை உயர்வாகவே இருந்தது. இது 1954 செப்டம்பரில் 37 சதவீத உச்சநிலைக்குச் சென்றது; 1958 செப்டம்பர்வரை 33 சதவீத அளவுக்கு மேலாகவே இருந்தது. அட்வான்சுகளில் ஏற்பட்ட உயர்வின் காரணமாக முதலீடுகளின் விகிதாசாரம் விரைந்து சரிய ஆரம்பித்தது. இச் சரிவின் விளைவாக

முதலீட்டு அளவு, 1959ஆம் ஆண்டு இறுதியில் 23 சதவீதத்திற்கும், 1960ஆம் ஆண்டு இறுதியில் 17 சதவீதத்திற்கும், 1961 ஜூலையில் குறைந்தபட்சமாக 14 சதவீதத்திற்கும் தாழ்ந்தது. இதன் பின்னர் அட்வான்சுகளின்மீது புதிய தடை விதிக்கப்பட்டதால், முதலீட்டு விகிதாசாரம் மீண்டும் உயரத் தொடங்கி, 1962 நவம்பரில் 17 சதவீதம்வரை சென்றது.

அட்வான்சுகள்

அட்வான்சுகள் என்பன மூன்று மாதம் அல்லது அதற்கும் குறைந்த வரையறுத்த காலத்திற்குக் கொடுக்கப்படும் கடன்கள் அல்லது மிகைப் பற்றுகள் (over drafts) ஆகும். ஒரு குறிப்பிட்ட உச்ச அளவுவரை மிகைப் பற்றுகளைப் பெற்றுக்கொள்ளுவதற்கு ஒரு வாடிக்கைக்காரர் அனுமதிக்கப்படுவார்.

மொத்த அட்வான்சுகளில் பெரும்பகுதி தொழில் நிறுவனங்கட்கே கொடுக்கப்படுகின்றன. பொதுவாக, பிரிட்டிசு பாங்குகள் தொழில் வணிக நிலையங்கட்குத் தேவையான நடப்பு முதலை (working capital) மட்டுமே வழங்கும் நோக்குடையன; எனவே, இவை ஆறு மாதத்திற்கு மிகையான கால அளவிற்குக் கடன் கொடுப்பதில்லை. என்றாலும், நடைமுறையில் இந்த அட்வான்சுகள் மீண்டும் மீண்டும் புதுப்பிக்கப்பட்டு ஆண்டுக் கணக்கில் நீடித்து வருகின்றன. அட்வான்சைப் பெற்ற நிறுவனம் அதைத் திருப்பி அளிக்கும் தகுதியோடிருக்கையில், உடனடியாக அட்வான்சைக் கொடுப்பதற்காக அது தனது உற்பத்தியைக் குறைக்கவேண்டும் அல்லது பண்ட இருப்புகளை நட்டத்திற்கு விற்கவேண்டும் என்ற நிலை ஏற்பட்டால், அப்பொழுது ஏற்கெனவே கொடுத்த அட்வான்சை மீண்டும் புதுப்பித்துக்கொள்ள பாங்கு இசையக்கூடும்.

செழிப்புக் காலத்தில் இவை உயரலாம்; மந்தமான காலத்தில் குறைந்துவிடலாம். 1920 கணக்குப்படி மொத்த இருப்புகளில் இத்தகைய அட்வான்சுகள் சராசரியாக 50 சதவீத அளவில் இருந்தன. பெரிய மந்த காலத்தில் அவை குறைந்து 1930-ல் 40 சதவீதமாகிவிட்டன. இரண்டாம் உலகப் போர்க்காலத்தில் மேலும் குறைந்துபோய் 1945-ல் 16 சதவீதத்திற்கு வந்துவிட்டன. போருக்குப் பின்னர் பாங்குகள் தாம் அளிக்கும் அட்வான்சுகளை 'அங்கீகரிக்கப்பட்ட காரியங்களுக்கு' மட்டும் வழங்குவதோடு வரையறுத்துக்கொள்ளுமாறு அதிகாரபூர்வமான 'வேண்டுகோள்கள்' விடுக்கப்பட்டன. என்றாலும், இவற்றின் விகிதாசாரம் வீழ்ச்சி நிலையிலேயே இருந்தது. மொத்த டெபாசிட்டுகளில் இவற்றின் வீதாசாரம், 1947-ல் 20 சதவீதம், 1949-ல் 25 சதவீதம், 1958-ல்

30 சதவீதம். பாங்குகளின் கடன் அளிப்பின்மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டவுடன் இவ் வீதாசாரம் உயரத் துவங்கியது. 1961 ஜுலையில், இவற்றின் வீதாசாரம் 49 சதவீத மாகும். இதன் பின்னர் மீண்டும் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டமை யாலும், 1962-ன் மத்தியில் இக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டாலுங் கூட பாங்குக் கடன்களுக்கான தேவை குறைந்தமையாலும் அட்வான்சுகள் குறையத் துவங்கின. 1962 நவம்பரில் 47 சதவீதத் திற்கு வந்துவிட்டன. அதைத் தொடர்ந்து மீண்டும் தேவை பெருகியதால் 1963 மார்ச்சு, ஏப்ரலில் அட்வான்சுகளின் வீதாசாரம் 50 சதவீதத்திற்குமேல் சென்றுள்ளது.

## 5. இங்கிலாந்து (தலைமை) பாங்கு

1946ஆம் ஆண்டு இங்கிலாந்து பாங்குச் சட்டப்படி இங்கிலாந்து பாங்கு தேசீயமயமாக்கப்பட்டது; இதன் பங்குகள் அனைத்தையும் அரசாங்கமே வாங்கிக்கொண்டது. இந்தச் சட்டம் ஒரு கவர்னர், ஓர் உதவி கவர்னர், 16 டைரக்டர்கள் ஆகிய அனைவரும் சேர்ந்து பாங்கின் டைரக்டர் சபையை அமைப்பார்கள் என்று விதி செய்திருக்கிறது. கருவூலம் பாங்கின் கவர்னரைக் கலந்த பின்னர் பொது நலத்திற்கு அவசியமாகக் கருதுவதைச் செய்யும்வகையில் பாங்கிற்கு ஆணைகளை இடலாம். இந்த பாங்கு ஏனைய பாங்குகளிடமிருந்து தகவல்களைப் பெறலாம்; சிபாரிசுகளைச் செய்யலாம்; கருவூலத்தின் அதிகாரத்துடன் எந்த பாங்கிற்கும் ஆணையும் இடலாம்.

இவை யெல்லாம் எவ்வித அடிப்படை மாறுதலையும் ஏற்படுத்தி விடுவதில்லை. பொது நலத்திற்கு உகந்த முறையில் இந்த பாங்கு எப்பொழுதும் கருவூலத்துடன் நெருங்கிய கூட்டுறவுடன் பணி புரிகிறது; இதை ஏனைய பாங்குகளும் பின்பற்றுகின்றன. வன்மையான கவர்னர் ஒருவர் வந்து கருவூலக் கருத்துகளுக்கு மாறுகச் சுயேச்சையாக நடக்க முற்படுவதைச் சட்டம் அனுமதிக்கவில்லை. கருவூலம், பாங்கின் கருத்துகளுக்கொப்ப வழிநடத்தப்பெறும் என்பதில் சந்தேகமில்லை என்றாலும் சட்டப்படி கருவூலத்தின் செயலியாகவே (agent) பாங்கு இப்பொழுது தொழிற்படுகிறது ; ஆனல், பாங்கு பொதுத் துறையின் (civil service) ஓர் அங்கமாகவோ, கருவூலத்திற்குக் கீழ்ப்பட்டதாகவோ கருதப்படுவதில்லை.

பொதுவாகச் சொல்வதென்றல், அரசாங்கம் தனது பணத் துறைக் கொள்கையில் எந்தெந்த முறைகள் சிறந்தனவோ அவற்றை யெல்லாம் வெற்றியுடன் கையாளுவதற்கு அரசாங்கத்திற்கு உதவுவதே மத்திய பாங்கின் கடமை ஆகும். கடந்த போர்க்காலத்தி லிருந்து பிரிட்டிசு அரசின் பணத்துறைக் கொள்கையில் உள்ள

முதல் நோக்கம் அயல்நாட்டுக் கொடுப்பல்நிலையில் பற்றுக்குறை ஏற்படுவதைத் தடுப்பதாகும்; இத் தடுப்பு அண்மையில் மிகவும் அதிகமாயுள்ளது. இதனால் இறக்குமதிப் பொருள்கள் பெரிதும் கட்டுப்படுத்தப்பெற்றன ; குறிப்பாக டாலர் நாடுகளிலிருந்து வந்த பொருள்கள் அதிகமாகக் கட்டுப்பாட்டுக்கு உள்ளாயின. இக் கட்டுப்பாடுகள் அயல்நாட்டு நாணயமாற்றுக் கட்டுப்பாட்டால் (Foreign Exchange Control) அமுலாக்கப்படுகின்றன; இப்பொழுது இதுவே பாங்கின் பெரும்பகுதி அலுவலாகிவிட்டது. நீண்ட கால தேசியக் கடன்களை (National Debt) நிருவகிப்பதற்கான நடைமுறை வேலைகளைச் செய்வதற்காக [இருப்புப் பதிவுப் புத்தகங்களை எழுதுதல், பகிர்வு உத்திரவாதங்களைச் (dividend warrants) செலுத்துதல் என்பன] ஓரளவு அலுவலர்களை இது அமர்த்திக்கொண்டிருக்கிறது. என்றாலும், இது ஒரு மத்திய பாங்கிற்குரிய மூன்று பாரம் பரியப் பணிகளையும் செய்தே வருகிறது; பணத்தின் அளிப்பைக் கட்டுப்படுத்துவதற்கு இப் பணிகள் பாங்கிற்கு உதவுகின்றன; இவை வருமாறு :

1. நோட்டுகளை வெளியிடும் முழு அதிகாரம்.
2. அரசாங்கத்தின் பாங்கு.
3. பாங்குகளுக்கெல்லாம் பாங்கு.

நோட்டு வெளியிடுதல்

எந்த ஒரு மத்திய பாங்கும் பணத்துறைக் கொள்கையில் தான் முழு அதிகாரமும் பெறவேண்டுமானால் நோட்டு வெளியீட்டை அது கட்டுப்படுத்தியே ஆகவேண்டும். ஏனைய பாங்குகளும் நோட்டு அச்சடிக்கும் உரிமை பெற்று ரொக்க இருப்பைத் தம் மனம்போல மாற்றிக்கொள்ள இடம் இருந்தால் மத்திய பாங்கால் எதுவும் செய்ய முடியாது போய்விடும்.

இங்கிலாந்து பாங்கின் நோட்டுகள் ஒவ்வொன்றும் பவுனுக்குப் பவுன் தங்க இருப்பால் ஆதரிக்கப்பெறுதல் வேண்டுமென்றும், ஈடுகளால் உறுதி செய்யப்படும் சில நம்பிக்கை வெளியீடுகளைத் (fiduciary issues) தவிர எஞ்சிய எல்லா நோட்டுகளுக்கும் இது பொருந்தும் என்றும், 1844-ல் ஆக்கப்பட்ட பாங்குச் சாசனச் சட்டம் (The Bank Charter Act) விதித்திருக்கிறது.

கிரேட் பிரிட்டன் பொன் நாணயத் திட்ட அமைப்பில் (gold standard) இருந்ததால் இதன் நோட்டுகளைக் கொடுத்துக் கேட்ட பொழுதெல்லாம் பாங்கு பொன்னை ஈடாகத் தரவேண்டியிருந்தது; இதனால் பொன்னைத் தடையின்றி ஏற்றுமதி செய்ய முடிந்தது.

1931 செப்டம்பரில் கிரேட் பிரிட்டன் பொன் நாணயத் திட்ட அமைப் பிலிருந்து விலகிக்கொண்டதால், இங்கிலாந்து பாங்கின் நோட்டுகள் அனைத்தும் தங்கமாக மாற்றுவதற்கு இயலாதனவாகிவிட்டன. நம்பிக்கை வெளியீடுகளின் அளவு உயர்த்தப்பட்டாலுங்கூட பாங்கு வெளியிடும் நோட்டுகளைத் தங்க இருப்பால் உறுதி செய்தே ஆக வேண்டும். இந்த நம்பிக்கை வெளியீடுகள் 1914-ல் இருந்த 18 மில்லியன் பவுன்களிலிருந்து 1939-ல் 300 மில்லியன் பவுன் களாக உயர்ந்துவிட்டன. 1939-ல் போர் மூண்டதும் பாங்கின் தங்க இருப்புகளையெல்லாம் அரசாங்கமே எடுத்துக்கொண்டது. அதுமுதல் பாங்கினால் வெளியிடப்படும் நோட்டுகளையெல்லாம் ஈடு களே முழுவதும் ஆதரித்து உறுதி செய்கின்றன; இத்துடன் ஓரளவு நாணயங்களையும் கூட்டிக்கொள்ளவேண்டும். 'நம்பிக்கை' (fiduciary) என்ற சொல் இன்றும் மேற்கொள்ளப்படுகிறது; நோட்டு வெளியீடுகளெல்லாம் (1962 நவம்பரில், 2,375 மில்லியன் பவுன்கள்) நம்பிக்கை வெளியீடுகளாகவே கருதப்பெறுகின்றன.

நாட்டில் தங்க இருப்பு (1962 இறுதியில் 1,000 மில்லியன் பவுன் என்று கணக்கிடப்பட்டுள்ளது) இருக்கிறது; என்றாலும் இது பாங்கின் கணக்குகளில் காட்டப்பெறுவதில்லை. இங்கிலாந்து பாங்கின் நோட்டுகள் எல்லாம் தங்கமாக மாற்றுவதற்கு இயலாத காகிதத் துண்டுகளாக இருந்தாலும், தங்கத்தால் ஆதரித்து உறுதி செய்யப்பட்டதைப்போல அவை எல்லோராலும் ஏற்கப்பெறு கின்றன; எல்லாப் பணிகட்கும் உதவுகின்றன.

நோட்டு வெளியீட்டின் மொத்த அளவு அரசாங்கத்தால் வரை யறுக்கப்பெற்றிருக்கிறது; எனவே, அரசாங்கம் விரும்பினால் இதை உடனடியாகக் கூட்டமுடியும்; குறைத்துக்கொள்ளவும் இயலும்.

அரசாங்கக் கணக்குகள்

அரசாங்கம் தனது கணக்குகளை இந்த பாங்கிடமே வைத் துள்ளது. வரிகள், இதர வருவாய்கள் முதலியவற்றால் பெறுவன வற்றை பாங்கில் போட்டுவைக்கிறது; தனது செலவுகட்குரிய தொகையை எல்லாம் பாங்கிலிருந்தே அவ்வப்போது பெற்றுக் கொள்ளுகிறது. அரசாங்கத்தின் கணக்குகள் எல்லாம் பாங்கின் வாராந்தர அறிக்கையில் (Return) பொதுத்துறை வைப்புகளாகப் பிரித்துக் காட்டப்பெறுகின்றன. வரி செலுத்துதல் மிகுந்தால் இத் தொகைகள் உயர்கின்றன; பொதுமக்களிடம் வாங்கிய கடன் களுக்கு அரசாங்கம் வட்டியாகச் செலுத்துதல் மிகுந்தால் இத் தொகைகள் குறைகின்றன.

பொதுத்துறை வைப்புகளில் (Public Deposits) உயர்வு ஏற்படு கிறதென்றால் பொதுமக்களிடம் இருந்து அரசாங்கம் பணம் வாங்கு கிறது என்பதே இதற்குப் பொருள். இவர்கள் தாம் அளிக்கும் பணத்தைத் தம் பாங்குகளுக்கான செக்குகளின்மூலம் வழங்கு வார்கள்; இதனால் மத்திய பாங்கிடம் உள்ள பாங்குகளின் வைப்பில் குறைவு ஏற்படும். பொதுத்துறை வைப்புகளில் குறைவு ஏற்பட் டால் இதற்கு நேர்மாறான விளைவுகள் ஏற்படும். இவ்விதம் பொதுத் துறை வைப்புகளில் நேரும் ஏற்றத்தாழ்வுகள் பணச் சந்தையில் உலைவு ஏற்படுத்துவதை அவற்றிற்கு ஈடு செய்வதன்மூலம் கருவூலம் வழக்கமாகத் தடுத்துவிடுகிறது. பாங்குகளின் வைப்பு களை ஒரு நிலையான அளவில் வைத்திருப்பதற்காகச் சந்தையில் போட்டுள்ள தனது கருவூல உண்டியல்களின் அளவை முற்குறித்த படி ஈடு செய்வதற்காக மாற்றி மாற்றி அமைத்துக்கொள்ளும்.

அரசாங்கம் அவ்வப்பொழுது குறுகியகாலக் கடன்களாக பாங்கிடமிருந்து பணம் பெற்றுக்கொள்ளுகிறது. இவை வழி வகைக் கடன்கள் (Ways and Means Advances) என்று அழைக்கப் பெறுகின்றன. கருவூல உண்டியல்களை அளிப்பதில் அரசாங்கத்தின் செயலியாக பாங்கு பணிபுரிகிறது.

### பாங்குகளின் வைப்புகள்

தமது பெட்டிப் பணத்திற்கு வேண்டிய ரொக்கம் தவிர ஏனைய இருப்புகளையெல்லாம் இதர பாங்குகள் இந்த பாங்கிடமே வைத்திருக் கின்றன. தீர்வுச் செயலில் *A* என்ற பாங்கு *B* என்ற பாங்குக் குத் தான் அளிக்கவேண்டிய நிகரச் செலுத்துதலை, மத்திய பாங்கில் உள்ள தன் கணக்கில் செக்கு ஒன்றை வழங்குவதன்மூலம் தீர்க் கின்றது. இது மத்திய பாங்கில் *B* என்ற பாங்கிற்கு உள்ள கணக்கு இருப்பைக் கூட்டுகிறது; *A* என்ற பாங்கிற்கு உள்ள இருப்பில் குறைவைக் காட்டுகிறது.

பாங்குச் செலாவணியின் மொத்த அளவெல்லாம் இந்த பாங்கு களின் வைப்புகளையே அடித்தளமாகக் கொண்டிருப்பதால் இந்த பாங்கு வைப்புகளை உயர்த்துவதன்மூலமும் குறைப்பதன்மூலமும், பாங்குச் செலாவணியில் பெருக்கத்தையும் சுருக்கத்தையும் ஏற்படுத்த மத்திய பாங்கால் முடியும்.

### இங்கிலாந்து பாங்கின் நடைமுறை அறிக்கை (Return)

பாங்கு, வாரந்தோறும் நடைமுறை அறிக்கையொன்றைப் பிரசுரிக்கிறது. 1962 நவம்பர் 21-ல் பிரசுரிக்கப்பட்ட மிகச் சமீபத்திய

விபரத்தைக் கீழே தருகிறேன். இதிலுள்ள தொகைகள் பவுன் கணக்கிற்கு முழுதாக்கப்பட்டுள்ளன (rounded).

வெளியிடும் துறை

| | மில்லியன் பவுனில் | | மில்லியன் பவுனில் |
|---|---|---|---|
| வெளியிடப்பட்ட நோட்டுகள் : | | | |
| புழக்கத்தில் உள்ளவை | 2,311·7 | அரசாங்கக் கடன் | 11·0 |
| இதர பாங்குத் துறைகளில். | 63·7 | இதர அரசாங்க ஈடுகளில். | 2,362·9 |
| | | ஏனைய ஈடுகளில் | 0·8 |
| | | இதர நாணயங்கள் (தங்க நாணயம் தவிர). | 0·3 |
| | | மொத்த நம்பிக்கை வெளியீடு. | 2,375·0 |
| | | தங்க நாணயமும் பொற் கட்டிகளும். | 0·4 |
| | 2,375·4 | | 2,375·4 |

பாங்குத் தொழில் துறை

| | மில்லியன் பவுனில் | | மில்லியன் பவுனில் |
|---|---|---|---|
| மூலதனம் | 14·6 | அரசாங்க ஈடுகள் | 314·2 |
| எஞ்சியன | 3·4 | இதர ஈடுகள் : | |
| பொதுத்துறை வைப்புகள் | 13·7 | கழிவுகளும் அட்வான்சுகளும். | 40·3 |
| விசேடமான வைப்புகள் | 80·8 | பிணை ஈடுகள் ... | 20·1 |
| இதர வைப்புகள் : | | | |
| பாங்குகளின் வைப்புகள் | 252·8 | நோட்டுகள் ... | 63·7 |
| இதர கணக்குகளில் | 73·9 | நாணயங்கள் ... | 0·9 |
| | 439·2 | | 439.2 |

இந்த அறிக்கையானது, ராட்கிளிஃப் அறிக்கைகூறுவதைப்போல 'இரண்டு இருப்புநிலைக் குறிப்புத் தாள்களின் இணைப்பு வடிவைக் கொண்டு' அமைந்துள்ளது. வெளியிடும் துறைக்கு உரிய தனித் தொகைகள் என்பன, அதிகப்படியாக வெளியிடப்படும் நோட்டுகளுக்கு இணையாக அதிகப்படியான தங்க உறுதி செய்யப்படுதல் வேண்டும் என்ற நாளிலிருந்து மீந்திருக்கும் தொகைகள் ஆகும். இப்பொழுதெல்லாம் தங்க இருப்புகளை, மாற்றுச் சமன்செய்

கணக்கே (Exchange Equalization Account) பேணி வருகிறது. (இக் கணக்கை நிருவகிப்பது பாங்குதான் என்ருலும், இதைப்பற்றிய விபரம் எதுவும் அதன் அறிக்கையில் குறிப்பிடப்பெறுவதில்லை.) அதிகப்படியான நோட்டுகள் தேவைக்கேற்றபடி தடையில்லாமல் வெளியிடப்பெறுகின்றன.

நோட்டு வெளியீடு 2,375 மில்லியன் பவுன்களாக இருந்தது. இதில் 63·7 மில்லியன் பவுன்கள், வைப்புகளுக்கு எதிரான ரொக்க இருப்பாக, பெட்டிப் பணமாக பாங்கிடம் தங்கியிருந்தன. எஞ்சிய தொகையனைத்தும் புழக்கத்தில், பாங்குகளாலும் மக்களாலும் மேற் கொள்ளப்பெற்றன. நோட்டு வெளியீடுகள் முழுவதும் பிரிட்டிசு அரசாங்க ஈடுகளால் ஆதரித்து உறுதிசெய்யப்பெற்றன ; இதில் 11 மில்லியன் பவுன்களுக்கான அரசாங்கக் கடனும் அடங்கும் என்ருலும், வரலாற்றுக் காரணங்களுக்காக இது தனியாகவே காட்டப்பெறுகிறது.

மூலதனம், ‘எஞ்சியன’, என்பன பகிர்வு செய்யப்படாத இலாபங்களால் திரட்டப்பெற்ற இருப்பு நிதிகள்; அரசாங்கத்திற்கே இப்பொழுது சொந்தமாக உள்ளன. இவற்றில் மூலதனத்தில் மாறுதல் ஏற்படுவதில்லை ; ‘எஞ்சியன’ ஒரு சிறிதே மாறுதலுறு கின்றன.

பொதுத்துறை வைப்புகளில் கருவூல நிதிகள் (Exchequer), சேமிப்பு பாங்குகள், பொதுத்துறைக் கடன்களின் ஆணையர்கள், இலாப ஈவுக் கணக்குகள் என்பன அடங்கும். பாங்குகளின் வைப்பு கள் அனைத்தும், ரொக்கத்திற்குச் சமமாகவே பாங்குகளால் கருதப் படுகின்றன என்பதை நினைவிற்கொள்ள வேண்டும். இதர வைப்பு கள் என்பதில் பாங்கிற்கு உரிய தனிப்பட்ட வாடிக்கைக்காரர்களின் வைப்புகள், அயல்நாட்டு, குடியேற்ற நாட்டு பாங்குகளின் வைப்புகள், இதர அரசாங்கங்களின் வைப்புகள் என்பன அடங்கும்.

இத்தகைய வைப்புகளுக்கு எதிராக வைக்கப்பட்டுள்ள சொத்து களில் பெரும்பகுதி அரசாங்க ஈடுகளேயாகும். இந்த இனத்தில் பிரிட்டிசு அரசாங்கத்தின் நேரடிப் பொறுப்புத் தொகைகள்மட்டுமே அடங்கவேண்டும் என்ருலும், இதில் பாங்கு தனது சொந்தக் கணக் கில் வாங்கியுள்ள கருவூல உண்டியல்கள், வழிவகைக் கடன்கள், நீண்டகால ஈடுகள் என்பனவும் அடங்கும். எனவே, பாங்கு விரிவான வெளிச் சந்தைக் கொள்கையை மேற்கொண்டு, கருவூல உண்டியல்களையும் இதர அரசாங்க ஈடுகளையும் வாங்கும்பொழுது இந்த இனமும் கூடுதல் அடையும். பாங்கு தனது செலாவணியின் அளவைக் குறைத்துக்கொள்ளுவதற்காக எல்லா ஈடுகளையும் விற்க முற்படுகையில் இந்த இனமும் குறைவடையும்.

'இதர ஈடுகள்' என்ற இனம் இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது. கழிவுகள், அட்வான்சுகள் என்பவனவற்றில், மறு கழிவுக்காக பாங்கிற்குக் கொணரப்படும் கருவூல, இதர உண்டியல்களும், தீர்வகங்கட்கும் இதர தனிப்பட்ட வாடிக்கைக்காரர்கட்கும் பாங்கால் அளிக்கப்பட்ட அட்வான்சுகளும் அடங்கும். சந்தையே 'பாங்கிடம் இருக்கும்பொழுது' (in the bank) உயர்வது இந்த இனமே ஆகும். அதாவது, இதர பாங்குகள் தமது ரொக்க இருப்பை அதிகரித்துக்கொள்ளுவதற்காகத் தாம் கொடுத்திருந்த குறுகிய காலக் கடன்களைத் திரும்பச் செலுத்துமாறு கேட்கையில், இதர பாங்குகளும், கழிவகங்களும் இந்த பாங்கு வைப்பிலிருந்தே பணம் பெறவேண்டிய கட்டாய நிலை ஏற்படும். ஈடுகள் என்ற இன்னோர் இனத்தில், முதல்தரமானவை எனக் கருதப்படும் அயல்நாட்டு, குடியேற்றநாட்டு ஈடுகளும், பாங்கின் சொந்த முனைப்பால் வாங்கப் பட்ட வணிக உண்டியல்களும் அடங்கும்.

பாங்கில் உள்ள ரொக்க இருப்பிற்கும் வைப்புகளுக்கும் இடையே உள்ள அளவு 'விகிதாசாரம்' (proportion) என்று அழைக்கப்படு கிறது. மேற்குறித்த அறிக்கையில், இது $6\frac{1}{2}$ சதவீத அளவில் காட்டப்பெற்றிருக்கிறது. ஒரு காலத்தில் இது முக்கியமானதோர் அமிசமாக இருந்தது; இந்த விகிதாசாரம் மிகவும் தாழ்ந்தபொழுது, அரசாங்கம் இதை உயர்த்துவதற்காகச் செலாவணியையே கட்டுப் படுத்தியது. ஆனால், இப்பொழுதைய மாற்றமுடியாத நோட்டு வெளியீடுகளில் (inconvertible note issues) எளிதில் எத்தகைய மாறுதல்களையும் செய்யமுடியும். ஆகையால், இந்த வீதாசாரத்திற்கு அவ்வளவு சிறப்பிருப்பதில்லை.

## 6. பாங்கு வீதம்

ஒரு நாட்டின் மத்திய பாங்கு, 'கடைசி நிலையில் கடன் கொடுக்கும்' (the lender of last resort) நிலையமாகும். வணிக பாங்குகளும், இதர நிதி நிலையங்களும் குறைந்த காலக் கடன்களை வாங்க விரும்பும்பொழுது, அவற்றைத் தம்மோடொத்த இதர பாங்கு களிடம் வாங்க முற்படும். அப்பொழுது பணச்சந்தை முழுவதிலுமே ரொக்க இருப்புக் குறைவாக இருந்தால்,வேறுவழியின்றிக் கடைசியாக அவை மத்திய பாங்கிடமே கடன்பெற வேண்டியதிருக்கும். சில நாடுகளில், வணிக பாங்குகளின் ரொக்க இருப்புக் குறைந்தவுடன், அவை நேரடியாகவே மத்திய பாங்கிடம் சென்று, தாம் வைத்திருக்கும் சில உண்டியல்கள், அல்லது IOU முதலியவற்றை அதனிடம் விற்றுத் தமக்கு வேண்டிய கடனைப் பெற்றுக்கொள்ளுகின்றன. ஆனால், கிரேட் பிரிட்டனில் உள்ள மரபுப்படி, வணிக பாங்குகள் நேரடியாக மத்திய பாங்காகிய இங்கிலாந்து பாங்கிடம் கடன்பெறச்

செல்வதில்லை. அதற்குப் பதிலாக அவை தாம் அளித்துள்ள அழைப்புக் கடன்கள், குறுகிய காலக் கடன்களை உடனே திருப்பிச் செலுத்துமாறு ஏற்பாடு செய்கின்றன. இதனால், கழிவகங்கள் முதலிய இதர நிதி நிலையங்கள், வணிக பாங்கிடம் தாம் பெற்றுள்ள மேற்குறித்த கடன்களைத் திருப்பிச் செலுத்துதற்காக மத்திய பாங்கிடம் சென்று கடன் பெறுமாறு வற்புறுத்தப்படுகின்றன.

பாங்குவீதம் என்பது, கருவூல உண்டியல்கள், இதர முதல்தர உண்டியல்களை எடுத்துக்கொள்வதன்மூலம் (முறைப்படி சொல்வதென்றால் மறு கழிவு செய்வதன்மூலம்) இங்கிலாந்து பாங்கு குறுகிய காலக் கடன் அளிப்பதற்குரிய அதிகாரபூர்வமான குறைந்தபட்ச வீதமாகும். இப்போது (1962 நவம்பரில்) இது $4\frac{1}{2}$ சதவீதமாயுள்ளது. இதற்கு முன்னர் 5 சதவீதமாயிருந்ததை, திரும்பவும் பணவீக்கம் ஏற்படுவதைச் சமாளிப்பதற்காக, 1962 ஏப்ரலில் $4\frac{1}{2}$ சதவீதமாகக் குறைத்திருக்கிறார்கள்.

இந்த பாங்குவீதமானது, நடப்பில் ஆற்றல் உடையதாயிருப்பின் (1951 முதல் அப்படித்தான் இருக்கிறது) லண்டன் பணச்சந்தையில் உள்ள இதர குறுகியகாலக் கடன்கள் அனைத்தும், இதனுடன் தொடர்பு கொண்டனபோலச் செயல்படும். பாங்குவீதம் உயர்ந்தால் தாமும் உயர்ந்து, குறைந்தால் தாமும் குறையும்.

வணிக பாங்குகள் தம்மிடம் உள்ள வைப்புகட்கு, பாங்கு வீதத்திற்கு உயர்ந்தபட்சம் 2 சதவீதம் குறைவாகச் (கழிவகங்கள் சற்று அதிகமாகச்) செலுத்துகின்றன; தம்முடைய அட்வான்சு கடன்களுக்கு பாங்குவீதத்தைவிடக் குறைந்தபட்சம் ஒரு சதவீதம் அதிகமாக (மொத்தக் குறைந்த அளவாக இப்பொழுது இருப்பது 5 சதவீதம்) விதிக்கின்றன. 1962 நவம்பரில் அழைப்புக் கடனுக்கும் இதர குறுகிய காலக் கடனுக்கும் $2\frac{7}{8}$ சதவீதத்திற்கு அதிகமாகவே விதிக்கப்படுகிறது. மூன்று மாத உண்டியல்களுக்கான கழிவின் சராசரி வீதம் வருமாறு: கருவூல உண்டியல்கள் ஏறக்குறைய $3\frac{3}{4}$ சதவீதம்; பாங்கு உண்டியல்கள் $3\frac{7}{8}$ சதவீதம்; சிறந்த வர்த்தக உண்டியல்கள் $5\frac{1}{2}$ முதல் 6 சதவீதம்வரை. பாங்கு வீதமே 7 சதவீதமாக இருந்தபொழுது இவையெல்லாம் இன்னும் அதிகமாக இருந்தன. உதாரணமாக, பாங்குவீதமானது 7 சதவீதத்திற்கு முதன்முதலில் உயர்த்தப்பெற்றவுடன், கருவூல உண்டியல்களுக்கான கழிவுகள் $6\frac{3}{4}$ சதவீதம்வரை உயர்ந்துவிட்டன; ஜூலை 1961).

இத்தகைய எல்லா வீதங்களும், நான் இதுவரை குறிப்பிடாத இதர வீதங்களும், பாங்குவீதம் உயர்த்தப்பட்டால் (நடப்பாற்ற

லுடன் இருந்தால்) தாமும் உயரும்; அது தாழ்த்தப்பட்டால் தாமும் வீழும். பாங்கு வீதம் நடப்பாற்றலுடன் இருக்கையில், அது செலாவணியின் விலையையும் (price of credit) ஆள்கிறது.

அரசாங்கம், வட்டிவீதங்களை உயர்த்துவதற்கும் குறைப்பதற்கும் உரிய காரணங்கள், அதனுடைய பணத்துறைக் கொள்கைகளைச் சார்ந்தே அமைவன. இது, பின்னர் விரிவாக ஆராயவேண்டிய பெரிய விஷயம் என்றாலும், இங்கு அதைப்பற்றிச் சற்றுக் குறிப்பிட்டே யாகவேண்டும்.

அரசாங்கப் பொருளாதாரக் கொள்கைகளின் நோக்கங்களில் பல, ஒன்றோடொன்று பொருந்தாதனவாயிருப்பதுண்டு. இந் நோக்கங்கள் ஒன்றுடன் ஒன்று முரணி நிற்கும். இவற்றுள் முழு வேலையுடைமை தருதல், உள்நாட்டு விலை அளவுகளை நிலையாகப் பேணுதல், நாணயமாற்று விகிதங்களில் நிலைபேற்றை உண்டாக்குதல் என்பன குறிப்பிடத்தக்கவை. இதர உலகப் பகுதிகளில் எல்லாம் விலைகளின் அளவுகள் ஓரளவு சீரான நிலையிலேயே இருந்தால் மட்டுமே, இறுதியாகச் சொன்ன இரண்டும் இணங்கியிருக்க முடியும். 1920-22-லும், 1929-32-லும் ஏற்பட்டதைப்போல, உலக விலை நிலவரங்கள் துரிதமாக வீழ்ந்தாலோ, 1950-51-ஐப்போலத் துரிதமாக உயர்ந்தாலோ அரசாங்கம் என்ன செய்யவேண்டும்? இதர உலகப் பகுதிகளில் நிலவும் விலை அளவுகளுக்கு ஏற்ப உள்நாட்டு விலை அளவுகளும் அமைய இடம் தரவேண்டும்; அல்லது தனது செலாவணியின் நாணயமாற்று விகிதத்தை மாற்றிக்கொள்ளவேண்டும். முழு வேலையுடைமை என்பது உள்நாட்டு விலை அளவுகளின் நிலைபேற்றுக்கு ஏற்ப அமையக்கூடியது. உள்நாட்டு விலைகளைப்போல இதர உலகப் பகுதியின் விலை நிலவரங்களும் நிலைபேறுடையதாக இருக்கவேண்டும். நிலவரத்திலுள்ள நாணயமாற்று வீதங்களில் மாறுதல் ஏற்படாமல் இருப்பதுடன், பணக் கூலிகளும் இதர வருமானங்களும் வெளிப்பாட்டைவிட அதிகமாக உயராமலும் இருக்கும்வரைதான் இந் நிலை ஏற்படும். வெளிப்பாட்டைவிடப் பண வருமானம் மட்டும் வலுவந்தமாக உயர்ந்துகொண்டே சென்றால், அது உள்நாட்டு விலை அளவுகளை உயரச் செய்வதுடன், அயல் நாட்டு வாணிபச் செலுத்துநிலையில் பாதகமான சூழ்நிலையை உண்டாக்கி, நாளடைவில் செலாவணியையும் மதிப்பிறக்கிக் கொள்ளுமாறு கட்டாயப்படுத்திவிடும். விலை அளவையும் நாணயமாற்று வீதத்தையும் நிலைபேறுடையனவாக்குவதற்கு அரசாங்கம் முதன்மை இடம் தர நினைத்தால், நாட்டில் வேலையின்மைநிலை பெருகுவதைக் கூடப் பொருட்படுத்தாது, பணவருவாயில் ஏற்படும் உயர்வை மட்டுப்படுத்துவதற்கான நடவடிக்கைகளை எடுக்க முன்வர வேண்டும்.

அயல்நாட்டுச் செலுத்துநிலையைவிட வருமான உயர்வு மிகையால் ஏற்பட்ட விளைவுகள், தமது குறுகிய காலக் கடன் இருப்புகளைத் திரும்பப் பெற்றுக்கொள்ளுமாறு அயல்நாட்டு முதலீட்டாளர்களை அச்சுறுத்தினால், அப்பொழுது அரசாங்கம் பாங்கு வீதத்தை உயர்த்தலாம். இவ்விதம் பாங்கு வீதத்தில் ஏற்படும் உயர்வு, மூன்று பிரதான துறைகளில் தனது விளைவுகளைப் புலப்படுத்தும். இவற்றுள் முதலாவதும் மிக முக்கியமானதும் மனோதத்துவ விளைவாகும். பாங்கு வீத உயர்வானது (அதுவும் இதற்குமுன் கண்டிராத உச்ச அளவுக்குச் சென்றுவிட்டால்) வருமானங்களில் ஏற்படும் மிகையான துரித உயர்வை எப்படியேனும் கட்டுப்படுத்தியே தீருவதென்ற அரசாங்க உறுதியைப் பறைசாற்றுகிறது. குறுகிய காலக் கடன் இருப்புகளையுடைய அயல்நாட்டவருக்கு மறு உத்தரவாதம் தருவதுடன், இலாபம் சேர்ப்பதென்றால் அது மிகவும் கடினமானது என்று உணரக்கூடிய காலமொன்று வரப்போகிறதென்று உள்நாட்டு வணிகர்களையும் எச்சரிக்கிறது. இவ்விதமாக நாணயமாற்று வீதங்கள் சரிவதைத் தடுப்பதுடன், உள்நாட்டுச் செலவினங்கள் உயர்வதையும் மட்டுப்படுத்த முற்படுகிறது.

இரண்டாவது விளைவு, குறுகிய கால வட்டி வீதங்களை அவற்றுக்கு இணையாக வெளிநாடுகளில் நிலவும் வீதங்களைவிட உயர்த்துவதாகும். இதனால் வெளிநாட்டவர்கள் இந்த நாட்டிற்குக் கடன் கொடுக்கத் தாராளமாக முன்வருவார்கள். இந்த நாட்டிடமிருந்து கடன் பெற விரும்பமாட்டார்கள். 1914-க்கு முந்திய பொன் நாணயத் திட்டத்தின்கீழ் இந்த விளைவு மிக முக்கியமாகக் கருதப்பட்டது. என்றாலுங்கூட, இந்த விளைவு நிலையான இன்னும் சில நிபந்தனைகளையும் சார்ந்தே இருக்கவேண்டியுள்ளது. உள்நாட்டில் முதலீடு செய்வதைவிட வெளிநாட்டில் முதலீடு செய்வதில் ஏற்படக்கூடிய இழப்பு ஆபத்துகளை ஈடுசெய்யக்கூடிய அளவில், வட்டி வீதங்களில் தராதரமாக சிறு வேறுபாடாவது இருத்தல் வேண்டும் என்பது அவற்றில் ஒரு நிபந்தனையாகும். 1931-ல் இரண்டாம் முறையாகப் பொன் நாணயத் திட்டத்தினின்று பிரிட்டன் விலகிச் சென்றதன் பின்னர், கால் நூற்றாண்டுவரைக்கும் மேற்கூறிய நிபந்தனைகள் நிறைவேற்றப்படவில்லை. வட்டி வீதங்களில் உள்ள சாதாரண வேறுபாடுகளைவிட இன்னும் பல ஆற்றல் வாய்ந்த காரணங்கள் உள்ளன. அரசியல் கொடுமைக்கு ஆளாக நேருமோ என்ற அச்சம், போர் மூளுமோ என்ற பயம், நாணயமாற்று வீதங்களில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகள், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளில் ஏற்படும் எதிர்பாராத விளைவுகள் என்பனவே அக் காரணங்கள். சமீப காலங்களில் நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள் கொஞ்சம் கொஞ்சமாகத் தளர்த்தப்பட்டமையாலும், நாணயமாற்று வீதங்களின்

சீரான நிலைபேற்றில் நம்பிக்கை பெருகிவருகின்ற காரணத்தாலும், குறுகிய கால வட்டி வீதங்களில் உள்ள சாதாரண வேறுபாடுகள் கூட, மீண்டும் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. ஆகவே, கடந்த சில ஆண்டுகளாக அதாவது 1960, 1962ஆம் ஆண்டுகளில் பிரிட்டன், வெளிநாட்டு வட்டி வீதங்களைவிட அதிகமான வட்டி வீதத்தை வழங்குவதன்மூலமாக அயல்நாட்டுக் குறுகிய காலக் கடன்களில் கணிசமான தொகையைப் பெற்றுவந்திருக்கிறது.

பாங்குவீத உயர்வால் ஏற்படும் மூன்ருவது விளைவு, உள்நாட்டில் குறுகிய காலக் கடன் வாங்குவோர்க்கு, பாங்கு மிகைப்பற்றுகளை (over draft) வாங்குவதுட்பட, அதிக வட்டி வீதத்தை விதித்தலாகும். இதன் பயனுக அவர்கள் கடன் வாங்குவதும் செலவழிப்பதும் மட்டுப்படுத்தப்படுகிறது. இந்த விளைவால் ஏற்படும் முக்கியத்துவம் 1914-க்கு முன்னர் வெளிப்படையாகப் புலப்பட்டாலும், இப்பொழுதெல்லாம் அவ்வளவு பெரிதாகத் தோன்றுவதில்லை. இங்ஙனம் பாங்கு வீதம் உயர்வதால், குறுகிய காலக் கடன் வாங்குதல்களின் அளவு எந்த அளவுக்குப் பாதிக்கப்படுகிறதென அறிய வேண்டுமானுல், மனேதத்துவரீதியாக ஏற்படும் விளைவுகளைக் கண்டாலே போதும். பாங்கு வீதம் உயர்கையில், பணம் கொடுப்பவர்கள் தாம் அளிக்கும் கடன்களுக்குக் கிட்டக்கூடிய உயர்ந்த வட்டி வரவுகளைவிடக் கடனைப் பெறும் நாட்டின் ஸ்திரமான இருப்பைப்பற்றியே பெரிதும் ஆராய முற்படுவார்கள். ஆனுல், 1914-க்கு முன்பெல்லாம் பாங்கு வீதங்களில் கடுமையான உயர்வு ஏற்பட்டபோதிலுங்கூட நீண்ட கால வட்டி வீதங்கள் ஓரளவே உயர்ந்தன; சமீப காலங்களில் பாங்கு'வீதங்களின் உயர்வால், நீண்ட கால வட்டி வீதங்களில் ஏற்படும் விளைவுகள் மிகவும் வெளிப்படையாகப் புலப்படத் துவங்கியுள்ளன. நீண்ட கால வீதங்களில் குறிப்பிடத்தக்க உயர்வு ஏற்படுவதால் உண்டாகும் செலவுகளின் விளைவுகளும் மிக முக்கியமானவையாகிவிட்டன.

பாங்கு வீதத்தில் ஏற்படும் உயர்வானது உள்நாட்டுத் தேவைகளைக் கட்டுப்படுத்தும்வரை, இதன் செயல் நோக்கங்களில் சில மாறுதல்களும் ஏற்படக்கூடும். 1932 கோடைக்காலத்திற்குப் பின்னரும், போர்க்காலத்திற்குப் பின்னர் கன்சர்வேடிவ் கட்சியினர் 1951 அக்டோபரில் பதவிக்கு வரும்வரைக்கும், தலை நோக்கமாக இருந்தது, முழு வேலையுடைமை அளிப்பது என்று சொல்வது பொருத்தமானது என்றே கருதுகின்றேன்; ஸ்டெர்லிங்கின் நாணய மாற்று மதிப்பில் குறைவு ஏற்படக்கூடிய ஆபத்து இருந்த நிலையிலுங்கூட, இந்த நோக்கம் வீறுடன் செயல்படுத்தப்பெற்றது. ஆனுல், 1930ஆம் ஆண்டுகளில் இந்த நோக்கத்தை முற்றிலும்

செயல்படுத்த முடியவில்லை. அப்பொழுது சராசரியாக $1\frac{1}{2}$ மில்லியன் பேர் வேலையின்றி இருந்தனர். ஆனால், வேறு ஒருவகையில் விவாதிக்கலாம்; அதாவது, வீடு கட்டுதல்; முதலியவற்றில் உய்க்கப்பட்ட 'மலிவுப் பணத்தாலும்' (cheap money) பொருளாதாரச் செயல்கள் தூண்டப்பெற்றன என்றும், இத் தொழில்களும் இல்லையென்றால் வேலையின்மை இன்னும் அதிகமாயிருக்கும் என்றும் விவாதிக்கலாம். இந்த நோக்கம், போருக்குப் பின்னர் முழுவதுமாக நிறைவேறிற்று; அளவுக்குமேல் நிறைவேறிற்று என்றுகூடச் சொல்லலாம். ஏனென்றால், பணத்தின் அளிப்பில் ஏற்பட்ட உயர்வால் பணவீக்கம் ஏற்பட்டது. இதனால் 1949 செப்டம்பரில் ஸ்டெர்லிங் மதிப்பு (4·03-லிருந்து 2·80-க்கு) குறைக்கப்பெற்றது. 1951 இறுதியில் ஏற்பட்ட பாங்கு வீத உயர்வை 'பணவீக்கமற்ற' (disinflationary) நடவடிக்கை என்று சொல்லலாம். இது பண அளிப்பில் ஏற்பட்ட மிகையைச் செம்மையாக்கியது; வேலையின்மையை மிகுவிக்காமல் ஸ்டெர்லிங்கின் நாணயமாற்று மதிப்பைப் பேணிக்கொண்டது.

இது எப்படியிருந்தாலும், 1932 கோடைக்காலம் முதல் போரைத் தவிர்க்க வியலாத நிலை ஏற்பட்ட 1939 ஆகஸ்டுவரைக்கும், மீண்டும் 1951 அக்டோபர்வரைக்கும் பாங்கு வீதம் 2 சதவீத அளவிலேயே மாறாமல் இருந்தது. இந்த அளவு குறைந்த வீதத்தில்கூட, இது செயலாற்றலுடன் இயங்கியது. கழிவுக்குரிய சந்தை வீதங்கள் மிகவும் குறைவாயிருந்தமையால், மத்திய பாங்கிடமிருந்து கடன் வாங்கவேண்டிய கட்டாயம் ஏற்படும் என்ற அச்சத்திற்கே இடமின்றிச் சந்தை இயங்கிற்று. போர்க்காலத்திற்குப் பின்னர், குறிப்பாக அரசாங்கத்தின் பணவாக்கக் கொள்கை பின்னிடத்திற்கு வந்துவிட்டது. அரசாங்கம் தனது நோக்கங்களைச் செயல்படுத்திக் கொள்வதற்காக, பங்கீடுகள் (Rationing) முதலிய வெளிப்படையான, நேரடியான கட்டுப்பாடுகளை உபயோகப்படுத்திக்கொண்டது. வட்டி வீதங்களின்மூலமாகச் செய்வதைவிட்டு மூலதனங்களின் அளவையும் போக்கையும் நேரடியாகவே கட்டுப்படுத்திக்கொண்டது. இதனால் வட்டிவீதங்கள் குறைந்த நிலையிலேயே நின்றுவிட்டன.

1931 செப்டம்பருக்கு முன்னால் எல்லாம், பாங்கு வீதத்தில் ஏற்படும் மாறுதல்கள் தலையங்கச் செய்தியாகப் படிக்கப்பெறும்; வியாழக்கிழமைக் காலைகளில், இங்கிலாந்து பாங்கின் டைரக்டர் சபை முடிவுகளை அறிதற்காக லண்டன் நகரமே ஆர்வத்தோடு காத்திருக்கும். அந்தக் காலம் மலையேறிவிட்டது. இப்பொழுது 2 சதவீதமாக நிலைபெறுத்தப்பட்ட பாங்கு வீதத்தைப்பற்றி யாருமே கவலைப்படுவதில்லை. இது அந்த வீதத்திலேயே, எவ்வித ஆற்றலுமின்றிச் சிறப்புமின்றி அமைந்திருந்தது. ஆனால், 1951 முதல் அரசாங்கம் மேற்

கொண்டுள்ள பணவாக்கக் கொள்கை, கொஞ்சம் கொஞ்சமாக நேரடிக் கட்டுப்பாடுகளை மாற்றியமைத்து வருகிறது; இதனால், இப்பொழுது பாங்கு வீதத்தில் ஏற்படும் மாறுதல்கள் மீண்டும் முதன்மையான சிறப்பிடத்தைத் தொடங்கியுள்ளன.

## 7. வெளிச்சந்தை நடவடிக்கைகள்
## (Open-market Operations)

பாங்குவீதம் செயலாற்றலுடன் இயங்கியபொழுது ஏனைய குறுகிய கால வட்டி வீதங்களெல்லாம் இதோடு இணைப்புக் கொண்டன போல இயங்கின என்று முன்னர்க் குறிப்பிட்டேன். ஆனால், இவற்றிடையே எத்தகைய சட்டபூர்வமான இணைப்பும் இல்லை. முதல்தரமான உண்டியல்கள் முதலியவற்றிற்கான கழிவுகள் முதலிய பாங்கு அளிக்கும் சிலவகைக் கடன்களுக்கு உரிய சந்தை வீதங்கள், பாங்கு வீதத்தைவிடக் குறைவாயிருக்கின்றன என்பது வெளிப்படையாகத் தெரிந்த ஒன்று. இந்த நிலையில், மத்திய பாங்கிடமிருந்து மிக மலிவாகக் கடன் வாங்க இயலுமென்றிருக்கையில், பாங்குகட்கும் இதர கழிவகங்கட்கும் கடன் வாங்கும் ஒருவர், ஏன் அதிக வீதத்தில் வட்டி செலுத்த வேண்டும்? இந்த உடன்படிக்கை ஒன்றைத் தவிர, பாங்கு வீதத்திற்கும் இதர வீதங்கட்கும் இடையே எத்தகைய அவசியமான இணைப்பும் இல்லை. பாங்கு வீதத்தில் உயர்வு தாழ்வு ஏற்பட்டாலுங்கூட, எவ் வீதமும் பாதிக்கப்பெறுது. ஏனைய வீதங்கள் ஒரே நிலையில் இருக்கக்கூடும். அப்படியானால், நடைமுறையில்மட்டும் ஏன் அவை பாங்கு வீதத்தைப் பின்பற்றி, அது உயர்ந்தால் தாம் உயர்கின்றன; அது வீழ்ந்தால் தாமும் குறைகின்றன?

இதர பாங்குகளும் கழிவகங்களும் மத்திய பாங்கின் தலைமையை ஏற்றுக்கொண்டு, அதனைப் பின்பற்றிச் செல்கின்றன என்ற உண்மையைச் சொல்வதன்மூலம் இதை விளக்கமுடியும். என்றாலும், இப்படிச் சொல்வது மிகையாகிவிடாது. இவ்விதம் அவை மத்திய பாங்கைப் பின்பற்றுவதற்குரிய மூலகாரணம் என்னவென்றால், பாங்கு வீதத்தில் ஏற்படும் மாறுதல் ஒவ்வொன்றும், செலாவணி விலையில் மாறுதல் செய்ய விரும்பும் அரசாங்கத்தின் உறுதியான எண்ணத்தையே பிரதிபலிக்கின்றது என்பதை அவை அனுபவரீதியாக அறிந்திருக்கின்றன. இந்த மாற்றத்திற்குத் தக்கபடி தாமும் இசைந்து கொடுக்கவில்லையென்றால், அவற்றை இசைவிக்க ஏதுவான நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொள்ள நேரும் என்பதையும் அவை தெரிந்திருக்கின்றன.

அரசாங்கம், பாங்கு வீதத்தில் ஏற்படும் மாறுதலை, அதே திசையில் கருவூல உண்டியல்களுக்கான கழிவு விகிதத்தை மாற்று

வதன்மூலம் உடனடியாக ஆதரித்துவிட முடியும். மேலும், அது ஒவ்வொரு வாரமும் தான் சந்தையில் விடும் கருவூல உண்டியல் களின் அளவை மாற்றியமைக்கலாம்; ஒரு வரம்பிற்குள் அவற்றிற் கான கழிவு வீதங்களையும் தான் விரும்பியபடி அறுதியிடலாம்.

ஆகையால், பாங்கு வீதத்தில் ஏற்படும் மாறுதல் (இணையான மாற்றங்களை ஏனைய வீதங்களில் உண்டாக்குகிறது), பணத்தின் அளிப்பில் மாற்றம் ஏதும் செய்யாமலேயே, செயலாற்றல் பெற்று நடைமுறை வீதமாகிவிடுகிறது. பாங்குவீதத்தை, 1951 நவம்பரில், 2-லிருந்து $2\frac{1}{2}$ சதவீதத்திற்கு உயர்த்தியபோதும், 1952 மார்ச்சில் 4 சதவீதத்திற்கு உயர்த்தியபோதும் இவ்விதமே நிகழ்ந்தது. இதைத் தொடர்ந்து ஏனைய வீதங்களும் உயர்ந்தன. ஆனால், பணத்தின் அளிப்பு குறைக்கப்படவில்லை. ஆயினும், பாங்குவீத உயர்வில் உள்ள மனோதத்துவ விளைவாகக் கருதப்பட்டதென்ன வென்றால், செலவழிக்கும் தொகையின் அளவைக் கணிசமாகக் குறைக்கவேண்டு மென்பதுதான்.

என்றாலுங்கூட, அவசியம் நேர்ந்தால் பாங்கு வீதத்தில் செயலாற்றல் தரும் உயர்வு அல்லது தாழ்வை உண்டாக்கவும், விரிவான அல்லது மதிப்பிறக்கமான பணவாக்கக் கொள்கையை அப்படியே அமுல் நடத்தவும் உதவும் வகையில், மத்திய பாங்கு, பணத்தின் அளிப்பை உயர்த்தவும் கூடும்; குறைக்கவும் இயலும். கருவூல உண்டியல்களையும் இதர அரசாங்க ஈடுகளையும், தன் கணக்கில், தனது செக்குகளையே கொடுத்து வாங்குவதன்மூலமாக, இது பணத்தின் அளிப்பை அதிகப்படுத்துகிறது. இந்தச் செக்குகள் இதனோடு தொடர்புடைய பாங்குகளின் கணக்குகளில், ஈடுகளை விற்றோரால் போடப்பெறுகின்றன; இதனால், அந்த பாங்குகட்கு மத்திய பாங்கிடம் உள்ள வைப்பில் கூடுதல் ஏற்படுகிறது; இதன் விளைவாகப் பணத்தின் அளிப்பும் உயர்கிறது. பாங்குகளின் வைப்புகளின் மொத்த அளவு உயர்கிறது; அதாவது, இதர பாங்கு கட்கு, இங்கிலாந்து பாங்கிடம் உள்ள மிச்ச இருப்புகளின் அளவு உயர்கிறது. அப் பாங்குகள் தமது பாங்குச் செலாவணியை விரிவாக்குதற்கு (அதிகமாகக் கடன் கொடுத்தல், அதிகமாக ஈடுகளை வாங்குதல் முதலிய வழிகளில்) இது உதவுகிறது. இவற்றின் ரொக்க இருப்பைவிட $12\frac{1}{2}$ மடங்கு இது உயர்ந்திருக்கிறது. அப்படி யிருந்தும், தம்மிடம் உள்ள வைப்புகட்கு எதிராக, 8 சதவீத ரொக்க இருப்பை எப்போதும் வைத்திருக்கவும் இது வழி செய்தது.

மறுதலையாகப் பணத்தின் அளிப்பைக் குறைத்துக்கொள்ள வேண்டுமென்று பாங்கு விரும்பும்பொழுது இது தன்னிடமுள்ள

கருவூல உண்டியல்களையும், இதர அரசாங்க ஈடுகளையும் விற்று விடுகிறது. இவற்றை வாங்குவோர் தம்முடைய பாங்குகளின் மீதான கணக்கிற்குச் செக்கு தருகிறார்கள்; இதனால் மத்திய பாங்கிடம் உள்ள பாங்குகளின் வைப்பில் குறைவு ஏற்படுகிறது.

இச் செயல்முறைகள் எல்லாம் வெளிச்சந்தை நடவடிக்கைகள் என அழைக்கப்பெறுகின்றன. ஏனென்றால், இந்த பாங்கு ஒரு தரகரை (broker) நியமித்து, அவர்மூலமாக வெளிச்சந்தையில் விற்கவும் வாங்கவும் வழி செய்கிறது. பாங்குச் செலாவணியின் அளவைக் கூட்டிக் குறைப்பதில் இத்தகைய நடவடிக்கைகட்கு உரிய ஆற்றல் தளர்ந்துவிடும்; எப்பொழுதென்றால், பண அளிப்பு உயர்கையில் பொதுமக்கள் தம்மிடம் மிகுதியான ரொக்கம் வைத்திருக்கையிலும் (இதனால் விலைகள் உயர்கின்றன; வேலையுடைமை அதிகரிக்கிறது) பண அளிப்புக் குறைகையில் அவர்கள் தம்மிடம் குறைவான ரொக்கம் வைத்திருக்கையிலும் (இதனால் விலைகள் விழுகின்றன; வேலையுடைமை குறைகிறது) வெளிச்சந்தை நடவடிக்கைகளின் ஆற்றல் தளர்ந்துவிடும். என்றாலும், இத்தகைய மட்டுப்படுத்தும் முனைப்புகளை பாங்குகளின் வைப்புகளில் உயர்வு, குறைவுகளைச் செய்வதன்மூலம் ஈடுகட்டிவிடமுடியும்.

## 8. இதர நாடுகளில் பாங்குத் தொழில்

பெரும்பாலான நாடுகளில் அரசாங்கத்திற்குச் சொந்தமான மத்திய பாங்கு ஒன்று இருக்கிறது. நோட்டுகளை வெளியிடும் முழு உரிமையும், கடைசிவரையும் கடன் தரும் கடமையும் இப் பாங்கிற்கே இருக்கின்றன. என்றாலும், பிரிட்டிசு பாங்கு முறையிலிருந்து மாறுபட்ட பல்வேறு பாங்கு முறைகள் இந் நாடுகளில் செயல்படுகின்றன.

கருவூல உண்டியல்கள், இதர உண்டியல்கள், அழைப்புக் கடன்கள், இதர குறுகிய காலக் கடன்கள் ஆகியவற்றின் மொத்த அளவு, இதர இடங்களைவிட லண்டனில் மிகுதியாகவே இருக்கிறது. இத்தகைய திரவச் சொத்துகள் இங்கிலாந்து நாட்டு பாங்குகட்குப் பாதுகாப்புத் தரும் இரண்டாம் பாதுகாப்பு அணியாக உதவுகின்றன; அவற்றின் ரொக்க இருப்புகளை ஆதரிப்பதுடன் வைப்புகளுக்கு எதிராகக் குறைந்தபட்சம் 8 சதவீத இருப்பாவது வைத்திருக்க ஆக்கம் தருகின்றன. போதிய வளர்ச்சி பெறாத பணச் சந்தைகளை உடைய நாடுகளில், இந்த விகிதம் அதிகமாயிருக்க வேண்டியதிருக்கிறது; இத்தகைய திரவச் சொத்துகளில் ஓரளவே கிடைக்கும் நாடுகளிலும், ஒன்றுமே கிடைக்காத நாடுகளிலும் இந்த விகிதம் 15 அல்லது 20 சதவீதமாக உயர்ந்திருக்கிறது.

கருவூல உண்டியல்களில் அளவு மிகுதிப்படுவதால் அவற்றிற்குரிய குறுங்கால வட்டி விகிதமும் உயர்ந்திருக்கும். எனவே, குறுங்காலக் கடன்களுக்காக(floating debt)அரசாங்கம் செலுத்தவேண்டிய வட்டி விகிதத் தொகையும் மிகுதிப்பட்டுவிடும். கருவூல உண்டியல்களுக்கான கழிவு வீதம் போர் முடிந்தவுடன் $\frac{1}{2}$ சதவீதத்திலிருந்தது; இது 7 சதவீத பாங்குவீதக் காலத்தில் (1957 செப்டம்பர் முதல் 1958 மார்ச்சு முடிய; 1961 ஜூலை முதல் அக்டோபர் முடிய) $6\frac{1}{2}$ சதவீதமாக உயர்ந்துவிட்டது. அதிகாரபூர்வமற்றோரிடம் உள்ள 3,000 மில்லியன் பவுன்கள் மதிப்புள்ள கருவூல உண்டியல்களுக்கான ஆண்டுக் கட்டணம், 6 சதவீதத்தில் 180 மில்லியன் பவுன்களாகும். இது $\frac{1}{2}$ சதவீதத்தில் 15 மில்லியன் பவுன்கள் மட்டுமே ஆகும். குறைந்த கால வட்டி வீதங்களைக் குறைந்த அளவிலேயே வைத்திருப்பதால் கருவூலத்திற்குத்தான் நன்மை விளையும்; ஆனால், செலாவணி முறையில் மிகுதியான கட்டுப்பாடுகள் தேவையாகும்பொழுது ஓரளவு தாராளமான விகிதங்கள் நிலவுகின்றன.

மத்திய பாங்கிற்கும் வணிக பாங்குகளுக்கும் இடையே கழிவகங்கள் தலையிடுவது என்பது கிரேட் பிரிட்டனுக்கு மட்டுமே உரிய தனிச் சிறப்பாகும். இதர நாடுகளில் உள்ள வணிக பாங்குகளுக்கு அதிகமான ரொக்க இருப்புத் தேவைப்படும்பொழுது, அவை நேரடியாகவே தமது மத்திய பாங்கிடமிருந்து பெற்றுக்கொள்ளுகின்றன; ஆனால், கிரேட் பிரிட்டனில் அவை, தாம் கொடுத்திருந்த அழைப்புக் கடன்களையும், குறுகிய காலக் கடன்களையும் திருப்பிச் செலுத்துமாறு ஆணையிடுகின்றன. வணிக பாங்குகளன்றிக் கழிவகங்களும் இதர நிலையங்களுமே மத்திய பாங்கிடமிருந்து (இங்கிலாந்து பாங்கு) பணம் பெற்று வணிக பாங்குகளின் ரொக்க இருப்பை நிரப்ப உதவுகின்றன.

பிரிட்டிசு பாங்குகளால் பேணிவரப்படுகின்ற 8 சதவீத ரொக்க இருப்பை, எந்தச் சட்டமும் வலியுறுத்துவதில்லை; அவை விரும்பினால் இதைவிடக் குறைந்த அளவிலும் வைத்திருக்கலாம். இதர பெரும்பாலான நாடுகளில் உள்ள பாங்குகள் தமது வைப்புகட்கு எதிராகக் குறைந்தபட்சம் இவ்வளவுதான் ரொக்க இருப்பு வைத்திருக்க வேண்டுமென்று (இது மத்திய பாங்கிடம் எஞ்சிய இருப்புகளின் வடிவிலும் இருக்கலாம்) சட்டத்தால் கட்டாயப்படுத்தப்பெறுகிறது. செலாவணியைக் குறைக்கவேண்டுமென்று கருதுகையில், இந்தக் குறைந்தபட்ச அளவு சற்று உயர்த்தப்பெறுகிறது. செலாவணியை விரிவாக்க விரும்புகையில், இந்தக் குறைந்தபட்ச அளவு இன்னும் குறைக்கப்படுகிறது. மத்திய பாங்கின் வெளிச்சந்தை நடவடிக்கைகளைப்போல, சட்டப்படி வற்புறுத்தப்பெறும் இத்தகைய குறைந்த

பட்ச அளவுகளும் உதவுகின்றன. இவை இரண்டையும், ஒன்றோடு ஒன்றாக இணைத்தும் செயல்படுத்த முடியும்.

அமெரிக்காவில் 12 சமஷ்டி ரிசர்வ் பாங்குகள் உள்ளன; ஒவ்வொன்றும் தனது மாவட்டத்திற்கு மத்திய பாங்காகப் பணி புரிகின்றது. இவற்றிற்கென கவர்னர்கள் சபை உண்டு; சமஷ்டி ரிசர்வ் திட்டப்படி அமைக்கப்பெற்ற இந்தச் சபை, வாஷிங்டனில் கூடுகிறது. இந்த சமஷ்டி ரிசர்வ் திட்டம் அரசாங்கத்திற்கே சொந்தமானதன்று. கவர்னர்கள் சபையின் கருத்துகள், அமெரிக்கக் கருவூலத்தின் கருத்துகளோடு மாறுபடலாம். அரசாங்கக் கருவூலம் தனது கொள்கைகளை ஏற்கும்படி கவர்னர்கள் சபையைத் தூண்டலாம்; வற்புறுத்தவும் செய்யலாம். என்றாலுங்கூட, கவர்னர்கள் சபை தன்னிச்சையாகப் பணிபுரிய முடியும்.

பாங்குத் தொழில் நன்கு வளர்ச்சியுற்ற இதர நாடுகளைப்போல, கிரேட் பிரிட்டனில் நாடெங்கும் எண்ணற்ற கிளைகளையுடைய பெரிய பாங்குகள் மிகச் சிலவே உள்ளன. இவற்றுள் ஏதேனும் ஒன்றிற்கு நஷ்டமேற்பட்டாலும், அதைத் தாங்கிக்கொள்ளக்கூடிய அளவில் அவற்றின் வளர்ச்சியுள்ளது. ஆனால், தன்னிச்சையாகத் தொழில் நடத்திவரும் சிறிய பாங்கே உள்நாட்டுப் பொருளாதார இன்னல்களால் அழிய நேரும். உதாரணமாக, மாசூல் பொய்த்துவிட்டால், அதனால் ஏற்படக்கூடிய இன்னல்கள் வாடிக்கைக்காரர்களைப் பாதிக்கும்; இதன் விளைவாக பாங்கும் பாதிக்கப்பெறும்.

என்றாலும், அமெரிக்காவில் 14,000-க்கும் மேற்பட்ட பாங்குகள் உள்ளன. இவற்றுள் பல சிறியசிறிய வட்டாரங்களைச் சார்ந்து பணிபுரிகின்றன. இவை கிளைகளை உண்டாக்கித் தொழில்புரிவது தடுக்கப்பெற்றுள்ளது. ஏனென்றால், இதனால் பாங்குத் தொழிலில் சர்வாதீனம் ஏற்பட்டுவிடும் என்ற அச்சம் இருக்கிறது. 1921 முதல் 1929 வரைக்கும் உள்ள ஆண்டுகளில் கிட்டத்தட்ட ஆறாயிரம் பாங்குகள் முறிந்தன. 1930–1933-ல் சுமார் ஒன்பதாயிரம் பாங்குகள் ஓடி மறைந்தன. இதனால் சமஷ்டி ரிசர்வ் திட்டம் (தமது வைப்புகளை இன்சூர் செய்யுமாறு பாங்குகளைக் கட்டாயப்படுத்துதல் முதலிய வழிகளால்) அண்மைக் காலங்களில் வலிமையூட்டப்பெற்றிருக்கிறது என்றாலுங்கூட, கிரேட் பிரிட்டனைவிட அமெரிக்காவில் பாங்குகள் முறிவதற்கான ஆபத்து அதிகமாகவே இருக்கிறது.

# 33. பணத்தின் மதிப்பு

## 1. விலைகளுக்குப் பொதுவான ஓர் அளவு இருக்கிறதா ?

ஒரு பொருளின் மதிப்பு எனப்படுவது, அதைக் கொடுத்து மாற்றாக எதைப் பெறமுடியும் என்பதைப் பொறுத்தது. எனவே, பணத்தின் மதிப்பு எனப்படுவது அதனுடைய வாங்கும் சக்தி (purchasing power) ஆகும். இதைக் கொடுத்து மாற்றாக எதை வாங்க முடியும் என்பதைக்கொண்டே, பணத்தின் மதிப்பை அளவிட முடியும். பணத்தின் மதிப்பு என்பது, 'விலைகளுக்குரிய பொதுவான அளவின் பரிமாற்றமே' என்று சாதாரணமாகச் சொல்லப் பெறுகிறது. குறிப்பிட்ட கால அளவில் சில பண்டங்களுக்கான விலைகள் ஏனையவற்றின் விலைகளைவிட உயரலாம். பிற, ஒரே நிலையில் இருக்கலாம் அல்லது குறையலாம். ஆனாலும், எல்லாப் பண்டங்களுக்கும் உரிய விலைகளில் பொதுவான அளவு உயர்ந்துவிட்டால், அப்பொழுது பணத்தின் மதிப்பு குறைந்துவிட்டது என்று சொல்லுவதன்மூலம் இக் கருத்தை ஏற்கலாம். பொருள்களின் பொதுவான விலை அளவு இருமடங்கானால், பணத்தின் மதிப்பு பாதியாகிவிட்டது என்பது பொருள். ஒரு பவுனுக்கு முன்னர் வாங்கியதில் பாதி அளவையே இப்பொழுது வாங்குவேன். மறுதலையாக, விலைகளின் பொது அளவில் ஏற்படும் குறைவு, பணத்தின் மதிப்பில் உயர்வை ஏற்படுத்துகிறது.

பணம், விலை மதிப்புள்ள எப் பொருளையும் வாங்குகிறது. பங்கு மாற்று ஈடுகள் முதலிய தாள் உரிமைகளையும் (paper titles), நிலம், உற்பத்தி நிலையம், இயந்திரங்கள் முதலிய வெளிப்படையான சொத்துகளையும், உழைப்பு முதலிய இதர உற்பத்தி சாதனங்களையும், உற்பத்தியின் பல்வேறு நிலைகளுக்கு உதவக்கூடிய கச்சாப் பொருள் முதல் செய்து முடிக்கப்பட்ட பொருள்வரை அத்தனை பண்டங்களையும் பணம் வாங்குகிறது. இத்தகைய பல்வேறு இனங்களையும் ஒன்றாக இணைத்து, பொதுவான விலைகளின் அளவு எனப்

படும் கதம்பத்திலிருந்து பணத்தின் மதிப்பை அறிய முற்படுவதில் ஏதாவது அறிவுடைமையோ, பயனுடைமையோ இருக்கிறதா ?

நிச்சயமாக இல்லை. யாருக்கும் எப் பயனும் இல்லை என்பதுதான் இக் கதம்பத்தின் பொருள். ஒன்றோடொன்று தராதாத் தொடர்புடைய பொருட் பகுதிகளின் விலை அளவின் இயக்கமே, பொருளாதாரத்தை முழுவதாகப் பாதித்து, வெவ்வேறு பிரிவினரின்செல்வத்தையும் அமைக்கிறது. உழவர்கள் தாம் ஆக்கிய விவசாய உற்பத்திப் பொருள்கள், தாம் வாங்கும் பண்டங்கள், பணிகள் ஆகிய இவற்றிற்கு இடையே உள்ள தொடர்பினால் பாதிக்கப்பெறுகிறார்கள். கிரேட் பிரிட்டனைப்போல, பன்னாட்டு வாணிகத்தையே பெரும்பாலும் சார்ந்திருக்கவேண்டியுள்ள ஒரு நாட்டுக்குத் தனது ஏற்றுமதிக்குப் பெறும் விலை, தன்னாட்டு இறக்குமதிக்கு அளிக்கவேண்டிய விலை ஆகிய இவற்றினிடையே உள்ள தொடர்பு மிகவும் முக்கியமானதாகும். ஒரு தொழிலாளியைப் பாதிப்பது, அவன் பெறும் கூலிகள், நுகர்வுப் பொருள்கள், பணிகள் முதலிய தனது தேவைகளுக்காக அவன் தரவேண்டிய விலை ஆகிய இவ்விரண்டிற்கும் உள்ள தொடர்பு தான்.

பெரிய மந்தத்தின் காரணமாக, 1929 அக்டோபரில் குலைந்து போன நியூயார்க் பங்கு மாற்றகம் மிக வளமாக இருந்த நாளில், அதனுடைய ஈடுகளின் விலைகள் சராசரியாக மூன்று மடங்கிற்கு மேல் உயர்ந்தன. ஆனால், பண்டங்களின் விலைகள், கூலி விகிதங்களில் உயர்வு ஏற்பட்டபோதிலும், அனேகமாக ஒரு நிலையிலேயே நின்றன. விலைகளின் பொதுவான அளவில் சதவீத உயர்வு காட்டுதற்காக, மேற்குறித்த எல்லாவற்றையும் மொத்தமாகத் திரட்டிக் குவித்து இவற்றினின்று சராசரிக் கணக்கெடுப்பதில் நிச்சயமாகப் பலன் ஏதும் விளையாது! இத்தகைய சராசரி எதற்கும் உதவாது. வெவ்வேறு துறைகளில் இயங்கும் பண்டங்களின் விலைச் சராசரி அளவே நமக்கு உதவக்கூடியது.

எனவே, 'வாழ்க்கைத்தரச் செலவு' என நாம் சாதாரணமாக அழைக்கும் நுகர்வுப் பொருள்கள், அவசியப் பணிகள் ஆகியவற்றின் சில்லறை விலை அளவை, இவற்றின் பகுதி விலை அளவைப் பற்றியே (sectional price level) நான் குறிப்பிடுவேன். என்றாலும், விலைகளின் பொதுவான அளவு என்ற பொதுக் கருத்தை நாம் முற்றிலும் கைவிட்டுவிட்டால், பணத்தின் மதிப்பை நிர்ணயிக்கும் எல்லாப் பொது விளக்கத்தையும் (நான் இனிக் குறிப்பிட இருக்கும் ஃபிஷரின் சமன்பாடு முதலியன) அதே சமயத்தில் நிராகரிக்க வேண்டியதிருக்கும். இப் பொது விளக்கம், பணக்கணியத்தைப் பணம்

மாற்றிக்கொள்ளும் எந்த ஒரு பொருளுக்கும் உரிய பொதுவான விலை அளவோடு தொடர்புபடுத்துகிறது.

## 2. விலைகளின் குறியீட்டெண்கள்
(Index Numbers of Prices)

பகுதி விலை அளவுகளில், குறிப்பிட்ட காலங்களில் ஏற்படும் மாறுதல்களை எவ்வாறு அளப்பது என்பதை, அதாவது, குறிப்பிட்ட பொருள்களின் தொகுதியில் பணத்திற்குள்ள மதிப்பு, ஒரு கால எல்லைக்குள் எவ்வாறு மாறியிருக்கிறது என்பதை இனிப் பார்ப்போம்.

இப்பொழுது உதாரணத்திற்கு பிரிட்டிஷ் பாட்டாளி மக்களின் வீடுகளில் நுகரப்படும் உணவுப் பொருள்களின் தொகுதியைப்பற்றிப் பார்ப்போம். போருக்குப் பின்னர், ஒவ்வொரு பொருளின் விலையும் உயர்ந்துவிட்டது என்பதை நாம் அறிவோம். ஆனால், சிலவற்றின் விலைகள், ஏனைய பொருள்களின் விலைகளைவிட மிக அதிகமாக உயர்ந்துவிட்டன. அப்படியானால், அவை 'சராசரியாக' எத்தனை சதவீதம் உயர்ந்துள்ளன? மேலும், அவை சென்ற ஆண்டைவிடச் சராசரியாகக் கிராக்கியாகி உள்ளனவா, மலிவாகியுள்ளனவா?

இத்தகைய கேள்விகளுக்கு விடையளிக்கவேண்டுமானால், எந்தப் பொருள்களைச் சேர்த்துக்கொள்ளவேண்டும், அவற்றை எந்த விகிதாசாரத்தில் சேர்த்துக்கொள்ளவேண்டும் என்பதை முடிவுசெய்ய வேண்டும்; கலைச் சொல்லில் குறிப்பிடுவதென்றால், ஒவ்வொன்றுக்கும் எவ்வளவு 'மதிப்பெடைகளை' (weights) அளிக்கவேண்டும் என முடிவுசெய்யவேண்டும். இம் முடிவுகளெல்லாம், வழக்கமாகக் குடும்பங்கள் எந்தெந்தத் துறைகளில் தமது பணத்தைச் செலவழிக்கின்றன என்பதை விசாரித்துக் கணக்கெடுத்துள்ள 'குடும்ப வரவு செலவுத் திட்டங்களின்' அடிப்படையில் அமைந்துள்ளன.

இக் கணக்கெடுப்பில், மக்கள் அன்றாடம் வாங்கும் ஆயிரக்கணக்கான பொருள்களையெல்லாம் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்ற அவசியமில்லை. உணவுக்குச் செலவிடப்படும் மொத்தத் தொகையில் ஒருசில சதவீதத்தையே பகிர்ந்துகொள்ளும் சில சில்லறை இனங்களை நீக்கிவிடலாம். நம் கணக்கெடுப்பில் சேர்த்துக்கொண்டுள்ள இனங்களின் விலை அளவிலிருந்து மிகவும் மாறுபட்டவகையில் இவற்றின் விலை அளவுகள் உயர்ந்தாலொழிய, இவற்றைச் சேர்க்காமல் விடுவதால் நமது முடிவுகள் பெரிதும் பாதிக்கப்படப் போவதில்லை. காய்கறிகள், பழங்கள் முதலிய இனங்களையும், மாதா மாத ஒப்புநோக்கிலிருந்து நீக்கிவிடவேண்டியதிருக்கும்;

ஏனென்றால், இப் பொருள்கள் தத்தமக்கு உரிய பருவ காலங்களில் மட்டுமே கிடைக்கின்றன. மேலும், உதாரணமாக, தேயிலையை எடுத்துக்கொண்டால் அதில் பல தரங்கள் உள்ளன. நாம் ஒவ்வொரு தரத்தின் விலையையும் தேடிச் சேர்க்கவேண்டிய அவசியமில்லை. இவற்றுள் மிக அதிகமாக விற்பனையாகும் தேயிலையின் விலையையோ அல்லது ஓரிரண்டு தரமான தேயிலைகளின் சராசரி விலையையோ கணக்கெடுத்துக்கொண்டால் போதும். ஏனென்றால், இதர மலிவான தேயிலைகளின் விலையெல்லாம் இதே போக்கில்தான் செல்லுமென்பதை நாம் அறிவோம். ஆனால், தூய டார்ஜிலிங் தேயிலை போன்ற மிகவும் விலையுயர்ந்த தேயிலையின் விலை, நமது விசாரணைக்குத் தேவையில்லை; ஏனென்றால், பாட்டாளி மக்களின் வீடுகளில் இச் செலவைத் தாங்கமுடியாது. இதைப்போலவே, மாமிசத்தின் விலையை அறிதற்கு, ஓரிரு துண்டுகளின் சராசரி விலையை (மாட்டின் எலும்பு, ஆட்டின் தொடை) அறியலாம்; மீன்களின் விலையை அறிதற்கு காட், ஹெர்ரிங்க், ஹேக் முதலிய மலிவான மீன்களின் விலையைத் தெரிந்துகொண்டால் போதும்.

இவ்விதமாகப் பாட்டாளி மக்களின் வீடுகளில் உணவுக்காகச் செலவிடப்பெறும் செலவினத்தின் மொத்தத்தைப் பல்வேறு பண்டங்களின் வெவ்வேறு விலை விகிதங்களைச் சேகரிப்பதன்மூலம் நாம் பெறுகிறோம். இச் சேகரிப்பை, உணவுப் பொருள்களின் ஒரு வாரச் சேமிப்பைக்கொண்ட பெரியதொரு 'பொருட் கூடையாக' (basket of commodities) எண்ணிக் கொள்ளலாம்.

இனி, இப் பொருட் கூடையில் உள்ள பொருள்கள் அவ்வப்போது எப்படி மாறுகின்றன என்பதை நாம் கண்டுபிடிக்கவேண்டும். அப்பொழுது நாம் ஏற்கெனவே வாங்கிய அதே கடையின் விலையையே கணக்கிற் கொள்ளவேண்டும்; ஏனென்றால், அப் பொருள்களுக்கு இதர கடைகளில் அவ்வப்போது விலை குறையலாம்; அல்லது இதர மாவட்டங்களில் உள்ள கடைகள் விலையைக் கூட்டிவிடலாம். மேலும், அப் பொருள்களில் அதே தரத்தை அல்லது பண்பையே விசாரித்து அறியவேண்டும்.

இப் பொருட் கூடையின் விலை 1938 ஜூனில் 2 பவுன்; 1956 ஜூனில் 5 பவுன்; 1962 ஜூனில் 6 பவுன். இது நமக்கு வேண்டிய விடையைத் தருகிறது. பாட்டாளி மக்களின் சராசரிக் குடும்பம் ஒன்றில் உபயோகிக்கப்பெற்ற உணவுப் பொருள்களின் விலை, 1938 ஜூனுக்கும் 1956 ஜூனுக்கும் இடையே, 150 சதவீதம் உயர்ந்திருக்கிறது; 1956 ஜூனுக்கும் 1962 ஜூனுக்கும் இடையே 20 சதவீதம் உயர்ந்திருக்கிறது.

இப் பொருட் கூடையின் உண்மையான விலையை அவ்வப்போது பார்ப்பதற்குப் பதிலாக, இதன் விலையைக் குறிப்பதற்கு ஒரு குறிப்பிட்ட நாளில் விற்ற விலையை நிரந்தரமாகக் கொள்ளலாம். இங்ஙனம், தொடக்க நிலையில் மேற்கொள்ளப்படும் தேதி, ‘ தள ’ நாள் (base date) என்று, 100 என்னும் அளவில் குறிக்கப்பெறும்.

இப் பொருட்கூடைக்கு உரிய ஒரு குறிப்பிட்ட நாளின் விலையை அறியவேண்டுமானால், அன்றைய விலைக்கும், ‘தள’ நாளில் உள்ள 100 என்ற அளவிற்கும் இடையே உள்ள வேறுபாட்டைக் கணக்கிட்டு, இரண்டிற்கும் உள்ள தொடர்புத் தொகையால் குறிப்பிட வேண்டும். இத் தொகைகளே குறியீட்டு எண்கள் (index numbers) என அழைக்கப்பெறுகின்றன. உதாரணமாக, நமது குறியீட்டு எண்களின் தளமாக 1938 ஜூனில் 100 எனக் கொண்டால், 1956 ஜூனில் இவை 250 ஆகவும், 1962 ஜூனில் இவை 300 ஆகவும் இருக்கும். இக் குறியீட்டு எண்கள் அனைத்தும் மாதவாரியாகத் தொகுக்கப்பெறுவது வழக்கம். 100 என்ற தள நாளோடு தொடர்புடைய குறியீட்டு எண்களால் சுட்டப்பெறும் எல்லா நீண்ட மாதப் பட்டியல்களில் உள்ள தொகைகளைக் கூட்டும்பொழுது, இத்தகைய மாதவாரித் தொகுப்புமுறை நமக்குச் சுலபமாக இருக்கும்.

இத் தள நாளை வசதியாகத் தேர்ந்தெடுக்கவேண்டும். போர்க் காலத்திற்கு முந்திய விலை அளவுகளோடு இப்போதைய விலைகளை ஒப்பிட்டுப் பார்க்க விரும்பினால், 1938 ஜூன் போன்ற போர்க்காலத்திற்கு முந்திய தள நாள் மிகவும் ஏற்றதாயிருக்கும். நாம் பலரைப் போல, அண்மைக்கால அல்லது நடப்பு விலைகளில் ஏற்படும் மாறுதல்களை அறிய விரும்பினால், அண்மைக்காலத் தள நாள் ஒன்றைத் தெரிவு செய்வது ஏற்றதாயிருக்கும். உதாரணமாக, 1956 ஜூன் மாதத்தை நமது தளமாக எடுத்துக்கொள்ளவேண்டியிருந்தால், முற்குறிப்பிட்ட எண்கள் திரும்பவும் பின்வருமாறு எழுதப்பெறும்: 1938, ஜூன் 40; 1956, ஜூன் 100; 1962, ஜூன் 120.

இதேமாதிரிப் பயன் அளிக்கக்கூடிய குறியீட்டெண்களைத் தொகுக்கும் இன்னொரு வழக்கமான முறையும் உள்ளது. இதில் கணக்கெடுப்பில் சேர்த்துக்கொள்ள ஒவ்வொரு பொருளின் விலையும் தள நாளில் 100 என எழுதப்பெறும். ஒவ்வொரு பொருளுக்கும் அதன் தராதரச் செலவுக்கு இணையாக மதிப்பெடை ஒன்று தரப்படும். ஒவ்வொரு பொருளின் குறியீட்டெண்ணும் இம் மதிப்பெடையால் பெருக்கப்படும். எல்லாப் பொருள்களின் மொத்த விலையும், எந்த ஒரு மாதத்திற்கும், எல்லா மதிப்பெடைகளின் மொத்தத்தாலும் வகுக்கப்பட்டுச் சராசரி மதிப்பெடை கணக்கிடப்பெறும்.

எளிய உதாரணமாக, மூன்று பண்டங்களின் விலையைமட்டும் பார்ப்போம். ரொட்டியின் விலை 1 பவுண்டிற்கு, 1938 ஜூனில் 3 பென்னி, 1962 ஜூனில் 6 பென்னி. இதற்கு இணையாக, சர்க்கரை யின் விலை 4 பென்னியும் 1 ஷில்லிங்கும்; பன்றிக்கறியின் விலை பவுண்டிற்கு 1 ஷில்லிங்கும் 4 ஷில்லிங்கும். இக் கணக்குப்படி 1962 ஜூனில் ரொட்டியின் விலை 100 சதவீதமும், சர்க்கரை 200 சத வீதமும், பன்றிக்கறி 300 சதவீதமும் உயர்ந்திருக்கின்றன. இந்த உயர்வுகளின் மொத்தச் சராசரி 600 ÷ 3 = 200 சதவீதம். மக்கள் சர்க்கரையைவிட இரண்டு மடங்கு அதிகமாக ரொட்டிக்கும், பன்றிக் கறியைவிட மூன்று மடங்கு அதிகமாகச் சர்க்கரைக்கும் செலவழித்திருக்கிறார்கள் என்றால், இப் பண்டங்களை, முறைப்படி நாம் மதிப்பெடை இடவேண்டும். (உதாரணமாக, ரொட்டிக்கு மதிப் பெடை 6-ம், சர்க்கரைக்கு 3-ம், பன்றிக் கறிசிக்கு 1-ம் கொடுத்தல் வேண்டும்.) இதனால், நமக்கு 'மதிப்பெடையிடப்பட்ட சராசரி' விலை உயர்வாக 150 சதவீதமே கிடைக்கிறது. விவரம் வருமாறு:

| | | 1938 ஜூன் | 1962 ஜூன் | மதிப்பெடை |
|---|---|---|---|---|
| ரொட்டி | ... | 100 | 200 | ×6 = 1,200 |
| சர்க்கரை | ... | 100 | 300 | ×3 = 900 |
| பன்றிக் கறி | ... | 100 | 400 | ×1 = 400 |
| | | | | 10) 2,500 |
| | | | | 250 |

தொழிலாளர் துறை அமைச்சகம், வீட்டுச் செலவினங்களைப் பற்றி அவ்வப்போது மேற்கொள்ளும் பேரளவு விசாரணைகளின் மூலமாகக் கிட்டும் செய்திகளின் அடிப்படையில், சில்லறை விலைகள் அடங்கிய மாதாந்தரக் குறியீட்டெண்களைத் தொகுத்து வருகிறது. ஐக்கிய அரசில் உள்ள பெரும்பான்மைக் குடும்பங்கள் வாங்கும் பண்டங்களின் விலைகள், பெறும் பணிகளின் செலவுகள் ஆகிய வற்றின் சராசரி அளவுகளில் மாதாமாதம் ஏற்படும் மாற்றங்களை இக் குறியீட்டெண் அளந்தறிகிறது. அதாவது, கூலி பெறுவோர், இதர எளிய, நடுத்தரச் சம்பளம் பெறுவோர் ஆகியோரின் வாழ்க்கைத்தரச் செலவுகளில் ஏற்படும் மாதாந்தர மாறுதல்களை அளந்தறிகிறது எனலாம். நுகர்வுப் போக்கு மாறுவதற்கேற்ப, இந்தக் குறியீட்டெண்ணில் பகுக்கப்பட்டுள்ள 10 பிரதான பகுதிகளுக்குத் தரப்பட்டுள்ள மதிப்பெடைகளும் அப்போதைக் கப்போது மாறும். இங்ஙனம் மதிப்பெடை தருவது, 1962 ஜனவரியில் மீண்டும் திருத்தியமைக்கப்பட்டது. இது 1956 ஜனவரியிலிருந்து

புழக்கத்தில் இருந்த பழைய குறியீட்டெண்ணை மாற்றிவிட்டுப் புதிய குறியீட்டெண்ணை வழங்கியது. இந்த இரு குறியீட்டெண் களிலும் தரப்பட்ட மதிப்பெடைகள் பின்வருமாறு :

| | ஜனவரி 1956 | ஜனவரி 1962 |
|---|---|---|
| உணவு ... ... ... | 350 | 319 |
| மதுபானங்கள் ... ... | 71 | 64 |
| புகையிலை ... ... ... | 80 | 79 |
| வீட்டு வசதி ... ... | 87 | 102 |
| விறகும் விளக்கும் ... ... | 55 | 62 |
| (வீட்டுக்குரிய) நெடுங்கால நுகர்வுப் பொருள்கள் ... ... | 66 | 64 |
| உடையும் காலணியும் ... | 106 | 98 |
| போக்குவரத்துச் செலவும் வாகனச் செலவும் ... ... | 68 | 92 |
| இதர பண்டங்கள் ... ... | 59 | 64 |
| (பிறரிடமிருந்து பெற்ற) பணிகள் | 58 | 56 |
| | 1,000 | 1,000 |

1956 ஜனவரியைத் தளமாகக் கொண்ட குறியீட்டெண், பின் வரும் ஆண்டுச் சராசரிகளைக் காட்டுகிறது: 1956-க்கு 102, 1957-க்கு 105, 1958-க்கு 109, 1959-க்கு 110, 1960-க்கு 111, 1961-க்கு $114\frac{1}{2}$, 1962ஆம் ஆண்டின் முற்பாதிக்குள்ள சராசரி 119, பிற்பாதிக்குள்ள சராசரி 120.

இத்தகைய எந்த ஒரு குறியீட்டெண்ணும், இயல்பாகத் தப்பபிப் பிராயத்திற்கே இடம் தரும். இக் குறியீட்டில் சேர்க்கப்பட்டுள்ள பொருள்கள் எல்லாம் ஒரு குடும்பத்திற்குப் போதுமான வாழ்க்கைத் தரத்தை அளிக்கக்கூடியவை என்று சிலர் கருதினர்கள். ஆனல், உண்மை அவ்வாறில்லை. குடும்பங்கள் தமக்குப் போதுமான வாழ்க்கைத் தரங்களை அடைகின்றனவா இல்லையா என்பது வேறு விஷயம். இக் குறியீடு, 'சராசரியாக'ச் சில்லறை விலைகளில் ஏற்படும் மாறுதல்களைமட்டுமே அளந்தறிகிறது. இதில் இணைக்கப்பட்டுள்ள வெவ்வேறு செலவினங்களுக்காக ஒரு சராசரிக் குடும்பம் உண்மையி லேயே செலவழிக்கும் தொகைக்குத் தொடர்பாக இந்தச் சராசரி மதிப்பெடையிடப்பெற்றிருக்கிறது.

வெவ்வேறு குடும்பங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு சில குறிப்பிட்ட பொருள்களையே வாங்குவதில்லை ; வாங்கினலும் ஒரே வீதாசாரத்தில்

வாங்குவதில்லை; உதாரணமாக, சிறு குழந்தைகள் உள்ள குடும்பத்துடன், குழந்தைகளே இல்லாத குடும்பத்தை வேறுபடுத்தி அறிவோம். இவ்விரு குடும்பங்களும் ஒரே அளவு வருமானத்தையே பெறுவதாகவும் வைத்துக்கொள்ளுவோம். இரண்டாவது குடும்பத்தைவிட முதல் குடும்பம், ரொட்டி, பால், குழந்தைகளுக்கான துணிகள் முதலிய இனங்கட்கு அதிகமாகச் செலவழிக்கும். எனவே, இன்னும் சில செலவுகட்கு இரண்டாம் குடும்பத்தைவிடக் குறைவாகவே ஒதுக்கமுடியும். மேலும், சைவ உணவினனுக்கு மாமிச விலையைப்பற்றிக் கவலை இல்லை; புகைபிடிக்காதவனுக்குச் சிகரெட் விலைபற்றிச் சிந்தை இல்லை. குறியீட்டின் தொகுப்பும் மதிப்பெடையும் ஒரு சராசரிக் குடும்பத்திற்கே பொருந்தும். ஏனென்றால், ஒரு தனிப்பட்ட குடும்பத்தைமட்டும் பிரித்துப் பார்த்தால் குறியீட்டு எண் காட்டுவதைவிட, வாழ்க்கைத்தரச் செலவுகள் கூடியோ குறைந்தோதான் அமையமுடியும். உண்மையில், குறியீட்டெண் குறைவாகக் காட்டுகையில் அவை உயர்ந்திருக்கலாம்; கூடுதலாகக் காட்டுகையில் அவை குறைந்திருக்கலாம்.

குறியீட்டெண்கள் குறிக்கின்ற குடும்பங்களைவிட அதிகமான (அல்லது குறைவான) வருமானங்களைப் பெறும் குடும்பங்கட்கு இவ் வேறுபாடு மிக அதிகமாக இருக்கும். ஏனென்றால், இக் குடும்பங்களின் நுகர்வு முறைகள் வேறு வகையினவாயிருக்கும்.

ஒரு பணக்காரக் குடும்பம், சாதாரணமாகத் தனது வருமானத்தில் சிறிய வீதாசாரத்தையே உணவுக்காகச் செலவழிக்கிறது; எனவே, இதர விலைகளைவிட உணவு விலைகள் அதிகமாக உயர்ந்தால், அக் குடும்பத்தின் வாழ்க்கைத்தரச் செலவு, ஒரு சாதாரணப் பாட்டாளியின் குடும்பத்தைவிடக் குறைவாகவே உயர்கிறது. இதைப்போல உணவு விலையில் ஏற்படும் குறைவும், இக் குடும்பத்தின் செலவுகளை ரொம்பவும் பாதிப்பதில்லை. மேலும், இப் பணக்காரக் குடும்பம், ஏழைக் குடும்பத்தால் முடிவதைவிடச், சிறந்த உணவுப் பண்டங்களுக்கு அதிகமான விலை கொடுத்து வாங்கிக்கொள்ள இயலும்; எனவே, இதனுல் உணவுப் பண்டங்கட்குச் செலவழிக்கும் பணத்தில் மிகுதியான அல்லது குறைவான வீதாசாரம், குறைந்த பண்டங்களுக்குச் செலவழிப்பதைக்காட்டிலும் கிடைக்கும். மேலும், ஏழைக் குடும்பத்தின் வரவு செலவுப் பட்டியலில் இடமே பெருத இனங்களான குழந்தைகட்கான பள்ளிக்கூடச் சம்பளங்கள், வேலைக்காரருக்குக் கூலி, காருக்குப் பெட்ரோல் ஆகியவற்றிற்காகப் பணக்காரக் குடும்பம் கணிசமாகச் செலவழிக்கவேண்டியதிருக்கும்; இப் பொருள்களின் விலையில் ஏனையவற்றைவிட மிகுதியான ஏற்ற இறக்கம் ஏற்படக்கூடும்.

நாள் செல்லச்செல்ல நுகர்வு முறைகளில் வேறுபாடுகள் நிகழ்கின்றன. இன்றைய இங்கிலாந்துப் பாட்டாளி மகன், அவனது தந்தையார் பெற்றதைவிட அதிகமான 'உண்மை வருமானத்தைப்' பெறுகின்றான். 40 ஆண்டுகட்குமுன் சம்பாத்தியத்தில் பாதி சாப்பாட்டிற்கு ஆனது; ஆனால், இப்பொழுது $\frac{1}{3}$ பங்குமட்டுமே அவன் உணவுக்காகச் செலவிட்டாலும், மிகுதியான பால், இறைச்சி, கொழுப்புப் பொருள்கள் முதலியவற்றால் தன் குடும்பத்திற்கு நிறைய ஊட்டம் பெறுகின்றான். இதைப்போலச், சுவைகளும் மாறிவிட்டன. உதாரணமாக, இப்பொழுதெல்லாம் நாம் மதுவகைகளுக்காகக் குறைவாகச் செலவழிக்கிறோம்; ஆனால், சிகரெட்டுச் செலவு அதிகமாகிவிட்டது. பெண்கள், தொப்பிகள் வாங்கும் செலவைக் குறைத்துக்கொண்டு இதர அழகு சாதனப் பொருள்களை அதிகமாக வாங்குகிறார்கள். முன்பெல்லாம் செலவு மிகுந்த போகப் பொருள்களாகக் கருதப்பட்ட ரேடியோ, குளிர்பதனி என்பவற்றை இப்பொழுது உழைப்பாளர் வீடுகளிலும் காணமுடிகிறது. நைலான் துணிகள் முதலிய புதுப்புதுப் பண்டங்கள் சந்தைக்கு வந்திருக்கின்றன.

மக்களது நுகர்வுப் பழக்கங்களின் காரணமாகச் சந்தை வீதங்களிலேயே மிகுந்த மாறுதல் ஏற்பட்டிருக்கிறதென்றால், இரு குறிப்பிட்ட தேதிகளிடையே உள்ள வாழ்க்கைத்தரச் செலவு மாற்றங்களை அளப்பதற்குச் சரியான வழி ஏதும் கிடையாது. மிக முந்திய ஒரு தள நாளை அடிப்படையாகக் கொண்ட குறியீடு இப்பொழுது பொருத்தமாயிருக்காது. எனவே, இதை நீக்கிவிட்டுப் புதிய குறியீட்டைத் தொகுக்கவேண்டும். இப் புதிய குறியீட்டில், புதிய நுகர்வு இனங்களுக்குரிய தராதர மதிப்பெடைகளையெல்லாம் முறைப்படி அளித்துத் தொகுத்து நாளதுவரைக்கும் பொருத்தமுடையதாக்கிக் கொள்ளவேண்டும்.

மேலும், நுகர்வுப் பழக்கங்களிலேயே மாறுபாடுடைய இரு நாடுகளின் வாழ்க்கைத்தரச் செலவு மாற்றங்களை அளப்பதற்குச் சரியான வழி இல்லை. கிரேட் பிரிட்டனில், ஃபிரான்ஸைவிடத் தேயிலை விலை மலிவு; ஆனால், பிரிட்டனைவிட ஃபிரான்ஸில் ஒயின் விலை குறைவு. எனவே, ஆங்கிலத் தொழிலாளி அதிகமாகத் தேயிலை பருகுகின்றான்; ஃபிரெஞ்சுப் பாட்டாளி அதிகமாக ஒயின் குடிக்கிறான்.

பல நாடுகளிடையே வாழ்க்கைத்தரச் செலவுகளில் ஏற்படும் மாற்றங்களைப்பற்றி அறியவேண்டுமானால், பொருள்களின் தன்மையிலும் மக்களின் பழக்க முறையிலும் ஏற்படும் பண்புத் திறங்களைச் சீர்தூக்கி ஆராயவல்லார்க்கு அது எளிதாகும்; அல்லது ஒரே நாட்டில் பல்வேறு காலங்களில் ஏற்படும் மாறுதல்களை உணர

வல்லார்க்கும் எளிதாயிருக்கும். ஆனால், மக்களின் நுகர்வுப் பழக்கங்களிலேயே முற்றிலும் அடிப்படை மாறுதல்கள் இருந்தால் அப்பொழுது ஒப்புநோக்கி அளவிடுதல் இயலாதுபோய்விடும்.

இதுவரை நான் குறித்தனவெல்லாம் சில்லறை விலைகளில் ஏற்படும் மாறுதல்களை அல்லது வாழ்க்கைத்தரச் செலவுகளில் ஏற்படும் மாறுதல்களைக் குறியீட்டெண்களால் அளப்பதைப்பற்றியனவே யாகும். எந்த ஒரு பகுதிப் பொருள்களின் விலை அளவையும் அறிய வேண்டுமானால், இதைப்போலவே குறியீட்டெண்களை உண்டாக்கிக் கொண்டு அதைக் கண்டுபிடிக்க இயலும். உதாரணமாக, பல்வேறு பகுதியாகப் பிரித்துத் தொகுக்கப்பட்ட பண்டங்களின் மொத்த விற்பனை விலைகளில் ஏற்படும் சராசரி மதிப்பெடை மாற்றங்களைக் காட்டுவதற்குரிய குறியீட்டெண்கள் உள்ளன. அப் பல்வேறு பகுதிகளாக இங்கிலாந்தின் ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்கள், கூலி வீதங்கள், சம மதிப்புப் பங்குகளின் விலைகள் முதலியவற்றைச் சொல்லலாம். காலப்போக்கில் ஏற்படும் மாற்றங்களை அளந்தறியவும், இதே முறையில் குறியீட்டெண்களைக் கொள்ளலாம். இவற்றுள் எந்தெந்த இனங்களைச் சேர்த்துக்கொள்வது? தகுதியான தள நாளாக எதைத் தேர்ந்தெடுக்கலாம்? இப்பொழுதைய குறியீட்டெண் பொருத்தமானதாயிருக்காது என்று கருதும் அளவுக்குப் பொருள்களின் விலை அமைப்பில் மிகுந்த மாற்றங்கள் ஏற்பட்டுள்ளனவா? அப்படி இருந்தால் புதிய குறியீட்டெண்களை அவற்றிற்குப் பதிலாக அமைத்துக்கொள்வது பலன் தருமா? ஆகிய இவற்றையும் தெளியவேண்டும்.

## 3. பணத்தின் மதிப்பு மாறுதல்களால் உண்டாகும் விளைவுகள்

எல்லாப் பண்டங்களின் பொதுவான விலை அளவுகளில் ஏற்படும் மாறுதல்களைக் கதம்பக் கொத்துபோல் சேர்ந்துக் கணக்கிடும் போக்கைக் கைவிடுதல் வேண்டும் என முன்னர்க் குறித்திருந்தேன். ஆனாலும், சில குறிப்பிட்ட காலங்களில் எல்லாப் பண்டங்களின் விலையும் ஒரு சீராக உயரும். அப்பொழுது பணத்தின் மதிப்பிலும் பொதுவான ஒரு குறைவு ஏற்பட்டுவிட்டதாக நாம் எவ்வித ஐயப்பாடுமின்றிச் சொல்லலாம். இந்தக் காலங்கள் பெரும்பாலும் பணவீக்கக் காலங்களாகவே இருக்கும். விலைகள் உயர்வதற்குரிய உத்தேசத்துடன் பணத்தின் அளிப்பிலும் ஏற்படும் உயர்வே பணவீக்கம் என்று இவ்விடத்திற்குமட்டும் அதற்கு ஓர் இலக்கணம் வகுத்துக்கொள்ளுவோம். இந் நிலைகள் போர்க்காலத்தும் போர் முடிந்த அண்மைக் காலத்தும் சாதாரணமாக ஏற்படக்கூடும்.

கடந்த உலகப்போரும் இதற்கு விதிவிலக்கில்லே. பணத்தின் மதிப்பு எல்லா நாடுகளிலுமே குறைந்துவிட்டது; ஒருசில நாடுகளில் இந்த மதிப்பு வீழ்ச்சி மிகவும் கடுமையாக இருந்தது.

பணத்தின் மதிப்பு சரளமாக உயரக்கூடிய காலங்களும் உள்ளன. 1929 வசந்தகாலம் முதல் 1933 வரை ஏற்பட்ட பெரிய மந்த காலம் இதற்கு உதாரணமாகும். தங்கள் நாட்டுப் பணக் கணக்கில் பொருள்களின் விலே வீழ்ச்சியைக் குறைப்பதற்காகப் பல நாடுகள் அப்பொழுது பொன் திட்டத்தை (gold standard) விட்டு வெளியேறின. ஆனல், தங்கக் கணக்கு அளவில் பார்த்தாலும் பல பொருள்களின் விலேகள் $\frac{1}{3}$ பங்கிலிருந்து $\frac{1}{2}$ பங்கு வரை வீழ்ந்து விட்டன. சில குறிப்பிட்ட காலங்களில் ஏற்படும் விலேவீழ்ச்சிகள், வேண்டுமென்றே கட்டாயமாகச் செய்யப்படும் பண வடிப்புகளால் (deflation) அல்லது பணவீக்கக் குறைப்புகளால் (disinflation) உண்டாவன; அதாவது, மிக அதிகமாகச் சென்றுவிட்ட பண வீக்கத்தைத் திருப்புதற்காகப் பணத்துறை அதிகாரிகள் பணத்தின் அளிப்பைக் குறைப்பதால் ஏற்படுவன என்றும் சொல்லலாம்.

பணத்தின் மதிப்பில் பொதுவான ஒரு வீழ்ச்சி ஏற்படுவதால் உண்டாகும் விளேவுகள் யாவை?

தமது வருமானங்களேயும் சொத்துகளேயும் பணமாகவே கொண்டிருப்பவர்கள், பணத்தின் மதிப்புக் குலேவால் பாதிக்கப்படு வார்கள்; ஏனென்ருல், அவர்கள் பெறும் பணத்தின் வாங்கும் சக்தி குறைந்துவிடுகிறது. நிலேயான வருமானத்தைத் தரும் பத்திரங்களே வாங்கியிருப்போர், நீண்டகாலக் குத்தகைக்குத் தம் நிலங்கள், அல்லது வீடுகளேக் கொடுத்திருக்கும் நிலச்சுவான்தாரர்கள், முதுமைக் கால ஓய்வு உதவி, ஆண்டு உதவி, சமுதாயப் பாதுகாப்பு நலன்கள் முதலியன பெறுவோர் ஆகிய எல்லாவித வருவாய் பெறும் (rentier) வகுப்பினர்க்கும் இந்நிலேயே, பணத்தின் வாங்கும் சக்திக் குறைவே ஏற்படும். சேமிப்பு பாங்குகள், இதர வைப்புகள், ஆயுள் இன்சூரன்சுப் பத்திரங்கள், கொடுக்கவேண்டிய கடன்கள் முதலிய பண மதிப்புள்ள சொத்துகளின் அளவு அதே நிலேயில் இருந்தாலும் அவற்றிற்குரிய பணத்தின் வாங்கும் சக்தி குறைந்துவிடுகிறது.

பொருள்களின் விலே உயர்வுக்குத் தக்கபடி தமது வாழ்க்கைத் தரச் செலவுகளே இழுத்து இணேத்துச் செல்லும் வகையில் தமது கூலியிலும் உடனடியான போதிய உயர்வைப் பெறமுடியாவிட்டால், கூலி பெறுவோரும் தமது உண்மையான வருமானங்களின் வீழ்ச்சியால் பாதிக்கப்படுவார்கள். பண வீக்கம் ஏற்பட்டு வருகிறது என்று கூலி பெறுவோர் உணர்வதற்கு முன்னரே, விலேவாசிகளேவிட

அவர்களது கூலிகள் மிகமிகப் பின்தங்கி இருக்கும். மேலும், மரபுப்படி நீண்ட காலங்கட்கு நிலையாக நிர்ணயிக்கப்படுகின்ற சம்பளங்களை வாங்குவோர், இத்தகைய பணவீக்க காலங்களில் அதற்கு இணையாகச் சம்பளத்திலும் உயர்வு பெறுதல் என்பது மிகவும் சிரம மாக இருக்கும்.

பணவீக்கத்தால் தொழில் முனைவர்கள் தொடக்கத்தில் ஓரளவு இலாபம் பெறுகிறார்கள்; தமது உற்பத்திப் பொருள்களுக்கு அதிக விலை பெறுகிறார்கள். அவர்கள் தமது உற்பத்தி சாதனப் பொருள் களுக்கு இயைபாக அதிக விலை கொடுக்க நேர்ந்தாலும், இதர மாறாத செலவுகள் ஓரளவு நிலையாகவே இருந்துவிடுகின்றன. அவர்கள் கொடுக்கவேண்டிய கூலி விகிதங்கள் அவர்களது பொருள் விலை களின் உயர்வைவிட முதலில் கொஞ்சமே உயர்கின்றன.

கடன் வாங்கியுள்ள தொழில் முனைவர்கட்கு அதிகமான நலன் கிடைக்கும். விலை ஏறிக்கொண்டிருக்கும் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு இக்கடனை உபயோகிக்கிறார்கள். இவ் விலைகள் ஓராண்டில் இரு மடங்காக உயர்ந்துவிட்டதாகக் கொள்ளுவோம். இந்தத் தொழில் முனைவோன், தான் வாங்கிய கடனுக்கு 10 சதவீத வட்டி செலுத்தினாலுங்கூட, அவன் வாங்கிய ஒவ்வொரு 100 பவுன் கடனும், ஆண்டிறுதியில் 200 பவுன் மதிப்புள்ள பொருள்களை உற்பத்தி செய்ய உதவுகிறது. இவன் 110 பவுன்மட்டுமே திருப்பிக் கொடுப்பான். கடன் கொடுத்தவன் 110 பவுன்களை வாங்கிக் கொண் டாலும், இத் தொகை ஆண்டுத் தொடக்கத்தில் வாங்கிய பொருள் களைப்போல, 55 பவுன் மதிப்புள்ள பொருள்களையே இப்பொழுது வாங்க முடியும்.

ஆனால், தொழில் முனைவோன் அடையும் இலாபம் எல்லாம் நிகர இலாபம் ஆகிவிடாது. அவன் தனது உண்மையான மூல தனத்தைக் குலையாது பேணிவர விரும்பினால், தேய்மானச் செலவுகட் காகப் பெருந்தொகையைக் கட்டாயம் ஒதுக்கி வைக்கவேண்டும்; ஏனென்றால், விலைகள் ஏறுவதால், தனது உற்பத்தி நிலையம், இதர நிலையான சொத்துகள் ஆகியவற்றைச் சீர்செய்வதற்கும் புதுக்கு வதற்கும் இவன் நிறையச் செலவிட வேண்டியதிருக்கும். இதைப் போலவே, தன்னிடமுள்ள உற்பத்தி சாதனப் பொருள்களின் சேகரத்தைத் திரும்பவும் நிரப்புதற்காகும் அதிகச் செலவுகட்காக ஓரளவு இலாப இருப்பை ஒதுக்கிக்கொள்ள வேண்டியதிருக்கும். ஐக்கிய அரசின் தேசிய வருமானத்தின் அதிகாரபூர்வமான மதிப்பீடு மொத்த இலாபங்களாகிய 650 மில்லியன் பவுன்கள், 750 மில்லியன் பவுன்கள் என்பன, முறையே 1950, 1951 ஆகிய ஆண்டுகளுக்கான 'பொருட் சேகர ஆய்வை'க் (stock appreciation) குறிக்கும் அளவாக

அமைந்தன. மேற்குறித்த ஆண்டுகள் விலை உயர்வுக் காலங்களாகும்.

அரசாங்க நிதித்துறையில், பணவீக்க விளைவுகள் தொடக்க நிலையில் சாதகமான விளைவுகளையே நல்கும். வரிகள் பொருள்களின் அளவுக்குத் தக்கபடி விதிக்கப்படாமல், பொருள்களின் விலைகளுக்குத்தக்கபடி விதிக்கப்பட்டால், பண்டங்களுக்கான வரி வருமானத்தில் உயர்வு இருக்கும். வருமானங்கள், இலாபங்கள் இவற்றின் மீதான வரி வருவாய்கள் ஓரளவு கால இடைவெளிக்குப் பின்னர் உயர்ந்துவிடும். தேசியக் கடன்களுக்கு உரிய வட்டிகள், முதுமைக்கால ஓய்வு உதவிகள், (தொடக்கத்தில் சில நாட்களுக்கு) அரசாங்க அலுவலர் சம்பளங்கள் ஆகிய பணத்தால் கொடுக்கப் பெறும் செலவினங்கள் ஒரே நிலையிலேயே இருக்கும்.

இனி உற்பத்தியில் ஏற்படும் விளைவுகளைக் காண்போம். விலை உயர்வுகளால் முதலில் சாதகமே ஏற்படும். அதிக இலாபம் பெறும் வாய்ப்புகள் மிகுதியாக இருக்கும். எனவே, தொழிற்சாலைகள் முழு மூச்சுடன் உற்பத்தியில் ஈடுபட முனையும். இடப்பெயர்ச்சிக்கு இடையூறு நேர்ந்தாலொழிய, வேலையற்று இருப்போரெல்லாம் வேலைக்கு அமர்த்தப்படுவர் ; இதர பயன்படுத்தப் பெறாத உற்பத்திச் சாதனங்களெல்லாம் ஒருசேரத் திரட்டப்பெறும்.

முழு வேலையுடைமையை எட்டிவிட்டால், அதற்கப்புறம் விலை உயர்வுகளால் மொத்த உற்பத்தியில் எத்தகைய உயர்வையும் உண்டாக்கிவிட முடியாது. முதலீடுகளை வேண்டுமானால் அதிகப் படுத்த முடியும். மாறாத வருவாய் உள்ளவர்கள் எல்லோரும் விலை உயர்வால் குறைவாகவே பொருள்களை வாங்க நேரும் ; இது நுகர்வுப் பொருள்களை ஆக்கும் தொழிலகங்களைவிட்டு, முதலீட்டுத் தொழிலகங்கட்குப் பெயர்ந்து செல்லுமாறு தொழிலாளரையும், இதர உற்பத்திச் சாதனங்களையும் ஊக்குவிக்கும். தொழில் முனைவோர் தமது உற்பத்தித் திறத்தை உயர்த்த முனைவார்கள்; இது மிகுதியான முதலீட்டிற்கு வழிசெய்யும்.

விலைகள் உயர்வது நின்றுபோனால்தான் இடர்ப்பாடு ஏற்படும். சில புது முயற்சித் தொழில்களை மூடவேண்டியதிருக்கும் ; முதலில் உற்பத்திச் செலவைவிட, உற்பத்திப் பொருள்களின் விலை அதிகமாக உயர்ந்து சென்றதால், அவற்றால் மிகுந்த இலாபம் அளிக்க முடிந்தது ; விலை குறைந்துபோனால், அவற்றால் இலாபம் தரும் வகையில் செயலாற்றமுடியாது. முதற்கருவிப் பொருள்களைச் செய்வதற்காக (capital goods) நிறுவப்பட்ட உற்பத்தி நிலையங்கள் முதலிய புதுச் சொத்துகள் இப்பொழுது வியர்த்தமாகிவிடும் ;

ஏனென்றால், சமுதாயத்தால் தாங்கமுடியாத மிகுதியான முதலீட்டுத் தொகைகளால் இவற்றைப் பராமரிக்க வேண்டிய நிலையில் இவை அமைக்கப்பட்டுள்ளன. மேலும், சில தொழில் முனைவர்கள் காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டுமென்ற பேராசைக்கு உட்பட்டுத் தமது நிலையான மூலதனங்களைச் சரியாகப் பராமரித்திருக்க மாட்டார்கள் ; அவற்றின் செயல்திறம் குன்றிப்போக விட்டிருப்பார்கள்.

விலைகள் உயராமல் அப்படியே இருந்துவிடவேண்டுமா ? விலைகள் வெகுதுரிதமாக உயர்ந்தால், எல்லாவற்றையும் துடைத்துச் செல்லும் அளவு பணவீக்கம் ஏற்பட்டுவிடுகிறது ; எனவே, இப் பணவீக்க உயர்வை நிறுத்தவேண்டும். ஒரு மணிக்கு ஒரு மணி பொருள்களின் விலை இரு மடங்காக, மூன்று மடங்காகப் பெருகிக் கொண்டிருந்தால், பொருளாதார நடவடிக்கைகளை எவ்வாறுதான் துரிதமாக மேற்கொள்ள முடியும் ? இவ்விதம் தூரிதப் பணவீக்கம் ஏற்படுவதுபற்றிய அனுபவம் இதுவரை பிரிட்டனில் நமக்கு ஏற்படவில்லை ; ஆனால், இதர நாடுகளில் ஏற்பட்டுள்ளன. இதற்குச் சிறந்த, எல்லோரும் அறிந்த உதாரணமாக, ஜெர்மனியில் ஏற்பட்ட பணவீக்கத்தைக் குறிப்பிடலாம். இது உச்சகட்டத்தை அடைந்து, 1923-ல் 'குலைந்தேவிட்டது. வெறிபிடித்ததுபோலப் பணவீக்கம் ஏற்பட்டதற்கு உதாரணமாக, 1944-ல் ஹங்கேரியில் ஜெட்விமான வேகத்தில் ஏற்பட்ட பணவீக்கத்தைக் கூறலாம். இந் நாட்டில் பணவீக்கம் நின்றவுடன், ஃப்ளோரின் (florin) எனப்படும் புதிய செலாவணி அலகு, பழைய பெங்கோ (pengo) நாணயத்தின் 40,000 குவாடிரில்லியன்களுக்குச் சமமாக இருந்தது ; இத் தொகை 29 நாட்டுக்களால் ஆனது. எனவே, தாங்கமுடியாத அளவில் ஏற்படும் பணவீக்கம் நிறுத்தப்படவேண்டும். இத்தகைய பணவீக்க காலத்தில், மக்கள் பணத்தை மதிப்பீட்டின் அளவாக ஏற்க மறுக்கிறார்கள். எனவே, நிலையான புதுச் செலாவணியைக்கொண்டு திரும்பவும் பொருளாதார வாழ்வை நிர்ணயம் செய்யாதவரைக்கும் குழப்பமே மிகும்.

ஆனால், பணத்தின் மதிப்பில், மிதமான தொடர்ந்த வீழ்ச்சி ஏற்படுவதற்கு ஏதேனும் வழி இல்லையா ? இங்ஙனம் செய்வது சிறந்த கொள்கையாக இருக்கும் என்பதைப் பல பொருளாதாரவாதிகள் நெஞ்சார நம்புகிறார்களா என்று நான் சந்தேகிக்கிறேன். இங்ஙனம் மிதமான விலை இறக்கத்தை உண்டாக்குவதால், நிலையான கட்டணங்களின் சுமை குறையும். வாணிபமோ, தொழிலோ மேற்கொள்ளுதற்குத் தொடர்ந்த தூண்டுதலும் ஊட்டமும் ஏற்படும் ; முழு வேலையுடைமை எப்போதும் இருக்கும்.

இத்தகைய மிதமான, தொடர்ந்த பணவீக்கம் ஏற்படுவது சாத்தியமாயிருக்குமா என்று நான் சந்தேகப்படுகிறேன். அரசாங்கம் படிப்படியாகப் பொருள்களின் விலை உயர்வதை அப்படியே ஏற்றுக் கொள்ளுவதைக் கொள்கையாகப் பின்பற்றுகிறது என்பதை அறிந்தால், பொருள்களின் விலை கட்டாயம் ஏறும் என்பதை எதிர்பார்ப்பார்கள்; அரசாங்கம் திட்டமிட்டபடி பொருள் விலை உயர்வைப் படிப்படியாகக் கொணர்தற்குப் பதிலாக, உடனேயே செயற்கைப் பணவீக்கத்தை ஏற்படுத்தத் துடிப்பார்கள்.

என்றாலும், திட்டமிட்டபடி பணவீக்கம் ஏற்படுகிறது என வைத்துக்கொள்ளுவோம். இது அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் பற்றாக்குறை ஏற்பட வழிவகுக்கும்; ஆனால், இங்ஙனம் ஏற்படும் என்பதைக்கூட நாம் புறக்கணித்துவிடலாம். எனவே, (உதாரணத்திற்கு) இதர நாடுகளும் இதே விகிதத்தில் பணவீக்கத்தை ஏற்படுத்துகின்றன என வைத்துக்கொள்ளுவோம்.

இதன் விளைவால் முழுவேலையுடைமையைப் பேணிக்கொள்ள முடியுமா? தொழிற்சங்கங்கள் குறைவான உண்மைக் கூலிகளைப் பெற்றுக்கொள்ளும் என்ற நம்பிக்கையில் இக் கருத்து அமைந்துள்ளது. அதாவது, அவற்றின் பணக்கூலிகள் குறைக்கப்படாதிருந்தால், தொழில்முனைவோருக்கும் அதிகமான இலாபங்களைக் கொடுத்துத் தாமும் உண்மைக் கூலியைப் பெற்றுக்கொள்ளத் தொழிற்சங்கங்கள் இசையும் என்ற நம்பிக்கையிலேயே இக் கருத்துச் சார்ந்துள்ளது. கீன்சு (Keynes) என்பார் இந்த நம்பிக்கையை ஏற்கவே முனைந்தார். ஆனால், அண்மையில் ஏற்பட்ட அனுபவங்கள் எல்லாம் முற்றிலும் இதற்கு மாறாகவே இருக்கின்றன. பணவீக்கம் ஏற்படப்போகிறது என்பதைத் தொழிற்சங்கத்தினர் உணர முற்பட்டுவிட்டால், அப்புறம் அவர்களை ஏமாற்றிவிடமுடியாது. அதற்கு மாறாக, அவர்கள் கூலி உயர்வு வேண்டுமென்று கோரக்கூடும்; இதனால் உண்மைக் கூலிகள் நிலையாக இருக்கக்கூடுமாயினும், நாளடைவில் அவையும் உயரவே முற்படும். கூலிகளை உயர்த்தாமல் இலாபங்களைமட்டும் உயர்த்திவிட்ட மிதமான பணவீக்கத்திற்குப் பதிலாக, இலாபங்களைச் சாதாரண அளவில் வைத்துக்கொள்ளுவதற்காகப் பணவீக்கத்தைத் துரிதப்படுத்த வேண்டியிருக்கும். இலாபங்களின் சாதாரண அளவை ஏற்படுத்துவதற்கு, உயர்ந்த விலைகளின் வடிவத்தில் கூலி உயர்வுகளைக் கொடுத்தல் வேண்டும்.

வாடகை போன்ற வருவாய் கொடுப்போனை எடுத்துக்கொண்டால், கடந்த காலத்தில் இவன் போதுமான அளவு கறக்கப்பெற்றுவிட்டான். இப்பொழுது அவனும் புரட்சிசெய்யத் துவங்கிவிட்டான்; மேலும், பணத்தைச் சேமிக்குமாறு மக்களை எவ்வாறு தூண்டுவது

என்பதே இன்று உள்ள பிரச்சினை. தொடர்ந்த பணவீக்கம், மக்களது சேமிப்பு உணர்ச்சியைப் பாதிக்கும். பணத்தின் மதிப்பில் ஏற்பட்ட வீழ்ச்சியை ஈடுசெய்யும் வகையில் வட்டி வீதங்கள் உயர்ந்திருந்தாலொழிய, நிலைத்த வட்டி வீதங்களில் பணம் கடன் கொடுப்பதன்மூலம் ஓரளவு சேமிப்பைக் கொள்ள மக்கள் முன்வருவதில்லை.

எனவே, என்னுடைய கருத்து என்னவென்றால், பணவீக்கத்தால் ஏற்படும் இலாபங்கள் நொடியில் கரைந்துவிடும்; பணவீக்கத்தால் ஏற்படுவதாகக் கருதப்படும் நன்மைகள், தொடக்க காலங்களைத் தவிர, எஞ்சிய காலங்களில் மாயையாகவே போய்விடுகின்றன.

இன்னோர் உண்மையையும் நினைவிற்கொள்ளவேண்டும். கடந்த பெரிய மந்தகாலத்தில் ஏற்பட்டதைப்போலப் பொருள் விலைகள் மிகுதியும் குறைந்தால், கடுமையான வேலையின்மையும் கையாலாகாத் தன்மையும் மலிந்துவிடும்.

பணவருவாய்களை ஸ்திரமாக்கும் கொள்கைபற்றிச் சில சொல்ல வேண்டும். தொழில் நுணுக்கத்துறை அபிவிருத்தி காரணமாக, உற்பத்தித்திறம் தொடர்ந்து உயரும் என்று நாம் கருதினால், இக் கொள்கை தொடர்ந்த மிதமான பணவடிப்பை உண்டாக்கும். பொருளாதார அபிவிருத்தியால் விளைந்த பலன்கள், வாழ்க்கைத்தரச் செலவுகளில் ஏற்படும் மிதமான இறக்கத்தால் எல்லாராலும் பகிர்ந்து கொள்ளப்பெறும். வேலை இன்மை என்பது உண்டாக்கப்படமாட்டாது. ஏனென்றால், உழைப்பின் இறுதிநிலை ஆக்கத்தில் ஏற்படும் உயர்வு, தமது விலைகளில் ஏற்படும் இறக்கத்திற்கு எதிரிடையாக அமையக்கூடும். ஆனால், இத்தகைய கொள்கை, நவயுக உலகத்தில் நடைமுறைக்கொவ்வாதது என்று நான் அஞ்சுகின்றேன்; ஏனென்றால், இவ்வுலகத்தில் எல்லாப் பகுதி மக்களும், காலம் செல்லச் செல்லத் தமது பணவருவாய்களிலும் உயர்வு ஏற்படுமென்று எதிர்பார்க்கிறார்கள்; கேட்கிறார்கள்.

பணத்தின் மதிப்பின் உயர்வால் செல்வப் பகிர்வுத்துறையில் ஏற்படும் விளைவுகள், பணத்தின் மதிப்புத் தாழ்வால் ஏற்படக்கூடிய விளைவுகட்கு நேர்மாறானவையாகும். தமது சொந்த வேலைகளைச் செய்வோர் உள்ளிட்ட, மாறாத பணவருவாய் உடையோரெல்லாம் இதனால் பலன் அடைகின்றார்கள். பிரிட்டிசுத் தொழிலாளர்கள் அத்தனை பேருக்கும் ஆன மொத்த உண்மை வருமானங்கள், பெரிய மந்த காலத்தில், இதற்கு முந்திய காலங்களையெல்லாம்விட மிகவும் அதிகமாக இருந்தன. விலைகளில் ஏற்படும் இறக்கத்திற்கு எதிராகப் போதுமான அளவு உழைப்பின் ஆக்கத்திறம் உயரா

விட்டால் இலாபங்கள் குறைய நேரும். அரசாங்கங்கள் பற்றுக் குறைக்கு ஆளாகின்றன; அவற்றின் செலவினங்கள் மாறுவகையில் அமைந்துவிட்டால், அவற்றிற்கு மேலாக அரசாங்க வரி வருமானங்கள் குறைவதால் இடர்ப்பாடுகள் நேருகின்றன.

எனவே, பணத்தின் மதிப்பை ஒரு நிலையாக வைத்திருப்பதே சிறந்த கொள்கை என்று இதிலிருந்து நீங்கள் முடிவு செய்யக்கூடும். இது, எல்லாச் சேமிப்புகள், இதர மாறு வருமானங்கள் ஆகியவற்றின் வாங்கும் சக்தியைப் பாதுகாக்கும்; இதனால், சேமிக்கவும் கடன் கொடுக்கவும் மக்களுக்கு உற்சாகம் அளிக்கும்.

ஆனால், வேலையுடைமையை அதிகரிப்பதற்காகப் பணத் துறையிலும் விரிவேற்படுத்தவேண்டிய அவசியத் தேவை சில சமயங்களில் நேரிடலாம்; இத்தகைய விரிவுகளின் துணை விளைவாக ஏற்படும் பொருள்களின் விலை உயர்வைத் தடுப்பதும் சிரமமாகப்போய் விடலாம். மேலும், பொருளாதாரச் செழிப்பு வரம்பிகந்து போவதற்கு முன்னால், அதைத் தடுப்பதற்காகப் பணவடிப்புச் செய்ய வேண்டிய தேவை சில சமயங்களில் ஏற்படலாம். இறுதியாக, செலாவணியின் நாணயமாற்று மதிப்புகளைத் தங்க அளவிலோ அல்லது அமெரிக்க டாலர் அளவிலோ நிலையாக வைத்திருக்க வேண்டுமென்று விரும்பினால், இதற்காக அவ்வப்பொழுது ஓரளவு பணவீக்க, அல்லது பணவடிப்பு முறைகளை மேற்கொள்ளவேண்டிய தேவை ஏற்படக்கூடும்.

## 4. பணக்கணியக் கோட்பாடு

(The Quantity Theory of Money)

விலை அளவுகளில் மிகுதியான உயர்வு எப்பொழுதெல்லாம் எங்கெல்லாம் ஏற்பட்டதோ அப்பொழுதெல்லாம் அது பண அளிப்பின் உயர்வோடும் தொடர்புபடுத்தப்பெறுகிறது. ஆனால், பொதுமக்களது அபிப்பிராயம் இந்தத் தொடர்பை உணரமுடியாது, விலைகளில் உயர்வு ஏற்பட்டால், அதை 'இலாபமடிக்கும் நோக்கம்' முதலிய இதர காரணங்களோடு இணைத்துவிடுகிறது. நமக்குப் பழக்கமான பொது விதி ஒன்று உள்ளது. அதாவது, எந்த ஒரு பொருளின் அளிப்பு மிகுதியிலும் ஏற்படும் மிகை அதற்குரிய மதிப்பைக் குறைக்க முற்படுகிறது; அதன் அளிப்புக் குறைவு அதற்குரிய மதிப்பை உயர்த்த முற்படுகிறது. இந்தப் பொது விதிக்குப் பணமும் விலக்கல்ல என்று காட்டுவதன்மூலமாகப் பணக்கணியக் கோட்பாடு பயனுள்ள தொண்டு புரிந்திருக்கிறது.

இப் பணக்கணியக் கோட்பாட்டின் சிறந்த விளக்கத்தைப் பேராசிரியர் இர்விங் ஃபிஷர் பின்வரும் சரியீட்டின் (equation)மூலமாகத் தெளிவாக்குகிருர்:

$$MV = PT$$

இச் சரியீட்டினுல் $M$ என்பது பணக் கணியத்தையும் (quantity of money), $V$ என்பது அதன் புழக்கவேகத்தையும் (velocity of circulation), $P$ என்பது விலை அளவையும் (price level), $T$ என்பது பணத்திற்கு நிகர் மாற்ருகப் பெறப்படும் பண்டங்களின் அளவையும் குறிக்கின்றன.

பணத்தின் புழக்க வேகம் என்பது, ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவில், உதாரணமாக, ஓர் ஆண்டில் பணத்தின் ஒரு குறிப்பிட்ட அலகு சராசரியாக எத்தனை தடவைகளில் செலவிடப்பெற்றது எனக் குறிப்பதாகும். ஓர் ஆண்டில் ஒரு பவுன் நோட்டு ஒன்று, பத்துத் தடவை கைமாறி, ஒவ்வொரு தடவையும் ஒரு பவுன் மதிப்புள்ள பொருள்களை வாங்கியது என்ருல், அந்த ஆண்டில் ஒரே தடவை கைமாறிய 10 பவுன் நோட்டிற்கு இந்த ஒரு பவுன் நோட்டு சமமாகும். பாங்குகளில் உள்ள மொத்த வைப்புகளைவிட, அவற்றின் மீது செக்குகள்மூலமாக வெட்டப்பெறும் மொத்தத் தொகைகளின் அளவு பல மடங்கு பெரிதாக இருக்கும். எனவே, பணத்தின் செலவுத் திறத்தைக் கண்டுபிடிக்கவேண்டுமாஞல், பணத்தின் கணியத்தை அதன் புழக்க வேகத்தால் பெருக்கிப் பார்க்கவேண்டும்.

பேராசிரியர் ஃபிஷரின் சரியீடு ஒருவகை 'மாற்றுச் சரியீடு' (equation exchange) ஆகும். பணத்தின் ஒழுக்கு (flow) பண்டங்களின் ஒழுக்கிற்கு எதிராக மாற்றிக்கொள்ளுகிறது; எனவே, செலவழிக்கப்படும் பணம் வாங்கப்பெறும் பண்டங்களின் மதிப்பிற்குச் சமமாக இருத்தல்வேண்டும்.

உதாரணமாக, 1ஷி. 6பெ. தொகை, 4பெ. விலையில் 3 ரொட்டித் துண்டுகளையும், 6பெ. விலையில் ஒரு படி பாலையும் மாற்றிக்கொள்ளுகிறது என வைத்துக்கொள்ளுவோம். இந்த 3 ரொட்டித் துண்டுகள், ஒரு படி பால் ஆகிய இவற்றின் விலை 1 ஷி. 6 பெ. சில நாட்களுக்குப் பின் இப் பொருள்களை 3ஷி. கொடுத்தே மாற்றிக்கொள்ள முடியுமென்ருல், இவற்றின் விலை இரட்டிப்பாகிவிட்டதென்பது பொருள். ரொட்டி, பால் ஆகிய ஒவ்வொன்றின் விலையும் இரட்டிப்பாகி இருக்கலாம். (ரொட்டித் துண்டு 8பெ, படி பால் 1ஷி.) அல்லது, ஒரு பண்டத்தின் விலைமட்டும் இரட்டிப்பாகவும், இன்ஞென்று அதற்குச் சற்று மிதமாகவும் உயர்ந்திருக்கலாம் (ரொட்டி 50 சதவீதம் உயர்ந்து, 6 பெ.-க்கு விற்கப்பெறலாம்; பால் 200 சதவீதம் உயர்ந்து

1ஷி. 6பெ.-க்கு விற்கப்படலாம்). இதில் தெளிவாகத் தெரிவது என்னவென்றால், இப் பண்டத் தொகுதிகளின் மொத்த விலை அளவு சரியாக இரு மடங்கு உயர்ந்துவிட்டது; ஏனென்றால், இவை முன்னை விட இப்பொழுது இரு மடங்கு விலையில் விற்கின்றன; அல்லது, 9 பென்னியைக்கொண்டு இப் பண்டத் தொகுதியைப்போல இரு மடங்கும் வாங்க இயன்றிருக்கலாம் (1ஷி. 6 பென்னிக்கு 6 ரொட்டித் துண்டுகளையும், 2 படி பாலையும் வாங்கும் அளவிற்கு விலை குறைந்திருக்கலாம்). இந் நிலையில், இப் பண்டத் தொகுதிகளின் விலை அளவு பாதியாகிவிட்டது என்று கூறலாம்.

இவ்விரு பண்டங்களாகிய ரொட்டி, பால் என்பனவற்றைப் போலவே, சில்லறையாக விற்பனையாகும் எல்லாப் பண்டங்களையும் ஒரு புறத்திலும், இவற்றிற்காகச் செலவிடப்பெற்ற பணத்தின் அளவை மற்றொரு புறத்திலும்கொண்டு கணக்கிட்டாலும் இதே விடைதான் கிடைக்கும் என்பதை இக் கோட்பாடு தெளிவாக்குகிறது.

இதிலிருந்து பெறப்படும் முடிவு என்னவென்றால், வாராவாரம் அல்லது ஆண்டுதோறும் மொத்தப் பணச் செலவுகளில் ஏற்படும் மாற்றம் ($MV$ விலை அளவுகளில் அதே சதவீத மாற்றத்தையே $T$ என்பது ஒரே அளவில் இருந்தால்) உண்டாக்கும். அதைப் போல, வாராவாரம் அல்லது ஆண்டுதோறும் விற்கப்பட்ட பண்டங்களின் அளவில் ஏற்படும் மாற்றம் ($T$) இதற்கு இணையான (ஆனால், முற்றிலும் மாறான) மாற்றத்தை விலை அளவுகளில் (ஏனைய $MV$ என்பன ஒரே அளவில் இருந்தால்) உண்டாக்கும். பணத்தின் மிகை ஒழுக்கு விலைகளை உயர்த்தவும், பண்டங்களின் மிகை ஒழுக்கு விலைகளைக் குறைக்கவும் முற்படும்.

இது எவ்வளவு தூரத்திற்கு வெற்றிகரமாக இயங்குகிறதோ அவ்வளவிற்கு நலன் தரும். ஆனால், இது அவ்வளவு அதிக தூரத்திற்குச் செல்வதில்லையே !

இதன் முதற் குறை வருமாறு : நாம் மொத்தப் பணச் செலவை மட்டும் எடுத்துக்கொண்டால், விலை அளவு என்பது பணத்தைக் கொடுத்து வாங்கப்பெறும் எல்லாவற்றையும் சார்ந்திருக்கின்ற ஒரு கதம்ப மூட்டையாக இருக்கும். கிரேட் பிரிட்டன்போன்ற நாட்டில் (மதிப்பில்) பெரும்பகுதியான எல்லாப் பணப் பரிவர்த்தனைகளும், ஈடுகளை வாங்கி விற்கவும், இதர சொத்துகளை வாங்கி விற்கவுமே செய்யப்படுகின்றன.

இவ்விதமான கதம்பக் கூட்டு விலை அளவு என்பது பயனுள்ள கருத்தாகாது என்பதை இந்த அதிகாரத்தின் தொடக்கத்திலேயே

நான் விவாதித்திருக்கிறேன். சில்லறை விலைகளைமட்டும் மேற்கொண்டாலுங்கூட, இயக்கத்தில் உள்ள மொத்தப் பண அளவுகட்கும் சில்லறை விலைகளில் உய்க்கப்பெறும் பணச் செலவு ஒழுக்குக்கும் இடையே ஏற்படும் தொடர்பு சம்பந்தமற்றதாகவே இருக்கும். சில்லறை விலைகளில் ஆன பணச் செலவு குறையும் பொழுது மொத்தப் பண அளவு உயர்வதற்கும் வாய்ப்பு இருக்கிறது; பணச் செலவு கூடினால், இதற்கு மாறாக ஏற்படும் வாய்ப்பும் உள்ளது. இவ்விரண்டுமே சேர்ந்தாற்போலக் கூடினாலும் குறைந்தாலும், ஒன்று உயர்ந்த வீதாசாரத்திலும் இன்னொன்று குறைந்த வீதாசாரத்திலும் கூடிக் குறைய நேரும்.

இதன் இரண்டாவது குறை வருமாறு: இதர பொருட்கள் எப்போதும் ஒரே நிலையில் இருப்பதில்லை என்பதுதான். $M$-ல் ஏற்படும் மாற்றம் $T$ ஐப் பாதிக்கலாம். உதாரணமாக, வேலை இன்மைக் காலத்தில் பணத்தின் அளவில் ஏற்படும் உயர்வு அதிகமான வேலையுடைமையையும், அதன்மூலம் மிகுதியான உற்பத்தியையும் அளிக்கலாம். இதனால் $P$ என்பதன் விலை அளவுகளில் அதிக உயர்வோ, உயர்வின்மையோ ஏற்பட்டாலுங்கூட, $T$ என்பதில் உயர்வைத் தரும்.

$T$-ல் ஏற்படும் மாற்றம் $MV$ஐப் பாதிக்கலாம். உதாரணமாக, உற்பத்தியில் ஏற்படும் பொதுவான உயர்வு விலைகளில் பொதுவான குறைவை ஏற்படுத்தாமலிருக்கலாம். முறைப்படி பொருளாதார வளமுடைய காலத்தில் உற்பத்தி, விலைகள் ஆகிய இரண்டுமே உயரும் போக்குடையன. $T$-ல் ஏற்படும் உயர்வு, $V$-ல் உயர்வேற்படச் செய்கிறது; $M$–லும் உயர்வேற்பட வாய்ப்புண்டு. இவ்விதம் $MV$ ஆகியவற்றில் ஏற்படும் உயர்வால், $P$–ன் விலை அளவு உயர்கிறது. $T$–ன் அளவில் உயர்வு ஏற்பட்டாலுங்கூட, விலை அளவு குறைவதற்குப் பதிலாக உயர்வதே மிகுதி.

$M$-ல் ஏற்படும் மாற்றம் $V$ஐப் பாதிக்கக்கூடும். நாம் முன்னர்க் கண்டதைப்போல, பணவீக்க காலத்தில் பணம் தன் மதிப்பில் தேய்வதால், மக்கள் பணத்தைச் செலவழித்துவிடவே விரும்புகிறார்கள். இதனால், அதன் புழக்க வேகம் உயர்கிறது. அவர்கள், விலைகள் இன்னும் உயர்ந்துகொண்டே போகும் என எதிர்பார்ப்பதால் தமக்குத் தேவைப்படும் பொருள்களை விரைவில் வாங்க முற்படுகிறார்கள். இதனால் விலைகள் இன்னும் துரிதமாக உயர்கின்றன. இதை 1914–18 போருக்குப் பின்னர் ஏற்பட்ட ஜெர்மன் பணவீக்கம் நன்கு விளக்கியுள்ளது. ஜெர்மன் நோட்டுகளின் அளவு 1920 டிசம்பரில் 81 மில்லியன் தாள் அளவுகளாக இருந்ததிலிருந்து,

1923 ஆகஸ்டில் 1,16,000 மில்லியன் தாள் அளவுகளாகக் கூடி விட்டது. ஆனால், பணத்தின் கணியத்தில் ஏற்பட்ட உயர்வைவிட விலைகள் 40 மடங்குகள் உயர்ந்துவிட்டன. தங்க அளவுகளில் வெளி யிடப்பெற்ற நோட்டுகளின் மதிப்பு, முன்பிருந்த 4,800 மில்லியனி லிருந்து 116 மில்லியனுக்கு வீழ்ந்துவிட்டது.

எனவே, இதர பொருள்களெல்லாம் ஒரே நிலையில் இருக்குமென அனுமானிப்பது சரியன்று. $M$-ல் ஏற்படும் மாற்றம், $V$ அல்லது $T$-லும் தனித்தனியாக மாற்றத்தை உண்டாக்கலாம் அல்லது இரண்டிலும் சேர்ந்தாற்போலும் மாற்றத்தை விளைவிக்கலாம். மேற் குறித்த மாற்றுச் சரியீட்டில் கையாளப்பெறும் 4 இனங்கள் ஏதாவ தொன்றில் ஏற்படும் மாற்றம், ஏனைய மூன்றிலும் மொத்தமாகவோ தனித்தனியாகவோ கட்டாயம் மாற்றங்களை உண்டாக்கும்.

பணக் கணியக் கோட்பாட்டின் மூன்றும் குறைபாடு வருமாறு: பணத்தின் மதிப்பில் மாற்றங்கள் ஏற்படுதற்குரிய உண்மைக் காரணங்கள், நமது பார்வை விளிம்பிற்கு அப்பாலும் அமைந்திருக் கக்கூடும் என்பதே. உதாரணமாக, விலை அளவில் உயர்வு ஏற்படுதற்கு உரிய உண்மைக் காரணமாக அந் நாட்டு மக்கள் தொகைப் பெருக்கம் அமைந்திருக்கலாம். நிலமும், இதர சாதனங் களும் வரையறைக்குள் அமைந்துள்ள ஒரு நாட்டில் மக்கள்தொகைப் பெருக்கத்தால் தலா ஒவ்வொருவருக்கும் உள்ள உற்பத்தி அளவு குறையக்கூடும்; அல்லது உற்பத்தியைப் பெருக்காமலேயே பணக் கூலிகளில் உயர்வை ஏற்படுத்தலாம்; அல்லது போர்க் காரணமாகத் தொடர்ந்த பற்றுக்குறை வரவுசெலவுத் திட்டத் துண்டுவிழுதல் களுக்கு வழி செய்யலாம். விலை அளவில் ஏற்படும் மாற்றம் $M$ அல்லது $V$ அல்லது $T$ என்பனவற்றின் மாற்றத்தோடும் சேர்ந்து வரவேண்டும் என்பது அனேகமாக எப்போதும் சாத்தியமானது தான்; ஆனால், என்ன நடந்தது என்பதை அறிந்தும், காரணத் தொடர்பைப் பின்பற்றவும் வேண்டுமென்றால், $M$ அல்லது $V$ அல்லது $T$ மாறியதற்குரிய காரணங்களை நாம் அவசியம் தெரிந்து கொள்ளவேண்டும்.

எனவே, நமது முடிவு என்னவென்றால், இந்தப் பணக் கணியக் கோட்பாடு அவ்வளவு பயனுடையதல்ல என்பதுவே. ஆனால், இன்னொருவகையில் இது உதவுகிறது. குறிப்பிடத்தகுந்த பண வீக்கம் ஏற்படுகையில், பணத்தின் கணியத்தில் ஏற்படும் மிகுதிக்கும், அதன் மதிப்பில் ஏற்படும் வீழ்ச்சிக்கும் இடையே காரண காரியத் தொடர்பு இருக்கிறதைக் காட்டுகிறது. மேலும், பணவீக்கத்தை நிறுத்தவேண்டுமானால், பணத்தின் கணியத்தை (அளவை)

உயர்த்துவதை முதலில் நிறுத்தவேண்டுமென்ற பின் விளைவைச் (corollary) சுட்டிக் காட்டுகிறது. ஆனால், நடைமுறையில் இதைச் செய்வது கடினம்; சொல்லுவது மிகமிக எளிது.

## 5. பணத்திற்கு ஏற்படும் தேவை

சீனப் போர் அரசர் (Chinese War Lord) ஒருவர், இப் பணக் கணியக் கோட்பாட்டைப் பொய்ப்பித்துவிட்டார் என்பதற்குக் கதை ஒன்று உள்ளது. தன்னுடைய படைவீரர்கட்கும் இதரர்கட்கும் சம்பளம் அளிப்பதற்காகத் தான் வெளியிட்ட காகிதப் பணத்தின் (paper money) அளவை உயர்த்தவேண்டுமென விரும்பினார். தான் இம் மாதிரி உயர்த்தினால் என்ன விளையும் என்பதைத் தனது நாட்டு பாங்காளிகளிடம் (bankers) கேட்டார். அதிகப்படியான பணம் வந்தாலும் அதே அளவு பண்டங்களையே வாங்க முடியும்; ஆகையால், பண்டங்களின் விலைதான் உயருமென அவர்கள் சொன்னார்கள். இதற்குப் போரரசன் சொன்னதென்னவென்றால், எப்படியானாலும் தான் கட்டாயம் அதிகப்படியான நோட்டுகளை வெளியிடப்போவ தாகவும், இம் மிகை வெளியீடு காரணமாக விலை உயர்வு 5 சதவீத உச்சத்திற்குப் போனால், A, B என்ற பாங்காளிகளின் தலை வெட்டப் படும் என்றும், விலை உயர்வு 10 சதவீத உச்சத்திற்குப் போனால், C, D என்ற பாங்காளிகளின் தலை சிதைக்கப்படும் என்றும் உத்தர விட்டான். இதன் விளைவு என்னவாயிற்று? போரரசர் பெருவாரியான நோட்டுகளைச் சொன்னதுபோல் வெளியிட்டார்; விலைகள் வேறுபாடு காட்டாமல் விதிர்விதிர்த்து நின்றுகொண்டன.

உண்மையில் என்ன நடந்ததென்றால், போரரசர் வெளியிட்ட நோட்டுகளுக்கு இணையான தொகையை, ஆளா இருப்பாக (idle balance) பாங்காளிகள் தம்மிடமே வைத்துக்கொண்டார்கள். ஆனால், பணக்கணியக் கோட்பாட்டினர், இப் போக்கு தமது கோட்பாட்டைப் பொய்ப்பித்துவிடவில்லை என்று வாதிடுவார்கள்—அதாவது, பாங்காளிகள் பணத்தைப் புழக்கத்திற்கு விடாமல் தம்மிடமே கட்டி வைத்துக்கொண்டார்கள். இதனால், V என்பதில் ஏற்பட்ட குறைவால், M என்பதில் ஏற்படக்கூடிய உயர்வை எதிரிடையாக்கிவிட்டார்கள்; எனவே, கோட்பாடு நிரந்தரமாகப் பொய்க்க முடியாது என்று வாதிடுவார்கள். ஆனால், இதற்குரிய இன்னொரு விளக்கம் என்னவெனில், பணத்தின் அளிப்பில் ஏற்படும் உயர்வுக்கு எதிரிடையாக, பாங்காளிகள், தமது சொந்தத் தேவையை மிகுதிப்படுத்திக்கொண்டு, பணத்தை ஆளா இருப்பில் வைத்துக் கொண்டார்கள் என்பதாகும்.

பணத்திற்குரிய தேவை என்பது, பணத்தை ரொக்க இருப்பாகக் கையில் வைத்திருப்பதற்குரிய தேவையாகும். இது பணப் புழக்க வேகத்திற்குத் தலைகீழானதாகும். நாம், ஒன்று பணத்தின் தேவை அதிகமாகிவிட்டது என்று சொல்லலாம்; அல்லது, பணப் புழக்க வேகம் குறைந்துவிட்டது என்று கூறலாம். இவ்விரண்டில், முதலில் குறிப்பிட்டது பொருத்தமான விளக்கமாக இருக்கிறது; ஏனென்றால், இதர பொருள்களின் மதிப்பை அவற்றின் தேவை, அளிப்பு முதலியவற்றைக்கொண்டு அறிந்ததுபோலவே பணத்தின் மதிப்பையும் அதன் தேவை, அளிப்பு என்பவைகொண்டு அறியலாம்; பணப் புழக்க வேகம் என்ற புதுக் கருத்தைப் புகுத்திக் குழப்பமடைய வேண்டாம்.

பாங்குகளின் வைப்புகள் முதலிய சில பண இருப்புகள் ஆளாமலே உள்ளன; அல்லது இயங்காமலே உள்ளன. இதர உட்செலுத்து, வெளிச்செலுத்துகட்கு உள்ளாகும் பணம், வெகு துரிதமாக அடிக்கடி இயங்குகிறது. பணத்தை மொத்தமாகப் பதுக்கி வைப்போர் தவிர, பொதுவாக மக்களும் ஓரளவு பண இருப்பைத் தம்மிடம் பல்வேறு காலங்களில், வெவ்வேறு அளவுகளில் வைத்திருக்கிறார்கள். வெள்ளிதோறும் கூலி வாங்குவோர் கைகளில் வியாழக்கிழமை இரவைவிட, வெள்ளிக் கிழமை இரவில் அதிகப் பணம் இருக்கும். இதைப்போல ஒவ்வொரு நபரும் அல்லது நிறுவனமும், சராசரியாகத் தன்னிடம் ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு குறிப்பிட்ட அளவு பண இருப்பை வைத்திருக்கிறது. ஒரு நபர், சராசரியாகத் தன்னிடம் வைத்திருக்கவேண்டும் என்று விரும்பும் பணத்தின் அளவை நிர்ணயிப்பது எது?

வட்டியின் பணத்துறைக் கோட்பாட்டைப்பற்றி விளக்கிய பொழுதும் இதே கேள்வியைச் சந்தித்திருக்கிறோம். இங்ஙனம், பணத்தின் அளவு என்பது குழப்பம் தருவதாகும். ஏனென்றால், ஒரு நாட்டில் உள்ள பணத்தின் மொத்த அளவு என்று குறித்தால், அவையெல்லாம் ஒரு குறிப்பிட்ட நேரத்தில், ஒவ்வொருவரின் பைகள், பெட்டிகள், பாங்குப் பாதுகாப்பு அறைகள் முதலிய வெவ்வேறிடங்களில் எங்காவது அடைந்து கிடக்கும் பணத்தின் மொத்த அளவுக்கு (இதற்குக் கூடவும் இன்றிக் குறையவும் இன்றி) ஏற்படும் தேவையை, எல்லாப் பணமும் எங்காவது ஓரிடத்தில் எவரிடமாவது இருக்கிறது என்ற நம்பிக்கையுடன் அறுதியிட வேண்டும். ஆனால், இப் பணத்தின் மதிப்பு அல்லது வாங்கும் சக்தி—இதர பொருள்களின் கணக்கீட்டில் பணத்திற்கு ஏற்படும் தேவை—முதலியன மாறுதலுறலாம்.

ஏற்கெனவே உள்ள வீடுகளின் தொகையைக் கொடுத்து விட்டால், அதிகப்படியான வீடுகளுக்கு ஏற்படும் தேவையானது

வீடுகட்குரிய மதிப்பிலும் உயர்வு ஏற்படுவதைக் குறிக்கிறது. இதைப் போலவே, பணத்திற்கு ஏற்படும் தேவை உயர்வானது பணத்தின் மதிப்பிலும் உயர்வைக் காட்டுகிறது—அதாவது, விலைகளின் அளவில் பொதுவான வீழ்ச்சி ஏற்பட்டிருப்பதைக் குறிக்கிறது. இந் நிலை மந்த காலத்தில் ஏற்படுகிறது. பொருள்களின் உற்பத்தி குறைந்து விடுகிறது; பணத்தின் கணிய அளவு ஒரே நிலையில் இருக்கிறது; என்றாலும் விலை அளவுகள் வீழ்கின்றன. இது ஏன் ? ஏனென்றால், பணத்திற்கு உரிய தேவை அதிகரித்துவிட்டது. பணத்திற்கு ஏற்படும் தேவை என்பது, இதர சொத்துகளாக வைத்திருப்பதை விடப் பணமாகவே கையில் வைத்திருக்கவேண்டுமென்ற விருப்ப மாற்றத்தையே குறிக்கிறது. ஈடுகள், நிலங்கள், பொருள்கள் முதலிய சொத்துகளின் விலைகள் குறையக்கூடிய வாய்ப்பிருக்கிறது என்று மக்கள் கருதுகையில், இத்தகைய சொத்துகளை வாங்கு வதற்குப் பதிலாகப் பணமாகவே சேர்த்து வைத்துக்கொள்ளவே விரும்புவார்கள். இதனால், பணத்தின் புழக்க வேகம் குறைகிறது; இதை வேறு வழியாகச் சொல்வதென்றால், பணத்திற்கு உரிய தேவை உயர்கிறது.

மக்கள் சமுதாயத்தில் ஏற்படும் பழக்க மாற்றமும் பணத் தேவையில் மாற்றத்தை உண்டுபண்ணும். உதாரணமாக, கூலி பெறுவோர்க்கெல்லாம் செக்குமூலமும், வெளி பாங்குக் கணக்குகள் மூலமும் தொகை அளிப்பதாக வைத்துக்கொள்ளுவோம். இதனால், அவர்கள் தமது பணத்தில் ஒரு பகுதியை, பாங்கு வைப்பு வடிவி லேயே வைத்திருப்பார்கள்; இதற்கு முன்னர் எல்லாவற்றையும் ரொக்க வடிவிலே வைத்திருந்ததுபோல, இப்பொழுது எல்லாப் பணத்தையும் ரொக்கமாகவே வைத்திருக்கமாட்டார்கள். இதனால், மக்களிடமிருந்து ரொக்கத்திற்கு ஏற்படும் தேவையில் குறைவு ஏற்படும்; இத் தேவைக் குறைவு, பாங்குகள் தமது வைப்புகட்கு எதிராக எப்பொழுதும் வைத்திருக்கவேண்டிய ரொக்க இருப்பின் விகிதத்தைக் குறைத்து, பாங்குச் செலாவணியைப் பெருக்கிக் கொள்ளுமாறு அவற்றிற்கு உதவும். மேலும், பாங்குப் புத்தகப் பதிவுகளில் ஒரு பற்றுக்கு எதிராக இன்னொரு வரவை எழுதிக் கணக்கை நேர் செய்யும் வழக்கம் மிகும். உதாரணமாக, B என்பவருக்கு A என்பவர் கொடுக்கவேண்டிய கணக்கில் உள்ள கடனுக்கு எதிராக, B என்பவரிடமிருந்து A என்பவருக்கு வர வேண்டிய கடன்கள் எழுதப்பெறும். (ஒன்றிற்கு ஒன்று தொடர் புடைய ஒரே பொருள்தொகுதிகளை உற்பத்தி செய்வதில், பலநிலை களில் தொழில் நிலையங்கள் ஈடுபடும்பொழுது, இம் முறை மிகவும் பயன்கொள்ளப்பெறுகின்றது.) இவ்விதம் கணக்குகளை மாற்றி மாற்றிப் பதியும் முறையால் பணத்திற்கு ஏற்படும் தேவை குறையும்.

மக்களோ, நிலையங்களோ தமது நடப்புச் செலுத்துதல்களுக்காகத் தம்மிடம் வைத்திருக்க விரும்பும் பணத்தின் அளவு, அவ்வவற்றின் பண வருமானங்களைப்பொறுத்து மாறக்கூடியன. மிகுதியான வருமானம் இருந்தால், மிகுதியான இருப்பும் தேவைப்படும். பண்டங்களின் விலை அளவைப்பொறுத்தும் இது மாறக்கூடும். வழக்கமாக நடைபெறுவது என்னவென்றால், வருமானங்களிலும் பொருள் விலைகளிலும் ஏற்படும் உயர்வைத் தொடர்ந்து பணத்தின் கணியமும் உயர்ந்துவிடுகிறது. இதனால், மிகுதியான பண இருப்பை வைத்திருப்பது முடியாதுபோய்விடுகிறது. பணவீக்கம் வரப்போகிறதென்றால், தொழிலைத் தொடர்ந்து நடத்துதற்காகப் பணத்தின் அளிப்பிலும் உயர்வை ஏற்படுத்துவது தவிர்க்க முடியாததாகிவிடும். இதனால், தொழில் நிலையங்கள் கூலிக்கு அதிகமான விகிதங்களையும், மூலப் பொருள்களுக்கு அதிகமான விலைகளையும் கொடுக்கவேண்டியதிருக்கும்; வாராந்திரச் செலவுகட்காக வீடுகட்கு அதிகப் பணம் தேவைப்படும். தவிரவும், பணத்தின் அளிப்பில் ஏற்படக்கூடிய இந்தப் 'போதாத் தன்மையை' (inadequate) நிலையாக்கிவிட முடியுமானால் பணவீக்கமும் அப்படியே நின்றுவிடும். வருமானங்களும் விலைகளும் தமக்குள் சரிக்கட்டிக் கொண்டு இறங்குமுகமாகச் செல்ல முற்படும். இப்பொழுது இருக்கும் பண அளிப்பில் 'போதிய அளவு' (adequate) ஏற்படும் வரை, வேலை இன்மைக்கும் வகையற்ற தன்மைக்கும் உட்பட்டாவது வருமானங்களும் விலைகளும் தம்மைக் குறைத்துக்கொள்ள முனைகின்றன. இந்த அளவிற்குப் பணக் கணியக் கோட்பாட்டைச் சரி என்றே சொல்லவேண்டும்.

சமுதாயத்தின் பழக்கங்கள், வருமானங்களின் பொது அளவு ஆகிய இரண்டையும் கவனித்தாலுங்கூட, ஒரு நபர் அல்லது நிறுவனம் தன்னிடம் இருப்பில் வைத்திருக்கவேண்டுமென விரும்பும் பணத்தின் அளவை நிர்ணயிப்பது எது?

இந்த நபர் தன்னிடம் பண இருப்பை வைத்திருக்கவில்லையென்றால், ஒன்று அவன் அதைச் செலவழித்திருக்கவேண்டும் அல்லது முதலீடு செய்திருக்கவேண்டும். பொருள்களின் மிகுதியான இருப்பை வைத்திருப்பதைவிட, (அவற்றின் தரம் நாளடைவில் குறையக்கூடும்) மக்கள் பணமாக வைத்திருக்க விரும்புவதன் நோக்கத்தை எளிதில் புரிந்துகொள்ளலாம். இங்கு உள்ள கேள்வி, இங்ஙனம் பண்டங்களில் முடக்காவிட்டாலும், கையில் உள்ள பணத்தை முதலீடு செய்து, அதற்குரிய வட்டியைப் பெறாமல் தாம் செலவழிக்க விரும்பும் நாள்வரைபேசாமலே பணத்தை வைத்திருக்கிறார்களே. அது ஏன் என்பதுதான். குறுகிய காலத்திற்குச்

சிறுசிறு பணத் தொகைகளை முதலீடு செய்வதால் செலவும் மிகும்; சிக்கலும் அதிகமாகும் என்பது ஒரு காரணம். மக்கள் தமக்கு எவ்வளவு பணம் அடுத்தாற்போலத் தேவைப்படும் என்பதை நிச்சயமாக வரையறுத்துக்கொள்ள இயலாதவர்களாயுள்ளார்கள்; எனவே, எதிர்பாராத செலவினங்களைச் சமாளிப்பதற்காக எப்போதும் ஓரளவு ரொக்க இருப்பையாவது, நீர்மையுள்ள பாங்கு வைப்புகளை யாவது வைத்திருக்க விரும்புகிறார்கள். இது இரண்டாவது காரணம். மூன்றாவதாக, முதலீடு செய்தாலும் ஈடுகளின் விலைகள் எப்போதும் குறையக்கூடும் என்ற மக்களின் அச்சமும் ஒரு காரணம். எனவே, மக்களும் நிறுவனங்களும் தம்முடைய சொத்துகளில் ஒரு குறிப் பிட்ட விகிதாசாரத்தைப் பண வடிவிலேயே எப்போதும் வைத்திருக்க விரும்புவது இயல்பு.

அவர்களது நீர்மை விருப்பத்தில் ஏற்படும் உயர்வினால் இதர சொத்துகளைவிடப் பணத்தையே ரொக்கமாகக் கையில் வைத்திருக்க விரும்புகிறார்கள். இங்ஙனம் அவர்களது பணத் தேவையில் ஏற்படும் உயர்வு, பத்திரங்களின் விலை அளவைக் குறைக்க முற்படுகிறது; அதாவது, இவற்றிற்கு உரிய வட்டி வீதங்களை உயர்த்துமாறு தூண்டுகிறது. அவர்களது நீர்மை விருப்பத்தில் குறைவு ஏற்பட்டால் இதற்கு நேர்மாறான விளைவுகள் ஏற்படும்; அதாவது, பத்திரங் களின் விலை அளவுகள் உயரும்; மக்கள் அதிகமாக அவற்றை வாங்கி வைத்துக்கொள்ள விரும்புவார்கள்.

பணத்தின் தேவையில் ஏற்படும் மாறுதல், பண்டங்களின் விலை அளவுகளில் மாற்றம் ஏற்படச் செய்யும். உதாரணமாக, இலாப விகிதம் உயர்கிறது என்று மக்கள் எண்ணுவதாக வைத்துக்கொள்ளு வோம். முன்பிருந்ததைவிட முதலீடு செய்வதில் நிறைய இலாபம் கிடைக்கிறது என்பதால், தம் சொத்துகளில் ஒரு குறைந்த விகிதாசாரத்தைமட்டும் பண வடிவில் வைத்துக்கொண்டு எஞ்சிய வற்றையெல்லாம் முதலீடு செய்ய முனைவார்கள். இதனால் அவர்களது நீர்மை விருப்பத் தேவை மிதமாகிவிடுகிறது. முதலீடுகள் உயரும். இத்தகைய முதலீடுகளாலான புது மூலதனம் உயர்வதால், இவற் றைக்கொண்ட தொழில்முனைவர்கள் மிகுதியாகத் தம் தொழிற் கருவிகளை வாங்குவார்கள்; இதனாலும் விலைகள் உயர நேரிடும். மேலும், பணத்தின் மொத்த அளவானது ஒரே நிலையில் இருந்து விட்டாலுங்கூட அதன் மதிப்பு குறையக்கூடும். இவ்விதம் தமது சொத்துகளில் ஒரு குறைந்த விகிதாசாரத்தைப் பண வடிவில் வைத்திருக்கவேண்டுமென்ற பொதுமக்கள் விருப்பமும் நிறைவேற் றப்படும். ஒவ்வொருவரும் முன்பிருந்த அளவிலேயே தம்மிடம் பணத்தை இன்றும் வைத்திருந்தாலும், அதன் மதிப்பில்மட்டும் குறைவு ஏற்பட்டே தீரும்.

## 6. பணத்தின் மதிப்பு மாறுவது எதனால்?

பணத்தின் மதிப்பில் ஏற்படும் எந்த ஒரு குறிப்பிடத்தகுந்த மாற்றத்தையும் விளக்குவதற்காக நாம் எல்லாப் பொருத்தமான சூழல்களையும் ஆராயவேண்டும்.

உதாரணமாக, 1950-லும் 51-லும் பெரும்பாலான பொருள்களின் விலை உயர்ந்துவிட்டது. கொரிய யுத்தத்தால், உலக யுத்தமே ஏற்படக்கூடும் என்ற அச்சம் ஏற்பட்டது. இதன் விளைவாகப் பொதுத் துறையிலும் தனி நபர்களிடமும் மிகுதியான பொருட் குவிப்பு முறைகள் ஏற்பட்டன; போர்த்தளவாடத் திட்டங்கள் பெருகின. இந்த அச்சம் நீங்கியவுடன் பொருட் குவிப்புகள் குலைந்தன; போர்த்தளவாடத் திட்டங்கள் மிதமாக்கப்பட்டன; பொருள்களின் விலைகள் மீண்டும் இறங்கிவந்தன.

இதைப்போலப் பணத்தின் அளிப்பு, அதன் தேவை, உற்பத்தியின் அளவு, பொருள்களின் இருப்புகள் ஆகியவற்றிலும் ஒரே சமயத்தில் மாறுதல்கள் நிகழக்கூடும். உதாரணமாக, பணத்தின் அளிப்பில் இவ்வளவு உயர்வு ஏற்பட்டது என்றுமட்டும் அறிவது போதாது. புதிதாக வந்த பணமெல்லாம் எங்கே முடக்கப்பட்டிருக்கின்றன; அவற்றிற்கு ஏற்பட்ட கதி என்ன என்பதையும் நாம் கண்டறிதல் வேண்டும். ஒருவேளை அவை ஆளா இருப்பாக முடக்கப்பட்டு, எவ்வித விளைவையும் தராது ஓய்ந்து கிடக்கலாம். ஒருவேளை புதுப் பண அளிப்புகளை விளைவித்த பாங்குகளே, தமக்கு ஈடுகளை வாங்குதற்கு அவற்றை உபயோகித்துக்கொண்டிருக்கலாம். இப்படி நேர்ந்தால், இதனால் ஏற்படக்கூடிய முதல் விளைவால் ஈடுகளின் விலைகள் உயரக்கூடும்; அல்லது வட்டி விகிதங்கள் குறையக்கூடும். ஒருவேளை புதுப் பணங்களெல்லாம் அதிகக் கூலி தருதற்காகத் தொழில் நிறுவனங்கட்கு முன்பணமாக வழங்கப்பட்டிருக்கலாம்; இதனால் என்ன விளையுமென்றால், அதிகக் கூலி பெற்றவர்கள் அவற்றை உடனே செலவழிப்பார்கள்; இதனால் சில்லறை விலைகள் உயரும். பணச் செலவுகளில் மிகுதி ஏற்பட்டாலுங்கூட, விலைகளின் உயர்வைத் தடுப்பதற்குப் போதுமான அளவில் உற்பத்திப் பெருக்கத்தையும் மிகுவித்து, அதனுடன் இணைந்தாற்போல அதிகக் கூலிகளும் அளிக்கப்படாதவரை, சில்லறை விலை அளவுகள் உயரவே முற்படும்.

'பணவீக்கம்' என்றால் 'மிகக் குறைந்த பொருள்களை விரட்டிக்கொண்டு, மிக அதிகமான பணம் ஓடுதல்' (too much money chasing too few goods) என்று விளக்கம் தரப்பெறுகிறது. இவ்

விளக்கம், பணக்கணியக் கோட்பாட்டோடு ஒத்தியங்குகிறது. நாம் இன்னும் கொஞ்சம் அதிகமாக விளக்கம் தரலாம்.

பிரௌனிங் என்பார் 'ஒரு மனிதனின் முயற்சி அவனது சக்திக்கு அப்பாலும் விஞ்சவேண்டும்' என்று சொல்லுகிறார். ஒரு நாட்டின் முயற்சி, பெரும்பாலும் அதனுடைய சக்தியை விஞ்சியேவிடுகிறது. இது வாழ்க்கைத் தரத்தைப் பேணி உயர்த்துதற்காக இவ்வளவு செலவழிக்கவேண்டுமென்றும், சமுதாயப் பணிகள், முதலீடுகள், பாதுகாப்புகள் முதலியவற்றில் இவ்வளவு பணத்தைச் செலவழிக்க வேண்டுமென்றும் விரும்புகிறது. இத்தகைய விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றுதற்குப் போதிய உழைப்போ, இதர சாதனங்களோ போதிய அளவு அதனிடம் இல்லை. இத்தகைய திட்டங்களையெல்லாம் வெற்றிகரமாகச் செயலாற்றுதற்கு முயன்றால், பணச் செலவுகள் என்றவகையில் ஏதாவது அளிக்கப்பெறுதல் வேண்டும். சாதாரணமாக அளிக்கப்பெறுவதென்னவென்றால்-விலை அளவுதான்! விலைகள் உயர்கின்றன; இதனால் பணத் திட்டங்கள், உண்மையான கணக்களவில் அவ்வளவாக பாதிக்கப்பெறுவதில்லை. உள்நாட்டில் உற்பத்திக்கு உதவும்வகையில் கிடைக்கக்கூடிய சாதனங்கள், உழைப்புகள் முதலியவற்றின் அளவுக்கு நாட்டின் பிடிப்புச் சக்தி கட்டுப்படுத்தப்பெறுகிறது (இதனுடன் வெளிநாட்டு உதவிகளையும் சேர்த்துக்கொள்ளலாம்). ஆனால், நாட்டின் முயற்சி இருக்கிறதே (பண அளவுக் கணக்கில்) அது, நாடு விரும்பும் அளவிற்கு எவ்வளவு வேண்டுமானாலும் உயர்ந்து செல்லலாம்.

வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறை என்பதும், பெரும்பாலும் பணவீக்கத்தையே ஏற்படுத்துகிறது. ஆனால், எப்போதும் பண வீக்கம் ஏற்பட்டுவிடுவதில்லை. கடனாக வாங்கப்பெற்ற அல்லது அரசாங்கத்தால் உண்டாக்கப்பெற்ற பொதுத்துறைச் செலவுகள், வேலையற்றோர்க்கு வேலையளித்து, இதர சாதனங்களைப் பயன் கொண்டு, உற்பத்தித் திறத்தை ஊக்கிவிடுவதில் வெற்றிபெறக் கூடும். சில நாள் கழிவிற்குப் பின்னர் மிகுதியான பணச் செலவுகள் உற்பத்தி மிகுதியினால் சமப்படுத்தப் பெறலாம். இதனால், பணத்தின் மதிப்பு ஓரளவே குறையக்கூடும், அல்லது குறையாமலும் இருக்க இயலும்.

ஆனால், பெரும்பாலும் வரவு செலவுத் திட்டப் பற்றுக்குறையானது முழு வேலையுடைமைக் காலத்திலேயே ஏற்படுகிறது, அல்லது முழு வேலையுடைமையை உண்டாக்குவதற்குப் போதிய அளவைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறது. உதாரணமாக, போரிடுவதற்காக அரசாங்கத்திற்கு நிறையப் பணத் தேவை ஏற்படலாம். இப்

பணத் தேவையை வரிவிதிப்பின்மூலம் பெறுவதைவிடக் கடன் மூலமாக நிறைவேற்றிக்கொள்ளலாம். அரசாங்கம் பொதுமக்களிடமிருந்து வாங்குவதைப் பொறுத்தவரையில் எழும் கேள்வி என்னவென்றால், அவர்கள் இப் பணத்தை அரசாங்கத்திற்குக் கடனாகக் கொடுத்திராவிட்டால், இப் பணத்தைக்கொண்டு என்ன செய்திருப்பார்கள் என்பதே. அரசாங்கத்திற்கு மாற்றிவிடும் பொழுது, பண இருப்புகள் துரிதமாக இயங்கினால், அப்பொழுது அரசாங்கத்தின் கடன் பெறுதல் பணவீக்கமாகிவிடுகிறது. ஆனால், நடைமுறையில் அரசாங்கம் தானே புதுப் பணத்தை உண்டாக்கிக் கொள்ளும். சில நாடுகளில் அரசாங்கம் எளிதில் நிறைய நோட்டுகளை அச்சடித்துக்கொண்டு தனது செலவுகட்குப் பயன்படுத்திக் கொள்ளும்.

இப்பொழுது கிரேட் பிரிட்டன்போன்ற நாட்டில் உள்ள அரசாங்கம் பாங்கிகளிடமிருந்து கடன் வாங்கிக்கொள்ளுகிறது. பாங்கிகள் தம் ரொக்க இருப்பைப் பேணிவர உதவுதற்காகப் புது நோட்டுகளை அச்சிட்டு உதவுகின்றன. இவ்விதம் ஏற்படும் பண வீக்கத்தை நிறுத்துவதற்குரிய வழி, அரசாங்கம் தனது செலவினத்தைக் குறைத்துக்கொண்டு (அரசாங்கத்தால் முடியுமானால்!) வரி விதிப்பை உயர்த்துவதாகும். இத்தகைய வரிவிதிப்பால் தனது செலவுகட்கு உரிய பணத்தைக் கொடுக்கப் புதுப் பணத்தை உண்டாக்க வேண்டியதில்லை. பண வீக்கத்திற்கு வழிசெய்யும் கடன்களை வாங்கவேண்டியதுமில்லை.

வரவு செலவுத் திட்ட உபரி (budget surplus) என்பது, வரி செலுத்துவோர் வேறுவகையில் செலவழித்துவிடக்கூடிய பணத்தையெல்லாம் அவர்களிடமிருந்து அரசாங்கம் ஈர்த்துக்கொண்டாலும், இப்படிப் பெற்ற பணத்தைப் பொதுமக்களிடமிருந்து ஏற்கெனவே பெற்ற கடனைத் திருப்பி அளித்தற்காக அரசாங்கம் பயன்படுத்தினாலும், அதைப் பணவடிப்பு அல்லது பண இறக்கம் (deflation) என்று கொள்ளச்செய்கிறது. அரசாங்கம் இப் பணத்தை அபிவிருத்தித் திட்டங்களுக்குச் செலவழித்தால், வரவு செலவுத் திட்ட உபரி, பண இறக்கமாகிவிடுவதில்லை. அந்தப் பணம் நுகர்வுக்குச் செலவாவதிலிருந்து மூலதனத்தில் செலுத்தப்படும்வகையில் மாற்றப்பட்டிருக்கிறது என்பதுதான் பொருள். என்றாலும், நாளடைவில் மிகுதியான பொது முதலீடுகள் அதிக அளவு உற்பத்திக்கு உதவும். இதனால் விலைகளைக் குறைத்துக்கொள்ளும் நிலை ஏற்படும்.

கிரேட் பிரிட்டனில் போருக்குப் பின்னர் அடிக்கடி பணவீக்க இடைவெளி (the inflationary gap) என்ற சொல்லைக் கேட்கிறோம்.

இக் கணக்கானது பண வருவாய்களைக் கழித்துவிடுவதனால் பெறப்பட்டது. அதாவது, நடப்பு விலைகளில் எதிர்பார்க்கப்படும் உற்பத்தி அளவுகளை (இவற்றுடன் இறக்குமதிகளைக் கூட்டி, ஏற்றுமதிகளைக் கழித்துக்கொள்க) வாங்கக்கூடிய அளவிற்குப் பண வருமானங்களைக் குறைத்ததால் பெற்ற தொகையாகும். சுருக்கமாகச் சொல்வதென்றால், இத் தொகையால் பொது முதலீடுகள் உள்ளிட்ட திட்டமிடப்பட்ட முதலீடுகளில் விருப்பச் சேமிப்புகள் சென்று சேர்வது குறைக்கப்பெறும். எனவே, விலைகளில் ஏற்படும் பொதுவான உயர்வைத் தடுத்தற்காக, இத் தொகையை அதிக வரிகள்மூலம் எடுத்துக்கொள்ளவேண்டும். இதனால், விலைகளில் பொதுவான விலை உயர்வை உண்டாக்காது, நுகர்வுப் பொருள்களிலான பணச் செலவுகளின் ஒழுக்கு, நுகர்வுப் பொருள்களின் ஒழுக்கை மிஞ்சிவிடாது, அவற்றிற்குச் சமமாகவே இருக்கும்.

ஏற்றுமதி உபரியும் பணவீக்கமாகவே முனைகின்றது. ஒரு நாடு, தனது இறக்குமதியைவிட அதிகமாக ஏற்றுமதி செய்துவிட்டதெனக் கொள்ளுவோம். இறக்குமதியாளர்கள் செலுத்தியதைவிட ஏற்றுமதியாளர்கள் அதிகப் பணம் பெற்றிருக்கிறார்கள்; இதனால் மொத்தப் பணச்செலவில் உயர்வு ஏற்படும்; ஆனால், இப் பணத்தைச் செலவிடக்கூடிய பண்டங்களின் வரவு குறைந்திருக்கும்; ஏனென்றால், இறக்குமதியாக்கப்பட்ட பொருள்களைவிட மிகுதியான பொருள்கள் ஏற்றுமதியாகிவிட்டன அல்லவா ? இதற்கு மறுதலையாக, இறக்குமதி உபரி பண வடிப்பாக முனைகின்றது.

முதலீட்டு ஏற்றத்தாழ்வுகள் (fluctuations in investment) பெரும்பாலும் பண மதிப்பில் மாறுதல்கள் ஏற்படுதற்குக் காரணங்களாகவும் அமைகின்றன. நாம் முன்பு கண்டது போல, பெரும் முதலீடுகள் (இவை பாங்குச் செலாவணி விரிவால் நிதியூட்டம் பெற்றிருந்தால்) பணத்தின் மதிப்பைக் குறைக்க முனைகின்றன. அதிகப்படியான விலைகள், தொழில் முனைவோர்க்கு நலம் தரும்வகைகளில், நிலைத்த வருமானங்களை உடையோரிடமெல்லாம் 'கட்டாயச் சேமிப்பை' மேற்கொள்ளுமாறு வற்புறுத்துகின்றன. மறுதலையாக, முதலீட்டில் ஏற்படும் குறைவு, விலைகளிலும் குறைவேற்பட உதவுகிறது. என்றாலும், முதலீட்டில் ஏற்படும் மாற்றங்களை, வேலையுடைமையில் ஏற்படும் மாற்றங்களோடும், இவற்றின் விளைவாக உற்பத்தியோடும் ஒன்றாக இணைத்தே கணக்கிடவேண்டும் என்பதை நாம் மறந்துவிடுதல்கூடாது. கூலி விகிதங்களில் ஏற்படும் மாறுதல்கள்பற்றியும் நான் முன்னர்க் குறிப்பிட்டுள்ளேன். கூலி விகிதங்களில் ஏற்படும் பொதுவான உயர்வு, அவற்றிற்கு இணையான உற்பத்தி உயர்வோடு பொருந்தாவிட்டால், இக் கூலி உயர்வும் பணவீக்கத்திற்கு உதவி

செய்யும். கூலி விகிதங்களில் குறைவு ஏற்பட்டால், அதற்கு இணையாக உற்பத்தியும் குறைந்துவிட்டால், பணவடிப்புக்கு அது உதவும்.

நான் இதுவரை பல தாற்காலிகப் பொதுமைக் கருத்துகளை எடுத்து விளக்கிவந்தேன். ஆனால், நான் வாசகர்களுக்குக் குறிப்பிட விரும்புவது என்னவென்றால், நாம் முழுக்க முழுக்க, பொதுமைக் கருத்துகள், வாய்பாடுகள், சரியீடுகள் என்பனவற்றைச் சார்ந்திராது, ஒவ்வொரு தனித்தனிக் கருத்தையும் மேற்கொண்டு, அதைப் பொருத்தமான உண்மைகளோடு இணைத்துப் பார்த்துத் தெளிவு பெறவேண்டும்.

பிரிவு 7

# பன்னாட்டு வாணிபக் கோட்பாடு

## 34. பன்னாட்டு வாணிபக் கோட்பாடு

### 1. பன்னாட்டு வாணிபத்திற்குத் தனிக் கோட்பாடு ஏன்?

எல்லா வாணிபமும் உள்நாட்டு மாவட்டங்களிடையே ஏற்படும் சிறப்புத் தேர்ச்சியால் நடைபெறுகிறது என்பதை 6ஆம் அதிகாரத்தில் கண்டோம். உள்நாட்டுச் சிறப்புத் தேர்ச்சியைச் சாதகமுடையனவாக்கும் பருவகால மாறுதல்கள், இயற்கைச் சாதன மாறுதல்கள் முதலிய மாவட்டங்களிடையே ஏற்படும் மாறுதல்களைத் தேசிய எல்லைகள் எவ்வகையிலும் மாற்றிவிடுவதில்லை. ஆஸ்திரேலிய மாநிலங்கள் பலவற்றின் இடையே நிகழ்ந்த வாணிபம், 1901-ல் அவை காமன்வெல்த்தாக இணையும்வரை பன்னாட்டு வாணிபத் தன்மையிலேயே இருந்தது; அதுமுதல் அவற்றின் வாணிபம் உள்நாட்டு வணிபத் தன்மை பெற்றுவிட்டது. தெற்கு அயர்லாந்திற்கும் கிரேட் பிரிட்டனுக்கும் இடையிலே நிகழ்ந்த வாணிபம், முன்னது தனிக் குடியரசாகப் பிரியும்வரை, உள்நாட்டுத் தன்மையிலேயே நிகழ்ந்தது; அது தனிக் குடியரசான பின்னர், பன்னாட்டு வாணிகத் தன்மையைப் பெற்றுவிட்டது. ஆனால், எல்லைகளில் இவ்விதம் ஏற்படும் மாறுதல்கள், பொருளாதாரப் புவியியலின் உண்மைகளை மாற்றியமைப்பதில்லை. அப்படியிருக்கையில், பன்னாட்டு வாணிபத்திற்காகத் தனிக் கோட்பாடு ஒன்றைக்கொண்டு, தேசிய எல்லைகளைப்பற்றிக் கணக்கிட முயல்கின்றோமே, ஏன்?

இதற்குக் காரணம், தேசிய அரசாங்கங்களே. இப் பிரிவின் இதர அதிகாரங்களெல்லாம் பன்னாட்டு உறவுகளில் உள்ள பணத்துறைக் கூறுகளை ஆராய்கின்றன. இலவச நாணயமாற்று விகிதங்கள் (free exchange rates), மாறாத மாற்று விகிதங்கள் (fixed exchange rates), நாணயமாற்றுக் கட்டுப்பாடு முதலிய பல்வேறு முறைகளை இவை விளக்குகின்றன; இவற்றின்மூலமாக ஏனைய உலக நாடுகளுடன் தனது அயல்நாட்டுச் செலுத்துதலைச் சமமாகப்

பேணிக்கொள்ளுதற்காக ஒரு நாடு சமாளிக்கவேண்டிய பிரச்சினையும் விவாதிக்கப்பெறுகிறது. இத்தகைய ஒரு பிரச்சினை, யார்க் ஷையருக்கும் டேவனுக்கும் இடையே ஏற்படுவதில்லை; இங்கிலாந்திற்கும் வேல்ஸுக்கும் இடையே நிகழ்வதில்லை. ஏனென்றால், இவையெல்லாம் ஸ்டெர்லிங் பவுன் எனப்படும் ஒரே நாணயத்திலேயே உறவுகொண்டுள்ளன; ஒரே பணத்துறை பாங்கு முறைகளையே மேற்கொண்டு பின்பற்றுகின்றன. ஆனால், ஒரு தனிப்பட்ட நாட்டிற்கு வழக்கம்போலத் தனி நாணயம் உண்டு; எனவே, தனியான பணத்துறை, பாங்கு முறைகளை அது பின்பற்றுகிறது. எனவே, இதற்கென உரிய அயல்நாட்டுச் செலுத்துநிலைப் பிரச்சினைகளை அது சமாளிக்கவேண்டியதேற்படுகிறது.

இந்த அதிகாரத்தின் பொருள், பன்னாட்டு வாணிபக் கோட்பாடு என்பது. இவ்விதம் தனிக் கோட்பாடு கொள்ளுவதற்கு உரிய பாரம்பரியக் காரணம், உள்நாட்டுக்குள் உழைப்பும் முதலும் எளிதாகப் பெயர்வதுபோல, நாடுகளிடையே அவை இரண்டும் அவ்வளவு எளிதாகப் பெயர்ந்து இயங்குவதில்லை என்பதுதான்.

தொழிலாளர்கள் அதிகமான கூலி உயர்வு கிடைக்கும் என்ற கவர்ச்சி இருந்தாலுங்கூட, பேசும் மொழியும் வாழும் முறையும் வேறுபட்டிருந்தால், இன்னொரு நாட்டிற்குச் செல்லப் பெரும்பாலும் முன்வரமாட்டார்கள். ஒருவேளை அவர்கள் துணிந்து புறப்படுதற்கு இசைந்தாலும், பிறநாட்டவர்கள், அவர்கள் தம் நாட்டிற்குள் புக அனுமதிக்கமாட்டார்கள். பல தேசிய அரசாங்கங்கள் குடியிறக்கத்தைத் தடைசெய்து கட்டுப்படுத்தியுள்ளன.

சொந்த மூலதனம் உடையவர்கள், அயல்நாடுகளில் சென்று முதலீடு செய்வதில் உள்ள ஆபத்துகளை ஏற்க விரும்பமாட்டார்கள். மேலும், தேசிய அரசாங்கங்கள், தம் நாட்டிற்குள் பிறநாட்டு மூலதனம் வருவதைப் பெரும்பாலும் கட்டுப்படுத்துகின்றன; சில சமயங்களில் தம் நாட்டிலிருந்து பிற நாட்டிற்குச் செல்லும் மூலதனத்தையும் கட்டுப்படுத்துகின்றன.

ஒரு நாட்டிற்குள் உழைப்பும் மூலதனமும் பல்வேறு இயற்கைச் சாதனங்களுடன் தம்மை இணைத்துக்கொண்டு, நாடு முழுவதும் ஒரேமாதிரியான உண்மைக் கூலி கிடைக்கவும், ஒரேமாதிரி மூலதனத்திற்கு வருவாய் கிடைக்கவும் உதவும்வகையில், எல்லா மாவட்டங்களிடையேயும் நிரவலாகத் தம்மைப் பகிர்ந்து அமைத்துக்கொள்ளுகின்றன. ஆனால், பல நாடுகளிடையே இந் நிலை முற்றிலும் மாறாகவே இருக்கும். சில நாடுகளில், ஏனையவற்றை நோக்க,

மிகுதியான மக்கள் தொகைச் செறிவு இருக்கும்; இதனால் நாடுக ளிடையே நிலவும் உண்மைக் கூலிகளில் மிகுந்த வேறுபாடுகள் இருக்கும். சில நாடுகளில், ஏனைய நாடுகளை நோக்க, இதர சாதனங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், மூலதனத்தின் அளவு குறைவாகவே இருக்கும்; இதனால், இந்நாட்டு மூலதனங்கள் அடையும் இலாபமும் வட்டி வீதங்களும் உயர்வாகவே இருக்கும்.

பொதுவான கருத்துகளில் முதலாவதாக, நாடுகளிடையே அமைந்துள்ள இயற்கைச் சாதனங்கள் முதலிய வெவ்வேறு காரணி களின் பல்வேறு விகிதாசாரங்களே பன்னாட்டு வாணிகத்தைக் கட்டுப்படுத்துகின்றன என்று நாம் சொல்லலாம். ஒரு நாடு, தன்னிடம் அபரிமிதமாக உள்ள காரணிகளில் அதிகப்படியான விகிதாசாரம்கொண்ட பொருள்களைப் பிற நாட்டிற்கு ஏற்றுமதி செய்கிறது. வெப்பம் மிகுந்த நாடுகளில், அவ் வெப்பச் சூழலில் உற்பத்தியாகும் பொருள்களையே ஏற்றுமதி செய்கின்றன. மிகுதி யான கனிப்பொருள்களைக் கொண்டுள்ள நாடுகளால், அப் பொருள் களையே ஏற்றுமதி செய்யமுடியும். அமெரிக்காவிடம் மூலதனம் மிகுதியாக இருப்பதாலும், அது மலிவாகக் கிடைப்பதாலும், மிகுதி யான மூலதனம் தேவைப்படும் பேரளவு உற்பத்தித் தொழிற்சாலைகள் அங்குப் பெருகியுள்ளன. மேய்ச்சல் நிலங்களை மிகுதியாக உடைய ஆஸ்திரேலியா கம்பளியை ஏற்றுமதி செய்கிறது. தொழில்நுட்பத் துறையில் சிறப்புத் தேர்ச்சிபெற்ற தொழிலாளர்களையுடைய, பிரிட்டன்போன்ற நாடுகளால், அத்தகைய தொழில்நுட்பத் துறைப் பொருள்களைப் பெருவாரியாக ஏற்றுமதி செய்யமுடிகின்றது. உதாரணமாக, கிரேட்பிரிட்டன் பொறியியல் ஆக்கப் பொருள்களையும் கம்பளி நூல்களையும் ஏற்றுமதி செய்கின்றது; ஸ்விட்சர்லாந்து கைக்கெடிகாரங்களையும், ஜெர்மனி இரசாயனப் பொருள்களையும் ஏற்றுமதி செய்கின்றன.

இத்தகைய பொதுக் கருத்தானது, பல காரணங்களைச் சார்ந் தமையும். சில நாடுகள் குறிப்பிட்ட பொருள்களை ஆக்குகின்றன; அவற்றை ஏற்றுமதியும் செய்கின்றன. ஆனால், அவ்வாக்கப் பொருள் களின் காரணிகளிடையே பல்வேறு விகிதாசார அளவுகள் அமைந் துள்ளன. உதாரணமாக, தொழிலாளர் மிகுதியாக உள்ள கீழை நாடுகளில் அரிசி மிகுதியாக உற்பத்தியாகிறது; மூலதனத்தைவிடக் கிடைப்பதற்கு அருமைப்பாடாகிய உழைப்பாளர் குறைந்த அமெரிக் காவிலும் அரிசி உற்பத்தியாகின்றது. மேற்குறித்த காரணி விகிதா சாரத்தில் உள்ள வேறுபாடு இந் நாடுகளில் உற்பத்தியாக்கப்பட்ட பொருள்களில் புலப்படுவதில்லை; ஆனால், அவற்றை உற்பத்தி செய்ய மேற்கொண்ட முறையிலேயே புலப்படுகின்றது. கீழை

நாடுகளில் அதிகமான உழைப்பிற்குரிய உழவு முறைகளை மேற்கொண்டு அரிசி பயிரிடப்பெறுகிறது ; ஆனால், லூயிஸியானா, காலிஃபோர்னியா முதலிய இடங்களில், ஒரு டன் அரிசி விளைச்சலுக்குத் தேவைப்படும் ஆள் உழைப்பைவிடக் குறைந்த அளவில் தேவைப்படும் மிகச் சிறந்த இயந்திரக் கருவிகளைக்கொண்டு அரிசி பயிரிடப் பெறுகிறது.

மேலும், தேவையால் ஏற்படும் செல்வாக்கையும் நம் நினைவிற் கொள்ளவேண்டும். உதாரணமாக, அமெரிக்காவிலும் ருசியாவிலும், ஏராளமான எண்ணெய்க் கிணறுகள் உள்ளன ; ஆனால், இவற்றினின்று கிடைக்கும் எண்ணெய்களும், இதர இறக்குமதி எண்ணெய்களும் இவ்விரு நாடுகளின் சொந்த உபயோகத்திற்கே போதவில்லை. எனவே, அவை எண்ணெய் தம்மிடம் நிறைய ஊறியும், ஏற்றுமதி செய்தற்குப் பதிலாகத் தமது தேவை மிகுதி காரணமாக இறக்குமதியே செய்கின்றன. உள் நாட்டில் ஒரு பொருளை ஆக்குதற்கு ஒரு குறிப்பிட்ட காரணியில் அதிகப்படியான விகிதாசாரம் தேவைப்பட்டால், இச் சாதனம் மிகுதியாக உள்ள நாட்டிலிருந்து மலிவான விலையில் அப் பொருளை ஏற்றுமதி செய்து தருவித்துக்கொள்ளுவது நலம் என்று அனுமானிப்பது ஓரளவு சரியான கருத்தைக் கொள்ளுதற்கு உதவும்.

பன்னாட்டு வாணிபம்பற்றிய பரம்பரை அல்லது புராதனக் கோட்பாடு அனுமானிப்பதென்னவென்றால், இரு வேறு நாடுகளிடையே உற்பத்திக் காரணிகள் எளிதில் பெயர்ந்து இடம் மாற முடியாது; ஆனால், உற்பத்தி செய்யப்பெற்ற பொருள்கள் எளிதில் பெயர்ந்து இடம் மாற முடியும். நமது முதல் கருத்திற்கு இவ்வனுமானம் ஓரளவு பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது. நடைமுறையில் நாடுகளிடையே உழைப்பு, மூலதனம் என்பனவற்றுள் ஓரளவு இடப் பெயர்ச்சி இருக்கின்றது (இது நாடுகளிடையே கூலிகள், மூலதன வருவாய்கள் என்பனவற்றுள் சமமின்மை ஏற்படவே உதவும்).[1] மேலும், தேசிய அரசாங்கங்கள் அடிக்கடி பிற நாட்டுப் பொருள் இறக்குமதிகளைத் தடைசெய்து கட்டுப்படுத்திவிடுகின்றன. எனவே, இத்தகைய கட்டுப்பாடுகளால் ஏற்படக்கூடிய விளைவுகளைப்பற்றியும் இந்த அதிகாரத்தில் விவாதிப்போம்.

## 2. பன்னாட்டு வாணிபத்தால் கிட்டும் இலாபம்

ஒரு நாடு தன் நாட்டிற்குள் உற்பத்தி செய்யவியலாத பொருள்களைப் (வெப்ப நாட்டுப் பொருள்கள், கனிப் பொருள்கள் என்பன)

[1] 25ஆம் அதிகாரத்தில், 5ஆம் உட்பிரிவைப் பார்க்கவும்.

பிற நாட்டினின்று இறக்குமதி செய்துகொள்ளுவதால் நன்மை யடைகின்றது என்பதைக் காட்டுதற்கு எவ்வித ஆராய்ச்சியும் தேவையில்லை. இந்த நாடு அவற்றை இறக்குமதி செய்துகொள்ள வில்லையென்றால், அப் பொருள்கள் இல்லாமலே அது வாழ வேண்டியதிருக்கும். அப் பொருள்கள் சிறந்த நுகர்வுப் பண்டங் களாக இருந்தால் உள் நாட்டுப் பொருள்களுக்குச் செலவிடுவதை விட அப் பண்டங்களுக்காக அதிகப் பணம் செலவிடுவதை அந் நாட்டு மக்கள் விரும்பக்கூடும். அப் பொருள்கள் கச்சாப் பொருள்கள் முதலிய உற்பத்திக் காரணிப் பொருள்களாயிருந்தால், அவற்றைக்கொண்டு உள் நாட்டுத் தொழிற்சாலைகளை இயக்க முடியும்; இல்லாவிடில் அவற்றை இயக்குதல் என்பது இயலாது போய் விடலாம்.

ஏற்றுமதி செய்யும் நாடுகளுக்கு ஏற்படும் நலன்கள் தெளி வானவை. ஏற்றுமதித் தேவை அந் நாடுகளது பொருள்களுக் குரிய சந்தையை விரிவுபடுத்துகிறது; இதனால் பொருள்களின் விலைகள் உயர்கின்றன. வட ரொடிஷியா, தன் நாட்டில் விளைந்த எல்லாச் செம்புக் கனிகளையும் தனது எல்லைக்குள்ளேயே உபயோகித் துக்கொண்டு, எந்த வடிவிலும் ஏற்றுமதி செய்யாதிருந்தால், இப் பொழுதைப்போல வளம் நிறைந்த செம்புச் சுரங்கத் தொழிலை அதனால் எப்பொழுதாவது ஏற்படுத்தியிருக்கமுடியுமா? கனடா, தன்னிடம் விளையும் கோதுமையை எல்லாம் தன் நாட்டிற்குள்ளேயே பயன்படுத்திக்கொண்டால், இன்றுபோல் இவ்வளவு அபரிமிதமான விளைச்சலை உண்டாக்கிவிட முடியுமா? அப்படியே உண்டாக்கினாலும் இன்றுபோல் அவைகட்கு விலையை என்றாவது பெற முடியுமா?

எனவே, பொருள்களை இறக்குமதி செய்யும் நாடுகள் அவற்றைத் தமது நாட்டிலே உற்பத்திசெய்ய முடியுமென்றாலும், சில காரணங் களால் அவற்றைப் பிற நாடுகளிடமிருந்தே பெறுகின்றன. அத்தகைய பொருள்களில் ஏற்பட்டுள்ள பன்னாட்டு வாணிபம் பற்றியே இனி விவாதிப்பேன்.

உலகம் முழுவதும் ஒரே நாடு என்ற அமைப்பில் இருந்து விட்டால், வெவ்வேறு இடங்களில் உற்பத்தியாகும் பல்வேறு பொருள்களைப் பெறுவதால் நுகர்வோருக்குக் கிடைக்கும் நலன்களை எளிதில் எடுத்துக்கூறிவிட இயலும். எங்கெல்லாம் உற்பத்திச் செலவுகளும், சந்தைப்படுத்தும் செலவுகளும் குறைவாயிருக்கின் றனவோ, அங்கெல்லாம் அப் பொருள்கள் அதிகமாக உற்பத்தியாக முற்படும். இதற்கு மாறாக மேற்கொள்ளப்படும் முறைகளால் உற்பத்திச் செலவுகளின் விலைகளும் உயரும்; கிடைக்கக்கூடிய

உற்பத்திக் காரணிகளைக்கொண்டு ஓரளவு பொருள்களையே உற்பத்தி செய்யமுடியும். இதைப்போலவே ஒரு நாட்டிற்குள் உள்ள பல்வேறு மாவட்டங்களிடையே உற்பத்தி முறையில் சிறப்புத் தேர்ச்சியைப் பின்பற்றுவதால் ஏற்படும் நலன்களை நாமெல்லாம் நன்கறிவோம். தேசிய எல்லைகளைக் கடந்து பொருள்கள் விற்பனைக்குச் செல்லும்பொழுதே உற்பத்தித் துறைக்குரிய சிறப்புத் தேர்ச்சி நலன்களைப்பற்றியும் வாணிப நலன்களைப் பற்றியும் கேள்வி எழுகின்றது.

இரு நாடுகள் தம்முள் இணக்கங்கொண்டு ஒரேமாதிரியான உற்பத்திக் காரணிகளை மேற்கொண்டு ஒரே பொருளை உற்பத்தி செய்ய முற்படுவதாகக் கொள்ளுவோம். ஒவ்வொன்றும் தன்னால் இன்னொன்றைவிட மிகச் சிறப்பாகச் செய்யக்கூடிய காரணியில் மட்டும் சிறப்புத் தேர்ச்சியை மேற்கொண்டால், இரண்டு நாடுகளின் இணைப்பால் சிறந்த உற்பத்தி ஆக்கம் ஏற்படும்; ஒவ்வொரு நாடும் தன்னிறைவு முயற்சியில் வருந்தி முயலாமல், பொது நிறைவு முயற்சியில் எளிதாக ஈடுபடுவதால் இந்த நலன் கிட்டுகின்றது. இக் கருத்தை ஓர் உதாரணக் கணக்கின்மூலம் இவ்வதிகாரம் முழுவதும் விளக்க முற்படுகின்றேன். இந்த உதாரணம் (6ஆம் அதிகாரம், 5ஆம் உட்பிரிவில் கொடுக்கப்பெற்ற உதாரணத்தைப்போல) மக்கள் இரண்டு பொருள்களைமட்டுமே உற்பத்தி செய்து உபயோகிக்கிறார்கள் என்று அனுமானித்துக்கொள்ளுகிறது. இதனால், இந்த அனுமானம் வாழ்க்கையோடு, நடைமுறையோடு பொருந்தாது என்ற உணர்ச்சியை உங்களிடம் கட்டாயம் ஏற்படுத்தும். என்றாலும், இது நமது விளக்கத்திற்கு எளிதாக உதவுகின்றது; இதிலிருந்து பெறப்படும் முடிவுகள் அடிப்படையில் சரியாயுள்ளன; மேலும், இனி நாம் பார்க்கவிருப்பதைப்போல, நாம் வாழும் உலக உண்மைகளோடு இதை எப்படிவேண்டுமானாலும் திருத்திப் புகுத்திக்கொள்ள முடியும்.

A, B என்ற இரு நாடுகளிடம் ஒரே அளவு தொழிலாளர்களும், ஒரே அளவு நிலம், மூலதனம் முதலியனவும் சுருக்கமாக ஒரே அளவு உற்பத்திக் காரணிகளும் இருப்பதாகக் கொள்ளுவோம். இவற்றைத் தனியாகப் பிரித்துப் பார்க்கையில் ஒவ்வொன்றும் தனது காரணிகளில் பாதியைத் தேயிலை உற்பத்திக்கும், மறு பாதியைத் துணி உற்பத்திக்கும் பயன்படுத்துகின்றன. சில வேறுபாடுகளின் காரணமாக (உதாரணமாகப் பருவநிலை வேறுபாடுகள்) A-ல் உள்ள அதே அளவு காரணிகளால் B-ன் காரணிகளைவிட, இரு மடங்கு தேயிலையை உற்பத்தி செய்யமுடியும் ; ஆனால், B-யைப்போல அரைப் பங்கு துணிகளையே உற்பத்தி செய்யமுடியும் எனவே, A, 100

அலகு தேயிலையும் 50 அலகு துணியும் உற்பத்தி செய்கிறது; B 100 அலகு துணியும் 50 அலகு தேயிலையும் உற்பத்தி செய்கிறது.

A, B ஆகிய இவ்விரு நாடுகளிடையேயும் வாணிபம் தொடங்குகிறது என வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது, A முழுக்க முழுக்கத் தேயிலை உற்பத்தியில் சிறப்புத் தேர்ச்சி கொள்ளும்; B முழுக்க முழுக்கத் துணி உற்பத்தியில் ஈடுபட்டுவிடும். இப்பொழுது இவற்றின் சிறப்புத் தேர்ச்சியால் A, 200 அலகு தேயிலையையும், B, 200 அலகு துணியையும் உற்பத்தி செய்கின்றன; இதற்கு முன்னர்த் தனித்தனியாக இருந்த நாளில், இரண்டும் மொத்தமாக உற்பத்தி செய்தது 150 அலகு தேயிலையும், 150 அலகு துணியும் தாம்.

இவ்விதம் இவ்விரு நாடுகளின் கூட்டு உற்பத்தியில் கிடைத்த அதிகப்படியான $\frac{1}{3}$ உண்மை வருமானத்தை, இவ்விரு நாடுகளிடையே எவ்வாறு பகிர்ந்துகொள்வது என்பது, வாணிப நிலைகளைப் பொறுத்து அமையும்; அதாவது, துணிக்காகத் தேயிலையை மாற்றிக்கொள்ளும் விலை விகிதத்தைப் பொறுத்தது. ஓர் அலகு தேயிலையின் விலை, ஒரு அலகு துணிக்குச் சமம் என வைத்துக் கொள்ளுவோம். அப்படியானால் A, 80 அலகு துணிக்குப் பதிலாக 80 அலகு தேயிலையை (ஒரு வாரம் அல்லது வருடத்திற்கு) B-யிடம் மாற்றிக்கொள்ளும்; இதன் விளைவாக, இப்பொழுது A-யிடம் 120 அலகு தேயிலையும், 80 அலகு துணியும் இருக்கும்; B-யிடம் 80 அலகு தேயிலையும் 120 அலகு துணியும் இருக்கும்.

அதே உற்பத்திக் காரணிகளைக்கொண்டு, A-யினால் 2 அலகு தேயிலையையும், அல்லது 1 அலகு துணியையும் உற்பத்தி செய்ய முடியுமென்றால், A-யைத் தனியாகப் பிரித்துவிட்டால், அது உற்பத்தி செய்யும் 1 அலகு துணியின் விலை, 1 அலகு தேயிலையின் விலையைவிட இரு மடங்காகிவிடும். தேயிலையின் 1 அலகு விலை 1 பவுன் எனக் கொண்டால், துணியின் ஓர் அலகு 2 பவுனாகிவிடும். B-யையும் தனியாகப் பிரித்துவிட்டால், அங்கு இதற்கு மாறான விலை நிலவரம் ஏற்படும். அங்கு ஓர் அலகு துணியின் விலை 1 பவுன் ஆனால், 1 அலகு தேயிலையின் விலை 2 பவுனாகிவிடும்; ஏனென்றால், தேயிலையை உற்பத்தி செய்ய அதற்கு இரு மடங்கு காரணிகள் செலவாகும். இப்பொழுது இரு நாடுகளும் தம்மிடையே தடையிலா வாணிப உறவு கொண்டிருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். இரு நாடுகளிலும் தேயிலையின் விலை ஒரேமாதிரியாக இருக்கும் (1 பவுன்-Aயின் உற்பத்திச் செலவு); இதைப்போலத் துணியின் விலையும் ஒரே மாதிரியாக இருக்கும் (1-பவுன்-Bயின் உற்பத்திச் செலவு).

இவ்விரு நாடுகளின் வாணிபத்தால் ஏற்படக்கூடிய விளைவுகளைக் கருதிச் சிலர் இவ்வுறவு வேண்டாமென மறுக்கக்கூடும். உதாரணமாக, A நாட்டில் உள்ள சிலர், தம் நாட்டில் துணி உற்பத்தித் தொழிலே போய்விட்டதாகக் குறைபடுவார்கள். B நாட்டிலிருந்து ஏற்பட்ட போட்டியினால், இத் தொழில் நசித்துவிட்டது; இத் தொழிலில் ஈடுபட்டவர்கள் எல்லோரும் தேயிலைத் தொழிலுக்குச் சென்றுவிட்டார்கள். B துணிகளை, 1 அலகுக்கு 1 பவுன் விலை வைத்து, A-யிடம் கொண்டுவந்து 'குவிக்கிறது' (dumping); A-ல் இதன் ஆக்கவிலை 2 பவுனாகிறது. உற்பத்திச் செலவுகளைச் சமம் செய்யும்வகையில், ஒருவகைத் 'திட்டமான' சுங்கவரியை (Tariff) விதித்துக்கொண்டால் என்ன ? இங்கு, B-யிடமிருந்து இறக்குமதி செய்யப்படும் அலகு ஒவ்வொன்றுக்கு 1 பவுன்வீதம் 100 சதவீதச் சுங்கவரி விதித்தால் என்ன ? ஆனால், இத்தகைய 'திட்டமான' சுங்கவரிகள், எல்லாப் பன்னாட்டு வாணிபங்களையும் ஒழித்துவிடும் என்பது தெளிவு ; ஏனென்றால், உற்பத்திச் செலவுகள், நாடுகளிடையே வெவ்வேறாக இருப்பதால்தான், பன்னாட்டு வாணிபமே ஏற்படமுடிகிறது. தவிரவும், மேற்குறித்த 'சாஸ்திரியமான' சுங்கவரியைக் (scientific tariff) கொள்கையளவில், அமெரிக்க அரசாங்கம் ஒருமுறை ஒப்புக்கொண்டிருந்தது.

A தன்னாட்டிலேயே துணியை உற்பத்தி செய்துகொள்ள முடியும் என்பது உண்மைதான் ; ஆனால், B யைவிட உற்பத்திக் காரணிக் கணக்கில் இருமடங்கு செலவழித்தால்தானே, அந்த அளவு துணியைத் தன்னாட்டிலேயே ஆக்கிக்கொள்ள முடியும். துணி உற்பத்தி செய்தற்குரிய காரணிகளையெல்லாம் தேயிலை உற்பத்தியிலேயே ஈடுபடுத்துவதன்மூலம், இதைப்போல இருமடங்கு துணிகளை இந்த நாடு பெற்றுக்கொள்ள இயலுமே ! தேயிலை உற்பத்திப் பொருள்களை ஏற்றுமதி செய்து, மாற்றாகத் துணிகளை வாங்கிக் கொள்ள முடியுமே. உண்மையாகப் பார்த்தால், தேயிலை உற்பத்தியில்மட்டும் A ஈடுபடுவதால், அது இப்பொழுது அதிகமான தேயிலையும் பெறுகிறது ; அதிகமான துணியும் பெறுகிறது. முன்பெல்லாம், அது 100 அலகு தேயிலையும் + 50 அலகு துணியும் பெற்றது ; ஆனால் இப்பொழுது, எத்தகைய பிரத்தியேக முயற்சியும் இன்றி, 120 அலகு தேயிலையும் + 80 அலகு துணியும் அடைகின்றது.

திரும்பச் சொல்வதென்றால், இந்தக் கணக்கு உதாரணம் மிகமிக எளிமையாக்கப்பெற்றுள்ளது. ஆனாலும், இது மிக அடிப்படையான கருத்தை அருமையாகத் தெளிவாக்கியிருக்கிறது ; சிறப்புத் தேர்ச்சியாலும், வாணிப உறவாலும் ஏற்படும் நலன்களை அழகாகச் சுட்டிக் காட்டியிருக்கிறது ; வாழும் உண்மை உலகத்தோடு, இந்த உதாரணத்தைப் பொருத்திக்கொள்ளுவதற்குச் சில மாறுதல்களைச்

செய்யவேண்டுமென்றாலும், இந்த அளவில் இந்த உதாரணம் சரியாகவே இருக்கின்றது. இந்த உதாரணத்தில் செய்யவேண்டிய மாறுதல்களைப்பற்றிச் சில சொல்லுகின்றேன். நாம் கணக்கிட்டுக் கொள்ளவேண்டிய அம் மாறுதல்களாவன: (a) போக்குவரத்துச் செலவுகள். (b) இரு நாட்டு வாணிபமன்று; பலநாட்டு வாணிபம். (c) இரு பொருள்மட்டும் அன்று; பல பொருள்கள். (d) ஒரே மாதிரியான விலை விகிதங்களல்ல; அடிக்கடி மாறும் பிற வாய்ப்புப் பெறுமான விலை விகிதங்கள்.

(a) போக்குவரத்துச் செலவுகள், பன்னாட்டு வாணிபத்தால் கிடைக்கும் இலாபங்களைக் குறைக்கின்றன. பொருளை இறக்குமதி செய்யும் நாடு, போக்குவரத்துச் செலவையும் பண்டங்கட்கு விலையையும் கொடுக்கவேண்டும். (இவ்விதம் A-ன் துணி விலையும், B-ன் தேயிலை விலையும், போக்குவரத்துச் செலவு காரணமாக 1 பவுனுக்கு மேல் ஆகிவிடும்.) சில சமயங்களில், உள்நாட்டில் உற்பத்தி செய்யும் செலவிற்கு அதிகமாகப் போக்குவரத்துச் செலவுகள் ஏற்பட்டுவிடுவதுண்டு. அம்மாதிரி நேர்ந்தால் வாணிபமே நடக்காதுபோய்விடும்.

போக்குவரத்துச் செலவுக் குறைப்பு, பண்டங்களைப் பாதுகாத்துப் பேணிவரும் முறைகள் (குளிர்பதனம், உலர்பதனம் முதலிய முறைகள்) மிகுதியான சிறப்புத் தேர்ச்சிக்கும், வாணிப மிகுதிக்கும் உதவுகின்றன. உழைப்பாளர் பணிகள், அழிந்துபோகும் பண்டங்கள் முதலியன ஏற்றிச் செல்லுதற்கு இலாயக்கற்றவை. ஆனால், சுற்றுலா வரும் பயணிகள், அவை கிடைக்கும் நாடுகட்குச் சென்று, நேரடியாக அவ்விடங்களிலேயே வாங்கிச் செல்லலாம்.

(b) இரு நாடுகள் மட்டும்தானா உள்ளன; எத்தனையோ நாடுகள் இருக்கின்றன. உலகத்தின் எஞ்சிய நாடுகள் எல்லாம், ஒரு நாட்டிற்குத் தேவைப்படும் ஆற்றல் வாய்ந்த அயல்நாட்டுச் சந்தைகளையும், அயல்நாட்டுச் சாதன அளிப்புகளையும் எளிதில் வழங்கக் காத்திருக்கின்றன. வாணிபம் என்பது பன்னேக்கு உடையது. எனவே, இரு நாடுகளிடையேமட்டும் ஏற்படும் வாணிபத்தில்மட்டும் சமநிலை ஏற்படவேண்டுமென்ற அவசியமில்லை. ஓர் எளிய உதாரணத்தைக்கொண்டு விளக்குவோம். மேற்கு ஆப்பிரிக்கா, அமெரிக்க நாட்டிற்கு கொக்கோவை விற்று டாலர்களைப் பெறுகிறது; இந்த டாலர்களைப் பிரிட்டனிடம் கொடுத்து இயந்திர உற்பத்திப் பொருள்களையும் துணிவகைகளையும் வாங்கிக் கொள்ளுகிறது; கிரேட் பிரிட்டன் இதே டாலர்களை உபயோகித்து, அமெரிக்காவிடமிருந்து பருத்தி, புகையிலை முதலியவற்றை வாங்கிக் கொள்ளுகிறது.

நம் உதாரணத்தில் உள்ள Aயைப்போல கிரேட் பிரிட்டனை நாம் எடுத்துக்கொண்டால், எஞ்சிய நாடுகளையெல்லாம் B என்பதோடு சேர்த்துவிட வேண்டும். (ஆனால், நாம் 'தேயிலை' என்பதற்குப் பதிலியாக பிரிட்டனின் ஏற்றுமதிகளையும், 'துணி' என்பதற்குப் பதிலியாக பிரிட்டனின் இறக்குமதிகளையும் மாற்றியமைக்க வேண்டி யிருந்தாலும், பொதுவான கருத்துகள் சரியாகப் பொருந்தியே அமைந்துள்ளன.)

(c) இரு பண்டங்கள் மட்டுந்தானா உள்ளன. எத்தனையோ பொருள்களில் பன்னாட்டு வாணிபம் செய்ய முடியும். நம்முடைய உதாரணத்தில், A என்ற நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் எல்லாவிதமான பொருள்களையும் 'தேயிலை' குறிக்கிறது. A என்ற நாட்டிற்குள் இறக்குமதி செய்யப்படும் எல்லாவிதமான பொருள் களையும் 'துணி' குறிக்கிறது.

ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்கள் தவிர, ரொட்டி, திரவப்பால் முதலிய பொருள்கள், பணிகள், உள்நாட்டுப் போக்குவரத்துகள் முதலிய செயல்கள் என்பனவெல்லாம் ஒரு நாட்டில் ஆக்கப்படுகின் றன; இவையெல்லாம் உள்நாட்டிற்கு உரியன; எனவே, ஏற்று மதிக்கோ இறக்குமதிக்கோ இவை ஆளாவதில்லை.

A என்ற நாடு, எப் பொருள்களை எந்த அளவில் ஏற்றுமதி செய்யும், அல்லது இறக்குமதி செய்யும் என்பதைப் பல பொருள்களுக் கும் உரிய உலகத் தேவை, அவற்றின் தராதர உற்பத்திச் செலவு முதலியவற்றைச் சார்ந்தே முடிவு செய்ய வேண்டும். நிலைமாற்றம் காரணமாக, ஒரு நாடு, தான் முன்னர் ஏற்றுமதி செய்த பொருள்களை, இப்பொழுது இறக்குமதி செய்துகொள்ள நேரிடலாம் (அமெரிக்கா இப்பொழுது மரங்களை இறக்குமதி செய்கிறது); அல்லது முன்னர் தான் இறக்குமதி செய்த பொருள்களை இப்பொழுது ஏற்றுமதி செய்ய நேரிடலாம் (ஜப்பான் இப்பொழுது எஃகு ஏற்றுமதி செய் கிறது). என்றாலும், A என்ற நாடு, தான் இறக்குமதி செய்யும் எந்த ஒரு பொருளையும்விட, தான் ஏற்றுமதி செய்யும் எந்த ஒரு பொருளி லும் மிகுதியான தராதர நலனைப் பெற்றிருக்கும் என்பதை நாம் உறுதியாக நம்பலாம். இதனால் அந்த நாடு, தன்னிறைவு முறைகளை மேற்கொள்ளுவதால் பெறக்கூடிய நலன்களைவிட, உற்பத்தியில் சிறப்புத் தேர்ச்சியும், வாணிபத்தில் பன்னாட்டு உறவும் கொள்ளுவ தால் அதிகப்படியான உண்மை வருமானத்தைப் பெறமுடியும் என்ப தில் சந்தேகமில்லை. உதாரணமாக, கிரேட் பிரிட்டன் தனது தொழி லாளர்களில் ஒரு பகுதியினரையும், இதர காரணிகளையும் ஈடுபடுத்தி இயந்திரத் துறைப் பொருட்களையும் இதர ஏற்றுமதிப் பொருள் களையும் உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்கிறது. இதற்கு மாறாக,

உணவுப் பண்டங்களையும் மூலப் பொருள்களையும் இறக்குமதி செய்கிறது. இதனால் உணவுப் பண்டங்கள், மூலப் பொருள்கள் ஆகியவற்றை அதிகமான அளவிற்குப் பெறுகிறது. இதற்கு மாறாக, ஏற்றுமதித்துறைத் தொழில்களை மூடிவிட்டு, அக் காரணிகளையெல்லாம் உள்நாட்டில் உணவுப் பொருள் உற்பத்திக்கும், மூலப் பொருள் ஆக்கத்திற்கும் ஈடுபடுத்துவதால் பெறக்கூடிய இலாபத்தைவிட, இப் பொருள்களை வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்துகொண்டு, இவற்றிற்குரிய காரணிகளை ஏற்றுமதித் துறையில் ஈடுபடுத்துவதால், பிரிட்டன் பெரும்பான்மை நலன்களைப் பெற்றுக்கொள்ளுகிறது.

(d) எனது மேற்குறித்த கணக்கியல் உதாரணம், A நாட்டில் உள்ள காரணிகளின் தொகுதி 2 அலகு தேயிலையோ அல்லது 1-அலகு துணியோ எப்போதும் உற்பத்தி செய்யுமென்றும், இவற்றால் தனித்தனியாக எவ்வளவு தேயிலை உற்பத்தி செய்யமுடிந்தாலும் (இதனால் குறைந்த அளவு துணி உற்பத்தியானாலும்) அது முதலில் குறிப்பிட்ட உற்பத்தியைப் பாதிக்காது என்றும் அனுமானித்துக் கொள்ளுகிறது. அதாவது, தேயிலைக்கும் துணிக்கும் இடையில் 2-க்கு 1 என்ற கணக்கில் தொடர்ந்த பிற வாய்ப்புப் பெறுமானத்தை, விகிதத்தை (opportunity cost ratio) ஏற்றுக்கொள்ளுகிறது. இது 'B' நாட்டிற்கு மறுதலையாகப் பொருந்தும்.

ஆனால், நடைமுறையில் இந்த அனுமானம் சரியில்லை. உழைப்பு, நிலம் முதலியனவும், இதர காரணிகளும் ஒரே தன்மையுடையன வல்ல. A நாட்டில் சில காரணிகள் தேயிலை உற்பத்திக்குத் தகுதியற்றனவாக (உதாரணமாக, சில பகுதி நிலங்கள்) இருந்தே தீர வேண்டும்; சில காரணிகள் தராதரமாக துணி உற்பத்திக்கு ஏற்றனவாக (நிலம்) இருத்தல்கூடும். எனவே, A தனது தேயிலை உற்பத்தியைப் பெருக்கிக்கொண்டே சென்று துணி உற்பத்தியைக் குறைத்துக்கொண்டே வந்தால், இதன் பிற வாய்ப்புப் பெறுமான விகிதம் மாறிவிடும். தேயிலைத் தொழிலில் மிகமிகத் தகுதியற்ற காரணிகளைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்துக்கொள்ளுவதால் (துணி உற்பத்தியில் அதிகப்படியான அலகையும் விட்டுவிட்டு) இந்த நாடு தேயிலை உற்பத்தியில் அதிகப்படியான 2 அலகு தேயிலையைப் பெற்றுவிடுவதில்லை; இதற்கு மாறாக $1\frac{3}{4}$ அலகு, பிறகு $1\frac{1}{2}$ அலகு, பிறகு $1\frac{1}{4}$ அலகு எனப் படிப்படியாக அதன் உற்பத்தி அளவு குறையத் தொடங்குகிறது. இந்த நிலையில் A-க்கு ஏற்படும் பொருளாதாரப் பிரச்சினை, தனது காரணிகளையெல்லாம் மிகுந்த விளைவுக்குப் பயன்படுத்துவதுதான். துணிகளை மாற்றாகப் பெறுதற்காகத் தேயிலையை ஏற்றுமதிக்கு உற்பத்தி செய்வதைவிட, உள்நாட்டிலேயே நேரடியாகத் துணியை மிகுதியாக உற்பத்தி செய்து

தரக்கூடிய அளவில் இந்த நாட்டிடம் சில காரணிகள் இருக்குமானால், அவற்றைப் பயன்படுத்திக்கொண்டு நேரடியாகத் துணி உற்பத்தியில் ஈடுபடுவதால் மிகுந்த பயன்பெறக்கூடும்.

முழுக்க முழுக்கத் தடையிலா வாணிபத்தில்கூட ஒரு நாடு, தான் பெரும்பாலும் இறக்குமதி செய்யும் பொருளை, உள்நாட்டிலேயே உற்பத்தி செய்ய முடிவதற்குரிய காரணத்தை இது விளக்குகிறது. உதாரணமாக, கிரேட் பிரிட்டனிடம் கோதுமை பயிரிடுதற்குப் பொருத்தமான ஒரு மில்லியன் ஏகரா நிலம் உள்ளது என வைத்துக் கொள்ளுவோம். கிரேட் பிரிட்டன் மிகுதியும் கோதுமையை இறக்குமதி செய்யும் நாடாக இருந்தாலும், இந்த நிலப்பரப்பைப் பயன்படுத்தி இறக்குமதிக் கோதுமையைவிட மலிவாக உள்நாட்டி லேயே கோதுமையைப் பயிரிடலாம். (கோதுமைப் பயிரைவிட இதர தானியப் பயிரால் அதிக வருமானம் கிடைக்கும் என்று கருதினால் ஒழிய) இந் நிலத்தில் தொடர்ந்து கோதுமையைப் பயிரிட்டு வரலாம்.[1]

ஒரு நாடு, தான் இறக்குமதி செய்துவந்த சிலவகைப் பொருள் களை, உள்நாட்டிலேயே உற்பத்தி செய்து, வெளி நாட்டிற்கும் ஏற்றுமதி செய்வதற்கு, வேறு சில காரணங்களும் இருக்கக்கூடும். ஒரு நாடு, மிகப் பரந்த நிலப்பரப்போடிருக்கலாம்; இதில் ஒரு பகுதி இறக்குமதி செய்யும் பொருள்களை, இன்னொரு பகுதி உற்பத்தியாக்கி ஏற்றுமதி செய்யலாம். இவ்விதமாக ஹாம்பர்க் நகரம், கிரேட் பிரிட்டனில் இருந்து நிலக்கரியை இறக்குமதி செய்கிறது; ஆனால், ரூர் நகரம், உள்நாட்டுக்குப் போதுமான நிலக்கரியை வெட்டி எடுப்பதோடு வெளிநாட்டிற்கும் ஏற்றுமதி செய்கிறது. ஏனென்றால், ரூர் நகரிலிருந்து ஹாம்பர்க்கிற்கு நிலக்கரியை அனுப்ப ஏற்படும் அனுப்புச் செலவைவிட, பிரிட்டனிலிருந்து கடல் வழியாக ஹாம்பர்க்கிற்கு அனுப்புவதில் குறைந்த செலவே ஏற்படு கிறது. மேலும், ஒரு பண்டத்திற்குப் பொதுவாகப் பெயர் ஒரே மாதிரியாக இருந்தாலும் இறக்குமதி செய்யப்படும் பண்டம், உள் நாட்டில் உற்பத்தியாகும் பண்டத்தைவிட முற்றிலும் தரத்தில் மாறுபட்டதாக இருக்கலாம். ஃபிரான்சு தான் ஏற்றுமதி செய்வதைவிட மிகப் பெரிய அளவில் மது வகையை இறக்குமதி செய்கிறது; ஆனால், அது இறக்குமதி செய்யும் மதுவைவிட ஏற்றுமதி செய்யும் மது வகைகள் மிகச் சிறந்த தரம் உடையவை. அமெரிக்கா, இறக்குமதி செய்யும் பிரிட்டிஷ் கார்களைவிட, அது தானே ஆக்கி ஏற்றுமதி

[1] உண்மையில் கிரேட் பிரிட்டன், இரண்டு மில்லியன் ஏக்கராவுக்கும் மேற் பட்ட கோதுமை விளையும் பெரிய நிலப்பரப்பைப் பேணுதற்காகக் கோதுமை வளர்ப்பை ஆதரிக்கிறது. இந்த நிலப்பரப்பில் கோதுமைப் பயிருக்கு அவ்வளவு தகுதியற்ற பகுதிகளும் உள்ளன.

செய்யும் கார்கள் முற்றிலும் வேறுபட்டவை. தவிரவும் ஒரு நாடு சில குறிப்பிட்ட பொருள்களை வெளி நாடுகளிலிருந்து மிக மலிவாக இறக்குமதி செய்வதற்குப் பதிலாக, அவற்றை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்தாகவேண்டுமென்று வற்புறுத்தி, ஆதரவும் அளிக்கக் கூடும். இவ்விதம் கிரேட் பிரிட்டன், தான் உற்பத்தி செய்வதைவிட மிக மலிவாகச் சர்க்கரையை இறக்குமதி செய்ய முடியுமாயினும், அதைவிட்டு உள்நாட்டிலேயே பீட் சர்க்கரையை ஆக்கும்படி தூண்டுகிறது; அத் தொழிலுக்கு மானியத் தொகையும் அளித்து ஊக்குகிறது.

## 3 தாராதரச் செலவுக் கோட்பாடு
## (The Principle of Comparative Costs)

மூன்று வகையான செலவுகள் உள்ளன; பணச் செலவு, காரணச் செலவு, பிற வாய்ப்புப் பெறுமானச் செலவு (opportunity cost).

ஒரு பொருளை ஏற்றுமதி செய்யும் நாட்டில், அதை இறக்குமதி செய்யும் நாட்டைவிட, அப் பொருளை உற்பத்தி செய்வதற்குரிய பணச் செலவு சாதாரணமாக குறைவாகவே இருக்கும். அப்படியானுல் இப்பொழுது இக் கோட்பாட்டை வைத்துக்கொண்டு நாம் ஏன் குழம்பி நிற்கவேண்டும்? எங்கு ஒரு பொருளை உற்பத்தி. செய்யும் பணச் செலவுகள் (சந்தைப்படுத்தல் உட்பட) மிகக் குறைவாயுள்ளனவோ, அங்குதான் அப் பொருளும் உற்பத்தி செய்யப்படும் என்று எளிதாகச் சொல்லிவிடக்கூடாதா?

இதற்குக் காரணம், மேற்குறித்த கருத்து உண்மையாளுலும் தெளிவின்றி இருப்பதுதான். உற்பத்திக்குரிய பணச் செலவு என்பது, பல காரணிகட்கு அளிக்கப்பட்ட விலைகளால் ஆக்கப்பட்டதாகும். இவ் விலைகள், பன்னாட்டு வாணிபமே இல்லையென்ருல், இப்பொழுது இருப்பதைவிட வேறு வகையாக இருக்கக்கூடும். ஒரு நாட்டில் நிலவும் காரணிச் செலவுகளும் (factor costs), அவற்றின் காரணமாக அந் நாட்டில் நிலவும் பணச் செலவுகளும் ஓரளவு பன்னாட்டு வாணிபத்தின் விளைவால் ஏற்படுவனவேயாகும். எனவே, இத்தகைய வாணிபம் ஏற்படுவதற்குச் சரியான அடிப்படை விளக்கம் நமக்குத் தேவைப்படுகிறது.

ஒரு பொருளின் காரணிச் செலவு என்பதன் மூலம் இவ்விடத்தில் நான் கருதுவது என்னவென்ருல், அப் பொருளை ஆக்குதற்குத் தேவைப்படும் உழைப்பு, இதர காரணிகள் ஆகிய

வற்றின் அளவேயாகும். பொருள்களெல்லாம் எங்கு அவற்றின் காரணிச் செலவுகள் மிகக் குறைவாக உள்ளனவோ அங்குதான் சாதாரணமாக உற்பத்தி செய்யப்படுகின்றன என்பது சரியன்று. நாம் 6ஆம் அதிகாரத்தில் கண்டதைப்போல, ஒரு சமுதாயம் ஒரு குறிப்பிட்ட காரணியைப் பயன்கொள்ளும்பொழுது எதற்கு உபயோகப் படுத்துவதால் அக் காரணிக்குச் சிறந்த மதிப்புக் கிடைக்கிறதோ, அக் குறிப்பிட்ட பொருளைச் செய்தற்கே அக் காரணியைப் பயன் கொள்ள முற்படும். ஒரு மருத்துவர் தாம் சிறந்த டைப்பிஸ்டாக (typist) இருந்தாலும், மருத்துவம் என்ற தொழிலிலே மிகவும் பயனுள்ளவர் ஆகிறார். ஃபிரான்சு, வட ஆப்பிரிக்கா முதலிய பிற இடங்களிலிருந்து இறக்குமதி செய்வதைவிடத் தனக்கு வேண்டிய மது வகைகளைத் தானே மிகுதியாக உற்பத்தி செய்துகொள்ள முடியும்; அதுவும் குறைந்த அளவு உழைப்பு, நிலப்பரப்பு இவற்றைக் கொண்டே உற்பத்தி செய்துகொள்ளவும் இயலும். ஆனால், இவ்விதம் செய்வதால் இப்பொழுது மிக மதிப்புள்ள தொழில்களில் (உதாரண மாக, கோதுமை பயிரிடல்) ஈடுபடுத்தப்பட்டுள்ள நிலங்களை முந்திரிப் பயிருக்கு மாற்றவேண்டியதிருக்கும். ஃபிரான்சு நாட்டு மது தயாரிக்கும் மாவட்டங்களில் உள்ள நிலங்கள், திராட்சைத் தோட்டங்களைப் பேணுவதால் மிகுந்த பலன் அளிக்கின்றன; ஆனால், இதர நிலங்களெல்லாம் பூசாரம், பருவச் சூழல் முதலிய வேறுபாடுகள் காரணமாக வேறு துறைகளில் நன்கு பயன்படுத்தப்பெறுகின்றன. இந் நிலங்கள் வட ஆப்பிரிக்காவின் நிலத்தைவிட ஏகரா ஒன்றுக்கு அதிகமான சிறந்த திராட்சை விளைவைக் கொடுக்கக்கூடும்; என்றாலும், திராட்சைக்குப் பதிலாக வேறு ஒரு பயிருக்குப் பயன்படு வதன்மூலம் மிகுதியான நிகர வருமானத்தைத் தருகின்றன.

ஒரு பொருளின் ஓர் அலகை உற்பத்தி செய்வதற்கு ஆகும் பிற வாய்ப்புப் பெறுமானம் என்பது, அதே காரணிகளைக்கொண்டு அதற்குப் பதிலாக உற்பத்தி செய்யக்கூடிய அடுத்த சிறந்த பொருளின் விலைக்குச் சமானமான செலவு ஆகும். பன்னாடு களிடையே வாணிபம் நிகழ்வதற்கு உரிய அடிப்படைக் காரணம், பல்வேறு நாடுகளிடையே உள்ள பிற வாய்ப்புப் பெறுமானச் செலவுகள் பல்வேறு விகிதங்களில் இருப்பதுதான்.

நான் குறிப்பிட்டுள்ள உதாரணத்தில், தேயிலையை உற்பத்தி செய்வதற்கு உரிய முழுக் காரணிச் செலவு (absolute factor cost) B-யை விட A-ல் குறைவாயிருந்தது. ஓர் அலகு தேயிலையை உற்பத்தி செய்வதற்கு B-க்குத் தேவைப்பட்டதைவிடப் பாதிக் காரணிகளே A-க்குத் தேவைப்பட்டன. தேயிலை உற்பத்தியில் Bயை விட A-க்கு 'முற்றிலும் சிறப்பு வசதி' (absolute advantage)

உண்டு; துணி உற்பத்தியில் Aயை விட B-க்கு ‘முழுச் சிறப்பு வசதி’ உண்டு.

இந்த தராதரச் செலவு அல்லது தராதர வசதி என்னும் கோட்பாடு குறிப்பதென்னவென்றால்—இரு நாடுகள் தாம் ஏற்றுமதி செய்யும் பொருள்களில் ஓரளவு சிறப்பு வசதி பெற்றிருந்தால், குறைந்த தராதரச் செலவு ஏற்பட்டால்—அவ்விரு நாடுகளும் சிறப்புத் தேர்ச்சி கொள்ளுதலிலும், வெளிநாட்டு வாணிபம் செய்தலிலும் சிறந்த பலன் பெறும் என்பதுவே.

A, B என்ற இரு நாடுகளிலும் ஒரே அளவுள்ள தொழிலாளர்கள் இருப்பதாகக் கொள்ளுவோம். A நாட்டில் உள்ளவர்களால் 200 அலகு தேயிலை மட்டுமோ, அல்லது 200 அலகு துணி மட்டுமோ, அல்லது 100 அலகு தேயிலையும்+100 அலகு துணியுமோ உற்பத்தி செய்யமுடிகிறதென வைத்துக்கொள்ளுவோம். இதனால், தேயிலையின் ஓர் உபரி அலகுக்கு ஆகும் செலவு, துணியின் ஓர் உபரி அலகுக்கு ஆகும் செலவுக்கு நிகராகவும், துணிக்கு ஆகும் செலவு தேயிலைக்கு ஆகும் செலவுக்குச் சமமாகவும் இருப்பதாகவும் வைத்துக்கொள்ளுவோம். அதாவது, பிற வாய்ப்புப் பெறுமானச் செலவு விகிதம் 1 அலகு தேயிலைக்கும் 1 அலகு துணிக்கும் ஒரே நிலையில் இருக்கிறது என்பது இதற்குப் பொருளாகும்.

B நாட்டில் உள்ள தொழிலாளர்களால், 80 தேயிலையோ அல்லது 160 துணியோ, அல்லது 40 தேயிலையும் 80 துணியும் சேர்த்தோ உற்பத்தி செய்யமுடிகிறது எனக் கொள்ளுவோம். இதனால் துணியின் ஓர் உபரி அலகுக்கு ஆகும் செலவு தேயிலையின் அரை அலகுக்கு ஆகும் செலவுக்கு நிகராகவும், தேயிலையின் ஓர் உபரி அலகுக்கு ஆகும் செலவு, துணியின் 2 அலகுக்கு ஆகும் செலவுக்குச் சமமாகவும் இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அதாவது, பிற வாய்ப்புப் பெறுமானச் செலவு விகிதம், 1 அலகு தேயிலைக்கு 2 அலகு துணியென ஒரே நிலையில் இருக்கிறது. இதனால் இவ்விரு நாடுகளின் பிற வாய்ப்புப் பெறுமானச் செலவுகள் வித்தியாசமாக இருப்பது தெரிகிறது. எனவே, இவ்விரு நாடுகளும் உள்நாட்டில் சிறப்புத் தேர்ச்சியையும், வெளிநாட்டில் வாணிபத்தையும் மேற்கொண்டு நிறைந்த பலன்களை அடையும்.

உதாரணமாக, A தனியாகப் பிரிந்து 150 அலகு தேயிலையும் + 50 அலகு துணியும், B தனியாகப் பிரிந்து 40 அலகு தேயிலையும் +80 அலகு துணியும் உற்பத்தி செய்வதாகக் கொள்ளுவோம். இதற்குப் பதிலாக, A தேயிலை உற்பத்தியில்மட்டும் சிறப்புத் தேர்ச்சி கொண்டு 200 அலகுகளையும், B துணி உற்பத்தியில்மட்டும் சிறப்புத்

தேர்ச்சி கொண்டு 160 அலகுகளையும் உற்பத்தி செய்வதாகவும், இவ்விரு நாடுகளிடையே உள்ள வாணிப ஒப்பந்தம் $1\frac{1}{8}$ அலகு துணிக்கு நிகராக 1 அலகு தேயிலை என்று இருப்பதாகவும் வைத்துக் கொள்ளுவோம். A 45 தேயிலையை B-க்குக் கொடுத்து, மாற்றாக அதனுடைய 60 துணிகளை வாங்குவதாகக் கொள்ளுவோம். இப்பொழுது Aயிடம் 155 தேயிலையும் +60 துணியும் இருக்கும். Bயிடம் 45 தேயிலையும் +100 துணியும் இருக்கும். இவ்விதச் சிறப்புத் தேர்ச்சியாலும், மாற்று வாணிபத்தாலும் இரு நாடுகளுமே பயனடைந்துள்ளன என்பது வெளிப்படையாகத் தெரிகிறது.

A-ல் உள்ள தொழிலாளி ஒருவனால், B-ல் உள்ள தொழிலாளியைக் காட்டிலும் 25 சதவீதம் அதிகத் துணி உற்பத்தி செய்ய முடியுமென்று அனுமானிப்போம். என்றாலும், A-க்கு உள்நாட்டில் உற்பத்தி செய்வதைவிட, Bயிடமிருந்து இறக்குமதி செய்வதே மிகு நலன் அளிக்கிறது. ஏனென்றால், A ஏற்றுமதி செய்யும் ஒவ்வோர் அலகு தேயிலைக்கும் மாற்றாக, அது $1\frac{1}{8}$ அலகு துணியைப் பெறமுடியும். இதற்குப் பதிலாக, தன் தொழிலாளரையெல்லாம் துணியையே உற்பத்தி செய்யச் சொன்னால், இதனால் 1 அலகு தேயிலை உற்பத்தி செய்யக்கூடிய தொழிலாளரைக்கொண்டு 1 அலகு துணியைமட்டுமே உற்பத்தி செய்யமுடியும்; மாற்று வாணிபத்தால் பெறக்கூடிய $\frac{1}{8}$ அலகு துணி குறைந்துவிடும்.

இதை வேறுவிதமாய்ப் பின்வருமாறு கூறலாம்: அதாவது, தேயிலைக்கும் துணிக்கும் உரிய A-ன் முழுச் செலவுகள் (சாதனச் செலவுகள்), Bஐவிடக் குறைவாயுள்ளன; ஆனாலும், A-ன் தாராதர வசதி தேயிலை உற்பத்தியிலேயே இருக்கிறது. ஏனென்றால், தேயிலைக்கு ஏற்படும் தாராதரச் செலவு அங்குக் குறைவாயிருக்கிறது.

இங்கு, மறைவான ஒருவகை மயக்க நிலை ஏற்படுகிறது. A-ன் தொழிலாளர்கள், B-ன் தொழிலாளர்களைவிட எப்பொருளையும் மிகுந்த திறமையுடன் உற்பத்தி செய்யமுடியுமென்றால், அவர்கள் சிறந்த தொழிலாளர்களாயிருக்கவேண்டும்; அல்லது அவர்கட்கு இயற்கைச் சாதன வசதிகள் நிறையக் கிடைக்கவேண்டும்; அல்லது நிறைய மூலதன உதவி இருக்கவேண்டும்; அல்லது அவர்கள் சிறந்த உற்பத்தி முறைகளை மேற்கொண்டிருக்கவேண்டும். A-ல் எந்தப் பொருளையும் அதிக உற்பத்தி செய்தால், இரு நாடுகளிலும் உள்ள 'காரணிகளின் அளவுகள்' (quantity of factors) ஒரே மாதிரியாகவே இருக்கும் என்று கொள்ளுவது, ஓரளவு தவறுடையது போலத் தோன்றுகிறது.

பன்னாட்டு வாணிபத்தால் கிடைக்கும் நலன்களைப்பற்றி விளக்குவதற்கு, பிற வாய்ப்புப் பெறுமானச் செலவு விகிதங்களில் உள்ள

வித்தியாசங்களைமட்டும் குறிப்பிட்டால் போதும். இவ் விகிதங்கள் ஒரே நிலையில் இருப்பதில்லை என்பது உண்மைதான். ஆனால்,




உற்பத்தி செய்யப்படும் பல்வேறு பொருள்களின் அளவுகள், அவற்றின் தராதர விலைகளுக்குச் சமமாகப் பிற வாய்ப்புப் பெறுமான விகிதங்கள் அமையும் அளவோடு பொருந்தி நிற்கும். உதாரணமாக, A தன் நாட்டிலேயே துணி உற்பத்தி செய்ய முடியும். இந்த நாடு தனது தேயிலை உற்பத்தியை விரிவாக்கிக்கொண்டே செல்லும்; எது வரையெனில், துணி உற்பத்தியிலிருந்து தேயிலை உற்பத்திக்கு மாற்றப்பட்ட இதர சாதனங்கள் உற்பத்தி செய்யாமல் விடப்பட்ட ஒவ்வொரு $1\frac{1}{3}$ அலகு துணிக்கும் நிகராக 1 அலகு தேயிலையை உற்பத்தி செய்யும். இதனால், 1 அலகு தேயிலையின் விலை $1\frac{1}{3}$ அலகு துணிக்குச் சமமாகவே இருக்கும். எனவே, 1 அலகு தேயிலைக்குக் குறைவாக உற்பத்தி செய்வதைக் காட்டிலும், $1\frac{1}{3}$ அலகு துணியை ஆக்குவதால், அச் சாதனங்கட்கு மிகுந்த நலன் கிடைக்கும்; அதைப் போல, $1\frac{1}{3}$ அலகு துணிக்குக் குறைவாக உற்பத்தி செய்வதைக் காட்டிலும், 1 அலகு தேயிலையை ஆக்குவதால், அச் சாதனங்கட்கு மிகுந்த இலாபம் கிடைக்கும். இந் நிலை அப்படியே B நாட்டிற்கும் பொருந்தும். சமநிலையாக, இவ்விரு நாடுகளின் தராதரப் பிற வாய்ப்புப் பெறுமானங்கள், ஒன்றுக்குப் பதிலாக இன்னொன்றை ஆக்குவதால் ஏற்படும் அளவுகட்கு உரிய தராதர விலைகட்குச் சமமாக அமைந்துவிடும்.

முன்னர்க் குறித்துள்ள வரைபடம், A நாட்டின் உற்பத்திச் சாத்தியத்தைக் குறிக்கிறது. இந் நாடு துணி உற்பத்தியைவிட்டு OB தேயிலையைமட்டும் உற்பத்தி செய்யலாம்; அல்லது தேயிலை

உற்பத்தியைவிட்டு OA துணியை உற்பத்தி செய்யலாம் ; அல்லது தேயிலே, துணி இவ்விரண்டையும் சேர்ந்தாற்போல, வரைபடத்தில் உள்ள AB என்ற வளைவு காட்டும் விளிம்பிற்குள் உற்பத்தி செய்து கொள்ளலாம்.

AB என்ற வளைவு நேராக அமையாது, இடையில் பிதுங்கிக் கொண்டிருக்கிறது. இப் பிதுக்கம், தேயிலே உற்பத்தி உயர்கையில், அதிகப்படியான ஓர் அலகு தேயிலே உற்பத்தி செய்வதற்காக, விட்டுக்கொடுக்கப்படவேண்டிய துணி உற்பத்தியின் அளவைக் குறிக்கிறது. (AB என்ற வளைவை, B-யை நோக்கிச் செலுத்துக.)

பன்னாட்டு வாணிபமானது, A என்ற நாட்டிற்கு, அது ஏற்றுமதி செய்யும் 1 அலகு தேயிலேக்கு நிகராக $1\frac{1}{3}$ அலகு துணியைப் பெறுவதற்கு வாய்ப்பளித்தால், இந்த நாடு தனது துணி உற்பத்தியைக் குறைத்துக்கொண்டு, தேயிலே உற்பத்தியில் தீவிரமாக ஈடுபடும். ஆனால், இந்த நாடு, AB என்ற வளைகோட்டில், B-யை நோக்கிச் செல்லுகையில், P என்ற நிலேக்கு வரும். இந்த நிலேயில், உபரியாக ஓர் அலகு தேயிலேயை உற்பத்தி செய்வதற்காக, இது $1\frac{1}{3}$ அலகு துணி உற்பத்தியை விட்டுவிட வேண்டியதேற்படும். இந்த P என்ற நிலேக்கு அப்பால் சென்றால், இன்னும் அதிகமான தேயிலே உற்பத்திக்காக, இன்னும் அதிகமான அளவில் துணி உற்பத்தியை, (3, 4 முதலிய அலகுகளே) விட்டுக்கொடுக்க வேண்டியதிருக்கும். இது, B-யை நெருங்குகையில் ஏற்படும் செங்குத்துச் சரிவால் விளக்கப்பட்டிருக்கிறது. இங்ஙனம் ஏற்படுவதற்கு உரிய பின்னணி காரணமாக, இந்த நாட்டுச் சில பகுதி நிலங்கள் தேயிலே உற்பத்திக்குத் தகுதியற்றனவாகவும், அதே சமயத்தில் பருத்தி உற்பத்திக்கு ஏற்றனவாகவும் இருக்கக்கூடும். இந்த நாடு உற்பத்தி நெறியில் P என்ற எல்லேயைத் தாண்டியதும், இத்தகைய பருத்திக்கு ஏற்ற நிலங்களேத் தேயிலேக்கு மாற்ற நேருவதாலேயே முன்னர்க் குறித்த வீழ்ச்சிகள் ஏற்பட்டிருக்கலாம்.

OT தேயிலேயும் OL துணியும் உற்பத்தி செய்ததால், P என்ற இடத்தில் சமநிலே ஏற்படுவதைக் காண்கிறோம். RS என்ற உபரி அலகு தேயிலேயை உற்பத்தி செய்வதென்றால், PR என்ற அளவுக்குத் துணி உற்பத்தி குறைய நேரும். RSஐ விட $1\frac{1}{3}$ மடங்குடையது PR. தேயிலேயின் ஓர் அலகு விலே, துணியின் $1\frac{1}{3}$ அலகு விலேக்குச் சமமாகும். எனவே, P என்ற இடத்திலிருந்து வேறு எத்திசையில் செல்வதனாலும் நலன் விளேயப் போவதில்லே. (T′ T′ என்ற சரிவுக் கோட்டால் காட்டப்பட்டுள்ள) பிறவாய்ப்புப் பெறுமானச் செலவுகள், RS, PR என்பனவற்றின் இறுதிநிலே ஆக்க விலேகளேப்போல,

ஒவ்வொன்றிற்கும் ஒரே விகிதத்தில்தான் அமைந்துள்ளன (1-க்கு $1\frac{1}{8}$ அல்லது 3-க்கு 4).




மேற்குறித்த வரைபடம், B நாட்டின் உற்பத்திச் சாத்தியத்தைச் குறிக்கிறது. இந்த நாடு OL துணியும் OT தேயிலேயும் உற்பத்தி செய்து சமநிலேயில் உள்ளது. இது RS என்ற அதிகப்படியான அலகு துணி உற்பத்தி செய்வதற்கு, RP அலகு தேயிலேயை உற்பத்தி செய்யக்கூடிய நிலம் முதலிய இதர சாதனங்களேப் பயன் கொள்ள வேண்டியதிருக்கும். இப் போக்கில் A-யை நோக்கி இன்னும் சற்று அதிகமாகச் சென்ருல், உபரியாகத் துணி அலகு களே உற்பத்தி செய்வதற்காக மிக அதிகமான தேயிலே அளவுகளே விட்டுக்கொடுக்க வேண்டியதிருக்கும். எனவே, இந்த நாடு P என்ற இடத்தில் சமநிலேயில் இருக்கிறது. RP-யைவிட $1\frac{1}{3}$ மடங்கு உடையது RS. T′ T′ என்ற சரிவுக்கோட்டால் காட்டப்பட்டுள்ள, பிற வாய்ப்புப் பெறுமானச் செலவுகள் (முந்திய வரைபடத்தைப் போலவே 3-க்கு 4 என்ற அளவிலேயே உள்ளன), RP, RS என்பன வற்றின் இறுதிநிலே ஆக்கவிலேகளேப்போல, ஒவ்வொன்றிற்கும் ஒரே விகிதத்தில்தான் அமைந்துள்ளன. 1 அலகு தேயிலேயின் விலே (RP) $1\frac{1}{8}$ அலகு துணியின் விலேக்குச் (RS) சரிசமமாகவே இருக்கிறது.

## 4. வாணிப மாற்றுவீதம்
### (The Terms of Trade)

வாணிப மாற்றுவீதங்களைப்பற்றி ஏற்கெனவே 5ஆம் அதிகாரம் முதல் உட்பிரிவில் குறிப்பிட்டுள்ளேன். நமது உதாரணப்படி வாணிப மாற்றுவீதம் என்பது துணிக்கும் தேயிலைக்கும் இடையே உள்ள விலை விகிதமே ஆகும். தேயிலையின் விலை உயர்ந்து துணியின் விலை அப்படியே இருந்துவிட்டால் (அல்லது துணியின் விலைவாசியைவிட தேயிலையின் விலையில் மிகுதியான ஏற்றமும் மிதமான குறைவும் ஏற்பட்டால்) A என்ற தேயிலை ஏற்றுமதி நாட்டிற்கு மிகுந்த சாதகமாகவும், B என்ற தேயிலை இறக்குமதி நாட்டிற்கு மிதமான சாதகமாகவும் வாணிப மாற்றுவீதங்கள் அமைகின்றன.

பிற வாய்ப்புப் பெறுமானங்கள் ஒரே நிலையில் இருந்தால் (A-ல் 1 துணிக்கு 1 தேயிலை, B-ல் 2 துணிக்கு 1 தேயிலை) இவ்விரண்டிற்கும் இடையே ஓரிடத்தில் வாணிப மாற்றுவீதம் தங்கி நிற்கும். A, 1 அலகு தேயிலைக்கு மாற்றாக 1 அலகுக்கும் மேற்பட்ட துணி வேண்டுமென விரும்பும்; ஏனென்றால், ஓர் அலகு துணியை உற்பத்தி செய்வதற்காகத் தனது ஓர் அலகு தேயிலை உற்பத்தியைக் குறைத்துக்கொள்வதன்மூலம் தன் நாட்டிலேயே துணியை அதனால் ஆக்கிக்கொள்ளமுடியும். A, 1 அலகு தேயிலைக்கு மாற்றாக 2 அலகுக்கும் குறைந்த துணியையே கொடுக்க விரும்பும்; ஏனென்றால், தான் ஓர் அலகு தேயிலையை உற்பத்தி செய்தற்காகத் தனது 2 அலகு துணி உற்பத்தியைக் குறைத்துக்கொள்ளுவதன் மூலம் தன் நாட்டிலேயே தேயிலையை அதனால் உற்பத்தி செய்து கொள்ள முடியும்.

இரு நாடுகளிடையேயும் தேயிலை, துணி ஆகிய இரண்டிற்கும் உள்ள இணைப்பான தேவை அட்டவணையைப் பொறுத்தே இவற்றின் வாணிப மாற்றுவீதம் அமையும். உண்மையில், பிற வாய்ப்புப் பெறுமானச் செலவுகள் ஒரேநிலையாக இருப்பதில்லை. தேயிலைக்கும் துணிக்கும் உள்ள நடப்பு விலைகளில் ஒன்றுக்கு மாற்றாக இன்னொன்றைக் கூடவோ, குறைவாகவோ இவ்விரு நாடுகளும் பெற முடியாத அளவில் சமநிலை ஏற்படும். நாம் மேற்குறித்த வரைபடத்தில் காண்பதுபோல, இரு நாடுகளிடையேயும் பிற வாய்ப்புப் பெறுமானங்கள் ஒரே மாதிரியாக இருக்கும்போதும் அவை வாணிப மாற்றுவிகிதங்களைப்போல ஒரே அளவில் இருக்கும் போதுமே சமநிலை ஏற்பட முடியும்.

நாடுகள் பல்வேறுவகைப் பண்டங்களை ஏற்றுமதியும் இறக்குமதியும் செய்கின்றன. ஒரு நாட்டின் வாணிப மாற்றுவீதம்

அல்லது அந்த வீதத்தில் ஏற்படும் மாறுதல்கள், அந்த நாடு இறக்குமதி செய்யும் பொருள்களின் விலை அளவில் ஏற்படும் மாறுதலுக்குத் தராதரமாக, அது ஏற்றுமதி செய்யும் பொருள்களின் விலை அளவில் ஏற்படும் மாறுதலைக்கொண்டு கணக்கிடப்பெறுகின்றன. இந்த விலை அளவுகளை எவ்வாறு கணக்கிட்டறிவது என்ற பிரச்சினையை இது உண்டாக்குகிறது. இதற்கு ஒரு வழி உள்ளது. அதாவது, ஏதாவதோர் ஆண்டைத் தள ஆண்டாக (base year) எடுத்துக்கொள்ளவேண்டும். இங்கே 1950ஆம் ஆண்டைக் கொள்ளுவோம். 1953ஆம் ஆண்டின் ஏற்றுமதிகளை 1950ஆம் ஆண்டோடு மதிப்பிட வேண்டுமானால் என்ன செய்யவேண்டும்? 1953-ல் ஏற்றுமதிகள் உண்மையில் 105-க்கு விற்றன; ஆனால், 1950 விலையில் அவை 100-க்கு மட்டுமே விற்பனை ஆகியிருக்கும். எனவே, ஏற்றுமதி விலை அளவு 1950ஐ விட இப்பொழுது 5 சதவீதம் உயர்ந்திருக்கிறது. இதைப்போலவே இறக்குமதிக்கும் கணக்கிட்டறியலாம். இறக்குமதிப் பொருள்களின் விலை அளவு இப்பொழுது 2 சதவீதம் மட்டுமே உயர்ந்திருப்பதாகக் கொள்ளுவோம். இதிலிருந்து 1950ஐ விட 1953-ல் வாணிப மாற்றுவீதம் 3 சதவீதம் சாதகமாக உள்ளது என்று முடிவு கட்டலாம்; அதாவது, ஏற்றுமதியின் ஓர் அலகு இப்பொழுது 1950ஐ விட 3 சதவீதம் அதிகமான இறக்குமதி அலகுகளைப் பெறுகிறது எனத் தெளியலாம்.

ஏற்றுமதி இறக்குமதி செய்யப்படும் பொருள்களின் அளவுகள், பல்வேறு பொருள்களால் ஆக்கப்படும் மொத்த விகிதாசாரங்கள், அவற்றின் தராதரங்கள் முதலிய ஒப்புமைகள் எல்லாம் நெடுங்காலத்திற்குக் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்படுகையில் சரியான கணக்கீட்டைத் தரமாட்டா. இக் காரணத்தால் வாணிபக் கழகம் (board of trade) தனது தள நாளைச் (base date) சில ஆண்டுகட்கு ஒரு முறை மாற்றியமைத்துக்கொள்ளுகிறது. கிரேட் பிரிட்டனின் அண்மைக் கால விவரங்கள் வருமாறு :

(தளம் : 1954=100)

| ஆண்டு | (1) இறக்குமதி விலைகள் | (2) ஏற்றுமதி விலைகள் | (3) வாணிப வீதம் [(1)÷(2)] |
|---|---|---|---|
| 1957 | 107 | 111 | 96 |
| 1958 | 99 | 110 | 90 |
| 1959 | 98 | 109 | 90 |
| 1960 | 99 | 111 | 89 |
| 1961 | 97 | 112 | 86 |
| 1962 | 96 | 113 | 85 |

ஒரு நாட்டின் வாணிப வீதம் என்பது, இரு தொகுதிப் பண்டங்கட்குரிய உலக விலைகளிடையே ஏற்படும் உறவால் பெறப்படுவதாகும். ஒரு நாடு ஏற்றுமதி செய்யும் பொருள் வகைகளின் விலைகள், அந்த நாடு இறக்குமதி செய்யும் பொருள் வகைகளின் விலைகள் என்பன அவ்விரு தொகுதிகள் ஆகும். உலக நாடுகளில் பல, பொருள் அளிப்பு நாடு என்ற வகையிலும், அங்காடி என்ற நிலையிலும் போதிய முக்கியத்துவம் பெற்றிருப்பதில்லை; ஏனென்றால், வாணிப வீதத்தைத் தனக்குச் சாதகமாக மாற்றிக்கொள்ளும்வகையில் உலக விலைகளில் மாறுதல்களை உண்டாக்கும் ஆற்றல் இவற்றிற்கு இருப்பதில்லை. ஆனால், ஒரு பொருளை ஏற்றுமதி செய்தற்குப் பெரிதும் பொருள் அளிக்கும் நாடுகள் பல தமக்குள், இதற்காக ஒரு கூட்டணியை ஏற்படுத்திக்கொள்ளக்கூடும். இதைப்பற்றியும் நான், 16ஆம் அதிகாரம் 7ஆம் உட்பிரிவில், பண்டக் கட்டுப்பாட்டுத் திட்டங்கள் என்ற தலைப்பில் விவரித்திருக்கிறேன். இதைப் போலவே, ஒரு நாடு ஒரு பண்டத்தை அதிகப்படியாக வாங்கும் முக்கியமான இறக்குமதி நாடாக இருக்கலாம்; இது அப் பண்டத்தைக் குறைத்து வாங்குவதன்மூலம், அதற்குரிய விலையைக் குறைக்கச் செய்யலாம். 1951 பிற்பகுதியில் தனது கொள்முதலைக் குறைத்துக் கொள்வதன்மூலம் அமெரிக்கா, தான் இறக்குமதி செய்த தகரத்தின் விலையைக் குறையும்படி செய்தது. ஆனால், இம் மாதிரி மிக அபூர்வமாகவே நடக்கக்கூடும்.

இத்தகைய முறைகளைக் கையாண்டு, ஒரு நாட்டால் தனது வாணிப வீதங்களைச் சாதகமாக்கி உயர்த்திக்கொள்ள முடியுமென்றாலும், அதனால் அந்த நாட்டிற்கு நன்மை விளையாமல் போகக்கூடும். உதாரணமாக, கிரேட் பிரிட்டன், தன்னால் முடிந்த அத்தனை பொருளையும் ஏற்றுமதி செய்தே ஆகவேண்டியிருக்கிறது. தனது எஃகுப் பொருள் ஏற்றுமதியைக் குறைப்பதனால், அதற்குரிய உலக விலையை உயர்த்திவிடமுடியும் என்று பிரிட்டன் கருதினால், அது எவ்வளவு பெரிய அறிவீனம்! இப்படிச் செய்வதால் ஓரளவு, தொடக்கத்தில் அதிகமான விலையைப் பெறமுடியும்; ஆனால், ஏற்றுமதி குறைந்து, இதர போட்டியாளர்களும் குறைந்த விலைக்குக் கொடுக்க முன்வந்தால், தனது ஏற்றுமதி அங்காடியையே இழந்துவிடக்கூடிய ஆபத்து, பிரிட்டனுக்கு ஏற்பட்டுவிடும். மேலும், கிரேட் பிரிட்டன், தான் வாங்கும் கோதுமையின் அளவைக் குறைத்துக்கொள்ளுவதன் மூலம் அதன் விலையை வலுவந்தமாகக் குறைக்கலாம். ஆனால், தன்னுடைய மக்களிடம் ரொட்டிப் பற்றாக்குறையை உண்டாக்கிக் கொண்டு, வாணிப மாற்றுவீதம் என்ற பெயரில் தற்காலிகமாகக் கிடைக்கும் அற்ப ‘இலாபத்திற்காக’, அத்தனை கோதுமை ஏற்றுமதி நாடுகளிடையேயும் வருத்தத்தை உண்டாக்கிக்கொள்ளுவது பிரிட்டனைப் பொறுத்தவரை மதியீனமேயாகும்.

வாணிப மாற்றுவீதத்தில் ஏற்படும் மாறுதல் என்பது, தேவை அல்லது அளிப்பு ஆகியவற்றின் நிலைகளில் ஏற்படும் மாறுதலின் விளைவால் உண்டாவதே ஆகும். புதிதாக ஏற்பட்ட ஒரு சூழ்நிலை ஒரு குறிப்பிட்ட நாட்டிற்கு முழுவதும் சாதகமானதா அல்லது ஓரளவே சாதகமானதா என்பதை முடிவு செய்யும் முன்னர், மேற்குறித்த அடிப்படை மாறுதலின் சிறப்பை நன்கு ஆராய்ந்தறிதல் வேண்டும். வாணிப மாற்றுவீதத்தில் ஏற்படும் ஓர் அபிவிருத்தி, மொத்த இருப்பானது பாதகமானது என்றோ அல்லது சாதகமானது என்றோ ஒரு மாறுதலைப் பிரதிபலிக்கக்கூடும். சில சான்றுகளைப் பார்ப்போம்.

சில குறிப்பிட்ட உற்பத்திப் பொருள்களுக்கு ஏற்படும் உலகத் தேவை உயர்வு, இப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் நாடுகளுக்குப் பலன் தருகிறது. உதாரணமாக, போர்க்காலத்திற்குப் பின்னர் கம்பளிகளுக்கு உலகம் முழுவதும் தேவை மிகுந்ததால், ஆஸ்திரேலியா தனது உண்மை வருமானத்தில் மிகுந்த உயர்வைப் பெற்று மகிழ்ந்தது. இங்ஙனம், ஒரு நாட்டின் தேசிய வருமானத்தில் ஏற்படும் திடீர் உயர்வுகளாலும் சிலவற்றைச் சரிக்கட்டிக்கொள்ளுவதில் சிக்கல்கள் ஏற்படுகின்றன என்பதில் சந்தேகமில்லை. மிகுந்த வருமானம் பெறும் நாட்டின் ஏற்றுமதி விலைகள் முன் நிலைக்கு இறங்கிவிட்டால் வருமானம்மிகுந்த நாளில் கொடுத்த பணக் கூலிகளைத் திடீரெனக் குறைத்துக் கொடுக்க முனைவதில் சங்கடங்கள் ஏற்படும். ஆனால், இத்தகைய வாணிப மாற்றுவீதத்தில் அபிவிருத்தி காட்டும் நாட்டிற்குக் கிடைக்கும் நிகர இலாபங்களைப்பற்றிக் குறைவாக மதிக்க முடியாது; குறை சொல்லவும் முடியாது. இதற்கு மாறாக, இப் பொருள்களை இறக்குமதி செய்யும் நாடுகள், விலை உயர்வால் இப்பொழுது அதிகம் செலுத்த நேருவதால், முன்னைவிட மோசமான வாணிப மாற்றுவீதத்திற்கு உள்ளாகின்றன.

1929ஆம் ஆண்டிற்குப் பின்னர், கிரேட் பிரிட்டனின் வாணிப மாற்றுவீதத்தில் மிகச் சாதகமான மாறுதல்கள் ஏற்பட்டதற்கு, பொதுவான துரதிர்ஷ்டமாகக் கருதப்பட்ட பெரிய மந்தகாலமே (great depression) காரணம். பெரும்பான்மை உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் ஆகியவற்றின் உள்நாட்டு விலை மோசமாக வீழ்ந்துவிட்டது; இவற்றை ஏற்றுமதி செய்த நாடுகள், வாணிப மாற்றுவீதத்தில் ஏற்பட்ட பாதகமான ஆட்டம் காரணமாக மிகவும் இழப்பிற்கு ஆளாயின. ஆனால், கிரேட் பிரிட்டன் இப் பொருள்களை வாங்கிக்கொள்ளும் நாடாயிருந்தமையால், மலிவான இறக்குமதியைக்கொண்டு தனது மக்கள் முன்பைவிடச் சிறந்த வாழ்க்கைத் தர நிலையை அடைய உதவிற்று. ஆனால், இன்னொரு புறத்தில்,

பிரிட்டனுக்கு மிகுந்த இடர்ப்பாடு ஏற்பட்டது; அதனுடைய ஏற்றுமதி வாணிபம் குறைந்ததால், ஏற்றுமதித் தொழில்களில் வேலையின்மை பெருகிற்று. தம் பொருள்களைப் பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்த நாடுகள், விலை குறைவாகவே பெற்றமையால், அதைக் கொண்டு முன்னரைப்போல அவ்வளவு உற்பத்திச் சாதனப் பொருள்களை வாங்க முடியவில்லை.

மலிவான உரங்களை ஆக்கும்வகையில் செயற்கை வெடியகங்கள் (nitrates) கண்டுபிடிக்கப்பட்டதால் உலகு முழுதும் பயன்பெற்றுள்ளன. ஆனால், சிலி நாட்டிற்குமட்டும் இது ஒரு பேரிடியாகிவிட்டது; ஏனென்றால், இந்த நாடு வெடியகங்களை ஏற்றுமதி செய்வதையே நம்பி வாழ்ந்துவந்தது. செயற்கை வெடியக வரவால், சிலி நாட்டு வெடியகங்களின் விலைகள் விழுந்தன; வாணிப மாற்றுவீதங்கள் அதற்கு எதிராகத் திரும்பின; எனவே, தனது பொருளாதார வாழ்வைச் சரிக்கட்டிக்கொள்ளுதற்காக, வெடியக ஏற்றுமதிக்குப் பதிலாகப் பித்தளை ஏற்றுமதித் தொழிலில் அது ஈடுபட நேர்ந்தது.

விலைகளைப் பொறுத்தவரையில், ஒரு நாட்டில் வாணிப மாற்றுவீதத்தில் அதற்குக் கிடைக்கும் சாதகமான மாற்றம், அந்த நாட்டின் பொருளாதாரத்திற்குப் பாதகமான மாறுதல்களிலிருந்து உண்டாகக்கூடும். உதாரணமாக, சிலி நாட்டின் பிரதானமான ஏற்றுமதியாகிய கனிப்பொருள் இருப்புகள் நாளடைவில் காலியாகிக் கொண்டே வருகின்றன. இச் சுரங்கங்களின் உற்பத்தியில் ஏற்படும் குறைவால் விலைகள் உயரக்கூடும்; என்றாலும், இவ் விலை உயர்வால் கொஞ்சம் கொஞ்சமாக நசித்துவரும் தொழிலுக்கு நிரந்தர ஈடு செய்துவிட முடியாது.

ஒரு நாட்டின் ஏற்றுமதிப் பொருளின் விலையில் குறைவு ஏற்படுவதற்குத் தொழில்நுட்ப அபிவிருத்தி காரணமாக இருக்கக்கூடும்; இத் தொழில்நுட்ப அபிவிருத்தி அப் பொருளின் உற்பத்திக்குரிய உண்மைச் செலவையும் பணச் செலவையும் குறைத்துவிடக்கூடும்; அல்லது, ஒரு தொழிலாளியின் உற்பத்தித் திறம், அல்லது குறிப்பிட்ட சில காரணிகளின் உற்பத்தித் திறம் உயர்ந்திருப்பதாலும் விலைக் குறைவு ஏற்பட்டிருக்கக்கூடும். இவற்றின் நிகர விளைவால் நாட்டின் பொதுவான வாணிப மாற்றுவீதம் பாதகமாக அமைந்தாலுங்கூட, அதன் உண்மை வருமான நிலையில் உயர்வும் செழிப்பும் கட்டாயம் ஏற்படும்.

## 5. பன்னாட்டு வாணிபமும் விலைகளும்

பன்னாட்டு வாணிபத்திற்கு வரும் பொருள்களுக்கு உலகச் சந்தை இருக்கிறது; எனவே, அவற்றிற்கு எந்த ஒரு துறைமுகத்

திலும் உள்ள விலை, அனுப்புச் செலவுகள் தவிர, எங்கும் ஒரே மாதிரியாகவே இருக்கும். அவை ஒரு நாட்டிற்குள் புகுந்த உடன் தான், இறக்குமதி வரிகள், இறக்குமதியாளர்களின் இலாபங்கள் என்பன சேர்க்கப்பட்டு, விலை உயர்வடைந்துவிடுகின்றன.

1 பவுனுக்கு = 2·80 ஸ்டெர்லிங் என்ற நாணய மாற்றுவீதத்தில், அமெரிக்காவில் பவுன் x விலையுள்ள பொருளைப் பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்வதாக வைத்துக்கொள்ளுவோம். இப் பொருள் அமெரிக்காவின் x பவுன் ÷ 2.80 + அனுப்புச் செலவு ஆகிய இரண்டும் கொண்டதாக பிரிட்டனைச் சேரும். என்றாலும், போர்ப் பிற்காலத்தில், ஸ்டெர்லிங் பகுதி அரசாங்கங்கள், டாலர் பகுதிகளிலிருந்து தம் மக்கள் சாமான்கள் வாங்குவதைக் குறைத்துக்கொள்ளுமாறு வற்புறுத்தின; இதன் விளைவாகப் பன்னாட்டு வாணிபத்திற்குரிய பொருட்களுக்கு, டாலர் பகுதிகளைவிட ஸ்டெர்லிங் பகுதியில் மிகுந்த கிராக்கி ஏற்பட்டது.

ஓர் அரசாங்கம் இன்னொரு நாட்டுடன் நிலையாக உறுதி செய்யப்பட்ட விலையில் குறிப்பிட்ட சில பொருள்களை வாங்கிக் கொள்ளுவதற்கு அல்லது சில வரம்புகட்குள் பெற்றுக்கொள்ளுவதற்கு, முன் கூட்டியே நீண்ட கால ஒப்பந்தத்தைச் செய்துகொள்ளலாம். நாள் செல்லச்செல்ல, இந்த ஒப்பந்தத்திற்குரிய விலையானது, இன்றைய நடப்பு விலையைவிடக் கூடலாம் அல்லது குறையலாம். இவ்விதமாகப் பிரிட்டிஷ் அரசாங்கம், ஒரு குறிப்பிட்ட விலையில் (இது அங்காடி விலைக்கு அதிகமாகச் செல்லக்கூடும்) காமன்வெல்த் நாடுகளிடமிருந்து சர்க்கரை வாங்கிக்கொள்ளுவதாக ஒப்புக்கொண்டது. இதைப்போல, பன்னாட்டுக் கோதுமை ஒப்பந்தப்படி (International Wheat Agreement, இதில் மீண்டும் பிரிட்டன் ஓர் அங்கநாடு) சில நாடுகள் கோதுமையை ஒரு குறித்த விலையில் ஏற்றுமதி செய்யவும், சில நாடுகள் அதே விலையில் இறக்குமதி செய்துகொள்ளவும் இசைந்திருந்தன. இவ் விலைகள் ஒரு குறிப்பிட்ட அளவிற்குக் கீழ்க் குறையக்கூடாதென்றும், ஒரு குறிப்பிட்ட அளவிற்குமேல் உயரக்கூடாதென்றும் வரம்பு கட்டப்பட்டிருந்தது. இதைப்போல, ஒரு நிறுவனமும், தனக்கு வேண்டிய மூலப்பொருள்களைப் பெறுவதற்கு ஒப்பந்தம் செய்துகொள்ளலாம். ஆனால், ஒரு வகையில் இது மிகவும் ஆபத்தானதுதான். ஏனென்றால், இந்த நிறுவனத்தின் உற்பத்திப் பொருள்களின் விலை குறைந்துவிட்டால், ஒப்பந்தத்தால் இடர்ப்பாடே மிகும்.

மேலும், ஒரு விற்பனைச் சர்வாதீன நிறுவனம் [உதாரணமாக, எஃகு தொழிற் கூட்டணி (cartel)] தனது பொருள்களுக்கு ஏற்றுமதி விலையைவிட உள்நாட்டில் அதிக விலை விதிக்கலாம். ஆனால்,

இங்குள்ள பொது விதிப்படி, உலகச் சந்தை விலை என்றால் அது உள்நாட்டிலும் ஒரே மாதிரியாக, ஒரே சீராகத்தான் இருக்க வேண்டும். நமது உதாரணப்படி, 1 அலகு துணி B நாட்டில் 1 பவுன் ஆனால், இது A நாட்டிலும் அதே விலைதான் விற்கிறது (அல்லது A-ன் நாணயத்திற்கு நிகரான விலையில்) எனக் கருதலாம்.

ஒரு நாட்டில், ஒவ்வொரு நபருக்கும் உரிய உண்மை வருமானம் என்பது, அந்த நாட்டின் தலா ஒவ்வொரு நபரும் உற்பத்தி செய்யும் அளவைப்பொறுத்துப் பெரும்பான்மையும், அந்த நாட்டின் வாணிப மாற்றுச் சாதக வீதத்தைப் பொறுத்துச் சிறுபான்மையும் அமைகின்றது. நாம், இவ்விடத்தில் வருமானங்களைப் பிரதி பலிக்கும்வகையில் கூலிகளை எடுத்துக்கொள்ளுவோம். B என்ற நாட்டில், ஒரு நாளைக்கு உரிய கூலி 1 பவுன். A நாட்டில் உள்ள தொழிலாளி B-யை விட 150 சதவீதம் அதிகமான தேயிலையும் (80-க்கு 200), 20 சதவீதம் அதிகமான துணியும் (160-க்கு 200) உற்பத்தி செய்வதால் அங்குள்ள கூலி விகிதம் அதிகமாகவே இருக்கும். வாணிப மாற்றுவீதத்தைக் கொண்டு, இக் கூலி விகிதம் எவ்வளவு அதிகமாக இருக்குமென்பதை நம்மால் சரியாகச் சொல்லி விட முடியும். நாம் முன்னர் ஏற்றுக்கொண்ட வாணிப மாற்றுவீதம், $1\frac{1}{3}$ அலகு துணிக்கு 1 அலகு தேயிலை என்பதாகும். எனவே, தேயிலை யின் விலை ஓர் அலகுக்கு $1\frac{1}{3}$ பவுன். B-ல் ஓர் அலகு துணியை உற்பத்தி செய்யத் தேவைப்படும் உழைப்பின் அளவைக்கொண்டு A-ல் $1\frac{1}{4}$ (அதாவது, $\frac{200}{160}$) அலகு தேயிலையை உற்பத்தி செய்ய முடியும் என்பதை நமது உதாரணம் ஏற்கெனவே ஏற்றுக்கொண் டுள்ளது. ஆகையால், B-ல் துணியை உற்பத்தி செய்பவருக்கு உரிய கூலி, ஒரு நாளைக்கு 1 பவுன் என்றால், A-ல் தேயிலையை உற்பத்தி செய்பவருக்கு உரிய கூலி, ஒரு நாளைக்கு, $1\frac{1}{4} \times 1\frac{1}{3} \times$ 1 பவுன் அல்லது 1 பவுன் 13 ஷி. 4 பென்னி ஆக இருக்கும்.

எந்த ஒரு நாடும் தனது சொந்த நாணயத்தைக் கொண்டு, தனது பண வருமானங்களை எவ்வளவிற்கு வேண்டுமானாலும் தான் விரும்பும்வகையில் உயர்த்திக்கொள்ள முடியும். ஆனால், இப்படிச் செய்வதன்மூலம் தனது உண்மை வருமானங்களை உயர்த்திக் கொள்ள அதனால் முடியாது. உதாரணமாக, B-ல் பணக் கூலிகள் ஒரு நாளைக்கு 3 பவுன் என உயர்த்தப்பட்டுள்ளதாக வைத்துக் கொள்ளுவோம். அப்படியானால், இங்குத் துணி உற்பத்திக்குரிய பணச் செலவு மும்மடங்கு உயர்ந்துவிட்டதால், துணிக்குரிய உள் நாட்டு விலையும் ஓர் அலகுக்கு 3 பவுன்வரை உயர்ந்துவிடும். வாணிப மாற்று வீதம், 1 தேயிலைக்கு $1\frac{1}{3}$ துணி என இருப்பதால், B நாட்டில் தேயிலைக்கு உள்ள விலை $1\frac{1}{3}$ பவுனிலிருந்து ஓர் அல

குக்கு 4 பவுனாக உயர்ந்துவிடும். இதனால் பண வருவாய்கள் மும்மடங்காகும்; வாழ்க்கைத்தரச் செலவுகளும் இவ்விதமே உயரும். A-ல் விலைகளும் வருமானங்களும் முன்னர்ப்போல மாறாமலே இருந்துவிட்டால், இரு நாடுகளிடையேயும் உள்ள நாணய மாற்றுவீதம், A-யின் 1 பவுனுக்கு நிகராக B-யின் 3 பவுன்கள் சமம் என்று ஆகிவிடும்.

B என்ற நாடு 'மலிவான உழைப்புடையதாக இருப்பதால், அங்கிருந்து இறக்குமதியாகும் பொருள்களை A என்ற நாடு தடுத்துவிட முடிவு செய்வதாக வைத்துக்கொள்ளுவோம். இந் நிலையில், A தனது முந்திய நிலையில் தன்னிறைவோடு சமாளித்துக்கொள்ளும். சிறப்புத் தேர்ச்சியையும் வாணிபத்தையும் மேற்கொண்டு 155 தேயிலையும் + 60 துணியும் பெறுதற்குப் பதிலாக, 150 தேயிலையும் + 50 துணியும் கொண்டு A தன்னிறைவு பெற்றுக்கொள்ளும். ஆனால், B என்ற நாட்டின் நிலையே பரிதாபமாகிவிடும். தனது ஏற்றுமதிச் சந்தை போய்விட்டதால், 45 தேயிலை 100 துணிக்குப் பதிலாக, இப்பொழுது அது 40 தேயிலையும் 80 துணியுமே பெறும். இதனால் அதனுடைய உண்மைக் கூலிகள் வீழ்ச்சியுறும். கூலி குறைவாகப் பெறும் தொழிலாளர்கட்கு உதவக்கூடிய வழி என்னவென்றால், அவர்களது பொருள்களை வாங்கி ஆதரிப்பதேயல்லாமல் அப்படியே தடைசெய்துவிடுவதன்று. அமெரிக்காவைவிட பிரிட்டனின் மோட்டார்க்கார் தொழில் துறையில் கூலி விகிதங்கள் மிக மிகக் குறைவாக இருக்கின்றன என்பதற்காக, பிரிட்டிஷ் கார்களின் இறக்குமதியை அமெரிக்கா தடைசெய்ய முற்பட்டால், இதனால், பிரிட்டனில் உள்ள தொழிலாளர்கட்குத் துன்பம் நேருமே தவிர, நலம் விளையாது.

எந்த ஒரு நாட்டிலும் தராதரமாக, மலிவாகவும் நிறையவும் கிடைக்கும் ஒரு காரணியின் விலையை உயர்த்திவிடுதலே பன்னாட்டு வாணிபத்தால் ஏற்படும் ஒரு பொதுவான விளைவாகும். ஏனென்றால், அக் காரணிகள் மிக உயர்ந்த விகிதாசாரத்தில், அந்த நாட்டின் ஏற்றுமதிப் பொருள்களில் அமைந்திருக்கக்கூடும். ஏற்றுமதித் துறைத் தொழிற்சாலைகளுக்கு அக் குறிப்பிட்ட சாதனத்தின் தேவை மிகுதியாகிவிடுகிறது. உதாரணமாக, நிலப் பரப்பு மிகுதியாக உள்ள ஒரு நாட்டில் உணவுப் பொருள்கள் அல்லது கச்சாப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் தொழில்களால், அந் நாட்டின் நில விலைகள் மிகவும் உயர்ந்துவிடக்கூடும். மக்கள்தொகை நெருக்கமுள்ள நாடுகளைவிட இந் நாட்டின் நில விலைகள் குறைவாயிருந்தாலும், இப்பொழுது ஏற்றுமதித் தொழில்கள் காரணமாக மிகவும் உயர்ந்துவிடுதல்கூடும். இதைப் போலவே, உழைப்பாளிகள்

மிகுதியாகக் கிடைக்கும் நாடு ஒன்றில், உழைப்புச் சாதனம் மிகுதியும் தேவைப்படும். ஏற்றுமதித் தொழிலின் காரணமாக உழைப்பாளர்களின் கூலிகளில் உயர்வு ஏற்படுதல் கூடும்.

பன்னாட்டு வாணிபத்தில் இடம் பெருத, உள்நாட்டு நுகர்வுப் பொருள்கள், பணிகள் முதலியவற்றிற்குரிய விலைகளும் நாட்டிற்கு நாடு மாறுவதுண்டு. 28 ஆம் அதிகாரம், 3 ஆம் உட்பிரிவில் நான் குறித்துள்ள ஒரு குறிப்பிட்ட மாவட்டத்து வாடகை, இதற்கு ஒரு விதிவிலக்கான உதாரணமாகும். கானடாவைவிட நியூயார்க்கில் வீட்டு வாடகைகள் மிக அதிகமாக இருக்கும். மேலும், பொது வசதித் துறைகள், மாவட்டச் சர்வாதீனமுடையனவாக முற்படுகின்றன; இவை விதிப்பதற்கு அனுமதிக்கப்படும் கட்டணங்கள் ஓரளவு அரசாங்கக் கொள்கையைச் சார்ந்திருக்கின்றன; எனவே, இவை நாட்டுக்கு நாடு பெரிதும் வேறுபடுகின்றன.

என்றாலுங்கூட, பன்னாட்டு விலைகளுக்கும் உள்நாட்டு விலைகளுக்கும் இடையே பொது விதியாக ஒரு தொடர்பு (இது எப்போதும் மிக நெருங்கியதாக இல்லாவிட்டாலும்) உள்ளது. இத் தொடர்பு என்னவென்றால், ஏற்றுமதித் தொழில்களுக்கும், உள்நாட்டிற்குரிய தொழில்களுக்கும் இடையே உற்பத்திக் காரணிகள் எளிதாகப் பெயர்ந்து செல்லமுடியும் என்பதுதான். ஏற்றுமதித் தொழில்களில் உழைக்கின்ற தொழிலாளர்களின் கூலிகள், அவர்களால் உற்பத்திசெய்யப்படும் பொருள்களுக்குரிய உலக விலைகளைச் சார்ந்து மாறுதலுறும். ஆனால், உள்நாட்டுக்குரிய தொழில்களில் ஈடுபட்டுள்ள இவர்களைப்போன்ற தொழிலாளர்களால் ஏற்றுமதித் தொழில்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களைப்போல அதிகமாகவும் குறைவாகவும் நெடுங்காலத்திற்குக் கூலி பெறுதல் சாத்தியமாயிருக்காது. இக் கருத்தே இதர காரணிகட்கும் பொருந்தும்.

பன்னாட்டு வாணிபத்தில் ஏற்படும் விரிவு, எல்லாத் துறைகளிலும் உண்மை வருமானங்களை உயர்த்திவிட முற்படுகிறது. போட்டியிட்டு நுழையும் இறக்குமதிகளால், ஒரு நாட்டில் உள்ள சில துறைகள், குறிப்பிட்ட காலத்திற்குத் துன்பமுற நேரிடும்; இதனால், அவை வேறு துறைகளை நாடி இடம் பெயர்ந்துவிடுதலும் கூடும். நம்முடைய உதாரணத்தில் B நாட்டில் உள்ள தேயிலை உற்பத்தியாளர்கள், துணி உற்பத்தித் தொழிலுக்கு மாற்றிக்கொள்ள நேர்ந்ததல்லவா! இதனல் நாடு முழுவதற்கும் பொதுவாகப் பலன் கிட்டாது.

தவிரவும், பன்னாட்டு வாணிப விரிவினல், ஒரு நாடு முழுதுமே அழிந்துபோகக்கூடிய சூழ்நிலைகளும் ஏற்படக்கூடும். இச் சூழ்

நிலையைப் பொருளாதாரவாதிகள், ‘இரு நாடுகள் மூன்றாவதுடன் போட்டியிடுதல்’ (two countries competing in a third) என்று அழைக்கின்றார்கள். உதாரணமாக, ஆஸ்திரேலியாவிற்குக் கிரேட் பிரிட்டன் நெடுங்காலமாகப் பருத்தித் துணிகளை விற்று வருகிறதெனக் கொள்ளுவோம். இப்பொழுது ஜப்பானும் வாணிபக் களத்திற்கு வந்து, இதே பொருளை இன்னும் மலிவான விலைக்குத் தருவதாகச் சொல்லுகிறது. இதனால் ஜப்பானும் பலன் பெறும்; ஆஸ்திரேலியாவும் பலன்பெறும்; ஆனால், கிரேட் பிரிட்டன் இழப்புறும். இதனால், தனக்குச் சாதகக் குறைவான வாணிப மாற்று வீதத்தில், தனது விலையைக் குறைத்துக்கொள்ளவும், தனது ஏற்றுமதி அளவையே சுருக்கிக் கொள்ளவும் வேண்டிய இடர்ப்பாடான நிலை பிரிட்டனுக்கு ஏற்படும்.

இதற்குச் சில இழப்பீடுகளும் இருக்கக்கூடும். ஜப்பான், பொருள் அளிக்கும் நாடாக வெளிப்பட்டதிலிருந்து, அது பொருளைப் பெறும் நாடாகவும் இருக்கும் என்பது பெறப்படுகிறது. அது எவ்வளவு அதிகமாக ஏற்றுமதி செய்கிறதோ, அவ்வளவு அதிகமாக இறக்குமதியும் செய்துகொள்ளும். இது கிரேட் பிரிட்டனிடமிருந்து நேரடியாக நிறையப் பொருள்களை இறக்குமதி செய்யாவிட்டாலும், அதன் வாணிபம் பன்னோக்குடையதாயிருக்கும். பிரிட்டனின் ஏற்றுமதிப் பொருள்கள் பொதுவாகப் போட்டி விலைக்குக் கிடைத்தால், தனது இறக்குமதிக்காக ஜப்பான் செலவிடும் பணத்தில் ஒரு பகுதி கிரேட் பிரிட்டனுக்குக் கிடைக்கும். இப் பணம், பிரிட்டனின் ஏற்றுமதிப் பொருள்களுக்கு ஏற்படும் தேவை மிகுதி காரணமாக, ஏதாவதொரு நாட்டின்மூலமாக அதற்கு வந்துசேரும். என்றாலும், பிரிட்டன் இப் புதுச் சூழ்நிலைக்கேற்பத் தனது வாணிப நிலையை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டியதிருக்கும். இதற்குத் தராதர அனுகூலங்கள் குறைவாகக் கிடைக்கும் பருத்தித் துணி உற்பத்திக்குப் பதிலாக, அவ்வனுகூலங்கள் அதிகமாகக் கிடைக்கும் இதர தொழில் உற்பத்திகள்மூலம் ஏற்றுமதியை அதிகரிக்க முனையவேண்டும்.

பருத்தித் துணித் துறையில் கிரேட் பிரிட்டனுக்கு ஜப்பான் செய்ததைப்போல, வேறு ஒரு துறையில், ஜப்பானுக்கோ வேறு ஒரு நாட்டிற்கோ கிரேட் பிரிட்டன் பதிலுக்குத் திருப்பிச் செய்ய முடியும். பன்னாட்டு வாணிபத் தளத்தில், பொது விதியாகப் போட்டி மனப்பான்மை இருப்பதால், எப்போதாவது எந்த நாடாவது இடர்ப்பட்டே ஆகவேண்டியதிருக்கும். இவ் விடர்ப்பாடு தனது பொருளாதார முன்னேற்றத்திற்காக அந்த நாடு அளிக்கவேண்டிய ஒரு விலை (தண்டம்) என்று கருதவேண்டும். கடந்த ஒரு நூற்றாண்

டளவில் மேலை நாடுகளின் வாழ்க்கைத் தரத்தில் ஏற்பட்ட மேம்பாட்டிற்கு, உலக வாணிபத்தில் ஏற்பட்ட மிகுந்த விரிவே காரணமாகும். அயல்நாட்டுப் போட்டியின் காரணமாக, அவ்வப்போது, கிரேட் பிரிட்டனோ இன்னொரு நாடோ துன்புற நேரிடும்; ஆனால், நாளடைவில், ஒவ்வொரு நாடும், ஏன் பிரிட்டனும்தான், பன்னாட்டு வாணிபத்தின் பரப்பாலும் விரிவாலும் நிறைந்த பலனைக் கட்டாயம் அடையும்.

## 6. தடையிலா வாணிபமும் பாதுகாப்பும்
(Free Trade And Protection)

இந்த அதிகாரத்தின் பொதுவான விவாதப் போக்கு, வாணிபத்தில் முழுச் சுதந்திரம் வேண்டுமென்பதை ஆதரிக்கிறது. தடையிலா வாணிபம், நாடுகள் சிறப்புத் தேர்ச்சியிலிருந்து உயர்ந்தபட்ச அனுகூலங்களைப் பெறுதற்கு உதவுகிறது. உற்பத்திக் காரணிகளின் சமமற்ற பகிர்வுத் தன்மையை இது ஓரளவு இழப்பீடு செய்து தருகிறது. உற்பத்திக் காரணிகள், ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்கு எளிதில் இடம் பெயர முடியாது; ஆனால், அவற்றின் உற்பத்திகள்—பொருள்கள்—எளிதில் இடம் பெயரக்கூடுமானால், அவற்றின் காரணிகளின் இடப் பெயர்ச்சிக்கு ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் தகுந்த பதிலிகளாக அமைந்துவிடுகின்றன. இதனால், ஒவ்வொரு நாடும் தன்னிடம் மிகுதியாகக் கிடைக்கும் காரணிகளை அதிக விகிதாசாரத்தில் பயன்படுத்தி உற்பத்தியாக்கும் பொருள்களை ஏற்றுமதிசெய்யும். அதைப்போலத் தன்னிடம் குறைவாகக் கிடைக்கும் காரணிகளை அதிக விகிதாசாரத்தில் பயன்படுத்தி உற்பத்தியாக்கக் கூடிய பொருள்களை இறக்குமதி செய்துகொள்ளும்.

என்றாலும், நடைமுறையில் கிட்டத்தட்ட ஒவ்வொரு நாடும், தனது இறக்குமதிகளில் ஏதாவது சிலவற்றின்மீது எப்போதும் கட்டுப்பாடுகளை விதித்தே வருகிறது. இக் கட்டுப்பாடுகள் பல வடிவங்களில் அமைகின்றன. சில இறக்குமதிப் பொருள்கள்மீது, தீர்வைகள் (duties), காப்புவரிகள் (tariffs) எனப்படும் (இறக்குமதிப் பொருள்கள்மீது விதிக்கப்படும் எல்லாத் தீர்வைகளின் பொதுப் பெயராகச் சுங்கக் காப்புவரிகள் என்பது வழங்குகிறது) பல வரிகள் விதிக்கப்படுகின்றன. சில பொருள்களின்மீது மிகுதியான வரிப் பளு சுமத்தப்படுவதுமுண்டு. இறக்குமதி செய்யவேண்டிய ஒரு பொருளின் அளவை, 'கோட்டா' (quota) எனப்படும் ஒருவகை உச்ச அளவால் கட்டுப்படுத்தவும் கூடும். இறக்குமதிக் கோட்டாவைப்பற்றி 19ஆம் அதிகாரம் 4ஆம் உட்பிரிவில் ஆராய்ந்துள்ளேன். இப்பொழுதெல்லாம், சில குறிப்பிட்ட நாடுகளிலிருந்து (சிறப்பாக,

டாலர் நாடுகள்) இறக்குமதிப் பொருள்களைத் தடுக்கவோ அல்லது கட்டுப்படுத்தவோ, மிக ஆற்றல் வாய்ந்த, திறனுடைய முறையொன்று கையாளப்படுகிறது. இது நாணயமாற்றுக் கட்டுப்பாடு (exchange control) என அழைக்கப்பெறும். இதைப்பற்றிப் பின்னர் சொல்லுவேன். மேலும், பல நிருவாக ஒழுங்குகள் ஒன்றாகச் சேர்ந்து, கண்ணுக்குப் புலனாகாத காப்புவரிகளை (invisible tariffs) உண்டாக்கிவிடுதலும் உண்டு. உதாரணமாக, உயிருள்ள விலங்குகளையும் இதர பொருள்களையும் இறக்குமதி செய்வதை, நல்வழி, சுகாதாரம் முதலிய பல்வேறு தேவையற்ற காரணங்களைக் கிளப்பிக் கடுமையான சட்டங்களை அமுல் நடத்துவதன்மூலம் குறைத்துவிட முடியும்; அரசாங்கத்தினர் வெளிநாட்டு நிறுவனங்களைவிட, உள்நாட்டு நிறுவனங்களிடமே ஒப்பந்தம் செய்துகொள்வதை ஆதரிக்கலாம்; இறக்குமதியாளர்க்கு இடர்ப்பாட்டை உண்டாக்கும்வகையில் காப்புவரி ஒழுங்குகளைச் சிக்கலாக அமைத்திருக்கலாம்; அல்லது அவற்றை அடிக்கடி மாற்றியமைத்துத் தொல்லை தரலாம்; பண்டங்களை ஏற்றுமதிக்காக வெளியில் அனுப்புவதற்கு விதிப்பதைவிட, இறக்குமதி செய்த பண்டங்களை உள்நாட்டிற்குள் அனுப்பும்பொழுது அவற்றிற்கு அதிகமான இரயில்வே கட்டணங்களை விதிக்கலாம். இத்தகைய நிருவாக ஒழுங்குகளெல்லாம், கண்ணுக்குப் புலனாகாத காப்புவரிகளைப்போல, இறக்குமதிப் பொருள்களைக் கட்டுப்படுத்துகின்றன.

நாடுகள், இங்ஙனம் தனது இறக்குமதிகளின்மீது இத்தகைய கட்டுப்பாடுகளை விதிப்பதற்குக் காரணம் என்ன? பொருளாதாரத் துறைகட்கான நீண்ட காலக்கொள்கையாக இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தி, வெளிநாட்டுப் பொருள்களின் போட்டிக்கு எதிராக, உள்நாட்டுத் தொழில்களுக்கு வாணிபப் பாதுகாப்புக் கொடுப்பது விரும்பத்தக்கது என அவை கருதலாம். இத்தகைய விவாதங்களில் புகுமுன்னர், நாடுகள் தமது இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துதற்குரிய நான்கு காரணங்களைப்பற்றிக் கொஞ்சம் குறிப்பிட விரும்புகின்றேன். இத்தகைய இறக்குமதிக் கட்டுப்பாடுகள் வருவாய் அளித்தற்காகவும், அல்லது நாட்டின் அயல்நாட்டுச் செலுத்து நிலையைப் பாதுகாப்பதற்காகவும், அல்லது அவசர காலத் திட்டமாகவும், அல்லது பொருளாதாரத்துறை சாராத காரணங்கட்காகவும் விதிக்கப்படலாம்.

பெரும்பாலான அரசாங்கங்கள், தமது வருவாயை உயர்த்திக் கொள்ளுதற்காக, புகையிலை, மதுவகை, பெட்ரோல் முதலிய பொருள்களின் இறக்குமதியின்மீது இறக்குமதித் தீர்வையை விதிக்கின்றன. ஒரு நாடு இத்தகைய பொருள்களைத் தன் நாட்டில்உற்பத்தி செய்யாம

லிருந்து இத் தீர்வையை விதித்தாலும், அல்லது உள்நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டாலும் அவற்றிற்கு இதே அளவு வரியை 'உற்பத்தி வரி' (excise duty) என்ற பெயரில் விதித்தாலும் (பிரிட்டனில் சிகரெட்டுகளுக்கு இம்மாதிரி வரி விதிக்கப்படுகிறது) அப்பொழுது இவ் வரிவிதிப்பின் முதன்மையான நோக்கம் வருவாயை உயர்த்திக்கொள்ளுவதே தவிர, உள்நாட்டுத் தொழில்களுக்குப் பாதுகாப்புக் கொடுப்பதன்று என்பது தெளிவாகும். என்றாலும், இத்தகைய வரிவிதிப்புகள், மேற்குறித்த பொருள்களுக்குப் பதிலிகளாகச் செய்யப்படும் உள்நாட்டுத் தொழில்கட்கு (இவைகட்கு அந்த அளவு உற்பத்தி வரி விதிக்கப்படமாட்டாது) ஓரளவு பாதுகாப்புத் தரும் விளைவை உண்டாக்கக்கூடும். உதாரணமாக, பெட்ரோல்மீது விதிக்கப்படும் இறக்குமதித் தீர்வை, உள்நாட்டு நிலக்கரிச் சுரங்கத் தொழிலுக்குப் பாதுகாப்பளிக்கத் தற்செயலாக முற்படக்கூடும். மேலும், வரி விதிக்கப்பட்ட பொருள்களின் இறக்குமதிகள், அவற்றின்மீது விதிக்கப்பட்ட தீர்வை மிகுதி காரணமாகக் கணிசமாகக் குறைந்துவிட்டால், ஏற்றுமதித் தொழில்களில் சில உற்பத்திக் காரணிகளை மட்டுமே பயன்கொள்ளும் நிலை ஏற்படும்; ஏனென்றால், நாளடைவில் இறக்குமதியைக் குறைப்பதற்கு உரிய ஒரே வழி, ஏற்றுமதியைக் குறைத்துவிடுவதுதான். ஆனால், பொது விதியாக அரசாங்கங்கள் இத்தகைய 'வருவாய்த் தீர்வைகட்கு' (revenue duties) சாதாரணமாகத் தேவையில் நெகிழ்ச்சியற்ற பொருள்களையே தேர்ந்தெடுக்கின்றன. ஆகையால், இவ் வரிவிதிப்பால் விளையக்கூடிய ஆதாரங்களின் இடமாற்றங்கள் (ஏற்றுமதித் தொழிலிலிருந்து விலகிவிடுதல்) பெரியதாயிருப்பதில்லை.

அயல்நாட்டுச் செலுத்துநிலையின் பொருள்பற்றி அடுத்த அதிகாரத்தில் விளக்குவேன். அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் பற்றுக்குறையைத் தவிர்ப்பதற்காகப் பெரும்பாலும் இறக்குமதிப் பொருள்கள்மீது விதிக்கப்படும் கட்டுப்பாடுகளைப்பற்றி 'நாணயமாற்றுக் கட்டுப்பாடு' என்ற தலைப்பில், 38ஆம் அதிகாரத்தில் ஆராய்வேன். இந்த இடத்தில் நான் சொல்லவேண்டியதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். அதாவது, பன்னாட்டு நாணய நிதியின் (International Monetary Fund) உறுப்பினர்கள் என்ற முறையில் சுதந்திர உலக நாடுகள் எல்லாம் இவ்வித 'நாணயமாற்றுக் கட்டுப்பாடு'களையெல்லாம் இயன்றவரையில் விரைவில் குறைக்கவும், நாளடைவில் அவற்றை ஒழித்தேவிடவும் உறுதி பூண்டுள்ளன என்பதுதான்.

பாதுகாப்பு என்பது, வாணிபத்தில் ஏற்படக்கூடிய பொதுவான மந்தநிலைக்கு எதிராக மேற்கொள்ளப்படும் ஓர் அவசரகால நடவடிக்கையாகவே, பெரும்பாலும் போற்றப்படுகிறது. ஒரு நாட்டில்

அதிகமாக வேலையின்மை ஏற்பட்டிருக்கலாம். உள்நாட்டு உற்பத்திப் பொருள்களுக்குச் செலவிடப்படும் பணம், உள்நாட்டில் நேரடியாக வேலையுடைமையை உண்டாக்கும். ஆனால், இறக்குமதிப் பொருள்களுக்குச் செலவிடப்பட்ட பணத்தால் இந்த நன்மை விளைவதில்லை. பாதுகாப்பளித்ததனால், ஏற்பட்ட முழு வேலையுடைமை வாழ்க்கைத்தரச் செலவுகளில் உயர்வு ஏற்படுவதை ஏற்றதாக்கும். பாதுகாப்பளிக்கப்பட்ட தொழில்களில் அதிகப்படுத்தப்படும் ஆக்கத்தால், முதலீடுகள் ஊக்குவிக்கப்படலாம்; தொழிலிலேயே மறுமலர்ச்சி ஏற்படவும் வாய்ப்பேற்படலாம்.

1930ஆம் பத்தாண்டுக் காலத் தொடக்கத்தில் ஏற்பட்ட பெரிய மந்த நிலையின் ஆரம்பத்தில், பெரும்பாலான நாடுகள் தமது வாணிபப் பாதுகாப்புகளை இத்தகைய காரணங்கட்காகவே கணிசமாக அதிகரித்துக்கொண்டன. சிறப்பாகச் சொல்வதென்றால், ஃபிரான்சும் ஜெர்மனியும் விவசாய இறக்குமதிப் பொருள்களுக்கு எதிராகத் தம் உழவர்கட்குப் பாதுகாப்பு அளித்தற்காக, உணவுப் பண்டங்களின் இறக்குமதிமீது கடுமையான கட்டுப்பாடுகளை விதித்தன. ஏனென்றால், அப்பொழுது இறக்குமதிப் பொருள்களின் விலைகள், 1928-ல் இருந்ததைவிடப் பாதிக்கும்கீழ்க் குறைந்துவிட்டது.

ஆனால், ஒரு நாட்டின் இறக்குமதிகள் என்பன, இன்னொரு நாட்டின் ஏற்றுமதிகளாக இருப்பதால், இறக்குமதிப் பொருள்களின் மீது விதிக்கப்படும் கட்டுப்பாடுகளால் அவற்றை ஏற்றுமதி செய்யும் நாடுகளில் வேலையின்மையும் வேதனையும் ஏற்படுத்தப்பெறுகின்றன. ஏற்றுமதி செய்யும் நாடு, தனது வாடிக்கைக்கார நாடுகளிடமிருந்து இறக்குமதியாகும் பொருள்கட்கு முன்னைவிடக் குறைவாகவே செலவழிக்க வேண்டியதிருக்கும் (ஏனென்றால், இந்த நாட்டின் ஏற்றுமதி வருமானங்கள் குறைக்கப்பட்டுவிட்டன). தவிரவும், இறக்குமதிப் பொருள்களுக்கு எதிராகத் தமது உள்நாட்டுத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளித்தற்காக, அவையும் கட்டுப்பாட்டு வழிகளைப் பின்பற்ற முற்படலாம். கடந்த பெரிய மந்த காலத்தில் இப்படித்தான் நடந்தது. உதாரணமாக, வெளிநாடுகளில் விவசாயத் துறை சார்ந்தவை, தங்களது உற்பத்தித் தொழிற்சாலைகட்குப் பாதுகாப்பளித்து ஊக்கம் கொடுத்தன; மேற்கு ஐரோப்பா, ஏனைய உற்பத்தித் தொழில் ஏற்றுமதியாளர்களிடமிருந்து குறைந்த அளவு பொருள்களையே வாங்கிக்கொண்டது.

மேற்குறித்த ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட வாணிபப் பாதுகாப்பு உயர்வுகள், உண்மையிலேயே பெரிய மந்த நிலையை இன்னும் கடுமையாக்கி நீடிக்கச் செய்த, ஆலோசனையற்ற அண்டை

வீட்டுக்காரனிடம் கையேந்தச் செய்த அசட்டுக் கொள்கைகள் என்பதே எனது கருத்தாகும். இன்னொரு உலக மந்த காலம் அச்சுறுத்துமேயானால், தமது இறக்குமதி அளவுகளைப் பேணி வருவதோடு அவற்றைக் குறைத்துவிடாமல் இருக்குமாறு ஒவ்வொரு நாட்டையும் தூண்டுதற்குரிய தக்க வழியொன்றைக் கண்டறிவது மிகமிக விரும்பத்தக்கது என்பது இப்பொழுது பொதுவாக ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது என்று நான் எண்ணுகின்றேன்.

பாதுகாப்புக்குரிய விவாதங்களில் சில, பெரும்பாலும் பொருளாதாரம் சாராத காரணங்களின்மீது (non-economic considerations) அமைந்திருக்கின்றன. இவ்விதமாக ஒரு நாடு போருக்கு நன்கு ஆயத்தமாயிருப்பதற்காக இரும்பு, எஃகு தொழில்கட்கு ஆக்கம் தரலாம்; அல்லது ஒரு நாடு ஏராளமாக விவசாயிகளைப் பெற்றிருப்பதற்காகத் தனது விவசாயத் தொழில்கட்குப் பாதுகாப்புத் தரலாம். இத்தகைய கொள்கைகளால் சுமத்தப்பட்ட தியாகத்தை, வாழ்க்கைத்தரச் செலவுகளில் குறைவேற்படுத்தல் என்ற தியாகத்தை (இல்லாவிட்டால் இச் செலவுகள் உயர்ந்திருக்கும்) வெளிப்படையாக எடுத்துக்காட்டுதற்குமட்டுமே பொருளாதாரவாதிகளால் முடியும். இத்தகைய தியாகத்தைச் செய்வது ஏற்றதுதானா, பொருத்தமுடையதுதானா என்றெல்லாம் தீர்மானிக்கும் பொறுப்பை அவர்கள் அரசியல்வாதிகளிடமும் குடிமக்களிடமும் ஒப்புவித்துவிட்டனர்.

கட்டுப்பாடு என்பது திட்டமிடப்பட்ட ஒரு கொள்கை என்பதற்கு உரிய பொருளாதார விவாதங்களைப்பற்றி இனிச் சற்று ஆராய முற்படுவேன்.

பொதுமக்களைச் சார்ந்து அழுத்தம் தரும் பல விவாதங்கள் பெரும்பாலும் பிழையுடையவையாகப் போய்விடுகின்றன. இதற்கு ஏற்ற உதாரணமாக, உள்நாட்டில் உள்ள தொழிலாளர்களின் வாழ்க்கைத்தரச் செலவு இன்னும் குறைக்கப்படாமலிருப்பதற்காகக் குறைந்த கூலி கொடுத்து உற்பத்தி செய்யும் நாடுகளிலிருந்து வரும் இறக்குமதிகளுக்கு வரி விதிக்கவேண்டும் என்பதைக் குறிப்பிடலாம். இத்தகைய கருத்தில் உள்ள பிழையை 5ஆம் உட்பிரிவில் காட்டுதற்கு முயன்றுள்ளேன். மலிவான இறக்குமதிகள், அவற்றின் மலிவுக்குரிய காரணம் எதுவாயிருப்பினும், அவற்றை இறக்குமதி செய்யும் நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரத்தைக் குறைப்பதேயில்லை; மாறாக உயர்த்தவே முற்படுகின்றன என்பது வெளிப்படையான உண்மையாகும்.

ஏதாவது ஒரு குறிப்பிட்ட தொழிலோடுமட்டும் தொடர்புடையவர்கள், இத் தொழிலுடன் போட்டியிடும் இறக்குமதிகட்கு எதிராகப்

பாதுகாப்பு அளிப்பது, இத்தொழில் விரிவதற்கு உதவும்; அல்லது இத்தொழில் அழிவதிலிருந்தாவது மீட்சி தரும் என்று விவாதிக்கலாம். இதை யாரும் மறுக்கவில்லை. ஆனால், இந்த ஒரு குறிப்பிட்ட தொழிலில் சம்பந்தப்பட்ட தொழிலாளர்க்கும் பங்குதாரர்க்கும் நலன் தருவதற்காக, இப் பொருள்களை நுகரும் எல்லா மக்களையும் துன்புறுத்துதல் விரும்பத்தக்கதா என்பதுதான் இங்குள்ள பிரச்சினை. அப்படியானால், வெளிநாட்டுப் போட்டிக்கு இலக்காகியுள்ள ஒவ்வொரு தொழிலுக்கும் இந்த விவாதத்தை ஏன் பொருத்திப் பேசக்கூடாது? இவ்விதம் எல்லாத் தொழில்கட்குமே பாதுகாப்பு அளித்துவிட்டால், அது உள்நாட்டில் பணக் கூலி விகிதங்களை ஒரு நிலையாகப் பேணி வர உதவும்; ஆனால், அதே சமயத்தில், உண்மைக் கூலிகளைக் குறைத்து, மக்களின் வாழ்க்கைத்தரச் செலவுகளில் மிகுதியான உயர்வு ஏற்படச் செய்துவிடும்.

உள்நாட்டுத் தொழில்களின் பாதுகாப்பு, எப்பொழுதும் ஏற்றுமதித் தொழில்களில் உள்ள வருமானத்தையும் வேலையுடைமையையும் தலைகீழாகப் பாதிக்கிறது. ஏனென்றால், ஒரு நாடு தனது இறக்குமதியால் எவ்வளவு குறைவாகச் செலவழிக்கிறதோ, அவ்வளவிற்குத் தனது ஏற்றுமதிப் பொருள்களை வாங்கும் அயல்நாட்டாருக்குத் தேவைப்படும் வாங்கும் சக்தியைக் குறைவாகவே அளிக்கிறது.

இந்த அதிகாரத்தின் தொடக்கத்தில் குறிப்பிடப்பட்ட பன்னாட்டு வாணிபக் கோட்பாட்டைத் திரும்பவும் எண்ணிப் பார்ப்போம். ஒரு நாடு முழுவதற்கும் பொதுவான நன்மை கிடைக்கும்வகையில், அதற்கு மிகுதியான உண்மை வருமானங்கள் கிடைத்தற்காக, அந்நாட்டில் உள்ள உற்பத்திக் காரணிகளை, ஏற்றுமதித் தொழில்களிலும் இதர தொழில்களிலும் எவ்வாறு சிறப்பாகப் பகிர்வு செய்வதென்பதே அடிப்படையான கேள்வியாகும். வேலையின்மை என்ற தனிச் சிக்கலை, இறக்குமதிமீது கட்டுப்பாடு விதித்தல் இல்லாத இதர முறைகளால் சிறப்பாகத் தீர்க்கலாம் என்பதே எனது கருத்தாகும்.

பாதுகாப்புக்கான சில விவாதங்கள், சிறந்த பொருளாதார விளக்கங்களின்மீது அமைந்துள்ளன. உதாரணமாக, ஒரு நாடு ஒரு குறிப்பிட்ட பண்டத்தையே முக்கியமாக வாங்குகிறது எனக் கொள்ளுவோம். இந்த நாடு, அப் பண்டத்தின்மீது இறக்குமதித் தீர்வை விதிப்பதன்மூலம், அதன் உலக விலையையே குறைக்கக்கூடும். இவ்விதமாக அது வாணிப மாற்றுவீதத்தைத் தனக்குச் சாதகமாக்கிக்கொண்டு, இறக்குமதித் தீர்வையில் ஒரு பகுதியை வெளிநாட்டு அளிப்பாளர்களை ஏற்குமாறு செய்யக்கூடும். இதில் இறக்குமதி செய்யும் நாடு அடையும் இலாபத்திற்கு நிகராக

ஏற்றுமதி செய்யும் வெளிநாட்டினர் இழப்பினை அடைவதால், பாதுகாப்பு வேண்டுமென்ற இவ் விவாதம், பன்னாட்டு நோக்கத்தைச் சாராது உள்நாட்டைமட்டுமே சார்ந்திருக்கிறது.

பிற நாடுகளின்மீது துன்பங்களையும் நஷ்டங்களையும் ஏற்படுத்துவது முழுக்க முழுக்கச் சரியானதுதான் என்று கருதினாலுங்கூட, அந் நாடுகள் பதிலுக்குப்பதில் தாமும் திரும்பச் செய்யக்கூடிய வாய்ப்பு எப்போதும் இருக்கிறது. இவ் வாய்ப்பு, இறக்குமதிகளின் மீது விதிக்கப்படும் கட்டுப்பாடுகட்கும் சமமாகப் பொருந்தும். இக் கட்டுப்பாடுகளைச் செய்யும் நாட்டில் இது வேலையுடைமையை அதிகரிக்கும். ஆனால், இதர நாடுகளும் இதனால் ஆத்திரமூட்டப் பெற்றுத் தம் நாட்டு இறக்குமதிகள்மீதும் கட்டுப்பாடுகளை விதிக்க வேண்டிய நிலை அவற்றிற்கு ஏற்படாமல் இருக்கவேண்டும்.

பாதுகாப்பு வேண்டுமென்பதற்கு உரிய அடுத்த விவாதம், எல்லோர்க்கும் தெரிந்த 'சிற்றிளந் தொழில்கள்' (infant industries) என்ற பிரசித்தமான விவாதமாகும். சிலவகைத் தொழில்கள் ஒரு நாட்டிற்கு முற்றிலும் ஏற்றவையாக இருக்கும். எனவே, நாளடைவில் இவை காலூன்றி நின்றுகொள்ளும். ஆனால், இத் தொழிலுக்குக் குறிப்பிட்ட சில காலத்திற்குப் பாதுகாப்பளித்தால், இதேமாதிரிப் பொருளை இறக்குமதி செய்வதால் போட்டி ஏற்பட்டாலுங்கூட, இத் தொழில் தலைதூக்கி நிமிர்ந்துகொள்ளும் என்று குறிப்பிடப்படுகிறது. இந்த விவாதத்திற்குரிய ஏட்டளவு மதிப்பு எவ்வளவு இருந்தாலும், இத்தகைய சிற்றிளந் தொழில்கள் நடைமுறையில் வளர்வதே இல்லை; நாம் உலகம் முழுவதும் ஒரு கண்ணோட்டம் விட்டால், இரண்டு மூன்று தலைமுறைகளாகக் குழவி நிலையிலேயே இத் தொழில்கள் இருப்பதையும், இன்றும் குறிப்பிடத் தகுந்த பாதுகாப்பு முறைகளால் உதவி பெற்றுவருவதையும், இவ் வுதவிகள் இன்னும் அதிகமாக வேண்டுமென்று அவை இரந்து கெஞ்சுவதையும் கண்டு தெளியலாம். இத்தகைய சிற்றிளந் தொழிலுக்கு ஓர் ஆக்கம் கொடுத்தற்குரிய சிறந்த வழி, பொது வருவாயிலிருந்து அதற்கு உதவியளிப்பதுதான் என்பதை முன்குறித்த நிலை உணர்த்துகின்றது; இங்ஙனம் பொது வருவாயிலிருந்து பணம் போவதால், இத் தொழிலுக்கு எவ்வளவு செலவாகிறது என்பதை வரி கொடுப்பவர்கள் உணர்வார்கள்; இத் தொழிலின் நிலைபற்றி அவ்வப்போது மறு பரிசீலனை செய்வார்கள்.

பாதுகாப்பு வேண்டுமென்று கூறும் பல விவாதங்கள், ஒரு நாடு தன்னளவில் மிகுதியும் தன்னிறைவு உடையதாகத் தன்னைப் பேணிக்கொள்ளவேண்டுமென்று, எவ்வித ஆதாரத்தையும் சுட்டாது, வார்த்தையளவில் கூறுகின்றன. என்றாலும், பன்னாட்டுச் சிறப்புத்

தேர்ச்சியால் ஏற்படும் நலன்களை உணர்ந்து பாராட்டுகிறவர்களில் சிலரால் (எல்லோராலும் அல்ல) ஏற்றுக்கொள்ளப்பட்ட இன்னும் சில விவாதங்களும் உள்ளன. இதிலுள்ள சிரமம் என்னவென்றால்; ஒருமுறை பாதுகாப்பை ஏற்படுத்திவிட்டால், இதற்குரிய பொருளாதார விளக்கம் பின்னணிக்குப் போய்விடுகிறது; அரசியல் ஆதிக்கம், பிரசாரம், அரசியல் விட்டுக்கொடுப்புகள் (log-rolling) சில நாடுகளில் ஓட்டுமானங்கள், சரண்டல்கள் முதலியவற்றிற்கெல்லாம் இடம் தந்துவிட்டுப் பொருளாதார விளக்கம் மங்கிப்போய்விடுகிறது. ஏட்டளவு விவாதங்களைக் கண்டிப்பாக அமுல் நடத்துவதால் ஏற்பட்டிருக்கக்கூடிய விளைவுகளோடு, உண்மையிலேயே பாதுகாப்பளிக்கப்பெற்ற பொருள்களும், அவை பெறும் பாதுகாப்பளவும் ஓரளவே தொடர்பு கொண்டிருக்கின்றன. சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில், வரையறுத்த அளவிற்காவது பாதுகாப்பளிக்கவேண்டுமென்று கேட்பதற்குச் சில பொருத்தமான ஏட்டு விவாதங்களும் இருக்கக் கூடும்; என்றாலும், நடைமுறை நிலையில் தடையிலா வாணிபமே சிறந்த வழியாகும் என்பதை எல்லோரும் தெளியவேண்டும்.

# 35. அயல்நாட்டுச் செலுத்துநிலை

## 1. நாடுகளிடையே செலுத்துதல்கள் அளிக்கப்பெறும் வகை

நாடுகள் ஒவ்வொன்றும் தத்தமக்கெனத் தனி நாணயங்களைக் கொண்டுள்ளன. வெவ்வேறு நாணய அலகுகட்கு ஒரே பெயரிட்டு அழைப்பதைக்கொண்டு, நாம் தவருகப் புரிந்துகொள்ளக்கூடாது. நாணயங்களில் பல்வேறு வகையுள—பவுன்கள், டாலர்கள், பிராங்குகள் எனப் பலப்பல பெயர்களில் அவை அழைக்கப்பெறுகின்றன; இவை ஒவ்வொன்றும் வேறுவேறு மதிப்புள்ளவை. உதாரணமாக, ஆஸ்திரேலியப் பவுன், ஆங்கிலப் பவுனுக்கு முற்றிலும் வேறுபட்டது; தனியானது. மலேயாவின் டாலர் வேறு, அமெரிக்காவின் டாலர் வேறு; பெல்ஜியத்து பிராங்குக்கும், ஃபிரான்சின் பிராங்குக்கும் பெரிய வேறுபாடு உண்டு.

பொது விதியாக, ஒரு நாட்டின் நாணயம் இன்னொரு நாட்டில் சட்டமுறைச் செலாவணியாக இருப்பதில்லை; பொதுப் புழக்கத்திற்கு ஏற்றுக்கொள்ளப்பெறுவதில்லை. ஃபிரெஞ்சு நாட்டில் நமக்குள்ள கடன்களைத் தீர்க்க, இங்கிலாந்து பாங்கு நோட்டுகளைத் தரமுடியாது; அதைப்போல இங்கிலாந்து நாட்டில் உள்ள தனது கடனைத் தீர்க்க ஒரு ஃபிரெஞ்சுக்காரர், ஃபிரெஞ்சு பாங்கு நோட்டுகளையும் தரமுடியாது. பொதுவாகச் சொல்வதென்ருல், ஒரு நாட்டின் நாணயம், அந்த நாட்டின் எல்லைக்குள்ளேயே எப்போதும் இருக்கிறது; இதர நாட்டுச் செலுத்துதல்கட்காகப் பயன்கொள்ளப் பெறுவதில்லை.

நாடுகளிடையே ஏற்படும் எல்லாச் செலுத்துதல்களும் கிட்டத்தட்ட பாங்குகள்மூலமே நடைபெறுகின்றன. ஒரு பாங்கு, A,B என்ற இரு நாடுகளிலும் இயங்கினுல், **A** நாட்டில், A நாணய இருப்புகளையும், B நாட்டில் B நாணய இருப்புகளையும் கொண்டிருந்தால், இரு நாடுகளிடையேயும் நாணயமாற்றுச் செய்து

கொள்ள இந்த பாங்கிஞல் எளிதில் முடியும். A-யிலிருந்து பணத்தை வாங்கி, அதற்கு நிகரான தொகையை B-யின் செலாவணியில் அளிக்கவும், B-யிலிருந்து பணத்தை வாங்கி, அதற்கு நிகரான தொகையை A-யின் செலாவணியில் அளிக்கவும் இதஞல் எளிதில் முடியும்.

கிரேட் பிரிட்டனுக்கு மிகப் பெரிய, எங்கும் பரவிய பன்ஞட்டு வாணிபம் உண்டு; லண்டன் நகரம் முதன்மையான நிதித் துறைக் கேந்திரமாக இலங்குகிறது. கிரேட் பிரிட்டனுக்கும் இதர பல நாடுகட்கும் இடையே உள்ள செலுத்துதல்களும், இதர நாடுகள் தமக்குள் கொண்டுள்ள செலுத்து முறைகளும் லண்டன் மூலமாகவே தீர்க்கப்பெறுகின்றன.

முக்கியமான அயல்நாட்டு பாங்குகட்கும், குடியேற்ற நாட்டு பாங்குகட்கும் லண்டனில் அலுவலகங்கள் உள்ளன; இவ் வலுவலகங்களில் அவற்றிற்கு ஸ்டெர்லிங் நிதி இருப்புகள் உள்ளன. இதஞல் பிரிட்டிஷ் பாங்குகளுக்கோ, இதர பாங்குகள் தமக்குள்ளோ ஸ்டெர்லிங் நாணயத்தில் தமது செலுத்துதல்களைத் தீர்த்துக் கொள்ளுகின்றன; இதற்கு இணையான தொகையைத் தம் நாட்டில், தமது சொந்தச் செலாவணியில் செலுத்திவிடுகின்றன. பிரிட்டிஷ் பாங்குகளுக்கு அயல்நாடுகளில் சில கிளைகள் உள்ளன; என்ருலும், பிற நாடுகளில் உள்ள உள்நாட்டு பாங்குகளையே தனது செயலியாக (agent) பிரிட்டிஷ் பாங்குகள் அமர்த்திக்கொண்டு, தம் சார்பாக, உள்நாட்டுச் செலாவணியில் தொகை அளிக்கச் செய்கின்றன. வெளிநாடுகளில் பிரிட்டிஷ் பாங்குகளுக்கு இருக்கும் அயல்நாட்டுச் செலாவணியை, லண்டனில் உள்ள வெளிநாட்டு பாங்குகட்கு இருக்கும் ஸ்டெர்லிங் இருப்போடு ஒப்பிட்டுப் பார்த்தால், முந்தியது மிகமிகக் குறைவாகவே இருக்கும்.

உதாரணமாக, பிரிட்டனில் வாழும் ஒருவர், பாரிஸிலிருந்து கடன் அளித்தவருக்கு, 10,000 பிராங்குகளைத் திருப்பிச் செலுத்த விரும்புவதாக வைத்துக்கொள்ளுவோம். இவர் என்ன செய்கிருர்? தனக்குக் கணக்குள்ள பாங்கிற்குச் சென்று, இத் தொகைக்கு நிகரான ஸ்டெர்லிங்கைக் கட்டி, டிராஃப்ட் (draft) ஒன்றை வாங்குகிருர். இந்த டிராஃப்ட், இவருடைய பாங்கின் பாரிஸ் கிளைமீதோ, அல்லது அதற்குச் செயலியாகப் பாரிஸில் பணிபுரியும் ஃபிரெஞ்சு பாங்கின் மீதோ ஃபிராங்குகளுக்கு வாங்கப்பட்டிருக்கும். இவர் இந்த டிராஃப்டைத் தனக்குக் கடனளித்தவருக்கு அனுப்புகிருர்; அவர் இதைத் தானே நேரில் சென்று அளித்தோ (அல்லது, தனது பாங்கின்மூலம் அனுப்பியோ) தனக்குச் சேரவேண்டிய 10,000 ஃபிராங்குகளை வாங்கிக் கொள்ளுகிருர்.

உதாரணமாக, ஒரு பாங்கிடம் இருப்பில் போதிய ஸ்டெர்லிங் இல்லை எனக் கொள்ளுவோம். அப்பொழுது, இது தனது சொந்தச் செலாவணியைக் கொடுத்து இதர பாங்கிடமிருந்து தனக்கு வேண்டிய ஸ்டெர்லிங் நாணயத்தை வாங்கிக்கொள்ளும். ஒரு குறிப்பிட்ட கால அளவில், ஒரு நாட்டிலிருந்து இதர உலக நாடுகட்கெல்லாம் செலுத்தப்படும் தொகைக்குக் கிட்டத்தட்டச் சமமாக, இதர உலக நாடுகளிலிருந்து இந்த நாட்டிற்குச் செலுத்தப்படும் தொகை சமமாக அமைந்துகொள்ளும்வரை எத்தகைய இடர்ப்பாடும் நேராது. ஆனல், ஒரு நாடு தான் பெறுவதைக்காட்டிலும் அதிகமாகச் செலுத்திக்கொண்டே இருக்க வேண்டிய நிலை ஏற்படுகையில் தான் இடர்ப்பாடுகள் கிளைக்கின்றன. இத்தகைய இடர்ப்பாடுகளைச் சமாளிப்பதற்குரிய முக்கிய மாற்று வழிகளாக உள்ள—மாருன அயல் நாட்டுச் செலுத்துநிலையைச் செம்மை செய்வது—முதலியனபற்றி இனி வரும் அதிகாரங்களில் காண்போம்.

இப்பொழுது பன்னுட்டுப் பரிவர்த்தனைகளில் பாதிக்குமேல் ஸ்டெர்லிங் முறையில் கொடுக்கப்பெறுவதால், கிட்டத்தட்ட எல்லா நாடுகளும் தம்மிடம் ஸ்டெர்லிங் இருப்புகளை வைத்திருக்கின்றன. ஆனுலும், (அமெரிக்க) டாலர்களின் மூலமாகவும் கணிசமான பன்னுட்டுப் பரிவர்த்தனைகள் நடப்பதால், சில நாடுகள் தமது வெளிநாட்டு இருப்புகளைப் பெரும்பாலும் டாலரிலேயே வைத்திருக்கின்றன.

## 2. வாணிப இருப்புநிலையும் அயல்நாட்டுச் செலுத்துநிலையும்

(The Balance of Trade and the Balance of Payments)

ஒரு நாட்டின் வாணிபநிலை என்பது அதன் ஏற்றுமதிகளின் மதிப்பிற்கும், அதனுடைய இறக்குமதிகளின் மதிப்பிற்கும் இடையே ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு ஏற்படும் தொடர்பு ஆகும். ஏற்றுமதி இறக்குமதியை விஞ்சிவிட்டால், இந்த வித்தியாசம் அதன் ஏற்றுமதி உபரி (export surplus) எனப்படும்; இறக்குமதி, ஏற்றுமதியை விஞ்சிவிட்டால், இந்த வித்தியாசம் அதன் இறக்குமதி உபரி (import surplus) எனப்படும்.

அமெரிக்கா, கானடா, தென் ஆஃப்ரிக்கா போன்ற நாடுகள், தமது இறக்குமதிகளை 'f.o.b.' என்ற பெயரில் அளவிடுகின்றன. இதன் விரிவு 'அனுப்புச் செலவின்மை' (free on board) என்பதாகும். அதாவது, இந்த இறக்குமதிப் பொருள்களை எந்த நாடு அனுப்புகிறதோ, அந்த நாட்டைவிட்டு இப் பொருள்கள் நீங்கும் பொழுது அவற்றிற்கு உள்ள மதிப்பைக்கொண்டு, அவை அளவிடப்

படுகின்றன. இதர பல நாடுகள் தமது இறக்குமதி 'c.i.f.' என்ற பெயரில் அளவிடுகின்றன. இதன் விரிவு, செலவு, இன்சூரன்சு, கப்பற் கட்டணம் (cost, insurance, freight) என்பனவாகும். அதாவது, இந்த இறக்குமதிப் பொருள்கள், தனது நாட்டை வந்து அடையும்பொழுது அவற்றிற்கு உள்ள மதிப்பைக்கொண்டு அவை அளவிடப்படுகின்றன. முந்திய முறை, மிகுதியான ஏற்றுமதி உபரி அல்லது குறைவான இறக்குமதி உபரியை, பிந்திய முறையைவிட அளிக்கின்றது என்பது தெளிவாகும். (இவ்விரு முறைகளையும் மேற்கொள்ளும் நாடுகளிடையே ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது) இதில் ஏற்படும் வித்தியாசத்தை (இது 10 சதவீத அளவிற்கு, அல்லது சற்று அதிகமாகவே இருக்கலாம்) அனுமதித்தே ஆகவேண்டும். ஏனென்ருல், ஒரு நாடு தனது இறக்குமதிகளை 'f.o.b.' முறை மூலமும், இன்னொரு நாடு தனது இறக்குமதிகளை 'c.i.f.' முறை மூலமும் மதிப்பிடுகையில் வித்தியாசம் ஏற்படுவது இயல்பு.

தம் இறக்குமதி ஏற்றுமதிகளில் என்னென்ன இனங்களைச் சேர்த்துக்கொள்ளுவது என்பதிலும் நாடுகளிடையே வேறுபாடுகள் இருக்கின்றன. பின்வரும் இனங்களை அவை சேர்த்துக்கொள்ளலாம் சேர்த்துக்கொள்ளாமலும் விடலாம். அவை வருமாறு: தங்கம், வெள்ளி, கட்டுத் தபால்கள் (parcel posts), கப்பலின் கரித் தொட்டிகள், பொருள்கள், படைக்கலங்கள், இரண்டாம் தடவை கொள்முதல் செய்த கப்பல்கள், மீன் முதலியன இதில் அடங்கும். இவற்றையெல்லாம் தனித்தனியாக நான் விளக்கப்போவதில்லை. ஏனென்ருல், இவ் வெல்லா இனங்களும் ஓர் அயல்நாட்டுச் செலுத்தலில் அடங்கியே தீரும்; அப்பொழுது எல்லாம் தெளிவாகிவிடும்.

ஒரு நாடு தனது இறக்குமதிகட்காகவும், இதர பரிவர்த்தனைகட்காகவும் வெளிநாட்டில் பணம் செலுத்தவேண்டியதிருக்கிறது. அயல் நாட்டவர்களால் அளிக்கப்பட்ட வேலைகட்கும், கப்பல் கட்டணத்திற்கும் இந் நாடு பணம் செலுத்தவேண்டியதிருக்கும்; இதன் மக்கள் வெளிநாட்டில் மகிழ்ச்சி உலாச் சென்ருலும், வணிகப் பயணம் சென்ருலும் அதற்குப் பணம் வேண்டும்; அல்லது இந் நாட்டு மக்கள் வெளி நாடுகளில் உள்ள தம் உறவினர்கட்கும் நண்பர்கட்கும் பணம் அனுப்பவேண்டியதிருக்கும்; வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகும் சினிமாப் படங்கட்கு உரிய தொகை அளிக்கவேண்டியதிருக்கும்; இதன் அரசாங்கம் தனக்குக் குடியேற்ற நாடுகள் இருந்தால் அவற்றில் பணம் செலவழிக்கவேண்டியதிருக்கும்; இது உலக நாட்டவையில் ஓர் உறுப்பு நாடாக இருந்தால், பன்னாட்டு அகதிகள் கழகம் முதலிய உலக இயக்கங்கட்குப் பணம் அளிக்கவேண்டியதிருக்கும். வெளிநாட்டவர்களுக்கு இந் நாட்டில் சொத்துகளும்

இதர முதலீடுகளும் இருக்கலாம். இவற்றிலிருந்து அவர்கள் வாடகை அல்லது வட்டி, அல்லது இலாப ஈவு முதலியவற்றைப் பெறலாம். வெளிநாட்டரசாங்கத்திடமிருந்து வாங்கிய கடனுக்காக இது வட்டி செலுத்தவேண்டியதிருக்கலாம்; அல்லது சர்வதேச பாங்கு, பன்னாட்டு நாணய நிதி முதலிய நிறுவனங்களிடமிருந்து கடன் வாங்கியிருந்தாலும் வட்டி செலுத்தவேண்டியதிருக்கலாம். இவை தவிர இன்னும் எத்தனையோ பரிவர்த்தனைகட்காக வெளிநாடுகளில் பணம் செலுத்தவேண்டியதிருக்கும்.

இத்தகைய பரிவர்த்தனைகட்கெல்லாம் இவற்றிற்கு எதிரான வரவு, கணக்கின் இன்னொரு பகுதியில் இருக்கும். நாடுகள், பல்வேறு வேலைகட்காக வெளிநாட்டிடமிருந்து பணம் பெறுகின்றன—வெளிநாட்டுப் பயணிகள், வெளிநாடுகளில் தம்முடைய மூலதனங்கள், தம் ஏற்றுமதிகள் முதலியவற்றிலிருந்து அவை பணம் பெறுகின்றன.

கிரேட் பிரிட்டன் பல ஆண்டுகளாக மிகுதியான இறக்குமதி உபரியைப் பெற்றிருந்தது. இதற்குரிய பிரதான காரணம் என்னவென்றால், பிரிட்டனில் வாழ்ந்தவர்கள் தமது வெளிநாட்டு மூலதனங்களின்மூலமாக வட்டிகள், இலாப ஈவுகள் முதலிய வருமானங்களைப் பெற்றனர். பிரிட்டிசுத் தொழில் நிறுவனங்கள் வெளிநாட்டு மக்கட்குக் கப்பல் போக்குவரத்து, பாங்குத் தொழில், இன்சூரன்சு முதலிய பணிகளைச் செய்து சம்பாதித்தன. மேற்கூறிய வருமானங்கள் அனைத்தும் பொருள்கள்மூலமாகவே வெளிநாட்டவரால் செலுத்தப்பெற்றன. பிரிட்டனின் இறக்குமதியில் உபரி ஏற்பட்டதற்குக் காரணம் இதுதான்.

இறக்குமதிகள் ஏற்றுமதிகளைப்பற்றிமட்டும் கட்டுப்படுத்திக் கொள்ளாது, எல்லாப் பரிவர்த்தனையையும் கணக்கிட்டுப் பார்த்தால்தான் நமக்குத் தெளிவேற்படும். இத்தகைய தெளிவான கணக்கு அயல்நாட்டுச் செலுத்துநிலையால்மட்டுமே நமக்குக் கிடைக்கிறது.

ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலை என்பது, ஒரு குறிப்பிட்ட கால அளவிற்கு இதர நாடுகளுடன் இது கொண்ட பணப் பரிவர்த்தனைகளைப்பற்றிய ஒரு பதிவு ஆகும். இங்கு ஐக்கிய அரசை (United Kingdom) உதாரணத்திற்குக் கொள்ளுகின்றேன். ஐக்கிய அரசில் உள்ள தனிநபர், அரசாங்கம், நிறுவனம் அல்லது யாரோ ஒரு குழுவினர்–முதலியோரால் இறக்குமதி, விற்பனை முதலியவற்றில் மேற்கொள்ளப்பெறும் ஏதாவதொரு பரிவர்த்தனையினால் இதர நாட்டிற்கு இங்கிலாந்திலிருந்து செலுத்தப்பட்டால், இது பற்று இனமாகக் கொள்ளப்பெறும். இதைப்போல ஏற்றுமதி முதலியவற்றில் மேற்கொள்ளப்பெறும் ஒரு பரிவர்த்தனையினால், இங்கிலாந்து

நாட்டில் உள்ளவர்களுக்கு அயல்நாட்டவர்களால் செலுத்தப்பட்டால் அது வரவு இனம் எனக் கருதப்படும். இதர நாணயங்களை வாங்க ஸ்டெர்லிங் செலவழிக்கப்படுகிறதா அல்லது இதர நாணயங்களை உபயோகித்து ஸ்டெர்லிங் வாங்கப்படுகிறதா என்பதுதான் இங்கு உள்ள அளவுகோல். தேசிய இனம்பற்றிய பேச்சுக்கு இங்கு இடம் இல்லை. உதாரணமாக, ஐக்கிய அரசில் வசிக்கும் ஓர் அயல்நாட்டவர், வெளிநாட்டில் உள்ள ஒரு பிரிட்டிஷ்காரருக்குச் செலுத்துவது பற்று இனமாகவே கருதப்படும்.

இத்தகைய மொத்தக் கொடுக்கல் வாங்கல் தனித்தனிப் பரிவர்த்தனைகள் முதலியவற்றுலாகும் மொத்தப் பற்றுகள் எல்லாம் சரியாக மொத்த வரவுகளோடு சமமாகிவிடவேண்டும் என்று பேசுவதில் தக்க காரணம் ஏதும் இருப்பதாக எனக்குப் புலப்படவில்லை. இத்தகைய பற்று வரவுகளில், இந்தப் பக்கம் அல்லது அந்தப் பக்கம் கணிசமான, தொடர்ந்த ஏற்றத் தாழ்வுகள் இருக்குமேயானுல், இவ்விரண்டையும் ஓரளவு இணைத்துக் கொணர்தற்காக அரசாங்கம் சில நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியதிருக்கும். இவ்விதம் அரசாங்கம் மேற்கொள்ளக்கூடிய நடவடிக்கைகளைப்பற்றிப் பின்னர் பேசுவேன். நான் இப்பொழுது குறிப்பிடுவது என்னவென்றுல், வரவுகளுக்குச் சமமாகப் பற்றுகள் இருக்கவேண்டுமென்பதற்கு எவ்விதக் காரணமும் இல்லையே என்பதுதான்.

என்றுலும், அயல்நாட்டுச் செலுத்துநிலையை நடப்புக் கணக்கில் பரிவர்த்தனை, முதலினக் கணக்கில் (capital account) பரிவர்த்தனை என இரு பாகமாகப் பிரித்துக்கொள்ளுவது வழக்கம். நடப்புக் கணக்கு, வரவு இருப்பையோ (credit balance), அதிகப் பற்றையோ (debit balance) சூழ்நிலைக்குத் தக்கபடி காட்டக்கூடும். முதலினக் கணக்கு, இத்தகைய இருப்புகள் எவ்வாறு நிதியளிக்கப்பெறுகின்றன என்பதைக் காட்டுகிறது. ஆகையால், கணக்கு வைப்பிற்காகவாவது முதலினக் கணக்கு, நடப்புக் கணக்கிற்கு எதிராகச் சமமான இருப்பைக் காட்டியே தீரவேண்டியதிருக்கிறது.

உதாரணமாக, இங்கிலாந்தின் நடப்புக் கணக்கு x பவுன்கள் அதிகப் பற்றுகக் காட்டுகிறதெனக் கொள்ளுவோம். இதற்குரிய செலுத்துதல்கள் எவ்வாறு அளிக்கப்பெற்றன? ஸ்டெர்லிங் இருப்பில் ஏற்பட்ட இணையான உயர்விலிருந்து இச் செலுத்துதல்களை அளித்திருக்கக்கூடும்; அயல்நாட்டு பாங்குகளும் குடியேற்ற நாட்டு பாங்குகளும் உண்மையில் இப் பணத்தை அளிக்கின்றன; இதனுல் இங்கிலாந்தின் குறைந்த காலக் கடனுடைமை (indebtedness) x பவுன்கள் அளவுக்கு உயர்ந்துவிட்டது. ஆகையால், இங்கிலாந்தின் முதலினக் கணக்கு, 'ஸ்டெர்லிங் செலவுப் பொறுப்புகளில் உயர்வு' (increase of sterling liabilities) என

x பவுன்களை வரவு இனமாகக் காட்டிவிடுகிறது. நடப்புக் கணக்கு களையும் முதலினக் கணக்குகளையும் கொண்ட அயல்நாட்டுச் செலுத்துநிலையின் இரு பக்கங்களும் ஒன்றுக்கொன்று சமமாக அமையவேண்டும்; ஏனென்றால், ஒவ்வொரு பரிவர்த்தனைக்கும் யாராவது பணம் செலுத்தவேண்டியிருக்கிறது. உதாரணமாக, விற்பனையாளன், தனது பொருள்களையும் பணிகளையும் கடனாகக் கொடுத்தால், அவன் ஒரு குறைந்த காலக் கடன் கொடுக்கிறான் என்பதே பொருள். இது அவனது முதலினக் கணக்கில் வரவு இனமாகச் சேர்த்துக் கொள்ளப்பெறும்.

## 3. ஐக்கிய அரசின் அயல்நாட்டுச் செலுத்துநிலைப் பட்டியல் 1958–62

1958, 1960–62ஆம் ஆண்டுகளுக்கான, ஐக்கிய அரசின் அயல் நாட்டுச் செலுத்துநிலைச் சுருக்கம் பின்வருவாறு: இது 1963ஆம் ஆண்டு மார்ச்சில் வெளியான Cmd 1984-லிருந்து தொகுக்கப் பெற்றது. (பவுன்கள் மில்லியன் கணக்கில் தரப்பட்டுள்ளன.)

நடப்புக் கணக்கு

| | 1958 | 1960 | 1961 | 1962 |
|---|---|---|---|---|
| பற்றுகள் | | | | |
| 1. இறக்குமதிகள் (f.o.b.) ... | 3,360 | 4,106 | 4,013 | 4,059 |
| 2. அரசாங்கச் செலவு ... | 281 | 336 | 383 | 407 |
| 3. கப்பல் கட்டணம் ... | 488 | 701 | 711 | 720 |
| 4. வட்டி, இலாபம், இலாப ஈவு | 511 | 452 | 444 | 457 |
| 5. பிரயாணச் செலவு ... | 155 | 210 | 231 | 240 |
| 6. இதரவகை ... ... | 372 | 439 | 458 | 442 |
| 7. மொத்தப் பற்றுகள் ... | 5,167 | 6,244 | 6,240 | 6,325 |
| வரவுகள் ... ... ... | | | | |
| 8. ஏற்றுமதிகள், மறு ஏற்று மதிகள் (f.o.b.) .. | 3,392 | 3,710 | 3,865 | 3,988 |
| 9. அரசாங்கச் செலவு ... | 57 | 49 | 44 | 36 |
| 10. கப்பல் கட்டணம் ... | 631 | 646 | 657 | 681 |
| 11. வட்டி, இலாபம், இலாப ஈவு | 705 | 680 | 686 | 765 |
| 12. பயணச் செலவு ... | 138 | 188 | 206 | 220 |
| 13. இதரவகை ... ... | 573 | 663 | 710 | 702 |
| 14. மொத்த வரவுகள் ... | 5,496 | 5,936 | 6,168 | 6,392 |
| 15. நடப்புக் கணக்கில் உள்ள உபரி அல்லது பற்றுக்குறை | +329 | −308 | −72 | +67 |

மூலதனக்கணக்கு

| | 1,958 | 1,960 | 1,961 | 1,962 |
|---|---|---|---|---|
| நீண்ட கால வெளிநாட்டு முதலீடுகள் ... ... ... ... | −181 | −186 | +44 | −92 |
| ஸ்டெர்லிங் இருப்புகளில் மாற்றங்கள் ... ... ... ... | | | | |
| பிரதேச வரம்புக்குட்படாத நிறுவனங்கள் ... ... | −22 | −156 | +409 | −353 |
| இதரவகை ... ... ... | +80 | +376 | −337 | −45 |
| இதர குறுங்கால மூலதன ஏற்றுமதிகள் ... ... | +24 | +147 | −61 | +112 |
| மொத்த மூலதன ஏற்றுமதிகள் ... | −99 | +181 | +55 | −378 |
| தங்க இருப்புகளில் மாறுதல்கள் (உயர்வு—) ... ... ... | −284 | −177 | −31 | +183 |
| விட்டுப்போன பிழைகள், தவறுகள் முதலிய கணக்கில் ... ... | +54 | +304 | +48 | +128 |
| மொத்தம் ... ... | −329 | +308 | +72 | −67 |

மேற்குறித்த பட்டியலில் உள்ள எல்லாப் பரிவர்த்தனைகளும் (பேரங்களும்) ஒரு சில பொதுத் தலைப்புகளின்கீழ் வகுக்கப்பட்டிருக் கின்றன. அவையனைத்தும் அப்படியே விளக்கம் தரக்கூடுமாயினும், சில குறிப்புகளைமட்டும் தருவது பயனளிக்கக்கூடும்.

இப் பட்டியலில் இறக்குமதிகள், கப்பல் ஏற்றும்வரை ஆன செலவு உட்பட (f.o.b) மதிப்பிடப்பட்டிருக்கின்றன. (பிரிட்டிஷ் வாணிபப் புள்ளிவிவரத்தில் அவை c.i.f என மதிப்பிடப்படுகின்றன. இவ் விறக்குமதிப் பொருள்கள் எல்லாம் பிரிட்டனுடைய கப்பலில் ஏற்றிச் செல்லப்படும்வரை, அவற்றிற்குப் பிரிட்டனில் உள்ள இறக்கு மதியாளர்கள் அளிக்கும் கட்டணங்கள், உள்நாட்டுச் செலுத்துதல் களாகவே இருக்கின்றன. அவற்றைப் பிரிட்டனைச் சாராத கப்பல் களில் ஏற்றிச் செல்லும்வரை, அவற்றிற்கு அளிக்கப்படும் கட்ட ணங்கள் 3ஆம் தலைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. 3ஆம் தலைப்பில் உள்ள இனங்களில், பிரிட்டனின் கப்பல் தொழில், கரித்தொட்டிகள், இதர கப்பல் தளவாடங்கட்காக அயல்நாடுகளில் செல வழிக்கும் தொகைகள் சேர்க்கப்பட்டுள்ளன. இதற்கு இணையாகப் பிரிட்டனுடைய கப்பல் தொழிலினருக்கு அயல் நாட்டவர்கள் செலுத் திய கட்டணங்கள் (அவர்கள் பிரிட்டிஷ் கப்பல்களை உபயோகித்த தற்கும், பிரிட்டனுடைய துறைமுகங்களில் செலவழித்ததற்கும் உரிய கட்டணங்கள்) 10ஆம் தலைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. 1959 வரை, இக் கப்பல் கட்டணங்கள் காரணமாக, பிற நாடுகட்குச் செலுத்

தியதைவிட வருமானங்கள் அதிகமாகவே இருந்தமையால் 3ஆம் தலைப்பைவிட 10ஆம் தலைப்பில் உள்ள தொகை அதிகமாயிருப்பதைக் காணலாம். 1959 முதல் வருமானங்களை விடச் செலுத்திய தொகைகள் அதிகரித்துவிட்டதால் 3ஆம் தலைப்பு 10ஆம் தலைப்பைவிட அதிக மாகிவிட்டது.

பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வெளிநாட்டுச் செலவுகளில் (தலைப்பு) முதன்மையானது இராணுவச் செலவு (1962-ல் 249 மில்லியன் பவுன்). இதர இனங்கள் என்பன பொருளாதாரம், மற்றும் இதர உதவிக் கொடைகள் (90 மில்லியன் பவுன்). சர்வதேச நிறுவனங் களுக்கு வழங்கிய நன்கொடைகளும் கட்டணங்களும் (18 மில்லியன் பவுன்), நிர்வாக, தூதரகச் செலவுகள் (40 மில்லியன் பவுன்), இதற்கு இணையான வரவு இனம் இராணுவப் பணிகளாகும் (30 மில்லியன் பவுன்). இதிலிருந்து பிரிட்டிஷ் அரசாங்கத்தின் செலவுகள், அதன் வருவாயைவிடக் கணிசமாக உயர்ந்திருப்பது நன்கு புலப்படுகிறது. 1962-ல் இருந்த நிகரப் பற்று 371 மில்லியன் பவுன்கள் எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது.

ஐக்கிய அரசில் உள்ள அயல்நாட்டு முதலீடுகளுக்கான வட்டி, இலாபம், இலாப ஈவுகள் என்பனவும், பிரிட்டனுக்கு அளிக்கப்பட்ட கடன்களுக்கான வட்டியும் 4 ஆவது இனத்தில் குறிப்பிடப்பட்டுள் ளன. இந்த இனத்தில் போருக்குப் பின்னர், அமெரிக்கா, கானடா நாட்டு அரசாங்கங்கள் அளித்த கடன்களுக்கு உரிய வட்டியும், பிரிட் டனில் வாழாத மக்களுக்குச் சொந்தமான ஸ்டெர்லிங் இருப்பு களுக்குக் கிடைத்த வட்டியும் சேர்த்துக்கொள்ளப்பெறுதல்வேண்டும். இதற்கு இணையாக, பிரிட்டிசு அரசாங்கம் வெளிநாடுகட்கு அளித்த கடன்களுக்கான வட்டி, இலாபம், இலாப ஈவுகள் என்பன 11ஆம் இனத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளன. இது 4ஆம் இனத்தைவிட 308 மில்லியன் பவுன்கள் விஞ்சியிருக்கிறது.

பிரிட்டிசுப் பயணிகளும், வணிகப் பிரதிநிதிகளும் அயல் நாட் டுப் பிரயாணங்கட்காக (இனம் 5) 240 மில்லியன் பவுன்கள் செல விட்டுள்ளனர். பிரிட்டனில் பிற நாட்டினர் இவற்றிற்காகச் செல வழித்ததைவிட (இனம் 12) இது 20 மில்லியன் பவுன்கள் அதிக மாகியுள்ளது. இந்தப் பிரயாணச் செலவுகளில் வாடகைக் கட்ட ணங்கள் சேர்க்கப்படவில்லை. கப்பல் கம்பெனிகட்கும் ஆகாய விமானங்கட்கும் அளிக்கப்பட்ட வாடகைக் கட்டணங்கள் 3ஆம், 10ஆம் இனங்களில் குறிக்கப்பெற்றுள்ளன.

6ஆம், 13ஆம் இனங்களில் லண்டன் மாநகரின் பாங்குத் தொழில்களும், இன்சூரன்சு வருமானங்களும், இதைப்போன்றே குடி

யேறி வாழாதோர் மேற்கொண்ட பரிவர்த்தனைகளும் அடங்கியுள் ளன. (இது ஒரு வரவு இனம்,) மேலும், உள்நாட்டு விமானப் போக்குவரத்திற்கான வரவு செலவுகள், திரைப்பட வருமானங்கள் (நிகரப் பற்றுகச் சுமார் 10 மில்லியன் பவுன்கள்) அடங்கியுள்ளன. தவிரவும், ஐக்கிய அரசில் உள்ள அமெரிக்கா, கானடா நாட்டு இரா ணுவச் செலவுகளும் இந்த இனங்களில் சேர்ந்துள்ளன.

இந்த நடப்புப் பரிவர்த்தனைகளின்மூலமாக எல்லாம் சேர்த்து, 1962-ல் 67 மில்லியன் பவுன்கள் நிகர உபரியாக இருந்தன. ஐக்கிய அரசின் நடப்புக் கணக்கிற்கான அயல்நாட்டுச் செலுத்து தல்கள் சமீப ஆண்டுகளில் மிகுதியான ஏற்றத் தாழ்வுகட்கு உள் ளாகியுள்ளன. 1958-ல் 329 மில்லியன் பவுன்கள் உபரியாக இருந்த நிலை மாறி, 1960-ல் 308 மில்லியன் பவுன்கள் பற்றுக்குறை யாகிவிட்டன. இந்தப் பற்றுக்குறை, 1961-ல் 72 மில்லியன் களுக்குக் குறைக்கப்பட்டு, 1962-ல் மீண்டும் 67 மில்லியன் பவுன் உபரியாக்கப்பட்டது.

1962-ல் கிட்டிய உபரி, நீண்ட கால மூலதனங்களின் (92 மில்லியன் பவுன்) நிகர ஏற்றுமதிக்குக்கூடச் சரிக்கட்டப் போது மானதாயில்லை என்று மூலதனக் கணக்குப் புலப்படுத்துகிறது. என்றாலுங்கூட, நாடு சாராத நிறுவனங்களுக்குரிய 353 மில்லியன் பவுன் ஸ்டெர்லிங் பாக்கிகளை ஐக்கிய அரசால் திருப்பிக் கட்ட முடிந் தது. (இது பெரும்பாலும், 1961-ல் பன்னாட்டு நாணய நிதியி லிருந்து பெற்ற கடனில் எஞ்சியிருந்த தொகையைத் திரும்பச் செலுத்தும் முறையிலேயே இருந்தது). இவ்விதம் ஸ்டெர்லிங் பாக்கி களைத் திருப்பிக் கொடுக்க முடிந்ததற்குக் குறுங்கால மூலதன வகை யில் பல்வேறு இறக்குமதிகளைச் (112 மில்லியன் பவுன்) செய்ய முடிந்தமையும், தங்க இருப்பிலிருந்து 183 மில்லியன் பவுன்களைத் திரும்பப் பெற்றமையுமே காரணங்களாகும். இன்னவகை என்று கணக்கிட முடியாத இருப்பாக உள்ள (128 மில்லியன் பவுன்) தொகையில், நடப்புக் கணக்கிலும் மூலதனக் கணக்கிலும் கணக் கிற்குக் கொணரப்படாத இனங்கள் அடங்கியுள்ளன.

நடப்புக் கணக்கின் மீதான அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்பில் 375 மில்லியன் பவுன் அபிவிருத்தி 1960, 1962ஆம் ஆண்டு களுக்கிடையில் ஏற்பட்டுள்ளது. இதற்குக் காரணங்கள் வருமாறு: பண்ட வாணிகத்தில் பாதகமான இருப்புநிலைப் போக்கு ஏற்படுவது குறைய ஆரம்பித்தது; அதாவது, 1960-ல் 396 மில்லியன் பவுனா யிருந்தது, 1962-ல் 71 மில்லியன் பவுனாகிவிட்டது. மேலும், இறக்குமதி அளவுகள் 1 சதவீதம் மட்டுமே உயர்ந்திருக்க, ஏற்றுமதி அளவுகள் 5 சதவீதம் உயர்ந்தன; மேலும், வாணிப வீதங்களிலும்

5 சதவீத அபிவிருத்தி நிலை ஏற்பட்டது. புலனுகாத வருமானங்களின் நிகர இருப்பும் உயர்ந்துள்ளது 1960-ல் வரவு இருப்பாக 88 மில்லியன் பவுன்களே இருந்தது; இது 1962-ல் 138 மில்லியன் பவுன்களாகிவிட்டது.

## 4. அயல்நாட்டுச் செலுத்துநிலையின் சிறப்புக் கூறு

நடப்புக் கணக்கின்மீதான செலுத்துதல்களில் வரவு இருப்பு அல்லது உபரி என்பது பொதுவாக 'சாதகமான செலுத்துதல்' என்றும், அதிகப் பற்று இருப்பு அல்லது பற்ருக்குறை என்பது பொதுவாக 'சாதகமற்ற செலுத்துதல்' அல்லது 'பிரதிகூலமான செலுத்துதல்' என்றும் அழைக்கப்பெறும். ஒரு நாட்டிற்குரிய சூழ்நிலைகள் முழுவதும் சாதகமாக இருக்கின்றனவா அல்லது சாதகமின்றி இருக்கின்றனவா என்பதை ஆராயுமுன்னர், அந் நாட்டில் வரவு இருப்பும், அதிகப் பற்றும் ஏற்படுதற்குரிய காரணங்கள் யாவை என ஆராய்தல் வேண்டும்.

ஒவ்வொரு நாடும் 'உபரி' பெறவேண்டும் என்பது இயலாது. சில நாடுகள் பெறும் உபரிகட்கு எதிராகப் பிறநாடுகளில் பற்ருக்குறைகள் ஏற்பட்டே தீரும். இத்தகைய வேறுபாட்டால் நாடுகளிடையே ஏற்படக்கூடிய இருப்புகள் இப்பொழுதோ, பிறகோ எப்படியும் தீர்க்கப்படுதல் வேண்டும். அப்படித் தீர்க்கையில் பொருள்கள் மூலமாகவே (தங்கம் உட்பட) கொடுக்கப்பெறுதல் வேண்டும்; ஏனென்ருல், ஒரு நாட்டின் காகிதப் பணத்தை இன்னெரு நாடு பெற்றுக்கொள்ளாது. ஆகையால், குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு நாடு பெறும் வருமானங்கள், அது பிறநாட்டிற்கு அளிக்கவேண்டிய செலுத்துதல்களுக்குச் சமமாயிருக்க முற்படும்; இது, சில காலத்திற்குப் பற்ருக்குறையோடிருந்தாலும், இது தனது பற்றுகளைத் தீர்த்தவுடன் உபரி ஏற்பட்டுவிடும். இதைப்போலவே, அது சில காலத்திற்கு உபரியோடிருந்தாலும், அது பிற நாடுகட்கு அளிக்க வேண்டிய செலுத்துதலைத் தீர்த்தவுடன், மீண்டும் பழைய நிலை ஏற்பட்டுவிடும்.

பன்னுட்டு முதலீடு உபரியும் பற்ருக்குறையும் ஏற்படச் செய்கிறது. ஒரு நாடு, அரசாங்கத் துறையில் அல்லது தனியார் துறையில் முதலீட்டுத் தொழில்களை அபிவிருத்தி செய்வதற்காக, வெளி நாடுகளிலிருந்து மிகுதியாகக் கடன் வாங்குகிறதெனக் கொள்ளுவோம். இதனுல் இந்த நாட்டின் இறக்குமதிகள் உயரும். இந்த இறக்குமதிகள் புதிய தொழில் திட்டங்களுக்கான முதற்கருவிப் பொருள்களாகவும், இவற்றில் உழைக்கும் தொழிலாளர்கட்கான உடனடி நுகர்வுப் பொருட்களாகவும் அமைந்திருக்கலாம். தற்போதைக்கு

இந்த நாட்டில் மிகுதியான செலுத்துநிலைப் பற்றுக்குறை ஏற்படும்; இது மூலதன வருகையால் இன்னும் அதிகமாக்கப்படும்.

இதில் எத்தகைய முறைகேடும் இல்லை. இந்தப் பற்றுக்குறை எந்த விதத்திலும் இந்த நாட்டிற்குச் சாதகமற்றதாகவோ, பிரதி கூலமானதாகவோ இருக்காது. எல்லாம் திட்டப்படி முறையாக இயங்கினுல், இந்த நாட்டில் ஏற்பட்ட மூலதனக் கட்டமைப்பால் (capital formation) உற்பத்தி பெருகும்; நாட்டின் ஏற்றுமதியைப் பெருகச் செய்யும். இந்த நாடு, தனது அயல்நாட்டுக் கடன்களைத் திருப்பிச் செலுத்துகையில், இதன் நடப்புக் கணக்கிலான அயல் நாட்டுச் செலுத்துநிலையில் உபரி ஏற்பட்டிருக்கும்.

இதற்கு மாருக, ஒரு கடனளிக்கும் நாடு, தான் கடன் தருகையில் உபரி நிலையையும், அதைத் திரும்பப் பெறுகையில் பற்றுக்குறை நிலையையும் கொண்டிருக்கும்; இங்கும் சாதகமான, சாதகமற்ற நிலைகள் என்று பேசுவதில் பொருளில்லை. ஏனென்ருல், தான் அளித்த கடன்களைத் திரும்ப வாங்கிக்கொள்ளுவதில் எந்தவிதமான சாதக மற்ற தன்மையும் கிடையாது என்பது தெளிவு.

ஒரு நாடு அயல்நாட்டிடமிருந்து மூலதனம் பெறக்கூடிய ஒரே வழி பற்றுக்குறை நிலை மூலமாகத்தான் என்பதைக் குறித்துக் கொள்ள வேண்டும். இந்தப் பற்றுக்குறை தான் பெற்ற வெளி நாட்டு மூலதனத் தொகைக்குச் சமமாக இருக்கும். இதர நிலைகள் சமமாயிருப்பின், இப் பற்றுக்குறையை இறக்குமதி உபரி என்றும் சொல்லலாம். ஆனுல், இதிலிருந்து ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் பற்றுக்குறை ஏற்படும் பொழுதுதான் அதற்கு 'அயல் உதவி'' (external aid - அயல்நாடுகளிலிருந்தோ அல்லது பன்னுட்டுக் கழகங்களிலிருந்தோ பெறும் உதவிகள், கடன்கள் என்பன இதில் அடங்கும்) தேவைப்படுகிறது என்று பொருள் கொண்டுவிடலாகாது. ஒரு நாடு, தனது விழிப்புணர்ச்சியாலும் அடக்கத்தாலும் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஓரளவு சம நிலையைப் பேணிவருகிறது. இந்த நாடு ஏழைநாடாக இருக்கலாம்; அதே சமயத்தில் முதலீட்டுக்குரிய வாய்ப்புகளையும் மிகுதியாகப் பெற்றிருக்கலாம். தனது வருமானத்தையெல்லாம் தனக்கே செல வழித்துவிட்டுப் பற்றுக்குறை நிலையில் உள்ள இன்னெரு நாட்டை விட, முற்குறித்த நாட்டிடம் அதிகமான முதலீட்டு வாய்ப்புகள் இருத்தல் கூடும்.

ஒரு நாட்டிற்கு அயல்நாட்டிலிருந்து மூலதன வரவில்லை; ஆனுலுங்கூட இந்த நாட்டின் நடப்புக் கணக்கின்மீதான அயல் நாட்டுச் செலுத்துநிலையில் தொடர்ந்து பற்றுக்குறை ஏற்பட்டு

வருகிறது என வைத்துக்கொள்ளுவோம். இக் கருத்தை இன்னும் எளிதாக்குதற்காக, இந்த நாட்டில் ஏற்றுமதி தவிர எஞ்சியுள்ள வரவினங்கள், இதன் இறக்குமதி தவிர உள்ள பற்று இனங்களோடு சமமாக உள்ளன என வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுது இந்த நாடு, தனது ஏற்றுமதி வருமானங்களால் ஈடுகட்ட முடியாத அளவிற்கு மிகுதியாக இறக்குமதி செய்கிறது என்பது தெளிவாகிறது. இந்த நாடு தனது வருமானங்கட்கு மேலாகச் செலவழித்துத் தன் சக்திக்குமேல் வாழ முற்படுகிறது என்பதே இதன் பொருளாகும்.

இறக்குமதியாளர்கள் தாம் இறக்குமதி செய்யும் பொருள்களுக்குத் தமது செலாவணியிலேயே முழுவதும் அளிக்கின்றனர்கள். இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களை இறுதியில் நுகர்வோரும் அவ்வாறே அளிக்கின்றனர்கள். அவர்கள் எல்லோரும் தமது வருமான வரம்பிற்குள்ளேயே வாழ்கின்றனர்கள். அப்படியானல் எங்கே தப்பு இருக்கிறது?

இறக்குமதியாளர்கட்குத் தேவைப்படும் அன்னியச் செலாவணியைப் பாங்குமுறை அளித்தல்வேண்டும். ஏனென்றல், இந்த நாட்டின் ஏற்றுமதி வருமானங்கள், நாட்டிற்குப் போதிய அன்னியச் செலாவணியைப் பெற்றுத் தரும்வரையில் பெருகி இருக்கவில்லை. அயல்நாட்டுச் செலுத்துநிலைப் பற்றக்குறையினல் ஏற்பட்டுள்ள இடைவெளியை நிரப்புதல் வேண்டும். பற்றக்குறை நீடிக்கும்வரை இந்த இடைவெளியை நிரப்ப மேற்கொள்ளப்படும் எந்த முறையும், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குமட்டுமே உபயோகப்படக்கூடிய தற்காலிக உதவியாகமட்டுமே இருக்கும்.

இந்த இடைவெளியை 'முதலீட்டுக் கலைப்பு' (disinvestment) மூலம் நிரப்பமுடியும். அரசாங்கமோ அல்லது தனி நபர்களோ தமது அயல்நாட்டுச் சொத்துகளில் சிலவற்றை விற்கலாம். இது அச் சமயத்திற்கு வேண்டிய அன்னியச் செலாவணியை அளிக்கும். ஆனல், நாளடைவில் இது நிலைமையை இன்னும் மோசமாக்கும்; ஏனென்றல், வெளிநாட்டிலிருந்து இந் நாடு பெற்றுவந்த மூலதன வருவாயை இது குறைத்துவிடும். இந்த முறையைக் கடுமையான அவசர காலத்தில்மட்டுமே அரசாங்கம் ஒருவேளை மேற்கொள்ளக் கூடும். (உதாரணமாக, போர் தொடங்கிய சில மாதங்களில் பிரிட்டனில் வாழ்ந்த மக்களிடமிருந்த அமெரிக்க நாட்டு ஈடுகளையெல்லாம் பிரிட்டிசு அரசாங்கம் தொகுத்து, டாலர்களைப் பெறுவதற்காக அவற்றை விற்றுவிட்டது.)

இன்னெருவகையான முதலீட்டுக் கலைப்புப்படி, அரசாங்கம் தன்னிடம் உள்ள தங்க இருப்புகள், அன்னியச் செலாவணிகள்

ஆகியவற்றில் சில பகுதியை விற்றுவிடக்கூடும். ஆனல், பிரிட்டிசு அரசாங்கம் உட்படப் பல அரசாங்கங்களிடம் உள்ள இருப்புகளால், அவற்றிற்கு ஏற்படும் தற்காலப் பற்ருக்குறைக்கு எதிராகப் போதிய உதவி அளிக்க முடியாவகையில், அவ்வளவு குறைவாக உள்ளன. இத்தகைய சூழ்நிலையில், இந்த முறையை மேற்கொண்டால், அயல் நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் பற்ருக்குறையை மிகக் குறைந்த காலத்திற்கே ஈடுசெய்ய முடியும்.

பற்ருக்குறை இடைவெளியை மறைத்தற்கு உரிய இன்னெரு வழி, அரசாங்கமே அயல்நாடுகளில் கடன் வாங்குவது. இத்தகைய கடன்களைக் கொடுப்பதற்காகவே பன்னுட்டு நாணயநிதி எனப்படும் சர்வதேச நிறுவனம் ஒன்று உள்ளது; ஆனல், இந்த நிறுவனத்தால் குறிப்பிட்ட அளவு தொகையை, மிகக் குறுகிய கால எல்லைக்கே வழங்க முடியும். ஒரு நாடு இடர்ப்பாடான சூழலில் துன்புறும் பொழுது, அதனுடன் நட்புரிமை கொண்ட நாடு, அதற்குக் கடன் கொடுத்து உதவ முன்வரலாம். ஆனல், அந்த நாடு, தனது வருவாய்க்குமேல் செலவழித்து வாழும் முறையை மேற்கொண்டு, எப்போதுமே பற்ருக்குறையோடிருந்தால், நட்புரிமை கொண்ட நாடு எப்போதும் உதவ முன்வராது; ஏனென்ருல், இப்படிக் கொடுத்துக்கொண்டே இருந்தால் எப்படித்தான் திரும்பப்பெற முடியும்?

அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் தொடர்ந்த பற்ருக்குறையை, அண்மையிலோ, நாட்கழித்தோ அவசியம் சீர்செய்து தீர வேண்டும் என்பதே இவற்றிலிருந்தெல்லாம் நாம் காணும் முடிவாகும். ஒரு நாடு தனது சக்திக்குமேலும் சிறப்பாக வாழ்கிறதென்ருல், அந்த நாடு வளமாக இருக்கிறது என்பதுதான இதற்குப் பொருள் என்று விவாதிக்கலாம். ஆனல், ஒன்றை நாம் மறந்து விடுதல் கூடாது. நமது வாழ்க்கைத்தரத்தில் புகுந்து அதை உயர்த்துவதும் தாழ்த்துவதும், நாம் அனுப்பும் ஏற்றுமதிப் பொருள்களல்ல, நாம் பெறும் இறக்குமதிப்பொருள்களே! ஏற்றுமதிகள், நமக்கு வேண்டிய இறக்குமதிப் பொருள்களை நாம் பெறுதற்கு உதவும் கருவிகள்; அவைகள் ஒருவகைச் சாதனங்களே அல்லாமல் முடிவாகிவிடமாட்டா. இவையெல்லாம் முழு உண்மைகள்தாம். என்ருலும், ஒரு நாடு தனது வருவாய்க்குமேல் செலவழித்துக் கொண்டு, நீடித்த காலத்திற்கு, நிரந்தரமாக வாழ்ந்துவிட முடியாது என்பதிலும் உண்மை இருக்கிறது. 1930ஆம் பத்தாண்டுகளில், அல்பேனியாவிற்கு, இத்தாலீ உதவித் தொகைகளை அளித்து உதவியதுபோல, ஏதாவதொரு நாடு நிரந்தரமாக உதவித் தொகையை அளித்தால்தான் இந்த நாட்டால் ஓரளவு உயிர்வாழ முடியும். அண்மையிலோ, நாட்கழித்தோ, தனது வருவாய்க்குத் தக்கபடிதான் வாழவேண்டிய சூழல் இந்த நாட்டிற்கு ஏற்படும்.

அப்படிச் செய்யாது தள்ளிப் போட்டுக்கொண்டே போனால், இதன் விளைவாகக் கடுமையான முறைகளுக்கும் இடர்ப்பாட்டுச் சிக்கல்கட்கும் ஆட்பட்டுத் தன்னைச் சரிக்கட்டிக்கொள்ள வேண்டியிருக்கும்.

இவ்விதம் சரிக்கட்டிக்கொள்ளுவதென்றால், அதற்குத் தேவைப்படுவதென்ன? பன்னாட்டுக் கொடுக்கல், வாங்கல் தவிர, உலக உற்பத்தியில், ஒரு நாட்டிற்கு உரிய பங்கு (அது உற்பத்தி செய்த பொருள்கள் உட்பட) என்பது, அந்த நாட்டின் உற்பத்திகட்கு உரிய மதிப்பே ஆகும்.[1] இந்த நாட்டிற்குப் பிற நாடுகள் அளிக்கக் கூடிய உதவித் தொகைகள் தவிர, இந் நாடு எதுவும் முயலாது, ஏதாவது பெறுதல் என்பது இயலாது. ஒரு நாடு தனது உற்பத்திக்குமேல் அதிகமாக நுகர்ந்து, முதலீடும் செய்தால், அப்பொழுதே அது தனது சக்திக்குமேல் வாழ முயன்று, இடர்ப்பாட்டில் சிக்குகிறது. அதன் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் பற்றாக்குறை என்பது ஒருவகை அடையாளமே ஆகும். இந்த நாட்டின் சமநிலையற்ற தன்மைக்குரிய அடிப்படைக் காரணம், இந் நாடு தான் ஆக்குவதைவிட அதிகமாக நுகர்கிறது (முதலீடு செய்கிறது) என்பதுதான்.

ஆகையால், இதற்குரிய அடிப்படைத் தீர்வு, இந் நாடு தனது நுகர்வுக்கு மிகையாக எஞ்சும்வகையில் தனது உற்பத்தியைப் பெருக்கிக்கொள்ளவேண்டும்; அதாவது, செலவழித்ததுபோக மிகுதியாகச் சேமிக்கவேண்டும். ஏற்கக்கூடிய சிறந்த வழி என்னவென்றால், இது தனது உற்பத்தியை அதிகரித்துக்கொள்ள வேண்டும்; இந்த அதிகரிப்புக்கு இணையாகத் தனது நுகர்வையும் உயர்த்திக்கொள்ள முனையக்கூடாது. தனது நுகர்வு அளவு உயரும் எல்லை வரை, தனது உற்பத்தியைப் பெருக்கிக்கொள்ளுவதும் தகுந்த தீர்வு ஆகாது; ஏனென்றால், அப்படிச் செய்தாலும் சமமற்ற நிலையே நீடிக்கும். இந்த நாட்டில் தனது உற்பத்தியைப் போதிய அளவுக்கு உயர்த்திக்கொள்ளமுடியாவிட்டால், அதனுடைய நுகர்வு அளவைக் குறைத்துக்கொள்ளுதற்காவது வழி காணவேண்டும்—பண வருவாய்களில் குறைப்பு அல்லது வாழ்க்கைத்தரச் செலவைக் கூட்டுதல் அல்லது பங்கீடு (rationing) என்பன அத்தகைய விதிகளில் சிலவாகும்.

பின்வரும் அதிகாரங்களில் விவாதிக்கப்படும் பிரச்சினைகட்கு இது ஒரு திறவுகோலாக அமைந்திருக்கிறது. இறக்குமதியைக் கட்டுப்

[1] இதோடு வெளிநாடுகளிலிருந்து பெறக்கூடிய முதலீட்டு வருமானம் இருந்தால் அதைச் சேர்த்துக்கொள்ளவேண்டும்; வெளிநாட்டிற்கு முதலீட்டு வருமானமாக ஏதாவது செலுத்தவேண்டியதிருந்தால், அதைக் கழித்துக்கொள்ள வேண்டும்.

படுத்துவதும், ஏற்றுமதியை ஊக்குவிப்பதுமே அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் பற்றுக்குறையை அகற்றுவதற்குரிய வழியாக, மேற்போக்காகத் தோன்றும். ஆனால், இதுமட்டுமே சாத்தியமான ஒரே வழி என்று கருதிவிடுதல் கூடாது. மேலும், இறக்குமதியைக் கட்டுப்படுத்துவது என்பது மோசமான மாற்று வழியாகும்; ஏனென்றால், இது பிற நாடுகளைப் பிரதிகூலமாகப் பாதிக்கிறது. அப்படியே ஏற்றுக்கொண்டாலும், உள்நாட்டில் பண்டங்களுக்கான நுகர்வின் அளவு, உற்பத்தியின் அளவைவிடக் குறைந்தால்தான் இதனால் செயல்பட முடியும். ஆனால், உள்நாட்டு நுகர்வுக்கு ஏற்றபடி, அதற்கும் அதிகமாக உற்பத்தியைப் பெருக்கி, உபரிநிலையை அடைவதே சிறந்த மாற்றுவழி ஆகும்.

## 5. இருமுகத் தொடர்புடைமை
(Bilaterilism)

பல்வேறு நாணயங்களை, ஒன்றுக்குப் பதிலாக இன்னொன்றைத் தடையின்றி மாற்றிக்கொள்ளமுடியுமென்றால், A நாட்டிற்கும், இதர B நாட்டிற்கும் இடையே உள்ள அயல்நாட்டுச் செலுத்துநிலையிலோ அல்லது இதர தொகுதி நாடுகளின் இடையே உள்ள செலுத்து நிலையிலோ எவ்விதச் சிறப்புக் கூறுமில்லை. A என்ற நாடு தனது அதிகப் பற்றுகளை, இதர நாடுகளிடம் தனக்குள்ள வரவு இருப்புகளோடு சரிக்கட்டிக்கொள்ளலாம். ஆனால், A என்ற நாட்டிற்கும், இதர உலக நாடுகள் முழுவதற்கும் இடையில் ஏற்படும் அயல் நாட்டுச் செலுத்துநிலையே இங்குக் கவனிக்கத்தக்கது.

இருமுகத் தொடர்புடைமையின்படி, A என்ற நாடு தனது செலுத்துநிலை இருப்புகளை B என்ற நாட்டுடன் சமப்படுத்திக் கொள்ள முயலுகிறது. இது நாடுகள் தம்மிடையே மேற்கொள்ளும் சிறப்புத் தேர்ச்சி முறையால் விளையும் பலன்களைக் குறைக்கிறது. ஒவ்வொரு நாடும் தான் விரும்பும் நாட்டில் தடையின்றித் தனது பொருள்களை விற்கவும், அதைப்போலத் தான் விரும்பும் நாட்டிலிருந்து தடையின்றி வாங்கிக்கொள்ளவும் வழி ஏற்பட்டால், இத்தகைய பன்னாட்டு வாணிபத்தால் சிறந்த அனுகூலங்கள் கிடைக்கும். இருமுகத் தொடர்புடைமை என்பது ஒருவகைப் பண்டமாற்று முறையாகும். ஒரு வாணிபம் ஏற்படும் முன்னர், இதற்கு இரட்டைத் தேவைப் பொருத்தங்கள் (double coincidence of wants) ஏற்பட வேண்டும். இது வாணிபத்தின் மொத்தப் பரிமாணத்தைக் குறைத்துவிடுகிறது. வாணிபமானது, உற்பத்தித் துறையின் தராதர அனுகூலங்களால் சுட்டப்பெறும் திசைகளில் தடையின்றி நடைபெறுவதை இது தடுத்துவிடுகிறது.

நான்கு நாடுகளை எடுத்துக்கொள்ளுவோம். ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருள் உற்பத்தியில் சிறப்புத் தேர்ச்சி கொண்டவை. A காப்பியும், B பருத்தியும், C சர்க்கரையும், D கோதுமையும் உற்பத்தி செய்கின்றன. இப்பொழுது A கோதுமையை வாங்க விரும்புகிறது; B காப்பியும், C பருத்தியும், D சர்க்கரையும் வாங்க விரும்புகின்றன. A, D-யிடமிருந்து கோதுமை வாங்கும்பொழுது, தான் வாங்கும் அளவிற்குத் தக்கபடி, D தன்னிடமிருந்து வாங்கிக் கொள்ளவேண்டுமென்று வற்புறுத்தினால் என்ன நேரிடும்? D-க்கு காப்பி தேவையில்லை—ஒருவேளை தன் நாட்டிலேயே அது ஓரளவு உற்பத்தி செய்யக்கூடும்; அல்லது அதன் மக்கள் காப்பிக்குப் பதிலாகத் தாமே தயாரிக்கும் வேறு பானங்களைப் பருகப் பழகியிருக்கக்கூடும். ஆனால், D-க்கு சர்க்கரை தேவைப்படுகிறது. அதனால் இதை எப்படிப் பெறமுடியும்? இதை C-யிடமிருந்து வாங்கிக்கொள்ள இயலும். ஆனால், D ஏற்றுமதி செய்யும் கோதுமை C-க்குத் தேவையில்லை. D ஏற்றுமதி செய்யாத பருத்தி C-க்குத் தேவைப்படுகிறது. எனவே, A என்ற நாடு D-யுடன் மட்டுமே இருமுக வாணிபம் கொள்ள வேண்டுமென வற்புறுத்துவது, நான்கு நாடுகள் தம்மிடையே கொண்டு, பயன் பெறக்கூடிய சதுரப்பாட்டு வாணிபத்தைக் (fourcornered trade) கொன்றுவிடும். நான்கு நாடுகளிடையே ஏற்படக்கூடிய சதுரப்பாட்டு வாணிபத்தில், A தனது காப்பியை B-க்கும், B தனது பருத்தியை C-க்கும், C தனது சர்க்கரையை D-க்கும், D தனது கோதுமையை A-க்கும் விற்க முடியும்.




மேற் குறித்துள்ளது ஒருவகை அனுமான உதாரணமே ஆகும். இருமுக ஏற்பாட்டில், மிகுதியான பன்னாட்டு வாணிபத்தைத் தொடர்ந்து நடத்தமுடியும். ஆனால், இவ்விதம் மேற்கொள்ளப் பெறும் வாணிபத்தின் பரிமாணம் இருமுகத் தொடர்பில் உள்ள கட்டுப்பாடுகளால் ஓர் அளவிற்குள்ளேயே அடக்கப்பெறும்; அதனுடைய பன்னாட்டு அமைப்பு மாறுதலுறும்.

மக்கள் தமக்குத் தேவைப்படும் பண்டங்களையும் பணிகளையும் வாங்குதற்கு உரிமை இல்லாது போனால், தம் பணத்திற்குச் சிறந்த மதிப்புக் கிட்டும்வரையில் அவற்றைத் தாம் விரும்பும் இடங்களிலிருந்து வாங்கும் வாய்ப்பு இல்லாது போனால், பன்னாட்டு வாணிபத்தால் ஏற்படக்கூடிய அநுகூலங்கள் கட்டாயம் குறைந்துபோகவே நேரிடும்.

அப்படி இருந்தும், ஒரு நாடு, இருமுக வாணிப உறவே கொள்ள முற்பட்டால் அதற்குக் காரணம் என்ன? இதன்மூலம் தனது ஏற்றுமதிகளை விரிவாக்க முடியுமென்று அந்த நாடு நம்பலாம்; அல்லது தனது ஏற்றுமதிகளில் சிலவற்றிற்காவது நல்ல விலையில் பாதுகாப்பான சந்தைகளைப் பெற விரும்பலாம். உதாரணமாக, 1930ஆம் பத்தாண்டுகளில் கிரேட் பிரிட்டன் முக்கிய இறக்குமதியாளர் என்றவகையில் தனது பேர சக்திகளைக் (bargaining power) கொண்டு வாணிப ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளுவதற்காகப் பின்வரும் பண்டங்களைமட்டுமே வாங்கியது. டேனிஷ் வெண்ணெய், பன்றி இறைச்சி, அர்ஜண்டைனு மாட்டிறைச்சி முதலியன பிரிட்டன் வாங்கிய பொருள்கள். 'எங்களிடமிருந்து நிலக்கரி அல்லது எஃகு அல்லது இயந்திரங்களைக் குறிப்பிட்ட அளவிற்கு வாங்கிக்கொண்டால், உங்களிடமிருந்து வெண்ணெய், பன்றி இறைச்சி, மாட்டிறைச்சி முதலியவற்றைக் குறிப்பிட்ட அளவிற்கு நாங்கள் வாங்கிக்கொள்ளுவோம்' என்று பிரிட்டன் பேரம் பேசியது. இதைப்போலப் பல வாணிப ஒப்பந்தங்களைப் பால்கன் நாடுகளுடன் ஜெர்மனியும் செய்துகொண்டது.

இத்தகைய இருமுக வாணிப ஒப்பந்தங்களால் ஒரு குறிப்பிட்ட நாட்டிற்குப் பலன் கிட்டுமா என்பது பல்வேறு சூழல்களைப் பொறுத்து அமையும். A என்ற நாடு, B என்ற நாட்டின் உற்பத்திப் பொருள்களை வாங்கும் பிரதான நாடு எனக் கொள்ளுவோம். இது தனக்குச் சாதகமான வாணிப ஒப்பந்தத்தை B-யுடன் செய்து கொண்டால், இதனுல் A-க்குதான் நன்மையே தவிர B-க்கு இல்லை. B-யினுடைய சந்தையிலிருந்து தாம் விலக்கப்பட்டதை அறிந்த இதர நாடுகள், தமக்குள்ளேயும் இதைப்போன்ற வாணிப ஒப்பந்தங்களைச் செய்துகொள்ள முனையும். இதனுல் இதர நாடுகட்கு A அனுப்பும் ஏற்றுமதிகளில் குறைவு ஏற்படுவதால், B-க்கு அனுப்பும் ஏற்றுமதிகள் எதிரிடையான பலனைத் தருவதைக் காணலாம். 1930ஆம் பத்தாண்டுகளில் பிரிட்டனின் ஏற்றுமதி உயர்வுக்கு, அது ஸ்காண்டிநேவியா, பால்டிக் நாடுகளோடும், அர்ஜன்டைனுவோடும் மேற்கொண்ட வாணிப ஒப்பந்தங்களே ஓரளவு காரணம். ஆனுல், இந் நாடுகளுடன் பிரிட்டன் இந்த ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளாமலிருந்திருந்தால், அதன் ஏற்றுமதி வாணிபம் இதர ஐரோப்பிய நாடுகளுடன் இன்னும் உயர்ந்திருக்கக்கூடும். இன்னோர் உண்மையும் இருக்கிறது. இருமுக வாணிப உறவு கொள்ளும், தம் அளவில் திருப்தி அடைந்துவிட்டாலும், இதனுல் சர்வதேச மனக் குறைகள் ஏற்படும். ஆனுலுங்கூட, இதில் ஆற்றல் குறைந்த நாடு பெரும்பாலும் திருப்தி அடைந்துவிடவில்லை. தவிரவும், இவ்விரு நாட்டு வாணிப உறவால் ஏற்பட்டுள்ள சந்தை

யில் தம் ஏற்றுமதிகள் விலக்கப்படுகின்றன என்பதற்காக இதர நாடுகள் ஆத்திரங் கொள்ளும்.

கடந்த போர்க் காலத்திலிருந்து, நாணயமாற்றுக் கட்டுப்பாடுகள்மூலமாக இருமுக வாணிப உறவு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. ஒரு நாட்டிற்கும் இன்னொரு நாட்டிற்கும் இடையே ஆன செலாவணியை எளிதில் மாற்றிக்கொள்ள முடியாமையே இதற்குக் காரணம் ஆகும். குறிப்பாக, அமெரிக்க நாட்டு டாலர்களில் பொதுவான பற்றுக்குறை ஏற்பட்டிருக்கிறது.

## 6. அயல்நாட்டுச் செலுத்துதலில் சமநிலையைத் திரும்பவும் அமைத்தற்குரிய முறைகள்

A என்ற நாடு, B என்ற நாட்டின் அபிவிருத்திக்காக, அங்கு நிறைய நீண்டகால முதலீடு செய்துவந்தால் அந்தக் குறிப்பிட்ட காலத்திற்கு, அயல்நாட்டுச் செலுத்துநிலையில், A-க்கு உபரியும் B-க்குப் பற்றுக்குறையும் ஏற்பட்டிருக்கும் என்பதை மீண்டும் நினைவிற்குக் கொணர்வோம். பன்னாட்டு முதலீடுகளில் இத்தகைய உபரிகளும், பற்றுக்குறைகளும் ஏற்படுதல், தவிர்க்கமுடியாத விளைவுகள்; மேலும், இவை எத்தகைய சமநிலையின்மைச் சிக்கல்களையும் உண்டாக்கிவிடுவதில்லை. (ஆனால், இந்த முதலீட்டால் பலன் இன்றிப் போனால், பெற்ற முதலீட்டைத் திருப்பிச் செலுத்தவேண்டிய சிக்கல் B-க்கு ஏற்படும்.- ஆனால், இது வேறு விஷயம்.)

பன்னாட்டு வாணிபச் சமநிலையின்மையில், இணையான இரண்டு கூறுகள் உள — சில நாடுகளின் உபரிகள், வேறு நாடுகளின் பற்றுக் குறைகள் என்பன அவை. ஒரு நாடு பற்றுக்குறை நிலையில் இருக்கும்பொழுதே, தனது பொருளாதார அமைப்பில் சில மாறுதல்களைச் செய்து சரிக்கட்டிக்கொள்ளவேண்டிய நிலை அதற்கு ஏற்படுவதால், பற்றுக்குறைகளைப்பற்றிமட்டுமே நான் மிகுதியும் குறிப்பிடுவேன். ஆனால், தொடர்ந்த, தவிர்க்கவியலாத உபரிகளைப் பெற்றுவரும் நாடுகள், தாமே முன்வந்து, பற்றுக்குறையில் இடர்ப்படும் நாடுகளின் சமமின்மையை எளிதாகவும் விரைவாகவும் செம்மையாக்கச் சில முறைகளை மேற்கொள்ளலாம். தாராளமான இறக்குமதிக் கொள்கை, பண வருவாயை மிகுதிப்படுத்தல் முதலிய முறைகளை மேற்கொண்டு, அந்த நாடுகள் தமது உபரிகளைத் தாமே குறைத்துக் கொள்ளலாம்.

இந்தப் பிரிவில் உள்ள இறுதி மூன்று அதிகாரங்களிடையே உள்ள தொடர்பு என்னவென்றால், ஒரு நாடு, தனது அயல்நாட்டுச் செலுத்துநிலையை எவ்வாறு பேணிக்கொள்ளும்; அல்லது பற்றுக்

குறை ஏற்பட்டால் மீண்டும் சமநிலையை எவ்வாறு உண்டாக்கிக் கொள்ளும் என்பதை ஆராய்வதே ஆகும்.

தனது வருமானத்திற்குமேல் வாழும் நாட்டின் கதைக்குத் திரும்புவோம். இந்த நாடு, தனக்கு ஏற்பட்டுள்ள சமநிலை வேறுபாடுகளைச் செம்மைசெய்தற்காகத் தனது அயல்நாட்டுச் செலாவணி, தங்க இருப்புகள் ஆகியவற்றிலிருந்து கரைத்துக்கொண்டிருக்கிறது. தனது பற்றுக்குறையை நீக்கிக்கொள்ளவும், தேய்ந்துவரும் இருப்புகளைத் திருப்பி அமைக்கவும் இந்த நாடு எந்த முறைகளை மேற்கொள்ள வேண்டும்?

இது, தனது இறக்குமதிகளையும், இதரப் பற்று இனங்களையும் குறைத்துக்கொள்வது, நேரடியான முறையாகும். (இதரப் பற்று இனங்கட்கு உதாரணமாக, இந்த நாட்டு மக்கள் மேற்கொள்ளும் வெளிநாட்டுப் பயணங்கட்காக அனுமதிக்கப்பெறும் அயல்நாட்டுச் செலாவணி அளவைக் கட்டுப்படுத்துதலைச் சொல்லலாம்.) இது தனது ஏற்றுமதிகளையும், இதர வரவு இனங்களையும் அதிகரித்துக் கொள்ளுவது வெளிப்படையான முறையாகும். (இதர வரவு இனங்கட்கு உதாரணமாக, தன் நாட்டில் பயணம் செய்ய வரும் அயல் நாட்டுப் பிரயாணிகட்குச் சலுகைகள் தருதலைக் குறிப்பிடலாம்.) போர்க் காலத்திற்குப் பின்னர், நாணயமாற்றுக் கட்டுப்பாட்டின் மூலமாகப் பல நாடுகள் மேற்குறித்த முறையைப் பின்பற்றி வருகின்றன. இதை 38ஆம் அதிகாரத்தில் விவாதிக்கின்றேன்.

இத்தகைய நேரடியான நடவடிக்கைகளுடன், அல்லது இவற்றிற்குப் பதிலாக, ஒரு நாடு இன்னும் சில அடிப்படையான சரிக்கட்டுதல்களை மேற்கொள்ள முயலலாம். இத்தகைய சரிக்கட்டுதல் முயற்சி, நிதித்துறைப் பகுதியில் ஒரு மாறுதலை உண்டாக்கும். இதற்கும் இரு மாற்று வழிகள் உள்ளன. இந்த நாடு தனது செலாவணிக்கு உரிய நாணயமாற்று மதிப்பைக் குறைத்துவிடுதல் ஒரு வழி ஆகும். இதனால், இதன் உள்நாட்டு நாணயத்துக்கு நிகராகக் கிடைப்பதற்கு அருமையாயுள்ள அயல்நாட்டுச் செலாவணியில் குறைந்த அளவே, இந்த நாட்டின் இறக்குமதிக்காகச் (இதர பற்று இனங்கட்கும்) செலவிடப்பெறும் என்று கருதப்படுகிறது; அதே சமயத்தில், அயல்நாட்டுச் செலாவணியில் மலிவாக ஆகிவிட்ட ஏற்றுமதிகளில் (இதர வரவு இனங்களில்) மிகுதியாகச் சம்பாதிக்க முடியும் என்று நம்பப்பெறுகிறது. இதைப்பற்றி 36ஆம் அதிகாரத்தில் குறிப்பிடுகின்றேன்.

இன்னொரு மாற்று வழியும் உண்டு. இதன்படி அந்த நாடு தனது செலாவணிக்குரிய நாணயமாற்று மதிப்பைப் பேணி

வந்தாலும், தனது தேசிய வருமானத்தைப் பணத்தின் அளவில் குறைத்துக்கொள்ள முற்படுவதாகும். இதனால், இதன் மக்கள், இறக்குமதிப் பொருட்களுக்கு முன்புபோல் செலவிட முடியாது போகும் என்றும் அதே சமயத்தில் விலைக் குறைப்புகளால் ஏற்று மதியை உயர்த்துதற்கு முற்படுவார்கள் என்றும் நம்பப்பெறுகிறது. இந்த முறையைப்பற்றி 37ஆம் அதிகாரப் போக்கில் விளக்குகின்றேன்.

இவ்விரண்டு மாற்று வழிகட்கும், இடைநிலை வழியாக, செலாவணி மதிப்பைக் குறைத்தலைச் (devalue) சொல்லலாம். செலாவணியின் நாணயமாற்று மதிப்பை ஒரு குறிப்பிட்ட கீழ்நிலையில் மாறாமல் நிறுத்தி, அதே நிலையில் பேணிவர முற்படுதல், இதற்குரிய செயல் முறையாகும். இச் செலாவணி மதிப்புக் குறைப்பைப்பற்றியும் 37ஆம் அதிகாரத்தில் விளக்குவேன்.

என்றாலுங்கூட, வாணிபச் சமநிலையை ஏற்படுத்துவதற்கு, ஒரு நாடு மேற்கொள்ளவேண்டிய அடிப்படை முறை தனது நுகர்வுக்கு இணையாகத் தனது உற்பத்தியை மிகுவித்துக்கொள்ளுதல்தான் என்பதை எப்போதும் நினைவிற் கொள்ளவேண்டும். இல்லையென்றால், தனது உற்பத்தி அளவிற்குக் குறைவாகவாவது தனது நுகர்வைக் கட்டுப்படுத்திக்கொள்ளவேண்டும்.

# 36. தடையிலா நாணயமாற்று வீதங்கள்
## (Free Exchange Rates)

### 1. நாணயமாற்று வீதமும் அயல்நாட்டுச் செலுத்துநிலையும்

பிரிட்டிஷ் அரசாங்கம், இப்பொழுது, பன்னாட்டு உடன்படிக்கைப் படி, தனது ஸ்டெர்லிங் பவுனின் நாணயமாற்று மதிப்பை, அமெரிக்க டாலர் வீதத்தில் (ஒரு பவுனுக்கு 2·80 டாலர் மதிப்பு ; இதில் ஒரு சதவீதம் முன்பின்னாக இருக்கலாம்) பேணிவருகிறது. இந்த டாலரின் மதிப்பு, பொன் மதிப்பின் வீதத்தில் நிர்ணயிக்கப்பட்டிருப்பதாலும், இதர நாடுகளெல்லாம் டாலருடன், நிர்ணயமான நாணய மாற்று வீதத்தில் தமது செலாவணிகளைக் கிட்டத்தட்டப் பேணி வருவதாலும், பெரும்பாலான நாடுகளின் செலாவணிகள் அனைத்தும் இப்பொழுது நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன என்பது தெளிவாகிறது. பொன் வீத அடிப்படையிலும், ஒரு நாட்டுச் செலாவணிக்கும் இன்னொரு நாட்டுச் செலாவணிக்கும் உரிய நேரடி மாற்றுவீதத்திலும் ஓரளவு குறுகிய வரையறைக்குள் இச் செலாவணிகளின் மதிப்புகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. எனவே, இதர அரசாங்கங்களைப்போல பிரிட்டிஷ் அரசாங்கமும், தனது தங்க இருப்புகளையும் அயல் நாட்டுச் செலாவணி இருப்புகளையும் கண்ணும் கருத்துமாய்ப் பேணிவர வேண்டியிருக்கிறது. ஏனென்றால், ஒரு நாடு, தான் ஈட்டக்கூடிய, அல்லது கடனாகப் பெறக்கூடிய, அல்லது இதர வகைகளில் வாங்கக்கூடிய அன்னியச் செலாவணிகளைவிட அதிகமான மதிப்புள்ள செலாவணிகளை இது செலுத்தவேண்டிய நிலை ஏற்பட்டால், தனது தங்க இருப்புகள், அயல்நாட்டுச் செலாவணி இருப்புகள் ஆகியவற்றைக் கரைத்தே இந்த வித்தியாசத்தை ஈடு செய்யவேண்டிய நிலை ஏற்படும்.

பிரிட்டிஷ் அரசாங்கம், தனது கொள்கையை மாற்றிக்கொண்டு, பன்னாட்டு உடன்படிக்கையிலிருந்து விலகிவிடுகிறதெனவும், ஸ்டெர்லிங் நாணயமாற்று மதிப்பை, அன்றாட அங்காடி நிலவரப்படி

நிர்ணயித்துக்கொள்ளட்டுமென்று, எவ்விதக் கட்டுப்பாடும் செய்ய முயலாமல் இருந்துவிடுகிறதென வைத்துக்கொள்ளுவோம். அப்பொழுதுங்கூட, அன்னியச் செலாவணிகளுக்குரிய அளிப்பும் தேவைகளும் தத்தம் அளவில் சமனுகிக்கொள்ளும். டாலர்களை மாற்ருகக் கொடுத்து ஸ்டெர்லிங்கை எந்த விலைக்கு வாங்கவேண்டுமென்று மக்கள் விரும்பினர்களோ அந்த விலை அளவுகளுக்கேற்ப, தேவையைக் கட்டுப்படுத்த அமைந்த விலைகளில் அவை சமனுகிக் கொள்ளும்.

ஸ்டெர்லிங்கின் மதிப்பு, 2·00 டாலர் மதிப்புக்கு வீழ்ந்துவிட்டதென்றும், இதர செலாவணிகள், தங்கம் ஆகியவற்றின் வீதத்திலும், டாலருக்கு இணையான தொகைக்குச் சரிந்துவிட்டதெனவும் கொள்ளுவோம். இதர நாடுகள் அனைத்தும், தமது செலாவணிகளின் டாலர் மதிப்புகளை மாருமல் பேணிவந்தால் (ஆனுல், உண்மையில் இது அவ்வளவு சாத்தியமாவதில்லை) என்ன ஆகும்? அப்பொழுது பிரிட்டிஷ் இறக்குமதிகள், ஸ்டெர்லிங் வீதத்தில் 40 சதவீதம்வரை அதிகச் செலவாகும்; இதனுல் அவற்றின் தேவைகளைச் சுருக்கிக் கொள்ளும் முனைப்புத் தோன்றும். வெளிநாடுகளில் உள்ள பிரிட்டிஷ் பயணிகள், முன்பு தாம் கொடுத்த 1 பவுனுக்குப் பதிலாக, இப்பொழுது 1 பவு. 8 ஷி. கொடுத்துப் பொருள்களை வாங்கவேண்டியிருப்பதை உணர்வார்கள். இதைப்போலவே எல்லாப் பற்று இனங்கட்கும் ஏற்படும். 1 பவுன் ஸ்டெர்லிங்கினுல், இனி 2·80 டாலர் மதிப்புள்ள பண்டங்களையும் பணிகளையும் வாங்கமுடியாது; 2·00 டாலர் மதிப்புள்ள பொருள்களைமட்டுமே வாங்கமுடியும். எல்லாப் பற்று இனங்கட்கும் உரிய தேவை குறைந்துவிடும். குறைக்க முடியாத சிலவகைகள் தவிர, (டாலர் பிரதேசங்களுக்குச் செலுத்த வேண்டிய வட்டி முதலியன) எல்லா இதர இனங்களும் குறைக்கப் படும். ஆனுல், மறுபுறத்தில், ஓரளவு தொடக்க நலமாக, பிரிட்டிஷ் பொருள்கள், பணிகள் ஆகியவற்றின் ஏற்றுமதி விரிவடையும். இதற்கு முன்னர் 2·80 டாலர் செலவான ஒவ்வோர் ஏற்றுமதிக்கும் இப்பொழுது 2·00 டாலர்மட்டுமே செலவாகும்.

இந்த 2·00 டாலர் கணக்கை ஓர் உதாரணத்திற்காகவே மேற்கொண்டேன்; இப்பொழுதைய 2·80 டாலர் விகித அளவுக்குப் பக்கத்திலேயே சமநிலையைப் பெற்றுவிடக்கூடும்; அல்லது 2·00 டாலர் விகிதத்திற்குக் கீழேயும் செல்லவேண்டிய நிலை ஏற்படக்கூடும், ஒரு பண்டத்தின் தடையற்ற விலைகளைப்போல, அவ்வப்போது இந்த விகிதமும் ஏற்றத்தாழ்வுகட்கு உட்பட்டுப் பல மாறுதல்களை அடையும். ஆனுலும் இந்த ஏற்றத் தாழ்வுகளின்மூலமாகவே, இந்த விகிதமானது, டாலர் அளிப்போடு அதற்கு ஏற்படும் தேவையையும் சரிக்கட்டிச் சமமாக்கிவிடும். இவ்விதம் ஏற்படும் தடையற்ற விலை,

இப்பொழுது நடைமுறையில் உள்ள நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை இடம் மாற்றிக்கொள்ளும்.

ஒரு நாட்டின் செலாவணியில் ஏற்படும் மதிப்பிறக்கமானது, அதன் அயல்நாட்டுச் செலுத்துநிலைகளை அபிவிருத்தி செய்யும் என்பது கட்டாயம் ஏற்பட்டே தீரவேண்டுமென்ற அவசியமில்லை. அந் நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலைகளை அபிவிருத்தி செய்யக்கூடிய சிறந்த சூழ்நிலைகளாவன: அதன் ஏற்றுமதிப் பொருள்களுக்குள்ள அயல்நாட்டுத் தேவைகளிலும், இறக்குமதிப் பொருள்களுக்கான உள்நாட்டுத் தேவைகளிலும் உயர்ந்தபட்ச நெகிழ்ச்சி ஏற்பட்டிருக்கவேண்டும்; அதன் ஏற்றுமதிப் பொருள் களுக்கான அளிப்பு நெகிழ்ச்சி அதிகமாகவும், அது இறக்குமதி செய்யும் பொருள்களுக்கான அளிப்பு நெகிழ்ச்சி குறைவாகவும் இருக்கவேண்டும். அன்னியச் செலாவணி வீதங்களில் அமைந்த ஏற்றுமதி விலைகளில் சற்றுக் குறைவு ஏற்பட்டாலும், அது, அப் பொருள்களுக்கான அயல்நாட்டுத் தேவைகளில் பெரும் உயர்வை ஏற்படுத்திவிடும். அப்பொழுது, அளிப்பு நெகிழ்ச்சியும் அதிகமா யுள்ளதென்றால், உள்நாட்டுச் செலாவணி விலைகளில் ஓரளவே விலை கூடினாலுங்கூட, வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய பொருள் கள் ஏராளமாகக் கிடைக்கும். எனவே, அன்னியச் செலாவணி வீதங்களில், ஏற்றுமதிப் பொருள்களின் விலைகளில் ஒரு சிறிதளவு சதவீத வீழ்ச்சி ஏற்பட்டாலுங்கூட, ஏற்றுமதி அளவுகளில் பேரளவு சதவீதப் பெருக்கம் ஏற்படும்; இதனால், அன்னியச் செலாவணிகளின் ஈட்டம் துரிதமாக உயர முற்படும். அதே சமயத்தில், இறக்குமதிப் பொருள்களுக்கான தேவையில் மிகுந்த நெகிழ்ச்சி ஏற்பட்டிருக்கிற தென்றால், உள்நாட்டு விலை வீதங்களில் அப் பொருள்களின் விலைகள் சற்று உயர்ந்தாலுங்கூட, அது அவற்றின் தேவையை மிகுதியும் குறைத்துவிடும். ஆனால், அப் பொருள்களில் தேவையில் குறைவான நெகிழ்ச்சியே ஏற்பட்டிருக்கிறதென்றால், அன்னியச் செலாவணி வீதங்களாலான அவற்றின் விலைகள், மிகவும் சரிந்தாலுங்கூடத் தம்மால் முடிந்த அளவு அப் பொருள்களை அளிப்பதற்கு வெளி நாட்டவர்கள் முற்படுவார்கள். இவ்விதமாக, நாணய மதிப்பிறக்கம் செய்துகொள்ளும் நாடு, உள்நாட்டு விலை வீதங்களில் ஓரளவு உயர்வு ஏற்பட்டாலுங்கூட அதிகமாக ஏற்றுமதி செய்யமுடியும்; ஆனால், அன்னியச் செலாவணி வீதங்களில் மிகக் குறைவாகவே ஏற்றுமதி செய்ய இயலும் (1931-ல் ஸ்டெர்லிங்கின் மதிப்பு இறக்கப்பட்ட பொழுது இப்படித்தான் நேரிட்டது). இந்த நிலைகளில், அயல்நாட்டுச் செலுத்துநிலைகளில் குறிப்பிடத்தக்க அபிவிருத்தியைப் பெறவேண்டு மென்றாலும், தனது செலாவணியில் ஒரு சிறிது மதிப்பிறக்கமே செய்யவேண்டியதிருக்கும்.

ஒரு நாட்டின் செலாவணி மதிப்பிறக்கமானது, அதன் அயல் நாட்டுச் செலுத்துநிலையை மோசமாக்கிவிடக்கூடிய சூழ்நிலைகளையும் நம்மால் எண்ணிப்பார்க்கமுடியும். இறக்குமதிகளுக்கான தேவை நெகிழ்ச்சியற்றதாயிருக்கையில் (உள்நாட்டில் உற்பத்தி செய்ய முடியாத உணவுப் பண்டங்கள் அல்லது அத்தியாவசியமான மூலப் பொருள்களை இறக்குமதி செய்யவேண்டுமென்றால் இப்படி நேரிடக் கூடும்), அவற்றின் அளிப்பு நெகிழ்ச்சியுடையதாயிருப்பின், அப் பொழுது, உள்நாட்டுச் செலாவணி மிகுதியாக உயர்ந்தாலுங்கூட, அவற்றின் இறக்குமதி அளவுகளை ஓரளவே பாதிக்கும்; இறக்குமதி அளவுகள் இவ்விதம் பாதிக்கப்படுவது, அவற்றின் அயல்நாட்டுச் செலாவணிவீத விலைகளில் ஓரளவு மாறுதலையே விளைவிக்கும். எனவே, இறக்குமதிகளுக்கான அன்னியச் செலாவணிச் செலவுகளில் ஏற்படும் குறைவு மிக அற்பமாகவே இருக்கும். அதே சமயத்தில், ஏற்றுமதிகளுக்கான அயல்நாட்டுத் தேவை, நெகிழ்ச்சியற்றதா யிருக் கையில், அப் பொருள்களின் அன்னியச் செலாவணி விலைகள் அபரி மிதமாகக் குறைந்தாலுங்கூட, அது, தேவை அளவுகளை ஓரளவே உயர்த்த முற்படும். இதன் பயனாக, ஏற்றுமதி அளவுகள் எவ்வளவுக் கதிகமாக இருக்கிறதோ, அவற்றின் விற்பனையால் கிட்டும் அயல் நாட்டுச் செலாவணிகள் அவ்வளவிற்குக் குறைவாகவே இருக்கும்.

இந்த நாட்டைப் பொறுத்தவரைக்கும், ஏற்றுமதிப் பொருள் களுக்கான அளிப்பு நெகிழ்ச்சியற்றதாயிருப்பின் நன்றாக இருந் திருக்கும். ஏனென்றால், அப் பொருள்களுக்கான உள்நாட்டு விலைகள் பேரளவு உயர்ந்தாலுங்கூட, அது அப் பொருள் அளவுகளில் ஓரளவு உயர்வையே உண்டாக்கும். ஏற்றுமதி பொருள்களுக்கான அளிப்பு முற்றிலும் நெகிழ்ச்சியற்றிருப்பின், அப்பொழுது அவற் றின் அன்னியச் செலாவணி விலைகளும் குறையவேண்டுமென்ற அவசியமில்லை; ஏனென்றால், ஏற்றுமதிகளால் கிட்டும் வருமானம் அப்பொழுது மாறுதலின்றி இருக்கும். இந்த நாட்டைப்பொறுத்த வரைக்கும், இறக்குமதி அளவுகள் எவ்வளவுக்குக் குறைந்து செல்கின்றனவோ, அவ்வளவிற்குச் செலாவணி மதிப்பிறக்கமும் அயல்நாட்டுச் செலுத்துநிலையை அபிவிருத்தியுறச் செய்யவேண்டும். என்றாலுங்கூட, உள்நாட்டுச் செலாவணி அளவுகளில் விலைகள் உயர்ந்தமையால், ஏற்றுமதிகளுக்கான அளிப்பு உயர்ந்தால் (இப்படி நேரிடுவது சாத்தியமே) அன்னியச் செலாவணி அளவுகளில் ஆன அவ் வேற்றுமதிகளின் மொத்த வருமானங்களும் வீழ்ச்சியுறும். இந்தவீழ்ச்சியானது, இறக்குமதிகளுக்கான அன்னியச் செலாவணிச் செலவுகளில் ஏற்பட்ட வீழ்ச்சியைக்காட்டிலும் பெரிதாயிருந்தால், அப்பொழுது அந்த நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலை மோச மாகிவிட்டதாகக் கருதவேண்டும்.

ஆனால், அதிர்ஷ்டவசமாக, ஒரு நாடு அதிகமாக ஏற்றுமதி செய்தாலுங்கூட, குறைவான அன்னியச் செலாவணியையே ஈட்டுகிறது என்று சொல்லக்கூடிய அளவுக்கு, அதன் ஏற்றுமதிக்கான தேவை நெகிழ்ச்சியற்றதாயிருக்கும் நிலையில் எந்த நாடும் இல்லை.

மேலும், ஒரு நாட்டிடம் இயல்பாகத் திறம் வாய்ந்த சில ஏற்றுமதிகள் (potential exports) இருக்கும். இப் பொருள்கள் சாதாரணமாக உள்நாட்டு உபயோகத்திற்காகவே உற்பத்தி செய்யப்படலாம்; அல்லது உற்பத்தி செய்யப்படாமலும் இருக்கலாம்; ஆனால், இவற்றிற்குரிய விலைகள் மிகவும் உயர்ந்துவிட்டன என்ற நிலை ஏற்பட்டுவிட்டால், அப்பொழுது இத் தொழில்களிலிருந்து மிகுதியாக உற்பத்தி செய்யப்படும். பணிகளின் ஏற்றுமதியும் விரிவடையக் கூடும்; உதாரணமாக, வெளிநாட்டுப் பயணிகள் இந்த நாட்டிற்கு வருமாறு ஈர்க்கப்படுவார்கள்; இவர்களது செலாவணி மதிப்பில், உள்நாட்டுப் பொருள்களின் விலை மலிவாயிருப்பதால், அவர்கள் இங்குப் பிரயாணம் செய்யப் பெரிதும் விரும்புவார்கள். இறக்குமதிகட்கும் இந்த நிலையே ஏற்படும். இறக்குமதிப் பொருள்களின் விலை மிகவும் உயர்ந்துவிட்டால், அவற்றிற்குப் பதிலாக உள்நாட்டுப் பொருள்களை உபயோகித்துக்கொண்டு, தன்னிறைவோடு வாழ்வதற்கு மக்கள் துணிந்துவிடுவார்கள்.

ஆகையால், உள்நாட்டுச் செலாவண்ணியின் நாணயமாற்று மதிப்பைப் போதுமான அளவிற்குக் குறைப்பதன்மூலம், நடைமுறையில் சமநிலையை உண்டாக்க முடியும் என்று நான் அனுமானிக்கின்றேன். இந்த நாட்டின் ஏற்றுமதி அளவில் ஏற்படும் உயர்வுகள், அவற்றின் டாலர் விலைகளில் குறைவு ஏற்பட்டாலும் சரிக்கட்டிக் கொள்ளும் என்று நம்புகின்றேன்.

ஏனைய அயல்நாட்டுச் செலாவணிகளின் பிரதிநிதிபோல நான் டாலரைமட்டுமே எடுத்துக்கொண்டுள்ளேன். ஸ்டெர்லிங்கின் நாணயமாற்று மதிப்பு முற்றிலும் தடையின்றி இருந்தால், ஸ்டெர்லிங் மதிப்பிற்கு டாலர் வீதத்தில் உள்ள மாற்றுக்கும், அதற்கு ஏனைய செலாவணியுடன் (பிராங்கு) உள்ள மாற்றுக்கும் இடையே ஒரு நிச்சயமான தொடர்பு இருக்கும். உதாரணமாக, 1 பவுன் = 2 டாலர் என்றும், 1 டாலர் = 5 பிராங்கு என்றும் வைத்துக்கொள்ளுவோம். அப்படியானால் 1 பவுன், 10 பிராங்குகளுக்குச் சமமாக வேண்டும். இந்த ஸ்டெர்லிங் பவுன் (11 பிராங்குகட்குமேல்) இதற்கு மேல் மதிப்புள்ளதானால், இது எல்லோருக்கும் டாலரைக் கொடுத்து ஸ்டெர்லிங்கை வாங்கிக்கொள்ளும், ஸ்டெர்லிங்கைக் கொடுத்து பிராங்குகளை வாங்கி அவற்றைக் கொடுத்துத் திரும்பவும் டாலரை

வாங்கிக்கொள்ளும்; இதனால் (10 சதவீத) இலாபமும் அடைந்து விடும். இத்தகைய பரிவர்த்தனைகள், குறுக்கு விகிதங்களில் சிறுசிறு வித்தியாசங்கள் தோன்றுகையில் ஏற்படுவதுண்டு; இவற்றை மத்தியஸ்தப் பரிவர்த்தனைகள் (arbitrage transaction) என்றும் அழைப்பதுண்டு. எனவே, இவ்விதப் பரிவர்த்தனைகள் சட்டப்படி நிகழ்ந்தால், இவற்றில் ஏற்படும் சில்லறை வித்தியாசங்களும் எளிதாகச் சமன் செய்யப்பெறும். இப் பரிவர்த்தனைகள் தடைசெய்யப் பட்டால் (நாணயமாற்றுக் கட்டுப்பாட்டுப்படி) அப்பொழுது குறுக்கு விகிதங்களில் மிகுதியான வித்தியாசம் ஏற்படும்.

தடையிலா நாணயமாற்று விகிதங்களின்மூலமாகப் பெரிய நாட்டைவிடச் சிறிய நாடு எளிதில் சமநிலையை எய்த முடியும். லில்லிப்புட்டிற்குச் சொந்தப் பவுன் இருக்கிறதென வைத்துக் கொள்ளுவோம். இப் பவுனின் மதிப்பு 2.80 டாலரிலிருந்து 2·0 டாலருக்குக் குறைந்துவிட்டால், இந்த நாட்டின் ஏற்றுமதியாளர்கள் டாலர் கணக்கில், முன்புபோலவே தமது ஏற்றுமதிகட்குப் பணம் பெறுவார்கள் (அவர்கள் சொந்தச் செலாவணியில் 40 சதவீத உயர்வு). ஏனென்றால், இந்தச் சிறு நாட்டின் ஏற்றுமதி அளவு எவ்வளவு பெருகினாலும், அப் பண்டங்கட்கு உரிய உலக அங்காடி விலைகளைக் குறைக்க அவற்றால் முடியாது. ஆனால், கிரேட் பிரிட்டனின் நிலை வேறு. இது மிகப்பெரிய ஏற்றுமதி நாடு; இதனுடைய ஏற்றுமதி அளவு பெருகினால், அவற்றின் விலைகள் கட்டாயம் குறையும்; முன்பு 2·80 டாலருக்கு விற்ற ஏற்றுமதிப் பொருள்கள், இப்பொழுது குறைவான விலைக்கே விற்கும். அவை, 2·00 டாலருக்குச் சற்று அதிகமாக விற்கலாம்; அல்லது, ஏற்றுமதிகட்கு உள்ள உற்சாகம் மறைந்துபோக நேரிடலாம். அவை 2·40 டாலருக்கு விற்பதாக வைத்துக்கொள்ளுவோம். இவற்றின் ஏற்றுமதியாளர்கள் 1 பவுனுக்குப் பதிலாக, இப்பொழுது 1 பவு. 4 ஷில்லிங் பெறுவார்கள்; ஆனால், நாடு முழுவதும், தனது வாணிப வீதத்தில் ஏற்பட்ட பாதகமான மாறுதலால் மிகவும் நஷ்டமடைய நேரும். (இதன் இறக்குமதிகட்குரிய டாலர் விலைகளும் இந்த அளவுக்குக் குறைந்துபோனால், நஷ்டமேற்படாது; ஆனால், இவ்விதம் குறைவு ஏற்படுவது துர்லபம்.)

கிரேட் பிரிட்டன், மிகப் பெரிய ஏற்றுமதி நாடாக இருப்பதால், பவுனுக்கு ஏற்படும் நாணயமாற்று மதிப்பு வீழ்ச்சி, அதன் வாணிப வீதத்தையே, ஓரளவு பிரிட்டனுக்கு எதிராக மாற்றி அமைத்துவிடக் கூடும். மேலும், ஸ்டெர்லிங் பிரதேசத்திற்குள்ளும் வெளியிலும் உள்ள சில நாடுகளும், 1930 ஆம் பத்தாண்டுகளில் செய்ததைப் போல, ஸ்டெர்லிங் மாற்றத்தை ஒட்டித் தம் செலாவணிகளின் மதிப்பையும் குறைக்க முற்படலாம்.

ஸ்டெர்லிங் மதிப்பில் தேய்மானம் ஏற்பட்டால், உடனே இந் நாடுகள் தமது செலாவணிகளின் மதிப்பிலும் அந்த அளவிற்குத் தேய்மானத்தை ஓரளவு அச்சத்தின் காரணமாக ஏற்படுத்திக் கொள்ளுகின்றன. இல்லையென்றால், உலக அங்காடியில், தமது ஏற்று மதியாளர்களை, பிரிட்டிஷ் ஏற்றுமதியாளர்கள் தலைதூக்கவிடாதபடி செய்துவிடுவார்கள் என்றும், அவர்கள் தமது பண்டங்களைக் குறைவான விலைக்கு விற்றுவிடுவார்கள் என்றும் இந் நாடுகள் அறிந்திருக்கும்.

பிரிட்டனின் (இதர ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின்) ஏற்றுமதிகளைப்போல, தமது ஏற்றுமதி அளவுகளையும் இந் நாடுகள் அதிகமாகப் பெருக்கிக்கொள்ளும் ; இதர செலாவணிகளின் (டாலர்கள்) விகிதத்தில் தமது விலைகளைக் குறைத்துக்கொள்ளவும் முற்படும். கிரேட் பிரிட்டன், தனது அயல்நாட்டுச் செலுத்துதலில் சமநிலையை உண்டாக்கிக்கொள்ளும் வழியாக, இந்தத் தடையிலா மாற்று விகிதங்களைப் பயன்கொள்ளக்கூடாது என்பதற்குச் சான்றாகக் கூறப்படும் காரணம் இதுதான்.

## 2. நாணயமாற்று வீதங்களைப் பாதிப்பவை

அயல்நாட்டுச் செலாவணி நடவடிக்கைகளில் பெரும் பகுதி பாங்குகள்மூலமே நடைபெறுகின்றன. நாணயமாற்று மதிப்பில் தன் விருப்பம்போல ஸ்டெர்லிங் மாறிக்கொள்ளுகிறதென வைத்துக் கொள்ளுவோம். அயல்நாட்டு பாங்குகள், தம்மிடம் உள்ள ஸ்டெர்லிங் இருப்பு மிகப் பெரிதாக மாறிக்கொண்டிருக்கிறது என்று எண்ணினால், அயல்நாட்டுச் செலாவணிக்கு அதிக விகிதம் விதிப்பார்கள் (அதாவது, குறைந்த விகிதத்தில் ஸ்டெர்லிங்கைத் தர இசைவார்கள்). இதன்மூலம், தமது ஸ்டெர்லிங் இருப்புகளிலிருந்து (அவற்றை வாங்குவோர்க்கு) கொடுக்கவேண்டிய வெளிச் செலுத்துகளை அதிகப்படுத்தவும், (அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்குவோரால்) தனக்குக் கொடுக்கப்படும் உட்செலுத்துகளைக் குறைத்துக் கொள்ளவும் முடிகின்றது. இதற்கு நேர்மாறாக, இவற்றின் ஸ்டெர்லிங் இருப்புகள் மிகக் குறைவாகிவிட்டால் இந்த பாங்குகள் ஸ்டெர்லிங்கின் நாணயமாற்று விகிதத்தை உயர்த்திக்கொள்ளும் ; அயல்நாட்டுச் செலாவணிகட்குக் குறைந்த விகிதமே அளிக்கும்.

தமது நாணயமாற்று அலுவலைத் தொடர்ந்து நடத்த உதவப் போதுமான, ஓரளவு குறைந்தபட்ச ஸ்டெர்லிங் இருப்புகளை எப்போதும் தம்மிடம் வைத்திருக்க இந்த பாங்குகள் விரும்பும். இந்தக் குறைந்தபட்ச எல்லைக்குமேல், இன்னும் அதிகமாக எவ்வளவு ஸ்டெர்லிங் தொகைகளை வைத்திருக்க அவை விரும்பும் என்பது,

ஸ்டெர்லிங்கின் எதிர்கால மதிப்புப்பற்றி இப் பாங்குகள் கொண்டிருக்கும் கருத்தைப்பொறுத்தே அமையும். இவை தம்மிடம் அதிகமான ஸ்டெர்லிங் இருப்புகளை வைத்திருந்தால், அவற்றின் நாணயமாற்று மதிப்பு வீழ்ந்தால், பாங்குகளுக்கு ஏற்படும் இழப்பும் பெரிதாகவே இருக்கும். ஸ்டெர்லிங் இருப்புகளின் அளவு, இலண்டனிலும், இதர இடங்களிலும் நிலவும் தராதர வட்டி விகிதங்களைப் பொறுத்தும் அமைவதுண்டு; ஏனைய நிலைகள் சமமாக இருந்தால் அதிகமான வட்டி விகிதங்கள், அதிகமான இருப்புகளை வைத்துக் கொள்ளவே தூண்டும். ஆனால், தமது நாடுகளில் உள்ள சொத்துகள், இதர பொறுப்புகளையும் ஓரளவு சார்ந்து இவை அமைவதுண்டு.

ஃபிரான்சில் உள்ள ஒரு பாங்கு, தனது வாடிக்கைக்காரரிடமிருந்து ஸ்டெர்லிங்குகளை ஏற்றுக்கொண்டால் (இவர் கிரேட் பிரிட்டனுக்குத் தான் ஏற்றுமதி செய்த பொருள்களுக்கு உரிய விலையாக இவற்றைப் பெற்றிருக்கலாம்), இந்த பாங்கின் ஸ்டெர்லிங் இருப்பு அதிகமாகிறது; ஃபிரான்சில் உள்ள இதன் வைப்புகளும் அதிகமாகி விடுகிறது. ஏனென்றால், இந்தத் தொகையை அளித்த வாடிக்கைக்காரர், இதை இன்னொரு ஃபிரெஞ்சுக்காரரிடமிருந்து பெறவில்லை; வெளியிலிருந்து பெற்றார். எனவே, லண்டனில் உள்ள ஸ்டெர்லிங்கிற்கு எதிராக, இந்த பாங்கு தனக்கென வைப்புகளில் அதிகப்படியான அளவை உண்டாக்கிக் கொள்ளுகிறது. இங்ஙனம், ஏற்றுமதிகட்கும் இதர வரவு இனங்கட்கும் பெறப்படும் சொத்துகளின் மிகுதியால் ஃபிரான்சில் உள்ள பாங்கின் வைப்புகளின் மொத்த அளவு அதிகப்படும். ஃபிரெஞ்சு அரசாங்கம், தனது ரொக்க அளிப்பை அதிகப்படுத்தாவிட்டால் (இவ் விரு நாடுகளும் பொன் திட்டத்தின்கீழ் இருந்தால், ஏற்படும் தங்க வரவுகட்குச் சமமான ரொக்கத்தை வெளியிடாவிட்டால்) ஃபிரெஞ்சு பாங்குகட்கு அதிகமான ரொக்கம் கிடைக்காது போய்விடும்; அவற்றின் வைப்புகள்மட்டும் உயர்ந்துபோனதால், அவற்றிற்கு நிகரான அவற்றின் ரொக்க இருப்பு விகிதங்கள் குறைந்துவிட நேரும். எனவே, இதற்குரிய மாற்றுவழியாக ஸ்டெர்லிங்குக்கு மாற்றாக, முன்பைவிட இப்பொழுது குறைந்த அளவு பிராங்குகளையே அளிக்கவேண்டியதேற்படும்.

அயல்நாட்டுச் செலாவணிகளைக் கொடுத்து ஸ்டெர்லிங்கை வாங்கவேண்டுமென்ற தேவை ஏற்படுவதற்கும், அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்குவதற்காக ஸ்டெர்லிங்கை அளிப்பதற்கும் உரிய அடிப்படை நோக்கங்கள் என்ன?

தராதர விலைகள் (relative prices) என்பன முக்கியமான அம்சமாகும். பிற நாட்டவர்கள் பிரதானமாக பிரிட்டிஷ் பண்டங்களையும்

பணிகளையும் வாங்குவதற்கே ஸ்டெர்லிங் வேண்டுமென்கிறார்கள். பிரிட்டனின் விலைகள், முன்னைவிட இரு மடங்காகிவிட்டால், ஒரு பவுனுக்குச் சமமாக, முன்பு கொடுத்ததில் பாதி அளவு டாலர்களையோ அல்லது பிராங்குகளையோ அளிக்கவே முன்வருவார்கள்—(அப்பொழுது இதர நாட்டில் உள்ள விலைகளும் இதே அளவில் இருந்தால்தான் பிரிட்டனிடம் வாங்க முற்படுவார்கள் என்பதையும் நினைவிற் கொள்ளவேண்டும்). தராதர விலை அளவுகளோடு, நாணய மாற்று வீதங்கள் மாறுபட முனைகின்றன; இதைப்பற்றி அடுத்த உட்பிரிவில் விளக்குவேன்.

மூலதனப் பெயர்வுகள் (capital movements) சாதாரண காலங்களில் ஏற்படுகின்றன. ஏனென்றால், ஓரிடத்தைவிட இன்னோர் இடத்தில் அளிக்கப்பெறும் குறைந்த தவணைக் கடன் வட்டிவீதங்கள் அதிகமாக இருக்கலாம். உதாரணமாக, நியூயார்க்கிலிருந்து லண்டனுக்கு, நிதிகளை மாற்றிப்போடமுடியும்; நியூயார்க்கில் கிடைக்கும் 2 சதவீதத்திற்குப் பதிலாக லண்டனில் 4 சதவீதம் அளிக்கப்பட்டால், இவற்றின் இடப்பெயர்ச்சி மிகுதியாகும். இதில் ஏற்படக்கூடிய நாணயமாற்று ஆபத்தை (exchange risk) ஒரு பாங்குமூலம், முன்னோக்கிய செலாவணிப் பரிவர்த்தனை வழியாகச் (forward exchange transaction) சமாளித்துக்கொள்ளமுடியும். A இப்பொழுது ஒரு மில்லியன் டாலர்களை லண்டனுக்கு மாற்றுவதாக வைத்துக் கொள்ளுவோம். இவற்றை இன்னும் 3 மாதங்கட்குப் பிறகு ஒரு குறிப்பிட்ட வட்டி விகிதத்துடன் திரும்பவும் தனக்குச் செலுத்தி விடும் ஏற்பாட்டுடன், மூன்று மாதத்திற்கு முன்னதாகவே ஒரு மில்லியன் டாலர்களை இவன் வாங்கிக்கொள்ளலாம். பிறர், 3 மாதத் தவணைக்குள் டாலரைக் கொடுத்து ஸ்டெர்லிங்கை இப்பொழுது வாங்குதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருப்பார்கள்; இவ்விதமாக இருவரது கூட்டாலும், 'முன்னோக்கிய' வாணிப அங்காடி சாத்தியமாகிவிடுகிறது.

என்றாலும், 1930ஆம் பத்தாண்டுகளில், 'சூடான பணத்தில்' (hot money) மிகுதியான யூகவாணிபப் பெயர்ச்சி ஏற்பட்டது. இப்பெயர்ச்சிகளெல்லாம், தராதர வட்டிவீதங்களுக்கு உட்பட்டிராது சில செலாவணிகளின் மதிப்பு வீழுமோ என்ற அச்சத்திற்கு ஆட்பட்டு இயங்கின. எந்தெந்தச் செலாவணிகளின் மதிப்பு நிலையாக இருக்கும் அல்லது உயரும் என்று எதிர்பார்க்கப்பட்டதோ, அவற்றிலேயே இப் பெயர்ச்சிகள் நடத்தப்பெற்றன. 1931 செப்டம்பரில், பொன் திட்டத்தை விட்டு ஸ்டெர்லிங் வெளியேறுவதற்கு முன்னால், ஸ்டெர்லிங்கிலும் இத்தகைய யூகவாணிபப் பெயர்ச்சிகள் பெரிய அளவில் நடந்தன. ஸ்டெர்லிங்கின் மதிப்பு கணிசமாக வீழ்ந்த

வுடன், இதர நாடுகளும் இதைத் தொடர்ந்து மதிப்பிறக்கம் செய்து கொள்ளும் என்ற சூழ்நிலை ஏற்பட்டபொழுது, இச் செலாவணிகளிலிருந்து ஸ்டெர்லிங்கிற்கு, மிகுதியான பெயர்ச்சிகள் ஏற்பட்டன. இத்தகைய பெயர்ச்சிகள் இருவழியிலும் (ஸ்டெர்லிங்கிலிருந்து இதர செலாவணி, இதர செலாவணியிலிருந்து ஸ்டெர்லிங்கிற்கு) ஏற்படுவதைப் பெரும்பாலும் தடுத்து நிறுத்தவும், ஸ்டெர்லிங்கின் மதிப்பில் மிகுதியான ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்குவதைத் தவிர்க்கவுமே, பிரிட்டிஷ் அரசாங்கம், நாணயமாற்றுச் சமன் காப்புநிதி (The Exchange Equalization Fund) என ஒன்றை நிறுவியது.[1]

வாணிப மாற்றுவீதங்களில் (terms of trade) உண்டாகும் மாறுதல்கள், நாணயமாற்று வீதங்களிலும் மாறுதல்கள் ஏற்படச் செய்யும். ஒரு நாட்டின் ஏற்றுமதிப் பொருள்களுக்குரிய தேவை அதிகமானல், அதன் செலாவணிக்கு உரிய தேவையும் அதிகப்படவே செய்யும்.

ஓர் எளிய அனுமான உதாரணத்தைப் பார்ப்போம். பிரிட்டனுக்கும் ஃபிரான்சுக்கும் இடையே ஒரே ஒரு பரிவர்த்தனைமட்டுமே நடைபெறுவதாக வைத்துக்கொள்ளுவோம். ஃபிரெஞ்சு நாட்டு ஒயினுக்குப் பதிலாக பிரிட்டன் நிலக்கரியை ஏற்றுமதி செய்கிறது. பிரிட்டன், டன் ஒன்றுக்கு 5 பவுன் வீதம் நாள் ஒன்றுக்கு 10 டன் நிலக்கரியை ஏற்றுமதி செய்கிறது; இதற்கு மாற்றாக, காலன் ஒன்றுக்கு 25 பிராங்கு வீதம், நாள் ஒன்றுக்கு 20 காலன் ஒயினை இறக்குமதி செய்துகொள்ளுகிறது. (ஒரு பவுன் 10 பிராங்குகளுக்குச் சமம்.) இப்பொழுது ஃபிரான்சின் நிலக்கரித் தேவை அதிகமாகிறது என வைத்துக்கொள்ளுவோம். ஆனல், பிரிட்டனின் ஒயின் தேவை அப்படியே இருக்கிறது; எனவே, ஃபிரான்சு அதிகமான ஸ்டெர்லிங் பெறவேண்டுமானல், தனது ஒயினை இன்னும் மலிவான விலைக்குத் தருதல்வேண்டும். நாளொன்றுக்கு 15 டன் நிலக்கரிக்கு (75 பவுன்) மாற்றாக, 36 காலன் ஒயினைக் கொடுத்து (900 பிராங்குகள்) ஒரு புதிய சமநிலையை உண்டாக்கிக்கொள்ள முற்படலாம். இதன்படி இப்பொழுதைய நாணயமாற்று வீதம், 1 பவுனுக்கு 12 பிராங்குகள் என மாறிவிடும். ஃபிரெஞ்சுக்குரிய நிலக்கரித்தேவை அதிகமாகிவிட்டதால், அதை வாங்குதற்காக ஃபிரான்சுக்கு ஸ்டெர்லிங் தேவைப்படுகிறது. இவ்விதம் ஃபிரான்ஸின் நிலக்கரித்தேவை, ஸ்டெர்லிங் தேவை ஆகிய இரண்டும், ஒரே சமயத்தில் உயர்ந்துவிட்டன. இதனல் வாணிப மாற்றுவிதம், பிரிட்டனுக்கு $\frac{1}{5}$ அளவிற்கு அனுகூலமாகிவிட்ட (ஒரு டன் நிலக்கரிக்கு மாற்றாக 2 காலன் ஒயின் பெற்றது; இப்பொழுது $2\frac{2}{5}$ காலன் ஒயின் பெறுகிறதல்லவா) ஸ்டெர்லிங்கின் நாணயமாற்று

[1] 19ஆம் அதிகாரம் 5ஆம் உட்பிரிவைப் பார்க்கவும்.

மதிப்பில் ஏற்பட்டுள்ள இந்த $\frac{1}{5}$ அளவு உயர்வு, உண்மையில் அதன் அபிவிருத்தியையே சுட்டுகிறது. ஆனுல், இதற்குச் சார்பாக இதர நிலேகள் சமமாக இருத்தல் வேண்டும். குறிப்பாக அதன் பணச் செலவுகள் ஒரே நிலேயில் இருத்தல் வேண்டும்.

## 3. வாங்குந் திறன் சமநிலேக் கோட்பாடு

(The Purchasing-power Parity Theory)

ஜெர்மனி, போலந்து முதலிய நாட்டுச் செலாவணிகளின் நாணயமாற்று மதிப்பில் ஏற்பட்ட வீழ்ச்சிக்கு அந் நாடுகளது பண வீக்கமே காரணம் என்பதைக் குறிப்பிடுதற்காகவே இந்த வாங்குந் திறன் சமநிலேக் கோட்பாடு என்பது, முதல் உலகப் பெரும் போருக்குப் பின்னர் முதன்முதலாக உபயோகப்படுத்தப்பெற்றது. இது மிகவும் சரியானதுதான். ஒரு சமநிலே அமைப்பிலிருந்து துவங்கி இக் கருத்தை ஆராய்வோம். A என்ற நாட்டில் விலேகள் 100 மடங்கு உயர்ந்துள்ளன. ஆனுல், B என்ற நாட்டில் அவை அதே நிலேயில் உயராமல் அப்படியே இருக்கின்றன. எனவே, B-யில் உள்ள மக்கள், தமது செலாவணியின் 1 அலகுக்கு நிகராக, A-யின் செலாவணியில் 100 அலகுகளேப் பெற முற்படுவார்கள். ஏனென்ருல், A-யின் இப்போதைய 100 அலகுகள் முன்னேய 1 அலகு வாங்கிய அளவு பொருள்களேயே இன்று வாங்குதற்கு முடியும். B-யின் விலேகள் இரு மடங்கு உயர்ந்துவிட்டால், இப்பொழுதைய அதன் செலவாணி அலகில் ஒன்றைக்கொண்டு, A-யின் செலாவணி அலகுகளில் 50 க்குச் சமமான பொருள்களே மாற்ருகப் பெறமுடியும். இவ்விதம் இரு நாடுகளிடையே உள்ள செலாவணிகளின் நாணயமாற்று மதிப்பை அளவிடுதல் வேண்டும். எனவே, பல்வேறு செலாவணிகளின் நாணயமாற்று மதிப்புகளில் ஏற்படும் வித்தியாசம், அவற்றின் விலே அளவுகளிலும் பொதுவாகப் பிரதிபலிக்கும் (சமநிலேயின் முந்திய அமைப்போடு ஒப்பிடும்வகையில்) என்பதை நாம் எதிர்பார்க்கலாம்.

என்ருலும், விலே அளவுகள் ஒரு நிலேயில் அமையும்வரை இது ஏற்படாது. A-யின் செலாவணியில் பணவீக்கம் ஏற்பட்டு அதன் பலனுக விலேகளும் உயர்கையில், அதன் செலாவணியின் நாணய மாற்று மதிப்பும் வேகமாகத் தாழும் என்பதை நாம் எதிர்பார்க்கலாம். ஏனென்ருல், A-யின் செலாவணி (நிலேயான செலாவணியாக மாறுதற்காக) அதில் யூகமான மூலதனப் பெயர்வுகள் ஏற்படும்.

இந்த விதிக்கு உட்பட்டு வாங்குந் திறன் சமநிலேக் கோட்பாடானது, ஒரு குறிப்பிட்ட கால எல்லேயில் நாணயமாற்று வீதங்களில்

ஏற்படும் மாற்றங்கட்குரிய மிக முக்கியமான காரணத்தையும் விளக்குகிறது. இக் குறிப்பிட்ட கால எல்லையில் வெவ்வேறு நாடுகளின் விலை அளவுகளில் மிகுதியான பெயர்வுகள் ஏற்பட்டுவிடுகின்றன. எனவே, நாணயமாற்று வீதங்கள் ஏற்படுதற்குரிய காரணங்களை விளக்கும் பொதுவான விளக்கமாக இக் கோட்பாடு பயன்படுவதில்லை.

இக் கோட்பாட்டைப் பின்வரும் வடிவங்களில் ஏதாவதொன்றின்மூலமாகக் குறிப்பிடலாம். குறுகிய வடிவில் பன்னாட்டு வாணிபங்களிடையே பரிவர்த்தனை செய்துகொள்ளப்பெறும் சரக்குகளின் தராதர விலைகளைமட்டுமே இது குறிக்கிறதென்பது ஒன்று; பரந்த வடிவில் எல்லாச் சரக்குகளையும் பணிகளையும் சார்ந்த தராதர விலை அளவுகள் அத்தனையும் சார்ந்து குறிப்பிடுகிறதென்பது மற்றொன்று.

பன்னாட்டு வாணிபங்கட்கு உட்படும் சரக்குகளுக்கு உலக அங்காடி முழுவதும் களமாக இருப்பதால், எந்த ஒரு துறைமுகத்திலும் அவற்றிற்குரிய விலைகள் (செலுத்துக் கட்டணங்கள் தவிர) ஒரே மாதிரியாகவே அமைந்துள்ளன என்பது முற்றிலும் உண்மைதான். உதாரணமாக, அமெரிக்கத் துறைமுகத்தில் ஒரு புஷல் கோதுமையின் விலை 1·40 டாலர் என்றால், பிரிட்டிஷ் துறைமுகத்தில் (1 பவுன்: 2·80 டாலர்) இதன் விலை 10 ஷில்லிங்காகவே இருக்கும் (இத்துடன் அனுப்புக் கட்டணத்தையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்). ஆனால், காரணகாரியத் தொடர்புகளை அறிதற்கு இவ் விளக்கம் நமக்கு மிகுதியும் பயன்படுவதில்லை. ஏனென்றால், 1·40 டாலர், 10 ஷில். என்ற இவ்விரு விலைகள்மட்டும், நாணயமாற்று வீதத்தை நிர்ணயித்துவிடுவதில்லை. ஒரு பொருளை ஏற்றுமதி செய்யும் நாட்டின் விலையே பெரும்பாலும், அதை இறக்குமதி செய்யும் நாட்டிலும் அதற்குள்ள விலையை நிர்ணயிக்கிறது; அதாவது, 1 பவுனுக்கு 2·80 டாலர் என்ற கணக்கின் அடிப்படையில் நிர்ணயிக்கிறது. ஆனால், இவ்விரு நாடுகளின் செலாவணிகட்குரிய தேவைகளைப் பாதிக்கும் எல்லாச் சக்திகளின் இணைப்பாலுமே நாணயமாற்று வீதம் நிர்ணயிக்கப்பெறுகிறது. இச் செலாவணித் தேவையின் பெரும் பகுதி இறக்குமதி செய்யப்படும் பொருட்களுக்கு அளிப்பதற்காக ஏற்படுவதுதான். ஆனால், இவ்விரு நாடுகளின் நாணயமாற்று வீதத்திலும், அதன் காரணமாக கோதுமைபோன்ற பொருள்களின் தராதர விலைகளின்மூலமாக இவற்றின் செலாவணிகளிலும் மாற்றங்கள் ஏற்படுவதற்குப் பல்வேறு அடிப்படைக் காரணங்களும் உள்ளன. வாணிப மாற்றுவீதங்களில் உண்டாகும் மாறுதல், அல்லது மூலதனப் பெயர்வுகள் அல்லது அயல்நாட்டுச் செலுத்துகளுக்கு உரிய 'பற்று' இனங்களில் (வட்டி செலுத்தவேண்டியது

அல்லது பிரயாணிகள் செலவு என்பன) உண்டாகும் செலவுகட்காக ஏதாவது ஒரு செலாவணிக்குமட்டும் ஏற்படும் தேவை மிகுதி முதலிய பல்வேறு காரணங்களில் ஏதாவதொன்ருலும் நாணயமாற்று வீதங்கள் பாதிக்கப்படலாம். நடைமுறையில் உள்ள நாணயமாற்று வீதத்தில் ஒரு பொருளுக்கு A-ல் உள்ள விலை அதே பொருளுக்கு B-ல் உள்ள விலைக்குச் சமமாக இருக்கிறதென்பது, B-யின் விலை நிர்ணயிக்கப்படுவதை விளக்க முற்றிலும் பொருந்துவதில்லை.

சுருங்கிய வடிவில், இக் கோட்பாடு உண்மையாகப் பொருந்துகிறது; ஆனல், பரந்த வடிவில் இது உண்மையாக அமைவதில்லை. ஒரு நாட்டின் ஏற்றுமதி இறக்குமதி விலைகளிடையேயும், பன்னாட்டு வாணிபத்தில் புகாது, உள்நாட்டிலேயே பயன்படும் அதன் பண்டங்கள், பணிகட்குரிய விலைகளிடையேயும், நெருங்கிய உறுதியான தொடர்பேதும் கிடையாது. 1 பவுன் என்பது 2·80 டாலருக்கோ அல்லது 13·8 பிராங்குகளுக்கோ சமம் என்ருல், கிரேட் பிரிட்டனில் 1 பவுனுக்கு உள்ள வாங்கும் சக்தியானது, அமெரிக்காவில் 2·80 டாலருக்குச் சமமாகவும், அதே அளவில் அப்படியே அமைந்துவிடுகிறது என்றும் முடிவு கட்டிவிடுதல் கூடாது.[1]

இக் கோட்பாட்டைப் பாராட்டிப் போற்றும் சில பொருளாதாரவாதிகள், மேற்குறித்த மறுப்பை ஒதுக்கிவிட முயன்றிருக்கிருர்கள்; விலை அளவுகளில் ஏற்படும் மாறுதல்களோடு, நாணயமாற்று வீதங்களில் ஏற்படும் மாறுதல்களை இணைப்பதன்மூலம், நாடுகளிடையே ஏற்பட்டுள்ள விலை அளவுகளை நேரடியாக ஒப்பிட்டுப் பார்ப்பதில் உள்ள இன்னல்களையும் இவர்கள் கணக்கிட்டுப் பார்க்கவில்லை.

நாணயமாற்று வீதங்கள் கிட்டத்தட்டச் சமநிலையில் உள்ள ஒரு தள நாளிலிருந்து கணக்கெடுப்போம். இத் தள நாளில், A-யின் விலை அளவு 100 என்றும், B-யின் விலை அளவு 100 என்றும் வைத்துக் கொள்வோம். சில நாள் கழித்த பின்னர், A-யின் விலை அளவு 150 ஆகவும், B-யின் விலை அளவு 300 ஆகவும் உயர்ந்துவிட்டால், A-யின் செலாவணியில் 1 அலகைக்கொண்டு, B-யின் செலாவணியில் இரு மடங்கை முன்புபோல் மாற்ருகப் பெறவேண்டும்; ஏனென்ருல், அவற்றின் தள நாளோடு ஒப்பிடுகையில், இவ்விரு நாடுகளின் செலாவணிகட்கு இடையே உள்ள வாங்குந்திறன் சமநிலை இது

[1] ஆனல், உண்மை நிலவரம் என்ன தெரியுமா? 1955-ல் அமெரிக்காவில் 2·80 டாலரைக் கொடுத்து வாங்குவதைவிட, அதற்கு இணையான 1 பவுனைக் கொடுத்து ஐக்கிய அரசில், 48 சதவீதம் அதிகமான பொருள்களை (பிரிட்டிஷ் செலவீட்டு முறையில்—ஆனல், அமெரிக்கச் செலவீட்டு முறையில் 12 சதவீதம்) வாங்க முடிந்தது. (See Comparative National Products and Price Levels by Milton Gilbert and Associates.)

தான். பொதுவாக, எந்த ஒரு நாளிலும், A-யின் விலை அளவு $X$ என்றும், B-யின் விலை அளவு $Y$ என்றும் கொண்டால், இவற்றின் செலாவணிகட்கு உரிய நாணயமாற்று வீதம், அவற்றின் தள நாளில் இருந்ததைப்போல $\frac{X}{Y}$ என்ற கணக்கிலேயே அமையும்.

ஒரு நாட்டிற்குள் உள்ள விலை அளவு, அங்குள்ள மறைமுக வரிகளில் ஏற்படும் மாற்றங்களாலும் மாறுதலடையக்கூடும். உதாரணமாக, A தனது இறக்குமதிப் பொருள்களின்மீது 100 சதவீத இறக்குமதித் தீர்வை விதிக்கிறது என வைத்துக்கொள்வோம். இதனால், அதன் இறக்குமதிகட்கு உரிய உள்நாட்டு விலைகள் இரு மடங்காகும்; ஆனால், இதனால் உண்டாகும் விளைவால், A-யின் செலாவணிக்குரிய நாணயமாற்று மதிப்பு, குறைவதற்குப் பதிலாக, அதிகமாகவே உயரும்; ஏனென்றால், இறக்குமதிகட்கு உரிய தேவைகளும், இதனால் அன்னியச் செலாவணிகட்கு ஏற்படும் தேவைகளும் குறைந்துவிடுகின்றன அல்லவா? ஆகையால், இக் கோட்பாட்டின், இவ் விளக்கத்தைத் தருபவர்கள், மறைமுக வரிகளில் ஓரளவு மாற்றங்கட்குச் சலுகைகள் அளிக்கவேண்டுமெனக் கேட்கிறார்கள்; இது சரக்குகளை ஏற்றி அனுப்பும் செலவுகட்கும் பொருந்தும்.

இவ்வகையில், இக் கோட்பாட்டைப் பயன்படுத்தினால், நாணயமாற்று வீதங்கள் எவ்விதம் பெயர்ந்து இயங்குகின்றன என்பதை இது ஓரளவு குறிப்பிடும். ஆனால், இதைமட்டுமே பயன்கொள்ளுவது கூடாது; ஏனென்றால், இது முற்றிலும் நம்புதற்கியலாத கோட்பாடாகும். இவ்விதமாகக் கணக்கிட்டால், யூகமான மூலதனப் பெயர்வுகள் முதலிய இதரக் காரணிகளும், நாணயமாற்று வீதங்களை, அவற்றின் வாங்குந் திறன் சமநிலையிலிருந்து முற்றிலும் விலகச் செய்துவிடுகின்றன. உதாரணமாக, 1933 ஏப்ரலில் அமெரிக்கா தனது டாலரின் மதிப்பைக் குறைத்துக்கொண்டது. 1932 டிசம்பருக்கும், 1933 டிசம்பருக்கும் இடையில், பிரிட்டனின் சில்லறை விலைகள் ஒரே சீராக இருந்தன; ஆனால், அமெரிக்காவில் அவை 3 சதவீத அளவே உயர்ந்தன. ஆனால், இவ்விரு நாடுகட்கும் இடையே இருந்த நாணயமாற்று வீதம் என்ன தெரியுமா? 1932 டிசம்பரில், 1 பவுனுக்குச் சமமாக 3·28 டாலர் இருந்தது; 1933 டிசம்பரில், 1 பவுனுக்குச் சமமாக 5·12 டாலராக உயர்ந்துவிட்டது.

## 4. தடையிலா நாணயமாற்று வீதங்களில் உள்ள நன்மை தீமைகள்

பொன் நாணயத் திட்டத்துடன் ஒப்பிடுகையில், தடையிலா நாணயமாற்று வீதங்களில் மிகச் சிறந்த அனுகூலம் ஒன்று

உள்ளது. ஒரு நாடு தனக்கு உரிய சுதந்திரமான பணத்துறைக் கொள்கையைப் பின்பற்றிக்கொள்ளுவதற்கு அவை அனுமதிக்கின்றன. ஒரு நாடு, தனது விலை அளவுகளை ஒருநிலைப்படுத்தலாம்; அல்லது பண வருவாய்களை ஒழுங்கு செய்யலாம்; நாட்டில் முழு வேலையுடைமை அளித்தற்காகத் தனது பண அளிப்பை விரிவுபடுத்தலாம்; அல்லது பெருக்கம் ஏற்படுவதைக் கட்டுப்படுத்துதற்காகப் பண அளிப்பைச் சுருக்கிக்கொள்ளலாம். இவ்விதம் தான் விரும்பும் பணத்துறைக் கொள்கை எதையும் அந்த நாடு சுதந்திரமாக மேற்கொள்ளலாம். இனி நாம் பார்க்க இருக்கின்ற பொன் நாணயத் திட்டத்தில், இம்மாதிரியெல்லாம் ஒரு நாட்டிற்கு உரிமை கிடைக்காது. ஒரு நாடு, தனது வருமானங்களையும் விலைகளையும், இதர நாட்டின் வருமானங்கள், விலைகளோடு சரிக்கட்டிப் பொருத்தமுற அமைத்துக்கொள்ளுதல் வேண்டும். இவ்விதச் சரிக்கட்டுதல்கள், அதன் பொருளாதார நிலையோடு பொருந்தியிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அந் நாடு மேற்கொள்ள விரும்பும் பணத்துறைக் கொள்கைக்கு ஏற்புடையதாயிருந்தாலும் சரி, ஏற்காததாயிருந்தாலும் சரி, இதர நாடுகட்காக, ஒரு நாடு தன்னை ஒரு வரையறைக்கு உட்படுத்திக்கொண்டே தீர வேண்டும். அதன் நாணயமாற்று வீதங்களை ஒரு நிலையில் அமைக்கவேண்டுமானால், இத்தகைய சரிக்கட்டுதலை மேற்கொள்வது மிகவும் அவசியம்.

நாணயமாற்றுக் கட்டுப்பாட்டின்கீழ், ஒரு நாடு, ஓரளவு விரிந்த வரையறைக்குள் தனது பணத்துறைக் கொள்கையைப் பின்பற்ற முடியும்; என்றாலும், அது தனது ஏற்றுமதி இறக்குமதிகளில் கட்டுப்பாடுகளை விதிக்கவேண்டும்; அயல்நாட்டுச் செலுத்துநிலையைப் பாதிக்கும் எல்லாப் பொருளாதார நடவடிக்கைகளையும் வரையறுத்துக் கொள்ளவேண்டும். தடையிலா நாணயமாற்று வீதத்தின்கீழ், இத்தகைய நேரடியான கட்டுப்பாடுகள் எவையும் இடம் பெறுவதில்லை; செலாவணியின் நாணயமாற்று மதிப்பில், அவ்வப்போது எளிதாக மேற்கொள்ளும் மாறுதல்களின்மூலமாக, அயல்நாட்டுச் செலுத்துநிலையில் சமன்பாட்டை எளிதில் பெற்றுவிடமுடியும்.

இத் தடையிலா மாற்று வீதங்களில் உள்ள மிகப் பெரிய குறை, பன்னாட்டு வாணிபம், முதலீடு என்பனவற்றில் இழப்பு ஆபத்துகளை மிகுதிப்படுத்துவதன்மூலம் அவற்றின் அளவுகளைக் குறைத்துவிட்டதே ஆகும். இன்னொரு செலாவணியில், பெறவோ அல்லது கொடுக்கவோ ஒப்பந்தம் செய்துகொள்ளுகிறவனுக்கு, அவ் வொப்பந்தம் நிறைவேறும் காலத்திற்குள், அச் செலாவணியின் மதிப்பில் ஏதேனும் மாறுதல்கள் ஏற்பட்டால், அது அவனை மிகவும் பாதிக்கும்.

ரூரித்தானியாவிற்கு (Ruritania) ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களிலிருந்து கிடைக்கக்கூடிய 20 அல்லது 30 சதவீத இலாபத்தைப் பெறுவதற்குள், ரூரித்தானியாவின் செலாவணியின் மதிப்பு பாதியாகக் குறைந்துவிட்டால் அந்த இலாபம் உடனே நஷ்டமாக மாறிவிடுகிறது. முன்னேக்கிய நாணயமாற்றுப் பரிவர்த்தனை வசதிகள்மூலமாக இத்தகைய நஷ்டங்கள் ஏற்படாமல் தடுப்பதென்பது எப்போதும் முடியாது; மேலும், மேற்குறித்த செலாவணிக்கு, எவ்வித முன்னேக்கிய பேர வசதியும் இல்லாமல் இருக்கலாம்; அப்படியே இருந்தாலும், இந்தச் செலாவணியின் மதிப்பு இறங்கக்கூடுமோ என்று ஏற்படக்கூடிய பொதுவான நம்பிக்கையால், இதன் எதிர்கால மதிப்பு, இன்றைய மதிப்பைவிடக் குறைக்கப்பட்டு விடும். மேலும், ஓர் ஏற்றுமதியாளனே, அல்லது கடனுகச் சரக்கு அனுப்புபவனே தனது சொந்தச் செலாவணிவீதத்தில் அவற்றை விற்பதன்மூலமோ, அல்லது கடனுகத் தருவதன்மூலமோ ஓரளவு தன்னைக் காத்துக்கொள்ள முற்படலாம். ஆனல், இவனிடமிருந்து சரக்குகளைப் பெறும் இன்னெரு நாட்டவர், தான் பெற்ற சரக்குகளுக்கு உரிய பணத்தைச் செலுத்தும் நாளில், அதிகமான தொகையைத் தனது சொந்தச் செலாவணியில் தருமாறு நேரிடலாம்.

இவ்விதம், அதிகமாகப் பணத்தைச் செலுத்தவேண்டிய ஆபத்து, எந்த ஒரு முறையிலும் இருக்கிறது என்பது உண்மைதான். மேற்குறித்த ரூரித்தானியா, பொன் நாணயத் திட்டத்தில் இணைந்திருந்தால், அதற்கு இத்தகைய நிலை ஏற்பட்டால், அது பொன் நாணயத் திட்டத்தைவிட்டு எந்த நிமிடமும் விலகிச் செல்லக்கூடிய ஆபத்து இருக்கிறது. அவ்விதம் விலகிச்சென்றால், அதன் செலாவணி மதிப்பும் ஒரே நொடியில் தலைகீழாக வீழ்ந்துவிடும். இவ் விதி, நாணயமாற்றுக் கட்டுப்பாடுகட்கும் அப்படியே பொருந்தும். நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை மேற்கொண்டுள்ள ரூரித்தானியாவிற்கு, இத்தகைய இன்னல்கள் ஏற்பட்டு, அவற்றின் காரணமாக, அது சில நடவடிக்கைகளை மேற்கொள்ள நேர்ந்தால், அது தான் அயல் நாட்டவர்கட்கு அளிக்கவேண்டிய தொகைகளை (இந்த நாட்டில் நேரடியாக முதலீடு செய்துள்ளமைக்காக அவர்கட்குச் சேரவேண்டிய இலாபங்கள் உட்பட) அப்போதைக்குமட்டும் 'தடுத்துக்'கொள்ளலாம். ஆனல், ஒரு நாடு தனது நாணயமாற்று வீதங்களை ஒரு சமநிலைக்குக் கொணர்வதற்கான கொள்கையைப் பின்பற்றி வருகையில், அவற்றில் மிகுந்த ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுதற்கு இடம் தந்துவிட்டால், அதனல் ஏற்படும் ஆபத்துகள் இன்னும் அதிகமாகவே இருக்கும்.

பாதகமான அயல்நாட்டுச் செலுத்துநிலையைச் செம்மையாக்குவதற்குரிய ஒரு முறையாகச் செலாவணி மதிப்பிறக்கத்தைக் கருதுவ

தால், வாணிப மாற்றுவீதங்களிலும் அது பாதகமான விளைவுகள் ஏற்படச் செய்யும் என்பது இதற்கு எதிராகக் கூறப்படும் குறையாகும். நாம் முன்பு கண்டதுபோல, மிக முக்கியமான ஏற்றுமதி நாடாக மட்டும் இருக்கும் ஒரு நாட்டிற்கு (அல்லது ஸ்டெர்லிங்கு பகுதி போன்ற ஒரு குழுவுக்கு) இத்தகைய பாதகமான விளைவுகள் ஏற்படுவது இன்னும் அதிகமாகவே இருக்கும்

செலாவணி மதிப்பிறக்கம், உள்நாட்டு வருமானங்கள், விலைகளில் எத்தகைய உயர்வும் ஏற்படச் செய்வதில்லை என்ற அனுமானத்துடன் நான் இங்கே விளக்குகிறேன். இந்த நிலையில், அயல்நாட்டுச் செலாவணிக்குரிய நாணயமாற்று மதிப்பில் ஏற்படும் உயர்வால், இறக்குமதி செய்யப்படும் கச்சாப் பொருள்களின் விலைகளிலும் உயர்வு ஏற்படும். இந்த உயர்வின் அளவுக்கே, ஏற்றுமதித்துறைத் தொழில்களின் செலவும் உயரும் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும்.

ஆனல், நடைமுறையில், செலாவணி மதிப்பிறக்கத்தைத் தொடர்ந்து பணவருவாய்களிலும், உள்நாட்டு விலைகளிலும் உயர்வு ஏற்படும்; பணத்தின் கணியத்தில் மிகுதி ஏற்படும்; வேறுவிதமாகச் சொல்வதென்றல், பணவீக்கம் ஏற்படச் செய்யும். இவ்விதம் பணவீக்கம் ஏற்பட்டால், ஏற்றுமதித்துறைத் தொழில்களின் செலவுகள் உயரும்; இறக்குமதிப் பொருள்களுக்கு உரிய தேவைகள் மீண்டும் மிகுதியாகும்; ஏனென்றல், பணவீக்கம் காரணமாக மக்களிடம் நிறையப் பணம் இருக்கும்; தவிர, உள்நாட்டுப் பதிலிகளின் விலைகளும் அதிகமாக இருக்கும். எனவே, வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்துகொள்ளும் விருப்பம் மிகும். இதனல், செலாவணியின் நாணயமாற்று மதிப்பு இன்னும் குறையும்; இதனல் மூலதனத்தில் யூகப் பெயர்வுகள் இன்னும் மிகுதியாகும். இவ்விதம் மூலதனப் பெயர்வுகள் தொடர்ந்து நிகழ்ந்தால் ஈடு செய்யமுடியாத, எவ்விதமும் செப்பனிட முடியாத அளவுக்குப் பணவீக்கத்தில் உயர்வு ஏற்பட்டுவிடும். தனது பண வருவாய்களிலும், பொருள் விலைகளிலும் ஏற்படக்கூடிய உயர்வுகளை ஒரு நாடு கட்டுப்படுத்தாவிட்டால் இத்தகைய பணவீக்க அபாயம் எப்பொழுதும் இருந்துகொண்டே இருக்கும். தடையிலா வாணிப மாற்றுவீதங்கட்கு எதிராகக் கூறப்படும் மற்றொரு குறை இதுதான்.

# 37. பொன் நாணயத் திட்டம்
# [பொன் (அளவைத்) திட்டம்]
# (The Gold Standard)

## 1. மாருத மாற்றுவீதங்கள்

ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துகளைச் சமநிலையில் பேணுவதற்குரிய, சுய இயக்கமுறையொன்றைப் பொன் நாணயத் திட்டம் அளிக்கிறது. ஒரு நாட்டின் அரசாங்கம், தனது செலாவணியின் ஓர் அலகுக்கு உரிய வாங்கும் சக்தியை, பொன்னின் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு உரிய வாங்கும் சக்திக்குச் சமமாக அமைத்துக்கொண்டால், அந்த நாடு பொன் நாணயத் திட்டத்தை மேற்கொண்டுள்ளது எனலாம். இத் திட்டத்தை மேற்கொள்வதற்குப் பல வழிகள் உள்ளன.

மிக எளிய வழி தங்க நாணயங்களை உபயோகித்துக்கொள்வது ; ஆனால், இந் நாணயங்களின் முக மதிப்பிற்குச் சமமான பொன் எடை இந் நாணயத்திலேயே பொதிந்திருக்கவேண்டும். அரசாங்கம் இவ்விதப் பொன் நாணயங்களை, அவற்றிற்கிணையான தங்கத்தை மாற்றாகப் பெற்றுக்கொண்டு, எத்தனை வேண்டுமானாலும் வெளியிடத் தயாராயிருக்கின்றது. இதற்கு மறுதலையாக, தனது செலாவணியை இதே விலை வீதத்தில் மாற்றாகப் பெற்றுக்கொண்டு தன்னிடம் உள்ள பொன்கட்டி இருப்புகளையெல்லாம் விற்றுவிடவும் அரசாங்கம் தயாராக இருக்கின்றது. இத் திட்டத்தின்கீழ் தடையின்றிப் பொன்னை ஏற்றுமதியோ இறக்குமதியோ செய்து கொள்ளலாம்.

உதாரணமாக, 1914-க்கு முன்னர், கிரேட் பிரிட்டன் தங்கச் சவரன்களை உபயோகித்து வந்தது. இச் சவரன் என்பது தங்கத்தின் ஒரு குறிப்பிட்ட மாருத எடை அளவு உடையது. இதன் எடையில் $\frac{1}{12}$ பாகம் மட்டமான உலோகமாக இருக்கும் ; நாணயத்தை நாட்

பட்டு உழைக்கும் வகையில் வன்மையாக்குதற்காக இக் குறைந்த அளவிற்கு மட்ட உலோகம் சவரனுடன் சேர்க்கப்பெற்றிருக்கும். ஆகையால், சவரனில் 12-ல் 11 பாகம் தரமான தங்கம் இருக்கிறது என்று அழைப்பது வழக்கம். இச் சவரனில் $113\frac{1}{828}$ குன்றிமணி சுத்தத் தங்கம் உண்டு. அதாவது, $4\frac{1}{4}$ சவரனில் ஓர் அவுன்சு சுத்தத் தங்கம் இருக்கும். இதனால், லண்டன் அங்காடியில் தங்கக் கட்டியின் விலை, ஓர் அவுன்சுக்கு 4பவு. 5ஷில். அல்லது, 12-ல் 11 பாகம் தரமான தங்கத்திற்கு விலை 3பவு. 17ஷில். $10\frac{1}{2}$பெ. என ஒரே சீராக அமைந்திருக்கும். இந்த விலையில் தங்கத்தை வாங்கவும் விற்கவும் நாணயச்சாலைக்கு (Mint) அனுமதியளிக்கப்பெற்றிருந்தது.[1] இவ்விதம் பிரிட்டிஷ் செலாவணி, தங்கத்திற்கு முற்றிலும் சரிசமமாக அமைக்கப்பெற்றிருந்தது ; அவுன்சுக்கு 4பவு. 5ஷி. விலை வீதத்தில் தங்கத்துடன் இணைக்கப்பெற்றிருந்தது.

பொன் நாணயத் திட்டத்தில் உள்ள அமெரிக்கா, ஃபிரான்சு, ஜெர்மனி முதலிய நாடுகட்கு, அவற்றிற்கெனத் தனியான செலாவணி அலகுகள் உள்ளன. அவை டாலர்கள், ஃபிராங்குகள், மார்க்குகள் முதலிய பெயர்களால் வழங்கப்படுகின்றன ; ஆயினும், அவை அனைத்தும் இதைப்போலவே தங்கத்துடன் இணைக்கப்பெற்றுள்ளன. இவ்விதம் அவையனைத்தும் தங்கத்துடன் இணைக்கப்பெற்றுள்ளமையால், அவை தமக்குள்ளும் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டுள்ளன. ஒரே அளவு தங்க எடைக்குச் சமமாக 1 பவுனும் 4·866 டாலரும் நிர்ணயிக்கப்பெற்றுள்ளன. எனவே, 1 பவுனுக்கு 4·866 டாலர் சமம் என்ற இந்தப் பொன் சமன்பாட்டிலிருந்து (gold parity), இவற்றின் மாற்றுவீதம் குறிப்பிடத்தகுந்த அளவுக்கு மாறுதலுறுவது இல்லை; மேலும், தங்கத்தை அனுப்புதற்கு ஆகும் செலவும் மிகமிகக் குறைவாக நிர்ணயிக்கப்பட்டிருப்பதால், விலை அளவில் ஏற்படும் மாறுதல் கணிசமானதாக இருக்காது. இவ்விதம் பொன் நாணயத் திட்டத்தில் உள்ள நாடுகளிடையே ஏற்படும் மாற்று வீதங்கள் கிட்டத்தட்ட மாறாநிலையில் அமைக்கப்பெற்றுவிடுகின்றன.

இதே முடிவை, தங்க நாணயங்களை உபயோகப்படுத்தாமலே அடையமுடியும். 1925—1931ஆம் ஆண்டுகளில் பொற்கட்டித் திட்டம் (gold bullion standard) என்ற பெயரில், கிரேட் பிரிட்டன் மேற்குறித்த நலனைப் பெற்றது. அதாவது, இப் பொற்கட்டித் திட்டத்தின்மூலம், ஒரு குறிப்பிட்ட மாறாத விலையில் தங்கக்கட்டிகளை வாங்கவும் விற்கவும் அரசாங்கம் எப்போதும் தயாராக இருந்தது; மேலும்,

[1] ஓர் அவுன்சுக்கு உரிய சரியான வீதம் 4பவு. 4ஷி. $11\frac{1}{2}$பெ. நாணயச்சாலை, இத்துடன் $1\frac{1}{2}$ பென்னியை, ஆக்குதற் செலவுக்காகக் கூட்டி, 11/12 மாற்றுடைய பொன்னுக்கு 3பவு. 17ஷி. 9பெ. என விலை அறுதியிட்டுள்ளது.

அவற்றை ஏற்றுமதி இறக்குமதி செய்வதில் எவ்விதத் தடையும் கட்டுப்பாடும் விதிக்கவில்லை. மேலும், ஒரு நாடு மாற்றுப் பரிவர்த்தனைத் திட்டத்தை (exchange standard) மட்டும் பின்பற்றலாம். இந்த நாட்டின் பொதுவான பொருளாதார உறவுகளெல்லாம் கிரேட் பிரிட்டனுடன்மட்டுமே பெரும்பாலும் இருந்தால், எப்போதும் ஒரு குறித்த மாருத விகிதத்தில் ஸ்டெர்லிங்கை வாங்கவோ அல்லது விற்கவோ தயாராக இருப்பதன்மூலம், இது ஸ்டெர்லிங் மாற்றுத் திட்டத்தை மேற்கொள்ளலாம்; அல்லது, அமெரிக்காவும் உறவு கொண்டிருந்தால், இந்த நாடு டாலர் மாற்றுத் திட்டத்தை மேற்கொள்ளலாம். ஒரு பெரிய நாடு பொன் திட்டத்தை மேற்கொண்டிருந்தால், அதன் துணைக் கிரக நாடுகள் எல்லாம் ஒரே மாற்றத்தில் தாமும் பொன் திட்டத்தை மேற்கொண்டுவிடுகின்றன.

யாராவது ஒரு ஞானி தோன்றி, பன்னாட்டுச் செலாவணி ஒன்றைக் கண்டுபிடித்துத் தரக்கூடாதா என்று பலர் கேட்பது நம் காதில் அடிக்கடி விழுகிறது.

இவ்விதம் கேட்பவர்கள் எதை விரும்புகிறார்களோ அது பொன் நாணயத் திட்டத்தின்கீழ் அப்படியே கிடைக்கிறது என்பதை அவர்கள் உணர்வதில்லை. இத் திட்டத்தின்கீழ் உள்ள நாடுகளெல்லாம், தங்கத்தோடு தம் செலாவணிகளை இணைத்து, அதன்மூலம் தமக்குள்ளும் தொடர்புகொண்டிருப்பதால், இவையெல்லாம் ஒரே வகையான பொதுச் செலாவணியையே கொண்டுள்ளன என்று குறிப்பிட முடியும். ஒரு நபரிடம் பவுன், டாலர், ஃபிராங்கு மார்க்கு முதலிய இவற்றுள் எது இருந்தாலும் எல்லாம் ஒரு வகையில் சமமானவையே. ஏனென்றால், இவற்றுள் ஒன்றைக் கொடுத்து இன்னொன்றை மாருத விகிதத்தில் எளிதில் மாற்றிக் கொள்ள முடியும்.

என்றாலும், பொன் நாணயத் திட்டத்தால் ஏற்பட்ட சில விளைவுகள் பல ஆண்டுகாலமாக அதனைப் போற்றுதற்கிடமின்றிச் செய்து விட்டன. போர்க்கால முதலாகக் கொஞ்சம் கொஞ்சமாக உருவாகி வந்த முறையொன்றையும், இப் பெயரிட்டு அழைக்கவிடாமல் இவ் விளைவுகள் தடுத்துவிட்டன; என்றாலும், இப் புதிய முறைக்கும், பொன் நாணயத் திட்டத்திற்கும் பொதுவான சில அம்சங்கள் உள்ளன. இவ்விதம் பொன் நாணயத் திட்டத்தின் சிறப்புக் குன்றியமைக்குரிய காரணங்களைப் பார்ப்போம்.

## 2. தேசிய வருமானங்களைச் சரிக்கட்டிக்கொள்ளுதல்

ஒரு நாட்டின் இறக்குமதிகளில் நிரந்தரமான மிகுதி ஏற்பட்டிருந்தாலும், அம் மிகுதியைச் சரிக்கட்டும் அளவிற்கு, அயல்நாட்டு

முதலீட்டு வட்டிகள், அயல்நாட்டுப் பிரயாணிகளின் செலவுகள் முதலியவற்றிலிருந்து அதற்குப் போதிய வருவாய் கிடைக்குமானால், அது தனது அயல்நாட்டுச் செலுத்துநிலையைச் சமனாக்கிக்கொள்ள முடியும் என்பதை நாம் அறிவோம். பின்வரும் குறிப்புகளிலிருந்து இதுபற்றி இன்னும் சில அறியலாம்; சுருக்கத்திற்காக, இறக்குமதி ஏற்றுமதிகளைப்பற்றிமட்டுமே நான் குறிப்பிடுகின்றேன்.

நீண்ட கால அடைவில், தனது ஏற்றுமதி வருமானங்களைக் கொண்டு சரிக்கட்டக்கூடிய அளவில், ஒரு நாடு தனது இறக்குமதி அளவுகளைக் கட்டுப்படுத்திக்கொள்ளுதல் வேண்டும். ஆனால், குறுகிய கால அடைவில், இந்த நாடு அதிகமாக இறக்குமதி செய்து கொள்ளலாம்; இதில் ஏற்படும் வித்தியாசத்தை, இதர நாடுகளிலிருந்து கடனாகவோ, நன்கொடையாகவோ, உதவி பெறுவதன் மூலமோ, அல்லது (தனது தங்க இருப்புகள் உட்பட) தனது சொத்துகளில் ஒரு பகுதியை விற்பதன்மூலமோ, சரிக்கட்டிக் கொள்ளலாம். என்றாலும், இவையெல்லாம் தற்காலிகக் கருவிகளாக மட்டுமே உதவும். இந்த நாடு நிரந்தரமாகத் தன் காலூன்றி நின்று சமாளிக்கவேண்டுமானால், தனது ஏற்றுமதிகளைக்கொண்டே இறக்குமதிச் செலவுகட்கு அளித்தல் வேண்டும்.

ஒரு நாட்டின் இறக்குமதிகள், தொடர்ந்து அதன் ஏற்றுமதிகளை விஞ்சிச் செல்வதாக வைத்துக்கொள்ளுவோம். தடையில்லா மாற்று வீதத்தின்கீழ், இந்த நாடு தனது செலாவணியின் மாற்று மதிப்பைக் குறைத்துக்கொள்ளுவதன் வழியாக, இதை உடனே நிறுத்தி விடமுடியும்; இதனால் இறக்குமதிப் பொருள்களின் விலைகள் உயரும். இவ் விலை உயர்வால் வாங்குவோரின் தொகை குறையும்; அதே சமயத்தில், இதர செலாவணிகளுடன் ஒப்பிடுகையில் ஏற்றுமதிப் பொருள்களின் விலைகள் குறைந்திருப்பதால், இன்னும் மிகுதியான ஏற்றுமதிகட்கு அவ் விலை உயர்வே தூண்டுதலாயிருக்கும். ஆனால், சம்பந்தப்பட்ட நாடுகள் எல்லாம் பொன் நாணயத் திட்டத்தின்கீழ் இருந்தால் இதை மேற்கொள்ளுதல் முடியாது. பொன் நாணயத் திட்டத்தின் முழுமையான நோக்கம், மாறுத மாற்று வீதங்களைப் பேணிவருவதுதானே! அப்படியானால், வேறென்ன வழி இருக்கிறது?

ஏதாவது ஒரு வழிதுறையைக் கண்டறியாவிட்டால், ஏற்றுமதியைவிட இறக்குமதி மிகுந்த நாட்டின் தங்கமெல்லாம் கரைந்து போய்விடும். இந்த நாடு, பொன் திட்டப்படி, தன்னிடம் கேட்கப்படும்பொழுதெல்லாம், மாறுத விலைவிகிதத்தில் பொன்னை விற்பதற்கு ஏற்கெனவே இசைந்திருக்கிறது. இதன் அயல்நாட்டுச் செலுத்து

நிலையில் ஏற்பட்டுள்ள இடைவெளியைப் பூர்த்தி செய்தற்காக, எப் பொழுதும் இதனிடம் தங்கம் தருமாறு கேட்கப்படும்; இதனால் அதன் தங்க இருப்புகளெல்லாம் சுருங்கிக்கொண்டேவரும்; இறுதி யில் தன்னிடம் தங்க இருப்பே அற்றுப்போய், வாக்களித்தபடி தங்கம் தரமுடியாது தடுமாறும் நிலைக்கு அரசாங்கம் அவலநிலையை அடைய நேரிடும். இவ்வித இழிநிலை ஏற்படாமல் தடுக்கவும், இங்ஙனம் தங்கமெல்லாம் வெளியேறுவதைத் தடுத்து நிறுத்தி, நிரந் தரமாக இந்த நாடு பொன் நாணயத் திட்டத்தில் நீடிக்கவும் வேண்டு மானால், அரசாங்கம் ஏதாவது ஒரு நடவடிக்கையை எடுத்தே ஆக வேண்டும்.

இந்த நடவடிக்கை பயனுள்ளதாய் அமையவேண்டுமானால், அது தேசிய வருமானப் பணத்தில் குறைவு (reduction in the money national income) ஏற்படுமாறு செய்தல்வேண்டும். செலவழித்தற்குத் தம்மிடம் குறைந்த பண இருப்புடைய மக்களால் மிகுதியான இறக்கு மதிப் பொருள்களை வாங்கமுடியாது. மேலும், உள்நாட்டு வருமா னங்களில் (கூலி விகிதங்கள் உட்பட) ஏற்படும் குறைவால், உள் நாட்டு விலைகளும் குறையும். இதனால், உள்நாட்டில் செய்யப்படும் பொருள்களின் விலைகள் குறையும்; இதனால், முன்னைவிட இப் பொழுது அதிக விலை கொடுத்து இறக்குமதிப் பொருள்களை வாங்கு தற்குப் பதிலாக, உள்நாட்டுப் பொருள்களைக் குறைந்த விலையில் வாங்கவே மக்கள் முற்படுவார்கள். இங்ஙனம், உள்நாட்டுப் பொருள் களின் விலை குறைவதால், அவற்றின் ஏற்றுமதிகள் அதிகமாவ தற்கும் வழி ஏற்படுகிறது.

இவ்விதம் பண வடிப்பு முறைகளை மேற்கொள்ளுவதால், ஒரு நாட்டின் பொருளாதார வாழ்விற்கு நலனைவிடத் தீமையே மிகக் கூடும் என்பது, பொன் நாணயத் திட்டத்திற்கு மாறாகக் கூறப்படும் பெரிய குற்றச்சாட்டாகும். இதற்கு மாறான, மற்றுமொரு பாரம் பரிய முறை ஒன்றுள்ளது. இதன்படி, பாங்கு வீதத்தை உயர்த் துதல் வேண்டும்; இதைத் தொடர்ந்து இதர வட்டி வீதங்கள் உயரும்; பணத்தின் கணியம் (அளவு) குறையும். ஆனால், தொழிற்சங்கங்கள் அனைத்தும் ஒருமுகமாகச் சேர்ந்து, தமது பணக்கூலிகளைக் குறைத் துக்கொள்ள மறுத்துவிட்டால், கூலிச் செலவுகள் குறையமாட்டா. இதற்குப் பதிலாக மிகக் கடுமையான வேலையின்மை ஏற்படக்கூடும். இவ்விதம் நாட்டின் பணவருவாயில் குறைப்பு ஏற்பட்டாலும், அது பணக் கூலிகளைக் குறைத்ததால் ஏற்பட்டதில்லை; வேலையின்மை யால் ஏற்பட்டதாகவே அமைகின்றது. நாட்டின் பொதுவான செல விடும் சக்தி குறைந்துவிட்டதால், குறைந்த அளவு தொழிலாளர் களே வேலைக்கு அமர்த்தப்பெறுவர்; நாட்டில் நிலவும் அதிகப்படி

யான வட்டி வீதங்களால், முதலீடு செய்தல் தடைப்படும். பொன் திட்டத்தில் ஒட்டியிருப்பதற்காக, நாட்டில் ஒரு மந்தநிலை உண்டாக் கப்பட்டுவிட்டது. இது ஓர் அவலமான முட்டாள்தனம் என்று திறனாய்வாளர்கள் கண்டிக்கின்றனர். இத்தகைய அவலநிலைக்கு ஆளாக்கும் பொன் நாணயத் திட்டம் போகட்டும்! ஒவ்வொரு நாடும் தனது சொந்தச் செலாவணிக் கொள்கையைப் பின்பற்றித் தன் நாட்டு மக்களுக்கு முழு வேலையுடைமையை அளிக்கட்டும். தங்கத் திட்டத்தில் ஒட்டியிருப்பதற்காக உள்நாட்டு மக்கள் வாழ்வைப் பங்கப் படுத்துவது நிற்கட்டும்.

ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையைச் சமப்படுத்து தற்காக, அது தனது தேசிய வருமானத்தை எந்த அளவுக்குக் குறைத்துக்கொள்ளவேண்டுமென்பது, அது இறக்குமதி செய்யும் பொருள்களைப்பொறுத்தே பெரும்பாலும் அமையும். அப் பொருள் கள் ஆடம்பர அலங்காரப் பொருள்களாயிருந்தால், நாட்டின் வரு மானத்தில் மேற்கொள்ளப்பெறும் ஓரளவு குறைவால், அவற்றின் இறக்குமதி அளவுகளில் பேரளவு குறைவு ஏற்படக்கூடும்.[1] ஆனால், அவையெல்லாம், உள்நாட்டுப் பொருள்களால் எளிதில் மாற்றி அமைக்கவியலாத உணவுப் பண்டங்களாகவே அமைந்துவிட்டால், அவற்றின் இறக்குமதி அளவில் 10 சதவீதம் குறைக்கவேண்டு மென்றாலும்கூட, நாட்டின் தேசிய வருமானத்தில் பெரும்பகுதியைக் குறைத்துக்கொள்ளவேண்டிய அவசிய நிலை ஏற்படும். இத்தகைய நிலையில், பணவடிப்பிற்கு எதிராகச் சொல்லப்படும் குற்றச்சாட்டு இன்னும் வலுப்பெறுகிறது. பிரிட்டிஷ் இறக்குமதிப் பொருள்க ளெல்லாம், பொதுவாக இந்த நிலையில்தான் அமைந்துள்ளன.

ஆனால், நீண்டகால அடைவில், ஒரு நாடு தன்னால் எவ்வளவு செலுத்தமுடியுமோ அவ்வளவு பொருள்களைமட்டுமே இறக்குமதி செய்துகொள்ளமுடியும் என்ற வன்மையான உண்மையிலிருந்து விதிவிலக்கே பெறமுடியாது. ஒரு நாட்டின் ஏற்றுமதிப் பொருள் களுக்கு உரிய உலக விலைகளில்மட்டும் மிகுதியான வீழ்ச்சி ஏற்பட் டிருப்பதாகவும், அதன் இறக்குமதிப் பொருள்கள் அதேநிலையில் இருப்பதாகவும் வைத்துக்கொள்ளுவோம். இந்த நாட்டின் வாணிப மாற்றுவீதங்கள் இதற்கு முற்றிலும் பாதகமாக அமைந்துள்ளன. இந்த நாட்டின் நிலை, முன்பைவிட இப்பொழுது இன்னும் மோசமாகி யுள்ளது. ஏதாவதொரு வழியில் இதன் உண்மை வருமானம்

[1] இதைப்போல, அமெரிக்காவில் 1938-ல் நிகழ்ந்தது. அதன் அலங்காரப் பொருள்களின் நுகர்ச்சி அளவில் ஏற்பட்ட 4 சதவிகிதக் குறைவால், அப் பொருள்களின் மொத்த இறக்குமதியில் 25 சதவிகிதம் குறைந்தது. (ஆனால், 1953-54, 1957-58, 1960-61 ஆகிய ஆண்டு விடுமுறைக் காலங்களில் அமெரிக் காவின் இறக்குமதிகள் ஓரளவே குறைந்தன.)

குறைந்தே ஆகவேண்டும்; இதன் தேசிய வருமானத்தில் 75முதல் 80 சதவீதம் தொழிலாளரிடமிருந்து பெறப்பட்டால், அவர்களது உண்மை வருமானத்தில் பொதுவான வீழ்ச்சி கட்டாயம் ஏற்பட்டே தீரும். இதை அத் தொழிலாளர்கள் ஏற்காவிட்டாலும், தவிர்த்துக் கொள்ளமுடியாது. இக் கூலிக் குறைவுகள் காரணமாக, வேலை யின்மையை ஏற்படுத்தி, அதனுல் நிலைமையை இன்னும் மோசமாக்கி விடாமல் இருக்க என்ன செய்வதென்பதுதான் இங்குள்ள முக்கிய மான பிரச்சினையாகும்.

இப் பிரச்சினைக்கு உரிய தீர்வு பெரும்பாலும், தொழிற்சங்கங் களின் மனப்போக்கை ஒட்டியே அமைகின்றது. அவை, தமது தொழிலாளர்களின் பணக்கூலிகளைக் குறைத்துக்கொள்ள இசையா விட்டாலும், தமது வாழ்க்கைத்தரச் செலவுகளை, அவற்றிற்கு இணை யான சம்பள உயர்வு கேட்காமல், உயர்த்திக்கொள்ள ஒப்புக்கொள்ளு வார்கள் என்று கருதப்படுகின்றது. இக் கருத்தின்படி இறக்கு மதிகளின் விலைகளை உயர்த்துவதன்மூலம் ஒருவகைச் சமநிலையை அடையமுடியும். தடையில்லாத மாற்றுவீதமும் வேலையின்மையைத் தவிர்த்துவிடும்; ஏனெனில், இம் மாற்றுவீதத்தில், செலாவணியின் மாற்று மதிப்புக் குறைவதால், இறக்குமதி விலைகள் உயர்கின்றன; இதனுல் இறக்குமதிகட்கான தேவை சுருங்கிவிடுகின்றது; பண வருவாய் அதே அளவில் நின்றுவிடுகின்றது. தவிரவும், இறக்கு மதிப் பொருள்களின்மீது பொதுவான சுங்கத் தீர்வை விதிப்பதன் மூலமும் (இதன்மூலமாக இறக்குமதிகட்கெல்லாம் பொதுவான உதவி அளிக்கலாம்) பொன் நாணயத் திட்டத்தில் தொடர்ந்து நீடிக்க இய லும். இதன்மூலம், பண வருவாய்களைக் குறைத்துக்கொள்ளாமலே, இறக்குமதி ஏற்றுமதிகளைச் சமப்படுத்திவிடுதல் கூடும்.[1]

ஆனுல், மேற்குறித்த கருத்திற்கு எவ்வித நடைமுறை ஆதார மும் இல்லை. ஆனுல், நடைமுறைப்போக்கு என்னவெனில், 'தொழிற் சங்கங்கள், வாழ்க்கைத் தரச் செலவுகள் குறையும் காலத்தில், தமது கூலிகளையும் அதற்கொப்பக் குறைத்துவிடாது பழைய நிலையிலேயே பேணிவரவேண்டுமெனப் போராடுகின்றன. அதைப்போல, இப் பொழுது வாழ்க்கைத்தரச் செலவுகளில் சாதாரண உயர்வு ஏற்பட் டாலும், அதற்கொப்ப கூலியும் உயரவேண்டுமென வேலைநிறுத் தம் செய்வதற்கு எப்போதும் விருப்பத்துடன் இருக்கின்றன' என்பதே ஆகும்.[2] இதிலிருந்து, இப் பிரச்சினையைப் பொன்

[1] 1931-ல் கிரேட் பிரிட்டன், பொன் திட்டத்தில் தொடர்ந்து இருக்க உதவும் வழியாக இக் கருத்தை, மாக்மில்லன் அறிக்கையில் கீன்ஸ் குறிப்பிட்டுள்ளார்.

[2] 1938, செப்டம்பரில் வெளியிடப்பட்ட 'Economic Journal' இதழில், திரு- J. S. டன்லப் என்பவர் எழுதிய 'உண்மைக் கூலி பணக் கூலி விகிதங்களின் இயக்கங்கள்' என்ற கட்டுரை. 'The Movement of Real and Money Wage Rates.'

நாணயத் திட்டத்தைவிட, தடையில்லாத நாணயமாற்றுத் திட்டத்தாலோ மாற்றுக் கட்டுப்பாட்டு முறையாலோ எவ்வகையிலும் சிறப்பாகத் தீர்வுசெய்ய முடியாது என்பது தெளிவாகின்றது.

தொழிற்சங்கங்கள் எப்போதும் 'உண்மைக்'கூலி விகிதங்களைப் பேணிவருதற்கே முனைந்து நிற்கும் என நாம் கருதிக்கொண்டால், இப் பிரச்சினைக்கு எத் தீர்வும் சாத்தியமானதாகத் தோன்றுது. ஒரு நாட்டின் உண்மை வருமானத்தில் கணிசமான வீழ்ச்சி ஏற்படும் பொழுதெல்லாம், எத்தகைய நாணயமாற்று முறையை மேற்கொண்டிருந்தாலும், அந்த நாட்டில் மிகுதியான வேலையின்மை ஏற்பட்டே தீரும்; ஏனென்றுல், முன்பிருந்த அதே அளவு உண்மைக் கூலிகளைப் பெற்றுவரும் தொழிலாளர்கட்கு வழங்கும் அளவிற்குப் போதுமான பொருட்கள் இப்போது கிடைக்காதுபோய்விடும். வேலையில் நீடித்து வருவோர்மட்டும் தமது உண்மைக் கூலிகளை அப்படியே பேணிவருவார்கள். என்றுலும், அவர்கள் தமது சகதொழிலாளர்களிடம் வேலையின்மையை உண்டாக்கிய பின்னரே, இந்த அளவு உண்மைக் கூலியைப் பேணிவருதற்கு இயலும்.

மூன்றுவதாக, இன்னொரு வழியும் சாத்தியமாகத் தோன்றுகிறது. இதன்படி, தொழிலாளர்களிடம் சமரசமாகப் பேசி, நாட்டில் நிலவும் சூழ்நிலையை எடுத்துச்சொல்லி அவர்களைத் திருப்திப்படுத்துவதன்மூலம் (ஹாலந்தில் செய்ததைப்போல) தமது பணக் கூலிகளைக் குறைத்துக்கொள்ளுமாறு அவர்களை இசைவிக்க முடியும். இக் கருத்தின்படி, ஒரு நாடு, பொன் திட்டத்தில் தொடர்ந்து இருப்பதற்காகத் தன் நாட்டில் வேலையின்மையை மிகுதிப்படுத்தாமலே, அதன் பண வருவாய்களைக் குறைத்துக்கொள்ள முடியும்.

மேற்குறித்த மூன்று கருத்துகளிலும் ஓரளவு உண்மை இருக்கிறது என்பதையும், தொழிலாளர்களின் மனப்போக்கு, நேரம், இடம், சூழ்நிலைகட்குத் தக்கபடி மாறுதலடையும் என்பதையும் நினைவிற் கொள்ளவேண்டும்.

பொன் நாணயத் திட்டம், உள்நாட்டு வருமானங்களை அவ்வப்போது சரிக்கட்டிக்கொள்ளச் செய்கிறது என்ற கருத்தை மீண்டும் நினைவிற்குக் கொணர்வோம். இச் சரிக்கட்டுதல்கள் எல்லாம், இறக்குமதி ஏற்றுமதிகளைச் சமன்செய்துகொள்ளுதற்குரிய தேவையைப் பொறுத்தே அமைகின்றன; உலக வருமானத்தில் ஒரு நாட்டிற்கு உரிய பங்கானது, உலக உற்பத்தியில் அதற்குரிய பங்கைப் பிரதிபலிப்பதாக அமையவேண்டும் என்ற கொள்கையின்

அடிப்படையில் இவை தங்கியுள்ளன.[1] இந்த நாடு (தானே ஆக்கிக் கொள்ளும் பொருள்கள் உட்பட) உலக உற்பத்தி அளவிற்கும் ஆக்கி அளித்துள்ள அளவின் மதிப்பைக்கொண்டே உலகத்தின் சரக்குகளில் இதற்குள்ள உரிமையையும் மதிப்பிடமுடியும். இதே கொள்கையை, ஒரு நாட்டில் உள்ள பல்வேறு மாவட்டங்களின் உற்பத்தி அளவுகளையும் மதிப்பிடப் பயன்படுத்திக்கொள்ளலாம். கிரேட் பிரிட்டனின் மொத்த உற்பத்தியில் லங்காஷயரின் பங்கு 5 சதவீதம் என்றால், பிரிட்டனின் தேசிய வருமானத்திலும் அதன் பங்கு 5 சதவீதம் என்று எளிதாகச் சொல்லிவிட முடியும்.

ஒரு மாவட்டத்தின் உற்பத்தியில் தராதரமாக உயர்வு ஏற்பட்டிருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். இதற்குக் காரணங்கள் பலவாக இருக்கலாம். இம் மாவட்டத்தில் மிகுதியான தொழிலாளர்கள் குடியேறியிருக்கலாம்; அல்லது உற்பத்தி முறையில் திறமை மிகுந்திருக்கலாம்; அல்லது இந்த மாவட்டத்தின் உற்பத்திப் பொருள்கட்குமட்டும் தேவை அதிகரித்ததன் காரணமாக அப் பொருள்களின் விலைகளும் உயர்ந்திருக்கலாம். இவ்விதக் காரணங்களால், இம் மாவட்டத்தின் தராதர வருமானம் உயரும்; இதற்கு மாறான நிலைகள் ஏற்பட்டால் அவ் வருமானமும் குறையும். இது நாடுகளிடையேயும் பொருந்தும். பொன் திட்டத்தின்கீழ், ஒவ்வொரு நாட்டின் தங்க இருப்பிற்கும், அதன் பண வருவாய்க்கும் இடையே வரையறுத்த ஒரு விகிதாசாரம் உள்ளது. மொத்தத் தங்க இருப்பு அதே நிலையில் இருக்கையில், ஒரு நாட்டின் தராதர உற்பத்தியின் அளவுமட்டும் உயர்ந்தால், அந்த நாடு மிகுதியாகத் தங்கத்தை வாங்கித் தனது தேசிய வருமானத்தை உயர்த்திக்கொள்ள முற்படும்; அந்த நாட்டின் தராதர உற்பத்தியின் அளவு குறைந்தால், அது தனது தங்க இருப்பை இழந்து, தனது தேசிய வருமானத்தையும் குறைத்துக் கொள்ளவேண்டியதேற்படும்.

தேசிய வருமானங்கள், தேசிய உற்பத்திகளின் மதிப்புகளைப் பிரதிபலிக்கின்றன என்ற பொதுவிதியானது, பன்னாட்டுக் கடன்களாலும், நிதிக் கொடைகளாலும் மாற்றியமைக்கப்பெற்றுள்ளது. A என்ற நாடு, B என்ற நாட்டிடமிருந்து கடனோ, நிதி உதவியோ பெறமுடியுமானால், அது தனது உற்பத்தி அளவைவிட அதிகமாகச் (B குறைவாக) செலவழித்துக்கொள்ளமுடியும். கடந்த போருக்குப் பின்னர் உள்ள பதினான்கு ஆண்டுகளில், அமெரிக்கா இதர உலக நாடுகள் பலவற்றிற்கு, 70 மில்லியன் டாலர்களுக்கு மேற்பட்ட

[1] இத்துடன், இந்த நாட்டிற்கு வெளிநாடுகளிலிருந்து வரும் நிகர வரவுகளாகிய (அல்லது இது செலுத்தவேண்டியவற்றைக் கழித்துவிட்டவும்) வட்டிகள், இலாபங்கள், இலாப ஈவுகள் ஆகியவற்றைக் கூட்டிக்கொள்ளவும்.

தொகையைக் கடனுகவும் நிதி உதவியாகவும் அளித்துள்ளது. இத் தொகை, அமெரிக்காவின் ஏற்றுமதி உபரியையெல்லாம் மிஞ்சிவிட்ட தால், அது தனது தங்க இருப்புகளிலிருந்து ஒரு பகுதியையும் எடுத்து ஏற்றுமதி செய்துள்ளது.

## 3. பொன் திட்டத்தின்கீழ் விலை அளவுகள்

பொன் திட்டத்தைப் பல நாடுகள் பின்பற்றுகையில், அவை அனைத்தும் பொதுவான ஒரு செலாவணியில் பங்குகொண்டிருப்ப தாகக் கருதலாம். அவை தமக்குள் கொண்டிருக்கும் நாணயமாற்று வீதங்கள் மாருதனவாய் நிலைத்திருக்கின்றன. பன்னுட்டு வாணிகத் தில் பரிமாறப்படும் சரக்கு ஒன்றின் விலை, டாலர்களில் $x$ சதவீதம் உயர்ந்தாலோ, கூடிஞலோ அந்த அளவு உயர்வும் தாழ்வும், இதர பொன் திட்ட நாணயங்களாகிய பவுன், பிராங்கு, மார்க்குகள் ஆகிய வற்றிலும் ஏற்படும். ஒரு நாடு, தன் நாட்டில் இறக்குமதியாகும் பொருள்களுக்கு மிகுதியான சுங்கத் தீர்வைகளும், இதர வரிகளும் விதிப்பதன்மூலம், அப் பொருள்களுக்கு உரிய உள்நாட்டு விலை அளவை, இன்னெரு நாட்டில் இருப்பதைவிட அதிகப்படுத்திக் கொள்ளலாம்; ஆனல், அப்படி உள்நாட்டு விலை அளவை அதிகப் படுத்திக்கொண்டபோதிலும் (ஆதலால், ஒவ்வொரு தொழிலாளியின் உற்பத்தி அளவும், பண வருவாயில் ஒரே மாதிரியாக இருந்தால்) அது தனது ஏற்றுமதிகளின் மதிப்புக்குத் தக்கபடி தனது இறக்குமதி களைக் கட்டுப்படுத்திச் சமாளித்துக்கொள்ளவேண்டும். ஆனலும், இதிலிருந்து ஒன்று தெளிவாகின்றது. பொன் திட்டத்தில் உள்ள எல்லா நாட்டு விலை அளவுகளும் ஒரே மாதிரியாகவே உயர்ந்து தாழ முற்படுகின்றன; ஏனென்ருல், அவற்றின் பொருள்கள் அனைத்தும், தங்கம் என்ற ஒரே செலாவணிப் பொருளோடு உறுதியாக இணைக் கப்பெற்றுள்ளன. எனவே, அந் நாடுகளின் வாங்கும் சக்தி தங்கத் தின் வாங்கும் சக்தியோடு மாறிமாறி அமைகின்றது.

இதற்கு முந்திய உட்பிரிவில், பொன் திட்டத்தைப் பின்பற்றும் நாடுகள், தமது தேசிய உற்பத்திகளின் தராதர மாறுதல்களுடன் பொருந்தி அமையவும், தமது செலாவணி மதிப்பைத் தங்கத்தின் வீதத்தில் மாருது உறுதியாகப் பேணிவருகையிலேயே இறக்குமதி ஏற்றுமதிகளைச் சமப்படுத்திக்கொள்ள உதவவும், அவ்வப்போது தமது தேசிய வருமானங்களிலும் மாறுதல்களை ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் என்பதை விளக்கினேன். இம் மாறுதல்கள் எல்லாம் ஒன்றிற்கு ஒன்று தொடர்புடைய தராதர மாறுதல்களே ஆகும்— அதாவது, ஒரு நாட்டின் தேசிய வருமானத்திற்கு இணையாக இன் னெரு நாட்டின் தேசிய வருமானத்தையும் செம்மையுற அமைத்துக்

கொள்ளுதல் ஆகும். இனி, இன்னுமொரு கேள்வியைப் பார்ப்போம். தங்கத்தின் வாங்கும் சக்தியை நிர்ணயிப்பது எது? அதாவது, பொன் திட்ட முறை முழுவதிலும் உள்ள எல்லா விலை அளவுகளையும் நிர்ணயிப்பது எது?

விலை அளவுகளை ஒழுங்கு செய்ய எவ்வித நெறிமுறையும், கட்டுப்பாடும் இல்லாதபோது, அவை தங்கத்தின் அளிப்பையும், பணத்தின் தேவையையும் சார்ந்து அமைகின்றன புதிய சுரங்கங்களைக் கண்டுபிடித்து அதிகமாகத் தங்கத்தைத் தோண்டி யெடுப்பதாலும், புதுத் தொழில்நுட்ப முறைகளைக் கையாண்டு சுரங்கச் செலவுகளைக் குறைத்துவிடுவதாலும், தங்கத்தின் அளிப்பு மிகுவதால் விலைகளின் அளவுகளை அதற்கேற்ப உயர்த்த முற்படும். ஆனால், சரக்குகளின் உற்பத்தி அளவுகள் மிகுந்துவிட்டால், அவை விலை அளவுகளைக் குறையச் செய்யும். கடந்த பெரிய மந்த காலத்தில் நிகழ்ந்ததைப்போல, பணத்திற்குரிய தேவையில் பொதுவான உயர்வு ஏற்பட்டால், (அதாவது, பணத்தின் புழக்க வேகத்தில் வீழ்ச்சி ஏற்பட்டால்) அது பொதுவாக விலை அளவுகளைக் குறையச் செய்யும்.

பொன் திட்டத்தின் நலன்களில் ஒன்றாகக் கருதப்படுவது என்னவெனில், இது நாட்டின் நிதித் துறைக் கொள்கையை அரசியல் வாதிகளின் பிடிப்பிலிருந்து அகற்றிவிடுகிறது. அதற்கு மாறாக, நாட்டின் நிதித்துறைக் கொள்கையின் முழுக் கட்டுப்பாடுகளும் அவர்களிடம் இருந்தால், மிகுதியான பண வருவாய் வேண்டுமென வற்புறுத்தும் பல குழுக்களின் நெருக்கடிகட்கு அவர்கள் இசைய வேண்டியதிருக்கும்; இதனால் நாட்டின் வருமானத்தை மிகுதிப் படுத்தவேண்டுமென்பதற்காக, (வரிகளை உயர்த்தும் பலர் விரும்பாத முறைக்குப் பதிலாக) அதிகமாகப் பணத்தைமட்டும் உற்பத்தி செய்ய முனைந்து, நாட்டில் ஈடுகொடுக்க முடியாத பண வீக்கத்தை உண்டாக்கிவிடுவார்கள். ஆனால், தங்கத்தோடு இணைக்கப்பெற்ற செலாவணி எல்லோரது நம்பிக்கைக்கும் உரியதாயிருக்குமென்று விவாதிக்கப்படுகின்றது. ஆம், அவ்விதம் இணைக்கப்பெற்ற செலாவணி தரமானதுதான். ஏனென்றால், பொன் நாணயத் திட்டத்தில் இணைந்துள்ள இதர செலாவணிகளுடன் இது தொடர்புகொண்டிருப்பதால், உள்நாட்டு ஊடுருவல்களால் இதன் தரம் சீர்குலைவதில்லை.

ஆனால், இன்னொன்று; இதைப் பொன் திட்டத்தில் உள்ள நலன் என்று கருதினாலும் சரி, தீங்கு என்று கொண்டாலும் சரி; பொன் திட்டத்தில் ஒரு நாடு தனது நிதித்துறைக் கொள்கைகளைத் தன் விருப்பம்போல எப்படிவேண்டுமானாலும் மாற்றி அமைத்துக்

கொள்ள இயலாது என்பதே அது. இந்த நாடு, ஏனைய பொன் திட்ட நாடுகளுடன் பொதுவான விலை அளவில் பங்கு பெற்றுள்ளது. எனவே, இது அவற்றோடு ஒத்து இயங்குதல் வேண்டும். ஆனால், இந்தப் பொதுவான அளவில் ஏற்படும் மாற்றங்கள் எல்லாம் விதிப்படி நடக்கட்டும் என்று குருட்டுத்தனமாக இருந்துவிட வேண்டியதில்லை. பொன் திட்டத்தில் உள்ள நாடுகள், தமக்குள்ளே நிலவும் பொதுவான விலை அளவுகளை ஒழுங்கு செய்து கட்டுப்படுத்திக்கொள்ளுகின்றன. தங்கம், அந் நாடுகளின் எசமானன் அன்று, எளிய வேலையாள். எனவே, பொன் திட்டம் முழுவதற்குமே ஒரு நிதித்துறைக் கொள்கை அமைந்துவிடுகிறது.

இடையூறெல்லாம் 'இந் நாடுகட்கு இடையில்' மட்டுமே உண்டாகின்றன. பொன் திட்டத்தில் பல நாடுகள் இருந்தால், மாறாத மாற்றுவீதங்கள் மிகுதியான நாடுகளில் நிலைபெற்றிருக்கும்; இதனால் மிகுதியான நலன்கள் ஏற்படும். ஒரு தொலைபேசி அமைப்பை நிறுவுவதுபோல இதையும் கருதவேண்டும். தொலைபேசி முறையில் ஒரே ஒரு நபர்மட்டும் இணைப்புக்கொண்டிருப்பதால், அடையும் பலனைவிட, அதில் பல நபர்கள் இணைப்புக் கொண்டிருந்தால் ஒருவர்க்கொருவர் உறவுப் பாலமாக அது பெரிதும் அமைகின்றதல்லவா? என்றாலும், ஒரு பொதுக் கொள்கையைத் தொடர்ந்து அப்படியே பின்பற்றப் பல நாடுகளால் முடிவதில்லை என்ற இடர்ப்பாடும் இம் முறையில் ஏற்பட்டுவிடுகிறது. நடைமுறையில், நிதித்துறைக் கொள்கைகளை ஒரு சில முக்கியமான நாடுகளே நிர்ணயிக்கின்றன; ஏனைய நாடுகள் அனைத்தும் ஏதும் வழியின்றி அவற்றை அப்படியே பின்பற்றுகின்றன.

உதாரணமாக, இத் திட்டத்தின்கீழ் உள்ள நாடுகளில் ஓரளவு தேவையை விரிவாக்குவது விரும்பத்தக்கது என்பதைப் பொதுவாக எல்லோரும் ஏற்றுக்கொள்ளுவதாக வைத்துக்கொள்ளுவோம். ஒவ்வொரு நாடும் தனது தங்க இருப்பின் அடிப்படையில், தனது பாங்குச் செலாவணியின் பரிமாணத்தைப் பெருக்கிக்கொள்ளமுடியும். ஒன்றையொன்று அந் நாடுகள் அடியொற்றிச் சென்றால், அவை அனைத்தும் மொத்தமாகப் பணவீக்கத்தை உண்டாக்கிக்கொள்ளலாம்; அதேசமயத்தில் ஒரு நாடு இன்னொரு நாட்டிடம் தங்கத்தை இழக்காது; மாற்றுவீதங்களை ஒரே நிலையில் பேணிவரும்.

அவையெல்லாம் ஒன்றாக விரிவடையமுடியும். ஆனால், இதர நாடுகளைவிட, ஒரு நாடுமட்டும் தன் மனம்போல அதிகமாக விரிவடைந்துவிட்டால் அதன் தங்க இருப்புகளின் இழப்பால், அதன் போக்குக் கட்டுப்படுத்தப்பெறும்; அது இதர நாடுகளோடு ஒத்து

இயங்கவேண்டியதிருக்கும் அல்லது பொன் திட்டத்தை விட்டே வெளியேறிவிடுமாறு நெருக்கத்திற்கு உள்ளாகவேண்டியதிருக்கும். உதாரணமாக, இந்நிலை 1936 செப்டம்பரில் ஃபிரான்சுக்கு ஏற்பட்டது. புளூம் பரிசோதனைப்படி (Blum Experiment) கூலிகள் திடீரென உயர்த்தப்பெற்றன; இதனால் உள்நாட்டு விலைகளும் உயர்ந்தன. ஆகையால், ஃபிரான்சு தங்கத்தை இழந்து, தனது செலாவணியை மதிப்பிறக்கம் செய்யவேண்டிய நிலைக்கு ஆளாகியது.

இவ்விதமாகப் பொன்திட்டம், தனது உறுப்பு நாடுகளிடையே ஒருவகை ஒழுங்கை உண்டாக்கியிருக்கிறது. ஒரு நாடு தன்னுடைய பண வருமானத்தைமட்டும், அதற்கு இணையான உற்பத்திப் பெருக்கம் இன்றி மிகுதிப்படுத்திக்கொள்ள முடியாது. இதர நாடுகளும் அவ்வாறு செய்தால்தான் இந்த நாட்டிற்கும் அது சாத்தியமாகும். தனது உற்பத்தி அளவுகளில் குறிப்பிடத்தகுந்த குறைவு ஏற்பட்டு விட்டால், அதனால் தனது பண வருவாயைமட்டும் பேணிவருதற்கு இயலாது போய்விடும். ஆனால், உற்பத்தி அளவு குறைந்தாலும், பண வருவாயைப் பேணியே வரவேண்டுமென ஒரு நாடு பிடிவாதமாக நின்றால், அந்த நாடு அயல்நாடுகளிடமிருந்து கடன்வாங்கியோ அல்லது தனது சொத்துகளில் சிலவற்றை (அதன் அயல்நாட்டு முதலீடுகள் உட்பட) விற்றோ பொன்திட்டத்தில் தொடர்ந்து இருந்துவரமுடியும்; இந்நிலை தொடர்ந்து நீடித்தால், அந்த நாடு பொன் திட்டத்தைவிட்டு நீங்கித் தனது சொந்த முறையை அமைத்துக்கொள்ள வேண்டியதிருக்கும், அல்லது தனது இறக்குமதிகளைக் கட்டுப்படுத்திக்கொள்ளவோ, அல்லது நாணயத்தை மதிப்பிறக்கிக் கொள்ளவோவேண்டிய நிலை ஏற்படும்.

## 4. மதிப்புக் குறைப்பு (Devaluation)

ஒரு நாடு தனது செலாவணிக்குரிய பொன் சமன்பாட்டைக் குறைத்துக்கொண்டு, தனது செலாவணியின் ஓர் அலகை, முன்பை விடக் குறைந்த எடையுள்ள தங்கத்திற்குச் சமமாக அமைத்துக் கொண்டால், அது தனது நாணயத்தின் மதிப்பைக் குறைத்துக் கொள்ளுகிறது எனலாம். இதனால், அந்த நாடு, தனது சொந்தப் பணத்தின் வீதத்தில், தங்கத்தின் விலையை உயர்த்திவிட்டுத் தனது பணத்தின் மதிப்பைக் குறைத்துக்கொள்ளுகிறது. மதிப்பிறக்கம் சாதாரணமாக ஒரேநாளில் ஏற்பட்டுவிடும். ஆனால், மதிப்பிறக்கம் செய்த ஒரு நாடு, பொன் திட்டத்தைவிட்டு நீங்கி, அதற்கப்புறம் குறைவான சமன்பாட்டுடன் மீண்டும் திரும்பிவரலாம். அமெரிக்கா, இவ்விதம், 1933 வசந்தகாலத்தில் ஓர் அவுன்சு தங்கம் 20·67 டாலராக இருந்தபோது பொன் திட்டத்தைவிட்டு நீங்கி, 1934ஆம்

ஆண்டுத் தொடக்கத்தில் அதன் விலை 35 டாலராக இருந்தபோது மீண்டும் திரும்பிவந்தது. 1949 செப்டம்பரில், ஸ்டெர்லிங்கின் மதிப்புக் குறைக்கப்பட்டது. அமெரிக்காவின் டாலர் வீதத்தில் வெளியிடப்பெற்றது; அதாவது, ஸ்டெர்லிங்கின் மாற்றுவீதம் ஒரே நாளில் 4·03 டாலரிலிருந்து 2·80 டாலருக்குக் குறைக்கப்பட்டது.

அதிகமாக இறக்குமதி செய்து (அல்லது குறைவாக ஏற்றுமதி செய்து) வருவதால் மிகுதியாகத் தங்கத்தை இழக்கவேண்டிய நிலையில் உள்ள ஒரு நாட்டிற்கு உரிய அற்புதமான தீர்வு முறையாக மதிப்புக் குறைப்பு முறை தோன்றக்கூடும்; ஆனால், இதன் விளைவாக நாட்டில் வேலையின்மை ஏற்படும் என்ற அச்சத்தால் பண வடிப்பு செய்யப்பெறுவதில்லை. உள்நாட்டு நாணய மதிப்புக் குறைப்பு என்ற ஒரே வீச்சில், அந்த நாட்டின் இறக்குமதி விலைகள் உயர்த்தப்படுகின்றன; இதனால் அவற்றின் அளவுகள் குறைந்து விடுகின்றன. அதே சமயத்தில், அதன் ஏற்றுமதிப் பொருள்கள் இதர செலாவணிகளில் குறைந்த விலைக்குத் தரப்படுவதால் அவற்றின் ஏற்றுமதி அளவுகள் பெருகிவிடுகின்றன. இதனால், தங்கம் வெளியேறுவது உடனடியாகத் தடுக்கப்பட்டு, தங்கம் உள்ளே வருவது மிகுதியாக்கப்படுகிறது. இதுவரை, பற்றுக்குறையாக இருந்த இதன் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் உடனே உபரிநிலை தோன்றுகிறது. அதே சமயத்தில், இந்த நாடு பொன் திட்டத்தில் (முன்பைவிடக் குறைந்த சமன்பாட்டளவாயினும்) தொடர்ந்து இருப்பதால் மாறாத மாற்றுவீதங்களைப் பேணுவதால் உள்ள நலன்களையும் பெற்றுக்கொள்ளுகிறது.

நாணய மதிப்புக் குறைப்பின் நல்ல விளைவுகளை எளிதில் சீர்குலைக்கும்வகையில், கூலிகளும் இதர பண வருவாய்களும் உயராதவரை, மேற்குறித்த நலன்கள் மிகச் சிறந்தனவாகவே தோன்றுகின்றன. அதற்கு மாறாக, கூலி விகிதங்களும் பண வருவாய்களும் உயர்ந்துவிட்டால், இறக்குமதிப் பொருள்களுக்கு உரிய தேவை மீண்டும் ஏற்பட்டுவிடும்; ஏனென்றால், மக்களிடம் செலவழித்தற்குப் போதிய பண இருப்பு வந்துவிடுகிறதல்லவா? நாணய மதிப்பைக் குறைத்ததால் தனது ஏற்றுமதித் தொழில்களுக்குச் செய்வித்திருந்த போட்டி அனுகூலங்கள், அவற்றின் ஆக்கச் செலவு மிகையால் பயனின்றிப் போய்விடும். சில நாட்களுக்குப் பின்னர், நாடு பழைய நிலைக்கே திரும்பிவிடும்; முந்தி இருந்த அதே அளவு அயல்நாட்டுச் செலுத்துநிலைப் பிரச்சினையை மீண்டும் அது எதிர்நோக்கவேண்டியதிருக்கும்.

எனவே, மதிப்புக் குறைப்பு என்பதை முற்றிலும் உதவக்கூடிய ஒரு தீர்வு என்றும் கருதலாம்; அல்லது அது ஒரு தீர்வாகவேமாட்

டாது என்றும் கொள்ளலாம். இதை அடிக்கடி பயன்படுத்திக் கொள்ளக்கூடிய ஒரு பரிகாரமாகக் கருதிவிடக்கூடாது. ஒரு நாடு நாணய மதிப்புக் குறைப்புச் செய்துகொள்ளுவதைத் தனது பழக்க மாக்கிக்கொண்டால், அதன் செலாவணிமீது மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கை சிதைந்துவிடும். அந்த நாடு எப்பொழுதெல்லாம் அயல் நாட்டுச் செலுத்துநிலைச் சிக்கல்களுக்கு உள்ளாகிறதோ அப்பொழு தெல்லாம் மீண்டும் தனது நாணயத்தை மதிப்புக் குறைத்துக் கொள்ளவே முற்படும் என்ற தப்பெண்ணம் பரவிவிடும். இதனால், இந்த நாட்டில் சொத்திருப்புகள் உடைய அதன் சொந்த மக்களும், அயல்நாட்டவரும், தமது மூலதனங்களை இந்த நாட்டின் செலா வணி முறையிலிருந்து, தாம் பாதுகாப்பானதாகக் கருதும் வேறொரு செலாவணி முறைக்கு மாற்றிக்கொள்ள முற்படுவார்கள். இங்ஙனம் மூலதனம் வெளியேறுவதால், அதன் தங்க இருப்பும் வெளியேறும்; இதன் விளைவாக அது பொன் திட்டத்தைவிட்டே வெளியேறிவிட வேண்டிய நெருக்கடி நிலை ஏற்படும்; அல்லது மீண்டும் மதிப் பிறக்கம் செய்துகொள்ள வேண்டியதிருக்கும். இதற்கு மாறாகச் சூழ் நிலையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்தி இந்த நாடு நிலையான பொருளாதாரக் கட்டுக்கோப்பைப் பெற்றிருக்க முடியும்.

## 5. பொன் நாணயத் திட்டத்தின் நலன், தீங்குகள்

பொன் திட்டத்தில் உள்ள நாடுகளிடையே மாறாத மாற்று வீதங்களை அமைத்தளிப்பதே பொன் திட்டத்தின் சிறந்த நலன் ஆகும். இதனால், மாற்றுவீதங்களில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளால் நேரக்கூடிய ஆபத்துகள் நீக்கப்பட்டுவிடுவதால் வாணிகர்கட்கும் முதலீடு செய்வோர்க்கும் இத் திட்டம் ஓர் உண்மைக் கொடையாக உதவுகிறது. ஆகையால், பன்னாட்டு வாணிபமும் சிறப்புத் தேர்ச்சி யும் பெருகவும், சர்வதேச முதலீடுகள் தழைக்கவும் இது மிகுதியும் வசதி செய்துதருகிறது. ஒரு நாடு தனது ஒவ்வொரு மாவட்டத் திற்கும் தனித்தனிச் செலாவணி முறையைக்கொண்டு இடர்ப்படு வதைக்காட்டிலும், நாடு முழுவதற்குமாக ஒரு பொதுச் செலாவணி முறையைக்கொண்டு பயனடைவதைப்போல, பொன் நாணயத் திட்டமுறை முழுவதும், ஒரு பொதுவான செலாவணி அமைப்பில் இணைந்திருப்பதால் மிகுந்த நலன்களைப் பெறுகின்றது.

இதைப்போன்று, வேறு எந்தச் சர்வதேச நாணயத் திட்டத் தாலும் நலன்களைப் பெறமுடியும் என்பது உண்மைதான். ஒரு குறிப்பிட்ட அளவில் தமது மாற்றுவீதங்களை மாறாது பேணிவர வேண்டுமென்று பல்வேறு அரசாங்கங்கள் தமக்குள் ஓர் உடன்படிக் கையை மேற்கொள்ளுவதன்மூலம் இதை எளிதாகப் பெற்றுவிட

முடியும். ஆனால், அத்தகைய உடன்படிக்கை ஏற்பட்டால், அதன் அடிப்படையில் ஒரே ஒரு குறிப்பிட்ட செலாவணிமட்டுமே, சிறப்பாக டாலர்மட்டுமே, திட்ட நாணயமாக இயங்கமுடியும். பெரும்பாலான நாடுகள் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒரே பொதுத் திட்டமாக இருப்பது, பொன் நாணயத் திட்டந்தான் ; தங்கம் என்பது பாரம்பரியமாக நிதி இருப்பாக உதவி வருவதாகும் ; மக்கள் தமது நாணயங்கட்கெல்லாம் தங்கத்தின் ஆதரவுப் பின்னணி எப்போதும் இருக்கவேண்டுமென விரும்புகின்றார்கள். மேலும், நாடுகளிடையே தங்கம் இடம் மாறிப் பெயர்வதால், அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் மாறுதல்கள் தெளிவாகப் புலப்படுகின்றன ; அதற்குத் தக்கபடி நாட்டு வருமானங்களை உயர்த்தியோ, தாழ்த்தியோ கொள்ளுதற்குரிய அவசியம் உணரப்படுகின்றது.

என்றாலும், பொன் திட்டத்தை அதே சீரான அளவில் எப்போதும் பேணிவரமுடியாது என்று வணிகர்களும் முதலீடு செய்வோரும் அஞ்சினால், இத் திட்டத்தின் சிறப்புகள் அத்தனையும் பொலிவிழந்து போய்விடும். இத் திட்டத்தின்கீழ் மாற்றுவீதங்கள் எப்போதும் ஒரேநிலையில் நிற்கும் என்ற நம்பிக்கையைப் பொறுத்தே இது அயல்நாட்டு வணிகத்திற்கும் முதலீட்டிற்கும் அளிக்கும் ஆக்கம் அமைந்திருக்கிறது. 1936—38ஆம் ஆண்டுகள் ஃபிரெஞ்சு பிராங்குக்கு ஏற்பட்டதைப்போல, ஒரு நாட்டின் நாணயமானது, மூன்றாண்டுகட்குள் இருமுறை மதிப்புக் குறைப்புக்கு உள்ளானால் அதன் மீது அவநம்பிக்கை படர்வது இயல்பு. ஒரு நாடு பொன் திட்டத்தின் நலன்களையெல்லாம் பெற்று மகிழ விரும்பினால், அது நெறியான ஒழுங்கு முறையைப் பின்பற்றி நடக்க இணங்கவேண்டும். அது தங்கத்தை மிகுதியாகப் பெறும்பொழுது தனது வருமானத்தை விரிவுபடுத்திக்கொள்ளவேண்டும் ; தங்கத்தைப் பிற நாடுகளிடம் இழக்கும்பொழுது, தனது வருமானத்தையும் அதற்குப் பொருத்தமாகச் சுருக்கிக் கொள்ளவேண்டும்.

ஆனால், இப்பொழுதெல்லாம் பணவடிப்பு என்பது கைவிடப்படவேண்டிய ஒரு தீமையாகக் கருதப்படுகின்றது ; ஏனெனில், பணக்கூலிகள் நெகிழ்ச்சியற்று இருந்தால், பணவடிப்பால் வேலையின்மை ஏற்படுமல்லவா என்று கேட்பதிலும் உண்மை இருக்கிறது. என்றாலும், வேறு மாற்று வழிகள்தாம் என்ன? ஒரு நாடு, தனது உண்மை வருமானத்தில் ஒவ்வொரு முறையும் இழப்பை அடையும்பொழுது (உதாரணமாக, விளைவு இன்மையாலோ அல்லது ஏற்றுமதிகளின் விலைக் குறைவாலோ) அந்த நாடு, தனது இறக்குமதிக் கட்டுப்பாடாகிய அரண்களுக்குப் பின்னால் தஞ்சம் புகவேண்டியதிருக்கிறது; அல்லது தனது செலாவணியின் மாற்று மதிப்பைக்

குறைத்துக் கொள்ளவேண்டியதேற்படுகிறது. இந் நிலை தொடர்ந்து ஏற்படுவதால், உலக வாணிகத்தில் தனக்கு நிலையான சூழ்நிலை ஏற்படக்கூடும் என்ற நம்பிக்கைகள் நாசமாகிவிடுகின்றன; கடைசியில் 1930ஆம் ஆண்டுக் கொடிய நிலைக்கு மீண்டும் நாடு திரும்பிவிடும்! மேற்குறித்த முறைகளை மேற்கொண்டாலுங்கூடத் தனது உண்மை வருமானங்களில் இழப்பு ஏற்படுவதிலிருந்து அந்த நாட்டால் தப்பிவிட முடிவதில்லை; இது தனது பணவருவாயைப் பேணி வந்தாலுங்கூட, அதன் வாழ்க்கைத்தரச் செலவுகள் உயர்ந்துவிடும்; அவற்றைத் தாங்கச் சக்தியற்ற மக்கள்மீது இன்னும் பெரிய பளுவாக அவை ஏறிக்கொள்ளும்.

'நல்ல அயல் வீட்டுக்காரன் கொள்கை' (the good neighbour policy) என்பது, இறக்குமதிக் கட்டுப்பாடுகள், செலாவணி மதிப் பிறக்கம் முதலிய எத் துறைகளை மேற்கொண்டாயினும், பிற நாடுகளுக்குத் துன்பம் தராமல் (அப்படிப் பிறநாடு தனக்குத் துன்பம் தர முற்பட்டால் பழிவாங்க முடியும் என்று உணர்த்துவதன்மூலம்) ஒரு நாடு பொன் திட்டத்தில் தொடர்ந்து இருக்க வழி செய்வதாகும். இக் கொள்கைப்படி, தேவைப்படும் நாட்டிற்கு இதர நாடுகள் உதவ முன்வரும். இக் கொள்கைப்படி அமைந்த நிதியிலிருந்து இன்னலுறும் நாடுகட்குக் கடன் கொடுக்க வசதி இருக்கிறது. துன்பப் படும் நாடுகட்கு உதவுவதற்காக, இம் முறையில் அமைந்த நாடு முழுவதிலும் ஓரளவு பணவீக்கத்தை உண்டாக்கிக்கொள்ள முடியும். என்றாலும், இதற்கும் ஒரு வரையறை இருக்கிறது. மாற்றுவீதங்கள் ஒரேநிலையில் இருந்துவிட்டாலுங்கூட, பணவீக்கத்தால் ஏற்படும் கெடுதல்களின் அபாயங்கள் போய்விடவில்லை. மேற்குறித்தபடி, துன்பப்படும் நாடுகளிடையே ஓரளவு சமநிலையை உண்டாக்கி வைத்தற்குத் தேவைப்படும் பணவீக்க அளவுகள், அந் நாடுகளிடையே கடுமையான பொருளாதாரத் தேக்கநிலை ஏற்படுமாறு செய்துவிடக்கூடும்.

ஆகையால், இப் பொன் திட்டத்தில் நாம் காணும் மிகப்பெரிய தீமை என்னவென்றால், இதில் அங்கம் பெறும் ஒரு நாடு, தனக்குச் சிறந்த ஒரு நிதித்துறைக் கொள்கையை வகுத்துச் சுதந்திரமாகப் பின்பற்ற அதற்கு உரிமை இருப்பதில்லை என்பதுதான். சில சமயங்களில், அந்த நாடு தனது பண வருவாய்களைக் குறைத்துக்கொள்ள வேண்டிய நெருக்கடி நிலை ஏற்படும்; இதனால் நாட்டில் வேலை இன்மை ஏற்பட்டுவிடும். இக் காரணத்திற்காகவே, பல நாடுகள் ஒரு பொதுச் செலாவணியில் தாமும் பங்கு பெறுவதற்குப் பதிலாகச் சுதந்திரமாகத் தமது சொந்தச் செலாவணி முறையைப் பற்றிக் கொள்ளவே விரும்புகின்றன.

இதற்கு மாறாக, உலக வாணிகத்தில் ஏற்படும் மிகுதியான அள வால் வேலையுடைமை ஏற்படுகின்றது ; ஆனால், அதே சமயத்தில் ஒரு நாடு தனது இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துகையில், அதனால், அவற்றை ஏற்றுமதி செய்யும் நாடுகளில் வேலையின்மை ஏற்படவும் வழி ஏற்படுகிறது. இறக்குமதிக் கட்டுப்பாடுகட்கு உட்படாத அல்லது அதிகமான தீர்வைகட்குத் திடீரென ஆட்படாத, நிலையான மாற்று வீதங்களால், உலகு முழுவதற்கும் சிறந்த நலன் ஏற்படுகின்றது என்பது தெளிவாகப் புலப்படும் பேருண்மைதான் ; என்றாலும், இத்தகைய முறையைப் பேணி வருதற்காக, நாடுகள் பல நட வடிக்கைகளை, குறிப்பாகப் பணவடிப்பு முறைகளை அவ்வப்போது மேற்கொள்ளவேண்டிய அவசியம் ஏற்படக்கூடும். இவ்வித நட வடிக்கைகளை மேற்கொள்வது தமது பொருளாதார வாழ்வைப் பாதிக்குமென்றோ அல்லது அரசியல்ரீதியாக ஏற்க முடியாதவை யென்றோ அந் நாடுகள் கருதக்கூடும்.

# 38. நாணயமாற்றுக் கட்டுப்பாடு

## (Exchange Control)

### 1. நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை நாடுகள் மேற்கொள்வதேன் ?

ஒரு நாடு, தனது அயல்நாட்டுச் செலுத்துநிலையைக் கட்டுப் படுத்திக்கொள்ளுதற்குரிய பல முறைகளைப்பற்றி இதுவரை நான் விளக்கியுள்ளேன். இம் முறைகள் அல்லது இவற்றிற்கு மாறான முறைகளைக் கைக்கொண்டு, ஒரு நாட்டின் நிலையான சாதக இருப்பையாவது அல்லது நிலையான சாதகமற்ற இருப்பை யாவது செம்மைப்படுத்திக்கொள்ள முடியும். இவற்றுள் சாதகமற்ற இருப்பைப்பற்றியே நான் மிகுதியும் வற்புறுத்தி யுள்ளேன்; ஏனென்றால், ஒரு நாடு தொடர்ந்த எச்சப்பாட்டைவிட தொடர்ந்த பற்றாக்குறையால்தான் பெரிதும் இடர்ப்பாட்டிற்காளா கின்றது. தொடர்ந்த எச்சப்பாட்டு நிலையில் உள்ள ஒரு நாடு, தன்னுடைய உபரியைப் பிற நாடுகட்குக் கடனாக வழங்கி உதவலாம், அல்லது தனது இறக்குமதித் தடைகளைத் தளர்த்திக்கொள்ளலாம், அல்லது தனது பண வருமானத்தைப் பெருக்கிக்கொள்ளலாம், அல்லது தனது செலாவணியின் மாற்றுவீத மதிப்பை, அதை மீண் டும் உச்சநிலையில் மதிப்பேற்றம் செய்வதன்மூலம் (மதிப்பிறக்கத் திற்கு மாறானது) உயரும்படி செய்யலாம். இவ்வித முறைகளை மேற்கொள்ளுவதால், இது பற்றாக்குறையில் உழலும் நாடுகட்கு உதவி செய்து, பொதுவான சமநிலையை உண்டாக்குவதில் தன் பங்கை நிறைவேற்றி வைக்கலாம்.

என்றாலும், நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை, ஓர் இரட்டைவழி முறையாகக் (two-way method) கருதிவிடுதல் கூடாது. அயல் நாட்டுச் செலுத்துநிலையில் உபரியைவிட, பற்றாக்குறை ஏற்படுவ தைத் தடுப்பதே இம் முறையின் அடிப்படை நோக்கமாகும். இம் முறை இயல்பாக, வன்மையுடைய செலாவணிகளைவிட மெலிந்து நைந்துள்ள செலாவணிகட்கே மிகவும் பொருந்தும்; ஏனென்றால்,

ஒரு செலாவணிக்குத் தடையற்ற அங்காடியில் கிடைக்கக்கூடிய மாற்றுவீத மதிப்பைவிட அதிகமான மாற்றுவீத மதிப்பைப் பெயரள விற்காவது பெற்றுத் தரவேண்டுமென்பது இம் முறையின் முக்கிய செயல் நெறியாகும். அதாவது, ஒரு தடையற்ற அங்காடியில் இருப்பதைவிட அயல்நாட்டுச் செலாவணிகள் (அல்லது அவற்றுள் சில) குறைவாக விலையிடப்பெறுகின்றன. எனவே, இவற்றைப் பங்கிடவேண்டிய அவசியநிலை ஏற்படுகின்றது. நாணயமாற்றுக் கட்டுப்பாட்டின்மூலம் அவை பங்கிடப்பெறுகின்றன.

ஒரு நாடு, தனது அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்பட்டுள்ள சாதகமற்ற நிலையைச் செம்மைப்படுத்திக்கொள்ளுதற்குரிய முறையாக நாணயமாற்றுக் கட்டுப்பாட்டைப் பின்பற்றக்கூடும். நான் ஏற்கெனவே விளக்கியுள்ள இதர முறைகளில் ஒன்றையோ, அல்லது அவற்றின் இணைப்பையோ அந்த நாடு பின்பற்ற விரும்பாதிருக்கலாம்; அல்லது பின்பற்றச் சக்தியற்றும் இருக்கலாம். தவிரவும், ஒரு நாடு, இதர நாடுகளிலிருந்து கடன்களையும் இதர நிதி உதவிகளையும் தொடர்ந்து பெறமுடியாத நிலையில் இருக்கலாம்; இன்னும் சில நாடுகள் தாம் விரும்பினாலும், தமது இறக்குமதிகளின்மீது விதிக்கப்படும் சுங்கத் தீர்வைகளை உயர்த்தமுடியாது (சுங்கவரி, வாணிபப் பொது ஒப்பந்தம் முதலிய), பன்னாட்டு உடன்படிக்கைகளால் தடுக்கப்பெற்றிருக்கலாம். இச் சமயங்களில் எல்லாம் மேற்குறித்த நாடுகள், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளையே மேற்கொள்ளுமாறு நேர்ந்திருக்கக்கூடும்.

இவ்விதமாக, பணவடிப்பு என்பது புத்திசாலித்தனமற்றதாகவோ அல்லது அரசியல் ரீதியாகக் கைகூடாததாகவோ போயிருக்கலாம். என்றாலும், செலாவணி மதிப்பிறக்கமும் கைகூடாத ஒன்றாகக் கருதப்படுகிறதென்பதையும் நினைவிற் கொள்ளவேண்டும். ஏனெனில், ஒரு நாடு கவுரவத்தைக் காரணமாகக்கொண்டு, தனது செலாவணியின் மாற்றுவீத மதிப்பை அப்படியே பேணிவர விரும்புகிறது; அல்லது இறக்குமதி விலைகளைக் குறைப்பதன்மூலம் வாழ்க்கைத்தரச் செலவுகளையும் மிதப்படுத்திக்கொள்ள விரும்புகிறது; அல்லது தனது நாணயமாற்று மதிப்பில் குறைவு ஏற்பட்டால், வாணிப வீதங்களே தனக்கு மாறாகத் திரும்பிவிடுமோ என்று அஞ்சுகிறது; அல்லது (இதர ஐரோப்பிய நாடுகளைப்போல) இதன் மக்கள், நாணயமாற்று மதிப்பில் ஏற்படும் குறைவை, வரப்போகும் பணவீக்கத்திற்குரிய முன் அடையாளமாகக்கொண்டு விளக்கம் தந்து, அதன் பொருளாதார வாழ்வைக் குலைத்துவிடக்கூடுமோ என்று தயங்குகிறது. இக் காரணங்களால் அது செலாவணியின் மதிப்பைக் குறைக்க எளிதில் முன்வருவதில்லை.

இத்தகைய நிலைகளில் தகுந்த மாற்றுவழியாக நாணயமாற்றுக் கட்டுப்பாடு உதவுகிறது. இதனால் செலாவணியின் மாற்றுவீத மதிப்புப் பேணப்படுகின்றது; ஆனால், நாட்டின் பணவருமானங்களில் குறைவேற்பட வேண்டுமென்ற அவசியமில்லை. மேலும், அவை உயரவும் முற்படலாம். அயல்நாட்டுச் செலுத்துநிலையைச் சமப்படுத்துதற்காகப் பணவடிப்பு முறையை மேற்கொள்ளுவதற்குப் பதிலாக, இறக்குமதிகள், இதரப் பற்று இனங்கள்மீது நேரடியான கட்டுப்பாடுகள் விதிக்கப்பெறுகின்றன.

கடந்த பெரிய மந்தகாலத்திலிருந்து, 1930ஆம் பத்தாண்டுகள் வரை, பல நாடுகள் நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை மேற்கொண்டன. குறிப்பாக, நாஜி ஜெர்மனி தான் இதர நாடுகளுடன் கொண்டிருந்த எல்லாப் பரிவர்த்தனைகள்மீதும் முழுமையான நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை விதித்திருந்தது. என்றாலும், கிரேட் பிரிட்டன் இம் முறையை மேற்கொள்ளவில்லை; இதற்குப் பதிலாக, அது ஸ்டெர்லிங்கின் நாணயமாற்று மதிப்பில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படாதிருக்கத் தன்னை ஓரளவு கட்டுப்படுத்திக் கொண்டது; தனது நாணயமாற்றுச் சமன் காப்புநிதிமூலம் யூகமான மூலதனப் பெயர்வுகளால் ஏற்படும் விளைவுகளைத் தடுத்து விட்டது.

போருக்குப் பின்னர், கிரேட் பிரிட்டன் உள்ளிட்ட பல ஸ்டெர்லிங் பகுதி நாடுகள், டாலர், மற்றும் இதர 'கடினமான' செலாவணிகளைப் ('hard'currencies) (ஸ்விஸ் பிராங்குகள் முதலியன) பங்கீடு செய்தற்காக, நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை மேற்கொண்டன. இந் நாடுகள் போர் அழிவினின்று மீண்டு, புனர்வாழ்வு பெற்றவுடன் டாலர் பற்றாக்குறை நீங்கிவிடும் என்று நம்பினர்; ஆனால், கடினமான செலாவணிகள் வேண்டுமென்ற இந் நாடுகளின் தேவையைக் குறைக்க உதவும் முறையாக, இந்த நாணயமாற்றுக் கட்டுப்பாடு அவ்வளவு பலன் தரவில்லை என்பதையும் நினைவிற்கொள்ள வேண்டும்.

## 2. நாணயமாற்றுக் கட்டுப்பாட்டின் விளைவுகள்

நாணயமாற்றுக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட ஒரு செலாவணியை, அயல்நாட்டுச் செலாவணியாக எளிதில் தடையின்றி மாற்றிக்கொள்ள முடியாது. தனிநபர்களும், தொழில் நிறுவனங்களும், எந்தக் காரியத்திற்கு வேண்டுமாயினும், தாம் விரும்பும் அளவிற்கு அயல்நாட்டுச் செலாவணியை வாங்கிவிட முடியாது. தமக்கு அயல்நாட்டுச் செலாவணி வேண்டுமானால், அவர்கள்

முதலில் மத்திய பாங்கிற்கு விண்ணப்பித்தல் வேண்டும்; மத்திய பாங்கு ஒருசில குறிப்பிட்ட காரியங்களுக்குமட்டும், வரையறுத்த அளவில் அயல்நாட்டுச் செலாவணியை அவர்கட்கு ஒதுக்கித் தரும்.

ஏற்றுமதியாளர்களும் பிறரும் தாம் பெறும் அயல்நாட்டுச் செலாவணிகளைத் தம்மிடமே வைத்துக்கொள்ள முடியாது. தாம் பெற்றவற்றை அப்படியே மத்திய பாங்கிடம் சமர்ப்பித்துவிடுதல் வேண்டும்; அதற்குப் பதிலாக அதிகாரபூர்வமான விலைவிகிதமே அவர்கட்கு அளிக்கப்பெறும்.

இதிலும் பல வேறுபாடுகள் உள்ளன. உதாரணமாக, சில நாடுகளில் உள்ள ஏற்றுமதியாளர்கள், தாம் பெறும் அயல்நாட்டுச் செலாவணியில் ஒரு குறிப்பிட்ட விகிதாசாரத்தை (ஒருவகைத் தூண்டுகோலாக) தாமே வைத்துக்கொள்ளுவதற்கு அனுமதிக்கப் பெறுகின்றனர்கள். 1958 இறுதியிலிருந்து, கிரேட் பிரிட்டனில், அங்கு வாழாத அயல்நாட்டவர் ஈட்டிய ஸ்டெர்லிங்கை, வேறு எந்தச் செலாவணிக்கும் தடையின்றி மாற்றிக்கொள்ளும் வாய்ப்பளிக்கப் பெற்றுள்ளது. என்றாலும், இதில் உள்ள விரிந்த கொள்கையடிப்படை என்னவென்றால், அயல்நாட்டுச் செலாவணி (அல்லது டாலர் முதலிய சில அயல்நாட்டுச் செலாவணிகள்) கிடைப்பதற்கு அருமையாயிருப்பதால், அது மத்திய பாங்கின்மூலம் அரசாங்கத்தால் பங்கீடு செய்தளிக்கப்படுகின்றது.

அயல்நாட்டுச் செலாவணிக்கு உரிய தேவை, அதன் அளிப்பை விஞ்சியிருப்பதால், அதன் மதிப்பு தடையற்ற அங்காடியில் அதிகமாகவே இருக்கும். அதாவது, அந்த அயல்நாட்டுச் செலாவணிக்குரிய உள்நாட்டுச் செலாவணியின் மாற்று மதிப்பு மிகவும் குறைவாகவே இருக்கும். ஆகையால், நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை மீறி அந்நியச் செலாவணிகளைப் பெறுதற்குரிய முயற்சிகள் எப்போதும் நடந்துகொண்டேயிருக்கின்றன. உதாரணமாக, சரக்குகளை ஏற்றுமதி செய்யும் நிறுவனத்தினர், அவற்றை வாங்கும் அயல்நாட்டவருடன் இரகசிய ஒப்பந்தம் செய்துகொண்டு, தாங்கள் அனுப்பும் சரக்குகளின் மதிப்பைக் குறைவாக எழுதிக் கணக்கிட்டு ஏற்றுமதிப் பட்டியல் தயாரிப்பார்கள். இதில் மிஞ்சும் அயல்நாட்டுச் செலாவணியைத் தம் அரசாங்கத்திற்குத் தெரியாமல் தாம் பெற்றுக்கொள்ளுவார்கள். இதைப்போலவே, இறக்குமதி செய்யும் நிறுவனத்தினர், அவற்றை அனுப்பும் அயல்நாட்டவருடன், இரகசிய ஒப்பந்தம் செய்துகொண்டு, தாம் அனுப்பும் பொருள்களுக்கு உரிய விலை மதிப்பிற்குமேல் அதிகமாகக் கணக்கிட்டு விலைப்பட்டியல் அனுப்பச்

செய்வார்கள். அவ்விதம் மிஞ்சும் தொகையை அயல்நாட்டுச் செலாவணி வடிவில் தம்மிடமே, அரசாங்கத்திற்குத் தெரியாமல் வைத்துக் கொள்ளுவார்கள். ஆகையால், நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை விதிக்கும் அரசாங்கங்கள், அடிக்கடி ஏற்றுமதி விலைகளையும் இறக்குமதி விலைகளையும் ஒப்பிட்டுப் பார்த்துக்கொள்ள வேண்டியதிருக்கின்றது. பொய்க் கணக்குக் காட்டிப் பட்டியல்கள் தயாரித்தல், அல்லது தங்கம், ஆபரணம், செலாவணி நோட்டுகள் ஆகியவற்றை நாட்டிலிருந்து கள்ளத்தனமாகக் கடத்திச்செல்லும் திருட்டு முயற்சிகள் ஆகியவற்றைக் கையாண்டு, நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை மீற விரும்பும் எந்த முயற்சியையும் அரசாங்கங்கள் கடுமையாகத் தண்டிக்கின்றன. அயல்நாட்டுச் செலாவணியில் கிடைக்கும் குறிப்பிட்ட தொகை அனைத்தையும் நாட்டின் பொதுவான நலத்திற்குச் சிறந்த நெறியில் பயன்படுத்தவேண்டுமென்ற நோக்குடன், அவ்வரசாங்கங்கள், உள்நாட்டில் தனி நபர்கள் சம்பாதிக்கும் அயல் நாட்டுச் செலாவணிகள்மீதெல்லாம் கட்டுப்பாடு விதித்துக் கணக்கெடுத்துக்கொள்ளுகின்றன.

அயல்நாட்டுச் செலாவணியோடு சம்பந்தப்படும் எல்லாப் பரிவர்த்தனைகளும் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டே ஆகவேண்டும். உதாரணமாக, இறக்குமதிகளைப் பார்ப்போம். அரசாங்கத்திடம், இறக்குமதி லைசென்சு பெறாத எவருக்கும், அயல்நாட்டிலிருந்து எப்பொருளையும் இறக்குமதி செய்ய அனுமதி அளிக்கப்படமாட்டாது. அவசியமானவையாகக் கருதப்படும் பொருள்களைமட்டுமே இறக்குமதி செய்துகொள்ள அனுமதி அளிக்கப்படுதலும் உண்டு. சில நாடுகளிலிருந்து அதிகமான இறக்குமதிகளைப் பெற்றுக்கொண்டு, இதர நாடுகளிலிருந்து வரும் பொருள்களைக் குறைத்துக்கொள்ளும் பாரபட்சப் போக்கும் ஏற்படுவதுண்டு. அரசாங்கம், இறக்குமதிக் கோட்டா முறையை ஏற்படுத்திக்கொள்ளலாம். உதாரணமாக, அடுத்த மூன்று மாதங்கட்கு, ஒவ்வொரு நாட்டிலிருந்தும் இவ்வளவு இவ்வளவு மதிப்புள்ள சரக்குகளைமட்டுமே இறக்குமதி செய்துகொள்ளலாம் என்று வரையறைப்படுத்தலாம்; அல்லது, அரசாங்கம் முன்கூட்டியே எந்த உறுதிமொழியும் தராமல் அவ்வப்பொழுது வரும் இறக்குமதி விண்ணப்பங்களைத் தனித்தனியாக ஆராய்ந்து ஒப்புதலோ, மறுப்போ தெரிவிக்கலாம். மேலும், இறக்குமதி லைசென்சுகளைப் பகிர்ந்து அளிப்பதற்கு, அரசாங்கம் குறிப்பிட்ட தொழில்களையோ அல்லது குறிப்பிட்ட தொழில் நிறுவனங்களை மட்டுமோ ஆதரிக்கவும் கூடும்.

இம் மாதிரிக் கட்டுப்பாட்டு முறையில் அரசாங்கத்திற்கு அபரிமிதமான அதிகாரங்கள் கிடைக்கின்றன என்பது தெளிவு. அரசாங்

கம் எத்தகைய பொது நியதிக்கும் உட்படாது, எத்தகைய காரணங்களையும் சொல்லாது, எந்தெந்தப் பொருள்களை, எங்கெங்கிருந்து, எவரெவர் இறக்குமதி செய்துகொள்ளலாம் என்பதை முடிவுகட்டிச் சொல்லலாம். மாறிவரும் சூழ்நிலைகட்கேற்ப அரசாங்கமும் தனது கட்டுப்பாட்டு முறைகளை மாற்றிமாற்றி அமைத்துக்கொள்ளலாம்; தான் முன்பு விலக்கியிருந்த பொருள்களை இறக்குமதி செய்ய இப்பொழுது அனுமதி அளிக்கலாம்; அல்லது முன்பு அனுமதி அளித்திருந்த பொருள்களை இப்பொழுது விலக்கிவிடலாம்; அல்லது ஒரு நாட்டிலிருந்து அதிகமாக இறக்குமதி செய்ய அனுமதித்துவிட்டு, இன்னொரு நாட்டிலிருந்து வரும் அளவைக் குறைத்துவிடலாம். இங்ஙனம், தனக்குக் கிடைக்கும் அயல்நாட்டுச் செலாவணி அனைத்தையும், நாட்டின் பொதுநலத்திற்கு உகந்ததென அது கருதும் வழிகளில் செலவிடுதற்குரிய வாய்ப்பை இக் கட்டுப்பாடுகளால் அரசாங்கம் பெற்றுக்கொள்ளுகிறது. இறக்குமதிகளில் நெருக்கமும் விளக்கமும் நிறைந்த கட்டுப்பாடுகளை விதித்து, அயல்நாட்டுச் செலாவணியுடன் சம்பந்தப்படும் ஏற்றுமதிகள், இதர பரிவர்த்தனைகளிலும் ஓரளவு கட்டுப்பாடுகளைச் சுமத்தி அயல்நாட்டுச் செலாவணியில் பிடிப்புக்கொள்ளுவதால், அரசாங்கம் தான் விரும்பும் துறைகளில் நாட்டின் பொருளாதாரப் போக்குகளைச் செயல்படுத்தி நடத்தும் வாய்ப்புகளைப் பெறுகிறது.

நாட்டின் மத்திய திட்டங்கட்கு உதவும் ஆற்றல்வாய்ந்த கருவியாக நாணயமாற்றுக் கட்டுப்பாடு, (இவ்விதம்) அரசாங்கங்கட்கு உதவுகிறது. பன்னாட்டுப் பரிவர்த்தனைகளால் பாதிக்கப்படும் எல்லாப் பொருளாதாரத் துறைகள்மீதும் அரசாங்கம், நெகிழ்ச்சியும் நேரிய பலனும் அளிக்கக்கூடிய கட்டுப்பாடுகளை மேற்கொள்ள இது உதவுகிறது.

என்றாலும், நாணயமாற்றுக் கட்டுப்பாட்டிலும் மிகுதியான குறைகள் உள்ளன.

முதலில், இது பன்னாட்டு வாணிகத்தில் ஆபத்து நிலைகளையும் நிலையற்ற போக்கையும் உண்டாக்கிவிடுகிறது; பிறநாடுகள், தாம் எந்த நிலையில் இருக்கிறோம் என்பதை உணரமுடியாத நிலை ஏற்பட்டுவிடும். நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை விதித்துவரும் A என்ற நாடு, பன்னாட்டு வாணிக அமைப்பில் ஒரு வாடிக்கைக்காரர் என்று கருதுவோம். இது, இதர நாடுகளிடமிருந்து சில பண்டங்களை மட்டும் இறக்குமதி செய்யலாம்; அல்லது திடீரென அவற்றின் இறக்குமதியை நிறுத்திக்கொள்ளலாம்; அல்லது ஒரு நாட்டைவிட்டு இன்னொரு நாட்டிடமிருந்து அவற்றைப் பெறுதற்கு இடம்மாறிக்

கொள்ளலாம். இந்த நாடு இதர நாடுகட்குப் பிரதானமாகப் பண்டங்களை ஏற்றுமதி செய்யும் நாடாகக்கொண்டால், இது திடீரெனத் தனது ஏற்றுமதிகளை (உதாரணமாக மூலப்பொருள்களை) நிறுத்திவிட்டு, வேருெரு நாட்டிற்கு அவற்றை அனுப்பத் தொடங்கிவிடலாம். இதைப்போல நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை மேற்கொண்டுள்ள இதர நாடுகளுடன் வாணிப உறவு கொண்டிருக்கும் A என்ற நாடும் இவ்விதமே பல இன்னல்கட்கு ஆளாகும்.

இரண்டாவதாக, ஒரு நாட்டின் பொருளாதார அமைப்பு முழுக்க முழுக்கத் தனியார் நிறுவனங்களைச் சார்ந்தே அமைந்திருந்தால், அவையெல்லாம் தமது திட்டங்களை முன்கூட்டி வகுத்துக்கொள்ளுதற்கு இடர்ப்பாடாக நாணயமாற்றுக் கட்டுப்பாடு அமைந்திருக்கும். தமக்குத் தேவையான உற்பத்திச் சாதனப் பொருள்களும் மூலப்பொருள்களும் போதுமான அளவில் கிடைக்குமா, அப்படிக் கிடைத்தாலும் அவற்றின் விலை சாதகமாக இருக்குமா என்பதையெல்லாம் அவற்ருல் உறுதியாக அறிந்துகொள்ள முடியாது. ஆகையால், அவற்ருல் தமது சரக்குகளை ஆக்கி அளித்தற்குரிய சரியான தேதியையும் குறிப்பிட முடியாது; அவற்றிற்குரிய விலைகளையும் முன்கூட்டியே நிர்ணயித்துவிடுதற்கு இயலாது. ஒரு குறிப்பிட்ட அளவு உற்பத்தி செய்தற்குக்கூட முன்கூட்டியே திட்டமிட்டுக்கொள்ள முடியாது. இதைப்போல, அந் நிறுவனங்கள் ஏற்றுமதி செய்யும் பொருள்கள்மீதும் கட்டுப்பாட்டை விதித்துவிட்டால், தாம் விரும்பும் ஒரு குறிப்பிட்ட நாட்டில் உள்ள வாடிக்கைக்காரருக்கு அப் பொருள்களை அனுப்ப அவற்ருல் முடிவதில்லை; வேறு எந்தெந்த நாடுகளின் செலாவணிகள் நாட்டுக்குத் தேவைப்படுகின்றனவோ, அந்த நாடுகட்கு அப் பொருள்களை அனுப்புமாறு அரசாங்கம் இடும் உத்திரவுகட்கு அவை பணியவேண்டியதிருக்கும்.

மூன்ருவதாக, நாணயமாற்றுக் கட்டுப்பாடு நன்கு செயல்படவேண்டுமானுல், அதை அமல் நடத்துவதற்கு மிகுதியான ஆட்சியாளர்கள் தேவைப்படுவர். இதனுல் ஏனைய உற்பத்தித் திறங்கட்கு உதவக்கூடிய மனித சக்திகள், ஒரு கட்டுப்பாட்டை அமல் நடத்துதற்காக வீணடிக்கப்படும். சில நாடுகளில், இதனுல் சுரண்டல்கள் தலைதூக்கித் தாண்டவமாடுகின்றன. உதாரணமாக, இறக்குமதி லைசென்சுகளை அளித்தற்காகப் பல அதிகாரிகள் கையூட்டுப் பெற்றுக்கொள்ளுகிருர்கள். இதனுல், வியாபார ஒழுக்கமும் தரமும் மிகுதியாகப் பாதிக்கப்பட்டுள்ளன; தொழில்நிறுவனங்கள் கட்டுப்பாட்டை மீறுதற்காகப் பல முறைகேடான வழிகளைக் கண்டுபிடிப்பதிலேயே சிந்தையைச் செலுத்துகின்றன; இதனுல் நாட்டின் வாணிகத் தரம் நிலைதாழ்ந்துவிடுகின்றது.

## 3. செலுத்துகள் ஒப்பந்தம்

(Payments Agreements)

இரு நாடுகள், நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை மேற்கொண்டிருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். ஆனால், இவ்விரு நாடுகளும் விதிக்கும் கட்டுப்பாடுகள், டாலர் போன்ற மூன்றுவது செலாவணிக்கு எதிராகவே அமைந்திருப்பதாகவும் கொள்ளுவோம். இவ்விரு நாடுகளும் தமக்குள் டாலர் இழப்பு நேராதவரையில் தடையற்ற வாணிக முறைகளை மேற்கொண்டிருக்கும். ஆகையால், இவ்விரு நாட்டு அரசாங்கங்களும் தமக்குள் ஒரு செலுத்துகள் ஒப்பந்தத்தைச் செய்துகொள்ளுகின்றன. இதன்படி இவ்விரு நாடுகளிடையேயும் நடப்புப் பரிவர்த்தனைகள் எவ்விதத் தடையுமின்றி நிகழ்கின்றன. இவற்றிடையே உள்ள நடப்பு அயல்நாட்டுச் செலுத்துநிலையை எப்போதும் சமமாக்கி வைத்துக்கொள்ள 'ஒவ்வொரு நாடும் உறுதியளிக்கிறது.

அவை, இன்னும் ஒரு படி மேலே சென்று (நடப்புப் பரிவர்த்தனைகட்கும் மேலாகச் சென்று) அடுத்த ஆண்டில் ஒரு நாடு இன்னென்றிற்கு ஏற்றுமதி செய்யவிருக்கும் பண்டங்களின் அளவுகள் பற்றிய விபரமான பட்டியலைத் தயாரித்துக்கொள்ளலாம். இவ்விரு நாடுகளின் ஏற்றுமதி மதிப்புகளும் ஒரே மாதிரியாகவே இருக்கும்; அப்படி இல்லையென்றால், A என்ற நாட்டிலிருந்து B என்ற நாட்டிற்குக் கொடுக்கவேண்டிய நிகர செலுத்துதல்களுக்குத் (உதாரணமாக, வட்டி செலுத்துதல் முதலியன) தனியாக நிதி ஒதுக்கிக் கொள்ளவேண்டும்; அல்லது A என்ற நாடு அந்த அளவிற்குத் தனது ஏற்றுமதியில் உபரி பெறும் முறையில் முன்கூட்டிய திட்டத்தில் வகை செய்யப்படும்.

என்றாலும், இவ்விரு நாடுகளும் பரிவர்த்தனை செய்துகொள்ளும் பண்டங்கள்மீது சில கட்டுப்பாடுகள் விதிக்கப்படுவதுண்டு. உதாரணமாக, A என்ற நாடு டாலருக்கு விற்கக்கூடிய சிலவகைச் சரக்குகளையோ அல்லது 'அளிப்புக் குறைவான' சிலவகைப் பண்டங்களையோ ஏற்றுமதி செய்துவரலாம். எனவே, இத்தகைய பண்டங்களை ஒரு குறிப்பிட்ட அளவிற்குமேல் B-க்கு விற்க அது இசைவதில்லை. அப்படியே விற்றாலும், B அவற்றை (டாலர் பகுதிகட்கு) மீண்டும் மறு ஏற்றுமதி செய்வதில்லை என்று உறுதியளித்து, அப் பொருள்களின் மதிப்பிற்குச் சரியான சலுகைகளும் அளிக்க வேண்டியதிருக்கும்.

ஐக்கிய அரசு, அர்ஜென்டைனு[1] அரசாங்கங்களிடையே 1949 ஜூனில் ஏற்பட்ட வாணிகச் செலுத்துகள் ஒப்பந்தத்தை இதற் கேற்ற உதாரணமாகக் குறிப்பிடலாம். இவ்வொப்பந்தத்தில் முன்னிலே வாசகத்தில், 'இவ்வொப்பந்தத்தைச் செய்துகொள்ளும் இவ்விரு நாடுகளின் பரஸ்பர நலன்களுக்காக இவற்றின் அயல்நாட்டுச் செலுத்துநிலேகளே மிக உயர்ந்த தரத்தில் நிலேநிறுத்திக்கொள்ளும் வகையில், இவற்றின் வாணிக நிதிப் பரிவர்த்தனேகளே ஊக்குவிக்க வேண்டுமென்றும்' 'இவ்விரு நாடுகளிடையே பண்டங்களும், பணிகளும் பாரம்பரியமாகப் பரிமாறிக்கொள்ளப்படுவதை, இன்னும் விரிவுபடுத்தித் தொடர்ந்து செயல்படுத்தும் வகையில் தகுந்த வழித்துறைகளே மேற்கொள்ளுதற்கு இவ் வொப்பந்தம் தூண்டுகோலாக இருக்குமென்றும்' குறிப்பிடப்பெற்றுள்ளது. இந்த ஒப்பந்தத்தில் ஓர் அட்டவணே உள்ளது. இதில் அடுத்த ஐந்தாண்டுகட்கு ஆண்டுத் தவணேகளில் இவ்விரு நாடுகளும் ஒன்றிற்கு ஒன்று (குறைந்த பட்சம்) ஏற்றுமதி செய்துகொள்ளும் பல்வேறு பண்டங்களின் அளவும், மதிப்பும் குறிப்பிடப்பட்டுள்ளன. இதன்படி அர்ஜென்டைனுவின் மொத்த ஏற்றுமதிகள் 129 மில்லியன் பவுன் என்றும், பிரிட்டனின் ஏற்றுமதிகள் 121 மில்லியன் பவுன் என்றும் (இவ்விரண்டில் உள்ள வித்தியாசம், அர்ஜென்டைனு செலுத்தவேண்டிய வட்டிகளுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது) நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றது. இவ்வொப்பந்தப்படி, அர்ஜென்டைனு குறிப்பிட்ட உடன்படிக்கை விலேயில் (இதைப் பின் ஆண்டுகளில் மாற்றி அமைத்துக்கொள்ளலாம்) வரையறுத்த அளவுகளில், இறைச்சி, சோளம், பதனிட்ட பதனிடப் பெருத தோல், இன்னும் சில பண்டங்கள் ஆகியவற்றை பிரிட்டனுக்கு ஏற்றுமதி செய்தல் வேண்டும். இதற்கு நிகராக பிரிட்டன் ஒரு நீண்ட பட்டியல் பொருள்களே அனுப்புதல் வேண்டும். இதில் 29 மில்லியன் பவுனுக்குப் பெட்ரோலியமும், இதர பெட்ரோல் உற்பத்திப் பொருள்களும், 8·5 மில்லியன் பவுனுக்கு (1,500,000 டன்) நிலக்கரியும், 7 மில்லியன் பவுனுக்கு இரும்பு, எஃகு பொருள்களும் அடங்கியுள்ளன.

இத்தகைய செலுத்துதல் ஒப்பந்தம் தவருகப்போய்விடக்கூடும். உலக நிலேகளிலோ அல்லது உலக விலேகளிலோ ஏற்படும் எதிர்பாராத மாறுதல்களின் காரணமாக இவ் வொப்பந்தம் பாதிக்கப் படலாம். A என்ற நாடு B-யிடம் பெறுவதைவிட அதிகமான பொருள்களே B என்ற நாடு A-யிடமிருந்து பெறலாம்; இதனுல் B-யின் செலாவணி இருப்புகளில் பெரும்பகுதி Aஐச் சேர்ந்துவிடும். இதனுல் என்ன நேரிடும் ? B-யின் செலாவணிக்குரிய மாற்று மதிப்பு

[1] Cmd. 7735 and Cmd. 8744 of 1949.

A-யின் செலாவணி வீதத்தில் குறைக்கப்படுவதே சாத்தியமான ஒரு வழியாகும். அல்லது A-யின் அரசாங்கம் பிரத்தியேக முயற்சிகளை மேற்கொண்டு B-யிடமிருந்தே வாங்குவதற்கு முற்படவேண்டும். அல்லது A-யிலிருந்து B-க்குச் செல்லும் பண்டங்களின் வரவை, A-யோ, B-யோ கட்டுப்படுத்திக்கொள்ளலாம். ஜப்பானுக்கும் ஸ்டெர்லிங் பகுதிக்கும் ஏற்பட்ட செலுத்துகள் ஒப்பந்தப்படி, ஜப்பானிடம் மிகுதியான ஸ்டெர்லிங் இருப்புக் குவிந்தது. இது 1952ஆம் ஆண்டில் 100 மில்லியன் பவுன்களுக்குமேல் விஞ்சி விட்டது. இதனால் ஸ்டெர்லிங் பகுதிகள் ஜப்பானிடமிருந்து வாங்குவதற்குத் தடைகள் விதிக்கப்பட்டன. இரண்டு ஆண்டுகட்குப் பின்னர் ஜப்பானில் ஸ்டெர்லிங் இருப்புக் குறைந்துவிட்டது.[1]

பல்வேறு பிரிட்டிசுச் செலுத்துகள் ஒப்பந்தப்படி, செலுத்துகள் எல்லாம் சாதாரணமாக ஸ்டெர்லிங்கிலேயே அளிக்கப்பெறுகின்றன. இதிலிருந்து, இன்னொரு நாடு தன்னிடம் போதுமான ஸ்டெர்லிங் நடப்பு இருப்பை வைத்திருக்க வேண்டுமென்பது தெளிவாகின்றது. முற்குறித்த ஒப்பந்தப்படி, அர்ஜென்டைனாவிடம் நடப்பு இருப்பாக 20 மில்லியன் ஸ்டெர்லிங் இருத்தல் வேண்டும்; இருப்பு, இத்தொகையை மிஞ்சிவிட்டால்,அதை அர்ஜென்டைனா,டாலராக மாற்றி வைத்துக்கொள்ளலாம். (இதர ஒப்பந்தங்களைப்போல) இந்த ஒப்பந்தம், ஸ்டெர்லிங் நாணயத்தின் மதிப்பை மீண்டும் உயர்த்திக் கொள்ளுவதற்கு (revaluation) எதிராகப் போதிய உத்திரவாதம் அளிக்கிறது; தம்முடைய ஸ்டெர்லிங் இருப்புகளின்மீது இத்தகைய உத்திரவாதத்தைப் பெற்றுள்ள அரசாங்கங்கள், பவுனின் மதிப்பு இறக்கப்படும்பொழுது அதற்குரிய இழப்பீட்டைப் பெற்றுக்கொள்ளுகின்றன.

செலுத்துகள் ஒப்பந்தம், சாதாரணமாக, நடைமுறைப் பரிவர்த்தனைகளின்மீதான செலுத்துகளுக்கே உரிமை அளிக்கின்றது; மூலதனப் பெயர்வுகளை எப்போதும் கடுமையான கட்டுப்பாடுகட்கு உட்படுத்தியே வைத்திருக்கின்றது. ஆனால், ஒரு நாடு இன்னொரு நாட்டிற்குக் கடனைத் திருப்பித்தரவேண்டியதிருக்கலாம்; அக் கடனை உடனே திருப்பிச் செலுத்தவேண்டிய நிலை அதற்கு ஏற்பட்டிருக்கலாம். அப்பொழுது, எந்த விகிதத்தில் அது தான் பெற்ற கடனைத்

[1] போருக்குப் பின்னர், பிரேஸிலுடன் பிரிட்டன் செய்துகொண்ட செலுத்துகள் ஒப்பந்தத்தை இன்னோர் உதாரணமாகக் குறிப்பிடலாம். எதிர்பார்த்ததைவிட பிரேஸில் பிரிட்டனிடமிருந்து அதிகமாக வாங்கிக்கொண்டு, அதனிடம் குறைவாகவே விற்றது. இதனால் அதற்கு 60 மில்லியன் பவுன்களுக்கும் மேற்பட்ட வாணிகக் கடன் ஏற்பட்டது. இதனால், அண்மையில் செய்துகொண்ட ஒப்பந்தப்படி, பிரேஸில் தனது முந்திய கடனையும் கொஞ்சம் கொஞ்சமாகத் திருப்பிச் செலுத்தவேண்டும் என விதி செய்யப்பெற்றுள்ளது.

திருப்பிச் செலுத்தவேண்டும் என்பதைச் செலுத்துகள் ஒப்பந்தம் நிர்ணயிக்கலாம். எந்த விகிதத்தில் குறிப்பிட்ட ஸ்டெர்லிங் இருப்புகளை வெளியிட்டு, அவற்றை நடைமுறைப் பரிவர்த்தனைகட்குப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்பதை, இவ்விதமாகப் பல்வேறு பிரிட்டிசுச் செலுத்து ஒப்பந்தங்களும் குறிப்பிட்டுள்ளன.

இரு நாடுகளிடையேமட்டும் ஏற்பட்டுள்ள ஒரு செலுத்துகள் ஒப்பந்தம், அவ்விரு நாடுகளும் தமது வாணிகத்தைச் சமநிலைப் படுத்திக்கொள்ள வேண்டுமென்று விதிக்கிறது. எவ்விதக் கட்டுப்பாடும் இல்லாதபோது, A என்ற நாடு, குறிப்பிடத்தகுந்த ஏற்றுமதி உபரியையோ, அல்லது இறக்குமதி உபரியையோ B யுடன் பெற்றிருக்கும். இவை தம்முடன் C என்ற நாட்டையும் சேர்த்துக்கொண்டால், இவற்றிடையே உள்ள செலுத்துகள் ஒப்பந்தத்தின் நலன்கள் இன்னும் மிகுதியாகும். அப்பொழுது, A நாடு, B-யுடன் கொண்டுள்ள இறக்குமதி உபரி, C-க்கு அது அளித்துள்ள ஏற்றுமதி உபரியால் ஈடு செய்யப்பெறும்; B யுடன் கொண்டுள்ள ஏற்றுமதி உபரியைக்கொண்டு, C இந்த முத்திற வாணிகத்தில் சமநிலையை உண்டாக்கிக்கொள்ளும். இவ்வித ஒப்பந்தத்தில் எவ்வளவிற்கு மிகுதியான நாடுகள் சேருகின்றனவோ, அவ்வளவு உச்ச அளவில், அவை தமக்குள் கொண்டுள்ள மொத்த வாணிகமும் சமநிலையை அடையும்.

இந் நோக்கோடு ஆராய்ந்தால், ஸ்டெர்லிங் பகுதியைப் பன்னேக்குச் செலுத்து ஒப்பந்தத்திற்கு உட்பட்ட ஓர் அமைப்பாகக் கருதலாம்; ஏனென்றால், ஸ்டெர்லிங் பகுதிக்குள் ஏற்படும் செலுத்துகட்கு எவ்விதத் தடையும் கிடையாது. இந்த ஸ்டெர்லிங் பகுதி முழுவதும் (தன்னால் முடிந்த அளவு டாலரைச் சம்பாதித்துக்கொண்டு) டாலருக்கு எதிராக, ஒருதலைப்பட்சமாக இயங்குகின்றன என்பது உண்மைதான். ஆனால், இப் பகுதி தனது டாலர் கொள்முதலைக் கட்டுப்படுத்திக் கொள்ளுகிறது. டாலர் பிரதேசங்களிலிருந்து நேரடியாக டாலர் பெற முயலாது, இப் பகுதியில் உள்ள ஒவ்வொரு நாடும் தமக்குள்ளேயே வாங்கி நிரவிக்கொள்ள முயல்கின்றன. இக் கட்டுப்பாடு இருந்தாலும், ஸ்டெர்லிங் பகுதிக்குள், டாலர் பரிவர்த்தனைகட்குத் தடையேதும் விதிக்கப்படுவதில்லை. இதே நிலை, ஓரளவு ஐரோப்பியச் செலுத்துகள் ஐக்கியத்திற்கும் பொருந்தும்.

ஸ்டெர்லிங் பகுதிக்கு வெளியில் உள்ள ஒவ்வொரு நாட்டுடனும், ஐக்கிய அரசு தனித்தனியான செலுத்துகள் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டுள்ளது. மாற்றுமுறைக் கணக்குமுறையின் வழியாகப் (transferable accounts) பலமுக ஒப்பந்தங்களுக்கு வசதி செய்யப்படுகின்றது. இதன்மூலம், ஸ்டெர்லிங், டாலர் பிரதேசங்கட்கு வெளியில்

உள்ள நாடுகள், ஸ்டெர்லிங் வடிவிலேயே தமது செலுத்துகளை அளிக்கமுடியும். என்றாலும், 1958 இறுதிக்குப் பின்னர், இம் முறை தேவைப்படவில்லை; ஏனென்றால், இப்பொழுதெல்லாம், நடப்பில் சம்பாதிக்கும் ஸ்டெர்லிங்குகளை (ஸ்டெர்லிங் பகுதியில் வசிக்காதவர்கள் சம்பாதிப்பது), டாலர் உட்பட எந்தச் செலாவணியிலும் எளிதாக மாற்றிக்கொள்ளக்கூடிய வசதி ஏற்பட்டிருக்கிறது.

செலுத்துகள் ஒப்பந்தங்கள் என்பன, நாணயமாற்றுக் கட்டுப்பாட்டின் கடுமையிலிருந்து தப்பி, வாணிகத்தை விரிவுபடுத்திக் கொள்ள உதவும் ஒருவகைச் சாதனங்களாகும். ஆனாலும், இச் செலுத்து ஒப்பந்தங்கள், நாணயமாற்றுக் கட்டுப்பாட்டால் விளைந்தனவேயாகும்! இப்பொழுது டாலருக்கு எதிராக ஒருதலைப் போக்கு இருப்பதனாலேயே அவை இன்றும் நிலைத்து இருக்கின்றன. இவை, வாணிபத்தைத் திசை திருப்பிச் செலுத்துகின்றன; அதாவது, ஒரு நாடு தன்னுடன் செலுத்து ஒப்பந்தம் செய்துகொண்டுள்ள இன்னொரு நாட்டிடமிருந்துமட்டுமே பண்டங்களை வாங்குகிறது; மூன்றாவதாக இன்னொரு நாட்டிடம் இதைவிட மலிவாகவும் திருப்தியாகவும் வாங்கமுடியுமென்றாலும், அதனிடம் உள்ள கடினச் செலாவணி காரணமாக, இந்த நாடு அதனிடம் பண்டங்களை வாங்குவதில்லை. நாணயமாற்றுக் கட்டுப்பாட்டை நீக்கிவிட முடியுமானால் அப்பொழுது செலுத்து ஒப்பந்தங்கள் தேவைப்படமாட்டா. இதன் பலனாக உலக வாணிப அளவு, மிகவும் பாராட்டத்தக்கவகையில் விரிவடைந்து, தராதரச் செலவுகளால் வரையறுக்கப்படும் வழியைப் பின்பற்றிச் செழிக்கும்.

## 4. மாற்றக்கூடிய ஸ்டெர்லிங்கு

ஸ்டெர்லிங் பகுதியில் வாழாத மக்களால் நடப்பில் சம்பாதிக்கப் பெற்ற ஸ்டெர்லிங்குகள், பாங்கு வைப்புகளில் அவர்கள் போட்டிருந்த ஸ்டெர்லிங் இருப்புகள் அல்லது கருவூல உண்டியல்கள் ஆகியவை 1958 இறுதியில் தங்கமாகவும் அல்லது டாலர் முதலிய எந்தச் செலாவணியாகவும் எவ்விதத் தடையுமின்றி மாற்றத்தக்கனவாயின.

பெரும்பாலான ஐரோப்பிய நாடுகள் இம் முறையை மேற்கொண்டமையால், ஐரோப்பியச் செலுத்துகளின் ஐக்கிய அமைப்பு (European Payments Union) செயல்படாமல் போய்விட்டது. இதற்குப் பதிலாக ஐரோப்பிய நாணய உடன்படிக்கை (European Monetary Agreements) என்ற புது அமைப்பு ஏற்பட்டது; ஏதேனும் பிழை நேர்ந்துவிட்டால் சரிக்கட்டுவதற்காகவே இவ்வமைப்பு ஏற்பட்டுள்ளது.

நடைமுறையில், ஸ்டெர்லிங் பகுதியில் வாழாத மக்கள், 'தாம் சம்பாதிக்கும் ஸ்டெர்லிங்குகளை வேறு செலாவணிக்கு மாற்றிக் கொள்ளும் வசதி நான்கு ஆண்டுகட்கு நீடித்தது. இவ்விதம் அவர்களால் நடப்பில் சம்பாதிக்கப்பெற்ற ஸ்டெர்லிங்கை 'மாற்றக்கூடிய ஸ்டெர்லிங்கு' (transferable sterling) என அழைத்தார்கள். மேலும், இதை இதர செலாவணிகளுடன் மாற்றக்கூடிய விகிதத்தை அதிகாரபூர்வமான விகிதத்திற்கு 1 சதவீத அளவிற்குள் நிர்ணயித்து, ஐக்கிய அரசு ஆதரித்து வந்தது. இங்ஙனம், ஸ்டெர்லிங்கை வேறெந்தச் செலாவணிக்கும் மாற்றிக்கொள்ள முடியும் என்ற நிலை ஏற்பட்டதால் ஸ்டெர்லிங்கை வைத்திருந்தோர்க்கு நம்பிக்கை ஏற்பட்டது; ஸ்டெர்லிங்கின் மாற்றுதல் விகிதம் பேணப்படும் என்ற உறுதி ஏற்பட்டது. இதனால், ஜூரிச், நியூயார்க் முதலிய அங்காடிகளில் முன்பு மேற்கொள்ளப்பெற்ற (மாற்றக்கூடிய ஸ்டெர்லிங்கின்) பரிவர்த்தனைகள் எல்லாம் இதுமுதல் லண்டனிலேயே நிகழ்ந்தன.

ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு உட்படாத எந்த நாட்டிலிருந்தும் வரும் இறக்குமதிகள் எல்லாம் இதுமுதல் நமது தங்கத்தையும் டாலர் இருப்பையும், டாலர் பிரதேசத்திலிருந்து நேரடியாக வரும் இறக்குமதிகளைப்போல வற்றச் செய்தன. 1959, மே மாதத்தில் இது உணரப்பட்டது. அப்பொழுது டாலர் பிரதேசங்களிலிருந்து இறக்குமதியாகும் பல்வேறு நுகர்ச்சிப் பொருள்களின் மீதிருந்த தடைகள் விலக்கப்பட்டன. இப் பொருள்கள் இதற்கு முன்பிருந்தே எவ்விதத் தடையுமின்றி மேற்கு ஐரோப்பிய நாடுகளிலிருந்து வரத் தொடங்கிவிட்டன. என்றாலும், இன்னும் சில கட்டுப்பாடுகள் டாலர் பிரதேசங்களிலிருந்து இறக்குமதியாகும் பொருள்களுக்கு (உதாரணமாக ஆலைத் துணிகள், மருந்துப் பொருள்கள்) விதிக்கப்பட்டே உள்ளன. டாலர் பிரதேச மோட்டார்கார்களுக்கு இன்னும் கோட்டா முறையே உள்ளது. (ஆனால், இதன் அளவு 600,000 பவுனிலிருந்து 1,500,000 பவுனுக்கு உயர்த்தப்பட்டுள்ளது.) தவிரவும், உலர்த்தப்பட்ட பழங்கள், சிலவகைப் பதன் செய்யப்பட்ட பழங்கள் ஆகியவற்றின் இறக்குமதிக்கும் கோட்டா முறை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. (இவையும் 1,500,000 பவுனிலிருந்து 7,700,000 பவுனுக்கு உயர்த்தப்பட்டுள்ளன.) இவ்விதம் ஸ்டெர்லிங்கை மாற்றத்தக்கதாக ஆக்குவதன் முதல் நோக்கம், பன்னாட்டு வாணிகத்தை எவ்விதக் கட்டுப்பாடுகட்கும் உட்படுத்தாது தடையின்றி வளர்க்கவேண்டும் என்பதுதான். டாலர் பிரதேசத்திலிருந்து வரும் இறக்குமதிகளில் தாராளப் பாங்கு ஏற்பட்டால், அது, அமெரிக்கா முதலிய இதர டாலர் நாடுகளின் இறக்குமதிக் கொள்கையிலும் அதிகமான தாராளப் போக்கை உண்டாக்க உதவும் என்று எதிர்பார்க்கப்பெறுகிறது.

என்றாலும், ஸ்டெர்லிங் முற்றிலும் மாற்றிக்கொள்ளத்தக்கதாக இன்னும் ஆகிவிடவில்லை. ஸ்டெர்லிங் பகுதியில் வாழும் மக்கள், டாலர் முதலிய இதர செலாவணிகளை வாங்குவதற்குப் பல தடைகள் உள்ளன; அயல்நாட்டுப் பயணங்களில் அவர்கள் செலவழிக்கக் கூடிய தொகைகட்கு இன்னும் வரம்பு கட்டப்பட்டிருக்கிறது. ஸ்டெர்லிங் பகுதியில் வாழாத மக்கள் தமது மூலதனத்தை ஸ்டெர் லிங்கிலிருந்து இதர செலாவணிக்கு மாற்றிக்கொள்ளுவதற்கும் ஓரளவு கட்டுப்பாடுகள் உள்ளன. (ஆனால், பல்வேறு அயல்நாட்டுச் செலுத்துநிலைக் குறிப்புகளிலிருந்து, இக் கட்டுப்பாடுகட்கெல்லாம் தப்பி, மூலதனம் இடம் பெயர்ந்துவிடுகிறது என்பது புலப்படு கின்றது.)

எனவே, ஸ்டெர்லிங் பகுதியில் வாழும் மக்கள், தாம் விரும்பும் வண்ணம் ஸ்டெர்லிங்கை வேறு எந்தச் செலாவணிக்கும் மாற்றிக் கொள்ளுவதற்கு இன்னும் நெடிதுகாலம் பிடிக்கும் (மேலும், அவர் களது மூலதனப் பெயர்வில் சில கட்டுப்பாடுகள் காலவரம்பின்றி நீடிக்கவே செய்யும்).

ஸ்டெர்லிங்கை முற்றிலும் மாற்றிக்கொள்ளத்தக்கதாக ஆக்க வேண்டுமானால், ஸ்டெர்லிங் பிரதேசம் மாதாமாதம், ஆண்டுக்கு ஆண்டு போதுமான அயல்நாட்டுச் செலாவணியைச் சம்பாதிக்க வேண்டும்; இச் செலாவணிகள், இதர உலகப் பகுதிகட்கு அது அளிக்கவேண்டிய செலுத்துதல்களுக்குப் போதியவையாக இருத்தல் வேண்டும்; மேலும் இதனிடம் இப்போதுள்ள மிகக் குறைந்த தங்க, டாலர் இருப்புகளை அதிகமாகக் கட்டியமைத்துக்கொள்ளும் அள விலும் இருத்தல்வேண்டும். இதிலிருந்து, ஸ்டெர்லிங் பகுதியிடம் எப்போதும் ஏற்றுமதி உபரி இருக்கவேண்டும் என்பது புலப்படுகின் றது. (அல்லது, பொதுவாகச் சொல்வதென்றால், இதன் நடப்புக் கணக்கில் உள்ள அயல்நாட்டுச் செலுத்துநிலையில், பற்று இனங் களைவிட வரவு இனங்களில் உபரி இருத்தல்வேண்டும்.) மேலும், ஏற்றுமதியில் கிட்டும் மிகுதியான வரவுகளையெல்லாம் இறக்குமதி கட்காக உடனடியாக அப்படியே செலவழித்துவிடுதல் கூடாது. ஸ்டெர்லிங் பிரதேசம், தான் இறக்குமதி செய்வதற்கு நிகராகத் தனது ஏற்றுமதிகளை விரிவடையச் செய்தல்வேண்டும்; தனது சொந்த உபயோகத்திற்குமேல் பொருள்களை உற்பத்தி செய்து அனுப்புதல்வேண்டும். இவற்றின் மூலம் தனது சேமிப்புகளை அதிகமாக்கிக்கொள்ளுதல்வேண்டும். இந்தவகையில் ஏற்கெனவே ஓரளவு வெற்றிபெற்றுள்ள கிரேட் பிரிட்டன்போன்ற ஒரு நாட்டிற்கு இது எளிதில் இயலும். ஆனால், இந்தியா, பிரிட்டனின் முன்னாள் குடியேற்ற நாடுகள் முதலிய வளர்ச்சிப் பின்தங்கிய நாடுகட்கு, இது

மிகவும் இடர்ப்பாடாயிருக்கும். இந் நாடுகள் தமது சமுதாய, பொருளாதார அபிவிருத்தித் திட்டங்களைச் செயல்படுத்துதற்கு அயல்நாட்டு மூலதனங்களின் உதவியையே எதிர்நோக்கி இருக்கின்றன. இத்துடன் இந் நாடுகளது சொந்த முயற்சிகள் சிறந்து, சேமிப்புகளும் உயர்ந்துவிட்டால், இவை விரைவான வளர்ச்சியைப் பெறமுடியும். இத்துடன், அமெரிக்கா, கிரேட் பிரிட்டன்போன்ற செல்வச் சிறப்புடைய நாடுகள் தாராளமான பொருளாதார உதவிகளை இவற்றிற்கு அளித்தால், முன்பைவிட இந் நாடுகள் இன்னும் துரிதமான வளர்ச்சி நிலையை அடையமுடியும்.

# 39. போர்ப் பிற்கால நிலவரம்
## (The Post-war Situation)

### 1. போர் முடிந்தவுடன் ஏற்பட்ட நிலைமை

இரண்டாம் உலகப் பெரும்போர் முடிந்தது. போரின் விளைவாக, போர்வயப்பட்ட நாடுகளில் பெரும்பான்மையானவை, கடுமையான பொருளாதாரச் சீர்குலைவுகட்கு ஆளாயின. ஜப்பானும் ஐரோப்பா கண்டத்து நாடுகள் பலவும் பேரழிவுக்கு உள்ளாயின. பிற நாடுகளுடன் ஒப்பிடுகையில், பிரிட்டனுக்கு ஓரளவே பொருட்சேதம் ஏற்பட்டாலுங்கூட, அதுவும் பொருளாதாரச் சீர்குலைவால் மிகவும் பாதிக்கப்பட்டது. நாட்டின் அத்தியாவசியப் பொருள்களை இறக்குமதி செய்வதற்கு வேண்டிய அளவுக்காவது ஏற்றுமதிகளைப் பெருக்குவதற்கான முயற்சியிலீடுபடுவதற்கும், இராணுவத்திற்கும் போர்த் தளவாட உற்பத்திக்கும் செலவிடப்பட்ட நாட்டு வளங்களைத் திசை திருப்புவதற்கும், உரிய அவகாசம் பிரிட்டனுக்குத் தேவைப்பட்டது. தவிரவும், போரில் நேரடியாக ஈடுபடாத இந்தியா, எகிப்து, அர்ஜென்டைனு போன்ற நாடுகள், போரிலீடுபட்ட நாடுகட்குப் பொருளும் பணியும் கடனுக உதவியமையால், அன்னியச் செலாவணி இருப்புகளை ஏராளமாகச் சேகரித்து வைத்திருந்தன. இந் நாடுகளும், தமக்கு வேண்டிய இறக்குமதிப் பொருள்களின் பற்றாக் குறையினுல் பெரிதும் இடர்ப்பட்டன.

### 2. பன்னுட்டு நாணய நிதி
(The International Monetary Fund)

போர்ப் பிற்கால அண்மையில், இவ்விதம் பொருளாதார இடர்ப்பாடுகள் ஏற்படக்கூடும் என்று ஏற்கெனவே ஓரளவு எதிர்பார்க்கப்பட்டது. 1944 ஜூலையில் நிகழ்ந்த பிரெட்டன் வுட்ஸ் மாநாட்டில் (Bretton Woods Conference) இரண்டு புதிய பன்னுட்டு அமைப்புகள் நிறுவப்பெற்றன. இவற்றுள் ஒன்று, பன்னுட்டுப் புனரமைப்பு வளர்ச்சி பாங்கு (The International Bank for Reconstruction and

Development). இந்த நிறுவனம், பொருளாதார வாழ்வு குலைந்த நாடுகள் நீண்டகாலக் கடனுதவி பெற்றுத் தம் நிலையைச் சீர்செய்து கொள்ளவும், தமது பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்துகொள்ளவும் உதவும் நோக்கத்துடன் அமைக்கப்பட்டது. மற்றொன்று, பன்னாட்டு நாணய நிதி. இந்த நிறுவனம், பன்னேக்க வாணிபத்தை (multilateral trade) உலகெங்கும் பரப்ப உதவும் வகையில் அமைக்கப்பட்டது. உறுப்பு நாடுகள், தமது செலாவணியின் நாணயமாற்று மதிப்பை நிலையாகப் பேணிவர உதவுவதன்மூலம், பன்னேக்க வாணிகத்திற்கு ஆக்கம் தர முடியுமென இது கருதியது. இதனால் நாளடைவில், பொன் நாணயத் திட்டத்திற்கே (gold standard) பொதுவாகத் திரும்ப நேரிடுமென்றும், மூலதனப் பெயர்ச்சி தவிர, இதர நாணயமாற்றுத் தடைகளெல்லாம் அகற்றப்பட்டுவிடுமென்றும் நம்பப்பெற்றது.

பன்னாட்டு நாணய நிதியில் சேர்ந்துள்ள ஒவ்வோர் அங்க நாடும், நிதிக்குச் செலுத்தவேண்டிய பங்கு இவ்வளவு என்றும், நிதியிலிருந்து பெறக்கூடிய அளவு இவ்வளவு என்றும் வரையறுக்கும் கோட்டா முறை உள்ளது. ஒவ்வோர் உறுப்பு நாடும் தனது கோட்டாவில் 25 சதவீதத்தைத் தங்கமாகவும் (அல்லது தனது தங்க இருப்பில் 10 சதவீதம்—இவ்விரண்டில் எது குறைவாயிருக்கிறதோ அதை) எஞ்சிய பகுதியைத் தனது சொந்த நாணய வடிவிலும் அளிக்கிறது. இதில் அங்கம் பெற்ற 44 நாடுகளது ஆரம்ப கால மொத்தக் கோட்டா 8·8 பில்லியன் டாலர்களாகும். இதில் அதிகமான பங்கை அளித்த நாடுகள் பின்வருவன: அமெரிக்கா (2·75 பில்லியன் டாலர்), ஐக்கிய அரசு (1·3 பில்லியன் டாலர்), ருஷ்யா (1·2 பில்லியன் டாலர்) என்றாலும், ருஷ்யா இந்த நிதியில் (பாங்கில்) சேரவில்லை. என்றாலுங்கூடப் பல புதிய நாடுகள் சேர்ந்தமையால், இதன் உறுப்பினர் தொகை எழுபதுவரைக்கும் உயர்ந்தது. ஐந்தாண்டுகட்குள், ஒவ்வோர் உறுப்பு நாடும், தனது செலாவணிக்குரிய தங்க ஒப்புதல் அளவைப் பிரகடனப்படுத்த வேண்டும்; அதன்பின்னர் இந்த அளவை நிரந்தரமாக அவை பேணிவர முயலவேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

இதன் உறுப்பு நாடொன்றுக்கு அயல்நாட்டுச் செலுத்துநிலையில் தற்காலிகப் பற்றுக்குறை ஏற்பட்டால், எந்த ஓர் ஆண்டிலும், அதற்குரிய கோட்டாவில் 25 சதவீதம்வரை அயல்நாட்டுச் செலாவணியை அதற்கு விற்பதன்மூலம் இந்த நிதி உதவலாம்.[1]

[1] இந்த நிதி இவ்விதம் உதவுகையில் அலுவல் கட்டணமாக ஓர் ஆண்டுக்கு $\frac{3}{4}$ சதவீதம் விதிக்கிறது; இத்துடன் (முதல் மூன்று மாதங்களுக்குப் பின்னர்) ஆண்டொன்றுக்கு $\frac{1}{2}$ சதவீதம் வட்டிக் கட்டணமாக விதிக்கிறது. இந்த வட்டிக் கழிந்த பின்னர், ஆண்டுக்கு $\frac{1}{2}$ சதவீதம் அதிகமாகிறது;

இவ்விதம் தற்காலிக உதவி தரப்படுவதன் நோக்கம், பொருளாதார இடர்ப்பாடுற்ற நாட்டிற்கு மூச்சுவிடும் அவகாசமாவது அளிக்க வேண்டும் என்பதுதான். இதற்குள், அது தனது அயல்நாட்டுச் செலுத்துதலில், சமநிலையை மீண்டும் ஏற்படுத்திக் கொள்ளுவதற்கான வழிதுறைகளை உருவாக்கிக்கொள்ள முடியும்.

ஒரு நாடு, தனது செலாவணிக்குரிய பொன் ஒப்புதல் அளவை மாற்றிக்கொள்ள அனுமதிக்கப்பட்டது. இவ்வாறு மாற்றிக்கொள்ளவில்லையென்றால், அது தொடர்ந்து இடர்ப்பட நேரிடும் என்ற நிலை ஏற்பட்டால்மட்டுமே இந்த அனுமதி வழங்கப்பட்டது. அவ்விதம் ஏதேனும் மாறுதல் ஏற்படுவது தவிர்க்க முடியாதது என நேரிட்டால் இத்தகைய நாணயமாற்றுக் கட்டுப்பாட்டு விதிப்புகளைவிட, நாணய மதிப்பிறக்கத்தை மேற்கொள்ளுவது பரவாயில்லை என்று கருதப்பட்டது; என்றாலுங்கூட, கலந்தாலோசித்து உடன்பாடு செய்துகொள்ளுவதே உகந்ததெனக் கருதப்பட்டது. இதற்கு மாறாக, 1930ஆம் பத்தாண்டுகளில் ஏற்பட்டதைப் போன்று, போட்டியிட்டுக் கொண்டு, தனது அயல்நாடுகளிடம் நாணயமாற்றுத் தேய்மானங்கட்காகப் பிச்சையெடுக்கும் பழைய நிலை திரும்பி வரவே கூடாது. ஒரு நாட்டின் 'அடிப்படைச் சமநிலையின்மையை'க் (fundamental disequilibrium) கடந்து, ஓரளவு சமநிலையை ஏற்படுத்திக்கொள்ள உதவும் வகையில், அது 10 சதவீதத்திற்கும் மேற்பட்ட மதிப்பிறக்கத்தைச் செய்துகொள்ளக்கூடும்; ஆனால், அவ்விதம் செய்ய முற்படும் முன், அது இதர உறுப்பு நாடுகளின் இசைவைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

இந்த நிறுவனத்தின் விதிகளில் உள்ள ஒரு குறை என்னவெனில், ஒரு நாடு மேற்கொள்ள இருக்கும் மதிப்பிறக்கம் முதலிய நொய்மையான கொள்கைப் பிரச்சினைகள்கூட டைரக்டர்கள் சபையில் விவாதிக்கப்பட வேண்டியிருப்பதுதான். இதற்குப் பதிலாக, நிதி நாடுகளின் பிரதிநிதிகளாகச் சிறுசிறு குழுக்களாக அமைத்து, சம்பந்தப்பட்ட நாடுகள்மட்டும் கூடித் தமது தொடக்கப் பேச்சுவார்த்தைகளை நடத்தினால், சில சமரச இணக்கமுள்ள விஷயங்களிலாவது உடன்பாடு கொள்ள நிறைய வாய்ப்புகள் ஏற்படும்; நிதி நாடுகளின் நிலவரம்பற்றிய இரகசியங்கள் வெளியேறுவது தடுக்கப்படும்; இதனால் யூக வாணிப பேரங்கள் நடத்தும் முனைப்பும் தவிர்க்கப்படும்.

---

மேலும், நாளடைவில் ஒரு நாடு பெறக்கூடிய அதிகப்படியான அதன் 25 சதவீதக் கோட்டா ஒவ்வொன்றிற்கும், ஆண்டொன்றுக்கு அதிகப்படி கட்டணமாக இன்னும் $\frac{1}{2}$ சதவீதம் விதிக்கப்படுகிறது. இத்தகைய மொத்தக் கட்டணங்கள் ஆண்டுக்கு 4 சதவீத அளவை எட்டியதும், தனது செலாவணியைத் திரும்ப வாங்குவதற்கான வழிதுறைகளைக் காணுவதற்காக இந்த நாடு பன்னாட்டு நாணய நிதி நிறுவனத்தைக் கலந்தாலோசிக்க வேண்டும்.

இந்த நிதி மேற்கொள்ளக்கூடிய இதர நடவடிக்கைகளில் ஒரு குறிப்பிட்ட செலாவணியைமட்டும் 'அரிதானது' (scarce) என்று அது பிரகடனப்படுத்துவதைக் குறிப்பிடலாம். இதன்படி (நிதிச் சபையைக் கலந்த பின்னர்) இந்த அரிதான செலாவணியை உபயோகிப்பதில் நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளை உறுப்பு நாடுகள் விதிப்பதற்கு நிதி அனுமதி அளிக்கிறது. நாணயமாற்று நிலைபேற்றைக் குலைத்துவிடாமல், எல்லா நாடுகளும் இதே சதவீதத்திற்குத் தங்க ஒப்புதல்களைக் குறைத்துக்கொள்ளவும் ஆவன செய்கிறது.

நிதிக் குழுவுடன் உறுப்பு நாடுகள் கலந்தாலோசிப்பது ஏதோ பெயரளவில்தான் நடக்கிறது. 1949 செப்டம்பரில் ஸ்டெர்லிங்கை மதிப்பிறக்குதற்கு ஐக்கிய அரசு மேற்கொண்ட முடிவை இதற்கு உதாரணமாகச் சொல்லலாம். இப் பிரச்சினைபற்றி விரிவான முழு நேர விவாதம் நடந்தது; ஸ்டெர்லிங்கை மதிப்பிறக்குவதால் நேரிடக்கூடிய விளைவுகளெல்லாம் அலசி ஆராயப்பட்டன. எந்தவிதமான முடிவிற்கும் வருவதற்குள் இவ்வளவு சிரமங்களை மேற்கொள்ள வேண்டியிருந்தது. மேலும், பன்னாட்டு நாணய நிதி, டாலரை, 'அரிதான' செலாவணியாக ஒருபோதும் பெயரளவில் பிரகடனப் படுத்தவில்லை. என்றாலுங்கூடப் பல உறுப்பு நாடுகள், நிறுவனத்தின் முன் அனுமதியைப் பெறாமலே அயல்நாட்டுச் செலாவணிகளை உபயோகிப்பதில் பல கட்டுப்பாடுகளை விதித்துக்கொண்டன.

## 3. ஐக்கிய அமெரிக்கா

இங்ஙனம் எத்தனை நிறுவனங்களை அமைத்திருந்தபோதிலும், போர் முடிந்தபொழுது, உண்மையிலேயே உற்பத்தித்திற இருப்புடன் ஒரே ஒரு நாடுமட்டுமே திகழ்ந்தது; அதுதான் ஐக்கிய அமெரிக்க நாடு. பிற உலக நாடுகளுக்குத் தேவைப்பட்ட இறக்குமதிப் பொருள்களையெல்லாம் அளிக்கும் ஆற்றல் அந்த ஒரு நாட்டிற்குமட்டுமே இருந்தது. தமக்குத் தேவையான இறக்குமதிப் பொருள்களுக்குரிய கட்டணத்தைச் செலுத்துதற்குரிய வகையில் தங்கம் அல்லது டாலர் இருப்புகளுடன் சில நாடுகள் இருந்தன; என்றாலும், பல நாடுகள், தம் மக்களைப் பட்டினியிலிருந்து காக்கவும், பொருளாதார வாழ்வைப் புனரமைக்கவும் வேண்டிய இறக்குமதிப் பொருள்களைப் பெறவேண்டுமானால், அமெரிக்காவின் ஈடிணையற்ற தாராள உதவியின்றேல் இயலாது என்ற நிலையில் இருந்தன. 1945-க்கும் 1961-க்கும் இடைப்பட்ட பதினாறு ஆண்டுகளில் ஐக்கிய அமெரிக்க அரசாங்கம், பிற நாடுகளுக்கு அளித்த உதவிகளும் கொடைகளும் 37,000 மில்லியன் டாலரை விஞ்சின; இது தவிர, கடனாக 14,000 மில்லியன் டாலரும், தனியார் நன்கொடைகளாக

8,000 மில்லியன் டாலருக்கு மேலும் அளித்தது. இதே சமயத்தில், பிற நாடுகளில் ஏராளமான இராணுவச் செலவையும் சமீப ஆண்டுகளில் மேற்கொண்டுள்ளது. (அண்மையில், ஆண்டொன்றுக்கு 3,000 மில்லியன் டாலர்வரை செலவிட்டிருக்கிறது.) இங்ஙனம் செலவிடப்பட்ட தொகைகளில் பெரும்பகுதி, அமெரிக்க இராணுவம் உள்ள நாடுகளிலேயே செலவிடப்பட்டிருப்பதால், இத்தொகை, அந் நாடுகளின் இறக்குமதிக்குப் பேரளவு உதவி செய்துள்ளது.

1951ஆம் ஆண்டுவரை, அமெரிக்காவின் தாராள உதவியைப் பேரளவில் மேற்கு ஐரோப்பிய நாடுகளே பெற்றுவந்தன. மார்ஷல் உதவித் திட்டத்தின்மூலமாக இந் நாடுகள் பெற்ற தொகை 13,000 மில்லியன் டாலர்கள். ஐரோப்பிய நாடுகள், பொருளாதார ஆக்கம் பெறுவதைத் துரிதப்படுத்துவதும், தமது உற்பத்தி அளவையும் ஏற்றுமதிகளையும் அதிகப்படுத்திக் காலூன்றி நிற்க அவற்றிற்கு உதவுவதுமே மார்ஷல் திட்டத்தின் நோக்கமாகும். இந்த உதவித் திட்டம் 1951 இறுதியுடன் முடிந்துபோனாலும்கூட, சுதந்திர உலகப் பாதுகாப்பிற்கு உதவுவதற்கான படையமைப்புச் செலவுகளுக்காகப் 'பாதுகாப்பு உதவிகள்' என்ற பெயரில் இந் நாடுகள், அமெரிக்க உதவியைத் தொடர்ந்து பெற்றுவந்தன. 1951-க்குப் பின்னர், ஐரோப்பிய நாடுகளுக்குப் பதிலாக, அபிவிருத்தியடைய முற்படும் இதர உலக நாடுகளின் திசையில் அமெரிக்க உதவிகளும் திரும்பின. போர் நிறுத்தத்தைத் தொடர்ந்துவந்த ஆண்டுகளில், ஏராளமாக அன்னியச் செலாவணி உபரியைச் சேமித்துவைப்பது இவற்றுள் சில நாடுகளுக்குச் சாத்தியமாயிற்று ; தமது ஏற்றுமதிப் பொருள்களுக்கான விலைகள் உயர்ந்தமையாலும், வாணிப வீதங்களில் சாதகமான நிலைகள் ஏற்பட்டமையாலும், இவை நல்ல அனுகூலங்களைப் பெற்றன: என்றாலும், 1951-க்குப் பின்னர், இந் நாடுகளுக்கு ஏற்பட்ட சாதகமான வாணிப நிலைகள் குன்ற ஆரம்பித்தன ; இவை தம் சக்திக்கு மேற்பட்ட பொருளாதார அபிவிருத்தித் திட்டங்களைச் செயலாக்கத் தீவிரமாக முற்பட்டமையால், இவற்றின் அன்னியச் செலாவணி இருப்புகளும் கரைய ஆரம்பித்தன. இவ்விதமாக, ஐரோப்பிய நாடுகளின் தேவைகள் குறைந்தாலும்கூட, அபிவிருத்திப் பாதையில் நின்ற இதர நாடுகள் அவசர உதவியை நாடிநின்றன. இவற்றுள் பல, பொருளாதார அழிவுக்கு ஆட்படாமல் தப்பியமைக்கு அமெரிக்காவிடமிருந்து அவை பெற்ற உதவிகளே காரணமாகும்.

இத்தகைய பாரத்தையும் பளுவையும், அமெரிக்கா பல ஆண்டுகளாகப் பெரிய இடர்ப்பாடு ஏதுமின்றிச் சமாளித்து வந்தது. 1949 உடன் முடிந்த நான்காண்டுகளில், பண்டங்களின் ஏற்றுமதிமூலமாக ஏராளமான உபரியைப் பெற்றிருந்தமையால், பிற நாடுகளு

30,000 மில்லியன் டாலர்வரை அரசாங்க, தனியார் உதவிக்கொடைக ளாகவும், கடனுகவும், நன்கொடையாகவும் அளிக்க முடிந்தது; மேலும், பிற நாடுகட்குச் சொந்தமான டாலர் சொத்துகளைத் திருப்பி அளித்த வகையில் 3,000 மில்லியன் டாலர் செலவிட்டது; தவிரவும், தனது அபரிமிதமான தங்க இருப்புகளில், அதிகப்படியாக இன்னும் 4,500 மில்லியன் டாலரைச் சேர்த்துக்கொண்டது. அதன் பயனுக, 1949ஆம் ஆண்டிறுதியில், அமெரிக்காவின் தங்க இருப்பின் மதிப்பு 24,590 மில்லியன் டாலருக்குமேல் உயர்ந்துவிட்டது. இதை யடுத்த நான்காண்டுகளில் (கொரியப் போர் நடந்த ஆண்டுகளையும் சேர்த்து), அமெரிக்காவின் பண்ட ஏற்றுமதிக்கான உபரி (போர்த் தளவாடங்களைத் தவிர) சரியத் தொடங்கியது. டாலர் செலுத்துகள் 4,000 மில்லியன் டாலர்வரை உயர்ந்தன; தங்க இருப்புகள் 2,500 மில்லியன் டாலர் குறைந்தமையால் அது 22,100 மில்லியன் டாலர் வரை சரிந்தது. ஆனுல், இதையடுத்த நான்காண்டுகளில், ஐரோப்பிய நாடுகளுக்கு அளிக்கப்பட்ட உதவி குறைக்கப்பட்டதால், அமெரிக்கா வின் வாணிபச் செலுத்துநிலையில் அபிவிருத்தி ஏற்பட்டது. 1957ஆம் ஆண்டின் இறுதியில், அதன் தங்க இருப்புகள் மீண்டும் 22,900 மில்லியன் டாலருக்கு உயர்ந்துவிட்டன. எனவே, இதர நாடுகளில் எல்லாம் டாலர் பற்ருக்குறை மேலும் மேலும் அதிகரித்து, பற்ருக் குறை நிலையே நிரந்தரமாகிவிடும் என்று 1957ஆம் ஆண்டிறுதி வரைக்கும் பொதுவாகக் கருதப்பட்டது. இந்த டாலர் பற்ருக்குறை யைச் சமாளிப்பதற்கான வழிவகைகளை ஆராய்வதில் தீவிர கவனம் செலுத்தப்பட்டது.

என்ருலும்கூட, 1958ஆம் ஆண்டிறுதிக்குப் பின்னர், இந்த நிலைமை கொஞ்சம் கொஞ்சமாக மாறிவிட்டதென்பது தெளிவாகத் தெரிகிறது. 1957ஆம் ஆண்டிறுதிக்கும் 1961ஆம் ஆண்டிறுதிக்கும் இடைப்பட்ட ஆண்டுகளில், பண்ட இறக்குமதிகளைவிட, அவற்றின் ஏற்றுமதியில் மிகுதியான உபரிநிலையையே அமெரிக்கா பெற்று வந்தது. என்ருலுங்கூட, 22,900 மில்லியன் டாலர்வரை இருந்த அதன் தங்க இருப்புகள், 17,000 மில்லியன் டாலருக்கு வீழ்ந்து விட்டன; 1962-ல் இது 16,000 மில்லியன் டாலர்வரை சரிந்து விட்டது. இங்ஙனம் டாலர் பற்ருக்குறையில் தலைகீழான நிலைமை ஏற்பட்டதற்குப் பல காரணங்கள் உள்ளன. பண்ட ஏற்றுமதிக் கணக்கில் கிட்டிய உபரியின் சராசரி அளவு ஓரளவு குன்றியது; வெளிநாட்டில் செய்யப்பெற்ற முதலீட்டிற்குக் கிட்டிய வருமானம் சற்று உயர்ந்தாலுங்கூட, வெளிநாட்டில் செய்யப்பெற்ற தனியார் முதலீடுகளுக்கு ஈடுசெய்யப் போதுமான அளவுக்கு இது எஞ்சி யிருக்கவில்லை. இத்தகைய தனியார் முதலீடுகள், இக்கால அளவில் பிரிட்டனில் முதல் உலகப் பெரும்போருக்கு முன்னர் நிகழ்ந்ததைப்

அமெரிக்காவின் அயல்நாட்டுச் செலுத்துநிலை (மில்லியன் டாலரில்)

| | 1946-49 சராசரி | 1950-53 சராசரி | 1954-57 சராசரி | 1958-61 சராசரி |
|---|---|---|---|---|
| நடப்புக் கணக்கு | | | | |
| வருமானக் கணக்கு — | | | | |
| பண்டங்கள், சரக்குகள் ... ... ... ... | +7,041 | +2,247 | +4,153 | +3,493 |
| நிகர முதலீட்டு வருமானம் ... ... ... ... | +1,227 | +2,022 | +2,772 | +3,211 |
| இதர புலனாகாத இனங்கள் (நிகர) ... ... ... | இல்லை | —1,678 | —2,983 | —3,492 |
| மொத்த வருமானக் கணக்கு ... ... ... ... | +8,268 | +2,591 | +3,942 | +3,212 |
| நன்கொடைகள், உதவிக்கொடைகள் — | | | | |
| தனியார் ... ... ... ... ... | — 634 | — 447 | — 495 | — 591 |
| அரசாங்கம் ... ... ... ... ... | —3,261 | —2,579 | —1,702 | —1,815 |
| மொத்த நன்கொடைகள், உதவிக்கொடைகள் ... ... | —3,895 | —3,026 | —2,197 | —2,406 |
| நடப்புக் கணக்கு மொத்தம் ... ... ... ... | +4,373 | —435 | +1,745 | + 806 |

| | | | | |
|---|---|---|---|---|
| மூலதனக் கணக்கு | | | | |
| மூலதன ஏற்றுமதிகள் — | | | | |
| தனியார் ... ... ... ... ... | +1,027 | +1,374 | +2,062 | +3,214 |
| அரசாங்கம் ... ... ... ... ... | +2,185 | + 221 | + 146 | + 882 |
| மொத்த மூலதன ஏற்றுமதிகள் ... ... ... | +3,212 | +1,595 | +2,208 | +4,096 |
| அயல்நாட்டு இருப்புகளும் தங்கமும் — | | | | |
| திருப்பிச் செலுத்திய அயல்நாட்டில் சொந்தமான நிகர டாலர் இருப்புகள் ... ... ... ... | + 806 | —1,101 | — 109 | —1,540 |
| தங்க இருப்புகளில் உயர்வு ... ... ... ... ... | +1,124 | — 618 | + 192 | —1,477 |
| மொத்த அயல்நாட்டு இருப்புகளும் தங்கமும் ... ... | +1,930 | —1,719 | + 83 | —3,017 |
| மொத்த மூலதனக் கணக்கு ... ... ... | +5,142 | — 124 | +2,291 | +1,079 |
| கணக்கில் விட்டுப்போன இனங்கட்காக ... ... ... | — 769 | — 311 | — 546 | — 273 |
| மொத்தம்(நடப்புக் கணக்கில் உள்ள உபரியைச் சமமாக்குகிறது) | +4,373 | — 435 | +1.745 | + 806 |

போல) வெளிநாட்டு முதலீட்டால் பெற்ற வருமானம் அனைத்தையும் கிரகித்துக்கொண்டன. வெளிநாடுகளுக்கு அளிக்கப்பட்ட அரசாங்க நன்கொடைகளும், தனியார் நன்கொடைகளும் ஓரளவு அதிகமாயின; மேலும், அயல்நாடுகட்கு அளிக்கப்பட்ட அரசாங்கக் கடன்களும் கூடிவிட்டன. மொத்தத்தில் நடப்பு மூலதனக் கணக்கு, நீண்டகால முதலீட்டுக் கணக்கு ஆகிய இரண்டையும் இணைத்துப் பார்க்கையில், கிட்டிய நிகர இருப்பானது (கழிவுகள், விடுதல்களுக்கு ஒதுக்கியனபோக) 1954–57-ல் ஓரளவு உபரியாக இருந்தது. என்றாலும், இது, 1958–61-ல் ஒவ்வோர் ஆண்டும் 3,000 மில்லியன் டாலர் வரை ஏற்பட்ட பற்றாக்குறை காரணமாக, மேற்குறித்த ஆண்டுகளில் நிகரப் பற்றாக்குறையாகவே இருந்தது. இந்தப் பற்றாக்குறையில், ஒரு பாதி, அயல்நாட்டில் சொந்தமாகப் பேணிய டாலர் இருப்புகள் உயர்ந்தமையால் சரிக்கட்டப்பட்டது; மறு பாதியை, தங்க இருப்புகளிலிருந்து ஈடுகட்ட நேரிட்டது; இது நான்காண்டுகளில் 6,000 மில்லியன் டாலர்வரை உயர்ந்துவிட்டது.

## 4. ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகம்
## (The European Economic Community)

அமெரிக்காவின் அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்புகள் கரைந்ததற்கும், அதன் தங்க இருப்புகள் குறைந்ததற்கும் காரணமாக இருந்தவை, சில மேற்கு ஐரோப்பிய நாடுகளாகும். குறிப்பாக, ரோம் உடன்படிக்கையில் கையெழுத்திட்ட ஆறு நாடுகளும் ஒன்றாக இணங்கி, 1958-ல் ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகம் என்ற அமைப்பை உருவாக்கிக்கொண்டன. இந்தச் சமூகத்தில் அங்கம்பெற்ற ஆறு நாடுகளாவன—மேற்கு ஜெர்மனி, ஃபிரான்ஸ், இத்தாலி, ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க். போர் முடிந்த அண்மை ஆண்டுகளில், இந்த நாடுகள் அனைத்தும் தமது பண்டவாணிபத்தில் கடுமையான பற்றாக்குறைக்கு ஆளாகிப் பெரிதும் இடர்ப்பட்டன; வெளிநாடுகளில் இருந்து பெற்ற உதவிக் கொடைகளையும் கடன்களையும் கொண்டு பேரழிவினின்று இந் நாடுகள் தம்மைக் காத்துக்கொண்டன; இதில் அவற்றிற்கு அமெரிக்காவே பெரிதும் உதவியது; இவ்விதம் உதவி பெற்றாலும்கூட, அவை தமது பற்றாக்குறையைச் சமாளிப்பதற்காகத் தம்மிடம் எஞ்சியிருந்த அற்பமான தங்க இருப்புகளையும் அயல்நாட்டுச் செலாவணிகளையும் கரைக்கவேண்டியிருந்தது. என்றாலும்கூட, 1949-க்குப் பின்னர், இவற்றின் நிலைமை அபிவிருத்தியடையத் தொடங்கியது. பண்டவிற்பனையிலான பாதகமான அயல்நாட்டுச் செலுத்துநிலை கொஞ்சம் கொஞ்சமாகத் திருந்தி 1957-க்குப் பின்னர் சாதகமான நிலைக்குத் திரும்பியது. வெளிப்படையாகப் புலனாகாத இனங்களிலான

வருமானங்கள் உயர்ந்தன ; வெளிநாட்டிலிருந்து பெற்ற உதவிக் கொடைகளும் கடன்களும் மறைந்து, அவற்றிற்குப் பதிலாக, இதர நாடுகளுக்கு உதவிக் கொடைகளையும் மூலதனங்களையும் அளிக்கும் நிலை ஏற்பட்டது. இங்ஙனம் வெளிநாட்டிலிருந்து வருவது

ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகத்தின்[1]
கூட்டு அயல்நாட்டுச் செலுத்துகள்

(மில்லியன் டாலர்களில்)

| | 1947–49 சராசரி | 1950–53 சராசரி | 1954–57 சராசரி | 1958–60 சராசரி |
|---|---|---|---|---|
| நடப்புக் கணக்கு | | | | |
| பண்டங்கள், சரக்குகள் | —3,147 | — 945 | — 281 | +1,761 |
| நிகர, புலனுகா ஏற்றுமதிகள் ... ... | + 302 | + 549 | +1,272 | +1,691 |
| அரசாங்க உதவிக்கொடைகள் ... ... | +1,554 | +1,112 | + 59 | — 550 |
| மொத்த நடப்புக் கணக்கு | —1,291 | + 716 | +1,050 | +2,902 |
| மூலதனக் கணக்கு | | | | |
| நிகர மூலதன ஏற்றுமதிகள் | | | | |
| தனியார் ... ... | — 406 | — 209 | — 97 | — 684 |
| அரசாங்கம் ... ... | — 365 | + 193 | + 200 | + 990 |
| மொத்த மூலதன ஏற்றுமதிகள் ... ... | — 771 | — 16 | + 103 | + 306 |
| அயல்நாட்டு இருப்புகளும் தங்கமும்— | | | | |
| அயல்நாடுகளில் அதிகார பூர்வமாக வைத்திருந்த குறுங்கால இருப்புகளில் நிகர உயர்வுகள் ... | — 434 | + 407 | + 275 | +1,077 |
| தங்க இருப்புகளில் உயர்வு | — 76 | + 282 | + 608 | +1,401 |
| மொத்த அயல்நாட்டு இருப்புகளும் தங்கமும் ... ... | — 510 | + 689 | + 883 | + 2,478 |
| மொத்த மூலதனக் கணக்கு | —1,281 | + 673 | + 986 | +2,784 |
| கழிவுகள், விடுதல் முதலியன | — 10 | + 43 | + 64 | + 118 |
| மொத்தம் (நடப்புக் கணக்கில் உள்ள உபரியைச் சமமாக்குகிறது.) | —1,291 | + 716 | +1,050 | +2,902 |

[1] ஃபிரான்ஸ், மேற்கு ஜெர்மனி, இத்தாலி, ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க்.

குறைந்து, பிற நாடுகளுக்கு அனுப்புவது கூடினாலும்கூட, 1950 முதல் 1957வரை உள்ள காலஅளவில், நடப்புக் கணக்கிலும், நீண்ட கால மூலதனக் கணக்கிலும் குறிப்பிடத்தக்க உபரிகள் கிட்டின. 1958-க்குப் பின் இந்த உபரிகள் மிகப் பெரிதாகிவிட்டன.

1950–60 ஆகிய பத்தாண்டுக்காலம் முழுவதும், மொத்த உபரியில் பாதிக்கும் குறைவாகவே, அயல்நாட்டுச் செலாவணி இருப்புகளை உயர்த்திக்கொள்ளுவதற்கு உபயோகிக்கப்பட்டது. தங்க இருப்புகளை உயர்த்திக்கொள்ளுவதற்குப் பாதிக்குமேல் உபயோகிக்கப்பட்டது. ஆறு நாடுகளுக்குமான தங்க இருப்புகள், 1946 இறுதியில் 1,900 மில்லியன் டாலரிலிருந்து, 1949 இறுதியில் 1,672 மில்லியன் டாலர்வரை குறைந்தன. பின்னர் உயரத்தொடங்கின. 1953 இறுதியில் 2,801 மில்லியன் டாலர்களும், 1957 இறுதியில் 5,233 மில்லியன் டாலர்களும், 1961 இறுதியில் 10,839 மில்லியன் டாலர்களும், 1962 இறுதியில் 11,455 மில்லியன் டாலர்களுக்குக் குறையாமலும் தங்க இருப்புகள் உயர்ந்தன.

இந்தப் பொருளாதாரச் சமூகத்தில் இணைந்த நாடுகளுக்கு, இத்தகைய அயல்நாட்டுச் செலாவணிநிலை அபிவிருத்தியும், தங்க இருப்புகளில் உயர்வும் வெவ்வேறு சமயங்களில் ஏற்பட்டன. ஜெர்மனி, ஹாலந்து நாடுகளில் 1950-க்குப் பின்னர், அயல்நாட்டுச் செலாவணி நிலையில் குறிப்பிடத்தக்க அபிவிருத்தி ஏற்பட்டது; பெல்ஜியத்தில் 1954-லிருந்து இந்த அபிவிருத்தி தோன்றியது; ஃபிரான்ஸ் 1958-ல் நாணய மதிப்பிறக்கம் செய்த பின்னரே அங்கு ஏற்பட்டது; கிட்டத்தட்ட இதே சமயத்தில், இத்தாலியிலும் அபிவிருத்தி நிலை ஏற்பட்டது. இத்தகைய அபிவிருத்தி நிலைகளின் விளைவாக, தேசியத் தங்க இருப்புகளில் ஏற்பட்ட மாறுதல்களைப் பின்வரும் அட்டவணையின் மூலமாகத் தெரிந்துகொள்ளலாம்.

1949-க்கும், 1962–க்கும் இடையில் ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகக் கூட்டு நாடுகள் தமது தங்க இருப்புகளை 10,000 மில்லியன் டாலர்வரை உயர்த்திக்கொண்டிருக்க, அமெரிக்காவின் தங்க இருப்புகள் 8,500 மில்லியன் டாலருக்குச் சரிந்துவிட்டதைக் காணலாம். இந்தப் பதினைந்து ஆண்டுகளில், அமெரிக்காவும், ஐரோப்பியப் பொருளாதாரச் சமூக நாடுகளும் சேர்ந்து 1,500 மில்லியன் டாலருக்குக் குறைவாகவே ஈட்டியுள்ளன; அல்லது இவ்வாண்டுகளில் புதிதாகத் தோண்டி யெடுக்கப்பெற்ற தங்கத்தில் 15 சதவீதத்திற்கும் குறைவாகவே இவை பெற்றுள்ளன. புதிதாக வெட்டியெடுக்கப்பட்ட தங்கத்தில் பெரும்பான்மையான எஞ்சிய பகுதிகள் எல்லாம் தொழிலிலும், கைத்திற ஆபரணக் கலையிலும் உபயோகிக்கப்பட்

டன; அல்லது தனி நபர்களால் பதுக்கப்பெற்றுள்ளன. இவ்விதம் தனி நபர்கள் தங்கத்தைப் பதுக்கி வைத்துக்கொள்ளுவது போர்க் காலத்திலிருந்து அதிகரித்திருப்பதாகக் கருதப்படுகிறது.

ஐரோப்பியப் பொருளாதாரச் சமூக நாடுகளின் தங்க இருப்புகள்

(மில்லியன் டாலர்களில்)

| | பின்வரும் ஆண்டுகளின் இறுதியில் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1946 | 1949 | 1953 | 1957 | 1961 | 1962 |
| ஜெர்மனி ... | ... | ... | 325 | 2,541 | 3,664 | 3,679 |
| ஃபிரான்ஸ் ... | 872 | 523 | 617 | 581 | 2,121 | 2,587 |
| இத்தாலி ... | 28 | 256 | 346 | 452 | 2,225 | 2,243 |
| ஹாலந்து ... | 265 | 195 | 737 | 744 | 1,581 | 1,581 |
| பெல்ஜியமும் லக்ஸம்பர்க்கும் ... | 735 | 698 | 776 | 915 | 1,248 | 1,365 |
| ஐரோப்பியப் பொருளாதாரச் சமூக நாடுகளின் கூட்டு மொத்தம் ... | 1,900 | 1,672 | 2,801 | 5,233 | 10,839 | 11,455 |

## 5. ஐக்கிய அரசு (U.K.)

மேற்கு ஐரோப்பாவில் அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்புகளை அபிவிருத்தி செய்துகொள்ளுவதில் ஓரளவுமட்டுமே பயன் பெற்ற நாடு ஐக்கிய அரசு ஒன்றே ஆகும். ஐக்கிய அரசுக்கும், இதர ஐரோப்பிய நாடுகளுக்கும் எத்தனையோ வகைகளில் வேறுபாடுண்டு. உதாரணமாக, டாலரைப்போல ஸ்டெர்லிங்கும் பன்னாட்டு இருப்புச் செலாவணியாகப் பரவலாகப் பயன்படுத்தப்படுகிறது. இவ்விதம் பன்னாட்டுச் செலாவணியாக ஸ்டெர்லிங் இருப்பைப் பேணிவருவது முதல் உலகப் பெரும்போருக்கு முன்பிருந்தே பழக்கத்தில் இருந்து வருகிறது. அப்பொழுதெல்லாம் பெரும்பான்மையான பன்னாட்டுப் பரிவர்த்தனைகள் ஸ்டெர்லிங் மூலமாகவே நடந்தன; எனவே, இதர நாடுகளெல்லாம் தமது வெளிநாட்டுச் செலாவணி இருப்புகளில் தங்கமாக இருந்த பகுதிபோக எஞ்சியவற்றை ஸ்டெர்லிங் வடிவிலேயே பேணிவந்தன. இன்றளவும் பன்னாட்டுப் பரிவர்த்தனைகளில் கிட்டத்தட்ட பாதிவரை ஸ்டெர்லிங்மூலமாகவே நடப்பதால், பெரும்பான்மையான நாடுகள் கணிசமான அளவு ஸ்டெர்லிங் இருப்புகளை லண்டனில் பேணிவருவது சவுகரியமானதெனக் கருதுகின்றன.

இந்த ஸ்டெர்லிங் இருப்புகள் எல்லாம் ஒரு சிறு பகுதி தவிர, லண்டன் பாங்குகளிலேயே வைப்பிருப்பாகப் போடப்படுவதில்லை. அரசாங்கப் பத்திரங்களிலும், ஈடுகளிலும் இவை முதலீடு செய்யப் பெறுகின்றன; அல்லது ஸ்தல ஸ்தாபன அமைப்புகட்குக் கடனாக வழங்கப்படுகின்றன. ஆனால், இவ்விதம் முதலீடு செய்யப்பெற்ற தொகைகளில் பெரும் பகுதியை உடனடியாகவோ அல்லது குறுகிய காலத் தவணையிலோ திரும்பப் பெற்றுக்கொள்ள முடியும். அப்படிச் செய்தால், தங்க இருப்புகளும், அன்னியச் செலாவணி இருப்புகளும் வீழ்ச்சியடையும். இந்த ஸ்டெர்லிங் இருப்புகளை பிரிட்டனின் ஏற்றுமதிகளுக்காகச் செலவிட்டாலுங்கூட, இந்த ஏற்றுமதிகட்காக உடனடிச் செலுத்துதல் ஏதும் அளிக்கப்படமாட்டாது. ஐக்கிய அரசு தான் பெற்ற கடனைத் திருப்பித் தருவதற்குரிய வடிவில், 'ஈடுசெய்ய இயலாத ஏற்றுமதிகள்' (unrequited exports) என்று அழைக்கப் பெறும்.

மொத்த ஸ்டெர்லிங் இருப்புகளை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். இதில் முதல்வகை, ஸ்டெர்லிங் இருப்புகளில் கிட்டத்தட்ட மூன்றில் இருமடங்கை ஸ்டெர்லிங் பிரதேசத்தின் இதர நாடுகளே வைத்துள்ளன. ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளில் கானடா தவிர, இதர எல்லா பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளும், அயர்லாந்து, தென் ஆப்பிரிக்கா போன்ற காமன்வெல்த்தைச் சேராத சில நாடுகளும் தம்முடைய வெளிநாட்டுச் செலாவணி இருப்புகளில் பெரும்பகுதியை ஸ்டெர்லிங் வடிவிலேயே வைத்திருக்கின்றன. தமது அயல்நாட்டுச் செலுத்து நிலையில் ஏதேனும் பற்றுக்குறை ஏற்பட்டால் அதனைச் சரிக்கட்டுதற்குமட்டுமே ஸ்டெர்லிங் இருப்புகளை இந் நாடுகள் உபயோகிக்கின்றன; இதர சந்தர்ப்பங்களில் சாதாரணமாக ஸ்டெர்லிங் இருப்புகளைத் திரும்பப் பெற்றுக்கொள்ளுவதில்லை. இதற்குப் பதிலாக ஸ்டெர்லிங் பிரதேசத்தின் இதர நாடுகளுக்கு மூலதன ஏற்றுமதி செய்வதில் ஐக்கிய அரசு எவ்விதக் கட்டுப்பாடும் விதிப்பதில்லை. (ஆனால், ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள், ஐக்கிய அரசுக்கு மூலதன ஏற்றுமதி செய்வதில் தமக்குள்ளே சில கட்டுத்திட்டங்களை ஏற்படுத்திக்கொள்ளுகின்றன.)

ஸ்டெர்லிங் பிரதேசத்தைச் சாராத நாடுகளிடம் உள்ள ஸ்டெர்லிங் இருப்புகள் இரண்டாவது வகையைச் சாரும். 1945ஆம் ஆண்டு இறுதியில் ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளிடமிருந்த இருப்புகளைப் போல் கிட்டத்தட்ட பாதி அளவு ஸ்டெர்லிங் பிரதேசத்தைச் சாராத நாடுகளிடம் இருந்தன. இந்த இருப்புகள் அதன்பின்னர் கொஞ்சங் கொஞ்சமாகக் குறையத் தொடங்கின. 1957-ல் ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின் இருப்புகளின் அளவில் கால் பகுதிக்குக் குறைந்துவிட்டன; அதாவது, நடப்புப் பரிவர்த்தனைகளுக்குத் தேவைப்படக்

கூடிய குறைந்தபட்ச இருப்புகளைவிடச் சற்றுக் கூடுதலாக இருந்தன என்றாலும், செலாவணிகளின் நிலைபேற்றில் ஏற்பட்ட நம்பிக்கையின் காரணமாகவும், சமீப காலங்களில் லண்டனில் கிட்டும் உயர்ந்த வட்டி வீதத்தின் காரணமாகவும், இந்த ஸ்டெர்லிங் இருப்புகள் மீண்டும் உயரத் தொடங்கியுள்ளன. 1962ஆம் ஆண்டிறுதியில், ஸ்டெர்லிங் பிரதேச இருப்புகளின் அளவில் மூன்றில் ஒரு பங்குக்குச் சமமாகப் பெருகிவிட்டன. என்றாலுங்கூட, லண்டனில் நிலவும் குறுகிய கால வட்டி வீதங்கள் வீழ்ந்தாலோ, ஸ்டெர்லிங் நாணய மதிப்பிறக்கம் ஏற்படும் என்ற அச்சம் பரவினாலோ இந்த இருப்புகளை விரைவில் திரும்பப் பெற்றுக்கொள்ளக்கூடிய வாய்ப்பும் இருப்பதை நினைவிற்கொள்ளவேண்டும்.

ஸ்டெர்லிங் இருப்புகள் உள்ள மூன்றும் வகை, பிரதேசம் சாராத நிறுவனங்களிடம் உள்ள ஸ்டெர்லிங் இருப்புகளாகும். இந்த இனத்தில் பன்னாட்டு நாணய நிதியை (International Monetary Fund) முக்கியமாகக் குறிப்பிடலாம். பெரும்பாலான ஆண்டுகளில் இந்த இருப்பு எவ்வாறு சேர்ந்தது என்றால், பன்னாட்டு நாணய நிதியின் மூலதனத்திற்கு ஐக்கிய அரசு அளிக்கவேண்டிய பகுதிக்குச் சமமாகச் சேர்ந்த பகுதியே ஆகும். இவை தங்கமாக அளிக்கப்படவில்லை; இவற்றிற்கு வட்டியும் கிடையாது. ஐக்கிய அரசு நிதிக்கு வழங்க வேண்டிய மூலதனத்திற்கும் அதிகமாகச் சேர்ந்துள்ள பகுதிகளே ஐக்கிய அரசின்பேரால் நிதியில் உள்ள நிகர பொறுப்புகளாகக் கருதப்படும்.

ஐக்கிய அரசின் ஸ்டெர்லிங் இருப்புகளும் தங்க இருப்புகளும்
1. மில்லியன் பவுனில்

| | பின்வரும் ஆண்டுகளின் இறுதியில் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1945 | 1949 | 1953 | 1957 | 1961 | 1962 |
| ஸ்டெர்லிங் இருப்புகள் | | | | | | |
| ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளில் | 2,397 | 2,158 | 2,715 | 2,608 | 2,631 | 2,675 |
| ஸ்டெர்லிங் பிரதேசத்தைச் சாராத நாடுகளில் ... | 1,162 | 962 | 768 | 629 | 913 | 825 |
| மொத்தம் இருவகை நாடுகளில் ... ... | 3,559 | 3,120 | 3,483 | 3,237 | 3,544 | 3,500 |
| பிரதேசம் சாராத நிறுவனங்களில் ... .. | ... | 576 | 511 | 645 | 958 | 605 |
| மொத்த ஸ்டெர்லிங் இருப்புகள் .. .. | 3,559 | 3,696 | 3,994 | 3,882 | 4,502 | 4,105 |
| பிரதேசம் சாராத நிறுவனங்களின் மூலதன நிதிக்கு அளிக்கப்பட்ட பங்குகள் ... | ... | 560 | 560 | 565 | 820 | 829 |
| தங்க இருப்புகள், மாற்றத்தக்க செலாவணிகள் ஆகியன | 610 | 603 | 899 | 812 | 1,185 | 1,002 |

2. மில்லியன் டாலர்களில்

| | பின்வரும் ஆண்டுகளின் இறுதியில் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1945 | 1949 | 1953 | 1957 | 1 61 | 1962 |
| ஸ்டெர்லிங் இருப்புகள் ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் ... | 9,680 | 6,045 | 7,600 | 7,300 | 7,365 | 7,485 |
| ஸ்டெர்லிங் பிரதேசத்தைச் சாராத நாடுகள் ... | 4,680 | 2,695 | 2,150 | 1,760 | 2,555 | 2,310 |
| மொத்தம்-நாடுகளில் ... | 14,360 | 8,740 | 9,750 | 9,060 | 9,920 | 9,795 |
| பிரதேசம் சாராத நிறுவனங்களில் ... | ... | 1,610 | 1,430 | 1,805 | 2,680 | 1,695 |
| மொத்த ஸ்டெர்லிங் இருப்புகள் ... | 14,360 | 10,350 | 11,180 | 10,865 | 12,600 | 11,490 |
| பிரதேசம் சாராத நிறுவனங்களின் மூலதன நிதிக்கு வழங்கப்பட்ட பங்குகள் ... | ... | 1,568 | 1,568 | 1,582 | 2,295 | 2,320 |
| தங்க இருப்புகளும் மாற்றத்தக்க செலாவணிகளும் ... | 2,476 | 1,688 | 2,518 | 52,273 | 3,315 | 2,806 |

1938-ன் இறுதியில், ஐக்கிய அரசின் தங்க நிதி இருப்புகள் 600 மில்லியன் பவுனுக்குமேல் சென்றன; இது கடல்கடந்த நாடுகளுக்குச் சொந்தமாக வைத்திருந்த ஸ்டெர்லிங் இருப்புகளுக்கு நூற்றுக்கு நூறு சதவீதத்திற்குமேல் காப்பளிக்கப் போதுமான அளவில் இருந்ததென்று மதிப்பிடலாம். 1945ஆம் ஆண்டின் இறுதியில் தங்க இருப்புகள் சுருங்கத் தொடங்கின; ஆனால், போர் நிகழ்ந்த இடங்களில் ஏற்பட்ட செலவினங்களாலும், இறக்குமதிகட்குச் செலுத்தியமையாலும், ஸ்டெர்லிங் இருப்புகள் 3,500 மில்லியன் பவுனுக்குமேல் உயர்ந்துவிட்டன; இவற்றில் 17 சதவிகிதத்திற்கும் குறைவாகவே தங்க இருப்புகளால் காப்பீடு செய்யப்பெற்றன. போர் முடிந்த சில ஆண்டுகளுக்குள், போர்க்காலத்தே பெற்ற குறுகிய கால ஸ்டெர்லிங் நிலுவைகளில் பெரும்பகுதி திருப்பிச் செலுத்தப் பெற்றது; ஆனால், இதற்குப் பதிலாக மற்றொரு குறுகிய காலக் கடன் எழுந்தது; 1962-ன் இறுதியில் இருந்த ஸ்டெர்லிங் இருப்புகள் (பிரதேசம் சாராத நிறுவனங்களிடம் இருந்தவை போக)

1945-ல் இருந்த அதே அளவு ஸ்டெர்லிங் வீதத்திலேயே இருந்தன. இதற்கிடையே, தங்க இருப்புகளின் ஸ்டெர்லிங் மதிப்புகள் 1,000 மில்லியன் பவுனுக்குமேல் உயர்ந்துவிட்டன. (1949-ல் ஸ்டெர்லிங்கின் மதிப்பு 30 சதவீதம் இறக்கப்பட்டதால் தங்கத்தின் விலை ஏறியது; இதனுல் தங்க இருப்புகளின் ஸ்டெர்லிங் மதிப்பு உயர்ந்தது.) இங்ஙனம் மதிப்பு உயர்ந்தமையால், கடல் கடந்த நாடுகளுக்குச் சொந்தமாக இருந்த ஸ்டெர்லிங் இருப்புகள் 30 சதவீதம்வரை காப்பீட்டிற்கு உள்ளாயின. இதற்கு மாருக, நாம் டாலர் வீதத்தில் கணக்கிட்டுப் பார்ப்போம். இக் கணக்கின்படி, 1945-ல் 2,476 மில்லியன் டாலரிலிருந்து, 1962-ல் 2,806 மில்லியன் டாலராகமட்டுமே தங்க இருப்புகள் உயர்ந்துள்ளன; ஆனுல், 1949-ல் ஏற்பட்ட மதிப்பிறக்கம், அயல்நாடுகளுக்குச் சொந்தமான ஸ்டெர்லிங் இருப்புகளை, 1945-ல் 14,360 மில்லியன் டாலரிலிருந்து, 1962-ல் 9,795 மில்லியன் டாலர் வரைக்கும் கீழ் நோக்கிக் கொணர்ந்துவிட்டன என்பதைக் காணலாம்.

ஐக்கிய அரசால், தனது சர்வதேச இருப்புநிலையைக் குறிப்பிடத்தக்க அளவிற்கு வலுப்படுத்திக்கொள்ள முடியாமைக்கு (1949-ன் மதிப்பிறக்கத்தால் ஏற்பட்ட விளைவுகள் தவிர) முக்கிய காரணம் என்ன? பெரும்பாலான மேற்கு ஐரோப்பிய நாடுகளைப்போல, தனது நடப்புக் கணக்கின்மீதான அயல்நாட்டுச் செலுத்துநிலையைத் தொடர்ந்து மேம்படுத்திக்கொள்ள ஐக்கிய அரசு தவறிவிட்டது. ஆரம்ப ஆண்டுகளில், தனது இறக்குமதிகளுக்கெல்லாம் செலுத்தவும், ஸ்டெர்லிங் பிரதேசத்தின் இதர நாடுகளது மூலதனத்தில் கணிசமான பங்கை வழங்கவும் ஐக்கிய அரசால் முடிந்தமைக்குக் கடன்வடிவில் ஐக்கிய நாட்டிடமிருந்தும் கானடாவிடமிருந்தும் அது பெற்றுவந்த பேருதவிகளே காரணமாகும். 1949-ன் மதிப்பிறக்கத்தின் பின்னர்வந்த நான்காண்டுகளில், வெளிநாட்டு முதலீடுகள், இதரவகைப் புலனுகா ஏற்றுமதிகள், ஐக்கிய நாட்டின் தொடர்ந்த உதவி ஆகியவற்றின்மூலமாக, நடைமுறைக் கணக்கில் ஓரளவு சாதகமான அயல்நாட்டுச் செலுத்துநிலையை அடைவது சாத்தியமாயிற்று. என்றுலும்கூட, இந் நிலையில், தனது நீண்டகால மூலதன ஏற்றுமதிகளைப் பேணியதுடன், தங்க இருப்புகளையும் கணிசமாக உயர்த்திக்கொள்ளுவது ஐக்கிய அரசுக்குச் சாத்தியமாயிற்று. இதற்குக் காரணம், அதன் குடியேற்றப் பிரதேசங்கள், குறிப்பாக மேற்கு ஆப்பிரிக்கா, மலேயா முதலியன. ரப்பர், தகரம், கொக்கோ, எண்ணெய் வித்துகள் ஆகியவற்றின் ஏற்றுமதிகள்மூலமாகக் கிட்டிய இலாபங்களையெல்லாம், லண்டனில் ஸ்டெர்லிங் இருப்புகளாகப் பெருக்கிக்கொண்டேவந்தன. மேலே குறித்த ரப்பர் முதலிய பொருள்களின் விலைகள், கொரியப்போர் காரணமாகப் பெரிதும் உயர்ந்தமையால் இலாபவீதங்களும் உயர்ந்தன.

ஐக்கிய அரசின் அயல்நாட்டுச் செலுத்துநிலை
(மில்லியன் ஸ்டெர்லிங்கில்)

| | 1946-49 சராசரி | 1950-53 சராசரி | 1954-57 சராசரி | 1958-61 சராசரி | 1962 |
|---|---|---|---|---|---|
| நடப்புக் கணக்கு | | | | | |
| சரக்குகள் … … … … | —752 | —884 | —345 | —436 | —199 |
| நிகர முதலீட்டு வருமானம் … … … | +552 | +855 | +694 | +721 | +862 |
| இதர புலனாகா இனங்கள் … … … | —304 | +184 | + 14 | — 13 | —173 |
| நிகர அரசாங்க மானியங்கள் … … | +103 | +150 | + 89 | —228 | —302 |
| மொத்த நடப்புக் கணக்கு … … | —411 | +305 | +274 | + 44 | +188 |
| மூலதனக் கணக்கு | | | | | |
| நிகர மூலதன ஏற்றுமதிகள் | | | | | |
| தனியார்[1] … … … | +571 | +405 | +367 | + 95 | —347 |
| அரசாங்கம் : | | | | | |
| பன்னாட்டு நாணய நிதி சர்வதேசப் பாங்கு முதலியவற்றிற்கு வழங்கியவை … | +332 | — | + 3 | +179 | + 25 |
| இதர வகை … … … … | —1,213 | +106 | + 62 | +204 | +269 |
| மொத்த மூலதன ஏற்றுமதிகள் … | —250 | +511 | +432 | +478 | — 53 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அயல்நாட்டு இருப்புகளும் தங்கமும் | | | | | |
| திருப்பியளித்த நிகர ஸ்டெர்லிங்இருப்புகள் | | | | | |
| ஸ்டெர்லிங் பிரதேசத்தில்... ... ... | +239 | —389 | + 76 | — 16 | —123 |
| இதர நாடுகளில் ... ... .. | +200 | — 3 | +140 | —199 | +246 |
| பன்னாட்டு நாணய நிதி சர்வதேச பாங்கு ... | —403 | — 45 | — 95 | —219 | +988 |
| திருப்பியளித்த ஸ்டெர்லிங் இருப்புகளின் நிகர மொத்தம் ... ... ... | +36[2] | —347 | +121 | —434 | +1,111 |
| தங்க இருப்புகளில் உயர்வு ... ... ... | —197 | +207 | + 61 | +261 | —509 |
| மொத்த அயல்நாட்டு இருப்புகளும் தங்கமும் ... ... ... ... | —161 | —140 | + 60 | —173 | +602 |
| மொத்த மூலதனக் கணக்கு ... ... | —411 | +371 | +492 | +305 | +549 |
| தவறுகள், விடுதல்கள் வகையில் ... ... | [1] | — 66[1] | +218 | —261 | —361 |
| மொத்தம் (நடப்புக் கணக்கின் உபரியைச் சமமாக்குகிறது) ... ... ... | —411 | +305 | +274 | + 44 | +188 |

[1] 1946 முதல் 1951 வரையுள்ள ஆண்டுகளுக்கு தவறுதல், விடுதல் இனங்கள், தனியார் மூலதன ஏற்றுமதிகளுடன் சேர்த்துக் கணக்கிடப்பட்டுள்ளன.

[2] 1949 மதிப்பிறக்கத்தின் விளைவுகள் விடப்பட்டுள்ளன.

1953-க்குப் பின்னர், சரக்கு வாணிபச் செலுத்துநிலையில் (பெரும் பாலும் இறக்குமதிப் பொருள்களின் விலை இறக்கத்தால் நேரிட்டது) ஏற்பட்ட ஓரளவு அபிவிருத்தியும் பின்வருவனவற்றால் பாதிக்கப் பட்டது: அமெரிக்க உதவி நிறுத்தப்பட்டது; வெளிநாட்டு முத லீட்டு வருமானம், இதர புலனாகாச் சம்பாத்தியங்கள் என்பன குறைந்தன; வெளிநாடுகளில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் செல வினங்களும் மானியங்களும் அதிகமாயின. எனவே, சரக்கு வாணிபச் செலுத்துநிலையில் பெற்ற ஓரளவு அபிவிருத்தி நிலையை இவையெல் லாம் எதிரீடு செய்துவிட்டன. பலதடவைகள், தங்க இருப்புகளில் ஏற்பட்ட கடுமையான இழப்புகளைத் தவிர்ப்பதற்காக, பன்னாட்டு நாணய நிதி, இதர வெளிநாட்டு மத்திய பாங்குகள் ஆகியவற்றி லிருந்து தற்காலிகமாகப் பெருந் தொகையைக் கடனாகப் பெறவேண் டியதாயிற்று. சமீப காலங்களில், வெளிநாடுகளில் இருந்து நீண்ட தவணை, குறுகிய தவணை முதலீடுகளைப் பெறுதற்கேற்ற அளவில் லண்டனில் நிலவும் வட்டிவீதத்தை உயர்த்தவேண்டியதேற் பட்டது.

பிரிட்டனின் அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்புகள் சமீப கால நிலைகளைப்பற்றித் தெளிவாக மதிப்பிட முடியாத அளவில், புள்ளிவிபரங்களில் துரதிர்ஷ்டவசமாக ஏராளமான தவறுகள் ஏற்பட்டுள்ளன. இவற்றில் ஓரளவு, நடப்புக் கணக்கில் உள்ள புலனாகா வருமானங்களைக் குன்ற மதிப்பிட்டமையால் ஏற்பட்டவை என்று கருதினாலும், பெரும்பாலானவை, கண்டுபிடிக்கப்படாத மூல தன இறக்குமதிகளால் விளைந்தவை என்பதை மறுக்கமுடியாது.

## 6. மாறியுள்ள உலக நிலவரம்

உலகிலுள்ள தங்க நாணய இருப்புகளை எல்லாம் குறிப்பாக, 1957-லிருந்து மறுபகிர்வு செய்யவேண்டுமென்பது பொதுவாக வர வேற்கத்தக்கதே என்றாலும், இதுவும் சில பிரச்சினைகளைக் கிளப்பி யிருக்கிறது. வெளிநாடுகட்குச் சொந்தமான டாலர் இருப்பு களுக்கு எதிரான ஐக்கிய நாட்டின் தங்க இருப்புகள் பேரளவில் இருக்கின்றன; என்றாலும், வெளிநாட்டுக்குச் சொந்தமான ஸ்டேர் லிங் இருப்புகளுக்கு எதிராகப் போதுமான அளவு தனது தங்க இருப்புகளையும் வலுப்படுத்திக்கொள்ள முடியாத நிலையில் ஐக்கிய அரசு இருக்கும்பொழுது, ஐக்கிய அமெரிக்கா தனது தங்க இருப்பு களைப் பெருக்கிக்கொண்டே போவதால், உலகின் இவ்விரு பிரதானச் செலாவணி இருப்புகளின் நிலையும் சிக்கலுக்கு உரியதாகி இருக் கிறது. சர்வதேச நிதி நீர்மையை உயர்த்துதற்காக ஏற்கெனவே பன்னாட்டு நாணய நிதியின் நடவடிக்கைகள் புனரமைக்கப்பெற் றுள்ளன. இந்த நிதி, ஐரோப்பாவுக்கு ஏராளமான உதவிகளை

அமெரிக்கா வழங்கிய சமயத்தில் செயலற்று, இயக்கமற்றுப் போய் விட்டது. சர்வதேச நிதிநீர்மை அளிப்பை இன்னும் விரிவுபடுத்தி, உத்தரவாதமளிப்பதற்காகப் பல யோசனைகள் கூறப்பட்டுள்ளன. தங்கத்தின் விலையைப் பொதுவாக உயர்த்துவது, பன்னாட்டு நாணய நிதியை, முழுமையான ஆக்கம்பெற்ற உலக மத்திய பாங்காக மாற்றியமைத்து, தனக்குரிய பன்னாட்டு நாணய நிதியை உருவாக்கிக்கொள்ளும் ஆற்றலை அதற்கு நல்குவது என்பன அவற்றுள் சில யோசனைகளாகும். இச் சீரிய திட்டங்களுக்கெல்லாம் போதிய ஆதரவு இதுவரை கிடைக்கவில்லையென்றாலும், தெரிவிக்கப்பட்ட யோசனைகளின் அடிப்படையில் சில முயற்சிகள் மேற்கொள்ளப் பெற்றுள்ளன. இவற்றின் பயனாக, பன்னாட்டு நாணய நிதியின் மூலதனமும், கடன் அளிப்பு சக்தியும் வலுப்படுத்தப்பெற்றுள்ளன ; மத்திய பாங்குகள் தமக்குள்ளும், பன்னாட்டு நாணய நிதியோடும் அதிகமாக உறவு கொள்ள வழிதுறைகள் வகுக்கப்பெற்றுள்ளன; சர்வதேச நிதி நீர்மைப் பற்றாக்குறையாலும், உலகச் செலாவணி இருப்புகள் இரண்டின்மீதோ அல்லது ஒன்றின்மீதுமட்டுமோ அவநம்பிக்கை ஏற்படக்கூடுமோ என்ற அச்சத்தாலும் ஏற்படக்கூடிய விளைவுகள் பெருகப்பெருக, இதுபோன்ற நடவடிக்கைகள் இன்னும் மேற்கொள்ளப்பெறும் என்று எதிர்பார்க்கலாம்.

இதற்கிடையே, நாம் இப்பொழுது (மே, 1963) உலக வாணிபத்தை வரையறுக்கும் நிபந்தனைகளில் நிலைமாற்றம் ஏற்படக்கூடிய தொடக்கக் கூறுகளைக் கண்டுவருகிறோம். சமீப காலங்களில், ஐரோப்பாக் கண்டத்து நாடுகளில் சில, முழு வேலையுடைமை நிலையை எட்டிவிட்டன. குறிப்பாக ஃபிரான்சு, ஜெர்மனி ஆகிய நாடுகளில் ஏற்பட்டுள்ள முழு வேலையுடைமை, உற்பத்தி அளவு வீதத்தைவிடக் கூலிவீதங்களை உயர்த்திவருகிறது; அத்துடன், ஏற்றுமதித் தொழில்களில் விலைகளை உயர்த்தவும் துவங்கியிருக்கிறது. இந்த நிலையில், பிரிட்டனும் ஐக்கிய நாடுகளும், தத்தமது சொந்தப் பொருளாதார நிலைகளில் அபரிமிதமான தேவைகளைத் தொடர்ந்து தவிர்க்க முடியுமென்றால், இதர தொழிலியல் நாடுகளின் அபிவிருத்திகள், ஏற்றுமதிச் சந்தைகளில் அவற்றிற்குள்ள போட்டி நிலைகளை உயர்த்திக்கொள்ளவும், தமது அயல்நாட்டுச் செலுத்து நிலைகளை மேம்படுத்திக்கொள்ளவும் அவற்றிற்கு உதவக்கூடும். கச்சாப் பொருள்கள், உணவுப் பண்டங்கள் ஆகியவற்றின் அண்மைக்கால விலை உயர்வுகளின் பயனாக ஐக்கிய அரசின் அன்னியச் செலாவணி நிலை நன்கு வலுப்பெற முடியும். இந்த நிலை தொடர்ந்து நீடிக்குமேயானால், ஸ்டெர்லிங் பிரதேசம் அனைத்திற்கும் உரிய அயல்நாட்டுச் செலுத்து நிலை இருப்பை மேம்படுத்துதற்கும் இது முற்படக்கூடும்.

பிரிவு 8

# போர்ப் பிற்காலக் கொள்கை

## 40. போருக்குப் பின்னர் பிரிட்டனின் பொருளாதாரக் கொள்கை

### 1. போரால் ஏற்பட்ட மூலதன இழப்பு

போருக்குப் பின்னர் கிரேட்பிரிட்டனுடைய பொருளாதார வரலாற்றின் ஆண்டுவாரிக் கணக்கை அப்படியே தொகுத்துத் தருவது இந்த அதிகாரத்தின் நோக்கமன்று ; அதற்குப் பதிலாகப் பிரிட்டனின் பொருளாதாரக் கொள்கைகளில் ஏற்பட்டுள்ள சிறப்புக் கூறுகளையும், போக்குகளையும் மட்டுமே குறிப்பிடுவேன்.

போர்க்காலத்தில் எதிரியின் தாக்குதலால் சொத்துகள் சீரழிந்து சிதைக்கப்பெற்றன (ருஷ்யா, ஜெர்மனி நாடுகளில் ஏற்பட்ட அழிவைவிட இது மிகக் குறைவுதான்); கட்டடங்களும் இதர தொழில் அமைப்புகளும் குண்டுவீச்சால் தகர்க்கப்பட்டன ; கப்பல்கள் அமிழ்த்தப்பெற்றன. ஏறத்தாழ அரை மில்லியன் வீடுகள் தரைமட்டமாக்கப்பட்டன; குடியிருப்பதற்குத் தகுதியற்றனவாகச் சிதைக்கப்பட்டன. எஞ்சிய அரை மில்லியன் வீடுகள், நாட்பட்ட காரணத்தாலும், கைவிடப்பெற்ற காரணத்தாலும் மீண்டும் புனரமைக்க வேண்டிய நிலையில் இருந்தன. வணிகக் கப்பல்களின் பார அளவு 22 மில்லியன் டன்களிலிருந்து 16 மில்லியன் டன்களாகக் குறைந்துவிட்டது. மேலும், போர் முயற்சிகட்கு அவசியமற்ற இதர சொத்துகளின் பராமரிப்பெல்லாம் மிகக் குறைந்த அளவிற்கே அனுமதிக்கப்பட்டது. போர்ச் செயல்கட்கு உதவுதற்காகத் தளவாடங்களையும், உழைப்பையும் திசைதிருப்ப நேர்ந்ததால், தேய்ந்து சிதைந்துபோன கருவிகளைக்கொண்டே பல்வேறு தொழில்களும் உற்பத்தித் துறைகளும் இயங்கின. இதனால் சரக்கு

இருப்புகள் தீர்ந்துவிட்டன. தனிப்பட்டவர்களின் உறுதிச் சொத்துகள் எல்லாம் சிதைந்துபோயின.

இவ்விதம், போருக்குப் பின்னர் அமைதிக் கால ஆக்க வேலைகட்குப் போதிய திராணியற்ற வகையில், பிரிட்டன் நலிந்து திரும்பியது; போருக்குச் சென்றபொழுதிருந்ததைவிட இப்பொழுது இன்னும் தளர்ந்து போய்விட்டது.

மேலும், போருக்குப் பின்னர் பிரிட்டனுக்குப் பிறநாடுகளில் இருந்த சொத்துகள் குறைந்து, பற்றுப் பொறுப்புகள் அதிகமாகிவிட்டன. போர்ச் சமயத்தில் அமெரிக்கா முதலிய இதர நாடுகளிடமிருந்து பெற்ற தளவாடச் சரக்குகளுக்குச் செலுத்துதற்காக, பிரிட்டன் தனது தங்க இருப்பில் ஒரு பகுதியையும் (150 மில்லியன் பவுன்) அந்நிய நாட்டு முதலீட்டின் பெரும் பகுதியையும் (1,100 மில்லியன் பவுன்) விற்க நேரிட்டது. அயல் நாடுகளில் பிரிட்டனுக்கு ஏற்பட்ட போர்ச் செலவுகளால், இதர நாடுகளின் ஸ்டெர்லிங் இருப்புகள் உயர்ந்துவிட்டன. போருக்கு முன்னர் இதர நாடுகளிடம் இருந்த ஸ்டெர்லிங் இருப்பு 700 மில்லியன் பவுனுக்கும் குறைவு; இது போருக்குப் பின்னர் 3,680 மில்லியன் பவுன்களாகக் கூடிவிட்டது. போருக்குப் பின்னர், அமெரிக்கா 937 மில்லியன் பவுன்களையும், கானடா 312 மில்லியன் பவுன்களையும் இதற்குக் கடனாக வழங்கின. இக் கடன்களுக்கு பிரிட்டன் இன்னும் வட்டி செலுத்தி வருகின்றது.

போருக்கு முன்பெல்லாம், கிரேட்பிரிட்டன் மிகப்பெரிய கடன் அளிக்கும் நாடாக விளங்கியது. அதனுடைய வெளிநாட்டுப் பற்றுப் பொறுப்புகளைவிட, அதற்கிருந்த கடல்கடந்த முதலீடுகள், தங்க இருப்புகள் ஆகியவற்றின் மதிப்பு மிகப் பெரிது. (அதன் வெளிநாட்டுப் பற்றுப் பொறுப்புகளில் ஸ்டெர்லிங் இருப்புகள், வெளிநாட்டுப் பொதுக் கடன், கிரேட்பிரிட்டனில் உள்ள அயல்நாட்டுத் தனியார் முதலீடுகள் ஆகியன அடங்கும்.) இப்பொழுது, பிரிட்டன் மேற்கொண்டுள்ள ஆக்க முயற்சிகள் காரணமாக, அதன் வெளிநாட்டுப் பொறுப்புகளைவிட வெளிநாட்டில் அதற்குள்ள சொத்துகளின் மதிப்பு மீண்டும் உயரக்கூடும் என்றாலும், இது போருக்கு முந்தி இருந்த நிலைக்கு வரவியலாது.

இந்த வித்தியாசம், வட்டி, இலாபம், இலாப ஈவு ஆகியவற்றின் நிகர வருவாயிலிருந்து பெறப்படும் பிரிட்டனின் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் தெளிவாகப் புலப்படுகின்றது. போருக்கு முன்னர் இவ் வருவாய் ஆண்டுக்கு 200 மில்லியன் பவுன்களாக இருந்தது; இது இப்பொழுதைய இறக்குமதி விலைகளின் 700 மில்

லியன் பவுனுக்குச் சமமாகும். இவ் வருவாய் 1946-ல் 70 மில்லியன் பவுனுகக் குறைந்துவிட்டது. நல்லகாலமாக, அயல்நாடுகளில் உள்ள செலுத்துகளில் பெரும்பான்மையின நேரடியான முதலீடுகளாகவும், சாதாரணப் பங்குகளாகவுமே உள்ளன. ஐக்கிய அரசின் வெளிநாட்டுக் கடன்களின்மீதான சராசரி வட்டி வீதம் உயர்ந்த போதிலுங்கூட, நிகர முதலீட்டு வருமானம் கொஞ்சம் கொஞ்சமாக உயர்ந்தே வந்தது. இது 1962-ல் 308 மில்லியன் பவுன் அளவை எட்டியது; இந்த அளவில்கூட, 1938-ல் இருந்ததைப்போல, இது பாதி அளவுக்கே மதிப்புடையதாகக் கருதப்பட்டது. இவ்விதம், வெளிநாட்டு முதலீட்டு வருமானம் குறைந்தமையாலும், வெளிநாடுகளில் அரசாங்கத்தின் செலவினங்கள் மிகவும் உயர்ந்தமையாலும், ஐக்கிய அரசு தனது இறக்குமதிகளுக்குச் செலுத்துவதற்காக, தனது பண்ட ஏற்றுமதி அளவுகளைக் கணிசமாகப் பெருக்கவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது.

போர்க்காலத்தில், உள்நாட்டுத் தேசியக் கடன் நிலை 700 கோடியிலிருந்து 2,300 கோடிக்கு உயர்ந்துவிட்டது. (இப்போது 2,500 கோடிப் பவுனுக்குமேல் உயர்ந்துவிட்டது.) வெளிநாட்டுக் கடன் சுமையைவிட இது ஒரு சுமையாகத் தோன்ருதுதான். ஏனெனில், உள்நாட்டுத் தேசியக் கடன்களில் செலுத்தப்படும் வட்டிகள் உள்நாட்டில் வாழும் மக்களிடமே இடம் மாறிக்கொள்ளுகின்றன; வரி செலுத்துவோரிடமிருந்து கடன் அளித்தோருக்குச் செல்லுகின்றன; ஆனல், வெளிநாட்டுக் கடன்களுக்குச் செலுத்தப்படும் வட்டிகள், இந்நாட்டில் வாழாத அயல்நாட்டவரைச் சேருகின்றன. உள்நாட்டுக் கடன்களுக்கு அளிக்கப்படும் மிகுதியான மாற்றுச்செலுத்துகளுக்காக (transfer payments) மிகுதியான வரிவிதிப்புத் தேவைப்படும் என்பதும், இவ் வரிவிதிப்பினல் உழைத்து முதலீடு செய்தற்குரிய உற்சாகம் குலைந்துவிடும் என்பதும் உண்மையே; ஆனலும், இத்தகைய செலுத்துகள் ஒருபோதும் சமுதாயத்திற்குச் சுமையாகிவிடுவதில்லை.

இப்பொழுது, தேசியக் கடன்களுக்காகச் செலுத்தப்படும் வட்டி, ஆண்டொன்றுக்கு 1,000 மில்லியன் பவுன்கள்வரை ஆகிறது. ஆனல், இதில் அதிகமதிகமான பகுதிகள், ஈட்டமுள்ள சொத்துகளிலேயே முதலீடு செய்யப்பட்டுள்ளன. (தேசியமயமாக்கப்பெற்ற தொழில்கள், மாநில அரசுகள் ஆகியவற்றிற்கே பெரும்பாலும் கடனக வழங்கப்பட்டுள்ளன.) இம் முதலீடுகளால், மத்திய அரசாங்கத்திற்கு ஆண்டுதோறும் 400 மில்லியன் பவுன்கள் வட்டியாகக் கிட்டுகின்றன. எனவே, இதைக் கழித்துவிட்டால், நிகர வட்டிச் செலவு ஆண்டொன்றுக்கு 600 மில்லியன் பவுன்களே ஆகிறது.

1938-ல் நிலவிய $4\frac{1}{2}$ சதவீதத்துடன் ஒப்பிடுகையில், இது தேசிய வருமானத்தில் 3 சதவீதத்திற்கும் குறைவாகவே இருக்கிறது.

## 2. சில போர்ப் பிற்காலப் போக்குகள்

போர் முடிந்தபின்னர், சில ஆண்டுகள் இன்னலும் இடர்ப்பாடும் மிகுந்தன; இவ்வாண்டுகளில் குண்டுவீச்சுகளோ இருட்டடிப்புகளோ இல்லையென்றால் போர்க் காலத்தைவிடப் பொது மக்களின் வாழ்க்கைநிலை மிகவும் கொடுமை நிறைந்ததாகவே இருந்தது. ஒவ்வொரு தனிநபரின் சராசரி நுகர்வு அளவுகள், போருக்கு முந்தியிருந்ததைவிட மிகவும் குறைந்துவிட்டன; பொருள்களின் விருப்பத்தேர்வுகட்கும் வழியின்றிச் சரக்குகளின் அளிப்புகள் வரையறுக்கப்பட்டிருந்தன. இதனால் நாடெங்கும் பற்றாக்குறை நிலை ஏற்பட்டது; பொருள்களைப்பெற மக்கள் 'க்யூ' வரிசைகளில் நின்றனர்; நாடெங்கும் போர்க்காலத்தைப் போலவே பங்கீட்டுத் திட்டம் நீடித்தது.

நாளடைவில் பொருளாதார நிலை செம்மையுறத் தொடங்கியதும் வாழ்க்கை நிலையில் அபிவிருத்தி ஏற்பட்டது; கட்டுப்பாட்டுத் திட்டங்கள் தளர்த்தப்பட்டன; பங்கீட்டு முறைகள் நீக்கப்பட்டன. 1951ஆம் ஆண்டிறுதியிலிருந்து இத் துறையில் குறிப்பிடத்தக்க வகையில் தொடர்ந்த வளர்ச்சிப்பாங்கு ஏற்பட்டுள்ளது.

1938ஆம் ஆண்டின் அளவிற்குச் சமமாக இருந்த, 1946ஆம் ஆண்டு உற்பத்தியின் மொத்த அளவு, அடுத்த ஐந்தாண்டுகளில் 15 சதவீதத்திற்குமேல் (போருக்கு முந்திய நிலையைவிட மிகுதியான வேலையுடைமை நாடெங்கும் ஏற்பட்டமையால்) அதிகரித்தது. இப்படியிருக்கையில், தனிநபர் நுகர்வு அளவுமட்டும், போருக்கு முந்திய அளவைவிட மிகக் குறைவாக இருப்பதற்குக் காரணம் என்ன?

போருக்கு முந்திய நிலையைவிட, இப்பொழுது நாட்டில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களில் பெரும்பகுதி ஏற்றுமதி செய்யப்பட்டது இதற்கு ஒரு காரணமாகும். 1946–51 ஆண்டுகளில் பிரிட்டனின் சராசரியாக ஆண்டு ஏற்றுமதியின் மொத்த அளவு 1938ஆம் ஆண்டின் அளவைவிட 40 சதவீதம் மிகுதியாயிருந்தது. அதே சமயத்தில், அதன் சராசரி இறக்குமதி அளவு 20 சதவீதம் குறைவாயிருந்தது.

போருக்கு முன்பைவிட, இப்பொழுது உற்பத்திப் பொருள்களில் பெரும்பங்கை அரசாங்கமே எடுத்துக்கொள்ளுவது இன்னொரு காரணம். இப் பொருள்களைக்கொண்டு அரசாங்கம் செய்யும்

பணிகள் பொதுவாகச் சமுதாய நலனுக்குச் செல்கின்றனவேயன்றி தனிப்பட்ட செலவினங்களுடன் சேருவதில்லை. எனவே, இது தனியார் நுகர்வு அளவை மிகுதிப்படுத்த உதவுவதில்லை.

வேறொரு காரணமும் சொல்லலாம். அதாவது, போருக்குப் பிற்பட்ட ஆண்டு உற்பத்திகளில் பெரும்பகுதி, போர்க்காலத்தில் ஏற்பட்ட அழிவுகளைச் சீர்செய்யவே (குறிப்பாக, வீடு கட்டுதல் முதலியன) பயன்படுத்தப்பெற்றது.

என்றாலும், மிக முக்கியமான காரணம் ஒன்று உண்டு. பிரிட்டனின் வாணிப வீதம் போருக்கு முற்பட்ட நிலையைவிட, இப்பொழுது மிகவும் சாதகக் குறைவாக மாறிவிட்டது என்பதே அக் காரணம் ஆகும். 1946-ல் ஓரளவு இறக்குமதிப் பொருள்களை வாங்க வேண்டுமானால், 1938ஆம் ஆண்டைவிட, 9 சதவீதம் அதிகமாக ஏற்றுமதி செய்தால் போதும். ஆனால், 1951-ல், கொரியப் போரின் காரணமாக இறக்குமதிக்கு உரிய பல உணவுப் பொருள்கள், மூலப் பொருள்கள் ஆகியவற்றின் விலைகள் மிகவும் உயர்ந்துவிட்டமையால், 1938ஆம் ஆண்டைவிட இப்பொழுது 39 சதவீதம் அதிகமாக ஏற்றுமதி செய்யவேண்டியதேற்பட்டது. 1946-51 ஆகிய ஆண்டுகள் முழுவதும், வாணிப வீதம் மிகவும் சாதகமற்ற நிலையிலேயே நீடித்தது. இக் காலத்தில் இறக்குமதிப் பொருள்களின் விலை கிட்டத்தட்ட இரு மடங்காக உயர்ந்துவிட்டது; ஆனால், ஏற்றுமதிப் பொருள்களின் விலை 60 சதவீதமே உயர்ந்தது.

1951-க்குப் பின்னர் இந்தப் போக்கு மாறியது. 1951-க்கும் 1962-க்கும் இடையில் இறக்குமதி விலைகள் 19 சதவீதம் வீழ்ந்து ஏற்றுமதி விலைகள் 12 சதவீதம் உயர்ந்தன. 1958-ல் ஒரு குறிப்பிட்ட அளவு இறக்குமதிப் பொருள்களை வாங்கவேண்டுமானால், 1938ஆம் ஆண்டைப்போல அதே அளவு பொருள்களை ஏற்றுமதி செய்தாகவேண்டும் என்ற நிலை ஏற்பட்டது.

ஐக்கிய அரசு, பண்டம், பணிகளாலான தனது மொத்த உற்பத்தியில் நாலில் ஒரு பங்கிற்குமேல் ஏற்றுமதி செய்வதால், அதன் வாணிப வீதங்களில் ஏற்பட்ட மேற்குறித்த மாறுதல்கள், போருக்குப் பிந்திய சில ஆண்டுகளில் பிரிட்டன் இன்னலுற்றதற்கும், 1951-க்குப்பின் வளமுற்றதற்கும் உரிய காரணங்களை நன்கு விளக்க உதவும் என்று கருதுகின்றேன். 1951-க்குப் பிந்திய ஐந்தாண்டுகளில், அதற்கு முந்திய ஐந்தாண்டுகளைவிட, உற்பத்தி அளவுகள் மிகக் குறைவாகவே அதிகப்பட்டிருந்தாலுங்கூட, உண்மையான நாட்டு வருமானம் 1951-க்குப் பின்னர் பாராட்டத்தக்க வகையில் துரிதமாக உயர்ந்தது.

இன்னொரு முக்கியமான போக்காக, சமீப ஆண்டுகளில் சேமிப்புகளில் ஏற்பட்டுள்ள கணிசமான மிகுதியைக் குறிப்பிடலாம். நாட்டில் தனி நபர்களின் சேமிப்பை மிகத் துல்லியமாகக் கணக்கிட்டறிய முடியாது. இச் சேமிப்புகளில் எவ்வளவு பகுதியைத் தேய்மானத்திற்காகக் கழித்துக்கொள்வது, மொத்தச் சேமிப்பிலிருந்து செலவு போக நிகர சேமிப்பை எவ்வாறு கணக்கிடுவது என்பன வெல்லாம் அவ்வப்போது நிலவும் அபிப்பிராயங்களை ஒட்டியே மதிப்பிடுதற்குரியன. என்றாலும், போருக்குப் பிந்திய ஆண்டுகளில், மொத்த நிகர சேமிப்புகள் இரு மடங்குகட்குமேல் பெருகிவிட்டன என்பதற்குக் கொஞ்சமும் சந்தேகம் இல்லை. இவ்விதம் மொத்தச் சேமிப்புப் பெருகியதற்கு அடிப்படைக் காரணமாக நாட்டு மக்களின் தனிநபர் சேமிப்பு அளவுகள் பெருகியதைச் சொல்லலாம். இச் சேமிப்புகள், 1951-ல் 123 மில்லியன் பவுன்களாக (தேய்மானம், இருப்பு மதிப்பீடு ஆகியவற்றின் மொத்தம்) இருந்தன; இவை 1952-ல் 397 மில்லியன் பவுன்களாகவும், 1962-ல் 1,810 மில்லியன் பவுன்களாகவும் உயர்ந்துவிட்டன. இவ்விதம் சேமிப்புகள் மிகுதற்குக் காரணமாக வரி செலுத்தியதுபோக மக்களிடம் மிகுதியான வருமானம் எஞ்சியதைக் குறிப்பிடலாம். இது 1951-ல் 1,100 கோடிக்கும் குறைவாக இருந்தது; ஆனால், 1962-ல் 2,000 கோடிக்கும் மேலே சென்றுவிட்டது. வருமானத்தில் கிட்டத்தட்ட 40 சதவீத உயர்வு ஏற்பட்டதால், சேமிப்பதற்கும் நிறைய வாய்ப்புகள் ஏற்பட்டன.

இறுதியாக, இன்னொரு போக்கையும் நான் குறிப்பிடுதல் வேண்டும். போருக்குப் பின்னர், சமீப ஆண்டுகளில் மிகுதியான பொருளாதார சுதந்திரம் அளிக்கப்பெறுகின்றது. பொருளாதாரக் கொள்கையை நிர்ணயிப்பதில் 'விலைவாசி அமைப்பு' (price mechanism) பெரும் பங்கு கொண்டிருக்கிறது; வாணிப முடிவுகளும், நுகர்வோர் விருப்பங்களும் சிறப்பிடம் பெறுகின்றன.

போர் முடிந்த பின்னர், அடுத்துவந்த சில ஆண்டுகளில் பொருளாதார நடவடிக்கைகளில் மிகுதியான அரசாங்கக் கட்டுப்பாடுகள் தலையிட்டன. இறக்குமதிகள் கடுமையான தடைகட்கு உள்ளாயின. பெரும்பாலான உணவுப் பொருட்கள், மூலப் பொருட்கள் ஆகியவற்றை அரசாங்கம்மட்டுமே இறக்குமதி செய்து நாடெங்கும் வினியோகித்துவந்தது. எஃகு முதலிய கிடைப்பதற்கு அருமையான பொருள்கள், தொழில் நிறுவனங்கட்குக் 'கோட்டா' முறையில் பகிர்ந்தளிக்கப்பெற்றன; சிலவகையான முதலீடுகள் (தனியார் வீடுகட்டுதல் என்பன) கட்டுப்படுத்தப்பெற்றன. பெரும்பாலான நுகர்வுப் பொருள்கள் தொடர்ந்து பங்கீடு செய்யப்

பெற்றன. உணவுப் பொருள்கள், வீட்டு வசதி முதலியவற்றிற்கு உதவித் தொகை அளித்தல், விலைகளை அறுதியிடுதல், வாடகைகளை நிர்ணயித்தல் முதலிய பல்வேறு உத்திகளைக் கையாண்டு, விலை ஏற்றத்தைத் தடுக்க அரசாங்கம் முயன்றுவந்தது.

நாள் செல்லச்செல்ல, அரசாங்கக் கட்டுப்பாடுகள் எல்லாம் படிப்படியாக அகற்றப்பட்டன. பண வீக்கத்தைத் தடுப்பதற்குரிய கருவியாக நேரடிக் கட்டுப்பாடுகளைப் பயன்படுத்துவதற்குப் பதிலாக, நிதித்துறை நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பெற்றன. இதிலுங் கூட, 1951-ல் ஒரு 'திருப்பம்' ஏற்பட்டது. அரசாங்க வாணிபத்தை மாற்றிவிட்டுத் தனிநபர் வாணிபங்கள் தலையெடுத்தன; 1954 வரை பங்கீட்டு முறை அகற்றப்படாவிட்டாலும், 1958 வரை வாடகைக் கட்டுப்பாடு நீக்கப்படாவிட்டாலும், நாட்டின் பொதுவான பொருளாதார அமைப்பில் சுதந்திரப் போக்குத் தலைகாட்டிற்று.[1]

போர்ப் பிற்கால ஆண்டுகளில் ஏற்பட்ட நிலைகுலைவையும், பற்றாக்குறையையும் செம்மைப்படுத்தவேண்டுமானால், அரசாங்கக் கட்டுப்பாடுகள் இருக்கவேண்டியது அவசியம்; 1951-க்குப் பின்னர், வாணிப வீதங்களில் அபரிமிதமான அபிவிருத்தி ஏற்பட்டுள்ளமையால், நாடெங்கும் வளம் பெருகியுள்ளது; எனவே, அக் கட்டுப்பாடுகளை அகற்றிவிடுவதும் சாத்தியமாயிற்று. இதே சமயத்தில் உங்கட்குத் தெரிந்த ஒரு கருத்தை இங்குக் குறிப்பிட விரும்புகின்றேன். இவ்விதம் கட்டுப்பாடுகளை அகற்றியமையே நமது பொருளாதார மீட்சிக்குப் பெரிதும் உதவியுள்ளது என்பதையே சுட்டுகின்றேன். இக் கட்டுப்பாடுகள், விலை முறைகளைத் தலைகீழாகப் புரட்டிவிட்டன; தொழில் முயற்சிகளையும், முதலீடுகளையும் ஆக்கத் திறம் குறைந்த துறைகளில் திருப்பிச் செலுத்தின; தொழிலிலும் வாணிபத்திலும் முதலீடு செய்வதில் மிகுதியான இழப்பு ஆபத்துகளை உண்டாக்கியிருந்தன. கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டமையால் இக் குறைகள் அனைத்தும் அகன்றுவிட்டன என்று சொல்லலாம்.

## 3. பொருளாதாரக் குறிக்கோள்கள் எந்த அளவிற்கு வெற்றியடைந்துள்ளன ?

(அ) முழு வேலையுடைமை

போர்ப் பிற்கால ஆண்டுகளில் நிலவிய முக்கியமான பொருளாதாரக் குறிக்கோள் நாடெங்கும் முழு வேலையுடைமையை அளிக்க

[1] (ஆண்டொன்றுக்கு (1956 நவம்பர் கணக்குப்படி) 30 பவுன் வாடகை மதிப்பும் (லண்டனில் 40 பவுன்), அதற்குக் குறைவும் உடைய வீடுகள் தவிர, ஏனைய வீடுகட்கு உள்ள வாடகைக் கட்டுப்பாடு 1957ஆம் ஆண்டுச் சட்டப்படி அகற்றப்பட்டது. ஏனைய வீடுகளின் வாடகை விகிதங்கள் மொத்த ஆண்டு மதிப்பில் $1\frac{1}{3}$ மடங்கிலிருந்து, $2\frac{1}{8}$ மடங்கிற்கு உயர்த்தப்பெற்றன.

வேண்டும் என்பதே ஆகும். இந்தக் குறிக்கோள் செவ்வனே நிறைவேறிவிட்டது. சமீபத்தில் எடுத்த கணக்குப்படி, 1958-59ஆம் ஆண்டு தவிர நாட்டில் வேலையின்மை மிகமிகக் குறைந்துவிட்டது; ½ மில்லியன் மக்கள்மட்டுமே முழுவதும் வேலையின்றி இருக்கின்றார்கள். நாட்டின் மொத்த மக்கள்தொகையுடன் ஒப்பிடுகையில் இது மிகக் குறைவு.

புதுத் தொழில் நிறுவனங்களை அமைக்கும் இடங்களைக் கட்டுப்படுத்துவதன்மூலம்[1] ஓரளவு முழு வேலையுடைமை அளிக்க வகை செய்யப்பட்டது. என்றாலும், நுகர்வதற்கும், முதலீட்டிற்கும் உரிய பொதுத்துறை, தனியார்துறைச் செலவினங்களை விரிவுபடுத்தியதன் மூலமே பெரும்பான்மை வேலையுடைமைக்கு வழிசெய்ய முடிந்தது. இவ்விதம் பண அளவுகளை விரிவுபடுத்தியது மிகவும் அதிகப்பட்டு, போர்ப் பிற்கால ஆண்டுகளில், பணவீக்க நிலைமைக்கே இட்டுச் சென்றுவிட்டது. இதை 4ஆம் உட்பிரிவில் ஆராய்வோம்.

(ஆ) வாழ்க்கைத்தர உயர்வுகள்

போர்முடிந்த அண்மை ஆண்டுகளில், மக்களின் நுகர்ச்சித் திற அளவுகள் போருக்கு முற்பட்ட அளவுகளைவிட மிகவும் குறைவாகவே இருந்தன என்பதை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளேன். எனினும், இவை 1951-க்குப் பின்னர் குறிப்பிடத்தக்க அளவு உயர்வுபெற்றன. உடன் துய்ப்புக்குரிய பொருள்களின்மீதான தனிநபர் செலவு 1962-ன் அங்காடி விலையில், 18·4 மில்லியர்டு (நூறு கோடி) பவுன்களாகக் கணக்கிடப்பெற்றுள்ளது. இது 1938-ல் 4·4 மில்லியர்டு பவுன்களாகவே இருந்தது. மக்கள்தொகை 12 சதவீதம் இப்போது அதிகரித்துள்ளது. 20 ஆண்டு இடைவெளிக் காலத்தில் சில்லறை விலைகளிடையே ஒப்புமை காண முற்படுவது மிகவும் இடர்ப்பாடாகும். என்றாலும், மாறுத விலை அளவுகளைக்கொண்டு கணக்கிட்டுப் பார்த்தபொழுது, துய்ப்போர் செலவுவகை (consumers' expenditure) 1962ஆம் ஆண்டில், 1938ஐவிட 40 சதவீதம் உயர்ந்திருப்பதாக, அதிகாரபூர்வமாகத் தெரிகிறது. மக்கள்தொகையில் தலைக்கு சுமார் 25சதவீதச் செலவு உயர்வுக்கு இதைச் சமமாகக் கொள்ளலாம்.

என்றாலும், 1938ஐவிட 1962-ல் தனிநபர் சேமிப்புகள் மிகவும் அதிகமாயுள்ளன என்பதை நினைவிற்கொள்ளவேண்டும். 1962-ல் ஒவ்வொரு நபருக்கும் உரிய உண்மையான தனி வருமானம் (வரிபோக) 30 சதவீதம் உயர்ந்துள்ளது. இதில் நுகர்வுச் செலவும் சேமிப்பும் அடங்கியுள்ளன.

[1] 21ஆம் அதிகாரம், 5ஆம் உட்பிரிவைப் பார்க்கவும்.

மேற்குறித்த கணக்கீடுகளில், இன்னெரு முக்கியமான கூறு விடுபட்டிருக்கிறது. என்னவென்ருல், அரசாங்கத்தின் 'இலவச'ச் சமுதாயப் பணிகளால் மக்களது கல்வி, சுகாதார நிலைகளில் ஏற்பட்டுள்ள அபிவிருத்திகளைக் குறிப்பிடவேண்டும். இவற்ருல் மக்களின் வாழ்க்கைத்தரங்கள் ஓரளவு உயர்ந்திருப்பதை மறுக்க முடியாது.

(இ) பொருளாதார ஏற்றத்தாழ்வு குறைதல் (Less Economic Inequality)

கிரேட் பிரிட்டனில் மக்களிடையே பொருளாதார ஏற்றத்தாழ்வு, போருக்கு முன்னர், ஏனைய நாடுகளுடன் ஒப்பிடுகையில் மிகக் குறைவாகவே இருந்தது. போருக்குப் பின்னர், இது படிப்படியாக இன்னும் குறைக்கப்பட்டிருக்கிறது. இன்று, உலக அரங்கில், கிரேட் பிரிட்டன் பொருளாதாரச் சமத்துவத்தைப் போற்றும் சிறந்த சமுதாயங்களில் ஒன்ருகத் திகழ்கின்றது.

உண்மையான தனிநபர் வருமானங்களில் சராசரியாக 30 சதவீதம் உயர்ந்திருப்பதாக மேலே கணக்கிட்டிருப்பதிலிருந்து, தேசிய வருமானப் பகிர்வில் குறிப்பிடத்தகுந்த மாறுதல்கள் ஏற்பட்டிருப்பது புலனுகின்றது. கூலி பெறுவோரில் பெரும்பாலோரின் உண்மை வருமானங்களில் 50 முதல் 60 சதவீத உயர்வு ஏற்பட்டிருக்கிறது; ஆனுல், சொத்துடையோர், உத்தியோகத்தில் உள்ளோர், உயர்ந்த பட்ச சம்பளம் வாங்குவோர் ஆகியோரில் பெரும்பாலோரின் உண்மை வருமானங்களில் குறைவே ஏற்பட்டுள்ளது.

பின்வரும் அட்டவணையில் பொதுவான வருமான நிலவரத்தைக் காணலாம்; ஆனுல், இந்த அட்டவணையை எச்சரிக்கையுடன் கவனித்தல்வேண்டும். அட்டவணையில் பகுக்கப்பட்டுள்ள பல்வேறு தொழிலாளர்களின் எண்ணிக்கைகள் மாறுதலடைந்துள்ளன; போருக்கு முன்னர் வேலையற்ருேர் தொகை மிகுதியாக இருந்தது; சொந்தத் தொழில் செய்வோரின் வருமானங்கள் மொத்தமாக (தேய்மானக் கழிவு செய்யாது) குறிப்பிடப்பட்டுள்ளன.

ஆலை உற்பத்தித் தொழில்கள் முதலியவற்றில், வாராந்தரச் சராசரிச் சம்பாத்தியங்கள் 1938ஐவிட 1962 அக்டோபரில் ஐந்து மடங்கு உயர்ந்துள்ளன. இது கைவேலைத் தொழிலாளர்களின் (manual workers) உண்மை வருமானத்தில் கிட்டத்தட்ட 60 சதவீதமாகும். தொழிலாளர்துறை அமைச்சகம் இத்தகைய சம்பாத்தியப் புள்ளிவிபரங்களைத் தொகுக்க, 7 மில்லியன் தொழிலாளர்களது வருமானத்தைமட்டுமே கணக்கெடுத்திருக்கிறது என்பது உண்மைதான். இக் கணக்கெடுப்பிற்குள் உட்படாத தொழில்களில் (விவசாயம், சுரங்கத் தொழில், போக்குவரத்தும் பகிர்வும், இதர பணித்

வரி செலுத்துவதற்கு முந்தைய தனி நபர் வருமானம்

| | 1938 | | 1948 | | 1962 | |
|---|---|---|---|---|---|---|
| | மில்லியன் பவுனில் | மொத்தத்தில் சதவீதம் | மில்லியன் பவுனில் | மொத்தத்தில் சதவீதம் | மில்லியன் பவுனில் | மொத்தத்தில் சதவீதம் |
| வேலையுடையோரது வருமானங்கள் ... ... | 3,022 | 59·5 | 6,775 | 68·3 | 17,009 | 71·6 |
| உழவர்கள் ... ... ... | 69 | 1·4 | 307 | 3·1 | 528 | 2·2 |
| வாழ்க்கைத் தொழில் துறையினர் (professionals) .. | 118 | 2·3 | 209 | 2·1 | 372 | 1·6 |
| இதர மொத்த வணிகர்கள், கூட்டுத்தொழிலினர் .. | 460 | 9·1 | 810 | 8·2 | 1,287 | 5.4 |
| வாடகை (வாரம்), இலாப ஈவுகள், வட்டி ... ... | 1,132 | 22·3 | 1,109 | 11·2 | 2,573 | 10.8 |
| தேசீய இன்சூரன்சு நலன்கள் முதலியன ... ... | 275 | 5·4 | 705 | 7·1 | 1,983 | 8.4 |
| மொத்தத் தனிநபர் வருமானங்கள் ... ... | 5,076 | 100·0 | 9,915 | 100·0 | 23,752 | 100.0 |
| சில்லறை விலைகளின் குறியீடு ... ... | 100 | | 175 | | 297 | |

துறைகள் என்பன) இச் சம்பாத்திய அளவு மிதமாகவே உயர்ந் திருக்கிறது. இதற்குக் காரணம், மேற்குறித்த தொழில்களில் ஓரளவே மிகைநேரவேலை (overtime) அளிக்கப்பட்டது. என்றாலும், இத் தொழில்களில் ஈடுபட்டோரின் வருமானம், உண்மை வீதத்தில் 50 சதவீதத்திற்குக் குறையாமல் உயர்ந்திருக்கிறது என மதிப்பிடலாம்.

கூலி விகிதங்களை (இவை 32 மடங்குமட்டுமே உயர்ந்தன) விடத் தொழிலாளர்களின் சம்பாத்தியங்கள் பல மடங்கு பெருகின. இதற்குக் காரணங்கள் பல ; தொழிலாளர்கள் மிகுதியான ஊதியங் களை நல்கிய தொழில்களை நாடிச் சென்றார்கள் ; தொழிலாளர்கட்கு மிகைநேரவேலை வாய்ப்பு அதிகமாயிற்று. (சாதாரண வேலை வாரம் குறைக்கப்பட்டது ; சனிக்கிழமைகளில் காலை வேலை இருப்பதில்லை ; இதனால் பெரும்பாலான ஆண்களுக்கு வாரத்தில் 42 மணி நேர முடைய 5 நாள் வேலை அமைப்பு ஏற்பட்டது. இதற்கு அப்பாற்பட்ட நேரத்தில் செய்யும் வேலைகட்கு மிகைக் கூலி அளிக்கப்பெற்றது.) தொழிலாளர்களின் வேலைவீத ஊதியங்கள் (piece-rate earnings) அதிகமாக்கப்பட்டன ; தொழிற்சங்க விகிதங்களைவிடச் சில இடங் களில் அதிகமான கூலி விகிதங்கள் அளிக்கப்பெற்றன. இக்காரணங் களால் அவர்களது சம்பாத்திய அளவு மிகுந்தது.

கூலி பெறுவோர்களிடையே, போருக்குப் பின்னர், குறைவான ஏற்றத்தாழ்வு நிலையே இருந்தது. மிகக் குறைந்தபட்சக் கூலி வாங்கியவர்கள் தம் நிலையை உயர்த்திக்கொண்டனர் ; தொழில் நுட்பத் துறையினர்க்கு அளிக்கப்பட்ட ஊதியம், இவர்களது கூலி களைவிட போருக்குப் பின்னர் ஓரளவே அதிகமாக இருந்தது.

மாதச் சம்பளம் வாங்குவோரின் உண்மை வருமானங்களும் உயர்ந்தன ; என்றாலும், பாட்டாளித் தொழிலாளரின் கூலி உயர் வைப்போல அவ்வளவு உயர்வு மாதச் சம்பளத்தில் ஏற்படவில்லை. உதாரணமாக, போருக்கு முன்னர் பட்டம்பெருத, பயிற்சி பெற்ற ஆண் ஆசிரியரின் ஆண்டுச் சம்பள அளவு 168 பவுனிலிருந்து 408 பவுன்வரை இருந்தது ; 1959-ல் உயர்த்தப்பட்ட பின்னர், இது ஆண்டுக்கு 570 பவுனிலிருந்து 1,290 பவுன் அளவுக்கும் அதிகரித் துள்ளது. மேலும், ஆசிரியர்கள், அரசாங்கத்துறை அலுவலர்கள் ஆகிய பெரும்பான்மை மாதச் சம்பளக்காரர்களால் பல ஆண்டுகட்கு ஒரு முறையே சம்பள உயர்வு பெற முடிகின்றது ; ஆனால், பெரும் பாலான கூலியாளர்கள், ஆண்டுதோறும் சம்பள உயர்வுகளை வாங்கி வருகின்றார்கள்.

பெரும்பாலான உயர்ந்தபட்ச சம்பளக்காரர்கள், போருக்கு முந்தி வாங்கியதைவிட, இப்பொழுது உண்மை வீதத்தில், குறை

வான சம்பளமே பெறுகின்றனர்கள். உதாரணமாக, (லண்டன் பகுதியில்) அரசாங்கத்துறையில் உள்ள கல்லூரி முதல்வரின் சம்பள அளவு, போருக்கு முன்னர், ஆண்டொன்றுக்கு 800 பவுன் முதல் 1,100 பவுன் வரையில் இருந்தது. இது 1962-ல் 1,839 பவுனிலிருந்து 2,569 பவுனாகத் திருத்தி உயர்த்தப்பெற்றுள்ளது.

சொந்தமாகத் தொழில் செய்வோரில், விவசாயிகள் தம் சம்பாத்திய நிலைமையை நன்கு மேம்படுத்திக் கொண்டுள்ளார்கள்; சொந்தமாகத் தொழில் செய்வோர் ஓரளவே உயர்வு பெற்றுள்ளார்கள். உதாரணமாக, போருக்கு முன்னர், பாதிக்கும் மேற்பட்ட மருத்துவத் துறையினர் ஓராண்டில் 1,000 பவுன் அளவே சம்பாதித்தனர்; இது இப்பொழுது ஆண்டிற்கு 2,750 பவுனாக உயர்ந்துள்ளது.

போருக்கு முன்னரைவிட, இப்பொழுது முதலீடு செய்யப்பட்டுள்ள மூலதனத்தின் அளவு பலமடங்கு பெருகியிருந்தாலும், வாரம், இலாப ஈவு, வட்டி முதலிய தனிநபர் வருமானங்களின் மொத்த அளவு இருமடங்கிற்கும் குறைவாகவே அதிகரித்துள்ளது. இத் தொகுதியில் நிலைத்த வட்டியுடைய ஈடுகளை வாங்கியிருந்தோரும், (1958 வரை) வாடகைக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட சொத்துகளை உடையோருமே மிகமிகப் பாதிக்கப்பட்டவர்கள்.

போருக்கு முந்திய அதே பணவீதத்தில், இன்று ஆண்டு உதவிகளும், முதுமைக்கால ஓய்வு ஊதியங்களும் பெறுவோர் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளார்கள்; போருக்குப் பின்னர் வாழ்க்கைத்தரச் செலவுகளில் ஏற்பட்டுள்ள உயர்வுகள் அனைத்தும் இவர்கள்மீது சுமத்தப்பெற்றுள்ளன. ஊழியர்களிடமிருந்து பங்குப் பணம் பெறாத அரசாங்கம்மட்டுமே அளிக்கும் முதுமைக்கால ஓய்வு உதவித்தொகை, போருக்கு முன்னர் வாரத்திற்கு 10 ஷில்லிங்கு ஆக இருந்தது; இது இப்பொழுது வாரத்திற்கு 28 ஷி. 4 பென்னியாகமட்டுமே (மணமான பெண்களுக்கு 18. ஷி. 4 பெ.) உயர்த்தப்பட்டுள்ளது.

மேற்குறித்த அட்டவணை, வரி செலுத்துதற்கு முற்பட்ட வருமானங்களையே தருகின்றது. போருக்கு முன்பைவிட இப்பொழுது வருமான வரி, வருமான மேல்வரி (surtax) என்பன வருமானத்தில் பெரும்பகுதியை எடுத்துக்கொள்ளுகின்றன. உதாரணமாக, திருமணமாகி, 11 வயதுக்கு உட்பட்ட இரு குழந்தைகளை உடைய ஒரு நபரது வருமானம், இப்பொழுது, போருக்கு முன்பிருந்ததைவிட இருமடங்கு அதிகரித்திருக்கிறது என வைத்துக் கொள்ளுவோம். இவருடைய வருமானம் 1,000 பவுனிலிருந்து 2,000 பவுனாக உயர்ந்திருந்தால், வரி செலுத்தியதுபோக அவருக்கு எஞ்சிய வருமானம் 897 பவுனிலிருந்து 1,655 பவுனாக உயர்ந்திருக்கவேண்டும். அவரது

வருமானம், 2,000 பவுனிலிருந்து 4,000 பவுணுக உயர்ந்திருந்தால் வரிக்குப் பின்னர் அவருக்கு எஞ்சிய நிகர வருமானம் 80 சதவீதமே உயர்ந்திருக்கும். அதாவது 1,672-லிருந்து 3,052 பவுனுக்கே உயர்ந்திருக்கும். எவ்வளவுக்கு வருமானம் உயர்கிறதோ, அவ்வளவுக்கு அதிக விகிதாசாரத்தில் வரி விதிக்கப்பெறுகின்றது.

இவ்விதம் மிகுதியான சமத்துவநிலை நோக்கிக் குறிப்பிடத்தக்க வகையில் பொருளாதாரக் கொள்கை திரும்பியது. இது பல்வேறு துறைகளில் நமக்கு நன்கு புலப்படுகின்றது. உதாரணமாக, குறைந்ததரக் கூலி வாங்குவோரின் குழந்தைகள் இப்பொழுது நன்கு உணவூட்டம் பெறுகிருர்கள்; கவனிக்கப்பெறுகிருர்கள்; போருக்கு முன்னரைவிட நலமாக வளர்கின்ருர்கள். தொழிலாளி வகுப்பினரின் வீடுகள் இப்பொழுது செம்மையாகத் துலங்குகின்றன; வீட்டிற்கு வேண்டிய டெலிவிஷன், குளிர்பதனி முதலிய நாட்படு துய்ப்புப் பொருள்கள் இவ் வீடுகளில் இடம்பெற்றுள்ளன; தொழிலாளர்கள் இப்பொழுது மிகுதியான விடுமுறைகளைப் பெற்றுக் களிக்கின்ருர்கள். அதே சமயத்தில், வீட்டு வேலைக்காரர்களாக இருந்தவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்துவிட்டது; 1931-ல் 707,000 பேராக இருந்தது, 1951-ல் 178,000 பேராகக் குறைந்துவிட்டது; பலரால் வேலைக்காரர்களை வைத்துப் பராமரிக்க முடியாததால், தமது வேலைகளை அவர்கள் தாமே செய்துகொண்டனர்.

இச் சமத்துவப் போக்கு பொதுத்துறைச் செலவினங்களின் மிகுதியால் இன்னும் வலிமை பெற்றுள்ளது. சுகாதாரம், கல்வி, ஓய்வுக்கால உதவிகள், தேசிய இன்சூரன்சு நலங்கள், வீட்டு வசதி உதவிகள், குடும்பப் படித்தொகைகள் ஆகிய பல சமுதாய நலங்கட்குச் செல்லும் பொதுத்துறைச் செலவினங்கள் சமீப காலத்தில் மிகவும் உயர்ந்துவிட்டன. மேற்குறித்த வகையில் அளிக்கப்பட்ட பொதுத்துறைச் செலவு 1938-ல் 500 மில்லியன் பவுணுக இருந்தது; இன்று அது 3,500 மில்லியன் பவுணுக உயர்ந்துவிட்டது.

இத்தகைய சமுதாயப் பணிகட்கு ஆகும் செலவுகள் எல்லாம் பொதுமக்களால் செலுத்தப்படுபவைதான் என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். கைவேலைத் தொழிலாளர்களில் பெரும்பான்மையோர் வருமான வரி செலுத்துவதில்லை; அப்படிச் செலுத்தும் ஒருசிலரும் குறைந்த அளவே கட்டுகின்ருர்கள். ஆனால், அவர்கள் அனைவரும் (திருமணமான பெண்ணைத் தவிர—இத் திட்டத்தில் சேரவேண்டாமென அவள் கருதினுல்) தேசிய இன்சூரன்சுத் தவணைப் பணங்களைச் செலுத்துகின்ருர்கள்; நுகர்வுப் பொருள்களுக்கான வரிகளைச் செலுத்துகின்ருர்கள். (உதாரணமாக, புகையிலை, பீர் முதலியவற்றின்மீது விதிக்கப்படும் வரிகள்.) இவ் வரிகள், பொது

வரி வருமானத்தில் கணிசமான இடம் பெறுகின்றன. மேலும், ஆக்கநல அரசு (Welfare State) மிகுந்த செல்வமுடையோரிடமிருந்து ஒரு பகுதியைப் பெற்று அதை மிகுந்த ஏழையர்க்கு மாற்றுவிக்கும் சமநிலைப் போக்கிலேயே செயல்பட்டு வருகின்றது.

(ஈ) சமுதாயப் பாதுகாப்பு

இத் துறையில் சிறந்த வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. போருக்குப் பின்னர், கல்வி, சுகாதாரம் முதலிய சமுதாயப் பணிகட்கு அரசாங்கம் செலவிடும் தொகை மிக அதிகமாக உயர்ந்துள்ளது. சுகாதாரத்திற்காகவும் (இப்பொழுது ஆண்டொன்றுக்கு 900 மில்லியன் பவுன்கள்), கல்விக்காகவும் (இப்பொழுது ஆண்டொன்றுக்கு 1,000 மில்லியன் பவுன்கள்), பெருந் தொகைகளைச் செலவிடுவதுடன் போருக்குப் பின்னர், சமுதாய இன்சூரன்சு என்ற சிறந்த முறையையும் அரசாங்கம் மேற்கொண்டுள்ளது. இச் சமுதாய இன்சூரன்சு முறையில் சில குறைகள் உள்ளன;[1] என்றாலும், இது எல்லோருக்கும் (தேவைக்குத் தக்கபடி) ஒரு குறிப்பிட்ட அளவு, குறைந்தபட்ச தேசிய வருமானத்தை அளிக்கின்றது; இத் திட்டத்தின்கீழ், சொந்தமாகத் தொழில் பார்ப்போர், சிறு கடைகள் நடத்துவோர், தொழிலாளர்கள் ஆகிய அனைவரும் பயனடைந்து வருகின்றார்கள்.

போருக்குப் பின்னர் சமுதாயப் பாதுகாப்புத் துறையில் கண்டுபிடிக்கப்பட்ட சிறந்த உதவி நலன் ஒன்று உண்டு. வேலையிலிருந்து ஓய்வுபெற்ற (ஆயுட்காப்புற்ற) 65 வயதுக்கு மேற்பட்ட ஆண்களுக்கும், 60 வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்கும் அளிக்கப்படும் முதுமை ஊதியமே அச் சிறந்த நலன் ஆகும். இப்பொழுது ஓய்வுபெறும் காலத்து அளிக்கப்படும் ஊதிய உதவித் தொகை, ஆண்களுக்கும், தம் விருப்பப்படி ஆயுட்காப்புறுதி பெற்ற பெண்களுக்கும் வாரம் ஒன்றுக்கு 67 ஷி. 6 பென்ஸ். சார்ந்திருப்போருக்கு இத்துடன் கூடுதலாக அளிக்கப்பெறுகின்றது; ஒரு மனைவிக்கு, வாரத்திற்கு 4 ஷி. 6 பென்ஸ். முதற் குழந்தைக்கு ஒரு பவுன், மற்றக் குழந்தைகட்கு 12 ஷி. இத் தொகைகளைச் செலுத்துதற்குரிய நிதி இருப்பு நிறைய வேண்டுமென்று காத்திராமல், இவ் வுதவிகளை உடனடியாக அனைவர்க்கும் வழங்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது. எனவே, இந்த நிதி இருப்புக்கு வேண்டிய தொகை, பொதுத் துறையிலிருந்து உதவியாக அளிக்கப்பெறவேண்டியிருக்கிறது. இப்பொழுது அலுவல் பார்ப்போர் செலுத்தும் தவணைத் தொகைகளை உயர்த்தியோ, அல்லது வேலையிலிருந்து ஓய்வு பெறுவோரின் வயது அளவுகளை உயர்த்தியோ நிதி நிலையைப் பேணுதவரை அரசாங்கத் துறையிலிருந்து உதவி பெறுவதைத் தவிர்க்க முடியாது.

[1] 2 ஆம் அதிகாரம், 5 ஆம் உட்பிரிவில் கடைசிப் பத்திகளைப் பார்க்கவும்.

தேசிய இன்சூரன்சுத் திட்டம் நோய்க் காலத்தில் உதவி யளிக்கிறது (எவ்வளவு காலத்திற்கும் இவ்வுதவி கிடைக்கும்); வேலை யிழந்த நாளில் உதவி செய்கிறது (இவ்வுதவி ஒரு குறிப்பிட்ட நாட்களுக்கே கிடைக்கும்; தகுந்த காரணம் காட்டினுல் அதிக நாட்களுக்கும் அளிக்கப்பெறும்). இத் திட்டப்படி, இப்பொழுது வாரம் ஒன்றுக்கு ஆண்கள், தனியாக உள்ள பெண்கள், விதவைகள் ஆகியோர்க்கு 67 ஷி. 6 பென்னியும், திருமணமான பெண்களுக்கு 46 ஷில்லிங்கும், 18 வயதுக்குட்பட்ட இளைஞர்கட்கு 38 ஷி. 6 பென்னியும் அளிக்கப் பெறுகின்றன. சார்ந்திருப்போர்க்கு முதுமைக் கால ஊதிய உதவிகளைப் போலவே இங்கும் தொகை அளிக்கப்பெறுகின்றது. இத் திட்டத்தின்கீழ் அளிக்கப்படும் இதர நலன்களாக விதவைகட்கு உதவிகள், பேணுவோர் படிகள் (gardians' allowances), பேறுகால உதவிகள், இறப்புக் கொடைகள் (death grants), காயம்பட்டாலோ உறுப்பிழந்தாலோ அவற்றிற்கு ஈடுகள் ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

தொழிலாளர்கள் இச் சமுதாய நல நிதிகட்கு அளிக்கவேண்டிய குறைந்தபட்ச கட்டணத் தொகைகள் பின்வருமாறு: இப்பொழுது ஆண் தொழிலாளர்கள் சாதாரணமாக ஒரு வாரத்திற்கு 11 ஷி. 8 பெ., பெண்கள் 9 ஷி. 8 பெ. செலுத்தவேண்டும்; இதற்கு இணையாக வேலை அளிப்போர், வாரத்திற்கு முறையே 9 ஷி. 8 பென்னியும், 8 ஷி. 9 பென்னியும் அளிக்கின்றனர்கள். 18 வயதிற்குட்பட்டவர்கள் அளிக்கவேண்டிய தொகை இதைவிடக் குறைவு; சொந்தத் தொழில் பார்ப்போர் செலுத்தவேண்டியது இதைவிடச் சற்று அதிகம்.

குடும்பப் படிகள், ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள முதற் குழந்தை தவிர இதர குழந்தைகட்கெல்லாம் வாரம் ஒன்றிற்குப் பின்வருமாறு அளிக்கப்பெறுகின்றது; முதற் குழந்தை தவிர இரண்டாம் குழந்தைக்கு 8 ஷி. மூன்ரும் குழந்தைக்கும் ஒவ்வோர் இளைய குழந்தைக்கும் 10 ஷி.

இத் தேசிய இன்சூரன்சுத் திட்டத்திற்கு அப்பால் உள்ளவர்கட்கும், போதுமான வயிற்றுப்பாட்டு உதவியை நல்க இயலாத, மிகக் குறைந்த இன்சூரன்சு நலம் பெறுவோர்க்கும் உதவுதற்கு இறுதிநிலையாக இப்பொழுது 'தேசிய உதவி' (national assistance) என ஒன்று ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இவ்வுதவி, ஒரு வகை 'வழிமுறைத் தேர்வுக்கு' (means test) உட்பட்டது. 1962ஆம் ஆண்டிறுதியில், 2·0 மில்லியனுக்கும் மேற்பட்டோர் தேசிய உதவிக் கொடைகளைப் பெற்றனர். தாம் ஏற்கெனவே பெற்றுவந்த முதுமைக்கால ஓய்வு ஊதியம், நோய்க்கால உதவி, வேலையின்மை உதவி முதலியவற்றுடன் இவ் வுதவியையும் சேர்த்துக்கொண்டனர்.

இப்பொழுது கிரேட் பிரிட்டனில், ஒவ்வொருவருக்கும், அவர்கள் பிறப்பு முதல் இறப்புவரை ஏதாவதொரு சமுதாயப் பாதுகாப்பு நலன் அளிக்கப்படுகின்றது என்பது, மேற்குறித்த பல்வேறு திட்டங்களின் செயல்முறையிலிருந்து தெளிவாகின்றது.

(உ) நிலையான பவுன்

பவுனது வாங்கும் சக்தியை அடிக்கடி மாற்றுமல், அதன் மதிப்பை நிலையாகப் பேணிவரவேண்டுமென்ற குறிக்கோள் இன்னும் நிறைவேறவில்லை. போர் முடிந்ததிலிருந்து, 1958-59 வரை நம் நாட்டில் கிட்டத்தட்டத் தொடர்ந்து பணவீக்க நிலையே இருந்துவருகின்றது. பொருள்களின் சில்லறை விலைகள் தொடர்ந்து ஏறுமுகமாகவே இருந்துள்ளன; 1938ஐவிட இப்பொழுது மும்மடங்கு உயர்ந்துள்ளன; போர் முடிந்தவுடன் இருந்ததைவிட இப்பொழுது இருமடங்கு மிகுந்துவிட்டன.

## 4. பணவீக்கம்

நுகர்வுக்கும் முதலீட்டிற்கும் போதுமான அளவு பொதுத்துறை தனியார்துறைச் செலவினங்களை ஒதுக்கினுல், அது பொருளாதாரத் தேக்க நிலையைத் தடுத்து, ஓரளவு முழு வேலையுடைமையை அளிக்கும். இதற்கு மாருகச் செலவினங்கள் வரம்பிற்குமேல் அதிகப்பட்டால், அது பணவீக்கத்திற்கே வழியமைக்கும். போர் முடிந்ததிலிருந்து பிரிட்டனில் இந்த நிலைமைதான் ஏற்பட்டுள்ளது. நம் நாட்டில் முழு வேலையுடைமை தொடர்ந்து அளிக்கப்பட்டாலும், அதைத் தொடர்ந்து பணவீக்கமும் வந்துகொண்டே இருக்கின்றது.

நாட்டுப் பொருளாதார அமைப்பில், அதனுல் நிறைவேற்ற முடியாத அளவிற்கு மிகுதியான தேவைகளைச் சுமத்துவது, பணவீக்கம் ஏற்படுவதற்கு மூலகாரணமாக இருக்கின்றது. பொதுத்துறை அதிகாரிகள், தொழில் நிறுவனங்கள், தனி நபர்கள் ஆகியோரெல்லாம் பணத்தைக் கொடுத்து, நடப்பு விலையில் பல பொருள்களை வாங்க விரும்புகின்றுர்கள். அவர்களுக்குத் தேவைப்படும் பொருள்களையெல்லாம் அப்படியே அளிப்பதற்குச் சமுதாயத்தில் உள்ள எல்லா மனித சக்திகளையும், இதர ஆதாரங்களையும் பயன்படுத்திஞலும், முற்றிலும் நிறைவு செய்ய முடிவதில்லை. இதனுல் விலைகள் உயர்கின்றன; உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்குத் தக்கபடி, மக்களது தேவைகள் கட்டுப்படுத்தப்படுகின்றன; அல்லது அயல் நாடுகளிலிருந்து பெறும் வருமானங்கள் ஏதாவது இருந்தால், அத்துடன் ஏற்றுமதிமூலம் கிடைக்கும் தொகைகளையும் கூட்டி, இவ்விரண்டின் அளவுக்கும் தக்கபடி இறக்குமதிகள் கட்டுப்படுத்தப்படுகின்றன. ஒரு நாடு, ஒரு குறிப்பிட்ட காலத்திற்குத் தனது வருமான

எல்லேக்குமேல் செலவிட்டு வாழமுடியும். அப்படி அது தனது சக்திக்கும் மேல் ஆடம்பர வாழ்வு மேற்கொள்ளுவதென்ருல், அது தனது அயல்நாட்டுச் செலுத்துநிலே இருப்புகளில் ஏற்படும் பற்ருக் குறையைச் சரிக்கட்டக் கடன்கள் கேட்கவேண்டும்; அல்லது, தனது இருப்பிலுள்ள தங்கம், அயல்நாட்டுச் செலாவணி ஆகியவற்றைக் கரைக்க வேண்டும்; அல்லது தனது அயல்நாட்டுச் சொத்துகளே விற்கவேண்டும்.

1952-53, 1958-59, 1962-63 ஆகிய குறுகிய காலங்கள் தவிர, இதர சமயங்களிலெல்லாம் பிரிட்டனின் பொருளாதார அமைப்பு மிகையான சுமைகட்கு ஆளாகியிருந்தது. நாம் விரும்பிய துறைகளில் எல்லாம் முதலீடு செய்வதற்கு முடியாதவகையில் நமது உண்மையான தேசிய வருமானம் மிகமிகக் குறைந்துள்ளது. நம் பொதுத்துறைச் செலவுகளில் கிட்டத்தட்ட 40 சதவீதத்தைச் சமுதாயப் பணிகட்கும், காற்பங்கிற்கும் மேற்பட்ட தொகையைப் பாதுகாப்புக்கும் ஒதுக்கியுள்ளோம். இவை தவிர, அயல்நாடுகட்குக் கடனுகவும், உதவிக் கொடைகளாகவும் வழங்க விரும்புகின்ருேம்; அதே சமயத்தில் நமது சொந்த நுகர்வுத் திறங்களேயும் பெருக்கிக் கொள்ள விரும்புகின்ருேம். இவை அனைத்திற்கும் போதியவகையில் நமது உண்மைத் தேசிய வருமானம் பெருகவில்லே.

பணவீக்க விகிதத்தைச் சரியாக அளந்தறிய ஒரு வழி இருக்கிறது; தேசிய உண்மை வருமானத்தைவிட, தேசியப் பண வருமானம் எவ்வளவு துரிதமாக உயர்கிறது என்பதைக் கணக்கிடுவதே அவ் வழியாகும். இவ்விதம் ஏற்படும் பணவீக்கம், பண்டங்களின் விலேகளே உண்மையிலேயே உயர்த்தவேண்டும் என்ற நியதி இல்லே; ஆனுல், நடைமுறையில் விலேகள் அவ்வாறு உயர்த்தப்படுகின்றன. இதை அறிதற்குரிய சாதாரண அளவுகருவியாக, (கிரேட் பிரிட்டனுக்கு) நமக்கு நன்கு அறிமுகமான சில்லறை விலேகளின் குறியீடுகள் அல்லது வாழ்க்கைத்தரச் செலவுகளேக் கொள்ளுவோம்.

உண்மையான தேசிய வருமானம் என்பது பிரதானமாக உற்பத்தி அளவுகளேமட்டுமே சார்ந்து நிர்ணயிக்கப்பட்டாலும், அது ஓரளவு வாணிப வீதங்களாலும் பாதிக்கப்படுகிறது. 1948-51ஆம் ஆண்டுகளுக்கு இடையில், பிரிட்டனின் வாணிப வீதம் மிக மோசமாகிவிட்டது; எனவே, அதன் உற்பத்தி அளவு ஆண்டொன்றுக்குச் சராசரியாக 3½ சதவீதம் உயர்ந்தாலும், அதன் உண்மையான தேசிய வருமானம் ஆண்டொன்றுக்கு 3 சதவீதத்திற்கும் குறைவாகவே உயர்ந்தது. இதற்கு மாருக, 1951 முதல் 1962ஆம் ஆண்டுகளுக்கு இடையில், பிரிட்டனின் வாணிப வீதம் மிகுதியான சாதக நிலேக்கு வந்தது; எனவே, அதன் உற்பத்தி அளவு ஆண்

டொன்றுக்குச் சராசரியாக $2\frac{1}{2}$ சதவீதத்திற்கு உயர்ந்தபோதிலும், அதன் உண்மையான தேசிய வருமானம் சராசரியாக 3 சதவீதத்திற்குமேல் உயர்ந்துவிட்டது.

போர்ப் பிற்கால ஆண்டுகள் முழுவதிலும் வாழ்க்கைத்தரச் செலவுகள் கிட்டத்தட்ட உயர்ந்தே வந்துள்ளன. போரின் இறுதிக் காலத்தில் இருந்ததைவிட இப்பொழுது இரு மடங்குக்குமேல் உயர்ந்துவிட்டன. அதாவது ஆண்டொன்றுக்குச் சராசரியாக 4 சதவீதம் உயர்ந்திருக்கின்றன. என்ருலுங்கூட, இந்த உயர்வு வேகம் ஓரளவுக்கு மட்டுப்பட்டிருப்பதையும் காண்கிரும். வாழ்க்கைத்தரச் செலவுகள் 1946-க்கும், 1954-க்கும் இடையில் ஆண்டொன்றுக்கு 5 சதவீதத்திற்கும் மேல் உயர்ந்தன; 1954-க்கும், 1958-க்கும் இடையில் உயர்வு விகிதம் 4 சதவீதமாகக் குறைந்தன; 1958 முதல் 1962 வரையில் 2 சதவீதம்வரையே உயர்ந்தன.

ஆனுல், பிறநாடுகளில் ஏற்பட்ட உயர்வுகளைவிட பிரிட்டனில் ஏற்பட்ட உயர்வு மிகவும் குறைவு. உதாரணமாக, சில தென் அமெரிக்க நாடுகளின் வாழ்க்கைத்தரச் செலவுகள் ஒவ்வோர் ஆண்டும், 20 முதல் 30 சதவீதம்வரை உயர்ந்துகொண்டே இருக்கின்றன. இவ்விதம் வாழ்க்கைத்தரச் செலவுகள் உயர்வதில் பல பிரதிகூலங்கள் உள்ளன; அவை தொடர்ந்து ஏற்பட்டால் நமது பொருளாதார வளர்ச்சி தடைப்படும்.

இவ்விதம் செலவுகள் உயர்வது எல்லோரது நுகர்ச்சிப் பொருள்கள்மீதும் விதிக்கப்படும் ஒரு பொது வரிபோன்று இருக்கின்றது; ஏழைகளும், அதிகமாகக் கொடுக்கச் சக்தியற்றவர்களும் இதனுல் மிகவும் பாதிக்கப்படுகிருர்கள். இவ்விதம் உயரும் வாழ்க்கைத்தரச் செலவுச் சுமையிலிருந்து தப்புவதென்ருல், செலவு உயர்வுகட்குத் தக்கபடி, பண வருமானங்களையும் உயர்த்திக்கொள்ளக்கூடிய போதுமான பொருளாதாரத் திறமுடையவர்களால்மட்டுமே முடியும்.

பணவீக்கம் தொடர்ந்து நீடிக்கும் என்று எதிர்பார்ப்பது, வட்டி வீதங்களையும் உயர்த்திவிடுகிறது. தங்கள் பணத்தால் அடுத்த சில ஆண்டுகளில் 4 அல்லது 5 சதவீதம் குறைவாகவே பொருள்களை வாங்கமுடியும் என்று மக்கள் நினைத்தால், குறைந்த வட்டி வீதங்களுக்குக் கடன் கொடுக்க முன்வரமாட்டார்கள். இதற்கு மாற்ருகத் தங்கள் பணங்களை (சாதாரண பங்குகளில்) அடகுகளில் (equities) முதலீடு செய்து மிகுந்த இலாபங்களை அடைய விரும்புவார்கள். 1938-க்குப் பின் வாழ்க்கைத்தரச் செலவுகள் உயர்ந்ததுபோலவே, பிரிட்டனில் உள்ள பங்குகளின் பொது விலை அளவுகளும் உயர்ந்துள்ளன; 1952-க்கும், 1962-க்கும் இடையில் அவை மும்மடங்காகி

விட்டன. மிகுந்த வட்டி வீதங்கள் சிலவகைச் சொத்துகளில் செய்யப்படும் முதலீடுகளைத் திசை திருப்பிவிடுகின்றன. சில சொத்துகளைக் கட்டி அமைப்பதற்கு நெடுங்காலம் ஆகலாம் (கப்பல் கட்டுதல், ரப்பர் முதலிய தோட்டத் தொழில்); அல்லது அவை நெடுங்காலம் நீடிக்கக்கூடிய சொத்துகளாக இருக்கலாம் (இவற்றில் தேய்மானங்கட்கு ஏற்றபடி வட்டிச் செலவுகளும் அதிகமாயிருக்கும்); அல்லது சில சொத்துகளிலிருந்து பலன் கிடைப்பதற்கு நீண்ட நாட்கள் ஆகலாம். இவற்றிலிருந்து திசை திருப்பிய முதலீடுகளை விரைவில் அதிகமான இலாபங்களைத் தரக்கூடிய சொத்துகளில் முடங்குமாறு உயர்ந்த வட்டி வீதங்கள் தூண்டுகின்றன. வீடுகளையும், குடியிருப்புப் பகுதிகளையும் கட்டி, நிலையான வாடகைக்கு விடுவதற்குப் பதிலாக, அவற்றை உடனடியாக விற்றுக் கைமேல் இலாபம் பார்க்கும் உணர்வே தூண்டப்படுகிறது.

கிரேட் பிரிட்டனுடன் போட்டியிடும் நாடுகளில் ஏற்படுவதைவிட, பிரிட்டனின் செலவுகள் உயர்வதற்குப் பணவீக்கம் காரணமாக இருந்தால், பிரிட்டனுடைய ஏற்றுமதிகளை அயல்நாடுகளில் விற்பது மிகவும் சிரமமாகிவிடும். இது ஏற்கெனவே ஏற்பட்டுவிட்டது. உதாரணமாக, சில மேற்கு ஐரோப்பிய நாடுகள் தம்முடைய விலைகளையும், செலவுகளையும் மிகுதியாக உயர்த்திக்கொள்ளாமலேயே தங்கள் நாடுகளில் முழுவேலையுடைமையை அளித்துள்ளன. 1948ஆம்ஆண்டுஅளவைவிட மேற்கு ஜெர்மனியின் வாழ்க்கைத்தரச் செலவு 1962-ல் 25 சதவீதம் உயர்ந்தது; பெல்ஜியத்தில் 20 சதவீதத்திற்கும் குறைவாகவே இருந்தது. கிரேட் பிரிட்டன், 1949 செப்டம்பரில் பவுனின் மதிப்பைக் குறைத்துக்கொண்டது. பணவீக்கம் தொடர்ந்து நீடித்தால், அது இன்னும் தனது பவுனின் மதிப்பை இறக்கிக்கொள்ளவேண்டிய கட்டாயம் ஏற்படும். ஸ்டெர்லிங் ஒரு சர்வதேசச் செலாவணியாகப் போற்றப்படும் பெருமைக்கு, இப்போக்கு இழுக்கைத் தரும்; சர்வதேச நிதித்துறைக் கேந்திரமாகவும், சர்வதேசப் பண்டங்களுக்குரிய அங்காடியாகவும், லண்டனுல் சம்பாதிக்கப்படும் வருமானங்களின் தரத்திற்கு இது ஒவ்வாததாகும். நாணயமாற்றுக் கட்டுப்பாடுகளைக்கொண்டு, இவ்விதம் பவுனை மதிப்பிறக்கம் செய்வதைத் தவிர்த்துவிட்டால், பன்னாட்டு வாணிகத்தில் மிகுதியான சுதந்திரத்தை நோக்கி, இதுவரை நாம் பெற்ற வெற்றிகளெல்லாம் குலைந்துவிடும். இத்தகைய சுதந்திரமான வாணிகத்திலிருந்து, தனது இறக்குமதிகளைப் பெரிதும் சார்ந்துள்ள முன்னணி வாணிக நாடு என்றவகையில் நாம் பெறக்கூடிய இலாபங்கள் எல்லாம் சிதைந்துபோய்விடும்.

பணவீக்கத்தை மிகுதிப்படுத்துவதிலும், குறைப்பதிலும், பல காரணிகள் பங்கு பெறும் என்பதை 33ஆம் அதிகாரம் ஆரும் உட்பிரி

வில் விவாதித்தோம். பணவீக்கத்தைக் குறைக்கக்கூடிய பல காரணிகளில் உற்பத்தி மிகுதி, வாணிப வீதத்தில் வளர்ச்சி, சேமிப்பில் உயர்வு (இது விருப்ப சேமிப்பாகவும் இருக்கலாம்; அல்லது கட்டாய சேமிப்பாகவும் இருக்கலாம். அதிக வரிகள், வரவு செலவுத் திட்ட வரிகள், மிகுதியான தேசிய இன்சூரன்சுச் செலுத்துதல்கள் ஆகியவற்றைக் கட்டாயச் சேமிப்பிற்கு உதாரணங்களாகக் குறிப்பிடலாம்), பொதுத்துறைச் செலவினங்களில் குறைப்பு, நாணயம், செலாவணி ஆகியவற்றின் விரிவைக் கட்டுப்படுத்திவைக்கும் முறைகள் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். இக் காரணிகளில் ஏதாவதொன்று, தேசியப் பண வருவாய்க்கும், தேசிய உண்மை வருமானத்திற்கும் இடையில் உள்ள விகிதாசாரத்தைப் பாதிக்கும் அளவைக் கொண்டே அதன் செல்வாக்கை மதிப்பிட முடியும்.

போர்ப் பிற்காலத்தில், பணவீக்கத்தை உண்டாக்குவதற்குரிய முக்கியக் காரணமாக அமைந்தது, ஆண்டுதோறும் அதிகக் கூலிகள் அளிக்கச் செய்த தொழிற்சங்கங்களின் வெற்றித்திறமே என்று பலர் கருதுகின்றனர்கள். இதற்கு மாறான இன்னொரு கருத்தும் இருக்கிறது. மிகுதியான பண வருவாய்கள் ஏற்பட்டதற்குக் காரணம், செலவினங்களின் தொடர்ந்த உயர்வால் ஏற்பட்ட 'தேவையின் இழுப்பே' (demand pull) அன்றி, அதிகக் கூலிகள் அளித்ததால் ஏற்பட்ட 'செலவின் உந்துதல்' (cost push) அன்று என்று இக் கருத்து உணர்த்துகின்றது.

பணவீக்கம் என்பது, பொருளாதார அமைப்பின் பொதுவான சுமை மிகுதியால் ஏற்படுகிறது; இதற்குப் பல காரணங்கள் ஒன்றுகூடித் தத்தமது பங்கை முறையே அளிக்கின்றன; ஆகையால், பணவீக்கம் ஏற்படுவது ஒரு குறிப்பிட்ட காரணத்தால்மட்டுமே என்று கருதி, அதைக் கண்டுபிடிக்க முற்படுவது பயனற்றதாகும். மேற்குறித்த இரு கருத்துகளில் எது மிகவும் சரியானது என்று தீர்ப்புக் கூறவேண்டுமானால், நாம் இரண்டாவதாகக் குறிப்பிட்ட கருத்தையே ஏற்கவேண்டும்.

• கடந்த பல ஆண்டுகளில், உண்மையான சம்பாத்தியங்களைவிடக் குறைவாகவே கூலி விகிதங்கள் உயர்ந்துள்ளன. இவ்விதம் ஏற்பட்டமைக்கு உரிய காரணமாக, தொழிற்சங்க நிர்ணய அளவுகளைவிடத் தொழில் அளித்தவர்கள், அதிகமான கூலி விகிதங்களை அளித்தமையைக் குறிப்பிடவேண்டும். இவ்விதம் ஏற்பட்ட அதிகப்படியான செலவுகளைச் சரிக்கட்டுதற்காகப் பண்டங்களின் விலைகளை உயர்த்தி, அவர்கள் நிலைமையைச் சமாளித்துக்கொண்டார்கள். பொதுவாகப் பார்க்கையில், சில சமயங்களில், கூலி விகிதங்களைவிட, கம்பெனி

களின் இலாபங்கள் துரிதமாக உயர்கின்றன. மேலும், வேலையற்றிருந்தோரின் எண்ணிக்கையைவிட, வேலை காலி இருக்கிறது என்று வேலை தேடித்தரும் அலுவலகத்தில் பதிந்துவைத்த எண்ணிக்கையின் அளவு, பல ஆண்டுகள், மிகுதியாகவே இருந்தது.

அதிகமான கூலி விகிதங்கள் வேண்டுமென்ற கோரிக்கை நெருக்கத்தைவிட, அருமைப்பாடான தொழிலாளர்கட்கு அதிகக் கூலி கொடுத்துப் பெறவேண்டுமென்ற தொழில் அளிப்போரின் போட்டியால் ஏற்பட்ட மிகுதியான பணத் தேவையே, பணவீக்கம் ஏற்படக் காரணமாயிருக்கிறது என்பது, இதுவரை நாம் கண்ட விளக்கங்களால் புலனாகின்றது.[1]

பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கான அரசாங்கக் கொள்கை போருக்குப் பின்னர், நான்குவிதமான நிலைமாற்றங்களைக் கடந்து சென்றிருக்கிறது. 1947ஆம் ஆண்டின் இறுதிவரைக்கும், அரசாங்கக் கொள்கை, வெளிப்படையான கட்டுப்பாடுகளை விதிப்பதிலேயே பெரும்பாலும் அக்கறை காட்டியது. இத்தகைய கட்டுப்பாடுகளால் போதிய பலனில்லை என்பதை அறிந்தவுடன், 1947ஆம் ஆண்டு இலையுதிர்காலம் முதல், அதிகமான வரிகளாலும் மிகுதியான வரவு செலவுத் திட்ட உபரிகளாலும் இக் கட்டுப்பாடுகள் அதிகப்படுத்தப் பட்டன; திருத்தியமைக்கப்பெற்றன. நாட்டின் பாதுகாப்புச் செலவுகளின் உயர்வால் விளைந்த நெருக்கடி காரணமாக, இந்தக் கொள்கையைச் செயல்படுத்துவது 1951-ல் மிகவும் சிரமமாகி விட்டது. அப்பொழுது பதவியேற்ற அரசாங்கம், பணக் கட்டுப்பாடுகளை விதித்தும் (வங்கிகளின் நீர்மைச் சொத்துகளை முற்றிலும் பிழிந்தெடுப்பதன்மூலம் இது சாத்தியமாயிற்று), மிகுதியான வட்டி வீதங்களை நிர்ணயித்தும் இக் கொள்கையைத் திருத்தியமைத்தது. குறைந்த ஏற்றுமதி விலைகள், உயர்ந்து செல்லும் தனிநபர் சேமிப்புகள் ஆகியவற்றின் காரணமாக, பணவீக்கம் உண்மையிலேயே கட்டுப்படுத்தப்பட்டாலுங்கூட, மேற்குறித்த கொள்கையும் 1952-ல் மிகப் பயனுள்ளதாகவே இருந்தது. பணக்கட்டுப்பாடுகளை விதிக்கும் கொள்கையை மீண்டும் 1955-ல் அமலாக்கியபொழுது, தவணைக் கொள்முறை (hire-purchase) மீதான, இதரவகைத் தடைகள் விதிக்கப்பட்டபோதிலுங்கூட, அது அவ்வளவு வெற்றி தரவில்லை. 1957-ல் பாங்குவீதம் 7 சதவீதத்திற்கு உயர்ந்த பின்னரே, வருமானங்களில் ஏற்பட்ட மிகுதியான உயர்வு தடுக்கப்பெற்றது; அப்பொழுதும் இதன் விளைவாக, வேலையின்மை நிலை கணிசமாகப் பெருக நேரிட்டது.

[1] இதுபற்றிய முழு விபரமும் அறியவேண்டுமானால், F. W. பெயிஷ் எழுதிய 'பணவீக்கமும் ஐக்கிய அரசும், 1948–57' என்ற கட்டுரையைப் பார்க்கவும் Economica May, 1938).

இதற்கு முந்திய பணவீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்குப் பணத்துறை நடவடிக்கைகளை அரசாங்கம் உபயோகித்துக் கொண்டது; ஆனால் 1959-ல், தேவைகளை மறு விரிவாக்குதற்காக வரிக் குறைப்புகளைப் பயன்படுத்திக்கொண்டது. 1960-ல், வருமானங்கள் தலைதெறிக்கும் வேகத்தில் உயர்வதைக் கண்டவுடன், அவற்றைக் கட்டுப்படுத்துவதற்காக, மீண்டும் அரசாங்கம் பணத்துறைக் கட்டுப்பாடுகளையே மேற்கொண்டது; பாங்குகளின் நீர்மைச் சொத்துகளைக் கட்டுப்படுத்துவது, விசேஷமான டெபாசிட்டு முறைகளை ஏற்படுத்துவது, பாங்குகளின் அட்வான்சுகள், தவணைமுறைக் கடன்கள் ஆகியவற்றின்மீது கட்டுத்திட்டம் செய்வது என்பன அவற்றுள் சில. 1961 ஜூலையில், அரசாங்கம், மீண்டும் பாங்கு வீதத்தை 7 சதவீதமாக உயர்த்தியது. தேவையைத் தூண்டுவதற்காக ஒருவகை நிதிக் கொள்கை, அதனைக் கட்டுப்படுத்துவதற்காக வேறொருவகைப் பணத்துறைக் கொள்கை என முரண்பட்ட இரு வகைக் கொள்கைகளை அரசாங்கம் மேற்கொண்டமை, 1961-ன் பிற்பாதியில், நீண்டகால வட்டிவீதத்தை $6\frac{1}{2}$ சதவீதம் உயர்த்தி விட்டது.

என்றாலுங்கூட, அரசாங்கத்தின் கொள்கை 1947–51-ன் கொள்கை நிலைக்கு ஓரளவு மீண்டும் 1961-ல் திரும்பியது. எந்த ஒரு சமயத்திலும் 10 சதவீதம்வரை மறைமுக வரிகளை உயர்த்துவதற்கான அதிகாரம், 1961ஆம் ஆண்டு நிதிச் சட்டப்படி, நிதித்துறைச் செயலருக்கு அளிக்கப்பெற்றது. அவர் இச் சட்டத்தைப் பிரயோகித்து, தேவைகளைக் குறைத்து, வருமான உயர்வு வேகத்தையும் கட்டுப்படுத்தினார்; இதனால் வேலையின்மை நிலையே பெருகியது. 1962 இறுதியிலும், 1963-ன் வரவு செலவுத் திட்டத்திலும், அவர் தேவைகளை மறுபடியும் விரிவாக்க முற்பட்டபொழுது, மீண்டும் நிதித்துறை நடவடிக்கைகளையே மேற்கொண்டார். நீண்டகாலத் தவணைக்கான வட்டி வீதமானது, அப்பொழுது நிலவிய $5\frac{1}{2}$ சதவீதத்திற்கும் கீழே குறைவதாகத் தோன்றவில்லை. எனவே, இனிமேல் அரசாங்கம் தேவையைக் கட்டுப்படுத்த முற்படும்பொழுது, பணத்துறைக் கொள்கைகளையே இதுவரை சார்ந்திருந்ததைக் குறைத்துக் கொண்டு, நிதித்துறைக் கொள்கைகளையே அதிகமாகச் சாரும் என்பதும் சாத்தியமாகத் தோன்றுகிறது. அரசாங்கம் அவ்விதம் செய்யின், நீண்டகாலத் தவணைக்குரிய வட்டி வீதங்கள், முன்பெல்லாம் உயர்ந்தே செல்லும் போக்கைவிட்டு, இனிமேல் ஏற்றத்தாழ்வுகட்கு உள்ளாக முற்பட நேரிடும். அதாவது $5\frac{1}{2}$ சதவீதம் முதல் $6\frac{1}{2}$ சதவீதத்திற்குள்ளாகவே உயர்ந்து தாழக்கூடும். இதற்கு முன்பு, 1946-ல் $2\frac{1}{2}$ சதவீத அளவில் இருந்த $2\frac{1}{2}$ சதவீத வட்டியுடைய கன்சோல்களை, 1962-ன் பிற்பகுதியில் $6\frac{1}{2}$ சதவீதத்திற்கு உயர்த்தி விட்டன. இத்தகைய உயர்வுகள் இனிமேல் ஏற்படமாட்டா.

நாம் முன்னர்க் குறிப்பிட்ட 'செலவின் உந்துதல்' 'தேவையின் இழுப்பு' என்ற விவாதத்தைப் பார்ப்போம். இவற்றுள், முன்னதைவிடப் பிந்தியதையே நடைமுறைச் சான்றுகள் ஆதரிக்கின்றன என்பது உண்மையாயினும், எனது கருத்து வேறு. மிக நியாயமான கூலிக் கோரிக்கைகளுடன், பணத்துறை, பொதுநிதித்துறை நடவடிக்கைகளைத் தகுந்தமுறையில் இணைத்திருந்தால், இவற்றால் மிகக் குறைவான பணவீக்கமே ஏற்பட்டிருக்கும் என்ற எனது கருத்திலும் உண்மை இருக்கிறது. இதை வேறுவிதமாகச் சொல்லுவதென்றால், போர்ப் பிற்கால அரசாங்கங்கள் அனைத்தும் (மேற்கு ஜெர்மனியைப் போல), பணவீக்கத்திற்கு எதிரான நடவடிக்கைகளைத் தீவிரமாக மேற்கொண்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். தேசிய உண்மை வருமானத்தில் உயர்வு ஏற்பட்ட காரணத்தால் தேவைப்படும் அதிகக்கூலி அளவுகளைவிட, தமக்கு இன்னும் உயர்ந்த கூலிவிகிதங்கள் வேண்டுமென்ற தொழிற்சங்கங்களின் இடைவிடாத கோரிக்கைக்கு எதிராக, இவ் வரசாங்கங்களால் ஏதும் செய்திருக்க முடியுமா? இக் கோரிக்கைகட்கு இணங்காது, பணவீக்கத்திற்கு எதிரான நடவடிக்கைகளை விடாப்பிடியாக அமல் நடத்த எந்த அரசாங்கத்தாலும் முடிந்திருக்குமா? அப்படி அரசாங்கம் செய்ய முனைந்திருந்தால், நாடெங்கும் வேலைநிறுத்தங்கள் ஏற்பட்டிருக்கும்; வேலையின்மையும் உற்பத்திக்குறைவும் உடன் தொடர்ந்திருக்கும்.

இத்தகைய சங்கடமான நிலை, மிகச் சமீப காலத்திற்குள் கட்டாயம் தலையெடுக்கும்போல் தோன்றுகின்றது. அப்படி ஏற்பட்டால் இதை அரசாங்கம் எவ்வாறு சமாளிக்கப்போகிறது (அதன் அரசியல் போக்கு எவ்வாறாயினும்) என்பதை இனிமேல்தான் கண்டறிய வேண்டும்.

## 5. புறவாணிகம் (External Trade)

கிரேட் பிரிட்டனின் மக்கள்தொகை 50 மில்லியனுக்கு மேல் உள்ளது; இவர்கள் 89 மில்லியன் சதுரமைல் பரப்பிற்குள் (இதில் ஸ்காட்லாந்தின் பரப்பு 30 மில்லியன் சதுரமைல்களுக்கு மேல்) வாழ்கின்றனர். பிரிட்டன், தொழிற்சாலைப் பொருள்களை உற்பத்தி செய்து ஏற்றுமதி செய்து, அவற்றிற்குப் பதிலாக, உணவுப் பண்டங்கள், மூலப்பொருள்கள் ஆகியவற்றில் பாதிக்குமேல் இறக்குமதி செய்துகொள்ளுகிறது. பிரிட்டனின், தராதரமான உயர்ந்த வாழ்க்கைத்தரங்கள், அதனுடைய புறவாணிகங்களால் பேணப்பட்டு வருகின்றன.

போருக்கு முன்னர், கிரேட் பிரிட்டன் அல்லது ஐக்கிய அரசின் ஏற்றுமதிகளைவிட இறக்குமதி அளவு அதிகமாக இருந்தது; இந்த

வித்தியாசம், அயல்நாட்டு முதலீடுகளுக்கு அது பெற்ற வட்டிகள், கப்பல் போக்குவரத்து முதலிய பணிகளுக்குப் பெற்ற கட்டணங்கள் ஆகியவற்றால் நிரவப்பெற்றுவந்தது. போருக்குப் பின்னர், மேற்குறித்த 'கண்ணுக்கு வெளிப்படையாகப் புலப்படாத வருமான இனங்கள்' (invisible items) குறைந்துவிட்டன; எனவே, பிரிட்டன் தனது இறக்குமதிகளைக் குறைத்துக்கொண்டு, அவற்றிற்குப் பதிலாக ஏற்றுமதிகளைக் கணிசமாக விரிவடையச் செய்வதன்மூலம் தனது வாழ்க்கைத்தரத்தைப் பேணிக்கொள்ள வேண்டியதிருக்கிறது.

இறக்குமதிகள் குறைக்கப்பட்டன; குறிப்பாக, டாலர் பிரதேசங்களிலிருந்து வந்த இறக்குமதிகள் மிகுதியும் குறைக்கப்பட்டன. ஆனால், பொருளாதார நிலையில் அபிவிருத்தி ஏற்படத் தொடங்கியதும், இறக்குமதிக் கட்டுப்பாடுகள் ஓரளவு தளர்த்தப்பட்டன; என்றாலும், போருக்கு முன்னர் இருந்ததைவிட, இன்று இறக்குமதி அளவுகள் குறைவாகவே உள்ளன. ஏற்றுமதி அளவுகள் தொடர்ந்து பெருகிவந்துள்ளன; போருக்கு முன்பிருந்த அளவைவிட, அவை இப்பொழுது இருமடங்காகியுள்ளன. இதுபற்றிய விவரங்கள் பின்னர் தரப்பட்டுள்ளன.

போர்ப் பிற்காலத் தொடக்க ஆண்டுகளில், அரசாங்கத்தின் நேரடிக் கட்டுப்பாடுகள்மூலம் ஏற்றுமதிகள் விரிவுற்றன. 1949 செப்டம்பரில், ஸ்டெர்லிங்கின் மதிப்பிறக்கத்தால், ஏற்றுமதிக்கு மிகுந்த ஆக்கம் கிடைத்தது. சமீப ஆண்டுகளில், விலைவாசி அமைப்பின் சுதந்திரமான இயக்கத்தின்கீழ் ஏற்றுமதிகள் நடைபெற்று வருகின்றன. ஆனாலும், உள்நாட்டு விற்பனையைவிட, வெளிநாட்டில் பொருள்களை விற்பனை செய்யும்படி அரசாங்கம் சில தூண்டுதல் வழிகளை மேற்கொள்ளக்கூடும். உதாரணமாக, உள்நாட்டுச் செலாவணியைக் கட்டுப்படுத்துதல், உள்நாட்டில் மறைமுக வரிகளை விதித்தல் அல்லது அதிகரித்தல் (வாங்குதல் வரி உட்பட) என்பன அவ் வழிகளாகும். இதற்கு மாறான வழிகளைக் கையாண்டு, ஏற்றுமதிகளைவிட உள்நாட்டு விற்பனையின் அளவை அதிகப்படுத்தவும் அரசாங்கத்தால் முடியும்.

போர் முடிந்ததிலிருந்து, விவசாயிகட்குச் சிறப்பான உதவிகள் அளிக்கப்பெறுகின்றன. இதற்குக் காரணம், நம்முடைய இறக்குமதித் தேவைகள் அனைத்திற்கும் தக்கபடி நமது ஏற்றுமதிகளை விரிவாக்க முடியாது என்பதே ஆகும். இதனால், உள்நாட்டு விளைபொருள் உற்பத்தியை அதிகரிப்பதற்கு உதவிகள் அளிப்பது அவசியமாயிற்று. ஏனைய நாடுகளில் கையாளப்பெறும் வழிகளைவிட, பிரிட்டன் மேற்கொண்ட உதவி முறைகளில் ஆட்சேபத்திற்குரிய அம்சங்கள் நிறையக் கிடையாது. உதாரணமாக, அமெரிக்க முறைகளை ஆராய்வோம்,

அமெரிக்க முறையில் பெரும்பாலான விளைபொருள்களுக்கு, உலக விலைகளைவிட மிகுதியான விலைகள் அளிக்கப்படுமென்று விவசாயிகட்கு உத்தரவாதம் அளிக்கப்பெற்றது; இந்த உயர்ந்த விலைகளை எல்லாம் அமெரிக்க மக்கள் (நுகர்வாளர்) அளிக்கவேண்டியிருந்தது ; அரசாங்கம் விளைபொருள்களை மிகுதியாகச் சேமித்துவைத்துக் கொண்டது; ஆனால், இவற்றை அறுதியிட்ட விலைகளில் விற்பதில்லை; கிரேட் பிரிட்டனில், விவசாயிகட்கு, 'பற்றுக்குறையை நிரவும் செலுத்துகள்' (deficiency payments) அளிக்கப்பெற்றன ; விலைகளின் உண்மையான அளவைவிட, (ஆண்டுதோறும் திருத்தி அமைக்கப்பெறும்) சில ஒப்பந்த அளவுகளில் அவற்றின் விலைகளிலிருந்து பெறக்கூடிய வருமானத்தில் ஏற்படும் பற்றுக்குறையைச் சரிக்கட்டிக்கொள்ளுவதற்காக, விவசாயிகட்கு இவ் வுதவிக் கொடையை அரசாங்கம் அளிக்கிறது ; இதனால், நுகர்வோர் செலுத்த வேண்டிய விலைகள் உயர்த்தப்படுவதில்லை. மேலும், இக் கொள்கையால் செலவும் மிகுதியாகின்றது; இப்பொழுது இந்த வகையில் செலுத்தப்படும் 300 மில்லியன் பவுன்கள், ஆண்டுதோறும் 300,000 முழுநேர விவசாயிகட்கும், 50,000 பகுதி நேர விவசாயிகட்கும் பகிர்ந்தளிக்கப் பெறுகின்றன. பொருளாதார நோக்கில் ஆராய்கையில் இவ்வித உதவி அளிப்பது அவசியமானதாகவும் தோன்றவில்லை. இவ்விதம் உதவிகள் அளிப்பதால் விவசாய உற்பத்தி அளவு மிகச் சாதாரண சதவீதத்தைவிட அதிகமாக உயர்ந்திருப்பதாகவும் தெரியவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக நமது பொருளாதார நிலை ஓரளவு செம்மையாகவே இருக்கின்றது.

1962-ல் ஐக்கிய அரசின் ஏற்றுமதிகள் 3,792 மில்லியன் பவுன்கள் (இதில் 84 சதவீதம் ஆலைத் தொழில் உற்பத்திகள்); மறு ஏற்றுமதிகள் 158 மில்லியன் பவுன்கள். கப்பல் போக்குவரத்து முதலிய இதர பணிகளின் ஏற்றுமதி உதவிகளையும் சேர்த்துக்கொண்டால், நமது உற்பத்தியில் கிட்டத்தட்ட கால்பங்கை நாம் ஏற்றுமதி செய்து வருகின்றோம். 1962-ல் நமது இறக்குமதிகளின் அளவு 4,492 மில்லியன் பவுன்கள். நமது வாணிப வீதங்களில் ஏதாவது குறிப்பிடத்தக்க மாறுதல் ஏற்பட்டால், அது நமது தேசிய உண்மை வருமானத்தில் குறிப்பிடத்தகுந்த மாறுதலை உண்டாக்கும் என்பது இதிலிருந்து நமக்கு நன்கு புலப்படுகின்றது.

பிரிட்டனின் வாணிப வீதங்களில் வளர்ச்சி ஏற்படுகிறது என்றால், அதற்கு முக்கியமான உற்பத்தி சாதனப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் இதர நாடுகளின் வாணிப வீதங்களில் தளர்ச்சி ஏற்படுகிறது என்பது பொருள். இவற்றுள் பல நாடுகள் மிகமிக ஏழைமை நிலையில் உழல்பவை; எனவே, இவற்றின் ஏற்றுமதிகளில் பொதுவாக

ஏற்படும் உயர்வு மிகமிக வரவேற்கப்படும். இங்ஙனம் அவற்றின் ஏற்றுமதி அளவு உயர்வதால், பிரிட்டன் முதலிய நாடுகளிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் பொருள்களைத் தாம் வாங்குதற்குரிய அவற்றின் சக்தி பெருகுகிறது என்பதிலும் உண்மை இருக்கிறது. ஆனல், இதைக்கொண்டு அதிகமான இறக்குமதி விலைகளால் நமக்கு இலாபம் கிட்டுகிறதென்றும், குறைவான இறக்குமதி விலைகளால் நமக்கு இழப்பு ஏற்படுகிறதென்றும் விவாதிப்பது அபத்தமாகும். பிரிட்டனின் நோக்கில்மட்டும் நின்று பார்த்தால் இதனல் ஏற்படும் விளைவு எதிரிடையாகவே இருக்கும்.

போர் முடிந்ததிலிருந்து 1952 வரை, ஐக்கிய அரசின் வாணிப வீதம் பாதகமாகவே இயங்கிக்கொண்டிருந்தது என்பதை முன்பு குறிப்பிட்டிருக்கின்றேன். 1952-க்குப் பின்னர், இப் போக்கில் மாறுதல் ஏற்பட்டது. இதன் ஆண்டுப் புள்ளிவிவரங்களை இதன்கீழ்க் குறிப்பிட்டுள்ளேன்.

பொறி ஆக்கப் பொருள்களின் (manufacturing goods) உலக ஏற்றுமதியில் ஐக்கிய அரசுக்கு உரிய பங்கு, 1953-ல் 21 சதவீதத்திலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து இப்பொழுது 16 சதவீதத்திற்கு இறங்கிவிட்டது. இது ஓர் அபாய அறிவிப்பாகும். என்ருலும், உண்மையில் இது, உலக வாணிப அளவில், சிறப்பாக மேற்கு ஐரோப்பிய நாடுகளின் வாணிபத்தில் மேற்குறித்த ஆண்டுகளில் ஏற்பட்டுள்ள பொதுவான விரிவையே பிரதிபலிக்கிறது. பிரிட்டனின் மொத்த ஏற்றுமதி அளவுகளை முறையாகப் பேணிவரும் வரைக்கும், அதன் வாணிப வீதம் மோசமான நிலைக்குத் திரும்பாத வரைக்கும் எவ்வித அச்சம் கொள்ளுதற்கும் இடம் இல்லை.

இறக்குமதிகளின்மீது விதிக்கப்பட்டிருந்த கட்டுப்பாடுகளைப் பொதுவாகத் தளர்த்தியதாலும், சிலவற்றை நீக்கிவிட்டதாலும், பன்னேக்க முறையில், பாரபட்சமற்ற அடிப்படையில் உலக வாணிபம் விரிவடைந்திருப்பதாலும், ஐக்கிய அரசு, முன்னணி வாணிக நாடென்ற முறையில் மிகுந்த பலன்களை அடையும் என்பது உறுதி. சுங்கவரி வாணிபப் பொது ஒப்பந்தத்தில் (General Agreement on Tariffs and Trade-GATT) உறுப்பினராக இருப்பதன்மூலம், மேற்குறித்த நோக்கங்களைச் செயல்படுத்த உழைப்பதாகப் பிரிட்டன் உறுதியளித்திருக்கிறது. உலக வாணிபத்தில் ஏற்படும் பொதுவான விரிவால், பிரிட்டனுக்கு அதில் உரிய பங்கில் சாதாரணமான வீழ்ச்சி ஏற்பட்டாலும், பிரிட்டனுடைய வாணிப மொத்த அளவில் உயர்வு ஏற்படும் என்பது சாத்தியமாகத் தெரியவில்லை. மேற்குறித்த கொள்கைக்கு எதிராகச் சென்று, இருமுக உடன்படிக்கைகள், காமன்வெல்த்து விருப்பங்கள் முதலிய

தனிப்பட்ட நெறிகளை மேற்கொண்டு, பிரிட்டிசு ஏற்றுமதிகட்குரிய தனிப்பட்ட அங்காடிகளை (sheltered markets) ஏற்படுத்திக்கொள்ள முயன்றால், 1930ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட சம்பவமே திரும்பவும் நிகழும். அப்பொழுது, பிற நாடுகளும், பிரிட்டனைப்போலச் செய்யத் தொடங்கின. இதனால் உலக வாணிப அளவில் பிரிட்டனின் சதவீதப் பங்கு உயர்ந்தாலும் அதன் வாணிப அளவு சுருங்கி விட்டது.

ஐக்கிய அரசின் புற வாணிபம், 1946—1958

| ஆண்டுகள் | 1938=100 | | | | | நடப்புக்கணக்கில் உள்ள அயல்நாட்டுச் செலுத்துநிலையில் நிகரஉபரி (+) அல்லது (—) (மில்லியன் பவுனில்) |
|---|---|---|---|---|---|---|
| | (1) இறக்குமதி அளவு | (2) ஏற்றுமதி அளவு | (3) இறக்குமதி விலைகள் | (4) ஏற்றுமதி விலைகள் | (5) வாணிப வீதங்கள் (3) ÷ (4) | |
| 1946 | 67 | 99 | 213 | 196 | 109 | —266 |
| 1947 | 76 | 109 | 258 | 222 | 116 | —389 |
| 1948 | 78 | 137 | 288 | 244 | 118 | +129 |
| 1949 | 85 | 151 | 291 | 250 | 117 | +115 |
| 1950 | 85 | 174 | 333 | 267 | 125 | +446 |
| 1951 | 96 | 174 | 443 | 319 | 139 | —322 |
| 1952 | 88 | 166 | 430 | 333 | 129 | +164 |
| 1953 | 95 | 169 | 383 | 324 | 119 | +148 |
| 1954 | 96 | 177 | 381 | 318 | 120 | +125 |
| 1955 | 107 | 190 | 394 | 323 | 122 | —156 |
| 1956 | 106 | 201 | 397 | 334 | 119 | +207 |
| 1957 | 110 | 205 | 403 | 349 | 116 | +216 |
| 1958 | 110 | 197 | 371 | 347 | 107 | +329 |
| 1959 | 118 | 205 | 369 | 344 | 107 | +114 |
| 1960 | 133 | 216 | 372 | 351 | 106 | —308 |
| 1961 | 130 | 222 | 364 | 354 | 103 | — 72 |
| 1962 | 134 | 227 | 360 | 357 | 101 | + 67 |

(1) முதல் (5) வரையான பகுதிகட்கு ஆதாரம், 1963 மார்ச்சில் வெளியிடப் பெற்ற 'The Times Review of Industry and Technology'-ன் கையேடாகிய 'London and Cambridge Economic Bulletin' அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்பில், பிற நாட்டு அரசாங்கங்களிடமிருந்து பெற்ற, கொடுத்த உதவிக் கொடைகள் அடங்கும்.

ஐரோப்பியப் பொதுச் சந்தை (European Common Market) முதலிய ஏற்பாடுகளைப் பொறுத்தவரை, பிரிட்டனின் பொருளா

தாரக் கொள்கைகளை நிர்ணயிக்கும்பொழுது, மேற்குறித்த கருத்துகளையும் நினைவிற் கொள்ளவேண்டும். இந்த ஐரோப்பியப் பொதுச் சந்தை முறையைச் செயல்படுத்தும் முதல் முயற்சி 1959 ஆரம்பத்தில் மேற்கொள்ளப்பட்டது. இச் சந்தையில் பின்வரும் 6 ஐரோப்பிய நாடுகளை இணைக்கும் திட்டம் வகுக்கப்பெற்றது. ஃபிரான்சு, ஜெர்மனி, இத்தாலி, நெதர்லாந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க் (பின்னுள்ள மூன்றும் பெனிலக்ஸ் நாடுகள் எனப்படும்)[1] ஆகிய ஆறு நாடுகளும் ஐரோப்பியப் பொருளாதாரச் சமூகத்தை (European Economic Community) அமைத்தற்காகத் தம்முள் இணைந்துள்ளன. இவற்றின் விரிந்த திட்டமென்னவென்றால், இந் நாடுகளிடையே, அரசியல், சமுதாய, பொருளாதாரத் துறைகளில் ஒருமைப்பாடு ஏற்படுத்தவேண்டுமென்பதுதான். உதாரணமாக, இந் நாடுகளிடையே தடையற்ற குடியேற்றங்களையும் இடப்பெயர்ச்சிகளையும் அனுமதித்தல், பெண்களுக்கும் சமமான கூலி அளித்தல் முதலிய சமுதாயச் சட்டங்களை எல்லா நாடுகட்கும் பொதுவாக நிறைவேற்றுதல் ஆகிய முயற்சிகளைக் குறிப்பிடலாம். இவ் விரிந்த திட்டத்தின் ஒரு பகுதியாக, இந் நாடுகள் தமக்குள் ஒரு சுங்க இணைப்பை, பொதுச் சந்தை (Common Market) என்ற பெயரில் தமக்குள் ஏற்படுத்திக்கொண்டுள்ளன; இவை ஒன்றிற்கொன்று இறக்குமதி செய்துகொள்ளும் பொருள்களுக்கு விதிக்கப்படும் கட்டுப்பாடுகளையும் தீர்வைகளையும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்து வந்து, 12 முதல் 15 ஆண்டுகட்குள் பொதுச் சந்தையை, ஒரு தடையற்ற வாணிபப் பிரதேசமாக மாற்றிவிடமுடியும் என்று எதிர்பார்க்கின்றன.

இந்த ஐரோப்பியப் பொதுச் சந்தை, உலக வாணிபத்தில் பொதுவான விரிவை ஏற்படுத்த உதவுமா அல்லது இப்போதைய உலக வாணிபத்தில், பிற நாடுகளுடன் நடக்கும் ஒரு பகுதியை, ஆறு நாடுகட்குள்மட்டும் நடக்கும் பிரதேச வாணிபமாகப் பிரித்துக்கொள்ள உதவுமா என்பது இப்பொழுது கேட்கப்படும் முக்கியமான கேள்வி ஆகும். அரசியல் காரணங்கள் வேறு தனியாக இருந்தாலும், மேற்குறித்த கேள்வியின் அடிப்படையில் தோன்றிய அச்சத்தின் காரணமாகவே, ஐக்கிய அரசு 1961 அக்டோபரில், ஐரோப்பியப் பொதுச் சந்தையில் தானும் ஒரு முழு உறுப்பினராகச் சேர விண்ணப்பித்தது; காமன்வெல்த் நாடுகள், ஐரோப்பியத் தடையிலா வாணிபப் பிரதேசத்தின்[2] இதர உறுப்பு

[1] பெனிலக்ஸ் (Benelux) என்பது பெல்ஜியம், நெதர்லாந்து லக்ஸம்பர்க் ஆகிய மூன்று நாடுகளின் முதல் எழுத்துகளால் ஆன கூட்டுப் பெயர்.

[2] ஸ்வீடன், நார்வே, டென்மார்க், ஸ்விட்சர்லாந்து, ஆஸ்திரியா, போர்த்துகல், பின்லாந்து (துணை நாடு).

நாடுகள் ஆகியவற்றோடு தனக்குள்ள பொறுப்புகளை நிறைவேற்று வதிலும், தனது நாட்டு விவசாயிகளுக்குத் தரவேண்டிய பாதுகாப் பிலும் எவ்வளவோ இடர்ப்பாடுகள் இருந்தபோதிலும்கூட, ஐரோப்பியப் பொதுச் சந்தையில் சேருதற்கு ஐக்கிய அரசு முன் வந்தது. நீண்ட பேச்சுவார்த்தைகள் நடத்திய பின்னர், ஐக்கிய அரசின் விண்ணப்பம், 1963 ஜனவரியில் இறுதியாக நிராகரிக்கப் பட்டது. ஐரோப்பியப் பொதுச் சந்தைபற்றிய கொள்கை, அறுதி யாக எத் திசையில் செல்லும் என்று முடிவு சொல்லவியலாத வகை யிலேயே இன்றும் இருக்கிறது.

## 6. அயல்நாட்டுச் செலுத்துநிலைச் சிக்கல்

தனது உற்பத்தியில் கணிசமான பகுதியை ஏற்றுமதி செய்யும் ஐக்கிய அரசுபோன்ற நாட்டில் பணவீக்கம் ஏற்பட்டால், அதன் விளைவுகள் அயல்நாட்டுச் செலுத்து நிலையிலும் பிரதிபலிக்கும். இதே விகிதத்தில் இதர நாடுகளிலும் பணவீக்கம் ஏற்படா விட்டால், உள்நாட்டில் பண வருமானங்களில் ஏற்படும் உயர்வால் இறக்குமதித் தேவைகள் மிகும்; உள்நாட்டில் ஆக்கச் செலவுகளில் ஏற்படும் உயர்வால் ஏற்றுமதிகள் தடைப்படும். உலகச் சந்தைக்காக உற்பத்தி செய்யப்படும் தொழில்களில் ஈடுபட்டுள்ள உழைப்பு, முதலிய இதர சாதனங்கள், உள்நாட்டு நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்களுக்கு இடம் பெயரும். (அதாவது, ஏற்றுமதித் தொழில்களையும், இறக்குமதிகளுடன் போட்டியிடும் தொழில்களையும் சார்ந்துள்ள சாதனங்கள், அவற்றைவிட ஊதியம் நல்கும் உள்நாட்டு நுகர்வுப் பொருள் ஆக்கங்களை நோக்கித் திரும்பும்.) இத்தகைய உள்நாட்டு நுகர்வுத் தொழில்களும் பணி களும், புறப் போட்டிகளிலிருந்து பாதுகாப்புடன் அமைந்திருப்ப தால் அவற்றின் விலைகள் எளிதில் உயரும். இதனால், அயல்நாட்டுச் செலுத்துநிலையில் தொடர்ந்து பற்றாக்குறை ஏற்படும்; தங்கம், அந்நிய நாட்டுச் செலாவணி ஆகிய நாட்டின் இருப்புகள் நாளடை வில் நலிந்து சிதையும். இவ்விதப் பணவீக்க நெருக்கத்தால் ஏற்படக்கூடிய முதல் 'கேடு', இறக்குமதிகட்கு உரிய கட்டணங் களைச் செலுத்தும் ஆற்றலை இழந்துவிடுதல் ஆகும்; இதனால் ஏற்படக்கூடிய முதல் சிக்கல், அயல்நாட்டுச் செலுத்துநிலையில் விளையும் பற்றாக்குறையாகும்.

ஐக்கிய அரசு, இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தி ஏற்றுமதிகளை ஊக்கப்படுத்திவந்தபோதிலும், இந்த நெருக்கடி நிலை போருக்குப் பின்னர் அங்கும் ஏற்பட்டுவிட்டது.

1947 கோடைகாலத்தில், அயல்நாட்டுச் செலுத்துநிலையில் கடுமையான சிக்கல் ஏற்பட்டது. அதே ஆண்டு ஜூலையில்,

அமெரிக்காவுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்திற்கு இணங்க, எல்லா நடப்புப் பரிவர்த்தனைகளிலும் ஸ்டெர்லிங்கை மாற்றிக்கொள்ளக் கூடியதாக ஆக்கப்பட்டது. உண்மையில், ஸ்டெர்லிங்கில் பேணி வந்த மூலதனங்களில் பெரும்பகுதி, டாலர்களாக மாற்றிக் கொள்ளப்பட்டன. இதனால், நமது தங்க, டாலர் இருப்புகள் அனைத்தும் வெகு விரைவில் வற்ற ஆரம்பித்தமையால், ஸ்டெர் லிங்கின் மாற்றுத்திற அனுமதியை, ஐந்து வாரங்கட்குள் கைவிட வேண்டியதாயிற்று.

அமெரிக்கப் பின்னீடு (American recession) காரணமாகவும் அதைத் தொடர்ந்து ஸ்டெர்லிங் பிரதேசங்களின் டாலர் சம்பாத் தியம் குறைந்ததாலும், 1949-ல் பிரிட்டனின் இருப்புகள் மீண்டும் குறைந்தன. பொருளாதார நோக்கர்கள், மீண்டும் பவுனை மதிப் பிறக்கம் செய்வதைத் தவிர வேறு வழியில்லை என்று கருதினர்கள். ஸ்டெர்லிங் பிரதேசங்களில் இறக்குமதி செய்தவர்கள், பவுனின் மதிப்பில் வீழ்ச்சி ஏற்படும் என அஞ்சித் தமது செலுத்து களை உடனடியாக அளித்தனர். ஆனல், ஸ்டெர்லிங் பிரதேச உற்பத்திகளின் அயல்நாட்டு இறக்குமதியாளர்கள் தாங்கள் அவற்றை வாங்குவதையும் செலுத்துவதையும் தாமதப்படுத்தினர்கள் [இவ்விதப் பழக்கங்கள் 'முன்னிடல்' (leads) 'பின்னிடல்' (lags) என அழைக்கப்பெறுகின்றன]. இவற்ருல் மீண்டும் இருப்புகள் குறைந்தமையால், அதே ஆண்டு செப்டம்பரில் பவுனின் மதிப்பை இறக்கவேண்டியதேற்பட்டது.

4·03 டாலரிலிருந்து 2.80 டாலருக்குப் பவுனின் மதிப்பு இறக்கப் பட்டது; இந்த அளவு எதிர்பார்த்ததைவிட மிகுதி; நியாயமாகத் தேவைப்படும் அளவிற்கும் மிகுதி என்று சொல்லலாம். சிறந்த பொருளாதார நிபுணர் ஒருவர், இவ்வித மதிப்பிறக்கம் செய்திருக்க வேண்டிய அவசியமே இல்லை என்று கருத்துத் தெரிவித்தார். நிலைமாறிய பின்னருங்கூட, தொடர்ந்த பணவீக்கம் ஏற்படும் வாய்ப்பையே இது உண்டாக்கியது.

மதிப்பிறக்கத்தின் பின்னர், இருப்புகள் மீண்டும் முன் நிலைக்கு உயர்ந்தன. ஆனல், 1951-ல் இறக்குமதிகளின் அளவிலும் விலை யிலும் மிகுதி ஏற்பட்டதாலும், இதர காரணிகளின் விலைகள் உயர்ந்த தாலும், அவ் விருப்புகள் மீண்டும் குறைந்தன. எனவே, அந்த ஆண்டின் இறுதியில் மீண்டும் ஒரு சிக்கலான நிலை ஏற்பட்டது.

1952 கோடைக்காலத்தில், 1,685 மில்லியன் டாலராக இருந்த தங்க, டாலர் இருப்புகள் 1954, ஜூனில் 3,000 மில்லியன் டாலர் கட்கும்மேல் உயர்வுற்றன. அச் சமயத்தில் சில்லறை விலைகள்

கிட்டத்தட்டப் பதினைந்து மாதங்கட்கு ஒரேநிலையில் மாருதிருந்தன. அதன் பின்னர் சேமிப்புகளைவிட முதலீடுகள் அதிகமாயின (மிகவும் குறைந்துபோன சரக்கு இருப்புகளைக் கட்டி அமைக்க ஒதுக்கிய முதலீடு உட்பட); சில்லறை விலைகள் மீண்டும் உயரத் தொடங்கின; இறக்குமதி அளவுகள் மிகுந்தன; இதனால் மீண்டும் இருப்புகள் குறைந்தன. (1955 இறுதியில் 2,120 மில்லியன் டாலராகிவிட்டது) எனவே, 1955ன் இலையுதிர் பருவத்தில், இன்னுமொரு அயல் நாட்டுச் செலுத்துநிலைச் சிக்கல் ஏற்பட்டது.

1956-ல் தனி நபர் சேமிப்புகள் உயர்ந்தன. சூயஸ்கால்வாய்ச் சிக்கல் ஏற்பட்டபோதிலும், ஐக்கிய அரசிடம், நடப்புக் கணக்கில், போதுமான அயல்நாட்டுச் செலுத்து நிலை உபரி இருந்தது. என்ருலும், சூயஸ் சிக்கலால் ஸ்டெர்லிங்கில் மிகுதியான யூக விற்பனைகள் ஏற்பட்டன; இதனால் ஐக்கிய அரசு, பன்னாட்டு நாணய நிதியிலிருந்து 200 மில்லியன் பவுன்களைக் கடன் வாங்கி நிலைமையைச் சமாளிக்கவேண்டியதாயிற்று.

1957ஆம் ஆண்டு, கோடைக்கால இறுதியில், ஸ்டெர்லிங்கில் மீண்டும் யூக வாணிப விற்பனை ஏற்பட்டது; இத்துடன், பிரிட்டனின் ஸ்டெர்லிங் இருப்பிலிருந்து மிகுதியான தொகைகளை இந்தியா திரும்ப எடுத்துக்கொண்டது; இதனால், பிரிட்டனின் ஸ்டெர்லிங் இருப்புகள் வற்றின; அமெரிக்க ஏற்றுமதி இறக்குமதி பாங்கிடமிருந்து அது 89 மில்லியன் பவுன்கள் கடன் வாங்கியிருந்தும், அயல்நாட்டுச் செலுத்துநிலைச் சிக்கலை அதனால் தவிர்த்துக்கொள்ள முடியவில்லை. செப்டம்பரில், பாங்கு வீதங்களில் 7 சதவீதத்திற்குக் கடுமையாக உயர்ந்தமையால், இச்சிக்கல் நிலையில் ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டது. அதுமுதல் சிறிது காலத்திற்கு ஸ்டெர்லிங் பவுனின் சர்வதேச நிலை பாராட்டத்தக்கவகையில் அபிவிருத்தி ஏற்பட்டது; 1957 இறுதியில் 2,300 மில்லியன் டாலர்களுக்குக் கீழே குறைந்த தங்க இருப்புகளும், மாற்றத்தக்க செலாவணிகளும், 1958 இறுதியில் 3,000 மில்லியன் டாலர்வரை உயர்ந்தன. என்ருலுங்கூட இந்த அபிவிருத்தி நிலை அதிக காலத்திற்கு நீடிக்கவில்லை. பாங்கு அட்வான்சுகளின் அபரிமிதமான உயர்வு, தவணைக் கொள்முதல், கடன்களின் பெருக்கம் ஆகியவற்ருேடு 1959-ன் விரிவான வரவு செலவுத் திட்டமும் சேர்ந்துகொண்டது; 'இது பண வருமானங்களை மிகக் கடுமையாக உயர்த்தியது; 1958-ல் இருந்த சாதகமான அயல் நாட்டுச் செலுத்துநிலை இருப்பை, 1960-ல் மிகவும் பாதகமான அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்பிற்குக் கொணர்ந்துவிட்டது. நடப்புக் கணக்கின் மீதான அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்பில் ஏற்பட்ட பாதகமான நிலை, தங்க இருப்புகளையும் பாதிக்கவிடாமல்

குறுகிய கால வட்டிவீதங்களின் உயர்வால் பெற்ற குறுகிய காலத் தவணைக் கடன் இருப்புகள் ஓரளவிற்கு ஈடுசெய்தன என்றாலும், 1951-ல் ஸ்டெர்லிங்கின் நிலைமீது நம்பிக்கையின்மை மீண்டும் தலைதூக்கியமை, வெளிநாட்டவர்களின் இருப்புகளை ஏராளமாகத் திரும்பப் பெற்றுக்கொள்ளுமாறு தூண்டியது. தங்க இருப்புகளில் ஏற்படவிருந்த தலைகீழ் வீழ்ச்சியைத் தடுப்பதற்காக, வெளிநாட்டுச் செலாவணிகளை ஏராளமாக, முதலில் ஐரோப்பிய மத்திய வங்கிகளிடமிருந்தும், பிறகு பன்னாட்டு நாணய நிதியிலிருந்தும் கடனாக வாங்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

1961 ஜூலைக்குப் பின்னர், பாங்குவீதம் மீண்டும் 7 சத வீதத்திற்கு உயர்த்தப்பட்டது; மறைமுக வரிகள் 10 சதவீதத்திற்கு உயர்த்தப்பட்டன. பண வருமானங்களின் உயர்வு வீதம் (வேலையின்மை நிலையை அதிகம் அதிகமாய் உருவாக்குவதன் மூலம்) குறைக்கப்பட்டது. இவற்றின் பயனாக அயல்நாட்டுச் செலுத்து நிலை இருப்புகள் உயர்த்தப்பெற்றன; ஸ்டெர்லிங்கின்மீது நம்பிக்கையும் கொஞ்சம் கொஞ்சமாக வலுப்பெற்றது. இதன் விளைவாகப் பன்னாட்டு நாணய நிதியிடமிருந்து பெற்ற கடன் முழுவதும், 1962-ல் திருப்பி அளிக்கப்பெற்றன.

இவ்விதம் அயல்நாட்டுச் செலுத்துநிலையில் சிக்கல் ஏற்பட அடிப்படைக் காரணம், பணவீக்கம்; இச் செலுத்துநிலையில் சமீபத்தில் செம்மை ஏற்பட்டதற்கு அடிப்படைக் காரணம், பணவீக்கம் தடுக்கப்பட்டமை. இவ்விதம் பணவீக்கத்திற் கெதிரான போராட்டம் தொடர்ந்து நடந்து வருகிறது; முதலில் நேரடிக் கட்டுப்பாடுகளால் பணவீக்கம் தடுக்கப்பெற்றது; பின்னர் வரவு செலவுத் திட்ட முறைகள். மேற்கொள்ளப்பட்டன; 1946-ல் 'மலிவுப் பண' முயற்சி தோல்வியடைந்து பின்னர், 1951-லிருந்து நிதித்துறை நடவடிக்கைகள்மூலம் பணவீக்கம் கட்டுப்படுத்தப் பெறுகின்றது. ஆனால், அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் ஒவ்வொரு சிக்கலையும் சமாளிப்பதற்குரிய பணவீக்கத் தடுப்பு முறைகளாக, செலாவணிகளையும் முதலீடுகளையும் வரையறுத்தல் முதலியன தற்போதைக்கு மிகுதியாகக் கையாளப்பட்டு வருகின்றன.

ஐக்கிய அரசின் நடப்புக் கணக்கிலான அயல்நாட்டுச் செலுத்து நிலை இருப்பில் ஆண்டாண்டு ஏற்பட்டுள்ள உபரி அல்லது பற்றாக் குறை, 5ஆம் உட்பிரிவில் உள்ள அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளது. என்றாலும், இவ்வட்டவணை முழு நிலையையும் காட்டுவதில்லை. ஸ்டெர்லிங் கணக்கில், தங்க, டாலர் இருப்புகள் குறைந்த அளவில் இருப்பதாலும், ஸ்டெர்லிங், பவுன் இருப்புகள் உயர்ந்த

அளவில் இருப்பதாலுமே, ஸ்டெர்லிங் எளிதில் ஊறுபடத்தக்க நிலைமைக்கு வந்துள்ளது.

1,000 மில்லியன் பவுன்கள் இருந்தாலுங்கூட, தங்க, டாலர் இருப்புகளால், அயல்நாட்டுச் செலுத்துநிலையில் தற்காலிகமாக ஏற்படும் இடர்ப்பாட்டைச் சமாளிக்க முடிவதில்லை. இத் தொகை ஐக்கிய அரசின் 3 மாத மொத்த உற்பத்தி அளவுக்கே சமமாகும்; போருக்கு முன்னர் இது 10 மாத, மொத்த உற்பத்தி அளவுக்குச் சமமாக இருந்தது. மேலும், போருக்குப் பின்னர் இவ் விருப்புகள், ஐக்கிய அரசுக்குமட்டுமின்றி, ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் அனைத்திற்கும் உரிய மத்திய இருப்பாக உதவி வருகின்றன; எனவே, டாலர் பற்றுக்குறைக்கு எந்த நாடு உள்ளாலும், இந்த இருப்புகள் குறைவதற்கு இடம் ஏற்பட்டது.

வெளிநாடுகளில் ஸ்டெர்லிங் உடைமைகளின் அளவு (sterling holdings) 4,000 மில்லியன் பவுனுக்கு மேல் இருந்தது. இதில் 600 மில்லியன் பவுன்கள் பன்னாட்டு நாணய நிதி முதலிய 'நாடு சாராத நிறுவனங்களின்' (Non-territorial Organizations) உடைமையாக இருந்தன; எஞ்சிய தொகையில் பெரும் பகுதி பல நாடுகளின் செலாவணிக் காப்பு நிதியாகவும் நடைமுறை இருப்பாகவும் உதவுகின்றது; எனவே, அவற்றைத் திரும்பப் பெற்றுக்கொள்ள முடியாது. ஆனால், ஸ்டெர்லிங்கின் மதிப்புத் தாழக்கூடும் என்ற அச்சம் ஏற்பட்டால், ஸ்டெர்லிங் உடைமைகட்கு உரியோர், அவற்றில் பெரும் பகுதியை உடனே திருப்பிப் பெற்றுக்கொள்ள முடியும்.

மேலும், பணவீக்க முயற்சிகளைத் தடுத்து நிறுத்துவதற்குக் கடுமையான கட்டுப்பாடுகளை இப்பொழுதும் மேற்கொள்ள அரசாங்கத்திற்கு மனம் இருந்தால் (ஏனெனில், அதற்குப் போதிய ஆற்றல் இருக்கிறது) யூக வாணிபத்தினால் ஸ்டெர்லிங் இருப்புகள் வற்றிப் போகும் நிலை ஏற்படாது; இப்பொழுது இருக்கும் இருப்புகள் போதுமானவையாயும் இருக்கும்.

## 7. இன்றைய நிலையும் எதிர்கால நோக்கும்
### (The Present Position and Outlook)

இப்பொழுது (மே, 1963) ஐக்கிய அரசு, தனது பொருளாதாரச் சுழல் வட்டத்தின் மேனோக்க நிலையில் இருப்பதாகத் தோன்றுகிறது; இது போருக்குப் பின்னர் நான்காவது சுழல் வட்டமாகும். உயர்ந்து செல்லும் உற்பத்தியும், ஓரளவு நிலையான விலைவாசிகளும் உடைய ஒரு கால கட்டத்தை ஐக்கிய அரசு எதிர்பார்க்கக்கூடும்.

1963 ஏப்ரலில், 600,000-க்குச் சற்று அதிகமாக இருந்த வேலையின்மை நிலை, கிரேட் பிரிட்டனில், இனிமேல் குறையுமென்று எதிர்பார்க்கலாம். என்ருலும், வேலையின்மை நிலைக் குறைவு ஏற்படும் பொழுதெல்லாம் அது வழக்கம்போல உற்பத்தி உயர்வுக்குப் பின்னதாகவே இருக்கும். பொருளாதாரச் சுழல் வட்டத்தின் மேனேக்க நிலை, எவ்வளவு காலத்திற்குத் தடங்கலின்றி நீடித்துச் செல்லும் என்பது, அதன் துரித கதியைப் பொறுத்தே பெரும்பாலும் அமையும். உற்பத்தி ஆக்கத்திறமும் போர்க்காலத்திலிருந்தே உயர்ந்த வீதத்தில் வளர்ந்து வருகிறது எனவும் சொல்லலாம்; இந்த வளர்ச்சிவீதம் 1940ஆம் ஆண்டளவிலும், 1950ஆம் ஆண்டுகளின் தொடக்க காலங்களிலும் ஆண்டொன்றுக்கு $2\frac{1}{2}$ சதவீதமாக இருந்தது; இப்பொழுது, இதன் வளர்ச்சி வீதம் 4 சதவீதத்திற்கும் குறையாமல் இருக்கிறது. இந்த மதிப்பீடு சரியெனக் கொண்டால், மாரு விலைகளையுடைய, உள்நாட்டு மொத்த உற்பத்தியில் ஆண்டொன்றுக்கு ஏற்பட்ட 4 சதவீத உயர்வைப் பல ஆண்டுகளுக்குத் தொடர்ந்து பேணி இருக்கமுடியும்; நிரந்தரமாகவும் பேணி வந்திருக்கலாம். அதுவும், பயன்படுத்தப்பெருத ஆக்கத்திற நிலையை அதிகமாக வற்றச் செய்யாமலும், வருமானங்களில் எல்லைமீறிய துரித உயர்வை மீண்டும் உருவாக்காமலும் மேற்குறித்தவாறு பேணி வந்திருக்க முடியும். ஆனல், உற்பத்தி உயர்வுவீதம் ஆண்டொன்றுக்கு 4 சதவீத அளவைவிட வேகமாகச் சென்றிருந்தால், அதற்கு இணையான, பயன்படுத்தப்பெருத ஆக்கத்திற நிலையின் சுருக்கமானது, நாளடைவில் பண வருமானங்களில் மிகத் துரிதமான உயர்வுக்கு வழி செய்திருக்கும்; அதுமட்டுமா? விலைகள் மீண்டும் உயர வகைசெய்து, அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்பைக் குன்றச் செய்திருக்கும்.

போர்ப் பிற்காலத்திய, இதற்கு முந்திய மூன்று சுழல் வட்டங்களிலும் உற்பத்தி அளவில் ஏற்பட்ட அதிதுரித உயர்வானது, நாளடைவில் அயல்நாட்டுச் செலுத்துநிலையைச் சாதகமற்றதாக்கினலும், உற்பத்தி உயர்வின் தொடக்கத்திற்கும், சாதகமற்ற அயல்நாட்டுச் செலுத்துநிலை தோன்றிய காலத்திற்கும் இடையிலான காலச் சுணக்கமும் குறிப்பிடத்தக்க அளவிற்கு மாறிமாறி வந்திருக்கிறது.

முதல் சுழல் வட்டத்தில் உற்பத்தி மேனேக்கம் 1948-ல் தொடங்கியது; அயல் நாட்டுச் செலுத்துநிலை இருப்பில் சாதகமற்ற போக்கு 1951 வரை ஏற்படவில்லை. இரண்டாம் சுழல் வட்டத்தில், உற்பத்தி உயர்வு 1953ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் ஏற்பட்டது; சாதகமற்ற செலுத்துநிலை இருப்பு 1955-ல் தோன்றிவிட்டது. மூன்ரும் சுழல் வட்டத்தில் உயர்வுப் போக்கு 1958 இறுதியிலேயே தோன்ற, சாதகமற்ற செலுத்துநிலை இருப்பு

போர்ப் பிற்காலத்திலேற்பட்ட முதல் மூன்று பொருளாதாரச் சுழல் வட்டங்கள்

| | மாறு விலைகளில் உள்நாட்டு உற்பத்தியின் மொத்தம் | மதிப்பீடு செய்யப் பெற்ற உற்பத்தி ஆக்கத்திறம் | சில்லறை விலைகளின் குறியீட்டெண் | சரக்கு இருப்புகளின் உயர்வு (மில்லியன் பவுனில்) | நடப்புக் கணக்கில் அயல் நாட்டுச் செலுத்து நிலை இருப்பு (மில்லியன் பவுனில்) |
|---|---|---|---|---|---|
| முதற் சுழல் வட்டம் | | | | | |
| 1948 | 100·0 | 100·0 | 100·0 | + 175 | + 129 |
| 1949 | 104·0 | 102·5 | 102·8 | + 65 | + 115 |
| 1950 | 107·9 | 105·0 | 105·7 | — 210 | + 446 |
| 1951 | 110·2 | 107·6 | 116·0 | + 575 | — 322 |
| 1952 | 109·5 | 110·3 | 126·2 | + 50 | + 164 |
| இரண்டாம் சுழல் வட்டம் | | | | | |
| 1952 | 100·0 | 100·0 | 100·0 | + 50 | + 164 |
| 1953 | 104·0 | 102·5 | 103·1 | + 125 | + 148 |
| 1954 | 108·6 | 105·1 | 105·0 | + 56 | + 125 |
| 1955 | 112·4 | 108·3 | 109·5 | + 300 | — 156 |
| 1956 | 113·4 | 111·6 | 114·9 | + 261 | + 207 |
| 1957 | 115·6 | 115·1 | 119·5 | + 223 | + 216 |
| 1958 | 115·7 | 118·6 | 123·0 | + 99 | + 329 |
| மூன்றும் சுழல் வட்டம் | | | | | |
| 1958 | 100·0 | 100·0 | 100·0 | + 99 | + 329 |
| 1959 | 104·6 | 103·2 | 100·4 | + 169 | + 114 |
| 1960 | 109·9 | 105·4 | 101·5 | + 591 | — 308 |
| 1931 | 112·1 | 109·1 | 104·8 | + 302 | — 72 |
| 1962 | 113·4 | 112·9 | 109·2 | + 90 | + 67 |

1960-ல் ஏற்பட்டுவிட்டது. இவ்விரண்டிற்கும் இடையே இத்தகைய கால மாறுதல்கள் ஏற்பட்டமைக்குக் காரணம், அயல்நாட்டுச் செலுத்துகள், சரக்குத் தொகுப்பின் வீதத்துடன் நெருங்கிய உறவு பூண்டிருப்பதே ஆகும். இந்தப் பரஸ்பர உறவு, 1958-62ஆம் ஆண்டுச் சுழல் வட்டங்களைவிட 1948-52, 1952-58ஆம் ஆண்டுச் சுழல் வட்டங்களில் மிகப் பிற்பாடே ஏற்பட்டிருப்பது புலனாகிறது.

ஆண்டொன்றுக்கு 4 சதவீதத்திற்கும் மேல், உற்பத்தியில் உயர்வு ஏற்படுவதற்கு முந்திய காலத்தின் அளவு, உழைப்பிற்கான அதிகமான தேவை ஏற்படுவதன்மூலம் பிரதிபலிக்கிறது; உற்பத்தியின் உயர்வுநிலை எப்பொழுது ஏற்படுகிறதோ, அதை ஓரளவு சார்ந்தே, வருமானங்களின் உயர்விலும் ஏற்படும் துரிதப் போக்கு அமைகிறது. இப்பொழுது, வேலை பெருத உழைப்பாளர்கள், பெரும்பாலும், வட இங்கிலாந்து, வேல்ஸ், ஸ்காட்லாந்து, வட அயர்லாந்து ஆகிய பிரதேசங்களிலேயே செறிந்துள்ளனர்; ஆனல், நடு மாவட்டங்கள், தென் இங்கிலாந்து ஆகிய பகுதிகளில், உழைப்பாளர்களுக்கு அதிகமான தேவைநிலை இல்லை என்று சொல்லக்கூடிய அளவிற்குச் சற்று அதிகமாக உள்ளனர்.

தேவை, உற்பத்தி ஆகியவற்றின் பிரதான உயர்வுகளை, மிகுதியான வேலை வாய்ப்பில்லாத பிரதேசங்களுக்குள்ளேயே அடக்க முடியுமென்றல், நடு மாவட்டங்கள், தென் இங்கிலாந்து ஆகிய இடங்களில் ஏற்பட்டிருக்கக்கூடிய உயர்வுகளைவிட முந்திய பிரதேசங்களில் வேகமாகவும், துரிதமாகவும் ஏற்பட்டிருக்கக்கூடும். ஏனென்ருல், முதலில் குறிப்பிட்ட பிரதேசங்களில் உழைப்பாளர்களை நேரடியாகப் பெற்றுவிட முடியும். ஆனல், பின்னல் குறிப்பிட்ட இடங்களில் தொழிலாளர் தேவை என்ருல், அவர்களை வேறெங்காகிலும் இருந்து இடம் பெயர்த்தே கொண்டுவரவேண்டியிருக்கிறது. 1963ஆம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தின் மூலம், அபிவிருத்தித் திட்டப் பிரதேசங்களில் முதலீடு செய்யும் நிறுவனங்களுக்கு எவ்வளவோ வரிச் சலுகைகள் அளிக்கப்பெற்றன; என்ருலும் துரதிர்ஷ்டவசமாக கொள்முதல் வரி (Purchase Tax), வருமான வரி ஆகியவற்றில் அளிக்கப்பட்ட வரிச் சலுகைகளின் விளைவுகள், கார்கள், நாட்படு நுகர்வுப் பண்டங்கள் முதலியவற்றிற்கான தனி நபர் நுகர்வுகளையே தூண்டியுள்ளதுபோலத் தோன்றுகிறது. ஆனல், வேலை வாய்ப்பின்மை அதிகமாக உள்ள பிரதேசங்களிலேயே பெரும்பாலும் நிறுவப்பெற்றுள்ள கனரக உற்பத்திப் பொருள்களுக்கான தேவை மிகவும் சாதாரணமாகவே விரிவடையும்போலத் தோன்றுகிறது. இதன் பலனுக வட மாவட்டங்களில் வேலையின்மை கணிசமாக நீடித்து வருகையில், நடு மாவட்டங்கள், தென் இங்கிலாந்துப் பிரதேசங்களில் அபரிமிதமான வேலை அளிப்பு, மிகையான தேவை ஆகியவற்றிற்கான அறிகுறிகள் மீண்டும் தோன்றக்கூடும்.

1959-60-ன் மேனேக்கச் சுழலைவிட இப்பொழுது விரிவுப் போக்கைக் குறைக்கக்கூடிய பல்வேறு காரணிகள் புலனுகின்றன. தீர்வக வங்கிகளின் அட்வான்சுகள், மொத்த டெபாசிட்டுகளில் 50 சதவீதத்திற்குமேல் உள்ளன; இது 1958-ல் 30 சதவீதத்திற்கும் குறைந்தே

ஐக்கிய அரசில் பிரதேசவாரியாக நிலவிய வேலையின்மைப் போக்கு (ஏப்ரல், 1963).

| | மொத்த வேலையாட்கள் (மில்லியனில்) | வேலையற்றோர் | |
|---|---|---|---|
| | | ஆயிரத்தில் | மொத்த வேலையாட்களின் சதவீதம் |
| கிரேட் பிரிட்டன் | | | |
| குறைவான வேலையின்மைப் பிரதேசங்கள் | | | |
| லண்டன், தென் கிழக்கு இங்கிலாந்து ... ... ... | 5·8 | 92·9 | 1·6 |
| கிழக்கு, தெற்கு இங்கிலாந்து ... | 2.5 | 47·5 | 1·9 |
| தென்மேற்கு இங்கிலாந்து ... | 1.3 | 26·7 | 2·1 |
| நடு மாவட்டங்கள் ... ... | 3·6 | 72·2 | 2·0 |
| யார்க்ஷயர், லிங்கன்ஷயர் ... | 2.2 | 46·7 | 2·1 |
| குறைவான வேலையின்மை நிலையுள்ள பிரதேச மொத்தம் | 15·4 | 286·0 | 1·9 |
| மிகுதியான வேலையின்மைப் பிரதேசங்கள் | | | |
| வட இங்கிலாந்து ... ... | 1·3 | 67·4 | 5·1 |
| வடமேற்கு இங்கிலாந்து ... | 3·0 | 99·1 | 3·3 |
| ஸ்காட்லாந்து ... ... | 2·2 | 114·2 | 5·2 |
| வேல்ஸ் ... ... | 1·0 | 37·9 | 3·9 |
| மிகுதியான வேலையின்மை நிலையுள்ள பிரதேச மொத்தம் | 7·5 | 318·6 | 4·25 |
| கிரேட் பிரிட்டனின் மொத்தம் | 22·9 | 604·6 | 2·7 |
| வட அயர்லாந்து | 0·5 | 40·1 | 8·3 |
| ஐக்கிய அரசின் மொத்தம் ... | 23·4 | 644·7 | 2·8 |

இருந்தது. இந்த அட்வான்சுகள், இதே துரித வேகத்தில் செல்லும் பிறவற்றுடன் சேர்ந்து இன்னும் விரிவடையக் கூடியனவாகத் தோன்றவில்லை. மேலும், 1958-60 செழிப்பில் ஏற்பட்ட இழப்புக்குப் பின்னர், தவணைக் கொள்முதல் நிதியளிப்பு நிறுவனங்கள் எல்லாம், மிகவும் எச்சரிக்கையுடன் செயல்படக்கூடும். எல்லாவற்றையும் சேர்த்துப் பொதுவாகக் கணக்கிட்டுப் பார்க்கையில், வருமானங்களி லும், உற்பத்தியிலும் ஏற்பட்ட விரிவுப் போக்கு, ஆண்டொன்றுக்கு 4 சதவீதத்திற்குமேல் கட்டாயம் செல்லக்கூடும் என்றாலும்,

1959-ன் முற்பகுதிக்கும், 1960-ன் முற்பகுதிக்கும் இடைப்பட்ட காலங்களில் எட்டிய 7½ சதவீதத்திற்கும் குறைவாகவே இருப்பது போலத் தோன்றுகிறது. பயன்படுத்தப்பெருத உற்பத்தித்திற எல்லைகளின் அளவு 1959 தொடக்கத்தைவிட அதிகமாக இருப்பதாலும், உற்பத்தித்திற வேகம், 1959-60-ஐவிட, அதிக வேகத்தில் செல்வதாலும், போருக்குப் பிந்திய நான்காவது சுழல் வட்டத்தின் எழுச்சிப் போக்கு, 1964-ன் பிற்பகுதிவரைக்குமோ, 1965 முழுவதிலுமோ நீடிக்கும்போலத் தோன்றுகிறது.

இந்த எழுச்சிப் போக்கை இடையிட்டுத் தடுக்கக்கூடியனவாக, அயல்நாட்டுச் செலுத்துநிலை இடர்ப்பாடுகள் தொடர்ந்து கிளைக்கக் கூடும். இந்த இடத்தில் நாம் சுழல் வட்டப் போக்குகளைமட்டுமே நினைவிற்கொள்ளாது, அமைப்பு நிலை மாறுதல்களையும் கணக்கில் கொள்ளவேண்டும். அயல்நாட்டுச் செலுத்துநிலையானது, சரக்குத் தொகுப்பு வேகத்தை மிகையான தேவை நிலை தூண்டத் தொடங்கியதும், சுழல் வட்டத்தின் மேனேக்கிய எழுச்சிக் காலத்தில் குன்ற முற்படுகிறது. தேவையில் ஏற்படும் தளர்ச்சி, சரக்குத் தொகுப்பை உயர்த்தத் தொடங்கியதும், சுழல் வட்டத்தின் கீழ்நோக்கிய வீழ்ச்சிக் காலத்தில் அதுவும் அபிவிருத்தியடைய முற்படுகிறது. ஏற்றுமதித் துறைகளின் உற்பத்திச் செலவுகள், பிற துறைகளுடன் ஒப்பிடுகையில் இலாபமற்றவை என்று கருதும்வண்ணம், அவற்றை விட உயரத் தொடங்கினுல் அயல்நாட்டுச் செலுத்துநிலையானது நீடித்த காலத்திற்குத் தளர்ந்திருக்கக்கூடும். ஐக்கிய அரசின் உள்நாட்டு நிதிநிலை, 1958ஐப் போலவே, 1962-லும் இருந்தாலுங் கூட, அதன் அயல்நாட்டுச் செலுத்துநிலை, 1962-ல் மிகவும் சாதகமற்றதாகிவிட்டது. பிரிட்டனின் ஏற்றுமதித் தொழில்களது உற்பத்திச் செலவுகளும், விலைகளும், அவற்றின் வெளிநாட்டுப் போட்டி நாடுகளைவிட (குறிப்பாக ஐரோப்பாக் கண்டம்) 1959-62ஆம் ஆண்டுகளில் அதிகமாக உயர்ந்தமையை இதற்குக் காரணமாகச் சொல்லலாம். என்றாலும், இந்த வகையிலும் மாறுதல் ஏற்படுவதற்கான அடையாளங்கள் சமீபத்தில் புலனாகத் தொடங்கியுள்ளன. பிரான்ஸ், ஜெர்மனி முதலிய ஐரோப்பிய நாடுகளில் முழு வேலையுடைமை சமீப மாதங்களில் ஏற்பட்டுள்ளது. இது அந் நாடுகளின் உற்பத்தி உயர்வு வேகத்தைவிடக் கூலி உயர்வை அதிகப்படுத்தி, ஏற்றுமதித் தொழில்களின் செலவையும் உயரச் செய்திருக்கிறது. மிகையான தேவையும் உற்பத்திச் செலவு உயர்வும் மீண்டும் ஏற்படுவதைத் தள்ளிப்போடவோ அல்லது தவிர்க்கவோ பிரிட்டனுல் முடியுமென்றால், சர்வதேச அங்காடியில், பிரிட்டனின் ஏற்றுமதிகள் நீண்ட காலப் போட்டியில் நிலைத்து நிற்பதற்கான வாய்ப்புகள் மீண்டும் ஏற்படக்கூடும்.

அயல்நாட்டுச் செலுத்துநிலை இருப்புகளில் இடர்ப்பாடு ஏற்படு வதைத் தடுக்கக்கூடிய அல்லது தள்ளிப் போடக்கூடிய மற்ருெரு காரணியாக, பல்வேறு கச்சாப் பொருள்கள், உணவுப் பண்டங்கள் ஆகியவற்றின் சர்வதேச விலைகளில், சமீப காலத்தில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க அபிவிருத்தியைச் சொல்லலாம். இந்த நிலை தொடர்ந்து நீடித்தால், இதர ஸ்டெர்லிங் பிரதேசங்களின் அயல் நாட்டுச் செலுத்துகளின் நிலையை அது அபிவிருத்தியடையச் செய் யும். இறக்குமதிகளுக்கு வேண்டிய அதிகப்படியான தேவையில் பேரளவை அளிக்கக்கூடிய நிலையில், ஐக்கிய அரசு இருக்குமே யானல், அது ஸ்டெர்லிங் பிரதேசம் முழுவதற்கும் உரிய அயல் நாட்டுச்செலுத்துநிலையைப் பெரிதும் மேம்படுத்தும். ஆகவே, ஐக்கிய அரசின் தேவை, உற்பத்தி ஆகியவற்றில் ஏற்படும் உயர்வு, அதன் உற்பத்தித் திறத்தை மிக அதிகமாக விஞ்சிச் செல்லவில்லை என்ருல், ஐக்கிய அரசின் உற்பத்தி அளவில் ஏற்படும் உயர்வை, அயல் நாட்டுச் செலுத்துநிலை இடர்ப்பாடுகள் குறுக்கிட்டு இடையிலேயே குறைத்துவிடமாட்டா என்று எதிர்பார்க்கலாம்.

# பிற்சேர்க்கை

## நூலில் தரப்பட்டுள்ள புள்ளிவிவரங்கட்குரிய ஆதாரங்கள்

### பின்வரும் பட்டியலை மிகக் குறைந்த அளவிலேயே தந்துள்ளேன்

(1) ஐக்கிய நாடுகளின் புள்ளிவிவர ஆண்டு நூல் (The United Nations Statistical Year Book); இதில் எல்லாப் பொருளாதாரத் துறைகளையும்பற்றிய, உலக நாடுகள் அனைத்திற்கும் உரிய ஆண்டுப் புள்ளிவிவரங்கள் தரப்பட்டுள்ளன.

(2) 'பொருளாதாரவாதி' (The Economist) என்ற வார இதழ், ஐக்கிய அரசுக்குரிய பாங்குத் தொழில், இதர நிதித்துறைப் புள்ளிவிவரங்களைப் பிரசுரிக்கின்றது. இவ் வெளியீட்டில் ஐக்கிய அரசு, இதர நாடுகள் ஆகியவற்றிற்குரிய பொருளாதாரப் புள்ளி விவரங்களும் இடம் பெறுகின்றன. ஒவ்வொரு வாரமும், ஒவ்வொரு தலைப்பை மேற்கொண்டு இவ்விதழ் விளக்கம் தரும்.

(3) புள்ளிவிவரத்தின் ஆண்டுச் சுருக்கம் (The Annual Abstract of Statistics): பொருளாதாரத்துறை சார்ந்த எல்லாப் பொருள்களைப்பற்றியும் ஒழுங்கான, நம்பத்தக்க தகவல்களை ஐக்கிய அரசுக்காக ஆண்டுதோறும் வெளியிடுகின்றது.

(4) புள்ளிவிவர மாத மஞ்சரி (The Monthly Digest of Statistics): இதில் விரிவான விவரங்கள் இல்லாவிட்டாலும், பல பொருளாதாரத் துறைகளில், ஐக்கிய அரசைப்பற்றிய அன்றாட விவரங்கள் உடனடியாகக் கிடைக்கும்.

(5) தேசிய வருமானம், செலவுகட்கான நீலப் புத்தகம் (The Blue Book on National Income and Expenditure): இது ஆண்டு தோறும் கோடைக் காலத்தில் வெளியிடப்பெறுகிறது.

(6) பொருளாதார அளவீடு (The Economic Survey): ஆண்டு தோறும் மார்ச்சு மாதத்தில் வெளியிடப்பெறும் இவ் விதழில் பொருளாதாரத்தின் நடைமுறைப் போக்குகள் விளக்கப்படுகின்றன.

(7) ஐக்கிய அரசின் அயல்நாட்டுச் செலுத்துநிலையைப்பற்றிய விரிவான விளக்கங்களுடன், ஆண்டுதோறும் இரண்டு வெள்ளை அறிக்கைகள் (Two White Papers) வெளியிடப் பெறுகின்றன.

மேற்குறித்தவற்றுள், முதல் இரண்டைத் தவிர, எஞ்சிய அனைத்தையும் அரசாங்க இலாகா வெளியிடுகின்றது.

லண்டன், கேம்பிரிட்ஜ் பொருளாதாரப் பணிபற்றிய காலாண்டுக் கையேடு (The Quarterly Bulletin of the London and Cambridge Economic Service): இது 'Times Review of Industry' ஆல் வெளியிடப்பெறுகின்றது. இதில் நீண்ட தொடர்புடைய (1913ஆம் ஆண்டிலிருந்து) 90-க்கும் மேற்பட்ட முக்கியமான புள்ளி விவரத் தொடர்கள் அடங்கியுள்ளன.

# கலைச்சொல் அகராதி

## (ஆங்கிலம் - தமிழ்)

**A**

Advances — அட்வான்சுகள்
Amortization — கடன் கழிப்பு நிதி
Annuities — ஆண்டுத்தவணை உதவிகள்

**B**

Balance of payment — அயல்நாட்டுச் செலுத்துநிலை
Balance sheet — இருப்புநிலைக் குறிப்பு
Bank credit — பாங்குச் செலாவணி
Banker — பாங்காளி
Banking — பாங்குத் தொழில்
Bank rate — பாங்கு வீதம்
Bankruptcy — தொழில் நொடிப்பு
Bargaining power — பேரசக்தி
Base metal — மட்ட உலோகம்
Big Fives — பேரைந்துகள்
Bilateralism — இருமுகத் தொடர்புடைமை
Bills — உண்டியல்கள்
Bills exchange — வாணிப உண்டியல்
Bonds — பத்திரங்கள்
Brevity bonds — குறுகியகாலக் கடன் பத்திரங்கள்
Budget — வரவுசெலவுத் திட்டம்
Buffer stock — இடைநிவாரணச் சேமிப்பு

**C**

Capital account — முதலினக் கணக்கு
Capital expenditure — முதலீட்டுச் செலவு
Capital, fixed — நிலைமுதற் பொருள்கள்
Capital formation — மூலதனக் கட்டமைப்பு
Capital goods — முதற்கருவிப் பொருள்கள்
Capital movements — மூலதனப் பெயர்வுகள்
Cartel — தொழிற் கூட்டணி
Cheap-money — மலிவுப் பணம்

Civil servants — ஆட்சி அலுவலர்
Clearing house — தீர்வகம்
Comparative costs — தராதரச் செலவு
Consumer goods — நெடுங்கால நுகர்வுப் பண்டங்கள்
Control — கட்டுப்பாடு
Cost of living — வாழ்க்கைச் செலவு
Corporate income — கூட்டு வருமானம்
Counter — கல்லா
Creating credit — செலாவணி ஆக்கம்
Credit balance — வரவு இருப்பு
Current account — நடப்புக் கணக்கு

**D**

Debentures — ஈட்டுப் பத்திரங்கள்
Debit balance — அதிகப் பற்று
Defferred payments — தள்ளிப்போட்ட செலுத்துகள்
Deflation — பணவடிப்பு
Deposits — வைப்புகள், டெபாசிட்டுகள்
Depositor — வைப்பாளி
Depreciation reserve — தேய்மான இருப்பு
Devaluation — மதிப்புக் குறைப்பு
Discount — கழிவு
Disinflation — பணவீக்கக் குறைப்பு
Disinvestment — முதலீட்டுக் கலைப்பு
Dissaving — சேமிப்புக் கலைப்பு
Distribution — பகிர்வு
Down turn — தாழ்ச்சிநிலை
Durable goods — நீடித்த நுகர்வுப் பொருள்கள்
Duties — தீர்வைகள்

**E**

Earnings — சம்பாத்தியங்கள்
Entrepreneur — தொழில்முயல்வோன்
Equation — சரியீடு
Equities — அடகுகள்
Equity shares — சாதாரணப் பங்குகள்
Exchange control — நாணயமாற்றுக் கட்டுப்பாடு
Exchange, foreign — அயல்நாட்டுச் செலாவணி
Exchange risk — நாணயமாற்று ஆபத்து
Excise duty — தீர்வை, உற்பத்தி வரி
External trade — புறவாணிபம்

**F**

| | |
|---|---|
| Face value | — முகமதிப்பு |
| Factor cost | — காரணிச் செலவு |
| Factor prices | — உற்பத்திக் காரணி விலைகள் |
| Fiduciary issue | — நம்பிக்கை வெளியீடுகள் |
| Fixed assets | — நிலையான சொத்துகள் |
| Fixed costs | — மாருச் செலவுகள் |
| Fixed exchange rates | — மாருத மாற்றுவீதங்கள் |
| Floating debt | — குறுங்காலக் கடன் |
| Fluctuation | — ஏற்றத்தாழ்வு |
| Forced saving | — வலுவந்தச் சேமிப்பு |
| Foreign trade | — வெளிநாட்டு வாணிபம் |
| Foreign investment | — அன்னிய முதலீடு |
| Free capital | — உருப்பெரு மூலதனம் |
| Free on board (f.o.b) | — அனுப்பு செலவின்மை |
| Full employment | — முழு வேலையுடைமை |

**G**

| | |
|---|---|
| GATT | — சுங்கவரி வாணிபப் பொது ஒப்பந்தம் |
| Gold parity | — தங்கச் சமன்பாடு |
| Gold standard | — பொன் நாணயத் திட்டம் |
| Gross saving | — மொத்தச் சேமிப்பு |
| Guardian's allowances | — பேணுவோர் படிகள் |

**H**

| | |
|---|---|
| Hard currencies | — கடின செலாவணி |
| Hire purchase | — வாடகைக் கொள்முதல், தவணைக் கொள்முதல் |
| Hours of work | — உழைப்பு நேரம் |
| Human costs | — மனித உழைப்புச் செலவுகள் |

**I**

| | |
|---|---|
| Income, national | — நாட்டு வருமானம், தேசிய வருமானம் |
| Infant industries | — சிற்றினத் தொழில்கள் |
| Inflationary boom | — பணவீக்கச் செழிப்பு |
| Imperfect competition | — நிறைவு குன்றிய போட்டி |
| International trade | — பன்னாட்டு வாணிபம் |
| Inventions | — புத்தாக்கம் |
| Investment industries | — முதலீட்டுத் தொழில்கள் |

**J**

Joint stock banks — கூட்டுப் பங்கு பாங்குகள்

**L**

Labour saving devices — உழைப்புச் சிக்கல் உபாயங்கள்
Labour supply — உழைப்பு அளிப்பு
Liability — பொறுப்பு
Liquid assets — திரவச் சொத்துகள்
Loan capital — கடன் மூலதனம்
Luxuries — போகப்பொருள்கள்

**M**

Management — நிருவாகம், மேலாண்மை
Manufactured goods — பொறிவழியாக்கப் பொருள்கள்
Marginal cost — இறுதிநிலைச் செலவு
Marg'nal productivity — இறுதிநிலை ஆக்கம்
Marketing — விற்பனைப்படுத்தல்
Mass production — பேரளவு உற்பத்தி
Micro economics — தனிவாரிப் பொருளாதாரம்
Middlemen — இடைத்தரகர்
Minimum wages — குறைந்தபட்சக் கூலிகள்
Mobility of labour — தொழிலாளர் இடப்பெயர்ச்சி
Monetary policy — நிதித்துறைக் கொள்கை
Money balances — ரொக்க (பண) இருப்புகள்
Monopoly — விற்பனைச் சர்வாதீனம்
Multilateral trade — பன்னேக்க வாணிபம்
Multiplier — பெருக்கி

**N**

National income — நாட்டு வருமானம், தேசீய வருமானம்
National output — நாட்டு மொத்த உற்பத்தி

**O**

Open market — வெளிச்சந்தை
Opportunity cost — பிறவாய்ப்புப் பெறுமானம்
Over-draft — அதிகப்பற்று
Over-time — மிகைநேரம்

**P**

Paidup capital — செலுத்தப்பெற்ற மூலதனம்
Paper titles — தாள் உரிமைகள்

Payments — செலுத்துதல்கள்
Pensions — ஓய்வு ஊதியங்கள்
Percentage share — சதவீதப் பங்கு
Perfect competition — நிறைவுப் போட்டி
Piece rates — வேலைவீதக் கூலி
Price mechanism — விலைவாசி அமைப்பு
Price system — விலைவாசி முறை
Prime cost — முதன்மைச் செலவு
Producer's goods — உற்பத்தி சாதனப் பொருள்கள்
Professional persons — தொழில்முறை அலுவலர்
Profit margins — இலாப இறுதிநிலைகள்
Project — உத்தேசத் திட்டம், திட்டவேலை
Progressive taxation — வளர்வீத வரி
Prospectus — தகவலறிக்கை
Provident fund — வருங்கால வைப்பு நிலை
Public deposit — பொதுத்துறை வைப்பு
Public finance — பொது நிதியம்
Public investments — பொது முதலீடுகள்
Public utilities — பொதுத்துறைப் பயன்பாடுகள்
Purchasing power — வாங்கும் திறன்

**Q**

Quasi-rent — போலிவாரம்

**R**

Real estate — ஸ்தாவரச் சொத்துகள்
Redemption value — மீட்சி மதிப்பு
Relative demand — தொடர்புடைய தேவை
Relative prices — தராதர விலைகள்
Rent — வாரம், வாடகை
Revenue duties — வருவாய்த் தீர்வைகள்
Risk — இழப்பு ஆபத்து

**S**

Safe — காப்பறை
Saving — சேமிப்பு
Securities — ஈடுகள், அரசாங்கப் பத்திரங்கள்
Speculation — ஊகவாணிபம்
Stock appreciation — பொருட்சேகர ஆய்வு, இருப்பு மதிப்பீடு
Stock exchange — பங்குமாற்றுச் சந்தை

Subsidies — உதவிக்கொடைகள்
Supplementary cost — துணைச் செலவு
Supply curve — அளிப்பு வளைவு
Surplus — எச்சப்பாடு, உபரி
Surtax — மேல்வரி

T

Tariff — சுங்கவரி, காப்புவரி
Terms of trade — வாணிப மாற்றுவீதங்கள்
Till money — பெட்டிப் பணம்
Time rate — நேரவீதக் கூலி
Time scale — காலக்கிரமச் சம்பளத் திட்டம்
Token money — அடையாளப் பணம்
Trade cycle — வாணிகச் சுழல்
Transaction — பரிவர்த்தனை
Transferable accounts — மாற்றுமுறைக் கணக்கு
Transfer earnings — மாற்றுமுறைச் சம்பாத்தியங்கள்
Transfer payments — மாற்றுச் செலுத்துகள்
Treasury bills — கருவூல உண்டியல்கள்

U

Undeveloped — வளர்ச்சிபெறாத
Underdeveloped — வளர்ச்சி குன்றிய
Unemployment — வேலையின்மை
Unskilled labour — திறம்பெறாத் தொழிலாளி
Upturn — எழுச்சி நிலை

V

Variable costs — மாறுஞ் செலவுகள்
Velocity of circulation — புழக்க வேகம்

W

Wage — கூலி
Welfare state — ஆக்கநல அரசு
Working capital — நடப்பு முதல்

## பொருள் அட்டவணை

